# டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

## நூல் தொகுப்பு :

### தொகுதி - 35



டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர்:

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு:

**தொகுதி 35**



**டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்**

தோற்றம் : ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''வெகு ஜனங்களிடையே ஒரு பொதுவான தேசிய உணர்வை, அதாவது நாங்கள் முதலில் இந்தியர்கள், அதன் பின்னர் இந்துக்கள், முகமதியர்கள் அல்லது இந்தியர்கள், கன்னடியர்கள் என்றல்லாமல் நாங்கள் முதலிலும் இந்தியர்கள் முடிவிலும் இந்தியர்கள் என்ற உணர்வை ஊட்டி வளர்ப்பது இன்றைய மிக ஜீவாதாரத் தேவை என்பதே என் கருத்தாகும். இதுவே நமது இலட்சியம் எனில் ஸ்தல தேசபக்த உணர்வையும் கோஷ்டி மனப்பான்மையையும் வலுப்படுத்தும், ஊக்குவிக்கும் எதையும் செய்யலாகாது.

- டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்

This Volume XXXV in Tamil forms English Edition Volume 17 Part I of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

**Dr. BABASAHEB AMBEDKAR**
**SPEECHES AND WRITINGS**



Year : August, 2005

Language : Tamil

Volume No. : 35

Price : Paperback - **Rs. 40/-**
Cloth bound - **Rs.** 135

Publishers : **Dr. AMBEDKAR FOUNDATION,**
Ministry of Social Justice and Empowerment,
Govt. of India,
15, Janpath, New Delhi - 110 001.

Distributors : **NEW CENTURY BOOK HOUSE (P) LTD.,**
41-B, SIDCO Industrial Estate,
Ambattur, Chennai - 600 098.

Printers : **PAVAI PRINTERS (P) LTD.,**
142, Jani Jan Khan Road,
Royapettah, Chennai - 600 014.
Ph: 28482441, 28482973.

This Volume XXXV in Tamil forms English Edition Volume 17 Part I of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra**, 1992.

*முதற் பதிப்பு : ஆகஸ்டு, 2005*
*பார்த்திப ஆண்டு, ஆடி-ஆவணி*



**விலை : ரூ. 40/-**

**நூலகப் பதிப்பு : ரூ. 100/-**

*வெளியீட்டாளர்:*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்*
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்*
*இந்திய அரசு,*
*15, ஜன்பத் சாலை,*
*புதுடில்லி.*

**விற்பனை நிலையம்:**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,*
41B, *சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*
*அம்பத்தூர், சென்னை -98.*

*அச்சிட்டோர்:*
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
*142, ஜானி ஜான் கான் சாலை,*
*ராயப்பேட்டை, சென்னை - 600 014.*
*தொலைபேசி: 28482441, 28482973*

# ஆலோசனைக் குழு

**மாண்புமிகு திருமதி மீராகுமார்**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

**திரு. எஸ்.கே. தாஸ்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

***நிர்வாக ஆசிரியர் (தமிழ்):***
***ரா. ரங்கசாமி (மாஜினி)***
சென்னை, தமிழ்நாடு

ஆங்கில நூல் வெளியீடு:

***கல்வித்துறை,***
***மகாராஷ்டிர மாநில அரசு, 1992***

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

***திரு. வஸந்த் மூன்***
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

***திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)***

மொழிபெயர்ப்பாளர்கள்:

***திரு. வி. ராதாகிருஷ்ணன்***
***திரு. ஏ.எஸ். மணி***
***முனைவர் ஏ. இளங்கோவன்***
***திரு. எஸ். சோமசுந்தரம்***
***திரு. கே. நீலகண்டன்***

ஒப்புநோக்கியோர்:

***திரு. ஏ.எஸ். மணி***

பிழைதிருத்த உதவி:

***திரு. ஆர். பெரியசாமி***

# அணிந்துரை

டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் கொண்ட ஆங்கில நூலின் பதினேழாவது தொகுதியின் முதல் பாகத்தை தமிழில் 35-வது தொகுதியாக வெளியிடுவதில் மிகுந்த பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். சௌதார் குளம் சம்பந்தப்பட்ட கிளர்ச்சி, கலாராம் கோவில் பிரவேச சத்தியாக்கிரகம், லண்டனில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய பங்கு, புனா ஒப்பந்தம் சம்பந்தப்பட்ட ஆவணங்கள் முதலியவை இந்தத் தொகுதியில் இடம்பெற்றிருக்கின்றன.

பாலகங்காதர திலகர் தாழ்த்தப்பட்ட இனத்தவராகப் பிறந்திருந்தால் ''சுயராஜ்யம் எனது பிறப்புரிமை'' என்று கூறியிருக்க மாட்டார். அதற்குப் பதில் தீண்டாமையை ஒழிப்பதே தனது முழு முதல் கடமை என்று பிரகடனம் செய்திருப்பார். அதேபோல் லெனின் பாரதத் திருநாட்டில் பிறந்திருந்தால் தீண்டாமையை ஒழிப்பதற்கே அவர் முதலில் போராடியிருப் பார்; அதன் பின்னரே புரட்சி செய்யும் திட்டத்தை மேற்கொண் டிருப்பார். தீண்டாமையை ஒழிக்கும் இத்தகைய அரிய பணியை டாக்டர் அம்பேத்கர் தமது தலையாயக் கடமையாக ஏற்றுக் கொண்டது வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு செய்தியாகும். இத்தகைய நேரிய, சீரிய இலட்சியத்தை எய்துவதற்கு ஒரு தனி அரசியல் கட்சி உருவாவது அவசர அவசியம் என்பதை டாக்டர் அம்பேத்கர் உணர்ந்தார். இதன் விளைவாகவே 1936 ஆகஸ்டு 15ஆம் தேதி சுதந்திரத் தொழிற் கட்சியை நிறுவினார். இக்கட்சி பற்றிய விவரங்களை இத்தொகுதியில் காணலாம். ''மனிதனை விட நாடு பெரியது'' என்பதை இந்திய மக்கள் உணர வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். சமூக ஒற்றுமை எய்தப்படவில்லை என்றால் ஜனநாயகம் ஆடிக்காற்றில் அடித்துச் செல்லப்படும் என்று அவர் எச்சரித்தார். தமிழ் வாசகர்கள் இத் தொகுதியை மிகவும் பயனுள்ள ஒன்றாக ஏற்றுப் பயனடைவர் என்று நம்புகிறோம்.

(ஒப்பம்) **திருமதி மீராகுமார்**
இந்திய அரசு சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சேர்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகிறது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 35வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். உயர்ந்ததொரு லட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களைத் தமிழ் உட்பட இந்திய மொழி களில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியை யும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என்று நம்புகின்றோம்.

**எஸ்.கே. தாஸ்**

புதுடில்லி. **இயக்குநர்**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

'பாரத ரத்னா' டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடு களின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக்கழகம் என்று கூறினால் அது மிகை யாகாது. இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக மனித உரிமைகளை நிலைநாட்ட அரும்பெரும் சேவை செய்தவர் அவர் எனக் கூறலாம். தாழ்த்தப்பட்ட இனத்தவர் காலம் காலமாக சாதி இந்துக்களின் ஈவு இரக்கமற்ற கோரக் கொடுமை களுக்கு ஆளாகி, அனுபவித்து வந்துள்ள துன்ப துயரங்கள், வேதனைகள், வாதனைகள் கொஞ்ச நஞ்சமல்ல.

துரதிர்ஷ்டசாலிகளான இத்தகைய மக்களுக்கு வழிகாட்டும் விடிவெள்ளியாக, கலங்கரை விளக்காக, துயர் துடைக்கும் புரவலராகத் தோன்றியவர்தான் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர். அவரே பிள்ளை பிராயத்தில் நரக வாழ்க்கை வாழ்ந்து வந்துள் ளார்; சாதிக் கொடுமைகளுக்கு ஆளாகி, சொல்லொண்ணா துன்ப துயரங்களை அனுபவித்து வந்துள்ளார். எனவே தாழ்த்தப் பட்ட மக்களின் உய்வுக்கு, உயர்வுக்கு, உத்தாரணத்துக்கு அவர் ஆற்றி வந்துள்ள பணி கொஞ்ச நஞ்சமல்ல; இத்துறையில் அவர் புரிந்து வந்துள்ள தூய தொண்டு அளப்பரியதாகும். இவற்றை எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி என எடுத்துரைப்பதே இந்த அரிய நூல் தொகுப்பாகும். இதனை ஓர் அற்புத கருத்துக் களஞ்சியம் எனலாம்.

இந்தத் தொகுதி பலரால் மொழிபெயர்க்கப்பட்டிருப் பதால் மொழிநடையும், சொல்லாக்கமும், பதப்பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகிவிட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம். இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்தத் தொகுதியும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

**- தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்**

# பொருளடக்கம்

# மஹத் சத்யாக்கிரகம் தண்ணீருக்காக நடைபெறவில்லை, மனித உரிமைகளை நிலைநாட்டுவதற்காகவே நடைபெற்றது

சுயமரியாதை என்னும் கதிரவன் இப்போது வானில் தோன்றி விட்டான்; ஒடுக்குமுறை என்னும் மேகங்கள் கலைய ஆரம்பித்து விட்டன, ஒடுக்கப்பட்ட, ஒதுக்கப்பட்ட வர்க்கத்தினர் நெஞ்சுயர்த்தி, தலைநிமிரத் தொடங்கிவிட்டனர். டாக்டர் அம்பேத்கரின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு சீரிய, நேரிய நிகழ்ச்சிக்கு இப்போது நாம் வருகிறோம். அந்த நிகழ்ச்சி என்ன? மஹத்தை நோக்கி நடைபெற்ற மாபெரும் அணிவகுப்பே அந்த நிகழ்ச்சி. பம்பாய் சட்டமன்றத்தில் எஸ்.கே.போலேயால் முன்மொழியப்பட்டு, பம்பாய் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு முக்கிய தீர்மானமே இந்த அணிவகுப்புக்கு ஆதார அடிப்படையாகும். 1923ல் நிறைவேற்றப்பட்டு, 1926ல் ஒரு சிறு மாற்றத்துடன் அங்கீகரிக்கப்பட்ட போலேயின் தீர்மானத்துக்கு இணங்க சௌதார் குளத்தைத் தீண்டத்தகாத மக்களுக்குத் திறந்துவிட மஹத் நகரசபை தீர்மானித்தது. எனினும் இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்படாமல் வெறும் ஏட்டுச் சுரைக்காயாகவே இருந்துவந்தது; சாதி இந்துக்களின் கடுமையான, உக்கிரமான எதிர்ப்பின் காரணமாக தங்களது இந்த உரிமையை தீண்டத்தகாதவர்களால் செயல்படுத்த முடியவில்லை. எனவே, இது சம்பந்தமாக 1927 மார்ச் 19, 20 தேதிகளில் மஹத்தில் ஒரு மாநாட்டை நடத்துவது என்று கொலாபா மாவட்ட ஒடுக்கப்பட்ட மக்கள் தீர்மானித்தனர். வருகிற மாதம் முதல் வாரத்தில் இந்த மாநாட்டை நடத்துவது என்ற தகவலை மாநாட்டின் தலைவர்கள் டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிவித்தனர். சுரேந்திரநாத் திப்னிஸ், சுபேதார் சாவத்கர், ஆனந்தராவ் சித்ரே முதலானோர்கள் மாநாட்டை நடத்துவதற்கான ஏற்பாடுகளை மிகவும் கண்ணும் கருத்துமாக செய்துவந்தனர். ஊழியர்களும், தலைவர்களும் கடந்த இரண்டு மாதங்களாக காடு வனாந்திரங்களிலும், மேடுபள்ளங்களிலும் சலியாது, சளையாது ஏறி இறங்கி மாநாட்டின் முக்கியத்துவத்தை ஒடுக்கப்பட்ட மக்களின் உள்ளங்களில் பசுமரத்தாணிபோல் பதியவைத்து, அவர்களைத் தட்டியெழுப்பி வந்தனர். இதன் காரணமாக பதினைந்து வயதான சிறுவர்கள் முதல் எழுபது வயதான முதியோர் வரை ஆங்காங்கே சீர்ந்தெழுந்தனர்; ரொட்டித் துண்டுகளைப்

பொட்டலங்களாகக் கட்டி தோள்களில் தொங்கவிட்டுக் கொண்டு, நூற்றுக்கணக்கான மைல் தூரத்திலிருந்து மேடு பள்ளங்களையெல்லாம் கடந்து மஹத்தை வந்தடைந்தனர். மகாராஷ்டிரத்தையும், குஜராத்தையும் சேர்ந்த ஏறத்தாழ அனைத்து மாவட்டங்களிலிருந்தும் சுமார் பத்தாயிரம் பிரதிநிதிகளும், ஊழியர்களும், தலைவர்களும் மாநாட்டில் பங்கு கொண்டனர்.

மாநாடு மகத்தான வெற்றிப் பெறுவதற்கு அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன, எல்லா வசதிகளும் செய்துதரப்பட்டன. மாநாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு நாற்பது ரூபாய் பெறுமான தண்ணீர் வாங்கப்பட்டது; மாநாடு நடைபெற்ற இடத்தில் தீண்டத்தகாதோருக்குத் தண்ணீர் கிடைக்காததே இதற்குக் காரணம்.

கோர வறுமை காரணமாக அரைகுறையாக ஆடையணிந்து செய்வதறியாது நின்ற ஆடவர் மற்றும் பெண்களுக்கிடையே தலைமை உரையாற்றுவதற்கு டாக்டர் அம்பேத்கர் எழுந்து நின்றார்; எளிய, குறுகிய ஆனால் ஆற்றல் மிக்க சொற்களில் தமது உரையைத் தொடங்கினார்; தாம் ஆரம்ப கல்வி கற்ற தபோலியின் நிலைமைகளை உணர்ச்சி பொங்க விவரித்தார்; தமது குழந்தை பருவத்தைக் கழித்த அந்த இடத்தை எவரும் எந்நாளும் மறக்க முடியாது. எழில் கொழிக்கும் அதன் இயற்கைச் சூழல் அதனை என்றென்றும் நேசிக்கவே செய்யும். அவர் தமது குழந்தைப் பருவத்தை நினைவு கூர்ந்து பின்வருமாறு கூறினார்: ''தீண்டத்தகாதவர்கள் என்று அந்த இடத்தில் ஒரு சமயம் ஒதுக்கித் தள்ளப்பட்டிருந்த நாங்கள் முன்னேறிய சமூகத்தினருடன் ஒப்பிடும்போது கல்வியில் பெரிதும் முன்னேறியிருந்தோம். நாட்டின் இந்தப் பகுதியில் அச்சமயம் எங்கள் மக்களின் செல்வாக்கும் கொடி கட்டிப் பறந்து வந்தது''.

பின்னர் அவர் மிகுந்த மெய்யார்வத்தோடு ஓர் உண்மையைத் தமது மக்களுக்கு எடுத்துரைத்தார்; அது மகாராஷ்டிராவில் எங்கெங்கும் எத்திக்கும் காடு மலைகள் எல்லாம் கடந்து நாடு, நகரங்களிலும் கிராமங்களிலும் எதிரொலித்தது. அந்த உண்மை என்ன? ராணுவ சேவையிலிருந்து தாழ்த்தப்பட்ட மக்கள் விடுவிக்கப்பட்டதானது அவர்களது வீழ்ச்சிக்கு ஓர் காரணமாக இருந்தது என்பதை அவர் சுட்டிக்காட்டிக் கூறியதாவது: ''ராணுவ சேவை நமது வாழ்க்கைத் தரங்களை உயர்த்திக் கொள்வதற்கு

நல்வாய்ப்பினை அளித்தது; ராணுவ அதிகாரிகள் என்ற முறையில் நமது அறிவுத்திறத்தையும், வீரத்தையும், விவேகத்தையும் வெளிப் படுத்த அது துணைபுரிந்தது. தீண்டத்தகாதவர்கள் அந்நாட்களில் ராணுவப் பள்ளிகளில் தலைமை ஆசிரியர்களாகத் திகழ்ந்தனர். ராணுவ முகாம்களில் கட்டாயத் தொடக்கக் கல்வி மிகவும் பரந்து விரிந்த அளவிலும் பயனுள்ள முறையிலும் நடைமுறையில் இருந்து வந்தது. இத்தகைய நிலைமையில் ராணுவத்தின் கதவுகளை தீண்டத்தகாதவர்களுக்கு பிரிட்டிஷார் மூடியது மிகப் பெரிய துரோக மாகும், அதுவும் இங்கிலாந்து நெப்போலியனுடன் வாழ்வா, சாவா என்ற போரில் ஈடுபட்டிருந்த வேளையில் பிரிட்ஷார் தங்களது இந்திய சாம்ராஜ்யத்தைக் கட்டி உருவாக்க உதவியவர்களைப் புறக்கணித்தது கடைந்தெடுத்தப் பச்சை துரோகமாகும்.''

பின்னர் உத்வேக மூட்டும் தொனியில் அவர் பின்கண்டவாறு கூறினார்: ''மும்முனை சுத்திகரிப்பு வேள்வியில் நம்மை நாம் ஈடு படுத்திக் கொண்டாலொழிய எத்தகைய முன்னேற்றத்தையும் நாம் எய்த முடியாது. நமது செயல்பாட்டில் பொதுப்பாங்கை மேம் படுத்திக் கொள்ள வேண்டும், நமது உச்சரிப்புகளுக்கு உயிர்த் துடிப்பு அளிக்க வேண்டும். நமது எண்ணங்களுக்கும் சிந்தனை களுக்கும் உரமூட்ட வேண்டும். எனவே இந்தக் காலம் முதல் அழுகிய பிணத்தைத் தின்னமாட்டோம் என்று உறுதி பூணும்படி உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாசி படிந்த கருத்துக்களை நம் மனத்திலிருந்து அறவே அகற்ற இதுவே தக்க தருணமாகும். வீசியெறிந்த அப்பத் துண்டுகளை இனி தின்னமாட்டோம் என்று எத்தகைய தயக்க மயக்கமுமின்றி உறுதி பூணுங்கள். நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ளக் கற்றுக் கொண்டால்தான், நமது சுயமரியாதையை மீட்டுக் கொண்டால் தான், நன்னெறியும், நற்போதனைகளும் பெற்றால்தான், நம்மை நாமே உயர்த்திக் கொள்ள முடியும் என்பதை மறந்துவிடாதீர்கள்.'' ராணுவத்திலும், கப்பற்படையிலும், காவல்துறையிலும் தாழ்த் தப்பட்ட மக்கள் சேருவதற்கு அரசாங்கம் கொடுத்துள்ள தடையை எதிர்த்துப் போராடும்படியும் அவர் தமது மக்களை வலியுறுத் தினார். அரசுப் பணிகளிலும், கல்வித்துறையிலும் அவர்கள் ஈடு படவேண்டிய முக்கியத்துவத்தை உள்ளங்கை நெல்லிக்கனி என எடுத்துரைத்தார். மஹர்களின் பிரச்சினையை எடுத்துக் கொண்டு பேசும்போது அவர்களது சுயமரியாதை உணர்வைத் தூண்டி விட்டார். சில ரொட்டித் துண்டுத் துணுக்குகளுக்காக தங்களது

மனித உரிமைகளை விற்பது முற்றிலும் அவமானகரமானது என்பதை சுட்டிக்காட்டினார்; அடிமைத்தனத்துக்கு அடிகோலும் மானக்கேடான, பத்தாம்பசலியான பாரம்பரியங்களை ஒழித்துக் கட்டும்படியும், கொத்தடிமைத்தனத்துக்கு உள்ளாகாமல் காட்டு நிலங்களை வேளாண்மைக்கு எடுத்துக் கொள்ளும்படியும் அறிவுரை நல்கினார். முடிவாக, உள்ளத்தை உருக்கும் தொனியில் பின்கண்டவாறு கூறினார்: ''தங்களைவிட தங்கள் குழந்தைகள் நல்ல நிலையில் இருக்க வேண்டும் என்று விரும்பாத பெற்றோர்கள் இருப்பார்களானால் அவர்களுக்கும் மிருகங்களுக்கும் எந்த வித்தியாசமும் இருக்க முடியாது.''

பல முக்கியமான விஷயங்கள் குறித்து மாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தீண்டப்படாதவர்கள் தங்களது குடியுரிமைகளைப் பெறுவதற்கு உதவும்படியும், பணித்துறைகளில் அவர்களை ஈடுபடுத்தும்படியும், தாழ்த்தப்பட்ட இன மாணவர்களுக்கு உணவு வழங்கும்படியும், செத்த பிராணிகளைத் தாங்களே அடக்கம் செய்யும்படியும் ஒரு தீர்மானத்தின் மூலம் சாதி இந்துக்களை மாநாடு கேட்டுக் கொண்டது. இறுதியாக, தீண்டப்படாதவர்கள் ஊழ்த்த இறைச்சியைத் தின்பதைத் தடுப்பதற்குப் பிரத்தியேக சட்டங்கள் இயற்றும்படியும், மதுவிலக்கை நடைமுறைப்படுத்தும்படியும், அவர்களுக்கு இலவசக் கட்டாய ஆரம்பக் கல்வி அளிக்கும்படியும், தாழ்த்தப்பட்ட வகுப்பின மாணவர் இல்லங்களுக்கு உதவி செய்யும்படியும், 'போலே தீர்மானத்தை'ச் செயல்படுத்தும்படியும், இதன் பொருட்டு இந்திய குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் 144 பிரிவைப் பிரகடனப்படுத்தும்படியும் அது அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது. முதல் நாளன்று, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் உரிமைகளை ஆதரித்து உள்ளூரையும், வெளியூர்களையும் சேர்ந்த சில சாதி இந்துத் தலைவர்கள் பேசினர்; இது விஷயத்தில் தாங்கள் வேண்டிய உதவி செய்வதாகவும் உறுதியளித்தனர். அன்று இரவு கூடிய ஆலோசனைக் குழு மாநாட்டிற்கு வந்திருந்த மேல்தட்டு வகுப்புத் தலைவர்களின் உணர்வுகளைக் கணக்கிலெடுத்துக் கொண்டது; மாநாட்டிற்கு வந்துள்ள அனைவருமே ஒட்டுமொத்தமாக சௌதார் குளத்துக்குச் செல்வதென்றும் அங்கு தண்ணீர் எடுப்பதற்கு தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட உதவுவது என்றும் தீர்மானித்தது. சாதி இந்துக்களின் கடமைகள் மற்றும் பொறுப்புகள் சம்பந்தமான தீர்மானத்தை ஆதரித்துப் பேசும்படி இரண்டு சாதி இந்துத்

தலைவர்களை மாநாடு கேட்டுக் கொண்டது. கலப்புத் திருமணம் சம்பந்தப்பட்ட ஷரத்து நீங்களாக தீர்மானம் முழுவதையும் அவர்கள் இருவரும் ஆதரித்துப் பேசினர். மஹத் நகரசபை தமது குளத்தை தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் திறந்துவிடுவது என்று 1924ல் நிறைவேற்றிய தீர்மானத்தைத் தொடர்ந்து, அந்தக் குளத்திலிருந்து தீண்டத்தகாதவர்கள் தண்ணீர் எடுப்பது என்றும், இது விஷயத்தில் அவர்களுக்குள்ள உரிமையை இதன் மூலம் நிலைநாட்டுவது என்றும் முடிவு செய்யப்பட்டது. இதன்படி சௌதார் குளத்திலிருந்து தண்ணீர் எடுப்பதற்குத் தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்டப் பிரதிநிதிகள் ஒரே கூட்டமாக, அமைதியாகப் புறப்பட்டனர். பரிமாணத்திலும் சரி, மிக முக்கிய விளைவுகளிலும் சரி மகத்தான இந்த நிகழ்ச்சி இப்போது நடைபெற்றுக் கொண்டிருந்தது. அடிமைத்தன எதிர்ப்பு, சாதி-எதிர்ப்பு, சமயகுரு-எதிர்ப்பு நிகழ்ச்சியாக இது அமைந்திருந்தது. தீண்டத்தகாத இந்துக்களின் விழிப்புணர்வைப் பிரதிநிதித்துவப்படுத்திய டாக்டர் அம்பேத்கர் அந்தக் குளத்தை நோக்கி சென்று கொண்டிருந்தார். இதே குளத்திலிருந்து முஸ்லீம்களும் கிறித்தவர்களும் தீண்டத்தக்க இந்துக்கள் எனப்படுவோருடன் சேர்ந்து தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தனர். ஆனால் தாகத்தால் தொண்டை வரண்டுபோன தீண்டத்தகாத இந்துக்கள் ஒரு சொட்டு தண்ணீர் எடுப்பதற்குக்கூட அனுமதிக்கப்படவில்லை; இத்தனைக்கும் இவர்கள் இந்துக் கடவுள்களை வழிபடுபவர்கள்; காலம்காலமாக, தொன்றுதொட்டு, வாழையடி வாழையாக இந்து மதத்தைப் பின்பற்றி வருபவர்கள்.

இத்தகைய சூழலில்தான் தீண்டத்தகாதவர்கள் தங்கள் வரலாற்றிலேயே முதல் தடவையாக தங்களது உரிமைகளை நிலைநாட்டும் பொருட்டு தங்களுடைய ஒரு மாபெரும் தலைவரின் சீரிய, நேரிய வழிகாட்டுதலில் அணிவகுத்துச் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் அனைவரும் மிகுந்த கட்டுப்பாட்டையும், ஆற்றலையும், உற்சாகத்தையும் வெளிப்படுத்தினர். அணிவகுப்பு மஹத் தெருக்களின் வழியாகச் சென்று சௌதார் குளத்தை அடைந்தது. டாக்டர் அம்பேத்கர் இப்போது குளத்தின் கரையில் நின்று கொண்டிருந்தார். எனினும் அறிவாளிகளில் சிறந்த அறிவாளியும், இந்தப் புவியிலேயே தலைசிறந்த எந்த மேதைக்கும் இணையானவரும் விழுமிய ஆர்வ விருப்பங்கள் கொண்ட ஓர் இந்துவுமான டாக்டர் அம்பேத்கர் தாம் பிறந்து வளர்ந்த புனித மண்ணில் இந்தியத் திருநாட்டில் ஒரு பொது நீர்நிலையிலிருந்துகூட தண்ணீர் எடுக்கவோ அல்லது நாட்டின் பொது நூலகம் ஒன்றிற்குச் சென்று புத்தகங்கள் எடுத்துப் படிக்கவோ இயலாதவரான அவர்

இப்போது அரக்க மனம் படைத்த கொடியவர்களின் இறுமாப் புக்கு ஆப்படித்து தங்கள் சமயம் மிருகங்களைக் கூட அன்போடு, கருணையோடு நடத்துகிறது என்று பெருமைப் பேசிக் கொண்டே தங்களுடைய சமயத்தைச் சேர்ந்தவர்களை நாய்களையும், பூனை களையும் விட மிகமோசமாக, கொடுமையிலும் கொடுமையாக நடத்தும் அநீதியை, அக்கிரமத்தை விளாசி சாடினார்.

டாக்டர் அம்பேத்கர் அந்தக் குளத்திலிருந்து தண்ணீர் எடுத்துப் பருகினார். அங்கு குழுமியிருந்த ஏராளமானோரும் அவரைப் பின்பற்றினர்; இதன் மூலம் தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்டினர். பின்னர் ஊர்வலத்தினர் அமைதியாகப் பந்தலுக்குத் திரும்பினர். இந்த நிகழ்ச்சி நடைபெற்ற இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு சாதி இந்துக்களில் குறுகிய மனம் படைத்த சிலர் ஓர் வதந்தியைப் பரப்பிவிட்டனர். அதாவது தீண்டத்தகாதவர்களும் வீரேஸ்வர் ஆலையத்திற்குள் பிரவேசிக்கத் திட்டமிட்டிருப்பதாக கதை கட்டி விட்டனர். அவ்வளவுதான், ரௌடிக் கும்பல் கைகளில் மூங்கிற் கம்புகளுடன் தெரு முனைகளில் கூடிவிட்டது. வைதீக ரௌடிகள் அனைவரும் ஆயுதபாணிகளாக ஆவேசத்துடன் கிளம்பிவிட்டனர். உடனே நகரமே சிறைகளின் பாசறையாகிவிட்டது. தங்களுடைய மதம் அபாயத்திலிருப்பதாகக் கூக்குரலிட்டனர். அதுமட்டுமல்ல, இன்னும் விந்தையிலும் விந்தை என்னவென்றால் தங்களுடைய தெய்வமும் தீட்டுப்படும் அபாயத் திலிருப்பதாகக் கூச்சல் போட்டனர். அவர்களுடைய இதயங்கள் துடிதுடித்தன, கைகள் நடுநடுங்கின, அவர்களுடைய முகங்கள் அடக்க முடியாத சினத்தால் கொழுந்து விட்டெரிவதுபோல் இருந்தன. அச்சமயம் பிரதிநிதிகளில் பலர் நகரில் சிறுசிறு குழுக் களாகச் சிதறிக் கிடந்தனர். சிலர் பயணத்திற்குத் தயாராக மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டிருந்தனர். மற்றும் சிலர் தங்களுடைய கிராமங்களுக்குச் செல்லுவதற்கு முன்னதாக தங்கள் வயிற்றுப் பசியை ஆற்றிக் கொள்வதில் முனைந்து ஈடுபட்டிருந்தனர். இதற்குள்ளாக பெரும்பாலான பிரதிநிதிகள் நகரைவிட்டுச் சென்று விட்டனர். இதுதான் சமயம் என்று பந்தலில் எஞ்சியிருந்த பிரதிநிதி கள் மீது ரௌடிகள் புலியெனப் பாய்ந்தனர். அவர்களுடைய உணவைத் தரையில் கொட்டினர்; அவர்களது தட்டுமுட்டு சாமான் களை உடைத்து நொறுக்கினர்; சற்றும் எதிர்பாராதவிதமாக சிலரை நையப்புடைத்தனர். பந்தல் முழுவதுமே குழப்பமும், பதற்றமும், பீதியும், கிலியும் கோலோச்சின. மூர்க்க வெறிபிடித்த வைதீகர்கள் தங்கள் மனச்சாட்சியை அடியோடு இழந்துவிட்டனர் என்றே கூற

வேண்டும். வருணிக்க முடியாத அளவுக்கு அவர்கள் பேயாட்டம் போட்டனர்.

மஹத் தெருக்களில் சுற்றித் திரிந்து கொண்டிருந்த தாழ்த்தப் பட்ட இனத்தைச் சேர்ந்த குழந்தைகளும், பெண்டிரும் பிரதிநிதி களும் இந்தத் திடீர் திருப்பம் கண்டு கதிகலங்கி போயினர்; பதை பதைத்து விட்டனர். அவர்களில் சிலர் ஈவிரக்கமின்றி முரட்டுத் தனமாக அடிக்கப்பட்டனர். அவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முஸ்லீம் வீடுகளில் அடைக்கலம் புக வேண்டி வந்தது. ஸ்தல மாம்லத்தாராலும் காவல்துறை ஆய்வாளராலும் ரௌடி களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. எனவே அச்சமயம் மாநாடு நடைபெற்ற நாட்களில் பயணிகள் விடுதியில் தங்கியிருந்த டாக்டர் அம்பேத்கரைச் சென்று இது சம்பந்தமாகப் பார்த்தனர். ''நீங்கள் மற்றவர்களைக் கட்டுப்படுத்துங்கள், நான் என் மக்களைக் கட்டுப்படுத்துகிறேன்.'' இவ்வாறு கூறிவிட்டு அவர் தம்முடைய சகாக்கள் இரண்டு அல்லது மூன்று பேர்களுடன் சம்மந்தப்பட்ட இடத்துக்கு விரைந்தார். வழியில் தெருவில் ஒரு ரௌடிக் கும்பல் காரைத் தடுத்து நிறுத்தியது; எனினும் அந்தக் கும்பலைச் சாந்தப் படுத்த முயன்றார். ஆலயத்திற்குள் பிரவேசிக்கும் எண்ணமோ, திட்டமோ ஏதும் தங்களுக்கு இல்லை என்பதை விளக்கிக் கூறினார். பின்னர் தொடர்ந்து சென்று, அங்குள்ள நிலைமையை நேரில் பார்த்துவிட்டுப் பங்களாவுக்குத் திரும்பினார். இதற்குள்ளாக தீண்டத்தகாதவர்கள் ஏறத்தாழ இருபதுபேர் கடுமையாக காய மடைந்திருந்தனர். மருத்துவருக்கு தகவல் கொடுக்கப்பட்டது. அவர் வந்தார்; ''ஆழம் தெரியாமல் காலை விட்டுவிட்டதாக'' அவர்கள் மீது எரிந்து விழுந்தார்; பின்னர் அவர்களுடைய காயங் களுக்குக் கட்டுப்போட்டுவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டார்.

பின்னர் ரௌடிகள் பிரதான தெருக்களில் 'ரோந்து' சென்றனர்; சிறுசிறு கூட்டமாகத் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட மக்களை 'கண்மண்' தெரியாமல் தாக்கினர். இவையாவற்றிலும் மிகவும் அருவருக்கத்தக்க விஷயம் என்னவென்றால் மாநாட்டில் பங்கு கொண்டு விட்டுத் தமது கிராமங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந்த பிரதிநிதிகளை நையப் புடைக்கும்படித் தங்களது அடியாட்களுக்கு அவர்கள் செய்தி அனுப்பியதுதான். இந்தக் கட்டளைக்கு இணங்க ஏராளமான

மஹர் ஆண்களும், பெண்களும் தங்களது கிராமங்களைச் சென்றடைவதற்கு முன்னரோ, பின்னரோ மூர்க்கத்தனமாகத் தாக்கப்பட்டனர்.

இதற்கிடையே, மாநாட்டுப் பிரதிநிதிகள் காட்டுமிராண்டித் தனமாகத் தாக்கப்பட்ட செய்தி காட்டுத் தீ போல் பரவிற்று. டாக்டர் அம்பேத்கர் பங்களாவுக்குத் திரும்பியபோது, அவரது கட்டளைகளை எதிர்பார்த்துக் கொண்டு சுமார் நூறு பேர் பொறுமை யின்றி அத்திரத்தோடு காத்துக் கொண்டிருந்தனர், அவர்களது கண்களில் அனலும் கனலும் தகித்துக் கொண்டிருந்தன; பழிக்குப் பழி வாங்க அவர்களது கரங்கள் துடித்துக் கொண்டிருந்தன. எனினும் அவர்களுடைய தலைவர் அமைதியும் பொறுமையும், கட்டுப்பாடும் காக்கும்படி வேண்டுகோள் விடுத்தார். சிறிது நேரம் அங்கு அமைதி கோலோச்சிற்று. அச்சமயம் டாக்டர் அம்பேத்கர் மட்டும் கண் அசைத்திருந்தால் மஹத்தையே இரத்தக்காடாக, மயானமாக ஆக்கியிருப்பார். மாநாட்டுப் பிரதிநிதிகளில் ஏராள மானோர் நகரிலும், பந்தலிலும் இன்னமும் நடமாடிக் கொண் டிருந்தனர். எண்ணிக்கையில் அவர்கள் நகரிலிருந்த குண்டர் களைவிட அதிகமாக இருந்தனர். அவர்கள் மட்டும் நினைத்திருந் தால் குண்டர்களின் மண்டைகளை உடைத்து நொறுக்கி இருப்பர். இதுமட்டுமல்ல அங்கிருந்த தீண்டத்தகாதவர்களில் நூற்றுக்கணக் கானோர் முதலாம் உலகப் போரில் வீரத்தோடு சமர் புரிந்து தங்களது வெல்லற்கரிய வலிமையை வெளிப்படுத்தி இருக்கின் றனர்.

எனினும் அவர்கள் தங்களது தலைவரின் கட்டளைக்கிணங்க அற்புதமாக கட்டுப்பாட்டைக் காத்து நின்றனர். அக்கிரமக்காரர் களுக்கு எதிராக அவர்கள் தங்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டனர். அவர்களது போராட்டம் அகிம்சை ரீதியிலும் சட்டரீயிலும் அமைந் திருந்தது. சட்டத்தை மீற வேண்டும் என்று அவர்கள் எண்ண வில்லை. இதனால் மிகக் கொடிய ஒரு கலவரம் தவிர்க்கப்பட்டது. மாலை நேரம் மங்கி இரவு தொடங்கியதும் அனைத்துப் பிரதி நிதிகளும் தத்தமது கிராமங்களுக்குத் திரும்பிவிட்டனர். டாக்டர் அம்பேத்கரும் தமது உதவியாளர் ஆனந்தராவ் சித்ரேயுடன் பங்களாவைக் காலி செய்துவிட்டார், அன்று மாலையிலிருந்து அது ஓர் அரசு அதிகாரிக்கு ஒதுக்கப்பட்டிருந்ததே இதற்குக் காரணம். எனவே காவல்துறையினரின் அறைகளைத் தமது இருப்பிட மாக ஆக்கிக் கொண்டார். அங்கிருந்தவாரே கலவரம் பற்றிய

விசாரணையைப் பூர்த்தி செய்துவிட்டு மார்ச் 23 ஆம் தேதி பம்பாய் திரும்பினார்.

கலவரம் ஓய்ந்த பிறகே காவல்துறையினர் அங்கு வந்து சேர்ந்தனர்; வரம்பு மீறி நடந்து கொண்டதாக சில கடைந்தெடுத்த ரௌடிகளைக் கைது செய்தனர். இந்தப் பிரபல இந்து ரௌடிகள் ஒன்பது பேர்களில் ஐந்துபேர் மிகவும் ஆபத்தானவர்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு, மாவட்ட நீதிபதியால் நான்கு மாத கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டனர். மாவட்டத்தின் தலைமை அதிகாரிகள் இந்துக்கள் அல்லாதவர்களாக மட்டும் இல்லை யென்றால் தீண்டத்தகாதவர்கள் விஷயத்தில் பாரபட்சமின்றி நீதி வழங்கப்பட்டிருக்க முடியாது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இதில் உண்மை இல்லாமல் இல்லை. பேஷ்வா சட்டத்தின்படி தாம் ஓர் யானையால் மிதித்துக் கொல்லப்பட்டிருக்கக் கூடும் என்று அவர் குறிப்பிட்டார். இதே பேஷ்வா சட்டத்தின்படிதான் புனா நகரில் பகல் பொழுதில் சில மணி நேரங்களில் தீண்டத்த காதவர்கள் செல்லுவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை; மற்ற நேரங்களில் அனுமதிக்கப்படும்போதுகூட பானைகளை கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டு செல்ல வேண்டும்.''[1]

## மஹத் மாநாடு- 'பம்பாய் கிரானிக்கலில்' வெளியான செய்தி.

கொலாபா மாவட்ட தாழ்த்தப்பட்ட இனத்தவரின் மாநாடு 1927 மார்ச் 19,20 தேதிகளில் மஹத்தில் நடைபெற்றது; டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பார் - அட் - லா தலைமை வகித்தார். தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்நத 2500 க்கும் அதிகமானோர் மாநாட்டில் கலந்து கொண்டனர்; எங்கும் உற்சாகம் கரை புரண்டோடிற்று. எனினும் மாநாட்டின் பணி ஒரு கலவரத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டது. மஹத் நகரைச் சேர்ந்த மேல்மட்ட இந்துககளே இதற்கு முற்றிலும் காரணம். மாநாட்டின் முதல் நாளன்று மாநாட்டுத் தலைவர் தலைமை உரையாற்றிய பிறகு மேல்தட்டு இந்துக்கள் பலர் பேசினர்; ஒடுக்கப்பட்ட மக்களுக்கு எல்லா வழிகளிலும் உதவுவதாக அவர்கள் உறுதி கூறினர்.

---

1. கீர், பக்கங்கள் 69-71, 73-77.

ஆனால் அதே சமயம் ஒடுக்கப்பட்ட இனத்தினர், மேல்தட்டு வர்க்கத்தினரின் கோபத்தைக் கிளர்த்திவிடும் பணியில் ஈடுபட லாகாது என்றும் அறிவுரை பகர்ந்தனர். இதனைக் கணக்கில் எடுத்துக் கொண்டு விஷய ஆலோசனைக்குழு ஒரு தீர்மானத்தைத் தயாரித்தது; மற்றவர்களுடன்கூட, ஒதுக்கப்பட்ட இன மக்களைக் கைதூக்கிவிட மேல்தட்டு இந்துக்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை அந்தத் தீர்மானம் கோடிட்டுக் காட்டியது. மஹத்தில் குடிநீர் பெறுவதற்கு ஒடுக்கப்பட்ட மக்கள் மிகுந்த சிரமப்படுவதை விஷயாலோசனைக் குழுவின் கவனத்துக்குக் கொண்டு வரப் பட்டது; மகத்தில் வசிக்கும் ஒடுக்கப்பட்ட மக்கள் மட்டுமின்றி, வாணிக நிமித்தமாகவோ அல்லது அரசுப் பணி நிமித்தமாகவோ கிராமங்களிலிருந்து மஹத்துக்கு வரும் ஒடுக்கப்பட்ட இன மக்களும் இத்தகைய வாதனைக்கும் வேதனைக்கும் ஆளாக வேண்டி யிருக்கிறது என்பதும் எடுத்துக்காட்டப்பட்டது. இங்கு தண்ணீர் பஞ்சம் அளவுக்கு அதிகமாக தாண்டவமாடுவதால், இது சம் பந்தமாக மாநாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக நாள் தோறும் 15 ரூபாய் செலவிடப்பட்டது. நகரிலுள்ள குளங்களைப் பொது மக்களுக்குத் திறந்துவிட வேண்டும் என்று மகத் நகரசபை சில காலத்திற்கு முன்னர் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றிற்று; ஆனால் இது சம்பந்தமான அறிவிப்புப் பலகை அங்கு வைக்கப் படாததால், மக்கள் அங்கு தண்ணீர் எடுப்பதற்குத் தயங்கினர்; அச்சம் காட்டினர். எனவே, மாநாட்டில் கலந்து கொண்ட மேல்தட்டு வர்க்கத்தினரின் மனநிலையை இது விஷயத்தில் தெரிந்து கொண்டு ஒரு முடிவுக்கு வந்தது; அதாவது மாநாட்டுக்கு வந்துள்ள அனைவருமே ஒட்டுமொத்தமாக சௌதார் குளத்துக்குச் செல்ல வேண்டும் என்றும், அங்கு தண்ணீர் பெறுவதற்கு ஒடுக்கப்பட்ட மக்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட அவர்களுக்கு உதவ வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

## ஒரு தவறான வதந்தி

எனவே, 20 ஆம் தேதி காலையில் மாநாடு கூடிற்று. ஒடுக்கப் பட்ட மக்களுக்கு மேல்தட்டு வர்க்கத்தினர் என்ன செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்தும் ஒரு தீர்மானத்தை ஒடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் மாநாட்டின் முன்வைத்தனர். மேல்தட்டு வர்க்கத் தினர் சார்பில் பேசுமாறு திருவாளர்கள் புருஷோத்தம் பிரபாகர் ஜோஸியையும் கோவிந்த் நாராயண் தாரியாவையும் தலைவர்

கேட்டுக் கொண்டார். கலப்புத் திருமணம் சம்பந்தமாக தீர்மானத்தில் இடம் பெற்றிருந்த ஒரு ஷரத்தைத் தவிர மற்றபடி தீர்மானத்தை இருவருமே ஏற்றுக் கொண்டனர். இவ்வாறு பொதுவான உடன்பாடு இருப்பது உறுதி செய்துகொள்ளப் பட்டதைத் தொடர்ந்து கூட்டம் முடிந்ததும் மாநாட்டினர் அனைவரும் மேலே குறிப்பிடப்பட்ட குளத்துக்கு ஊர்வலம் சென்றனர். ஊர்வலம் மிகவும் அமைதியான முறையில் நடைபெற்றது; எல்லாமே சுமுகமாக நடந்தேறின. ஆனால் சுமார் இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு, தீய நோக்கம் கொண்ட சிலர் ஒரு தவறான வதந்தியைக் கிளப்பிவிட்டனர், அதாவது வீரேஸ்வர் ஆலயத்திற்குள் பிரவேசிக்க ஒடுக்கப்பட்ட மக்கள் திட்டமிட்டிருப்பதாக கடைந்தெடுத்த ஒரு பொய்யைக் கிளப்பி, புனை சுருட்டைப் பரப்பி விட்டனர். அவ்வளவுதான் நகரமே அல்லோல கல்லோலப் பட்டது. ஏராளமான குண்டர்கள் தடிகளுடன் திரண்டுவிட்டனர். கூட்டம் மேன்மேலும் ஆவேசமடைந்தது, விரைவிலேயே நகரம் முழுவதுமே ரௌடிகளின் அட்டகாசம் கொடிகட்டிப் பறந்தது; ஒடுக்கப்பட்ட மக்களைப் பழி தீர்க்க வேண்டும், அவர்களது இரத்தத்தைக் குடிக்க வேண்டும் என்று ஆர்ப்பரித்தது.

## இருபது பேர் காயம்

இச்சமயம், ஒடுக்கப்பட்ட மக்கள் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பிச் செல்லுவதற்கு முன்னர் உணவு அருந்துவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். இவர்களில் பெரும்பாலோர் நகரைவிட்டுக் கிளம்பிச் சென்ற பின்னர், ஒடுக்கப்பட்ட மக்கள் உணவு அருந்திக் கொண்டிருந்த சமையலறையில் ரௌடிகள் திடுமெனப் புகுந்தனர். இவ்விரு பிரிவினரிடையே ஒரு பெரிய மோதல், சண்டை மூண்டிருக்கும். ஆனால் ஒடுக்கப்பட்ட மக்களின் தலைவர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்தினர்; இல்லையென்றால் ஒரு மிகப்பெரிய கலவரம் மூண்டிருக்கும்; நல்ல வேளையாக அது தவிர்க்கப்பட்டது. இவ்வாறு ஆத்திரமூட்டலுக்கு வழியில்லாது போனதைக் கண்ட குண்டர்கள் பிரதான தெருவில் வலம் வந்தனர். சிறுசிறு குழுக்களாகத் தங்களுடைய கிராமங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட மக்களை வன்நெஞ்சோடு தாக்கினர். அவர்களது குடிசைகள் பலவற்றில் அடாவடியாக நுழைந்து, அவர்களை சொல்ல நாக்கூசும் வகையில் சாடினர், வாட்டி வதைத்தனர். இந்தக் கொடூரத் தாக்குதலில்

இருபதுபேர் படுகாயமடைந்தனர். இந்நிலையிலும் தாழ்த்தப் பட்ட இனத்தினரின் போக்கு பாராட்டுதலுக்குரியதாக இருந்தது, அதே சமயம் மேல்தட்டு வர்க்கத்தினரில் பெரும்பாலோரின் போக்கோ எள்ளி நகையாடத் தக்கதாக, அவமானகரமானதாக, தலைகுனியத் தக்கதாக இருந்தது. இத்தனைக்கும் தாழ்த்தப்பட்ட மக்களின் எண்ணிக்கை உயர்தட்டு மக்களின் எண்ணிக்கையை விடப் பன்மடங்கு அதிகமாக இருந்தது. எனினும் அவர்கள் ஆத்திரமூட்டலுக்கு இடம் கொடுக்கவில்லை, அதிசயிக்கத்தக்க அமைதி காத்தனர். ஏனென்றால், எதையும் சாத்வீக முறையில், முற்றிலும் சட்டரீதியாக செய்வதே அவர்களது தலைவர்களின் நோக்கமாக இருந்தது. தாழ்த்தப்பட்ட மக்கள் மலை மலையான ஆத்திரமூட்டலையும் சகித்துக் கொண்டு இவ்விதம் நிரதிசய பொறுமை காட்டியது அவர்களுக்கு மகத்தான பெருமை சேர்த்தது. பொது நீர் நிலைகளிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ளும் அடிப்படை உரிமையைக்கூட தாழ்த்தப்பட்ட மக்கள் அனுபவிப்பதை ஏற்க மேல்தட்டு வர்க்கத்தினர் தயாராக இல்லை என்பதையே மகத் மாநாடு உள்ளங்கை நெல்லிக்கனி என எடுத்துக் காட்டிற்று.

மஹத்திலும் கொலாபா மாவட்டத்திலும் இருந்த மேல் தட்டு சாதி இந்துக்களின் மிகவும் அருவருக்கத்தக்க ஒரு செயலை இங்கு அவசியம் குறிப்பிட்டாக வேண்டும். அது என்ன தெரியுமா ? இந்த மாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகள் தத்தமது கிராமங்களுக்குத் திரும்பியதுமே அவர்களைத் தண்டிக் கும்படி பல்வேறு கிராமங்களுக்கும் உடனடியாகத் தகவல்கள் அனுப்பப்பட்டன. இந்த ஆணை வரிக்குவரி, எழுத்துக்கு எழுத்து நிறைவேற்றப்பட்டது. ஏராளமான மகர்கள் தத்தமது கிராமங் களுக்குத் திரும்பியதற்கு பின்னரோ அல்லது முன்னரோ கடுமை யாகத் தாக்கப்பட்டனர். இந்தக் கிராமங்களில் எல்லாம் மேல்சாதி இந்துக்கள்தான் எண்ணிக்கையில் மிக அதிகமாக இருந்தனர். இது மகர்களுக்கு மிகவும் பிரதிகூலமான ஓர் அம்சமாக இருந்தது. தாழ்த்தப்பட்ட இனத்தவர்களின் தலைவர்கள் தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டும் என்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொண்டனர். டி.எஸ்.பி உட்பட மாவட்ட அதிகாரிகள் ஸ்தலத்துக்கு வந்து விசாரிக்க வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டனர். ஸ்தல மாஜிஸ்ட்ரேட் எதுவும் செய்யாமல் இரண்டு மணி நேரத்தை வீணாக்காதிருந்தால் அநேகமாக கலவரத்தைத் தவிர்த்திருக்க முடியும் என்பதை இங்கு குறிப் பிடுவது அவசியம்.''

''மகாராஷ்டிரத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் முதலாவது மாபெரும் முயற்சி, தங்கள் குடி உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள அவர்கள் மேற்கொண்ட முதல் முயற்சி இவ்வாறு முடிவடைந்தது. இந்த மாநாடு பெரும் சிறப்பு வாய்ந்த ஒரு மாபெரும் நிகழ்ச்சியாக அமைந்திருந்தது. இந்துஸ்தானின் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தை இது தொடங்கி வைத்தது. இது மட்டுமல்ல, டாக்டர் அம்பேத்கரின் சொந்த வாழ்க்கையையும் சமூக மற்றும் தேசிய மறுசீரமைப்பின் போக்கையும் இது மாற்றி அமைத்தது.

அடக்கி ஒடுக்கப்பட்ட, மிதித்துத் துவைக்கப்பட்ட, வாயிருந்தும் ஊமைகளாக்கப்பட்ட, மனிதத் தன்மையற்றவர்களாக்கப்பட்ட கோடானகோடிப் பேர் தங்களுடைய இரட்சகரின் தலைமையில் இந்தியத் திருநாட்டின் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி வைத்தனர். அவர்கள் தங்களுடைய நீண்ட நெடுங்கால மனக்குறைகளை வெளியிட்டதோடு, அவற்றைப் போக்குவதற்குத் தாங்களே முன்முயற்சியும் எடுத்துக் கொண்டனர். அவர்கள் இப்போது அசாத்திய நெஞ்சுரத்தை வெளிப்படுத்தினர். துணிச்சலோடு நிற்பதிலும் தங்கள் முகங்களிலும் பாதங்களிலும் படிந்துள்ள தூசை அகற்றுவதிலும் அவரவர் திறமையைப் புலப்படுத்தினர்.

கல்வி அறிவு பெற்ற அவர்களுடைய தலைவர்கள் தொடங்கி வைத்த இந்தப் போராட்டம் அவர்களது உள்ளங்களைக் கொள்ளை கொண்டது; சுயமரியாதை, சுயமுயற்சி எனும் சுடரொளியை ஏற்றிவைத்தது. இதுவரை அவர்கள் மகதில் வசைமொழிகளுக்கும், அவமதிப்புக்கும், நிந்தைக்கும் ஆளாகி வந்தனர். இப்போது அவர்கள் முன் என்றும் இல்லாதவாறு சுய மேம்பாட்டிலும் சுய பண்பாட்டிலும் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தினர். தாழ்த்தப்பட்ட இன மக்கள் இந்த மாநாட்டின் விளைவாக ஊழ்த்த இறைச்சியை உண்ணுவதையும், தோலாடைகளை உடுத்துவதையும் கைவிட்டனர். ரொட்டித் துண்டுகளுக்காக வீடுவீடாக, தெருத் தெருவாக பிச்சையெடுப்பதை நிறுத்தினர்.

தீண்டத்தகாதவர்கள் தொட்டதால் தீட்டுப்பட்டுவிட்டதாக அறிவிக்கப்பட்ட சௌதார் குளத்தின் கதி என்னவாயிற்று? வைதீக வெறிபிடித்த, பிற்போக்கு மனோபாவம் கொண்ட இந்துக்கள் குளத்தை சுத்தம் செய்யும் பிரச்சினை சம்பந்தமாக விவாதித்து முடிவெடுப்பதற்காக வீரேஸ்வரர் ஆலயத்தில் ஒரு கூட்டத்தைக் கூட்டினர். பசுவின் சாணத்தையும், பசு மூத்திரத்தையும், தயிரையும், தண்ணீரையும் கலப்பதே அவர்களது அகராதியில் எல்லா

வகையான தீட்டுக்கும் பரிகாரமாகும். இதன்படி 108 களிமண் பானைகளில் குளத்திலிருந்து தண்ணீர் எடுத்துவரப்பட்டது. பாலும் தயிரும், பசு மூத்திரமும், சாணமும் அவற்றில் நிரப்பப் பட்டன. பிராமண அர்ச்சகர்களும், ஏனையோரும் காது செவிடுபட மந்திரங்கள் உச்சரிக்க இந்தப் பானைகள் குளத்தில் அமிழ்த்தப் பட்டன. இதன் பேரில் சாதி இந்துக்கள் பயன்படுத்துவதற்கு தண்ணீர் சுத்திகரிக்கப்பட்டுவிட்டதாக பிரகடனம் செய்யப்பட்டது. முகமதியர்களையும், கிறித்தவர்களையும் பொறுத்தவரையில் புனிதப்படுத்தும் இந்த நடவடிக்கையில் எந்த சம்பந்தமும் இல்லை என்பதைக் கூறியாக வேண்டும். மனிதன் தொடுவதால் தண்ணீர் மாசுபட்டுவிடுவதில்லை என்பது அவர்களது கருத்தாகும். எத்தகைய தங்குதடையுமின்றி எப்போதும் போலவே அவர்கள் தண்ணீரைப் பயன்படுத்தினர். சௌதார் குளம் சுத்தப்படுத்தப் பட்டது என்ற தகவல் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் உள்ளங்களைப் பெரிதும் புண்படுத்திற்று; டாக்டர் அம்பேத்கரின் இதயத்தை வெகுவாக நோகச் செய்தது; அவரது மனம் வருணிக்க இயலாத அளவுக்கு ஊறுபட்டதால் அவர் மிகுந்த சீற்றமடைந்தார், தமது மக்களின் உரிமைகளை நிலை நாட்டும் பொருட்டு ஒரு சத்தி யாக்கிரகப் போராட்டத்தைத் தொடங்குவது என்று தீர்மானித்தார். இந்தப் பொறுமையிழந்த பரிகாரம் நோயைவிட மோசமானது என்று சிலர் அச்சம் கொண்டனர். அப்போது டாக்டர் அம்பேத்கர் என்ன செய்தார் தெரியுமா ? கல்வி அறிவை வெறுமனே வளர்ப்ப தாலும் திருமறை நூட்களை விரித்துரைப்பதாலும் மட்டுமே நீண்ட நெடுங்காலமாக ஆழ வேரூன்றிப்போன நோய்க்குப் பரிகாரம் கண்டுவிட முடியாது என்பதை மிகவும் சரியான கோணத்தில் எடுத்துரைத்தார். நோய் பெரிதும் முற்றிவிட்டது, இதற்கு விவேகம் என்ற கட்டுப்போடுவதன் மூலமோ வேறு எந்த உத்திகளை கையாள்வதன் மூலமோ அதனைக் குணப்படுத்திவிட முடியாது. கடுமையான நோய்களுக்குத் தீவிர சிகிச்சை தேவை.

இதன்படி, 1927 ஜூன் 26 ஆம் தேதி பகிஷ்கிரித் பாரத்தில் ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது. மஹத் இந்துக்கள் தாழ்த்தப்பட்ட இன மக்கள் மீது சுமத்தியுள்ள தீட்டுக் கறையை சௌதார் குளத்தில் குளிப்பதன் மூலம் அகற்றிக் கொள்ள விரும்புபவர்களும், அந்தக் குளத்திலிருந்து தண்ணீர் எடுத்தமைக்காகத் தங்கள் பிரதிநிதிகள் தாக்கப்பட்டதைக் கண்டிக்க விரும்புபவர்களும் பம்பாயிலுள்ள பகிஷ்கிரித் ஹிதாகரினி சபையில் தங்கள் பெயர்களைப் பதிவு

1. பின் இணைப்புகள் I, II, III பார்க்கவும்.

செய்து கொள்ள வேண்டும் என்று அந்த அறிக்கையில் குறிப்பிடப் பட்டிருந்தது. மேலும் இது சம்பந்தமான சத்தியாக்கிரகப் போராட்டம் மேலே குறிப்பிடப்பட்ட அமைப்பின் சார்பில் நடை பெறும் என்றும் அறிவிக்கப்பட்டிருந்தது.

டாக்டர் அம்பேத்கரின் கிளர்ச்சித் திட்டம் பற்றி காவல் துறை அறிக்கை :

I

## "மஹத்திலுள்ள தாழ்த்தப்பட்ட இன மக்கள் : அட்டூழியங்களை எதிர்த்து பம்பாய் தாழ்த்தப்பட்ட மக்கள் கண்டனம் "

பம்பாய் நகரம் எஸ்.பி. ஜூலை 4, 1927 - பகிஷ்கிரித் ஹிதாகரணி சபையின் சார்பில் தாழ்த்தப்பட்ட இன மக்களின் ஒரு பொதுக் கூட்டம் ஜூலை 3 ம் தேதி மாலை கவாஸ்ஜி ஜெஹாங்கீர் மண்ட பத்தில் நடைபெற்றது, கொலாபா மாவட்டத்தில் மகத் இனத்தைச் சேர்ந்த தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு இழைக்கப்படும் துன்ப துயரங்களைக் கண்டிப்பதற்காகவே இந்தப் பொதுக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. டாக்டர் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர், பாரிஸ்டர் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். சுமார் 1000 பேர் கலந்து கொண்டனர். மகதில் மேல்தட்டு வர்க்கத்தினர் தமது சகோதரர்களை மிகவும் மோசமான முறையில் நடத்தியதைக் கண்டிக்கும் பொருட்டே இந்தக் கட்டம் நடைபெற்றது. கூட்டத்துக்கு தலைமை தாங்கியவரும் மற்றும் ரகோபா நாராயண் வன்மாலி, மகாதேவ் அபாஜி காம்ளி, சீதாராம் நாம்தேவ் ஷிவ்தர்கர், நிர்மல் லிம்பாஜி கங்காவானே, கீதானந்த் பிரமச்சாரி, சமந்த் நான்ஜி மார்வாரி முதலானோரும் உரையாற்றினர். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்பட்ட இந்தக் கோரக் கொடுமையைக் கண்டிப்பதற் காகவே இந்தக் கூட்டம் நடைபெற்றது. இதன் பொருட்டு தொண்டர் களைச் சேர்ப்பது என்றும், நிதி திரட்டுவது என்றும் முடிவு செய்யப் பட்டது. இது சம்பந்தமாக தீபாவளி விடுமுறைகளுக்குப் பிறகு முதலில் ஒரு மாநாட்டை நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது. குடிமக்கள் என்ற முறையில் தங்களது உரிமைகளை நிலைநாட்ட சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவது என்றும் முடிவு செய்யப் பட்டது. இது குறித்த ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

1. கீர், பக்கங்கள் 77, 79, 80 - 90.

தாழ்த்தப்பட்ட இன மக்களின் குறைகளைப் பரிசீலித்து நிவர்த்தி செய்ய சென்னையில் செய்யப்பட்டிருப்பது போல் ஒரு தனி இலாகா அமைக்கப்பட வேண்டுமென அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளும் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

நிதி தந்து உதவும்படி மாநாட்டில் உரையாற்றியவர்கள் கேட்டுக் கொண்டனர். சுமார் 350 ரூபாய் வசூலாயிற்று. சத்தியாக்கிரக இயக்கம் தொடங்கும் போது அதில் தொண்டர்களாகச் சேருவதற்கு ஒரு டஜன் பேர் முன்வந்தனர்.''[2]

## II

## மஹத்தில் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் சத்தியாகிரகம்

''கடந்த மார்ச் மாதம் கொலாமா மாவட்டம் மகதில் மகர்கள், மாங்குகள், பங்கிகள் முதலியோரின் மாநாடு நடைபெற்றது. மாநாட்டுப் பிரதிநிதிகள் கிராம குளத்திலுள்ள தண்ணீரைப் பயன் படுத்தக்கூடாது என்று வைதிகர்கள் தடைபோட்டனர். இந்த தடை சட்டத்தை தங்கள் கைளில் எடுத்துக் கொண்டோருக்கு எதிராக ஒரு குற்றவியல் வழக்குத் தொடர்வதில் போய் முடிந்தது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பம்பாய் தீண்டப்படாத இனத்தவரிடையே ஓரளவு பரபரப்பு ஏற்பட்டது. பாரிஸ்டரான டாக்டர் பீமாராவ் அம்பேத்கர் இதில் முன்னின்று பங்கு கொண்டார்.

இது சம்பந்தமாக தீண்டத்தகாதோர் சுமார் ஆயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம் சர் கவாஸ்கி ஜெஹாங்கீர் மண்டபத்தில் அக்டோபர் 30 ம் தேதி பிற்பகலில் நடைெற்றது, டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத்துக்குத் தலைமைதாங்கினார். மகத் சம்பவம் நடைபெறுவதற்க இட்டுச் சென்ற சம்பவங்களையும், தங்களது உரிமைகளைப் பாதுகாப்பதற்குக் கச்சை கட்டிக் கொண்டு எவ்வாறு நிற்க வேண்டியிருந்தது என்பதையும் அவர் விளக்கிக் கூறினார். இதன்பேரில் ஒரு முக்கியத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; பொதுக்குளத்திலுள்ள தண்ணீரைப் பயன்படுத்துவதற்குத் தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட டிசம்பர் 25 ம் தேதி மகரில் ஒரு மாநாட்டை நடத்துவது என்றும், இதற்குத் தடை விதிக்கப்படு

2. பம்பாய் இரகசியத் தகவல், ஜூலை 16, 1927.

மானால் அதனை எதிர்த்து ஒரு சத்தியாக்கிரக இயக்கம் நடத்துவது என்றும் முடிவு செய்யப்பட்டது. இந்தக் கூட்டத்தில் சுமார் 570 ரூபாய் வசூலாயிற்று. அம்ராவதியிலுள்ள ஆலயம் சம்பந்தமாக நவம்பர் மத்தியில் இதே போன்றதோர் இயக்கம் நடத்தப்பட வேண்டுமென்றும் கூட்டத்தினரிடமிருந்து ஒரு யோசனை தெரிவிக்கப்பட்டது.''[1]

## III

எண் எச்/3447,
தேதி 22, டிசம்பர் 1927

''பெறுநர்,
மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர்,
கொலாபா, அலிபாக்.

ஐயா,

குறிப்புரை - பத்தி 868, பி.எஸ்.ஏ.நடப்பு,

இது சம்பந்தமாக தாழ்த்தப்பட்ட இன மக்களின் ஒரு கூட்டம் 21 ம் தேதி இரவு நடைபெற்றது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், பாரிஸ்டர் தலைமை வகித்தார். சுமார் 250 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தனர். தலைவரும் மற்றும் சாம்பாஜி சந்தோஜி வக்மாரே, நிமன்டர்கர், கோல்வதேகர், ஜுன்னர்கர் முதலியோர் உரை நிகழ்த்தினர். தீண்டத்தகாதவர்கள் குளத்து நீரை பயன்படுத்துவதற்கு விதிக்கப்பட்டுள்ள தடையை எதிர்த்து மகதில் 25 ஆம் தேதி நடைபெறவிருக்கும் சத்தியாக்கிரக இயக்கத்தில் பங்கு கொள்ளும்படி அவர்கள் மக்களை வேண்டிக் கொண்டனர்.

நானும் மற்றவர்களும்

(ஒப்பம்)
டி.சி.பி.எஸ்.பி
டிசம்பர் 22, 1927''[2]

1. மூல ஆதார நூல், தொகுதி I, பக்கம் 13.
2.. மூல ஆதார நூல், தொகுதி I, பக்கங்கள் 13 - 14.

''சௌதார் குளம் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குத் திறந்த விடப்படுவதாக 1924 ல் மகத் நகராட்சி தீர்மானம் ஒன்றை நிறை வேற்றிற்று. ஆனால் இந்தத் தீர்மானத்தை 1927 ஆகஸ்ட் 4 ஆம் தேதி அது ரத்து செய்தது. டாக்டர் அம்பேத்கர் இந்த சவாலை ஏற்றுக் கொண்டார். இதனைத் தொடர்ந்து செப்டம்பர் 11 ஆம் தேதி பம்பாய் தாமோதர் மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடை பெற்றது. மகத் குளம் சம்பந்தமாக தாழ்த்தப்பட்ட மக்களுக்குள்ள உரிமையை மீண்டும் நிலைநாட்டும் போராட்டத்துக்கான வழி வகைகளை வகுக்க ஒரு குழு அமைக்கப்பட்டது; போராட்டம் சம்பந்தப்பட்ட தேதிகளும் இதர விவரங்களும் நிர்ணயிக்கப் பட்டன. நான்கு நாட்களுக்குப் பிறகு இந்தக் குழு டாக்டர் அம்பேத்கரின் அலுவலகத்தில் கூடிற்று. 1927 டிசம்பர் 25 ம், 26 ம் **சத்தியாக்கிரகம்** நடைபெறுவதற்கான தேதிகளாக அறிவிக்கப் பட்டன.

மகதில் மாநாடும் சத்தியாக்கிரகமும் நடைபெறுவதற்கான தேதி நெருங்கிக் கொண்டிருந்தது. மகத் மீண்டும் பரபரப்படைய ஆரம்பித்தது. இந்தப் போராட்டத்தை எதிர்ப்பவர்கள் 1927 நவம்பர் 27 ஆம் நாளன்று வீரேஸ்வர் ஆலயத்தில் கூடினர்; சௌதார் குளத்தி லிருந்து தண்ணீர் எடுப்பதற்கு டாக்டர் அம்பேத்கரும் தாழ்த்தப் பட்ட மக்களும் மேற்கொண்டுவரும் முயற்சிகளை முறியடிப்ப தற்குத் திட்டம் தீட்டுவதே இந்தக் கூட்டத்தின் நோக்கம். ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களிடம் பரிவும் அனுதாபமும் கொண்டவர்களும் கூட்டத்திற்கு வந்திருந்ததால் கூட்டம் பெருங் குழப்பத்தில் முடிந்தது. இந்தப் போராட்டத்துக்குக் காட்டும் எதிர்ப்பைக் கைவிடும்படி சாதி இந்துக்களின் மனத்தை மாற்ற சிலர் முயன்றனர். ஆனால் அது பலன் அளிக்கவில்லை.

மாவட்ட குற்றவியல் நடுவர் டிசம்பர் 7 ஆம் தேதி மகதுக்கு வருகை தந்தார். சம்பந்தப்பட்ட பிரச்சினை குறித்து இரு தரப்பு களைச் சேர்ந்த தலைவர்களுடனும் விவாதித்தார். சட்டத்தின் துணையை நாடும்படி அவர் சாதி இந்துக்களைக் கேட்டுக் கொண்டார். சௌதார் குளத்திலிருந்து தாழ்த்தப்பட்ட மக்கள் தண்ணீர் எடுப்பதைத் தடை செய்யும் எத்தகைய உத்திரவையும் பிறப் பிக்க மறுத்துவிட்டார். எனவே, டாக்டர் அம்பேத்கர், ஷிவ்தர்கர் மற்றும் மகதைச் சேர்ந்த கிருஷ்ணாஜி, எஸ்.கதம். கன்யா மாலு சம்பார் முதலான தாழ்த்தப்பட்ட இன மக்களின் தலைவர்களுக்கு எதிராக 1927 டிசம்பர் 12 ஆம் தேதி வைதீகப் பிரிவைச் சேர்ந்த

தலைவர்கள் வழக்கு தொடர்ந்தனர்; தற்காலத் தடை விதிக்க வேண்டும் என்றும் கோரிக்கை வைத்தனர். வழக்கின் தீர்ப்பு வரும்வரை பிரதிவாதிகளுக்கு எதிராக நீதிமன்றம் தற்காலிகத் தடை விதித்தது. இதன்படி, டாக்டர் அம்பேத்கர், ஷிவ்தர்கர், கிருஸ்ணாஜி, எஸ்.கதம் ஆகியோரும் தாழ்த்தப்பட்ட இனத்தவர் அனைவரும் அல்லது இந்த மூன்று தலைவர்கள் சார்பில் வேறு எவரும் மேற்கொண்டு ஆணை பிறப்பிக்கப்படும்வரை சௌதார் குளத்துக்குச் செல்லவோ, அந்தக் குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கவோ கூடாது என்று நீதிமன்றம் ஒரு தற்காலிக தடையைப் பிறப்பித்தது. இவ்வாறு டாக்டர் அம்பேத்கர் இரண்டு முனைகளில் போராடும்படியான நிர்ப்பந்தத்தை வைதிக, பிற்போக்கு சக்திகள் தந்திரமாகத் தோற்று வித்தன.''[1].

## சௌதார் குள வழக்கில் பிறப்பிக்கப்பட்ட தற்காலிகத் தடை உத்தரவின் வாசகம்

''இது எதிர்தரப்பினர் சௌதார் குளத்துக்குச் செல்வதையோ, அதிலிருந்து அவர்கள் தண்ணீர் எடுப்பதையோ கட்டுப்படுத்துவதற்குத் தற்காலிக ஆணை பிறப்பிக்க வேண்டும் என்று நீதிமன்றத்தைக் கேட்டுக் கொள்ளும் ஒரு மனுவாகும். மனுதார்கள் 1927 ஆம் ஆண்டு 12 ஆம் தேதி 405 ஆம் எண் வழக்கை இந்த நீதிமன்றத்தில் தொடுத்தனர்; சௌதார் குளம் தீண்டத்தக்க வகுப்பினரின் தனிச் சொத்து, தீண்டத்தகாதவர்கள் இந்தக் குளத்துக்குச் செல்லுவதற்கோ அல்லது அதில் தண்ணீர் எடுப்பதற்கோ எந்த உரிமையும் இல்லை, எனவே பிரதிவாதிகள் இத்தகைய நடவடிக்கைகள் எவற்றிலும் ஈடுபடுவதை நிரந்தரமாகத் தடுக்க வேண்டும் என்று மனுதாரர்கள் கோரியிருந்தனர்.

மேலும் இந்த வழக்கில் தீர்ப்பு வழங்கும் வரை பிரதிவாதிகளுக்கு எதிராக ஒரு தற்காலிக தடையினை பிறப்பிக்க வேண்டும் என்றும் மனுதார்கள் விண்ணப்பித்திருந்தனர். இந்தக் குளம் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக தீண்டத்தக்க இனத்தவர்களின் பிரத்தியேக அனுபோகத்தில் மட்டுமே இருந்து வந்திருக்கிறது, அப்படியிருக்க 1927 மார்ச் 19 ஆம் தேதி பிரதிவாதி தலைமையில் நூற்றுக்கணக்கான தீண்டத்தகாத வகுப்பினர் திடீரென்று குளத்தில்

---

1. கீர், பக்கங்கள் 90 மற்றும் 97 - 98.

இறங்கி அதன் தண்ணீரால் தங்கள் கைகளையும் முகங்களையும் கழுவிக் கொண்டனர், இதன் மூலம் குளத்தை மாசுபடுத்தி விட்டனர், இவ்வாறு குளம் மாசுபட்டதன் விளைவாக குளத்திலிருந்து தீண்டத்தக்கவர்கள் 24 - 25 மணி நேரம் வரை தண்ணீர் எடுக்க முடியவில்லை. இந்து சாஸ்திரங்களில் கூறியுள்ளபடி பெரும் செலவில் சமயச் சடங்குகள் எல்லாம் செய்தபிறகே தண்ணீர் எடுக்க முடிந்தது. இவ்வாறு தீண்டத்தக்கவர்களுக்கு எதிராக பெரும் துன்பம் இழைக்கப்பட்டிருக்கிறது, இதன்பிறகும் மீண்டும் குளத்தில் இறங்கி தண்ணீர் எடுக்கப்போவதாக தீண்டத்தகாத இனத்தினர் ஓர் அறிவிப்பை வெளியிட்டிருக்கின்றனர். இவ்வாறு செய்ய அவர்கள் அனுமதிக்கப்பட்டால், தீண்டத்தக்கவர்கள் அந்தக் குளத்தின் தண்ணீரைப் பயன்படுத்தாதபடி சாஸ்திரங்களால் தடை செய்யப்படுவர், இதனால் அவர்கள் மிகுந்த துன்ப துயரங் களுக்கு உள்ளாவார்கள், இந்நிலையில் தற்போது கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளபடி தற்காலிக தடையாணை ஏதும் பிறப்பிக்கப்படாமல் வாதிகளின் தண்ணீரை மாசுபடுத்த பிரதிவாதிகள் அனுமதிக்கப் பட்டால், வாதிகள் இந்த வழக்கில் முடிவாக வெற்றிப் பெற்றாலும் கூட தீர்ப்பின் பயனை அவர்களால் அனுபவிக்க முடியாமல் போய்விடும். இவ்வாறு மனுதாரர்கள் குறிப்பிட்டிருந்தனர்.

வாதி 1 தவிர பலரும் இந்த மனுவை ஆதரித்து வாக்கு மூலங்கள் அளித்திருந்தனர். மேலும் வாதிகள் சான்று ஆவணம் 4 ஐயும், திவாகர் ஜோஸி என்பவருக்கு நகரசபை பிறப்பித்திருந்த ஓர் அறிவிப்பையும் தாக்கல் செய்தனர். வாக்குமூலம் கொடுத்தவர்களில் இந்த திவாகரும் ஒருவர். சௌதார் குளத்தை ஒட்டியுள்ள அவரது கல் தாக்காகை (அணைகள்) பழுது பார்க்கும்படி அவருக்கு நகரசபை அறிவிப்பு செய்திருந்தது. தராப் குடும்பத்தின் பாகப்பிரிவினை பத்திரம் ஒன்றும் தாக்கல் செய்யப்பட்டது. இது நூறு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டதாகும். குளத்தின் ஒரு பகுதி பாகப் பிரிவினை செய்து கொள்ளப்பட்ட சொத்துகளில் ஒன்றாக இருந்தது என்று பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தக் குளம் ஒரு தனியார் சொத்தாக இருந்தது என்ற 'எண்ணத்தை' இந்த இரண்டு ஆவணங் களுமே தோற்றுவிக்கின்றன.

இதனை மறுப்பதற்கு தற்காலிகத் தடையை வழங்குவது நியாயமாக இருக்குமா என்பதே இப்போதைய கேள்வி. தற்காலிகத் தடை குறித்த சட்டம் உரிமை இயல் நெறிச்சட்டத்தின் 39 ஆவது ஆணையில் இடம் பெற்றுள்ளது. இந்த ஆணை கூறுவதாவது :- எந்த

ஒரு வழக்கிலும் (அ) தகராறிலுள்ள எந்தச் சொத்தும் வழக்கு சம்பந்தப் பட்ட எந்த ஒரு தரப்பாலும் வீணடிக்கப்படுகிற, சேதப்படுத்தப் படுகிற அல்லது பராதீனப்படுத்தப்படுகிற அபாயத்திலிருக்கிறது என்று நிரூபிக்கப்பட்டாலோ அல்லது ஒரு தீர்ப்பாணையைச் செயல் படுத்தும் விஷயத்தில் தவறாகக் கூறப்பட்டிருந்தாலோ அல்லது (அ) பிரதிவாதி தனக்குக் கடன் கொடுத்தவர்களை ஏமாற்றும் நோக்கத்தோடு தனது சொத்தை விற்றுவிட்டாலோ நீதிமன்றம் ஓர் ஆணை பிறப்பித்து இதற்குத் தற்காலிகத் தடை விதிக்கலாம். சட்டவிதி (ஆ) இந்த வழக்கில் பயன்படுத்த இயலாதது தெளிவு தற்போதைய வழக்கு சட்டக்கூறு (அ)வின் கீழ் வருவதாகத் தோன்றுகிறது.

இங்குள்ள குளம் பல ஆண்டுக் காலமாகவே தீண்டத்தக்க இனத்தவர்களின் பிரத்தியேக அனுபவத்தில் இருந்து வந்திருக்கிறது. இந்தக் குளத்துக்குச் செல்லத் தங்களுக்கு உரிமை கிடையாது என்ற எண்ணத்தில் தீண்டத்தகாத இனத்தவர்கள் இன்றுவரை இருந்து வந்திருப்பதை பிரதிவாதி 1 -ம் மற்றவர்களும் கையெழுத்திட்டுள்ள அறிக்கையும் காட்டுகிறது. ஆக, இந்தக் குளம் இன்றுவரை தீண்டத் தக்க இனத்தவர்களின் பிரத்தியேக அனுபவத்தில் இருந்து வந்திருக் கிறது என்றே தோன்றுகிறது. எனவே, இந்தப் பழைய நிலைமையை மாற்றுவதன் மூலம் நீதி நிலைநாட்டப்படுமா அல்லது சம்பந்தப் பட்ட தரப்புகளின் உரிமைகள் இறுதியாக முடிவு செய்யப்படும் வரை அவை நீடிப்பதற்கு அனுமதிப்பதன் மூலம் நீதி நிலைநாட்டப் படுமா என்பதே இப்போதைய கேள்வி.

தற்காலித் தடை ஆணைகள் சம்பந்தமான கோட்பாடுகள் உரிமையியல் சட்டம் குறித்த முல்லாவின் விளக்க உரையின் 8 வது பதிப்பு 892 ஆம் பக்கத்தில் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. இந்தக் கோட்பாடுகளில் ஒன்று கட்சிகளுக்கிடையே நேர்மையான வாதப் பிரதிவாதங்கள் நடைபெறும்படியாக நீதிமன்றம் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதாகும். இது விஷயத்தில் எந்த ஐயமும் இருக்க முடியாது என்றே எனக்குத் தோன்றுகிற. இரண்டாவது கோட்பாடு என்னவெனில், தடையினைப் பிறப்பிக்கப்படவில்லை எனில் எந்தத் தரப்பு இக்கட்டுக்கு உள்ளாகும் என்பதாகும். தடை யாணை பிறப்பிக்கப்படாத பட்சத்தில் வாதிகள்தான் பாதிக்கப் படுவார்கள், அதிலும் வெகுவாகப் பாதிக்கப்படுவார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. இது விஷயத்தில் நான் மேலும் விளக்கத் தேவையில்லாத வகையில் இது மிகவும் தெள்ளத் தெளிவாக இருக்கிறது.

பிரதிவாதிகள் குளத்தில் பிரவேசிக்க அனுமதிக்கப்பட்டு (வாதிகளின் சமயக்கோட்பாட்டின் படி) அவர்கள் தண்ணீரை மாசு படுத்திவிடுவார்களேயானால், ஏராளமான மக்கள் மிகுந்த துயரத்துக்கு உள்ளாவார்கள், அதிலும் போதிய தண்ணீர் கிடைக்காத இடங்களில் வசிப்பவர்கள் மிகப்பெரும் இன்னலுக்கு ஆளா வார்கள். ஆனால் அதேசமயம், வழக்கின் முதல் தீர்ப்பு வரும்வரை தங்களது உரிமை எனக் கொண்டாடுபவற்றை வலியுறுத்தாமல் அமைதியாக இருக்கும்படிக் கேட்டுக் கொள்ளப்பட்டால் பிரதி வாதிகள் எத்தகைய சங்கடத்துக்கும் உள்ளாகமாட்டார்கள். இந்த வழியே நேர்மையானது, நியாயமானது என்று எனக்குத் தோன்று கிறது. தற்போதைய சூழ்நிலையில் இதுகாறும் உள்ள நிலைமையை பராமரிப்பதே சாலச் சிறந்ததாகும். ஐ.எல்.கர்.46, கல்கத்தா, பக்கம் 1030 ல் கூறியுள்ளபடி தற்காலிகத் தடையாணை மறுக்கப்பட்டு, குளத்தின் தண்ணீர் மாசுபட அனுமதிக்கப்படுமானால் வாதிகளுக்கு சீர்படுத்தமுடியாத ஊறு ஏற்படும். தீண்டத்தக்க இனத்தினர் தங்களது தீவிர சமய உணர்வுகள் காரணமாகவும், இவ்விரு சமூகங் களுக்கும் இடையே பன்நெடுங்காலந்தொட்டே நீண்ட நெடிய இடைவெளி இருந்து வருவதன் காரணமாகவும் எவ்வளவு உணர்ச்சி மிக்கவர்களாக இருக்கிறார்கள் என்பதைக் கணக்கி லெடுத்துக் கொண்டு பார்க்கும்போது, இத்தகைய நிலைமைக்கு நான் மிகுந்த முக்கியத்துவம் அளிக்க வேண்டியவனாக இருக் கிறேன். கல்வி பரவும்போது காலப்போக்கில் இந்த நிலைமை பெரிதும் மாறும் என்பதிலும், இரண்டு சமூகங்களுக்கம் இடையே தெள்ளத்தெளிவான நேசப்பிணைப்பும் ஏற்படும் என்பதிலும், அப்போது தீண்டாமை என்பது ஒரு கடந்தகால விஷயமாகிவிடும் என்பதிலும் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. ஆனால் தற்போ துள்ள நிலைமையில், தண்ணீர் மாசுபட அனுமதிக்கப்படுமானால் அதனால் ஏற்படும் பாதிப்புகளை எவ்வகையிலும் ஈடுகட்ட முடியாது என்ற மனுதாரர்களின் உணர்வுகளுக்கு நான் மிகுந்த மதிப்பளிக்க வேண்டியவனாக இருக்கிறேன். இந்த சூழ்நிலைகள் அனைத்தையும் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது, தற்போது கேட்டுக் கொள்ளப்பட்டுள்ள தடையாணையை வழங்க நான் மறுக்கவில்லை எனில் கடமையில் நான் தவறியவனாவேன் என்றே கருதுகிறேன். நான் நிறைவேற்ற வேண்டிய கடமை மிகவும் துயரமளிப்பதாகவே இருக்கிறது. எனினும் இந்தக் கடமையைச் செய்வதன்றி எனக்கு வேறு வழியில்லை. எனவே, அவர்கள் கேட்டுக் கொண்டுள்ளபடி தற்காலிகத் தடையாணைக்கு உத்திரவிட்டு அறிவிப்பு செய்கிறேன்.

*14.12.27.* (ஒப்பம்) ஜி.வி. வைத்யா.''

மாநாட்டை நடத்துவதற்கு தாழ்த்தப்பட்ட மக்கள் சார்பில் ''பரந்த தயாரிப்புகள் மேற்கொள்ளப்பட்டன. மாநாட்டை நடத்து வதற்கு தனது நிலத்தைப் பயன்படுத்திக் கொள்ள எந்த இந்து நிலப்பிரபுவும் அனுமதிக்கவில்லை, முடிவில் ஒரு முஸ்லீமிட மிருந்து மிகுந்த சிரமத்தோடு இடம் பெறப்பட்டது. மாநாடு சம்பந் தப்பட்டவர்களுடன் தொடர்பு கொள்ளவோ, உதவவோ ஸ்தல வணிகர்கள் மறுத்துவிட்டனர். எனவே வரவேற்புக் குழுவினர் பத்து நாட்களுக்குத் தேவையான தானியம் மற்றும் இதர பொருள் களை வெளியிலிருந்து பெறவேண்டியதாயிற்று. ஆனந்தராவ் சித்ரே மாநாட்டுப் பணியை மிகவும் திறம்படச் செய்தார். உணவு தயாரிப்பது, ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் நிலைநாட்டுவது சம்பந்தப்பட்ட பொறுப்புகள் சுபேதார் காட்ஜேயிடம் ஒப்படைக்கப் பட்டன. மாவட்டத்தின் அனைத்துத் தலைமை அதிகாரிகளும் டிசம்பர் 19 ஆம் தேதி மகதில் வந்து கூடினர். சௌதார் குளத்தின் அனைத்துப் பகுதிகளிலும் காவல்துறையினர் நிறுத்தப்பட்டனர். டிசம்பர் 21 ஆம் தேதியிலிருந்து பிரதிநிதிகளும், பார்வையாளர்களும், மகதில் வந்து குவியலாயினர். மாவட்ட குற்றவியல் நடுவர் ஒவ்வொரு நாளும் முகாமுக்கு வந்தார்; உத்தேச சத்தியாக் கிரகத்தைக் கைவிடும்படி பிரதிநிதிகளை வலியுறுத்தி வந்தார்.

டாக்டர் அம்பேத்கர் இருநூறு பிரதிநிதிகளுடனும் தலைவர் களுடனும் டிசம்பர் 24 ஆம் தேதி காலையில் பம்பாயிலிருந்து புறப்பட்டார். மறுநாள் நண்பகலில் மகதிலிருந்து ஐந்து மைல் தொலைவிலுள்ள தாஸ்கவுனில் இறங்கினார். அங்கு 3000 சத்தியாக் கிரகிகள் தலைவரை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந் தனர்; தங்கள் தலைவரைப் பார்த்ததும் விண்ணெட்ட கரகோசம் எழுப்பி வரவேற்றனர், வரவேற்பு முடிந்ததும் காவல் துறை மேலாளர் குற்றவியல் நடுவரின் கடிதம் ஒன்றை அவரிடம் தந்தார்; மாவட்ட குற்றவியல் நடுவரை அவரது மகத் அலுவலகத்தில் சந்திக்கும்படி கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. டாக்டர் அம்பேத்கர் தம்முடைய சகாக்களில் ஒருவரான சகஸ்ரபுத்ரேயுடன் குற்றவியல் நடுவரின் அலுவலகத்திற்கு விரைந்து சென்றார். அங்கு குற்றவியல் நடுவர் பற்பல காரணங்களை நயமாகவும், இங்கிதமாகவும் எடுத்துரைத்துப் போராட்டத்தை ஒத்திவைக்கும்படி வலியுறுத்தினார்; ஆனால் தலைவர் மாவட்ட தலைமை நிர்வாகியின் அறிவுறுத்தலை ஏற்க வில்லை. எனினும் மாநாட்டில் உரையாற்ற அவருக்கு ஒரு வாய்ப்பு அளிக்க வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதற்கிடையே, பிரதிநிதிகளின் ஊர்வலம் காவல்படை அதிகாரிகள் பின்தொடர

தாஸ்கவுனை விட்டுப் புறப்பட்டது; பிற்பகல் இரண்டரை மணிக்கு அது மஹத்தை வந்தடைந்தது. ஊர்வலத்தினர் வழிநெடுகிலும் பாட்டுப் பாடியும், விண்ணதிர் கோஷங்கள் எழுப்பியும் வந்து கொண்டிருந்தனர். அந்த மாபெரும் கூட்டம் 'சிவாஜி மகராஜ்கி ஜே' என்று முழக்கமிட்ட வண்ணம் பந்தலுக்குள் நுழைந்தது. பந்தலில் ஒவ்வொரு கம்பத்திலும் பல்வேறு கோஷங்கள் எழுதப்பட்ட பலகைகள் தொங்கின, வாசலின் எதிரில் ஒரு பள்ளம் இருந்தது.

மாவட்ட குற்றவியல் நடுவரைச் சந்தித்துப் பேசிய பிறகு டாக்டர் அம்பேத்கர் பந்தலுக்கு விரைந்தார்; அங்கு தமது சகாக்களுடன் நண்பகலுணவு உண்டார். தமக்கென விசேச உணவு எதையும் ஏற்க மறுத்தார். மாலை நாலரை மணி அளவில் மாநாடு தொடங்கற்று. சத்தியாக்கிரகம் வெற்றிபெற வாழ்த்தி பல பிறமுகர்களிடமிருந்தும் தலைவர்களிடமிருந்தும் வந்திருந்த செய்திகள் வாசிக்கப்பட்டன. பின்னர் காது செவிடுபடும் கரகோஷத்துக்கிடையே மாநாட்டில் உரையாற்றுவதற்குத் தலைவர் எழுந்தார். அங்கு குழுமியிருந்த பதினைந்தாயிரம் பேர் கொண்ட மாபெரும் கூட்டத்தினர் விண்ணெட்ட கோஷங்கள் எழுப்பி, ஆரவாரம் செய்தனர். அங்கு வந்திருந்த பெரும்பாலோருக்கு முறையான சட்டைகள் இல்லை; அவர்களுடைய பழைய தொப்பிகள் கிழிந்து போயிருந்தன; அவர்களுடைய முகவாய்க் கட்டைகள் சவரம் செய்யப்படவில்லை; எனினும் வெயிலினால் கன்றிச் சிவந்து போன அவர்களது முகங்களில் தனித்தன்மை வாய்ந்த உற்சாகமும், நம்பிக்கையும் சுடர்விட்டன. பின்னர் அந்தப் பிரமாண்டமான கூட்டம் அமைதியடைந்தது. டாக்டர் அம்பேத்கர் மெதுவான ஆனால் கம்பீரமான குரலில் தமது உரையை நிகழ்த்தத் தொடங்கினார்.''[1]

## "சமூக ஏற்றத்தாழ்வுகளை ஒழித்துக்கட்ட டாக்டர் அம்பேத்கர் அறைகூவல்

1927 டிசம்பர் 25 ஆம் தேதியன்று மஹத்தில் நடைபெற்ற சத்தியாக்கிரகமாநாட்டில்டாக்டர்பி.ஆர்.அம்பேத்கர்,எம்.ஏ.பி.எச்டி., டி.எஸ்சி.,பார்-அட்லா.,எம்.எல்.சி., நிகழ்த்திய தலைமை உரையின் சுருக்கம் வருமாறு.

1. கீர், பக்கங்கள் 98 - 99.

சத்தியாக்கிரக குழுவின் தலைவர் என்ற முறையில் அக் குழுவின் சார்பில் சத்தியாக்கிரகிகளை டாக்டர் அம்பேத்கர் வரவேற்றுப் பேசினார். கடந்த மார்ச் மாதம் இதே இடத்தில் நடைபெற்ற மாநாடு துரதிஷ்டவசமான முறையில் முடிவடைந் ததை அவர் நினைவு கூர்ந்தார்; இந்த மாநாட்டுக்கு வந்திருந்த ஏராளமான பிரதிநிதிகள் ''சௌதார்'' என்ற பொதுக் குளத்திலிருந்து தண்ணீர் எடுத்தமைக்காக சாதி இந்துக்கள் எனப்படுவோரால் மிக மோசமான முறையில் நடத்தப்பட்டதையும், தாக்கப்பட்டதை யும் அவர் எடுத்துரைத்தார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் குளத்தின் தண்ணீரைப் பயன்படுத்தியதை யாரும் தடுக்கவில்லை, ஆனால் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மாநாட்டுப் பிரதிநிதிகளைத் தண்டிப்ப தென சில குண்டர் தலைவர்கள் முடிவு செய்து அவர்களைத் தாக்கும்படி கூட்டத்தினரைத் தூண்டிவிட்டனர். குற்றவாளிகள் சிலர் மீது வழக்கு தொடரப்பட்டு, விசாரணை நடந்து, அவர்களுக்கு நான்கு மாத சிறைவாசத் தண்டனை வழங்கப்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து பேசினார்: ''குளத்தைப் பயன் படுத்த ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினருக்கு உரிமை உண்டு என்பதை சாதி இந்துக்கள் ஏற்றுக்கொண்டிருந்தால் இந்த சத்தியாக்கிரகத்தை நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. ஆனால் துரதிருஷ்ட வசமாக, இப்பகுதியிலுள்ள சாதி இந்துக்கள் தங்கள் போக்கில் முரட்டுப்பிடிவாதமாக உள்ளனர்; முகமதியர்கள் மற்றும் இந்துக் கள் அல்லாதவர்கள் உட்பட அனைத்து சாதியினருக்கும் பொதுவான இந்தக் குளத்தைப் பயன்படுத்துவதற்குத் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குள்ள உரிமையை ஏற்க அவர்கள் மறுக்கின்றனர். இதில் விந்தையிலும் விந்தை என்னவென்றால் தீண்டத்தகாதவர்கள் என்று சொல்லப்படுவோருக்கு சொந்தமான கால்நடைகள் இங்கு தண்ணீர் குடிப்பதற்கு அனுமதிக்கின்றனர், ஆனால் மற்றவர்களைப் போலவே நல்ல மனித ஜீவன்களான இவர்கள் குளத்துக்குப் போகாதபடி தடுக்கப்படுகின்றனர்.

இந்துக்கள் மனித நேய உணர்வுகள் கொண்டவர்களெனப் புகழ்ப்பெற்றவர்கள்; விலங்கினங்களிடம் அவர்களுக்குள்ள அன்பு பிரசித்தமானது, அவர்களில் சில பிரிவினர் கொடிய நச்சுப் பாம்புகளைக்கூடக் கொல்லமாட்டார்கள். இந்துக்கள் ஏராளமான சாதுக்களையும், திடகாத்திரமான பிச்சைக்காரர்களையும் பராமரித்து வருபவர்கள்; அவர்களுக்கு உணவும் உடையும் கொடுப்பதன் மூலமும் அவர்கள் இன்பக்களியாட்டங்களில் ஈடுபடப் பல உதவிகள் செய்வதன் மூலமும் தாங்கள் நற்பேறுப் பெறுவதாகக் கருதுபவர்கள்.

எங்கும் நிறைந்தது ஆத்மா என்னும் சித்தாந்தத்தை இந்து தர்மம் போதிக்கிறது; ஒரு பிராமணனுக்கும் சண்டாளனுக்கும் இடையே வேறுபாடு காணக்கூடாது என்று கீதை உபதேசிக்கிறது.

இவ்வாறு இருக்கும்போது இங்கு ஒரு கேள்வி எழுகிறது: மன்பதை அன்பும், நன்மனப்பாங்கும், மனித நேயமும், விழுமிய தத்துவமும் கொண்ட இந்துக்கள் தங்களது சக மனித ஜீவன்களிடம் ஏன் இவ்விதம் இரக்கமற்று, நியாயமற்ற முறையில் நடந்து கொள்ள வேண்டும்? இந்தக் கேள்விக்கான பதிலில்தான் இந்த மாநாட்டின் உண்மையான முக்கியத்துவமே பொதிந்துள்ளது. இந்து சமுதாயம் சாதி அமைப்பு என்ற இரும்புக்கூட்டுக்குள் அடைக்கப்பட்டிருக்கிறது. இதனால் படித்தர வரிசையில் ஒரு சாதி இன்னொரு சாதியை விடக் கீழ்நிலையில் வைக்கப்படுகிறது; இதன் காரணமாக ஒவ்வொரு சாதியும் இன்னொரு சாதியைவிடக் குறிப்பிட்ட சலுகைகளையும் உரிமைகளையும் அனுபவிக்கக்கூடியவையாகவும், தடைக்கட்டுக் களையும், தகுதியின்மைகளையும் கொண்டவையாகவும் உள்ளன. இத்தகைய அமைப்புமுறை சாதிநலக் கும்பல்களைத் தோற்றுவித்துள்ளது; இந்தக் கும்பல்கள் இந்த அமைப்பு முறையிலிருந்து தோன்றும் ஏற்றத்தாழ்வுகளைத் தமது சுயநலத்திற்குப் பயன் படுத்திக்கொள்கின்றன. பஞ்சமர்கள் (ஐந்தாவது இனத்தை அதாவது தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள்) பொதுக்குளத்தைப் பயன்படுத்திக் கொள்வதை சாதி இந்துக்கள் எனப்படுபவர்கள் மிகக் கடுமையாக எதிர்க்கின்றனர்; மகர்களும் அவர்களைப் போன்ற ஏனையோரும் குளத்தைப் பயன்படுத்துவதால் தண்ணீர் கெட்டுவிடும் என்றோ அல்லது ஆவியாய் மாறிவிடும் என்றோ அவர்கள் அஞ்சுவது இதற்குக் காரணமல்ல; மாறாக உயர் சாதிக் காரர்கள் என்ற பெருமையைத் தாங்கள் இழந்துவிடுவோம், மேல் சாதிகாரர்களுக்கும், கீழ்ச்சாதிக்காரர்களுக்கும் இடையே சமத்துவம் ஏற்பட்டுவிடும் என்று அவர்கள் அஞ்சுவதே இதற்குக் காரணம். இந்தக் குறிப்பிட்ட குளத்தின் தண்ணீர் அசாதாரண சிறப்புடையது என்று கருதி இந்த சத்தியாக்கிரகத்தில் நாங்கள் இறங்கவில்லை, மாறாக குடிமக்கள் என்ற முறையிலும், மனித ஜீவன்கள் என்ற முறையிலும் எங்களுக்குள்ள இயல்பான உரிமைகளை நிலை நாட்டவே இந்த அறப்போரில் நாங்கள் குதித்துள்ளோம்.

## சமத்துவத்துக்கான போராட்டம்

சமத்துவம் என்னும் கொடியை ஏற்றி வைக்கவே இந்த மாநாடு நடைபெறுகிறது; 1789 ல் பிரான்சில் கூட்டப்பட்ட தேசிய

மன்றத்தைப் போன்றதாக இது இருக்கும். சமூக, சமய, குடியுரிமை, மற்றும் பொருளாதாரப் பிரச்சினைகளில் அதே சாதனைகளையே நமது மாநாடு குறிக்கோளாகக் கொண்டுள்ளது. சாதி அமைப்பு என்ற உருக்குக் கட்டுமானத்தை உடைத்தெறிய நாம் உறுதி பூண்டுள்ளோம்.

## குறைந்த குறிக்கோள் கீழானது

சாதி அமைப்பு முறையை விட்டுவிட்டுத் தீண்டாமையை ஒழித்துக்கட்டுவதோடு நாம் திருப்தியடைய வேண்டும் என்று சிலர் கூறக்கூடும். சாதி அமைப்பு முறையில் உள்ளார்ந்து பொதிந்துள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு முடிவுகட்ட முயலாமல் தீண்டாமையை மட்டுமே ஒழித்துக்கட்டுவது என்பது மிகவும் கீழான குறிக்கோளாகும். தோல்வியை விட மிகக் குறைந்த குறிக்கோளை மேற்கொள்வது குற்றம் என்பதை நாம் மனத்திற் கொள்ள வேண்டும். இந்தக் கொடுந்தீமையை அதன் அடிவேர்கள் வரை ஆராய வேண்டும்; நமது வலியை, நோவைத் தணிப்பதோடு நாம் திருப்தி அடைந்துவிடக்கூடாது. நோய் இன்னதென சரியாக, உறுதியாக இனம் காணப்படவில்லை என்றால் அதற்கான பரிகாரம் பயனற்றதாகிவிடும், குணமடைதல் தள்ளிப்போகக்கூடும்.

தீண்டாமை மட்டுமல்ல அனைத்து சாதியினரும் ஒன்றாக அமர்ந்து உண்பது சம்பந்தப்பட்ட கட்டுப்பாடுகளும் அகற்றப்பட வேண்டும். பல்வேறு சாதிகளைச் சேர்ந்த இந்துக்களிடையே கலப்புத் திருமணங்கள் சர்வ சாதாரணமாக நடைபெற வேண்டும். இது மட்டுமே உண்மையான சமத்துவத்தைத் தோற்றுவிக்க வழிகோலும். தீண்டாமை என்னும் கறை, வடு, இழுக்கு அகற்றப்பட்டுவிட்டதாக வைத்துக் கொண்டால்கூட தற்போதைய தீண்டப்படாதவர்களின் சமுதாயப் படிநிலை எத்தகையதாக இருக்கும் ? அதிகப்பட்சம் அவர்கள் 'சூத்திரர்களாக' நடத்தப்படுவார்கள், அவ்வளவுதான். சூத்திரர்களது உரிமைகள் யாவை? ஸ்மிருதிகள் அவர்களை வெறும் கொள்கை ஆர்வலர்களாகக் காண்கின்றன. சாதி அமைப்பு முறையில் படிநிலை விஷயத்தில் 'ஸ்மிருதிகள்' சாதி இந்துக்களுக்கு வழிகாட்டிகளாக உள்ளன. நீங்கள் 'சூத்திரர்களாக' நடத்தப்பட வேண்டும் என்று விரும்புகிறீர்களா? கொள்கை ஆர்வலர்கள் நிலையை மேற்கொள்ள நீங்கள் தயாராக இருக்கிறீர்களா ? உங்கள் சாதிப் போக்கை மேல்தட்டு வகுப்பினரிடம் விட நீங்கள் சித்தமாக இருக்கிறீர்களா ?

## சுய உதவி

சமத்துவ அடிப்படையில் இந்து சமுதாயம் புனரமைக் கப்பட வேண்டுமென்றால் சாதி அமைப்பு முறை ஒழித்துக்கட்டப் பட வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. தீண்டாமையின் வேர்கள் சாதி அமைப்பு முறையில்தான் ஆழப்பதிந்துள்ளன, சாதி அமைப்பு முறைக்கு எதிராக பிராமணர்கள் கலகக்கொடி தூக்குவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது; ஏனென்றால் இந்த அமைப்பு அவர்களுக்கு சில விசேட சலுகைகளை வழங்கியுள்ளது; அவர்கள் தாமே முன்வந்து தங்கள் சலுகைகளை விட்டுக்கொடுக்க மாட்டார்கள்; இந்து சமூகப் படிநிலை அமைப்பில் தற்போது அவர்கள் வகிக்கும் மேலாதிக்கம் **ஸ்மிருதிகளின்** அடிப்படை யில்தான் அமைந்துள்ளது. ஜப்பானின் **'சாமுராய்கள்'** செய்தது போன்று இவர்கள் தங்களது அனைத்து சலுகைகளையும் விட்டுக் கொடுப்பார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. பிராமணரல்லா தவர்களையும் நாம் நம்ப முடியாது, நமது போராட்டத்தை நடத்தும்படி அவர்களைக் கேட்க முடியாது. அவர்களில் பலர் இன்னும் சாதி அமைப்பு முறையில் மயங்கிப் போயுள்ளனர்; பிராமணர்களின் ஆதிக்கத்தின் மீது சீற்றம் கொண்டிருப்பவர்களில் பெரும்பாலோர் ஒடுக்கப்பட்ட மக்களைக் கைதூக்கி விடுவதை விடப் பிராமணர்களை மட்டம் தட்டுவதிலேயே மிகுந்த ஆர்வம முடையவர்களாக இருக்கிறார்கள். இவர்களும் தாங்கள் தருக்குடன் நோக்கவும், சமுதாயத்தில் அல்லலுறும் மக்களாகத் தாங்கள் இல்லாதது குறித்துத் திருப்தியடையவும் விரும்புகின்றனர். இதன் பொருள் என்ன? நம் சொந்த பலத்தைக் கொண்டே நமது போராட்டங்களை நாமே நடத்த வேண்டும். நாம்தான் இந்த நாட்டில் பெரிதும் அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருப்பவர்கள், மிதித்துத் துவைக்கப்பட்டிருப்பவர்கள். ராணுவம், காவல்துறை, பொது அரசுப் பணித் துறைகள் முதலியவற்றின் கதவுகள் அநேகமாக நமக்கு மூடப்பட்டுவிட்டன. பொருளாதார நெருக்கடி என்னும் படுகுழியில் நாம் தள்ளப்பட்டுள்ளோம். தீண்டாமையே இவை எல்லாவற்றுக்கும் காரணம். இதன்மூலம் படுபாதாள சமூக நிலைக்கு நாம் இறக்கப்பட்டுள்ளோம். மனித ஜீவன்கள், குடிமக்கள் என்ற முறையில் நமக்குள்ள உரிமைகளை நாம் நிலைநாட்டத் தவறினால் நாம் என்றென்றும் படுகுழியில் தள்ளப்பட்டவர்களாகவே இருப்போம்.

## தேசத்திற்கு உண்மையான சேவை

நமது இயக்கம் எப்படிப்பட்டது? நமக்குள்ள சக்தியற்ற நிலைமையை அகற்றுவது மட்டுமே அதன் குறிக்கோளல்ல; ஒரு சமூகப் புரட்சியைத் தோற்றுவிப்பதும் அதன் நோக்கமாகும். சமூகப் புரட்சி என்பது மனிதன் தோற்றுவித்த சாதித் தடைகள் அனைத்தையும் அகற்றுவதை குறிக்கிறது. எல்லோரும் உயர்நிலையை அடைவதற்கு சமத்துவ வாய்ப்புகள் அளிப்பதைக் குறிக்கிறது; குடியுரிமைகள் விஷயத்தில் மனிதனுக்கு மனிதன் பேதம் காட்டாததைக் குறிக்கிறது. இந்துக்கள் அனைவரையும் ஒரே சாதியில் ஒன்றுபடுத்தும் நமது இயக்கத்தில் நாம் வெற்றி பெறுவோமேயானால் பொதுவாக இந்திய நாட்டிற்கும் குறிப்பாக இந்து சமூகத்துக்கும் மிகப்பெரிய சேவை செய்தவர்களாவோம். தனித்துவ வேறுபாடுகளும், நியாயமற்ற வகுப்பீடுகளும் கொண்ட இன்றைய சாதி அமைப்பு முறை நமது வகுப்புவாத மற்றும் தேசிய பலவீனத்துக்கு மிகப் பெரிய ஊற்றுகளாக இருக்கிறது நமது இயக்கம் வலிமையையும் ஒருமைப்பாட்டையும் ஆதரித்து நிற்கிறது; சமத்துவத்தையும் சுதந்திரத்தையும் சகோதரத்துவத்தையும் பேணி வளர்க்கிறது. முடிந்தவரையில் நமது இயக்கத்தை அமைதியான முறையில் நடத்தவே நாம் விரும்புகிறோம். ஆனால் அமைதியான முறையில் நமது இயக்கத்தை நடத்த நாம் கொண்டுள்ள உறுதி நமது எதிரிகளின் போக்கையே பெருமளவுக்குச் சார்ந்துள்ளது. நாம் வலுச் சண்டைக்குப் போகிறவர்கள் அல்ல; அப்படியிருக்கும் போது காலம் காலமாக, தலைமுறை, தலைமுறையாக நம்மை ஒடுக்கிவந்திருப்பவர்கள் நம்மை வலுச்சண்டைக்காரர்கள் எனப் பூதாபடியாகக் குற்றம் சாட்டுவது விந்தையிலும் விந்தையாக இருக்கிறது! இருண்ட காலத்தில் இயற்றப்பட்ட **'சாஸ்திரங்களுக்கும்', 'ஸ்மிருதிகளுக்கும்'** கட்டுப்பட்டிருக்க, அடக்கி ஒடுக்கப்பட்டதை நாம் மறுக்கிறோம். நமது கோரிக்கைகளை நியாயம், நேர்மை மற்றும் மனித நேயத்தின் அடிப்படையிலேயே முன்வைக்கிறோம்''[1].

இதன் பின்னர் திரு. சகஸ்திரபுத்தே என்ற பிராமணர் எழுந்து சூத்திரர்கள் எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்பது குறித்து மனுஸ்மிருதியில் கூறப்பட்டுள்ள பகுதிகளைப் படித்தார்.

---

1. இண்டியன் நேஷனல் ஹெரால்டு, 28 டிசம்பர் 1927.

## மனுஸ்மிருதியைத் தீயிட்டுக் கொளுத்துங்கள்

மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முதல் தீர்மானம் பின்வருமாறு கூறுகிறது:-

**மனுஸ்மிருதியிலும்** இவை போன்ற இதர நூல்களிலும் கூறப்பட்டுள்ள விஷயங்கள் நய நாகரிகமற்றவையாகவும் மிகவும் இழிவினும் இழிவானவையாகவும் உள்ளன. இதைக் கணக்கிலெடுத்துக் கொண்டு இந்தக் கூட்டம் அவற்றை மிக வன்மையாகக் கண்டிக்கின்றது; இந்தக் கண்டனத்துக்கு அறிகுறியாக அவற்றைத் தீயிலிட்டுக் கொளுத்த தீர்மானிக்கிறது; இந்து சமுதாயத்தை சீர்திருத்துவதற்கு அடிப்படையாகப் பின்கண்ட உரிமைப் பிரகடனத்தை வெளியிடுகிறது.

அனைத்து இந்துக்களும் ஒரு **வர்ணத்தைச்** சேர்ந்தவர்களாகக் கருதப்பட வேண்டும்; இதற்கான சட்டம் இயற்றப்பட வேண்டும், பிராமணன், சத்திரியன் போன்ற வருண இனச் சொற்கள் பயன்படுத்தப்படுவது தடை செய்யப்பட வேண்டும்.

இந்து சமயக் குருக்களைத் தேர்ந்தெடுப்பதற்கு பரீட்சை நடத்தப்பட வேண்டும், இத்தேர்வில் வெற்றிபெற்றவர்களுக்கே தகுதிச் சான்றிதழ் வழங்கப்பட வேண்டும். இவ்வாறு மற்றொரு தீர்மானத்தில் வலியுறுத்தப்பட்டது.

பிரதானமாக பிராமணர்களையும் பிராமணியத்தையும் கண்டிக்கும் வகையிலேயே சொற்பொழிவுகள் அமைந்திருந்தன. கூட்டத்தில் பேசுவதற்கு திரு.மண்ட்லிக் அனுமதி கோரினார். ஆனால் தலைவர் அனுமதி தர மறுத்து விட்டார்.

**ஸ்மிருதியைத்*** தீயிட்டுக் கொளுத்துவதை திரு. டி.வி. பரதன் என்ற தீண்டத்தக்கவரும் ஆதரித்துப் பேசினார்.

இதனைத் தொடர்ந்து **ஸ்மிருதியை** எரிக்கும் நிகழ்ச்சி நடைபெற்றது. அன்றைய மாநாடு இத்துடன் முடிவடைந்தது.

''டாக்டர் அம்பேத்கரும் ஏனையோரும் 1927 டிசம்பர் 25 ஆம் தேதி **மனுஸ்மிருதியை** எரித்தனர்; இன்றைய யுகத்தைக்

---

★ மனுஸ்மிருதி.

1. இந்தியன் நேஷனல் ஹெரால்டு, டிசம்பர் 31, 1927.

கட்டியங்கூறி அறிவிப்பதாக இது இருந்தது. 1938ல் டி.வி. பர்வதேக்கு அளித்த பேட்டியில் **மனுஸ்மிருதி** எரிக்கப்பட்டது பற்றி டாக்டர் அம்பேத்கர் பின்கண்டவாறு குறிப்பிட்டார் :' 'மனுஸ்மிருதி எரிக்கப்பட்ட நிகழ்ச்சி முற்றிலும் திட்டமிட்டே செய்யப்பட்டதாகும். நூற்றாண்டு நூற்றாண்டுக் காலமாக எங்களுக்கு இழைக்கப்பட்டுவரும் அநீதியின் கோரக் கொடுமையின் ஒரு சின்னமாக **மனுஸ்மிருதி**யைக் கருதியதாலேயே அதனை நாங்கள் எரித்தோம். அதன் போதனையின் காரணமாகவே நாங்கள் கொத்தியெடுக்கும் கோரக் கொடுமைக்கு, வன்னெஞ்ச வறுமைக்கு உள்ளாகியுள்ளோம். எனவே நாங்கள் அதற்கு எதிராக வரிந்து கட்டினோம், எங்கள் உயிர்களை எல்லாம் பணையம் வைத்துப் போராட்டத்தில் இறங்கினோம், நினைத்ததைச் செய்து முடித்தோம்.''

''மாவட்ட ஆட்சியரும், காவல்துறைக் கண்காணிப்பாளரும், மற்றும் ஆயுதந்தாங்கிய 100 காவல்துறைப் படையினரும் பிரசன்னமாகி இருந்தனர் ''தீண்டத்தகாத'' ஒருவர் இயற்றிய ஹரிகீர்த்தனை உத்வேகத்துடன் பாடப்பட்டது. பிராமணர்களை வன்மையாகத் தாக்கும் கீர்த்தனை இது.

## மாவட்ட ஆட்சியரின் கடிதம்

26ஆம் தேதி காலையில் மாநாட்டின் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. மாவட்ட ஆட்சியரிடமிருந்து வந்திருந்த ஒரு கடிதத்தை டாக்டர் அம்பேத்கர் படித்தார். உரிமை இயல் நீதிமன்றம் பிறப்பித்துள்ள தடையாணைக்கு ''தீண்டத் தகாதவர்கள்'' கீழ்ப்படிய வேண்டும் என்பது அரசாங்கத்தின் விருப்பம் என்றும், தீண்டத்தகாதவர்களின் லட்சியத்தின்பால் அது எப்போதுமே பரிவுகாட்டி வந்திருக்கிறது என்றும், சட்டரீதியான வழிமுறைகளில் அவர்களது கோரிக்கைகளை நிறைவேற்ற அது தயாராக இருக்கிறது என்றும், பொது இடங்களைப் பயன்படுத்துவதற்கு அவர்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட உதவத்தயாராக இருக்கிறது என்றும் மாவட்ட ஆட்சியரின் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் இடைக்காலத் தடை விதிக்கப்பட்டிருந்ததன் காரணமாக அரசாங்கத்தால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை, எனவே, இந்த சமயம் தீண்டத்தகாதவர்கள் **சத்தியாக்கிரகத்தில்** ஈடுபடாமலிருந்தால் நல்லது என்று கருதிற்று.

---

1. தி இந்தியன் நேஷனல் ஹெரால்டு, டிசம்பர் 31, 1927.

மாநாடு முழுவதுமே விஷயாலோசனைக் குழுவாக மாறிற்று. நிலைமை முழுவதையும் டாக்டர் அம்பேத்கர் எடுத்துரைத்தார். உரிமை இயல் நீதி மன்றத்தின் தடையாணையை எதிர்த்து சத்தியாக்கிரகத்தில் ஈடுபடும்படி அவர் பிரதிநிகளுக்கு ஆலோசனை கூறினார். இதனால் ஏற்படக்கூடிய விளைவுகளுக்குப் பிரதிநிதிகள் தயாராக இருக்க வேண்டும் என்றும், தாங்களே முன்வந்து உற்சாகமாக சிறை செல்ல வேண்டும் என்றும், இதர துன்பதுயரங்களை ஏற்கவும் . சித்தமாக இருக்க வேண்டும் என்றும் அவர் பரிந்துரைத்தார்.

உடனடியாக சத்தியாக்கிரகத்தில் ஈடுபடும் யோசனைக்குப் பெரிதும் ஆதரவாகவே மாநாட்டின் உணர்வு இருந்தது. சத்தியாக்கிரகத்தைத் தள்ளிவைக்க வேண்டும் என்று எண்ணும் பிரதிநிதிகள் எவரும் இருப்பதாக மாநாட்டின் தலைவருக்குத் தோன்றவில்லை.

## 3000க்கும் அதிகமான தொண்டர்கள் உறுதிமொழி

இந்த சந்தர்ப்பத்தில் பிரதிநிதிகளின் உணர்வை மிகச் சரியாக எடைபோடுவது அவசியம் என்று டாக்டர் அம்பேத்கர் கருதினார், சத்தியாக்கிரகத்துக்கு ஆதரவாக இருக்கும் பிரதிநிதிகள் தங்கள் சம்மதத்தை எழுத்துப்பூர்வமாகத் தெரிவிப்பது உசிதமாக இருக்கும் என்று அவர் ஆலோசனை கூறினார். இதன்பேரில் சத்தியாக்கிரகம் செய்ய சித்தமாக இருக்கும் பிரதிநிதிகளின் பெயர்களைப் பதிவு செய்யும் பணி ஆரம்பமாயிற்று. சத்தியாக்கிரகம் செய்யத் தாங்கள் தயாராக இருப்பதாகக் கூறி ஒரு மணி நேரத்திற்குள் 3,884 பிரதிநிதிகள் கையொப்பமிட்டுவிட்டனர்.

சத்தியாக்கிரகத்துக்கு ஆதரவாக மாநாடு இருக்கும் தகவல் மாவட்ட ஆட்சியருக்குத் தெரிவிக்கப்பட்டது. மாநாட்டுக்கு நேரில் வந்து இது சம்பந்தமாகத் தாம் பேசவிரும்புவதாக அவர் கூறினார்.

## மாநாட்டில் மாவட்ட ஆட்சியரின் உரை

சத்தியாக்கிரக மாநாடு மாலை 5.30 மணிக்குக் கூடிற்று. மாவட்ட ஆட்சியர் திரு ஹூட் காவல்துறை ஆணையருடன் மாநாட்டுக்கு வந்தார். மாவட்ட ஆட்சியர் மராத்தி மொழியில் உரை நிகழ்த்தினார். திரு. ஹூட் பேசியதாவது: ''இந்த மாநாட்டிற்கு நீங்கள் அனைவரும் ஏன் வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன்.

சத்தியாக்கிரகத்தை ஒத்திப்போடும்படி நான் ஆலோசனை கூறினால், கடந்த மூன்று மாதங்களாக இதற்காகத் தயார் செய்துவந்ததால் சத்தியாகிரகத்தை ஒத்திவைப்பது சாத்தியமில்லை என்று நீங்கள் கூறுவீர்கள் என்பதையும் நான் அறிவேன். ஆனால் ''தாழ்த்தப்பட்ட'' இன மக்களை பொதுக் குளங்களிலும் பள்ளிக்கூடங்களிலும் அனுமதிக்க வேண்டும் என்று பம்பாய் சட்டமேலவை ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது என்பதையும், இதன் பிரகாரம் நடந்து கொள்ளுமாறு பம்பாய் அரசாங்கம் கட்டளையிட்டிருக்கிறது என்பதையும், இவ்வாறே செய்யுமாறு தலத்தாபன நிர்வாகத்துக்கும் அது பரிந்துரைத்திருக்கிறது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். அரசாங்கம் இதற்கு முற்றிலும் தயாராகவே இருக்கிறது. ஆனால் பத்து தினங்களுக்கு முன்னர் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று திரு.ஹூட் கூறினார். தீண்டத்தக்கவர்கள் ''தீண்டத்தகாதவர்களுக்கு'' எதிராக ஒரு வழக்கு தொடர்ந்துள்ளனர்; இந்தக்குளம் தனியாருக்கு சொந்தமானது என்றும், அவர்களுக்கு ஆதரவாக ஓர் இடைக்காலத் தடை வாங்கப்பட்டிருக்கிறது என்றும் அவர் தெரிவித்தார்.

மாவட்ட ஆட்சியர் மேலும் கூறியதாவது: ''மாவட்ட ஆட்சியர் என்ற முறையில் உங்களுடன் பேசுகிறேன். அரசாங்கம் ''தீண்டத்தகாதவர்கள்'' பக்கமே இருக்கிறது என்பதை அரசாங்கத்தின் சார்பில் உங்களுக்கு உறுதியாக கூற விரும்புகிறேன். அரசாங்கமும் நானும் உங்களுடைய நண்பர்கள் என்பதையும் தெரிவித்துக் கொள் கிறேன். நீதி மன்றத்தின் ஆணையை மீறி உங்களில் சிலர் சத்தியாக் கிரகம் செய்ய உத்தேசித்திருப்பதைக் காண பெரிதும் வருந்துகிறேன். இத்தகைய செயல் மிகவும் தீங்கு விளைவிக்கக் கூடியதாக இருக்கும் என்று கருதுகிறேன். உங்கள் வழக்கை நன்கு தயாரித்து அரசியல் சட்ட ரீதியிலும், சட்டரீதியிலும் போராடும்படி உங்களுக்கு ஆலோசனை கூறுகிறேன். தீர்ப்பு உங்களுக்குச் சாதகமாக இருக்கும் என்றே மனப்பூர்வமாக நம்புகிறேன்.''

பிராமணரல்லாத கட்சியின் செய்தியைத் தெரிவிப்பதற்காக திரு.ஜவால்கர் காலையில் வந்திருந்தார். ''தீண்டத்தகாதவர்கள்'' நீதிமன்றத்தின் இடைக்காலத் தடையாணைக்குக் கட்டுப்பட வேண்டும் என்றும், நீதிமன்றத்தின் தீர்ப்புக்குப் பிறகே அவர்கள் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும் என்றும் அந்தச் செய்தியில் தெரிவிக்கப்பட்டிருந்தது.

தாங்கள் இங்கு வந்திருப்பது தீண்டத்தக்கவர்களுக்கு எதிரான சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்வதற்காகவே அன்றி அரசாங்கத்துக்கு எதிரான சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்வதற்காக அல்ல என்று சுபேதார் காட்கேயும் ஏனைய பேச்சாளர்களும் குறிப்பிட்டனர்''.[1]

''பின்னர் மாவட்ட ஆட்சியரை டாக்டர் அம்பேத்கர் பந்தலிலிருந்து வெளியே அழைத்து சென்றார். சத்தியாக்கிரகம் தொடங்குவதை ஆதரித்துப் பேச்சாளர் பின் பேச்சாளர்களாகப் பேசினர். சிலர் இதற்கு மாறான கருத்துக்களைத் தெரிவித்தபோது அவற்றிற்கு எதிராக கூச்சலும் கூப்பாடும் எங்கும் எதிரொலித்தன. விவாதத்தை மறுநாள் காலை வரை டாக்டர் அம்பேத்கர் ஒத்தி வைத்தார்.

அன்று இரவு தலைவர்கள் கூடி விவாதித்தனர்; நீதிமன்றத்தில் வழக்கு இருந்துவருவதை முன்னிட்டு போராட்டத்தை ஒத்தி வைப்பதென்று தீர்மானித்தனர். எனினும் குளத்தைச் சுற்றிலும் ஊர்வலம் செல்லுவது என்று முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவு மாவட்ட குற்றவியல் நடுவருக்குத் தெரிவிக்கப்பட்டது.

டிசம்பர் 27 ஆம் தேதி காலை போராட்டம் குறித்த முதல் தீர்மானத்தை டாக்டர் அம்பேத்கர் திரும்பப் பெற்றார்; ஆழ்ந்த மௌனத்துக்கிடையே மற்றொரு தீர்மானத்தை முன்மொழிந்தார்; போராட்டத்தை ஒத்திவைக்கும்படி இந்தத் தீர்மானம் மாநாட்டைக் கேட்டுக் கொண்டது. அவர் இருதலைக் கொள்ளி எறும்புபோல் மிகுந்த இக்கட்டான நிலையில் இருந்தார். மாநாட்டுப் பிரதிநிதிகளின் எல்லையற்ற ஆர்வத்தை மட்டுப்படுத்தி, அதனை சாமர்த்தியமாக சமாளிக்க வேண்டிய தருணம் அது. இந்த நெருக்கடியான நிலைமையை மிகவும் செயல்திறத்தோடு எதிர்கொள்ள முனைந்தார். இப்போது அமைதியின்றி பரபரப்படைந்திருந்த பிரதிநிதிகளின் உள்ளத்தைத் தொடும் வகையில் பின்கண்டவாறு பேசினார்: ''நீங்கள் வீரதீரமிக்க மக்கள். தங்களுடைய நியாயமான உரிமைகளுக்காக தங்கள் இன்னுயிரையும் தரத்தயாராக உள்ள மக்கள் நிச்சயம் வெற்றிவாகை சூடுவார்கள். ஆனால் நீங்கள் அடிகொடுப்பதற்கு முன்னர் ஒரு முறைக்கு இருமுறை சிந்திக்க வேண்டிய தருணம் இப்போது வந்துவிட்டது. காந்தி தொடங்கிய சத்தியாக்கிரக இயக்கம் அந்நிய ஆதிக்கத்துக்கு எதிராக நடைபெற்றதால் மக்கள்

1. இண்டியன் நேஷனல் ஹெரால்ட், டிசம்பர் 31, 1927.

அதனை ஆதரித்தனர் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். நமது போராட்டம் சாதி இந்துக்களுக்கு எதிரான போராட்டம். எனவே, வெளி ஆதரவு நமக்குக் குறைவாகவே உள்ளது. இதனைக் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது அரசாங்கத்தை நாம் பகைத்துக் கொள்ளக்கூடாது, நமது எதிரிகள் பக்கம் அது சென்று விட நாம் அனுமதிக்கக்கூடாது. இது எவ்வகையிலும் நமக்கு அனுகூலம் தராது''

''இந்தப் பிரச்சினையை நாம் தள்ளிப்போட்டால் மதிப்பிழக்க நேரும் என்று நினைக்காதீர்கள்'' என உறுதிபடக் கூறினார் தலைவர். ''என்னைப் பொறுத்த வரையில் அரசாணையை மீறுவதால் ஏற்படக்கூடிய எத்தகைய இன்னல் இடுக்கண்களையும் எதிர்கொள்ள நான் தயாராக இருக்கிறேன். வழக்குரைஞர் சம்பந்தப்பட்ட விதிகளை மீறியதாகக் குற்றம் சாட்டப்பட்டு சிறை செல்லவும் சித்தமாக இருக்கிறேன், சகோதரர்களே'' பின்னர் அவர் மென்மையாகப் பின்வருமாறு கூறினார்: ''இந்தப் போராட்டத்தை ஒத்திப்போடுவதால் அதனை நாம் கைவிட்டதாக அர்த்தமாகாது, இந்தக் குளம் சம்பந்தமான நமது உரிமைகளை நிலைநாட்டும் வரை இந்தப் போராட்டம் தொடரும்.''[1]

## சத்தியாக்கிரகம் ஒத்திவைக்கப்பட்டது

மாநாட்டு நடவடிக்கைகளின் முடிவில் பின்கண்ட தீர்மானம் ஏற்கப்பட்டது:-

''மஹத்தின் தீண்டத்தக்க வர்க்கத்தினர் தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினருக்கு எதிராக கடைசி நிமிடத்தில் தடையாணை பெற்றுள்ளனர்; இதன் மூலம் அரசாங்கத்துடன் அவர்களை மோதவிட்டுள்ளனர். எனினும் நேற்று காலை சத்தியாக்கிரகம் செய்ய முடிவு செய்திருந்த அவர்கள் மாவட்ட ஆட்சியர் பேசினதைக் கேட்ட பிறகு, சமத்துவ உரிமைகள் பெறுவதற்கான போராட்டத்தில் அவர்கள்பால் அரசாங்கம் அனுதாபம் கொண்டுள்ளது என்று அவர் கூறியதைச் செவிமடுத்த பிறகு உரிமையியல் நீதிமன்றத்தின் தீர்ப்பு வரும்வரை சத்தியாக்கிரகத்தை ஒத்திவைக்கத் தீர்மானித்துள்ளனர்''[2].

1. கீர், பக்கங்கள் 102-103
2. இந்தியன் நேஷனல் ஹெரால்ட், டிசம்பர் 31, 1927.

''மாநாடு இதனை ஏற்றுக்கொண்டது. பிரதிநிதிகள் உடனே ஊர்வலமாகப் புறப்பட்டனர். தொண்டர்கள் கோஷங்களை எழுப்பியவாறும், விளம்பர அட்டைகளை ஏந்தியபடியும் மெதுவாக நடந்து சென்றனர். ஊர்வலம் குளத்தைச் சென்றடைந்து அதனைச் சுற்றிவந்தது. அச்சமயம் சாதி இந்துக்கள் என்ன செய்து கொண்டிருந்தனர்? தெருக்கள் வெறிச்சோடிப் போயிருந்தன. அவர்கள் தங்கள் வீட்டுக் கதவுகளை மூடிக் கொண்டனர்; உள்ளே நெளிந்து கொண்டிருந்தனர். ஒன்றரை மணி நேரத்துக்குப் பிறகு ஊர்வலம் எத்தகைய அசம்பாவிதமுமின்றிப் பந்தலுக்குத் திரும்பி வந்தது.''[1]

## ''ரைகாட்டில் டாக்டர் அம்பேத்கர்''

### கங்கா சாகர் குளத்தில் ''தீண்டத்தகாதவர்கள்'' குளியல்

''கொலாபா சமாசார் ஆப் பென்'' எனும் பத்திரிக்கையில் ஜனவரி 5 ஆம் தேதியிட்டு ஒரு நிருபர் பின்வருமாறு கூறுகிறார்: ''சத்தியாக்கிரக மாநாடு முடிவடைந்த பிறகு தீண்டத்தகாதவர்கள் சுமார் நூறுபேர் புடைசூழ டாக்டர் அம்பேத்கர் ரைகாட் சென்றார்; இது சிவாஜியின் தலைநகரும் புகழ்பெற்ற கோட்டையுமாகும். அவர் ரைகாட் தர்மசாலையில் தங்கினார். யெசு செட்கே என்ற மராட்டிய காவலர் அவரையும் அவருடன் வந்தவர்களின் தேவைகளையும் நன்கு கவனித்துக் கொண்டார். இந்தத் தர்மசாலை ஒரு குழுவால் நிர்வகிக்கப்பட்டு வந்தது. கங்கா சாகர் குளத்தின் தண்ணீரைத் தொட வேண்டாம் என்று அவர் அவர்களைக் கேட்டுக் கொண்டார். அவர்கள் குளிப்பதற்கு விரும்பினால் தீண்டத்தகாதவர்களுக்கெனப் பிரத்தியேகமாக அருகில் கட்டப்பட்டுள்ள மற்றொரு குளத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அவர் யோசனை தெரிவித்தார். எனினும் டாக்டர் அம்பேத்கரும் ஏனையோரும் ''கங்காசாகர்'' குளத்தின் தண்ணீரைக் ''கறைப்படுத்தி'' விட்டனர்.

ராய்கட் பள்ளத்தாக்கைச் சேர்ந்த மராட்டியர்களிடையே இது மிகுந்த பரபரப்பை ஏற்படுத்திவிட்டது என்று நிருபர் மேலும் கூறுகிறார். இவர்களில் பெரும்பாலோர் ராணுவ சிப்பாய்கள். இந்தப் பள்ளத்தாக்கு ராணுவத்துக்கு ஆள் சேர்ப்பதற்கு ஒரு நல்ல இடமாக இருந்தது''[2].

---

1. கீர், பக்கம் 104.
2. 1928 ஜனவரி 12 ஆம் தேதியிட்ட பம்பாய் கிரானிக்கல்.

## கருத்துரைகள்

''கொலாபா-சமாசார்'' தனது ஜனவரி 7 ஆம் தேதியிட்ட இதழில் இந்த நிகழ்ச்சி குறித்து ஒரு தலையங்கம் எழுதியிருந்தது; அதில் டாக்டர் அம்பேத்கர் கைக்கொண்ட முறைகளைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தது; டாக்டர் அம்பேத்கர் மீதும் அவரது ஆதரவாளர்கள் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சிலர் யோசனை தெரிவித்திருந்ததைப் பற்றிக் கருத்து தெரிவிக்கையில் இத்தகைய யோசனைகளை அது கண்டித்திருந்தது. இந்தியர்கள் தங்களுக்குள் உள்ள தகராறுகளை கூடிய மட்டும் தாங்களே தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர இதில் தலையிடும்படி ஒருபோதும் அரசாங்கத்தை நாடக்கூடாது என்று தெரிவித்திருந்தது.''[1]

## ''மகாராஷ்டிரத்தின் மனம்''

டாக்டர் அம்பேத்கருக்கும் மஹத்தில் நடைபெற்ற தீண்டத் தகாதவர்களின் சத்தியாக்கிரக மாநாட்டுக்கும் எதிரான கருத்துகள் கடந்த சில வாரங்களாகவே வைதீக பத்திரிக்கைகளில் மட்டுமின்றி, தீண்டாமையை ஒழித்துக்கட்டுவதற்குத் திட்டவட்டமாக உறுதிபூண்டுள்ள சஞ்சிகைகளிலும் வெளியிடப்பட்டு வருகின்றன. மராத்திய சஞ்சிகைகளில் பெரும்பாலானவை இரண்டாவது வகையைச் சேர்ந்தவை; பொதுவாகக் கூறுமிடத்து அவற்றைப் பின்வரும் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம் : என்.சி.ஓ, ஒத்துணர்வானவை, பிரமமல்லாத கோட்பாட்டை ஆதரிப்பவை. டாக்டர் அம்பேத்கருக்கும் அவருடைய தோழர்களுக்கும் எதிராக இந்த சஞ்சிகைகள் இரண்டு குற்றச்சாட்டுகளைக் கூறுகின்றன. அவை வருமாறு: 1. மனுஸ்மிருதியை எரிப்பதில் அவர் அளவுமீறி நடந்து கொண்டுவிட்டார்; 2. சத்தியாக்கிரகத்தை நிறுத்தும்படி கொலாபா மாவட்ட ஆட்சியர் பிறப்பித்த உத்தரவிற்கு எத்தகைய எதிர்ப்பும் காட்டாமல் இணங்கி விட்டார். இந்த சர்ச்சையில் இரு தரப்பினருமே பரஸ்பரம் குற்றச்சாட்டுகளையும் எதிர் குற்றச்சாட்டுகளையும் பரிமாறிக் கொண்டனர், ஆனால் அவை சத்தும் சாரமுமற்றவை. மாநாட்டைப் பற்றி டாக்டர் அம்பேத்கர் ''பகிஸ்கிரித்-பாரத்''தில் இப்போது ஒரு நீண்ட கட்டுரை எழுதியுள்ளார்; தமக்கு எதிராகக் கூறப்படும் குற்றச்சாட்டு

1. கொலாபா-சமாசார், ஜனவரி 7, 1928.

களுக்குப் பதில் அளித்துள்ளார். தமக்கு எதிராகக் கூறப்படும் முதல் குற்றச்சாட்டை மறுப்பதில் அவர் எத்தகைய தயக்கமோ மயக்கமோ காட்டவில்லை. மேல்சாதி இந்துக்கள் எனப்படுவோரால் தீண்டத்தகாத இந்துக்கள் நீண்ட நெடுங்காலமாகவே, அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டு வந்திருக்கின்றனர். இதனை மனுஸ்மிருதி ஆதரிப்பதோடு, அங்கீகரிக்கவும் செய்கிறது. இன்றைய இந்து சட்டத்துக்கு இதுவே பிரதான ஆதார மூலமாகவும் அமைந்துள்ளது, எனவேதான் மனுஸ்மிருதியை எரிப்பது நியாயமானதாகிறது என்பது அவரது வாதம். இரண்டாவது குற்றச்சாட்டுக்குப் பதிலளிக்கும்போது தமது எதிராளிகளின் வாதங்களைத் தவிடுபொடியாக்கினார்; தடை உத்தரவு எதுவும் பிறப்பிக்கப்படவில்லை என்றும் அழுத்தம் திருத்தமாகக் கூறினார். தாம் செய்ததெல்லாம் சத்தயாக்கிரகத்தை இன்னொரு தேதிக்கு ஒத்திவைக்கும்படி கொலாபா மாவட்ட ஆட்சியரின் வேண்டுகோளுக்கு இணங்கியதுதான்; சத்தியாகிரகிகளின் நலன்களையும் தீண்டத்தகாதவர்களின் நலன்களையும் முற்றிலும் கணக்கிலெடுத்துக் கொண்டே சத்தியாக்கிரகத்தை இன்னொரு தேதிக்குத் தாம் ஒத்திவைத்ததாக அவர் கூறினார். உண்மை இவ்வாறு இருக்கும்போது தம்மை எதிர்ப்பவர்கள் தமக்கு எதிராக என்ன வேண்டுமானாலும் கூறட்டும், அது குறித்துத் தமக்குக் கவலை இல்லை என்று அவர் தெளிவுபடுத்தினார்.

''சௌகார் குளம் யாருக்குச் சொந்தம் என்பது சம்பந்தமாக இந்துக்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்குமான வழக்கு விசாரணை மகதின் இரண்டாம் வகுப்பு கீழ் முறைமன்ற நடுவர் நீதிமன்றத்தில் 1928 ஜனவரி 12 ஆம் தேதி நடைபெறுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. இதனையொட்டி வழக்கறிஞரான மார்கண்ட் தத்தாத்ரேய வைத்தியாவுக்கு டாக்டர் அம்பேத்கர் ஒரு கடிதம் எழுதினார்; சில தாஸ்தாவேஜுகளைப் பெறும்படியும் நீதிமன்றத்துக்கு வரும்படியும் கடிதத்தில் வழக்கறிஞரைக் கேட்டுக் கொண்டிருந்தார். அதிலும் குறிப்பாக ஒரு முக்கிய வேண்டுகோளை விடுத்திருந்தார்; அதாவது டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் சார்பில் 1928 ஜனவரி 30 ஆம் தேதி திரு. பாண்டுரங்க பாஸ்கர் சாஸ்திரி தாக்கல் செய்திருந்த உறுதிமொழிப் பத்திரத்தின் பிரதியைப் பெறும்படியும் குறிப்பிட்டிருந்தார். இதில் சாஸ்திரி வேதங்களிலிருந்து ஏராளமான மேற்கோள்களை எடுத்தாண்டிருந்தார். டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் திரு.வைத்யாவுக்கு எழுதியிருந்த கடிதம் வருமாறு:

**பீம்ராவ் ஆர். அம்பேத்கர்**
எம்.ஏ.பிஎச்.டி., டி.எஸ்சி,
பார்-அட்-லா
உறுப்பினர், சட்டமேலவை
பம்பாய்.

தாமோதர் ஹால், பரேல்,
பம்பாய் - 12
24.1.28

என் அன்பார்ந்த வைத்யா,

உங்களது 12 ஆம் தேதியிட்ட கடிதம் கிடைத்தது. தடையாணை குறித்த விவாதம் விரைவிலேயே அதாவது பிப்ரவரி 5ஆம் தேதிக்கு முன்னதாக நடைபெற வேண்டும் என நீதிமன்றம் ஆவலாக இருப்பதாக அறிகிறேன். இது குறித்து விவாதிக்க பிப்ரவரி 2ஆம் தேதி வியாழக்கிழமை நான் வரலாமென உத்தேசித்திருக்கிறேன்.

இத்துடன் உறுதிமொழிப் பத்திரப் படிவங்களை அனுப்பியிருக்கிறேன். அவற்றை உரிய முறையில் தயாரித்து குறித்த காலத்தில் தாக்கல் செய்ய வேண்டுகிறேன். உறுதிமொழிப்பத்திரம் தயாரிக்க ஒரு முகமதிய கசாப்புக்கடைகாரன் கிடைப்பது ஓரளவு சிரமமாக இருக்கக்கூடும். (நான் ஒரு கசாப்புக் கடைக்காரனாக இருந்திருக்க வேண்டும்) மகதின் காவல்துறை துணை ஆய்வாளரைச் சந்தித்தால் நமக்கு ஆதரவாக ஒரு பிராமண புரோகிதர் அளித்த சாட்சியத்தின் பிரதியை அவரிடமிருந்து கேட்டுப் பெறுங்கள். அவர் நிச்சயம் தருவார் என்று நம்புகிறேன். அது இங்கு தாக்கல் செய்யப்படும்.

தேதியையும் நேரத்தையும் குறித்துப் பிரதிவாதிகளுக்குப் போதிய அறிவிப்பு தாருங்கள்; அவர்கள் எத்தகைய புகாரும் செய்ய இடம் தரலாகாது. சுர்பாவுக்கு என் அன்பான விசாரிப்பு. ஜனவரி 30ஆம் தேதி திங்கள் கிழமைக்குள் உங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன். பிப்ரவரி 2 ஆம் தேதிக்கு எல்லாம் தயாராக இருக்கிறதா என்பதை எனக்குத் தெரிவியுங்கள்.

என் அன்பு வாழ்த்துக்கள்.

உங்கள் அன்பார்ந்த
ஒப்பம் - பி.ஆர். அம்பேத்கர்''[1].

---

1. காயர்மோடு, பாகம் 3, பக்கம். 239,244,245.

மஹாத் சத்தியாக்கிரகத்தைப் பற்றி பி.ஆர்.லேலே எழுதிய கட்டுரை வருமாறு-

## தீண்டத்தகாதவர்கள் சத்தியாக்கிரகத்தை மீண்டும் தொடங்குவார்கள்

தீண்டத்தகாதவர்கள் புகழ்பெற்ற தங்கள் சௌதார் குள சத்தியாக்கிரகத்தை தற்காலிகமாக நிறுத்தவேண்டியதாயிற்று, டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் ஏனையோரும் அந்தக் குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கக்கூடாது என்ற மஹாத்தின் துணை நீதிபதி இடைக்காலத் தடை விதித்ததே இதற்குக் காரணம். அச்சமயம் அதாவது கடந்த டிசம்பரில் ஒரு மாநாட்டை நடத்துவதோடும், சாதி இந்துக்களின் கொடுங்கோன்மைக்கு எதிராகத் தங்கள் தீவிர உணர்வுகளை பல வழிகளில் வெளியிடுவதோடும் அவர்கள் திருப்தியடைய வேண்டியிருந்தது.

மாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் ஒரு மாபெரும் ஊர்வலத்தை, பேரணியை நடத்தினர், இதன் மூலம் அடக்குமுறையாளர்களின் உள்ளங்களில் தங்கள் பலத்தை, ஆழப் பதிய வைத்தனர். இதன் பின்னர் பொறுக்கியெடுத்த சிலருடன் டாக்டர் அம்பேத்கர், மஹாத் தாலுகாவைச் சுற்றறி வந்தார். ரைகாட் கோட்டைக்கும் சென்றார். அவரது ரைகாட் விஜயத்தைப் பொறுத்த வரையில் எதுவும் கூற நான் விரும்பவில்லை; தவறான தகவல்களைத் தந்தமைக்காக சில பத்திரிக்கைகளுக்கு எதிராக சட்ட நடவடிக்கைகள் எடுக்க அவர் உத்தேசித்திருப்பதே அல்லது அநேகமாக அந்த நடவடிக்கைகளை அவர் தொடங்கிவிட்டதே இதற்குக் காரணம்.

இந்தக் குழுவினரின் சுற்றுப்பயணம் மஹாத் தாலுகாவில் பெரும் பரபரப்பை ஏற்படுத்திவிட்டது. இதன் விளைவாக சில குறிப்பிட்ட கிராமங்களைச் சேர்ந்த முசல்மான்கள் தவறான தகவல்களைக் கொடுத்துவிட்டதாக சில பத்திரிகைகள் எழுதின.

## இடைக்காலத் தடையாணை ரத்து செய்யப்பட்டது

மஹத்தின் சார்பு நீதிபதி இப்போது இடைக்காலத் தடையாணையை ரத்து செய்துவிட்டார். இது சம்பந்தப்பட்ட தீர்ப்பின் பிரதி எனக்குக் கிடைக்கவில்லை. எனினும் இது நன்கு ஆராய்ந்து வழங்கப்பட்ட தீர்ப்பு என்று திட்டவட்டமான தகவல் எனக்குக் கிடைத்தது.

இடைக்காலத் தடையாணை வழங்கியபோது தான் தவறாக வழிகாட்டப்பட்டதாக நீதிபதி கூறினார்; ஓர் அவமதிப்பு தொடர்ந்ததற்கு தாம் ஒரு கருவியாக இருந்ததற்காக வருத்தம் தெரிவித்தார். இந்தக் கட்டத்தில் இதற்குமேல் எதுவும் கூறுவதற்கில்லை; ஏனென்றால் பிரதான வழக்கு இன்னமும் நீதிமன்ற விசாரணையில் இருந்து வருகிறது. எனினும் ஒரு நியாயமான லட்சியத்துக்குக் கிட்டிய வெற்றி என இதனைக் கூறலாம். தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோர் தங்களது குடிமை உரிமைகள் ஒருபுறம் நீதித்துறைக்கும் இன்னொருபுறம் வைதீகக் கும்பலுக்கும் இடையே சிக்கிக் கொள்ளாமல் அவற்றை அவர்கள் இப்போது நிலைநாட்டலாம்.

மகத்தான **கூர்க்கா பாக்** போராட்டத்தில் பொதுமக்களின் மனப்பூர்வமான, ஒருமித்த அனுதாபம் சீக்கிய சத்தியாக்கிரகிகள்பால் இருந்தது. ஆனால் மகத் விஷயத்தில் இவ்வாறு இல்லை. வைதீக இந்துத் தலைவர்கள் புனா தலைவர்களின் அல்லது இந்து சபாவாலாக்களின் அறிவுரையைக்கூடச் செவிமடுத்துக் கேட்கத் தவறி விட்டனர். தங்கள் முயற்சியில் படுதோல்வியடைந்த இதே தலைவர்கள் மனித உரிமைகளை நிலைநாட்டும் விஷயத்தில் மகர் சத்தியாக்கிரகிகளுக்கு ஆதரவாக உறுதியான நிலையை மேற்கொள்ள மாட்டார்கள். ஒத்திவைக்கப்பட்ட விஷயத்தை இப்போது மீண்டும் எடுத்துக் கொள்ள முடியும் அல்லவா?

## அடுத்த இயக்கம்

இந்த விஷயம் இப்போது திரும்பவும் எடுத்துக் கொள்ளப் படவிருக்கிறது; ஆபத்து குறைவாகவும் வெற்றிக்கான வாய்ப்பு அதிகமாகவும் இருக்கிறது. ஒரு வழக்கு விஷயமாக மகதுக்குச் சென்றிருந்த டாக்டர் அம்பேத்கர் வரவு செலவுத் திட்டம் பற்றி அற்புதமாகக் கருத்துத் தெரிவித்திருந்தார். அங்கிருந்து திரும்பியதும்

பரேலில் 26 ஆம் தேதி ஞாயிரன்று தாமோதர் தாக்கர்சே மண்டபத்தில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் பங்கு கொண்டார்.

டாக்டர் அம்பேத்கர் தமது தெள்ளத் தெளிவான உரையில் அப்போதைய நிலவரத்தை எடுத்துரைத்தார்; மீண்டும் போராட்டத்தைத் துவக்குவதற்கான தேதியைப் பரிசீலித்து முடிவு செய்யும்படி தம்மைப் பின்பற்றுபவர்களைக் கேட்டுக் கொண்டார். தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த ஆயிரத்துக்கும் அதிகமான உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர். மண்டபத்தில் கூட்டம் நிரம்பி வழிந்தது. தீண்டத்தகாதவர்கள் எனப்படுவோரின் சில சாதி இந்து நண்பர்களும், முந்திய இனத்தைச் சேர்ந்த ஏராளமானோரும் மேடையில் அமர்ந்திருந்தனர். பெரும்பாலான சொற்பொழிவுகள் தீண்டத்தகாதவர்களின் தலைவரான டாக்டர் அம்பேத்கரைப் பற்றியவையாக இருந்தன. பேச்சாளர்களில் ஒருவர் மிகவும் உணர்ச்சிவசப்பட்டு பேசினார். இப்போது புகழ்பெற்று விளங்கும் குளத்திலிருந்து தண்ணீர் எடுக்க சென்ற மார்ச் மாதம் முதல் முயற்சி மேற்கொண்டபோது சாதி இந்துக்களால் தாக்கப்பட்டவர் இவர்.

இந்தக் குளத்தில் பதனிடப்பட்ட தோல் சுத்தம் செய்யப்படுவதாக அச்சமயம் துடுக்குத்தனமாக ஒரு வதந்திப் பரப்பப்பட்டிருந்தது. இப்போது தாக்கப்பட்ட இந்த நபர் சக்கிலிய ஜாதியைச் சேர்ந்தவராக இருந்ததால் இவர் தான் அந்த நபராக இருக்கக் கூடும் என்று அவர் மீது தாக்குதல் தொடுக்கப்பட்டது. மற்றொரு பேச்சாளர் பேசும்போது உண்மையிலேயே தண்ணீர் எடுத்தவன் தான்தான் என்றும், அவ்வாறிருக்கும்போது வேறொருவர் அடிக்கப்பட்டிருக்கிறார் என்றும் அவர் பெயர் ராஜ்போஜ் என்றும் போஜ்ராஜா என்று வேடிக்கையாக அழைக்கப்படுவார் என்றும் விளக்கமாக எடுத்துரைத்தார். கடந்த ஞாயிரன்று நடைபெற்ற கூட்டம் எந்த லட்சணத்தில் இருந்தது என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

## ஒரு மாதத்திற்குள்

அவர்களைப் பார்த்ததும் அவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்று கூறுவது அபத்தமாகும். அப்படியிருந்தும் வைதிகர்களின் கண்களுக்கு அவர்கள் அவ்வாறுதான் தோன்றினர். இவர்கள் தீண்டாமையிலிருந்து தங்களைக் குணப்படுத்திக் கொள்ள

வேண்டியிருந்தது மட்டுமின்றி, தப்பெண்ணம் என்னும் சேற்றிலிருந்து வைதிகர்களையும் கைதூக்கிவிட வேண்டியிருந்தது. அவர்களுடைய போராட்டம் அடிப்படையில் ஒரு தேசபக்தப் போராட்டமாகும்; அடிப்படையில் ஒரு மனித நேயப் போராட்டமாகும்.

இத்தகைய தாங்கமுடியாத சுமையிலிருந்து ஒரு தேசம் எழுந்திருக்க முடியாது. அடிப்படையான சமத்துவ உரிமைகள் அவர்களுக்கு வழங்கப்படாதவரை, உத்தரவாதம் செய்யப்படாதவரை இந்துமதம் விலங்கிடப்பட்டு, தடைகளிடப்பட்டுதான் இருக்கும். தீண்டத்தகாதவர்கள் எனும் இனத்தைச் சேர்ந்த இந்த வீரர்கள் தங்கள் உரிமைகளை வலியுறுத்துவதன் மூலமும், தங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்வதன் மூலமும் நாட்டையும் இந்து சமுதாயத்தையுமே உயர்த்துகிறார்கள், மேம்படுத்துகிறார்கள். அடுத்த போராட்டத்தை மெய்யான ஆர்வத்தோடு நடத்துவதில் டாக்டர் அம்பேத்கர் இப்போது தீவிர கவனம் செலுத்தி வருகிறார். இதனை இன்னும் ஒரு மாதத்துக்குள் அதாவது ஒவ்வொரு இந்துவும் தனது வீட்டில் கொடி பறக்கவிடும் இந்து புத்தாண்டு தினத்தன்று தொடங்குவது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. ''அனைவருக்கும் சமத்துவ மனித உரிமைகள்'' எனும் தங்கள் கொடியை இந்தத் தினத்தன்று ஏற்றுவது என்று இந்தத் தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்த தலைவர்கள் முடிவு செய்துள்ளனர், ஆண்டவன் அருள் இருந்தால் இதை அவர்கள் செய்வார்கள்''[1].

இது மகத் சத்தியாக்கிரகத்தைப் பற்றி டி.வி. பிரதான் எழுதிய கட்டுரை-

## நீதியின் வெற்றி

கடந்த மார்ச் மாதம் மகதிலுள்ள சௌதார் குளத்துக்கு தீண்டத்தகாதவர்களை டாக்டர் அம்பேத்கர் தலைமை தாங்கி அழைத்துச் சென்றபோது வைதிக சாதி இந்துக்கள் இந்த 'அவச்செயல்' கண்டு தூக்கமும் பசியும் இழந்தனர்; பாவம், அனாதரவான தீண்டத்தகாதோர் குளத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்களை ஈவுஇரக்கமற்றுத் தாக்கினர். விரைவிலேயே ரௌடிகளுக்கு எதிராக சட்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன; பொது

1. இந்தியன் நேஷனல் ஹெரால்ட், 28 பிப்ரவரி 1928.

அமைதியைக் குலைத்தமைக்காக அவர்கள் தண்டிக்கப்பட்டனர். இதற்கிடையே, தீண்டத்தகாதோர் குளத்துக்கு அருகில் வருவதைத் தடுக்க மதத்தின் ''பாதுகாவலர்'' எனப்படுவோரால் அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன; இந்த நடவடிக்கையில் வைதீக ஏடுகள் அவர்களைத் தூண்டி ஊக்குவித்தன. தங்களுக்குள்ள சர்வசாதாரண மனித உரிமைகளை நிலைநாட்டுவதற்கே தீண்டத் தகாதோர் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்கினர்; சுமார் பத்தாயிரம் பேர் பங்கெடுத்துக் கொண்ட ஒரு மாநாடு கடந்த டிசம்பர் மாதம் நடைபெற்றது; குளத்தை நோக்கி ஊர்வலமாகச் செல்வ தென்று அம்மாநாட்டில் ஒருமனதாகத் தீர்மானிக்கப்பட்டது. ஆனால் இந்த விஷயத்தை மோப்பம் பிடித்த வைதிக இந்துக்கள் உடனே செயலில் இறங்கினர்; இந்தக் குளம் திரு.சௌதுரி என்பவருக்கும் தீண்டத்தக்க இனத்தவர்களுக்கும் சொந்தமான தனியார் சொத்து என்று கூறி மஹத்தின் கீழ்முறை மன்ற நடுவரிடமிருந்து ஒரு தற்காலிக தடையாணை வாங்கிவிட்டனர். அதிகாரிகளிடமிருந்து இந்த உதவி கிடைத்ததும் அரசாங்கத்துக்கும் தீண்டத்தகாதவர் களுக்கும் எதிராகத் தங்கள் கை ஓங்கிவிட்டதாக மனப்பால் குடித் தனர். டாக்டர் அம்பேத்கர் உடனே நிலைமையைப் புரிந்து கொண்டார். வழக்கு முடிந்து தீர்ப்பு அளிக்கப்படும்வரை சத்தியாக் கிரகத்தை ஒத்திவைப்பதென முடிவு செய்தார். வழக்கு 1928 பிப்ரவரி 23 ஆம் தேதியன்று மஹத்தின் கீழ்முறை மன்ற நடுவரான திரு.வைத்யாவின் முன் விசாரணைக்கு வந்தது. டாக்டர் அம்பேத்கர் மிகத் திறமையாக வாதாடி இடைக்காலத் தடையாணையை ரத்து செய்யச் செய்ததோடு, இந்தப் பொதுக்குளத்தைப் பயன்படுத்திக் கொள்ள தீண்டத்தகாதவர்களுக்கு முழு உரிமை உண்டு என்பதை நீதிபதி ஏற்கவும் செய்தார். இதன்பேரில் தடை நீக்கப்பட்டதைத் தொடர்ந்து பம்பாய் சட்ட மேலவையின் தீர்மானத்தின்படி இந்தக் குளம் பொது உபயோகத்துக்கு இப்போது திறந்துவிடப்பட வேண்டும்.

## சத்தியாக்கிரகம் செய்ய முடிவு

பம்பாயில் பிப்ரவரி 26ஆம் தேதி ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது; சுமார் 2000 பேர் கலந்து கொண்டனர்; மகதில் மீண்டும் சத்தியாக்கிரகம் செய்யத் தீர்மானிக்கப்பட்டது. சத்தியாக்கிரகக் குழு விரைவில் கூடவிருக்கிறது; எனவே, சத்தியாக்கிரகம் செய்வதற்கான தேதி விரைவில் அறிவிக்கப்படும்.

நாட்டின் இந்தப் பகுதியில் டாக்டர் அம்பேத்கர் தலைமையில் நடைபெற்றுவரும் தீண்டத்தகாதோரின் இயக்கத்தைக் கவனித்து வருபவர்கள் இந்த இயக்கம் பரந்த நோக்குடையதாக இருக்கிறது என நிச்சயமாகவும், துணிச்சலாகவும் கூற முடியும். சௌதார் குளத்தைப் பொதுமக்கள் அனைவருக்கும் திறந்துவிடுவதற்கான இயக்கமாக மட்டுமே இதனை நோக்கக் கூடாது; மாறாக, பல்வேறு நடவடிக்கைகள் கொண்ட இம்மாதிரியான ஓர் இயக்கம் மக்கள் தங்களது குடியுரிமைகள் சம்பந்தப்பட்ட சாதாரண சலுகைகளை வலியுறுத்தும் ஒரு தேசிய இயக்கமாகப் பரிணமிக்க வழிவகை செய்கிறது என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். தீண்டத்தகாதவர்களுக்குக் காதி மையங்களைத் திறக்க தாம் உத்தேசித்திருப்பதாகவும், மகாத்மாஜியின் ஆசிபெற்ற மாபெரும் நிர்மாணத் திட்டத்துக்கு இதன் மூலம் உதவ முடியும் என்றும் அவர் கூறினார். உடலில் கதரும் உள்ளத்தில் அனைத்துத் தீமைகளுக்கும் எதிராக சத்தியாக்கிரகமும் கொண்ட இந்த இயக்கம் வெற்றி பெறுவது திண்ணம் என்றும் அவர் குறிப்பிட்டார்.

என் நண்பர்களுக்கு ஒரு வார்த்தை. எந்த ஒரு நல்ல இயக்கமும் இன்னல்கள், இருக்கங்கள் நிறைந்த பல்வேறு கட்டங்களைக் கடந்து செல்ல வேண்டியுள்ளது. நட்புரிமை பாராட்டுமு பகைவர்களையும் அதேபோன்று பகிரங்கமான பகைவர்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது; இவர்களால் முதலில் குறிப்பிடப்பட்டவர்கள் மிகவும் அபாயகரமானவர்கள்-இது போன்றே இந்த சத்தியாக்கிரகமும் அதன் பாதையில் வைக்கப்படும் அனைத்து தட்டுதடைகளையும் கடந்து முடிவில் வெற்றி வாகை சூட வேண்டியுள்ளது. நண்பர்களிடமிருந்தோ அல்லது பகைவர்களிடமிருந்தோ துன்ப துயரங்களை எதிர்கொள்ள வேண்டிவரும்போது எத்தகைய சந்தர்ப்ப சூழ்நிலைகளிலும் தங்களது தைரியத்தையும் பொறுமையையும் இழக்கக் கூடாது; மாறாக அமைதியான, பலாத்காரமற்ற வழிமுறைகள் மூலம் போராட்டத்தைத் தொடர்ந்து நடக்கு வெற்றிபெற வேண்டும்.

துயருறும் என் சகோதரர்களுக்கு ஆண்டவன் வாழ்வையும் சாதி இந்துக்களுக்கு விவேகத்தையும் அருள்வாராக''.

மஹறத்தின் சார்பு நீதிபதி மகத் தடையாணையை ரத்து செய்தார்.

1. பம்பாய் கிரானிக்கல், மார்ச் 2, 1928.

## சௌதார் குளம் - தனியார் உடைமையல்ல தடையாணை வழங்கியமைக்காக நீதிபதி வருத்தம் தெரிவிக்கிறார்

''நான் இந்த ஆணையைப் பிறப்பிக்கும் முன்னர் ஒன்று கூறியாக வேண்டும்: நான் பிறப்பித்த தடையாணை மூலம் - அது தற்காலிகமானதேயானாலும் - பிரதிவாதிகளுக்கு தொல்லையையும் சிரமத்தையும் தந்துவிட்டேன்; அவர்கள் ஏற்கனவே மிகவும் குரூரமான, நியாயத்துக்குப் புறம்பான சமூக சீர்கேடுகளின் கீழ் பெரிதும் அவதியும் அல்லலும் பட்டுவருபவர்கள், அத்தகைய சமூகத்தினருக்கு மேலும் ஒரு தீங்கை செய்து விட்டேன். அதற்காகப் பெரிதும் வருந்துகிறேன். நான் பிறப்பித்த தடையாணையை இப்போது ரத்து செய்கிறேன்'' டாக்டர் அம்பேத்கருக்கும் ஏனையோருக்கும் எதிராகப் பிறப்பிக்கப்பட்ட தடையாணையை ரத்து செய்யும்போது சார்பு நீதிபதி மேற்கண்டவாறு கூறினார்.

புகழ்பெற்ற சௌதார் குளத்திலிருந்து தண்ணீர் எடுப்பது சம்பந்தமாக மஹாத்தில் சத்தியாக்கிரகம் செய்யச் சென்ற டாக்டர் அம்பேத்கரும் மற்றவர்களும் திரு. பாண்டுரங் ரகுநாத் தராபும் ஏனையோரும் விண்ணப்பித்துக் கொண்டபடி மஹாத் சார்பு நீதிபதி திரு. ஜி.வி.வைத்யாவால் தடுக்கப்பட்டார்கள் என்பதும், சம்பந்தப்பட்ட குளம் தனியார் சொத்து என அவர்கள் வாதாடியதே இதற்குக் காரணம் என்பதும் ஏற்கனவே தெரிந்ததே. எனினும் டாக்டர் அம்பேத்கரும் மற்றவர்களும், ஏராளமான சாதி இந்துக்களும் மீண்டும் சத்தியாக்கிரகம் செய்யத் தீர்மானித்துள்ளனர். மேலே குறிப்பிடப்பட்ட குளம் ''அரசாங்க நகரசபை சொத்து'' என்ற காரணத்தால் அவர்களுக்கு எதிரான தடையாணை இப்போது ரத்து செய்யப்பட்டிருப்பதைத் தொடர்ந்து இந்து புத்தாண்டின் முதல் நாளன்று அதாவது இப்போதிலிருந்து மூன்று வாரங்களுக்குப் பிறகு இந்த சத்தியாக்கிரகம் நடைபெறக்கூடும்.

### தடையாணை ஏன் வழங்கப்பட்டது?

பிப்ரவரி 23 ஆம் தேதி தீர்ப்பை வழங்கி சார்பு நீதிபதி கூறியதாவது: ''வழக்கில் சம்பந்தப்பட்ட சௌதார் குளம் தனியார் சொத்து இயல்பை எடுத்த எடுப்பில் பெற்றிருப்பதால் அந்த ஊகத்தின் அடிப்படையில் - இந்த ஊகம் சரியானதா, இல்லையா என்பதை நான் பார்த்திருக்க வேண்டும் - என் முன் பிரதிவாதிகள்

*தற்போது முன்வைத்துள்ள சான்று இந்த ஊகம் தவறானது என்பதை மெய்ப்பித்துள்ளது.''*

*சார்பு நீதிபதி சாட்சியத்தைப் பரிசீலிக்கும்போது வருவாய்த் துறை தவணப் படிவங்களையும் குளத்திலிருந்து தண்ணீரை விசேசமாகப் பயன்படுத்திக் கொள்வதற்குப் பலர் நகர சபைக்கு சமர்ப்பித்த விண்ணப்பங்கள் போன்ற வேறு சில ஆவணங்களையும் கணக்கிலெடுத்துக் கொண்டுக் கருத்துத் தெரிவிக்கிறார். ''வழக்கில் குறிப்பிடப்பட்டுள்ளது அரசாங்க சொத்தே தவிர வாதிகள் கூறியுள்ளது போல் குறிப்பிட்ட தனிநபர்களுக்குச் சொந்தமான தனியார் சொத்தல்ல என்பதை இந்த ஆவணங்கள் யாவும் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கின்றன''.*

## ஐயத்துக்கு இடமற்ற சான்று

*நீதிபதி தொடர்ந்து கூறுகிறார்: ''குளத்தின் கரையில் இரண்டு இடங்களில் கல் பாறைகள் உள்ளன; அவற்றில் கல்வெட்டுப் பொறிப்புகள் காணப்படுகின்றன. வழக்கில் குறிப்பிடப்பட்டிருக்கும் குளம் நகரசபை சொத்துதான் என்பதை இவை மேலும் வலுப்படுத்துகின்றன. பிரதிவாதியின் வழக்குறைஞர் மனு செய்து கொண்டதன் பேரில் ஓர் ஆணையர் நியமிக்கப்பட்டார்; சம்பந்தப்பட்ட இடத்துக்குச் சென்று நீதிமன்றப் பிரதிநிதி மற்றும் இரு தரப்பினரின் வழக்குரைஞர்கள் முன்நிலையில் எழுத்துப் படிவங்களின் உருவ நேர்படியை எடுக்கும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. நீதிபதி, வாதிகள் சார்பில் திருவாளர்கள் ஜோஷி, சாத்தே ஆகியோர் மற்றும் வாதிகள் சார்பில் திரு. வைத்யா ஆகியோர் முன்னிலையில் இப்பணி நடைபெற்றது. தொடர் எண் 2 என்று குறிப்பிடப்பட்ட பாலத்தில் நகரசபை மகத் 1899 என்ற சொற்கள் தெளிவாகப் பொறிக்கப்பட்டுள்ளன. பாலம் எண் 1ல் சில சொற்கள் தெளிவாகக் காணப்படுகின்றன, மற்றவற்றில் எவராலோ சொற்கள் சிதைக்கப்பட்டுள்ளன, இது மிக அண்மையில் நடந்ததாகவே தோன்றுகிறது.*

## வாதிகளின் பலவீனமான நிலை

*இந்தச் சான்றுகள் யாவற்றுக்கும் எதிராக வாதிகள் தராப் குடும்பத்தினரின் பாகப் பிரிவினை ஆவணத்தையே பெரிதும்*

நம்பியுள்ளனர் (சான்றாவணம் 44) மேலே குறிப்பிடப்பட்ட எல்லாச் சான்றுகளுமே ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. அதாவது சில ஆண்டுகளுக்கு முன்னர் தராப் குடும்பத்தைச் சேர்ந்த சில உறுப்பினர்கள் தங்கள் வீட்டின் முன்னுள்ள அணையைத் தங்களுக்குள் பிரிவினை செய்து கொண்டனர். இது அதிகம் முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லை. இதே போல் திவாகர் ஜோஷி என்பவர் தன் வீட்டின் முன்னால் கட்டியிருந்த அணை சிதிலமாகிப் போன நிலையில் இருந்தது, இதன் காரணமாக குளத்தின் தண்ணீர் சுகாதாரக் கேடுள்ள நிலையில் இருந்தது, இது சம்பந்தமாக திவாகர் ஜோஷிக்கு நகர சபை அனுப்பியிருந்த அறிவிப்பு அதனை பழுதுபார்க்கும்படித் தெரிவித்திருந்தது. இதுவும் அதிகம் முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லை. இதெல்லாம் குளத்தின் மீது வாதிக்கு உரிமை இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளக் கூடியவையாக இல்லை.

## "விசேட உடைமையல்ல"

வழக்கின் இறுதி முடிவு எதுவாக இருந்தபோதிலும் தாவாவிலுள்ள சௌதார் குளம் அரசாங்கத்துக்குச் சொந்தமான நகராட்சி சொத்தே தவிர வாதிகள் கூறுவதுபோல் குறிப்பிட்ட நபர் எவருக்கும் சொந்தமான தனியார் சொத்தல்ல என்பதில் தற்போது நான் முழுத் திருப்தியடைந்துள்ளேன். அப்படியாயின் இந்த சொத்தை அனுபவிப்பதில் வாதிகளை விலக்கி வைக்க பிரதிவாதிகளுக்கு உரிமை உண்டா என்பதே கேள்வி. இந்தக் கேள்விக்கு இல்லை என்பதே பதில் என்பது தெள்ளத்தெளிவு. இத்தகைய சொத்து விஷயத்தில் ஒரு குறிப்பிட்ட சமூகத்துக்கு மட்டுமே தனி உரிமை இருக்க முடியாது. இதனை அனுபவிக்க வாதிகளுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை பிரதிவாதிகளுக்கும் உண்டு. எனவே சீர் செய்ய முடியாத தீங்கு எவருக்கும் நேருவதற்கு எவ்வகையிலும் வாய்ப்பில்லை. இந்த வழக்கில் சொத்து நகரசபை சொத்து; வாதிகள் போன்றே பிரதிவாதிகளும் அதனை அனுபவிக்க உரிமை உண்டு. பிரதிவாதிகள் தங்கள் உரிமையைப் பயன்படுத்துவது வாதிகளுக்குத் தீங்கை விளைவிக்கும் என்று சொல்ல முடியாது.

## வாதியின் வழக்கறிஞரது நொண்டி வாதங்கள்

தாவாவில் உள்ள குளத்தை பிரதிவாதிகள் இதுவரை பயன் படுத்தவில்லை என்பதை அவர்களே ஒப்புக்கொண்டுள்ளனர் என்று வாதிகள் சார்பில் ஆஜரான வழக்கறிஞர் திரு.வீர்கார் கூறினார். ஆனால் இந்த சொத்து தனியார் சொத்து அல்ல, மாறாக அது பொது சொத்து, பொதுமக்கள் அனைவருக்கும் அதில் உரிமை உண்டு, எனவே பிரதிவாதிகள் எவ்வளவு நீண்ட காலம் அதனைப் பயன்படுத்தாதிருந்தாலும் அவர்களது உரிமைத் தகுதியை இது எவ்வகையிலும் பாதிக்காது. வழக்கில் குறப்பிடப்பட்டிருக்கும் இந்தக் குளம் வாதிகளின் சொந்த சொத்தல்ல, மாறாக அது பொது சொத்து, சொத்து என்பதை என்னிடம் தாக்கல் செய்யப் பட்டுள்ள சான்றுகளிலிருந்து தெரிந்து கொண்டேன். எனவே, அதனை அனுபவிக்கும் உரிமை பிரதிவாதிகளுக்குப் போன்றே வாதிகளுக்கும் உண்டு. அவ்வாறிருக்கும்போது இத்தகைய உரிமை யைப் பயன்படுத்துவதில் எவ்வகையிலும் தலையிடுவது முற்றிலும் சட்ட விரோதமானதாகும்.

இறுதியாக ஒன்று கூற விரும்புகிறேன். நான் வழங்கிய இடைக்காலத் தடையாணையால் - அது தற்காலிகமானதாயினும் - பிரதிவாதிகளுக்கு ஏற்பட்ட சிரமங்களுக்காகவும் தொல்லை களுக்காகவும், அதேபோல் மிகவும் கொடூரமான, நியாயமற்ற சமூகக் கேடுகளுக்கு உள்ளாகி சொல்லொண்ணா துன்ப துயரங் களை அனுபவித்துவரும் சமூகத்திற்கு மற்றுமொரு தீங்கு விளை வித்தமைக்காகவும் மிகவும் வருந்துகிறேன். என்னால் பிறப்பிக்கப் பட்ட தடையாணையை ரத்து செய்கிறேன்.''[1].

தடையாணை விலக்கிக் கொள்ளப்பட்ட பிறகு பம்பாயில் நடைபெற்ற கூட்டம் பற்றிய காவல்துறை அறிக்கை -

## "மஹாத்தில் தீண்டத்தகாதவர்களும் சத்தியாக்கிரகமும்"

தாழ்த்தப்பட்ட மக்களின் பொதுக்கூட்டம் ஒன்று பிப்ரவரி 26 ஆம் தேதி தாமோதர் தாகர்சே மண்டபத்தில் நடைபெற்றது. ஜி.என். சகாஸ்ரபுத்தே தலைமை வகித்தார். சுமார் 500 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

1. பம்பாய் கிராணிக்கல், மார்ச்சு, 1928.

பிரதான பேச்சாளராக டாக்டர். பி.ஆர்.அம்பேத்கர் உரை நிகழ்த்தினார். தமக்கும் சத்தியாக்கிரகக் குழுவுக்கும் எதிராக பிறப் பிக்கப்பட்டிருந்த இடைக்கால தடை உத்தரவை மஹத் நீதிமன்றத்தின் சார்பு நீதிபதி ரத்து செய்து விட்டார். எனவே, சத்தியாக்கிரகத்தை மீண்டும் தொடங்கும் பிரச்சினையை பம்பாய் சத்தியாக்கிரகக் குழுவின் உசித முடிவுக்கு விட்டுவிடுகிறேன்.

இடைக்காலத் தடையாணை ரத்து செய்யப்பட்ட பிறகு ''இந்தியன் நேஷனல் ஹெரால்ட்'' தெரிவித்த கருத்துக்கள் வருமாறு-

## ''பொது மனித உரிமைகள்''

டாக்டர் அம்பேத்கருக்கும் தாழ்த்தப்பட்ட இன மக்களின் இதர தலைவர்களுக்கும் எதிராகப் பிறப்பிக்கப்பட்டிருந்த தற்காலிக தடையாணையை மகத் சார்பு நீதிபதி விலக்கிக் கொண் டதைத் தொடர்ந்து, மகத் பொதுக் குளத்திலிருந்து தண்ணீர் எடுப் பதன் மூலம் தங்கள் உரிமையை நிலைநாட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் முடிவு செய்தனர். அவர்கள் முன்பொரு முறை மாநாடு நடத்திய இடத்தில் குளத்தை அணுக முயற்சித்தனர். ஆனால் ''உயர்'' சாதி இந்துக்களால் அவர்கள் மிகவும் முரட்டுத்தனமாக நடத்தப் பட்டனர்; சில சமார்கள் கடுமையாகக் காயமடைந்தனர். இந்தக் குளத்தில் தீண்டத்தகாதவர்கள் தண்ணீர் எடுக்கக்கூடாது என்ற ஐதீகம் காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வருகிறது என்றும், அப்படியிருக்கும்போது இதற்கு மாறாக அவர்கள் குளத்திலிருந்து தண்ணீர் எடுப்பது பொது சமாதானத்துக்கு உலை வைக்கும் என்றும் கூறி குற்றவியல் சட்டம் 144வது பிரிவின்படி இதற்குத் தடை விதிக்க வேண்டுமென இந்த உயர்ஜாதி இந்துக்களின் தலைவர்கள் மாவட்ட ஆட்சியரிடம் விண்ணப்பித்துக் கொண்டனர்.

மாவட்ட ஆட்சியர் இது விஷயத்தில் எத்தகைய நடவடிக் கையும் எடுக்க மறுத்துவிட்டார். இதன் பின்னர் அவர்கள் சார்பு நீதிபதியிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். ''தீண்டத்தகாதவர் களின்'' தலைவருக்கு எதிராக அவரிடமிருந்து ஒரு தடையாணை பெறுவதில் வெற்றி பெற்றனர். இதன் விளைவாக, உத்தேசிக்கப் பட்ட சத்தியாக்கிரகமும், ''உயர் சாதியினரின்'' விருப்பத்துக்கு மாறாக குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கும் பொருட்டு கூட்டமாக

அங்கு செல்லும் திட்டமும் கைவிடப்பட வேண்டியதாயிற்று. எனினும் இப்போது சார்பு நீதிபதி தடையாணையை ரத்து செய்து விட்டார்; ''இத்தகைய உரிமையைப் பயன்படுத்துவதற்கு எதிராகத் தலையிடுவது முற்றிலும் சட்டவிரோதமானதாக இருக்கும் என்பது தம்முன்னுள்ள சாட்சியத்திலிருந்து தெள்ளத்தெளிவாகத் தெரிகிறது'' என்று அவர் கூறினார். தனியார் சொத்து அல்லாததும், நகரசபைக்குச் சொந்தமானதுமான குளத்திலிருந்து எவரும் தண்ணீர் எடுப்பதைத் தடுக்க உயர் சாதியினர் எனப்படுவோருக்கு அறவே எந்த உரிமையும் இல்லை என்பதை சாதி பேதமற்ற எவருமே ஏற்றுக் கொள்வர். இந்த விஷயத்தில் ஸ்தல நகரசபை அதிகாரிகளுக்கு ஏதேனும் ஐயங்கள் இருந்தால் 1926 செப்டம்பர் 26 ஆம் தேதி பம்பாய் சட்ட மேலவை நிறைவேற்றிய தீர்மானம் அவற்றைப் போக்கிவிடும்; அனைத்து நகரசபைக் குளங்களும், கிணறுகளும், தர்மசாலைகளும் எத்தகைய பாகுபாடுமின்றி அனைத்துத் தரப்பு மக்களுக்கும் திறந்துவிடப்பட வேண்டும் என்று அத்தீர்மானம் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது. பொது நிதியிலிருந்து செய்து தரப்படும் வசதிகளை அனுபவிக்க ஒரு குறிப்பிட்ட தரப்பினருக்கு உரிமையில்லை என்று தாங்கள் ''உயர்சாதியினர்'' என்று இறுமாப்பு கொண்டுள்ளவர்கள் கூறலாம் என்பது நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒன்றாகும். இத்தகைய ஓர் எண்ணம் முளையிலேயே கிள்ளி யெறியப்பட வேண்டும்; இது ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களுக்கு மட்டுமின்றி உயர் சாதியினர் எனப்படுவோரின் நலன் களுக்கும்கூட ஏற்புடையதாகும். சக மனிதர்கள் நடத்தப்படும் இத்தகைய அவலமான முறை முற்றிலும் கீழ்த்தரமானதும், நியாய மற்றதுமாகும்; ''மேல்தட்டு'' சாதியினருக்கு மிகவும் விரும்பத் தகாத விளைவுகளை இது தோற்றுவிக்கும்; நீண்ட காலமாகத தங் களுக்கு நேர்மையற்ற முறையில் மறுக்கப்பட்டு வந்துள்ள மனித உரிமையியல் அரசியல் உரிமைகளை ஒடுக்கப்பட்ட இனத்தினர் ஒரு நாள் பெறுவர். அப்போது அவர்களது பழிவாங்கும் உணர்வுகள் தங்களது பழைய ஒடுக்குமுறையாளர்களுக்கு எதிராகத் திரும்பும்.

ஒடுக்கப்பட்ட வர்க்கத்தினரில் ஒரு பகுதியினரது அனுதாபமும் ஆதரவும் தேசிய இயக்கத்திற்கு இல்லாதிருப்பது தற்போதைய விரும்பத்தகாத நிலைமைகள் நிரந்தரமாக நீடிக்கக்கூடும் என்ப தற்கான ஓர் எச்சரிக்கையாகும். எனவே, பொதுக் குளத்திலிருந்து தண்ணீர் எடுப்பதற்குத் தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்டும் பொருட்டு டாக்டர் அம்பேத்கரும் அவரைச் சேர்ந்தவர்களும் ஓரிரு நாட்களில் மகதுக்குச் செல்லும்போது 'சாதி' இந்துக்கள் அவர்களை

எதிர்க்காதது மட்டுமின்றி உற்சாகமாக வரவேற்பார்கள் என்று நம்புகிறோம். இத்தகைய ஒரு நல்ல திருப்பம் தங்களது சக ஜீவன்களுக்கு குரூரமாக உண்டு பண்ணப்பட்ட காயங்களை ஆற்றுவதற்குப் பெரிதும் உதவும் என்று கருதுகிறோம்.

மஹத் உரிமையியல் நீதிமன்றத்தில் தீண்டத்தக்கவர்கள் தாக்கல் செய்த சாற்றுகை வழக்கை பிரதிவாதிகள் பயன்படுத்துவதைக் கட்டுப்படுத்தும் இடைக்கால தடையாணையை மாவட்ட நீதிபதி பிறப்பித்தார்.''[1].

''கொலாபா, மார்ச் 3.- பம்பாய் கிரானிக்கல் மார்ச் 2 தேதியிட்டுப் பின்கண்ட செய்ததியைப் பிரசுரித்தது:- பம்பாயில் பிப்ரவரி 26 ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை ஒரு கூட்டம் நடைபெற்று சுமார் 2000 பேர் கலந்து கொண்டனர். மஹத்தில் மீண்டும் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவது என்று முடிவு செய்யப்பட்டது. சத்தியாக்கிரகக் குழு விரைவில் கூடவிருக்கிறது, சத்தியாக்கிரகத்தை தொடங்குவதற்கான தேதி விரைவில் அறிவிக்கப்படும்.''[2].

## ''மஹத்தில் சத்தியாக்கிரகம் மீண்டும் ஆரம்பம்.....''

பத்தி 309 காண்க, மார்ச் 17 -, மஹத் சத்தியாக்கிரகம் மார்ச் 22 ஆம் தேதி மீண்டும் தொடங்கப்படும் என்று அண்மையில் பல செய்திகள் வந்தன; ஆனால் டாக்டர் அம்பேத்கர் இதனை மறுத்துள்ளார்; மீண்டும் சத்தியாக்கிரகம் தொடங்கு முன்னர் இரு வாரகால அறிவிப்பு தரப்படும் என்று அவர் உறுதியளித்துள்ளார்.''[3]

''488.பத்தி 52, கொலாபா, மார்ச் 24 - சௌகர் குளம் சம்பந்தமாக மகத் சார்பு நீதிபதி பிறப்பித்த ஆணைக்கு எதிராக செய்து கொள்ளப்பட்ட மேல் முறையீட்டில் குளம் சம்பந்தமான வழக்கில் இறுதி முடிவு வரும் வரை தீண்டத்தகாதவர்கள் குளத்தில் பிரவேசிப்பதைத் தடை செய்து தாணா மாவட்ட நீதிமன்றம் ஓர் உத்தரவு பிறப்பித்துள்ளது''.[4]

1. இண்டியன் நேஷனல் ஹெரால்ட், மார்ச் 6, 1928.
2. பம்பாய் இரகசியத் தகவல், 17, மார்ச் 1928, பத்தி 309.
3. மேற்படி., 31 மார்ச், 1928, பத்தி 428.
4. மேற்படி., 7 ஏப்ரல், 1928.

குளம் தங்களுக்குச் சொந்தமானது என்பதை சாதி இந்து மனுதாரர்கள் நிரூபிக்க முடியாததால் 1931 ஜூன் 8 ஆம் தேதி மகத் சார்பு நீதிபதி மாண்புமிகு வி.ஆர்.சராஃப் பிரதிவாதிகளான டாக்டர் அம்பேத்கருக்கும் ஏனையோருக்கும் ஆதரவாக தீர்ப்பு வழங்கினார். இவ்வாறு சௌதார் குளம் பொதுச் சொத்து என்றும், தீண்டத்தகாதவர்களும் அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் அறிவிக்கப்பட்டது.

சாதி இந்து மேல்முறையீட்டாளர்கள் இந்தத் தீர்ப்பை எதிர்த்து தாணா மாவட்ட நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர். இரண்டாவது துணை நீதிபதி மாண்புமிகு எஸ்.எம்.கோகணி 1933, ஜனவரி 30ஆம் தேதி பிரதிவாதிகளான டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கும் ஏனையோருக்கும் எதிரான வழக்கில் அவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்.

இதன்பின்னர் சாதி இந்து மேல்முறையீட்டாளர்கள் பம்பாய் உயர் நீதிமன்றத்தில் மீண்டும் மேல் முறையீடு செய்தனர். இந்த வழக்கு நான்கு ஆண்டுகாலம் நீடித்தது. இறுதியில் நீதிபதி புரூம்பீல்டும், நீதிபதி வாடியாவும் சாதி இந்துக்களின் மேல் முறையீட்டை 1937 மார்ச் 17 ஆம் தேதி தள்ளுபடி செய்தனர்; சௌதார் தங்களுக்குச் சொந்தமானது என்பதை அவர்களால், நிரூபிக்க முடியாது போனதே இதற்குக் காரணம்.

பம்பாய் உயர்நீதிமன்ற தீர்ப்பு வருமாறு:

## ''மேல்முறையீட்டாளரின் 462ஆம் எண் மேல்முறையீடு தீர்ப்பாணை''

நர்ஹரி தாமோதர் வைத்யா; மற்றும் ஏனையோர்
(முதலாவது வாதிகள் 2-6).... மேல்முறையீட்டாளர்கள்
எதிர்
டாக்டர் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர், கூட்டு நாடாளுமன்றக் குழு உறுப்பினர், லண்டன்; மற்றும் ஏனையோர்.
(முதலாவது பிரதிவாதிகள்)....

எதிர் மனுதாரர்கள், எஸ்.எம்.கைகினி அவர்களின் தீர்ப்புக்கு

எதிராக இரண்டாவது மேல்முறையீடு, தாணாவிலுள்ள இரண்டாவது துறை நீதிபதி, மேல்முறையீட்டு எண் 32, 1931.

திரு. வி.பி. வர்கர், மனுதாரர்களின் வழக்கறிஞர்,

பிரதிவாதி சார்பில் திரு.எஸ்.வி.குப்தே, வழக்கறிஞர், திரு. பி.ஜி. மோடக்.

17 மார்ச் 1937

முன்னிலை:- புரூம்பீல்ட் என்.ஜே.மற்றும் வாடியா ஜே.ஜே.

புரூம்பீல்டு என்.ஜே.யின் வாய்மொழித் தீர்ப்பு:-

மகத் நகரைச் சேர்ந்த சாதி இந்துக்கள் சார்பில் மேல் முறையீட்டாளர்கள் ''தீண்டத்தகாதவர்கள்'' எனப்படுவோரைப் பிரதிநிதித்துவப்படுத்தும் பிரதிவாதிகள் மீது வழக்கு தொடர்ந்துள்ளனர்; நகருக்கு அருகிலுள்ள சௌதார்குளம் தங்களுக்குச் சொந்தமானது என்றும், அதனைப் பயன்படுத்துவதற்குத் தங்களுக்கு மட்டுமே உரிமை உள்ளது என்றும், அதனைப் பயன்படுத்த பிரதிவாதிகளுக்கு உரிமை இல்லை என்றும், அதை பிரதிவாதிகள் பயன்படுத்தாதிருக்க தடையாணை பிறப்பிக்க வேண்டும் என்றும் அவர்கள் தங்கள் மனுவில் கோரியுள்ளனர். இந்த உரிமை கோரல் இப்போது வலியுறுத்தப்படவில்லை. நிலவருவாய் சட்டம் 37வது பிரிவின் படி குளம் அரசாங்கத்துக்குச் சொந்தம் என்பதும், இப்போது அது மாவட்ட நகராட்சிகள் சட்டம் 50வது பிரிவின்கீழ் மகத் நகராட்சியின் அதிகாரத்தின் கீழ் உள்ளது என்பதும் விசாரணையில் தெரிய வந்துள்ளது. மேலும், முகமதியர்களும் குளத்தைப் பயன்படுத்தலாம், பயன்படுத்தியும் வருகிறார்கள் என்கிறபோது சாதி இந்துக்கள் மட்டுமே அதைப் பயன்படுத்த வேண்டும், அவர்களுக்கு மட்டுமே அந்த உரிமை உண்டு என்பது ஏற்கத்தக்கதல்ல என்பது ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. எனினும் இந்தக் குளத்தைப் பயன்படுத்த தாங்கள் மட்டுமே உரிமைப் பெற்றிருப்பதாகவும், ''தீண்டத்தகாதவர்கள்'' இதிலிருந்து விலக்கப்பட்டிருப்பதாகவும், இது நினைவுக் கெட்டாத பழங்காலந் தொட்டுக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் வழக்கம் என்றும் சாதி இந்துக்கள் சார்பில் வாதிடப்படுகிறது.

குளத்தின் தண்ணீரை ''தீண்டத்தகாதவர்கள்''நீங்கலாக மற்றவர்கள் பயன்படுத்துவது நீண்டகாலமாக இருந்துவரும் ஒரு வழக்கம் என்பதை வாதிகள் நிரூபித்திருப்பதாக நீதிபதி உணர்கிறார் (நினைவுக்கெட்டாத காலம் முதல் என்று அவர் வருணிக்கவில்லை),

எனினும் வழக்கம் எத்தகைய சட்ட உரிமைகளையும் வழங்க முடியாது என்று அவர் கருதினார். ஏனென்றால் 'ஒரு பொதுக் குளத்தை வேறு எவரும் பயன்படுத்தாது ஒரு குறிப்பிட்ட இனத்தவர் மட்டுமே பயன்படுத்துவது அந்த இனத்துக்கு எத்தகைய சட்ட உரிமைகளையோ அல்லது உடைமை உரிமைகளையோ வழங்கி விடாது என்பது அவரது அபிப்பிராயம். 'தீண்டத்தகாதவர்களை' ஒதுக்கிவைக்கத் தங்களுக்குச் சட்டரீதியான உரிமை உண்டு என்பதை சாதி இந்துக்கள் நிரூபிக்கவில்லை என்பதை மேல்முறையீட்டில் துணை நீதிபதி உறுதி செய்தார். சர் சதாவ அய்யர் எதிர் வைத்திலிங்கா வழக்கில் வழங்கப்பட்ட தீர்ப்பை அவர் ஓரளவுக்குத் தமக்கு ஆதாரமாகக் கொண்டார். இந்த வழக்கின் விவரம் அதிகாரப் பூர்வமான அறிக்கைகளில் காணப்படவில்லை என்றாலும், 1913 எம்ஏடி.டபிள்யூ.என்.247 மற்றும் 18 இந்திய வழக்குகள் 979 என் பதில் காணப்படுகிறது; இந்த வழக்கம் நினைவுக் கெட்டாத பழங்காலத்தைச் சேர்ந்தது என்பது நிரூபிக்கப்படாததே அவரது முடிவுக்குப் பிரதான காரணம் என்று தோன்றுகிறது.

சௌதார் குளத்தை ஒரு சிறு ஏரி அல்லது ஒரு பெரிய மடு எனக் கூறலாம்; நகர்புற எல்லையில் நான்கு அல்லது ஐந்து ஏக்கர் பரப்பளவில் அது அமைந்துள்ளது. எல்லாப் பக்கங்களிலும் அதைச் சுற்றிலும் நகரசபை சாலைகள் அமைந்துள்ளன; அவற்றுக்கு அப்பால் சாதி இந்துக்கள் வசிக்கும் வீடுகள் (ஒரு சில முகமதியர் வீடுகளும்) உள்ளன. இந்த வீடுகளின் சொந்தக்காரர்களுக்கு பல இடங்களில் குளத்தின் விளிம்பில் துண்டு நிலங்கள் இருக்கின்றன; குளத்தில் இறங்கி தண்ணீர் எடுப்பதற்குப் படிக்கட்டுகளும், பக்கவாட்டுகளில் கட்டுமான வேலை செய்த மண்மேடுகளும் உள்ளன. அக்கம் பக்கத்தில் எங்கும் 'தீண்டத்தகாதவர்களின்' வீடுகள் எவையும் காணப்படவில்லை. இந்தக் குளம் எப்போது வெட்டப்பட்டது என்று தெரியவில்லை. இது ஏறத்தாழ 250 ஆண்டுகளுக்கு முன்னர் வெட்டப்பட்டிருக்கக்கூடும். அதன் தோற்றம் பற்றி எத்தகைய சான்றும் இல்லை. அது செயற்கையானதா என்பது கூடத்தெரியவில்லை. அது இயற்கையானதாக உருவாகி இருக்கக் கூடும். பின்னர் பழுதுபார்க்கப்பட்டுச் செம்மை செய்யப்பட்டிருக் கலாம் என்பது நீதிபதியின் கருத்து. நம்முன் உள்ள வாதத்தில் இது மறுக்கப்படவில்லை. எது எப்படியிருப்பினும் இது பல நூற்றாண்டு களுக்கு முந்தையதாக இருக்கக்கூடும். மழையின் மூலமும் சில ஊற்றுகள் மூலமும் இதற்குத் தண்ணீர் கிடைக்கிறது. மஹத் நகரத்தின் மக்கட் தொகை 7 ஆயிரம் முதல் 8 ஆயிரம் இருக்கும்.

இவர்களில் சுமார் 400 பேர் 'தீண்டத்தகாதவர்கள்'. இந்த நகரசபை 1865ல் அமைக்கப்பட்டது. இந்த நகரத்தின் ஆரம்பகால வரலாறு பற்றியோ, அதன் எல்லைகள் பற்றியோ, இப்பகுதியில் மக்கள் எப்போது குடியேறினார்கள் என்பது பற்றியோ வழக்கின் தாஸ்தா வேஜுகள் எவற்றிலும் குறிப்பிடப்படவில்லை.

வாதிகள் ஏராளமான சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்துவிட்டனர்; இவர்களில் பலர் மிகவும் வயதானவர்கள், இவர்களது நினைவுக்கு எட்டியவரை இந்தக் குளங்கள் முழுக்க முழுக்க சாதி இந்துக்களால்தான் (ஒரு சில முகமதியர்களாலும்) பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன; இவை தீண்டத்தகாதவர்களால் 1927 க்கு முன்னர் ஒருபோதும் பயன்படுத்தப்படவில்லை. 1927ல் ''தீண்டாமை'' தத்துவங்களுக்கு எதிராக 1 ஆம் எண் பிரதிவாதி ஓர் இயக்கம் நடத்தினார். அப்போது இந்தக் குளத்தில் தங்களை அனுமதிக்காததற்கு எதிர்ப்பு தெரிவித்து 'தீண்டத்தகாதவர்களில்' சிலர் குளத்துக்குச் சென்று ஆட்சேபம் தெரிவிக்கும் வகையில் தண்ணீர் குடித்தனர். அவர்கள் சாதி இந்துக்களால் தாக்கப்பட்டனர்; அடிக்கப்பட்டனர். அப்போது சட்ட நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன; இதனைத் தொடர்ந்தே இப்போதைய வழக்கு தொடுக் கப்பட்டது. இதற்கு முன்னர் 'தீண்டத்தகாதவர்கள்' இந்தக் குளத்தைப் பயன்படுத்த முயற்சி செய்ததற்கான எந்த ஆவணமும் இல்லை; அதேபோல், அவர்கள் ஒதுக்கப்படத் திட்டவட்டமாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டதற்கான சான்றுகளும் இல்லை. குளத்தை ஒரு தரப்பினர் பயன்படுத்தும்போது இன்னொரு தரப்பினர் பயன் படுத்தாத நிலைதான் இருந்தது. இது தற்செயலான காரணங்களால் இருக்கக்கூடும் என்பதில் ஐயமில்லை. எனினும் அண்டைக் காலம் வரை 'தீண்டாமை' சித்தாந்தம் பரஸ்பரம் ஏற்றுக்கொள்ளப்பட்டு வந்தது என்பதில் ஐயமில்லை. இது அண்மைக் காலம்வரை மறுக்கப்படவில்லை.

பிரிட்டிஷ் ஆட்சிக்கு முந்திய காலத்தில் தீண்டத்தகாத வர்கள் விலக்கிவைக்கப்பட்டதற்கான சான்று ஏதுமில்லை என்று துணை நீதிபதி கூறினார்; இதேபோல் மராத்திய ஆட்சிக் காலத்திலும் முசல்மான் ஆட்சிக் காலத்திலும் தீண்டத்தகாதோர் விலக்கி வைக்கப்பட்டிருந்ததற்கான சான்று ஏதுமில்லை. இதற்கான சான்றை இன்று உயிரோடிருப்போரின் நினைவுக்கு அப்பால் சென்று தேடிப்பிடித்துச் சமர்ப்பிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரு குறிப்பிட்ட காலம் வரை அல்லது அதற்கும் குறைந்த

காலம் வரை அனுபவ பாத்தியம் இருந்திருக்கிறது என்பதற்கு சான்று இல்லை என்றால், ஒரு குறிப்பிட்ட பழக்கம் நினைவுக் கெட்டாத காலத்திலிருந்து நடைமுறையில் இருந்து வந்திருப்பதை நீதிமன்றங்கள் சான்றாக எடுத்துக் கொள்கின்றன. இவ்வகையான சந்தர்ப்பத்தில் ஒரு தரப்பு இன்னொரு தரப்பை ஒதுக்கி வைத்து விட்டதற்கான சான்று தேவையில்லை. சாதி இந்துக்களின் அனுபவ பாத்தியதை மறுதலிக்கப்படாதவரை இத்தகைய சான்று அவசிய படாது. 'தீண்டாமை' சித்தாந்தம் நடைமுறையிலிருந்து வந்து ஏற்கப்படுமானால் அது எதிர்க்கப்படாது. ஆனால் உயிரோடிருப் பவர்களின் நினைவெல்லைக்குட்பட்ட காலத்தில் நடைமுறையி லிருந்ததாக நிரூபிக்கப்பட்ட 'தீண்டாமை' சிந்தாந்தம் சட்ட ரீதியாக நினைவெல்லைக்குட்பட்ட காலத்துக்கு முன்பிருந்து நடைமுறை யிலிருந்து வந்ததாக மட்டுமே கருதப்படும்; அத்தகைய நிலைமை கள் நிரந்தரமானவையாக, உறுதியானவையாகப் பாவிக்கப்படும்; அப்போது சான்று பிரகாரம் தெரிவிக்கப்பட்ட காலத்தில் நடை பெற்ற எதுவும் நினைவுக்கெட்டாத காலத்தில் நடைபெற்றதாக கருதப்படும். இங்குதான் வாதிகளின் வழக்கு முறிபடுவதாகக் கருதுகிறோம். நிலைமை ஒரே மாதிரியாக இருக்கும்வரை, சாதி இந்துக்களின் வீடுகள் குளத்தைச் சுற்றி இருக்கும் வரை (குளம் நகரத்தின் எல்லைப் பகுதிகளில் இருப்பதால், அதைச் சுற்றியுள்ள நிலத்தில் குடியேற்றம் கணிசமாக விஸ்தரிக்கப்படாதவரை அங்கு யாரும் குடியேற மாட்டார்கள்) அங்கு நடைமுறை இப்போது இருப்பது போலவே இருக்கும் என்று தாராளமாக ஊகிக்கலாம். எனினும் இந்த வழக்கத்தை நிலைநாட்டும் அளவுக்கு அங்கு நிலைமைகள் ஒரே மாதிரியாக இருந்தன என்று ஊகிப்பது சரியானதாக இருக்காது. கொங்கனுக்கு பல்வகை வேறு பாடுடைய வரலாறு உண்டு. இங்குள்ள பெரிய நீர்நிலையின் மீது தற்காலத்தில் சாதி இந்துக்கள் பிரத்தியேகமான முறையில் ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கக்கூடும் என்பது சாத்தியமல்ல.

இது சம்பந்தமாக மாரியப்பா எதிர் வி.வைத்தியலிங்காவில் சர் சதாசிவ அய்யர் தெரிவித்துள்ள கருத்துக்கள் மிகவும் பயனுள்ள வையாக உள்ளன. மனுவிலிருந்து பின்வரும் கருத்தை அவர் எடுத்துரைக்கிறார்: ''ஒரு பசு தனது தாகத்தைத் தணிப்பதற்காகப் பயன்படுத்தும் தண்ணீர் நல்ல வாசனையும், நிறமும், சுவையும் கொண்டதாக இருக்கும்.'' சாஸ்திரங்களில் எழுதப்பட்டுள்ள வற்றை அவர் சுட்டிக்காட்டுகிறார். ஆறுகள், குளங்கள், மற்றும் இதர நீர்நிலைகளை வேறுபடுத்திக் காணுங்கள்; இவை எல்லாம்

எளிதில் மாசுபடக்கூடியவை, அவற்றை உரிய காலத்தில் சுத்தம் செய்வதும், சுற்றுச் சூழலும், தண்ணீரின் இயக்கமும் மிகவும் சிரமமாக இருக்கும். ஒரு பெரிய திறந்த குளத்தில் தண்ணீர் மாசுபடுவதைத் தடுக்க எத்தகைய விரிந்த பரந்த முன்னேற்பாடும் தேவையில்லை என்று இந்து சமயத்தின் தலைவர்கள் கூறுவதை நீதிபதி எடுத்துக் காட்டுகிறார். மகதில் உள்ள சௌதார் குளத்தைவிட ஒரு கிராமத்தில் கணிசமான அளவுக்குச் சிறிதாக உள்ள குளத்தைப் பற்றியே அவர் இங்கு குறிப்பிட்டார். எனவே, 'தீண்டாமை' சித்தாந்தம் மனுதாரர்களின் வழக்குக்கு மகத்தான ஆதரவு தரும் அளவுக்குச் செல்லுவதாகத் தோன்றவில்லை; குளத்தைச் சுற்றிலும் சாதி இந்துக்களின் வீடுகள் கட்டப்படும்வரை தண்ணீரைப் பிரத்தியேகமாகப் பயன்படுத்தும் உரிமை பெறப்படுமா என்பது ஐயத்துக்குரியதாகவே உள்ளது.

இது போன்ற தண்ணீர் உள்ள இடங்களை 'தீண்டத் தகாதவர்கள்' பயன்படுத்தக்கூடாது என்ற கோரிக்கை சம்பந்தமாக நமது கவனம் ஈர்க்கப்பட்டிருப்பது இதுவே முதன் முறையாகும். ஆனந்ரேவ் என். சங்கர் (1883), ஐ.எல்.ஆர்.,7 பிஔஎம்.323, சங்கரலிங்கா வி.ராஜேஸ்வரா (1908) ஐ.எல்.ஆர்., 31 எம்ஏடி.236, பி.சி., முதலான ஆலயப்பிரவேச வழக்குகள் உண்மையில் ஒரேமாதிரியானவை அல்ல. ஏனைய சாதியினரும் வகுப்பினரும் நீண்டகாலமாகக் கடைபிடித்துவந்துள்ள நடைமுறை மேல் சாதியினர் தண்ணீரைப் பிரத்தியேகமாகப் பயன்படுத்தலாம் என்ற ஊகம் தோன்றுவதற்கு வழிவகுத்திருக்கக் கூடும் என்பது இயல்பே; இதன் காரணமாக தாங்கள் வழிபடுவதற்கென ஒரு குறிப்பிட்ட கோவில் உள்ளது என்பதை மெய்ப்பிக்க வேண்டியவர்களின் பட்டியலில் தாங்களும் அடங்குவோம் என்பதை நிரூபிக்க வேண்டிய சுமை ''தீண்டத்தகாதவர்களுக்கு'' ஏற்பட்டிருக்கக்கூடும். இத்தகையதோர் வழக்கத்துக்கு சட்டப்பூர்வமான தோற்றுவாய் இருக்கக்கூடும் என்ற ஊகம் இங்கு எழுவதாகக் கூறுவதற்கில்லை. எனவே மனுதாரர்கள் தாங்கள் கூறும் காலம்காலமான வழக்கத்தை நிரூபிக்கத் தவறிவிட்டார்கள் என்று துணை நீதிபதி கூறுவதை நாம் ஏற்றுக் கொள்கிறோம். இதில் அவர்கள் வெற்றி பெற்றிருப்பார்களேயானால் இந்த வழக்கம் நியாயமற்றதா அல்லது பொதுஜனக் கொள்கைக்கு எதிரானதா என்பதைப் பரிசீலிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கும் (கறாராகக் கூறுவதானால் கீழ் நீதிமன்றங்களில் இவ்வாறு வாதிடப்படவில்லை). சௌதார் குளம் நகரசபையிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதற்கான

சட்ட விளைவைப் பரிசீலிக்க வேண்டிய அவசியம் நிச்சயம் ஏற்பட்டிருக்கக்கூடும்; அதேபோல் சட்டப்படியான உரிமையாளர் ஒரு தரப்பினராக இல்லாத இந்த வழக்கில் மனுதாரர்களுக்கு ஏதேனும் நிவாரணம் வழங்க வேண்டுமா என்பதும் பரிசீலிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கக்கூடும். ஆனால் இந்த வழக்கு சம்பந்தமாக இந்தப் பிரச்சினைகள் குறித்துத் தீர்மானிக்க வேண்டிய அவசியம் இல்லாததாலும், இவை குறித்து மிகவும் முழுமையாகவும், பயனுள்ள முறையிலும் விவாதிக்கப் படாததாலும் இதில் எத்தகைய கருத்தையும் கூற நாம் விரும்ப வில்லை.

மேல் முறையீடு செலவு தொகையுடன் தள்ளுபடி செய்யப் படுகிறது.

பம்பாய் உயர்
நீதிமன்றத்தின் முத்திரை
பம்பாய்.

நீதிமன்றத்தின் ஆணைப்பிரகாரம்
ஒப்பம்/- ஆர்.எஸ்.பவ்தேகர்,
பதிவாளர்
ஒப்பம்/-
துணைப் பதிவாளருக்காக''
ஜூன் 28, 1960.[1]

நீதிமன்ற மேல் முறையீட்டுத் தரப்பின்
தகுதிச் சான்று அளிக்கப்பட்ட நகல்
பம்பாய்.

''இழந்த உரிமைகளை இறைஞ்சி மன்றாடியோ அல்லது அவற்றைப் பறித்துக் கொள்பவர்களின் மனச்சான்றுகளுக்கு வேண்டுகோள் விடுத்தோ பெற முடியாது; இடைவிடாத உக்கிரமான போராட்டத்தின் மூலம்தான் அவற்றை ஈட்ட முடியும் என்ற டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் சொற்கள் எவ்விதம் நூற்றுக்கு நூறு உண்மை என்பதை மகத் சத்தியாக்கிரகம் மெய்ப்பித்துள்ளது



1. கயர்மோட், தொகுதி 3, பக்கங்கள் 258-263.

# 1

# எனக்குத் தாயகம் இல்லை

1930 ஜூலை மூன்றாம் வாரம் வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடருக்கு பிரதிநிதிகளின் பெயர்கள் அறிவிக்கப்பட்டன. லண்டனில் நடைபெறும் மாநாட்டில் கலந்து கொள்ளுமாறு டாக்டர். பி.ஆர்.அம்பேத்காரும் மகாத்மா காந்தியும் அழைக்கப்பட்டிருந்தனர். இந்த வட்டமேசை மாநாட்டில் மகாத்மா காந்தி கலந்து கொள்வாரா என்பது இன்னமும் தீர்மானிக்கப் படாமல் இருந்தது. எனவே, பம்பாயில் மகாத்மா காந்தி தங்கியிருந்த மணிபுவனத்தின் மீதே அனைவரின் கண்களும் பதிந்திருந்தன. டாக்டர் அம்பேத்கர் எத்தகைய கோரிக்கைகளை முன்வைப்பார் என்பதைத் தெரிந்துகொள்ள காந்திஜி விரும்பினார். எனவே, காந்திஜி அம்பேத்கருக்கும் பின்வரும் கடிதத்தை எழுதினார்.

''அன்புள்ள திரு. அம்பேத்கர்,

உங்களைச் சந்திப்பதற்கு இரவு 8 மணிக்கு வருகிறேன். அதற்கான நேரத்தை ஒதுக்குவீர்கள் என்று நம்புகிறேன். நீங்கள் இங்கு வருவதற்கு சௌகர்யப்படவில்லை என்றால் உங்கள் இடத்துக்கு நானே வருகிறேன்.

பம்பாய்
6.8.31

உங்கள் மனமார்ந்த
எம்.கே.காந்தி''[1]

''டாக்டர் அம்பேத்கர் அப்போதுதான் சாங்கிலியிலிருந்து திரும்பியிருந்தார்; அவருக்குக் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது. இரவு 8 மணிக்கு காந்தியின் இருப்பிடத்துக்குத் தாமே வருவதாக அவர் பதில் எழுதினார். ஆனால் அன்று மாலை அவருக்கு காய்ச்சல் 106 டிகிரிக்கு அதிகரித்துவிட்டது; எனவே, காய்ச்சல் குறைந்ததும் வருவதாக டாக்டர் அம்பேத்கர் தகவல் அனுப்பிவிட்டார்.

அவ்வாறே, காந்தியைச் சந்திப்பதற்காக 1931 ஆகஸ்டு 14 ஆம் தேதி பிற்பகல் 2 மணிக்கு அம்பேத்கர் மணிபுவனம் சென்றார்.

1. ரத்நாகர் கன்வீர், அம்பேத்கார்-காந்தி : டீன் முலகதி (மராத்தி) பக்கம். 9.

அவருடைய சகாக்களான தியோராவ் நாய்க், ஷிவ்தர்கர், பிரதான், பாவ்ராவ் கெய்க்வாட் மற்றும் கத்ரேகர் ஆகியோர் அவருடன் சென்றனர். மூன்றாவது மாடிக்குச் செல்லும்படி டாக்டர் அம்பேத்கருக்குக் கூறப்பட்டது. காந்தி சில பழங்களைத் தின்ற வண்ணம் தம்முடைய கட்சி சகாக்களுடன் மும்முரமாக உரையாடிக் கொண்டிருந்தார். டாக்டர் அம்பேத்கரும் சகாக்களும் காந்திக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுக் கம்பளத்தில் அமர்ந்தனர்.

முஸ்லீம்கள் அல்லாத, ஐரோப்பியர்கள் அல்லாத தலைவர்களுடனும் பிரதிநிகளுடனும் தமக்கே உரிய முறையில் நடந்து கொள்ளும் தோரணையில் காந்தி முதலில் கணநேரம் டாக்டர் அம்பேத்கரை ஏறிட்டுப்பாராது குமாரி ஸ்லேடுடனும் ஏனையோருடனும் மும்முரமாக அளவளாவி உரையாடிக் கொண்டிருந்தார். காந்தி இன்னும் சிறிது நேரம் இந்த அலட்சியப் பேக்கைக் காட்டியிருப்பாரேயானால் மோதல் வெடித்திருக்கும். நல்ல வேளையாக காந்தி அம்பேத்கரைத் திரும்பிப் பார்த்தார்; அவரைப் பார்ப்பது காந்திக்கு இதுவே முதல் தடவை. சேம நலத்தை விசாரித்த பிறகு பிரதான விஷயத்துக்கு வந்தார்.

**காந்தி** : நல்லது, டாக்டர், இந்த விஷயத்தில் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

**அம்பேத்கர்:** உங்கள் கருத்துகளைத் தெரிவிப்பதற்காக என்னைக் கூப்பிட்டு அனுப்பினீர்கள். தயைகூர்ந்து நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள் அல்லது என்னிடம் சில கேள்விகளைக் கேளுங்கள், அவற்றிற்கு நான் பதிலளிக்கிறேன்.

காந்தி : (அம்பேத்கரைக் கூர்ந்து பார்த்தபடி) என் மீதும் காங்கிரஸ் மீதும் உங்களுக்குச் சில மனக்குறைகள் இருப்பதாக அறிகிறேன். என் பள்ளிக்கூட நாட்கள் முதலே - அப்போது நீங்கள் பிறந்துகூட இருக்க மாட்டீர்கள்- தீண்டத்தகாதவர்களின் பிரச்சினை குறித்து யோசித்துக் கொண்டே இருக்கிறேன். இந்தப் பிரச்சினையை காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் இடம் பெறச் செய்வதற்கும், காங்கிரஸ் மேடைகளில் இது குறித்துப் பேசச் செய்வதற்கும் நான் எவ்வளவு பெரும் முயற்சி மேற்கொண்டு வந்திருக்கிறேன் என்பது அநேகமாக உங்களுக்குத் தெரிந்திருக்கக்கூடும். காங்கிரஸ் தலைவர்கள் இதனை எதிர்த்தனர்; இது மதம் மற்றும் சமூகப் பிரச்சினை சம்பந்தப்பட்டது, இதனை அரசியலில் கலக்கக்கூடாது என்று வாதிட்டனர். அது மட்டுமல்ல. தீண்டத்தகாதவர்களின்

முன்னேற்றத்திற்காக இருபது லட்சம் ரூபாய் வரை காங்கிரஸ் செலவிட்டுள்ளது. இவ்வாறு எல்லாம் இருக்கும்போது உங்களைப் போன்றவர்கள் என்னையும் காங்கிரசையும் எதிர்ப்பது வியப்பிலும் வியப்பாக இருக்கிறது. நீங்கள் மேற்கொண்டுள்ள நிலையை நியாயப்படுத்த நீங்கள் ஏதேனும் கூற விரும்பினால், தாராளமாக அவ்வாறு செய்யலாம்.

**அம்பேத்கர்** : தீண்டத்தகாதவர்களின் பிரச்சினை குறித்து நான் பிறப்பதற்கு முன்பே நீங்கள் சிந்திக்க ஆரம்பித்துவிட்டீர்கள் என்பது உண்மைதான், மகாத்மாஜி, வயதானவர்கள் அனைவரும் வயதுப் பிரச்சினையை வலியுறுத்திக் கூற விரும்புவார்கள் என்பது மெய்யே. மேலும், நீங்கள் எடுத்துக் கொண்ட முயற்சியின் காரணமாக இந்தப் பிரச்சினையைக் காங்கிரஸ் கவனத்தில் எடுத்துக் கொண்டது என்பதிலும் ஐயமில்லை. தீண்டத்தகாதவர்களின் மேம்பாட்டிற்காக இருபது லட்சம் ரூபாய்க்கும் அதிகமாக காங்கிரஸ் செலவிட்டுள்ளது என்றும் கூறினீர்கள். இதெல்லாம் வீண் என்று நான் கூறுகிறேன். இது போன்ற பக்க பலத்துடனும், உதவியுடனும் என் மக்களின் கண்ணோட்டத்திலும், பொருளாதார நிலைமைகளிலும் வியக்கத் தக்க மாற்றங்களை என்னால் ஏற்படுத்தி இருக்க முடியும். அவ்வாறு நேர்ந்திருக்குமானால் முன்னரே என்னை நீங்கள் பார்த்திருக்க வேண்டிய அவசியம் உண்டாகி இருக்கும். ஆனால் நான், அடித்துக் கூறுகிறேன்: காங்கிரசுக்கு தான் கூறுபவற்றில் உள்ளார்ந்த நேர்மை இல்லை. அவ்வாறு நேர்மை இருந்திருக்குமானால், ஒருவர் காங்கிரசில் உறுப்பினராவதற்கு கதர் அணிவது அவசியம் என்பது போல், தீண்டாமையை ஒழிப்பதும் அவசியம் என்று அது அறிவித்திருக்கும். தீண்டத்தகாத பெண்கள் அல்லது ஆண்களைத் தங்கள் வீடுகளில் வேலைக்கமர்த்திக் கொள்ளாத எவரும், அல்லது தீண்டத்தகாத மாணவனைத் தங்கள் இல்லங்களில் ஊட்டி வளர்க்காத எவரும், அல்லது குறைந்த பட்சம் வாரம் ஒரு முறையாவது தீண்டத்தகாத மாணவனுடன் வீட்டில் உணவு அருந்தாத எவரும் காங்கிரசில் உறுப்பினராவதற்குத் தகுதியற்றவர்கள் என்று அறிவித்திருக்க வேண்டும். இத்தகைய ஒரு நிபந்தனை கடைப்பிடிக்கப் பட்டிருக்குமானால் தீண்டத்தகாதவர்கள் ஆலயப் பிரவேசம் செய்வதை மாவட்ட காங்கிரஸ் கமிட்டித் தலைவர் எதிர்க்கும் இழிவினும் இழிவான அவலக்காட்சியைக் காணும் துருதிர்ஷ்ட மான நிலைமையை நீங்கள் தவிர்த்திருக்க முடியும்!

காங்கிரசுக்கு எல்லலையற்ற வலு வேண்டும், எனவே, இத்தகைய நிபந்தனையை விதிப்பது விவேகமல்ல என்று நீங்கள்

கூறலாம். அவ்வாறாயின் கோட்பாடுகளைவிட பலத்திலேயே காங்கிரஸ் கண்ணும் கருத்துமாக இருக்கிறது என்ற உண்மையைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இதுதான் உங்கள் மீதும் காங்கிரஸ் மீதும் நான் சுமத்தும் குற்றச்சாட்டு. பிரிட்டிஷ் அரசாங்கம் எத்தகைய மனமாற்றத்தையும் காட்டவில்லையே என்று நீங்கள் கூறுகிறீர்கள். எங்கள் பிரச்சினை சம்பந்தமாக இந்துக்கள் எத்தகைய மனமாற்றத்தையும் காட்டவில்லை என்று நான் கூறுகிறேன். அவர்கள் உடும்புப் பிடிவாதமாக இருக்கும்வரை நாங்கள் காங்கிரசையும் சரி, இந்துக்களையும் சரி நம்பமாட்டோம், சுய உதவியில், சுயமரியாதையில் நாங்கள் நம்பிக்கை வைத்துள்ளோம். மாபெரும் தலைவர்களையும் மகாத்மாக்களையும் நம்ப நாங்கள் தயாராக இல்லை, இதனை ஒளிவு மறைவின்றி மனம் விட்டுக் கூறுகிறேன். கண நேரத்தில் தோன்றி மறையும் புனையுறுத்தோற்றம் போல் மகாத்மாக்கள் தூசியைக் கிளப்புகிறார்களே தவிர, இலக்குகளைக் குறிவைப்பதில்லை. காங்கிரசார் எங்கள் இயக்கத்தை ஏன் எதிர்க்கிறார்கள்? எனக்கு துரோகி என்று எதற்காக முத்திரை குத்துகிறார்கள்?

டாக்டர் அம்பேத்கர் இப்போது பெரிதும் கிளர்ச்சியடைந்தார். அவரது முகம் சிவந்தது; கண்கள் கனலொளி பொழிந்தன. ஒரு கணம் மௌனமாக இருந்தார்; பின்னர் தொடர்ந்து கடுமையான, கோபாவேசமிக்க தொனியில் பேசினார்.

**அம்பேத்கர் :** காந்திஜி, எனக்குத் தாயகம் இல்லை,

**காந்தி :** (அதிர்ச்சியடைந்து குறுக்கிட்டுப் பேசினார்): உங்களுக்குத் தாயகம் இருக்கிறது. வட்டமேசை மாநாட்டில் நீங்கள் ஆற்றிய பணி குறித்து எனக்குக் கடைத்துள்ள தகவல்களின்படி நீங்கள் அப்பழுக்கற்ற தேசபக்தர் என்பதை நான் அறிவேன்.

**அம்பேத்கர்:** எனக்குத் தாயகம் இருப்பதாக நீங்கள் கூறினீர்கள். எனக்குத் தாயகம் இல்லை என்று மீண்டும் கூறுகிறேன். நாய்களையும், பூனைகளையும்விட நாங்கள் மோசமாக இழிவினும் இழிவாக நடத்தப்பட்டு வரும்போது, குடிப்பதற்குத் தண்ணீர் கூடக் கிடைக்காதபோது, இந்த நாட்டை என் சொந்தத் தாயகம் என்றும், இந்து மதத்தை எனது சொந்த மதம் என்றும் எப்படி நான் கூறமுடியும்? சுயமரியாதையுள்ள தீண்டத்தகாதவன் எவனும் இந்த நாட்டைக் குறித்து பெருமையும் பெருமிதமும் கொள்ள முடியாது. இந்த நாடு எங்களுக்கு இழைத்துவரும் இன்னல்

இடுக்கண்களும், துன்ப துயரங்களும், கொடுமைகளும் குரோதமும் எண்ணிறந்தவை; தெரிந்தோ தெரியாமலோ இந்த நாட்டுக்குத் துரோகம் இழைக்கும் கொடும் குற்றத்துக்கு நாங்கள் ஆளாவோமானால், இந்தக் குரூர செயலுக்கான முழுப் பொறுப்பும் உங்களுடையதாகவே இருக்கும். ஒரு துரோகி என்று நான் பழிசுமத்தப்படுவதற்காக வருத்தப்படவில்லை; ஏனென்றால் என் செயலுக்கான முழுப் பொறுப்பும் துரோகி என்று எனக்குப் பட்டம் சூட்டும் நாட்டையே சேரும். நீங்கள் கூறியதுபோல் இந்த நாட்டின் தேசபக்த லட்சியத்துக்கு உதவக்கூடிய அல்லது பலனளிக்கக் கூடிய தேசிய சேவை எதையேனும் செய்திருக்கிறேன் என்றால் மாசுமறுவற்ற எனது மனச்சான்றுதான் அதற்குக் காரணமே தவிர என்னுள் பொதிந்துள்ள எந்த தேசபக்த உணர்வுகளும் காரணமல்ல. இந்த நாட்டில் காலம் காலமாக, ஆண்டாண்டாக அடக்கி ஒடுக்கப்பட்டுவரும், மிதித்துத் துவைக்கப்பட்டுவரும் என்னுடைய மக்களுக்கு மனித உரிமைகளைப் பெற்றுத்தரும் என் முயற்சியில் இந்த நாட்டுக்கு நான் ஏதேனும் தீங்கு செய்தேன் என்றால் அது பாவமாகாது; அதேபோல் என் செயல்பாட்டின் மூலம் இந்த நாட்டுக்கு எந்தத் தீங்கும் நேரிடவில்லை என்றால் அதற்கு என் மனச்சான்றே காரணமாக இருக்கும்; எனது மனச்சான்றின் உந்துதல்கள் காரணமாக இந்த நாட்டுக்கு எத்தகைய தீங்கும் நேராத வகையில் என் மக்களுக்கு மனித உரிமைகளைப் பெற்றுத்தர அயராது, சோராது பாடுபட்டு வருகிறேன்.

சூழ்நிலைமை கடுமையானதாயிற்று, முகங்களின் வண்ணங்கள் மாறி, காந்தி அமைதி இழந்தவரானார். டாக்டர் அம்பேத்கரின் பேச்சுக்குப் பதிலடி கொடுக்க விரும்பினார். இச்சமயம் இந்தப் பேட்டிக்குப் பெரிதும் சம்பந்தப்பட்ட கேள்வியை அவரிடம் டாக்டர்அம்பேத்கர்கேட்டார்.

**அம்பேத்கர்** : முஸ்லீம்களும் சீக்கியர்களும் தீண்டத்தகாதவர்களைவிட சமூக ரீதியிலும் அரசியல் ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் முன்னேறியவர்களாக இருக்கின்றனர் என்பதை அனைவருமே அறிவர். வட்டமேசை மாநாட்டின் முதல் கூட்டத் தொடர் முஸ்லீம்களின் கோரிக்கைகளுக்கு அரசியல் அங்கீகாரம் அளித்தது; அது மட்டுமன்றி அவர்களுக்கு அரசியல் பாதுகாப்புகள் அளிக்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது. அவர்களது கோரிக்கைகளுக்கு காங்கிரஸ் இணக்கம் தெரிவித்தது. தாழ்த்தப்பட்ட மக்களின் அரசியல் உரிமைகளுக்கும் வட்டமேசை மாநாட்டின் முதல்

கூட்டத்தொடர் அங்கீகாரம் வழங்கிற்று; அவர்களுக்கு அரசியல் பாதுகாப்புகளும் போதிய பிரதிநிதித்துவமும் வழங்க வேண்டும் என்றும் பரிந்துரை செய்தது. எங்களைப் பொறுத்தவரையில் இது தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அனுகூலமானது, உங்கள் கருத்து என்ன?

**காந்தி** : தீண்டத்தகாத மக்களை இந்துக்களிடமிருந்து அரசியல் ரீதியில் பிரிப்பதை நான் எதிர்க்கிறேன். இது முற்றிலும் தற்கொலைக்கு ஒப்பானதாகும்.

**அம்பேத்கர்** (எழுந்து நின்றவாறு) : ஒளிவு மறைவின்றி உங்கள் கருத்தை வெளயிட்டமைக்கு நன்றி. இந்த ஜீவாதாரமான பிரச்சினையைப் பொறுத்தவரையில் நமது நிலை என்ன என்பதை இப்போது தெரிந்து கொண்டது நல்லது. இப்போது உங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன். *

இவ்வாறு கூறிவிட்டு டாக்டர் அம்பேத்கர் அந்த மண்டபத்தை விட்டு வெளியேற்றினார். தமது முழு வலிமையையும் கொண்டு இந்தப் பிரச்சினைக்காக போராடுவது என்றும், அடக்கி ஒடுக்கப்பட்ட தமது மக்களுக்கு மனித உரிமைகளைப் பெற்று தருவது என்றும் தீவிர உறுதி பூண்டிருப்பதை அவரது முகம் தெள்ளத்தெளிவாக வெளிப்படுத்திற்று.

பேட்டி இவ்வாறு கடுகடுப்பான சூழ்நிலைமையில் முடிவடைந்தது. காந்தி இந்திய அரசியலின் பிதாமகர், சர்வாதிகாரி, இந்திய வெகுஜனங்களின் முடிசூடா மன்னர்; தமது திகைப்பும் வியப்புமூட்டும் செயல்பாடுகளின் மூலம் மக்களை ஈர்த்தவர். இத்தகைய மகானுபாவரின் கேள்விகளுக்குப் பதிலளிப்பது நிரந்தர வெறுப்பை, அழியாத கசப்பைத் தோற்றுவிக்கக் கூடியதாக இருந்தது. அதிலும் ஓர் இந்துத் தலைவர் இவ்வாறு செய்வது காந்தியின் கற்பனைக்கு எட்டாததாக இருந்தது. ஆனால் என்ன செய்வது? பகடைக்காயை உருட்டியாகிவிட்டது. எதிர்ப்பு என்ற தீ பற்றவைக்கப்பட்டு விட்டது. இந்தப் பேட்டி காந்திக்கும் அம்பேத்காருக்கும் இடையே போர் தொடங்கிவிட்டதை முரசறைந்து தெரிவிப்பதாக இருந்தது.

---

* நவயுக் - அம்பேத்கர் சிறப்பிதழ், ஏப்ரல் 13, 1947.

எனினும் அம்பேத்கர் ஒரு ஹரிஜன் அல்ல என்று காந்தி எண்ணியது வியப்பூட்டுவதாக இருந்ததை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். அம்பேத்கர் யாரோ ஒரு பிராமணர், ஹரிஜனங்களின் நலனில் ஆழ்ந்த அக்கறை கொண்டவர், எனவேதான் வரம்பு கடந்து உணர்ச்சியோடு பேசுகிறார் எனறே காந்தி லண்டன் செல்லும் வரை எண்ணினார்.

அவர்களது சந்திப்பைப் பற்றிய பத்திரிகை செய்தியை கீழே தந்துள்ளோம்.

## டாக்டர் அம்பேத்கர் திரு. காந்தியைச் சந்திக்கிறார்

தாழ்த்தப்பட்ட இன மக்களின் தலைவரான டாக்டர் அம்பேத்கர் வெள்ளிக்கிழமை பிற்பகலில் திரு.காந்தியைச் சந்தித்துப் பேசினார். தாழ்த்தப்பட்ட இன மக்களுக்காக காங்கிரஸ் இதுவரை உருப்படியாக எதுவும் செய்யவில்லை, மக்களின் பிரதிநிதி என்ற முறையில் தம் பக்கம் தாழ்த்தப்பட்ட இன மக்கள் உறுதியாக நிற்கிறார்கள் என்று கற்பனை செய்துகொண்டு காந்தி அந்த மாயையில் மூழ்கிப் போயிருக்கிறார் என்பதை அவர் மனத்தில் பதிய வைக்க டாக்டர் அம்பேத்கர் முயன்றார். தாழ்த்தப்பட்ட இன மக்களுக்காக காங்கிரஸ் இதுவரை எதுவும் செய்யவில்லை, இப் போதும் எதுவும் செய்துகொண்டிருக்கவில்லை என்பதை காந்தி ஏற்கவில்லை. இவ்வாறு காந்தியை மனமாற்றம் அடையச் செய்யவோ அல்லது அவரால் தான் மனமாற்றம் அடைய முடியாமலோ டாக்டர் அம்பேத்கர் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றார்'' **

## திரு. காந்தியின் தவறு குறித்து அம்பேத்கர்

தாழ்த்தப்பட்ட இன மக்களின்பால் திரு.காந்தி கொண்டுள்ள போக்கு குறித்து முந்தைய தினம் அவருடன் மனம் திறந்து உரையாடிய தாழ்த்தப்பட்ட இன மக்களின் பிரதிநிதியான

* மகேந்திர தேசாயின் நாட்குறிப்பு, தொகுதி I, நவஜீவன் பிரசுராலயம், பக். 52.
** டைம்ஸ் ஆப் இந்தியா, ஆகஸ்டு 15, 1931.

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் **டைம்ஸ் ஆப் இண்டியா** நிருபருக்கு அளித்த பேட்டியில் பின்வருமாறு கூறினார்:

''பர்தோலியின் நலன்களுக்கு இந்தியாவின் நலன்களைவிட மிகுந்த முக்கியத்துவம் அளிப்பதும், அதன் காரணமாக இங்கிலாந் துக்குச் சென்று வட்டமேசை மாநாட்டு நடவடிக்கைகளில் பங்கு கொள்ள மறுப்பதும் மடமையிலும் மடமையான செயலாக எனக்குத் தோன்றுகிறது. கிராம அதிகாரிகளின் சின்னஞ்சிறு அத்து மீறல்களைப் பற்றி அளவுக்கு அதிகமாக அலட்டிக்கொள்வதையும் அதே சமயம் பெரிய பிரச்சினை குறித்து உதாசீனப் போக்கைக் கைக்கொள்வதையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏனென்றால் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவது இதே அதிகாரிகள் மீது நாம் கட்டுப்பாடு செலுத்த வழிவகுக்கும்.''

முந்தைய தினம் தமக்கு அளித்த பேட்டியில் திரு.காந்தி கூறிய ஒரு குறிப்பிட்ட பதில் டாக்டர் அம்பேத்கருக்கு நன்கு நினைவி லிருந்தது. வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொள்ளச் செல்லும் அவர் புதிய அரசியலமைப்புச் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு அரசியல் அங்கீகாரம் அளிக்கப்பட வேண்டும், ஏனைய சிறுபான்மை இனத்தவர்களைப் போன்றே இவர்களுக்கும் சட்ட மன்றங்களில் அரசியல் பாதுகாப்புகளும் போதிய பிரதிநிதித்து வமும் வழங்கப்பட வேண்டும் என்று மாநாடு முடிவு செய்தால் அதனை அவர் ஏற்கத் தயாராக இருக்கிறாரா என்று திரு.காந்தியிடம் தாம் வினவியதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். இதற்குப் பதிலளித்த திரு.காந்தி இந்தக் கருத்தை ஏற்க மறுத்துவிட்டார், வட்டமேசை மாநாட்டுக்குத் தாம் சென்றால், மாநாடு அது விரும் பியதைச் செய்யலாம் என்றும், ஆனால் தாழ்த்தப்பட்ட இன மக்களைப் பொறுத்தவரையில் இந்த யோசனை முற்றிலும் தற் கொலைக்கு ஒப்பானதாகவே இருக்கும் என்றும் தாம் கருதுவதாக அவர் கூறினார் என்று டாக்டர் அம்பேத்கர் வருத்தம் தெரி வித்தார்.''[1].

1. தி டைம்ஸ் ஆப் இந்தியா, ஆகஸ்டு 17, 1931.

# 2

# இந்து மதம் குறித்து நான் ஏன் பெருமிதம் கொள்ள வேண்டும்....

''பல்லார்டு இதே சிறையில் தங்கியிருந்தபோது, காந்தியிடமிருந்து டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்கு ஒரு தந்தி வந்தது; எரவடா சிறையில் தம்மை வந்து பார்க்கும்படி காந்தி அவரைக் கேட்டுக் கொண்டிருந்தார். டில்லியிலிருந்து திரும்பியதும் அவ்வாறே அவரைச் சந்திப்பதாக காந்திக்கு டாக்டர் அம்பேத்கர் தந்தி மூலம் தெரிவித்தார். மறுநாள் ரங்கூனைச் சேர்ந்த டாக்டர் பாமாவிடமிருந்து டாக்டர் அம்பேத்கருக்கு ஒரு தந்தி வந்திருந்தது. தந்தியில் பின்கண்டவாறு குறிப்பிடப்பட்டிருந்தது: சட்டமன்றக் கூட்டத் தொடரின் போது இந்தியத் தலைவர்களைச் சந்திப்பதற்காக பர்மா பிரிவினை எதிர்ப்புத் தலைவர்கள் அடுத்த வாரம் டில்லிக்குச் செல்லுகிறார்கள். பர்மாவின் அரசியலமைப்பு நிலை குறித்து உங்களுடனும் ஏனைய தலைவர்களுடனும் விவாதிப்பதற்கு அவர்கள் ஆவலுடன் இருக்கின்றனர். எனவே, பிப்ரவரி 4 மற்றும் 5 ஆம் தேதிகளில் தூதுக் குழுவினரை டில்லியில் சந்திக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறோம். அன்பு கூர்ந்து உங்கள் டில்லி முகவரியை தந்தி மூலம் தெரிவியுங்கள்; அங்கு உங்களைச் சந்திக்க இது ஏதுவாக இருக்கும். யு சிட் ஹிலய்ங், 80, ஹெர்மிடேஜ் சாலை, ரங்கூன், யு சிட் ஹிலய்ங் மற்றும் டாக்டர் பா மா. ''நாட்டின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் டாக்டர் அம்பேத்கரின் அலுவலகத்துக்கு ஏராளமான தந்திகள் வந்து குவிந்த வண்ணம் இருந்தன. இத்தகைய தந்திகளில் ஒன்று எர்ணாகுளம் தியா யுவஜன் சமாஜிடமிருந்து வந்திருந்தது; தாழ்த்தப்பட்ட மற்றும் சுதேச சமஸ்தானங்களைச் சேர்ந்த மக்களின் உரிமைகளுக்காகவும் சுதந்திரத்திற்காகவும் வட்டமேசை மாநாட்டில் அவர் வீரதீரத்துடன் போராடியமைக்காகப் பாடுபடும் தலைவருக்கு அதில் மிகுந்த நன்றி தெரிவிக்கப்பட்டிருந்தது.

இதன்பேரில் டாக்டர் அம்பேத்கர் உடனே பம்பாயிலிருந்து டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார்; வைசிராய் கூட்டியிருந்த வட்டமேசை மாநாட்டுப் பிரதிநிதிகளின் பூர்வாங்கக் கூட்டத்தில் கலந்து கொள்ளவே அங்கு விரைந்தார். டில்லியிலிருந்து திரும்பி

யதும் காந்திக்கு ஒரு தந்தி அனுப்பினார்; பிப்ரவரி 4 ஆம் தேதி அவரைச் சந்திக்க இயலும் என்று தந்தியில் குறிப்பிட்டிருந்தார். பிப்ரவரி 3 ஆம் தேதி டாக்டர் அம்பேத்கருக்கு அனுப்பிய தந்தியில் ''உங்கள் தந்தி இப்போதுதான் கிடைத்தது. நாளை 12.30 மணிக்கு சந்திக்கலாம்'' என்று காந்தி தெரிவித்தார். 1933 பிப்ரவரி 4 ஆம் தேதி எரவாடா சிறையில் காந்தியைச் சந்திக்க டாக்டர் அம்பேத்கர் விரும்பியதால், டில்லியில் பர்மியத் தூதுக் குழுவினரை அவரால் சந்திக்க இயலவில்லை.

பிப்ரவரி 4ஆம் தேதி மதியம் 12.30 மணிக்கு டாக்டர் அம்பேத்கர் எரவாடா சிறைக்குச் சென்றார்; எஸ்.என்.ஹிவ்தர்கர், டோலஸ், உபஷாம், கோவ்லி, கோர்பதே, கேசவராவ் ஜெதே ஆகியோர் அவருடன் சென்றனர். மகிழ்ச்சி பொங்க காந்தி எழுந்திருந்து அவர்களை அன்புடன் வரவேற்றார். சிறிது நேரம் கழித்து உரையாடல் ஆலயப் பிரவேசப் பிரச்சினைக்குத் திரும்பிற்று. டாக்டர் சுப்பராயன் மற்றும் ரங்கசாமி அய்யர் ஆகியோரின் மசோதாக்களுக்கு ஆதரவு அளிக்கும்படி டாக்டர் அம்பேத்கரை காந்தி கேட்டுக்கொண்டார். தீண்டாமை ஒரு சாபக்கேடு என்று சுப்பராயனின் மசோதா கண்டிக்காததால் அதனை ஆதரிக்க இயலாது என்று டாக்டர் அம்பேத்கர் பட்டவர்த்தனமாகக் கூறிவிட்டார். ஆலயப் பிரவேசத்தை பொதுஜன வாக்கெடுப்பு ஆதரித்தால், தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு ஆலயங்கள் திறந்து விடப்படும் என்று மட்டுமே அது தெரிவித்தது; ஆலயங்களிலுள்ள தெய்வங்களை வழிபட அவர்களுக்குள்ள உரிமை குறித்து அது எதுவும் கூறவில்லை.

சாதி அமைப்பு முறையில் சூத்திரர்களாக இருக்க தாழ்த்தப்பட்ட மக்கள் விரும்பவில்லை என்று அவர் காந்தியிடம் தெளிவுபடக் கூறினார். தம்மை ஓர் இந்து என்று நேர்மையாகக் கூறிக்கொள்ள இயலாது என்பதையும் தெரிவித்தார். தாழ்த்தப்பட்ட நிலையில் உள்ளவன் என்று என்னை ஏளனம் செய்யும் ஒரு மதத்தைப் பற்றி நான் ஏன் பெருமிதம் கொள்ள வேண்டும் என்று கேட்டார். இதே நிலைமை தொடர்ந்து நீடிக்குமானால் ஆலயப் பிரவேசத்தால் எனக்கு எந்த நன்மையும் இல்லை என்று கூறி ஆதங்கப்பட்டார்.

என்னைப் பொறுத்தவரையில் சாதி அமைப்பு முறை மோசமானதல்ல என்றார் காந்தி. அவர் மேலும் கூறினார், ''தீண்டத்தக்க இந்துக்கள் தங்கள் பாவங்களுக்குக் கழுவாய் தேடிக்கொண்டு, இந்து மதத்தைத் தூய்மைப்படுத்த வாய்ப்பளியுங்கள். இந்த விஷ

யத்தை அலட்சியப்படுத்தாதீர்கள். சனாதனிகளும் அரசாங்கமும் இந்த சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இந்த சீர்திருத்தம் நடைமுறைப்படுத்தப்படுமானால், சமுதாயத்தில் தீண்டத்தகாதவர் மேல்நிலைக்கு வருவார்கள்''.

காந்தி தெரிவித்த இந்தக் கருத்து டாக்டர் அம்பேத்கருக்கு உடன்பாடில்லை. அரசியல், பொருளாதார, கல்வித் துறைகளில் தீண்டத்தகாதவர்கள் முன்னேறினால் ஆலயப் பிரவேசம் தானாகவே நடைமுறைக்கு வரும்''.[1]



1. கீர், பக்கங்கள் 226-227.

# 3

# சனாதனிகளிடமிருந்து காந்தி மேலும் என்ன எதிர்பார்த்தார்?

''இந்தியாவின் அரசியலமைப்புச் சட்டத்தின் பின்னணியில் தாழ்த்தப்பட்ட வகுப்பு வேட்பாளர் பட்டியல் மற்றும் பூர்வாங்கத் தேர்தல்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினையில் காந்தியின் கருத்துக் களைக் கேட்டறிவது என்று டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் முடிவு செய்தார். லண்டன் செல்லுவதற்கான தயாரிப்புகளில் அவர் மும் முரமாக ஈடுபட்டிருந்தார். இதற்கிடையேயும் அவர் பல்வேறு கூட்டங்களில் கலந்துகொள்ளவும், நீதிமன்றங்களுக்குச் சென்று வழக்கு விசாரணைகளில் ஈடுபடவும், வீட்டு வேலைகளைக் கவனிக்கவும், நூல்களைத் தேர்வு செய்யவும் வேண்டியிருந்தது. மோரே, சிண்டே, கெய்க்வாட், சாவன் முதலியோருடன் எரவாடா சிறைக்கூடத்துக்குச் சென்று 1933 ஏப்ரல் 23ல் காந்தியைச் சந்தித்தார். ஒரு மாமரத்து நிழலில் காந்தியும் அம்பேத்கரும் நாற்காலிகளில் அமர்ந்திருந்தனர். மகாதேவ தேசாய் ஒரு நோட்டுப் புத்தகத்து டனும் பென்சிலுடனும் அருகில் அமர்ந்திருந்தார்.

பட்டியல் தயாரிப்பு முறை அதிகம் செலவுபிடிக்கக் கூடிய தாக இருக்கும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். பொதுத் தேர்தல் களில் போட்டியிடும் தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்த வேட் பாளர்கள் பூர்வாங்கத் தேர்தலில் தாழ்த்தப்பட்ட இன மக்களின் வாக்குகளில் குறைந்தபட்சம் 25 சதவீதத்தையாவது பெற்றிருக்க வேண்டும் என்பதை எடுத்துரைத்தார். இந்த விஷயத்தில் தாம் கவனம் செலுத்துவதாகவும், இது சம்பந்தப்பட்ட தமது கருத்தை அவரது லண்டன் முகவரிக்கு எழுதுவதாகவும் காந்தி பதிலளித்தார். பின்னர் காந்தி ஒரு பூங்கொத்தை டாக்டர் அம்பேத்கருக்குக் கொடுத்து, உரையாடலை தீண்டாமையை அகற்றும் பிரச் சினைக்குத் திசைதிருப்பினார்; சனாதனிகள் தம்மை (காந்தியை) பேய் என்றும் பிசாசு என்றும் வசைபாடுகிறார்கள் என்று கூறினார். சனாதனிகளிடமிருந்து நீங்கள் வேறு என்ன எதிர்பார்க்கிறீர்கள் என்று டாக்டர் அம்பேத்கர் காந்தியை வினவினார்! காந்தி இந்த சந்தர்ப்பத்தை சாமர்த்தியமாகப் பயன்படுத்திக் கொண்டு, தாழ்த்தப்

பட்ட இன மக்களின் தலைவரே கூட தமது பணி குறித்து திருப்தியடையவில்லை என்ற தமது மனவருத்தத்தை வெளிப்படுத்தினார். லண்டனிலிருந்து நீங்கள் எப்போது திரும்பி வருகிறீர்கள் என்று உரையாடலின் இறுதியில் அம்பேத்காரை காந்தி கேட்டார். அநேகமாக 1933 ஆகஸ்டு மாதம் திரும்பக்கூடும் என்று டாக்டர் அம்பேத்கர் பதிலளித்தார். டாக்டர் அம்பேத்கரின் பயணம் நல்ல விதமாக அமைய காந்தி விழைவு தெரிவித்தார். இத்துடன் பேட்டி முடிவடைந்தது.''[1].



1. கீர், பக்கம் 236.

# 4

# தீண்டத்தகாதவர்களுக்குத் தொல்லை கொடுக்கும் மேல்சாதி இந்துக்களுக்கு எதிராக சட்டரீதியான நடவடிக்கைகள் எடுப்பது சம்பந்தமாக

## ''டாக்டர் அம்பேத்கருடன் பேச்சுவார்த்தைகள்

''1934 ஜூன் 16ஆம் தேதி சனிக்கிழமை காலை மணிபுவனில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரும் அவரது குழுவைச் சேர்ந்தவர்களும் நீண்ட உரையாடலில் ஈடுபட்டனர்; தீண்டாமைக்கு எதிராக காந்திஜி போராட்டம் தொடங்கியது முதல் அரிஜன இயக்கம் எத்தகைய முன்னேற்றம் கண்டுள்ளது என்பதே இந்த உரையாடலின் கருப்பொருளாக அமைந்திருந்தது.

தீண்டாமைக்கு எதிரான இயக்கம் துரித முன்னேற்றம் கண்டு வருகிறது; தீண்டாமை எனும் இந்தத் தீமை, கொடுமை, தீவினை மெள்ளமெள்ள செத்து மடிந்துவருகிறது; 200க்கும் அதிகமான கிராமங்களில் தாம் சுற்றுப் பயணம் செய்தபோது இந்தக் கண் கண்ட உண்மைகளைத் தெள்ளத் தெளிவாகக் கண்டதாக காந்திஜி தம்மைக் காணவந்தவர்களிடம் கூறியதாகத் தெரிகிறது.

ஆனால் டாக்டர் அம்பேத்கர் இந்தக் கண்ணோட்டத்திலிருந்து மாறுபட்டதொரு கண்ணோட்டத்தை மேற்கொண்டார். காந்திஜி ஒர கிராமத்துக்கு அல்லது ஓர் இடத்துக்கு வருவது ஒரு ஞானி அல்லது சாது வருவது போன்ற ஓர் அசாதாரணமான சூழ்நிலையைத் தோற்றுவிக்கும்; அச்சமயம் மக்கள் தங்களிடையே உள்ள கருத்து வேறுபாடுகளை அப்போதைக்கு மறந்துவிடுவார்கள். எனவே, உண்மை நிலையைத் தெரிந்துகொள்ளும் சூழ்நிலையில் காந்தி இருக்கவில்லை.

காந்திஜிக்கு மற்றொரு யோசனையையும் டாக்டர் அம்பேத்கர் கூறினார்: அதாவது தாழ்த்தப்பட்ட மக்களைத் துன்புறுத்தும் உயர் ஜாதி இந்துக்களுக்கு எதிராக சட்ட ரீதியான நடவடிக்கைகள்

எடுப்பதற்கு ஹரிஜனங்களுக்கு ஹரிஜனக் குழுமம் நிதி உதவி செய்ய வேண்டும் என்று அவர் தெரிவித்தார்.

தீண்டாமை என்னும் இந்தக் கொடுமையை ஒழித்துக்கட்டுவதற்கு அறிவுறுத்தி இணங்க வைப்பதுதான் மிகச் சிறந்த மார்க்கம் என்றும், சட்ட உதவி வழங்கும் பிரச்சினையை குழுமத்தின் பரிசீலனைக்கு விட்டுவிடலாம் என்றும் இதற்கு காந்திஜி பதில் அளித்தார்.

ஆகஸ்டு 7ஆம் தேதிக்குப் பிறகு ஹரிஜனக் குழுமம் இருக்குமா என்று தூதுக்குழு உறுப்பினர்களில் ஒருவர் காந்திஜியை வினவினார். ஏனென்றால் இந்தத் தேதிவரை அரசியல் சார்பற்ற நடவடிக்கைகளில் மட்டுமே பங்கு பெறுவது என்று காந்திஜி உறுதி பூண்டிருந்தார். உங்களது எதிர்காலச் செயல்பாட்டுக்கு ஏதேனும் தெய்வீக அகத்தூண்டுதலைப் பெற்றிருக்கிறீர்களா என்று அதே உறுப்பினர் காந்திஜியைக் கேட்டார்.

இதுவரை இத்தகைய தெய்வீக அகத் தூண்டுதல் எதையும் தான் பெறவில்லை என்று காந்திஜி பதிலளித்தார். ''நீங்கள் விரும்பினால் ஆண்டவனிடமிருந்து அகத்தூண்டுதலைப் பெறலாம்'' என்று கூறினார்.

## அம்பேத்கர் தூதுக்குழு

டாக்டர் அம்பேத்கர் தலைமையில் சனிக்கிழமையன்று மகாத்மா காந்தியைச் சந்தித்த தூதுக்குழு உறுப்பினர்கள் வருமாறு:

திரு. ஜி.வி.நாயக்
டாக்டர் பி.ஜி.சோலங்கி
திரு. அம்ரித்ராவ் காம்பே
திரு. பாபுராவ் கெய்க்வாட்''[1]



1. பம்பாய் கிரானிக்கல், ஜூன், 1934.

# பிரிவு - III

## தீண்டத்தகாதவர்களை இந்தியாவின் அரசியல் வானில் கொண்டு வருவதிலும் இந்திய ஜனநாயகத்துக்கு அடித்தளமிடுவதிலும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் பங்கு

# தீண்டத்தகாதவர்களை இந்தியாவின் அரசியல் வானில் கொண்டுவருவதிலும் இந்திய ஜனநாயகத்துக்கு அடித்தளமிடுவதிலும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் பங்கு

''1919 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தில் ஒரு முக்கியமான வகையம் இருக்கிறது; அரசியலமைப்புச் சட்டத்தின் செயல்பாட்டை ஆராய்வதற்கும், அவசியமான மாற்றங்கள் செய்வது குறித்து அறிக்கை சமர்ப்பிப்பதற்கும் பத்தாண்டுக்கால இறுதியில் ஓர் அரசு ஆணையத்தை மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அரசாங்கம் அமைப்பதற்குக் கடமைப்பட்டுள்ளது என்று இந்த வகையம் கூறுகிறது. இதன்பிரகாரம் சர் ஜான் சைமன் தலைமையில் 1928ல் ஓர் அரசுக் கமிஷன் நிறுவப்பெற்றது. இந்தக் கமிஷன் அனைத்துத் தரப்பினர்களையும் கொண்டதாக இருக்கும் என்று இந்தியர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அச்சமயம் இந்தியாவுக்கான அமைச்சாராக இருந்த பர்கென்ஹெட் பிரபு இந்தக் கமிஷனில் இந்தியர்களைச் சேர்ப்பதை எதிர்த்தார்; அது முற்றிலும் ஒரு நாடாளுமன்றக் கமிஷனாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். காங்கிரசும் முற்போக்காளர்களும் இதனை ஒரு பெரும் குற்றமாக எடுத்துக் கொண்டனர்; ஓர் அவமதிப்பாகக் கருதினர். அவர்கள் கமிஷனைப் பகிஷ்கரித்தனர்; அதற்கு எதிராகப் போராட்டம் நடத்தினர். இந்த எதிர்ப்பு உணர்வை மட்டுப்படுத்தும் பொருட்டு மன்னர்பிரான் அரசாங்கம் ஓர் அறிவிப்பை வெளியிட்டது; அதாவது கமிஷனின் பணி பூர்த்தியடைந்ததும் இந்தியாவுக்கான புதிய அரசியலமைப்புச் சட்டம் குறித்து முடிவு செய்வதற்கு முன்னர் அது குறித்து விவாதிப்பதற்கு பிரதிநிதித்துவம் வாய்ந்த இந்தியர்களின் கூட்டம் ஒன்று நடைபெறும் என்று அது தெரிவித்தது. இந்த அறிவிப்புக்கு இணங்க, நாடாளுமன்ற மற்றும் மன்னர் பிரான் அரசாங்க மாநாட்டுக்கு வருமாறு இந்தியப் பிரதிநிதிகள் லண்டனுக்கு அழைக்கப்பட்டனர்''[1].

---

1. எழுத்தும் பேச்சும், தொகுதி 9, பக்கம் 40.

*''இந்தியாவில் நிலவும் பதற்ற நிலையைத் தணிக்கும் பொருட்டு, 1919 ஆம் வருடச் சட்டத்தை மறுபரிசீலனை செய்யவும் மாற்றியமைக்கவும் பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்தது. எனவே, அது இந்திய சட்டக் கமிஷனை நியமித்தது; சர் ஜான் சைமன் அதன் தலைவராகப் பொறுப்பேற்றார்; இதன் காரணமாக அது சைமன் கமிஷன் எனப் பெயர் பெற்றது. சைமன் புகழ்பெற்ற நாடாளுமன்ற உறுப்பினராவார். இந்தக் கமிஷனில் பிரபுக்கள் சபை உறுப்பினர்கள் இருவரும் காமன்ஸ் சபை உறுப்பினர்கள் நால்வரும் இடம் பெற்றிருந்தனர். இந்தக் கமிஷனின் பரிந்துரைகளின்படி வகுக்கப் படும் முன்மொழிவுகள் வெஸ்ட் மினிஸ்டரிலுள்ள ஒரு கூட்டு பொறுக்குக் குழுவிடம் சமர்ப்பிக்கப்படும்; அதற்கு முன்னர் இந்தியப் பார்வையாளர்கள் விசாரிக்கப்படுவார்கள்.*

*சைமன் கமிஷன் தனது முதல் வருகையை மேற்கொண்டு 1928 பிப்ரவரி 3 ஆம் தேதி பம்பாய் வந்து சேர்ந்தது; 1919 ஆம் வருட சட்டத்தில் அறிவிக்கப்பட்டிருந்தபடி இந்தியப் பிரச்சினையை மறு ஆய்வு செய்யும் பணியைத் தொடங்குவதே அதன் நோக்கம். இந்தியர்கள் எவரும் இடம் பெறாத அந்தக் கமிஷனை தங்களுக்கு இழைக்கப்பட்ட ஓர் அவமதிப்பாக ஏறத்தாழ எல்லா இந்தியக் கட்சிகளுமே கருதின. ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வொரு வடிவத் திலும் கமிஷனைப் பகிஷ்கரிப்பது என்று காங்கிரஸ் கட்சி தீர் மானித்தது. எனவே சைமன் கமிஷன் வந்தபோது கருப்புக் கொடிகள் காட்டியும், வசை மொழிகள் பொழிந்தும், 'சைமனே திரும் பிப்போ' என்ற கோஷம் எழுதப்பட்ட விளம்பர அட்டைகள் காண் பித்தும் கடுமையான எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. காங்கிரஸ்காரர்கள் தேச வியாபகமான அடிப்படையில் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் செய்தனர். சில இடங்களில் காவல் துறையினர் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. 1928-29ல் சைமன் கமிஷன் இரண்டாம் முறை வந்தபோதும் இதேபோன்று எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன.*

*இதற்கிடையே, காங்கிரஸ் கட்சி ஏற்பாடு செய்த அனைத்துக் கட்சிகள் மாநாடு 1928 பிப்ரவரி மாதமும் அதன் பின்னர் மே மாதமும் நடைபெற்றது; இந்த மாநாட்டில் இந்தியாவுக்கு ஒரு சுயராஜ்ய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காக பண்டித*

மோதிலால் நேரு தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. இந்தக் குழு 1928 ஆம் ஆண்டு ஜூன் முதல் ஆகஸ்டு வரை பணியாற்றி ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்தளித்தது.*

முஸ்லீம் பிளவை சரிசெய்வதே அதன் பிரதான குறிக்கோளாக இருந்தது. அடக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்கள் சம்பந்தமாக நேரு அறிக்கை பின்வருமாறு குறிப்பிட்டது: ''அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவது சம்பந்தமாக நாங்கள் சமர்ப்பித்துள்ள பிரேரணைகளில் 'தாழ்த்தப்பட்ட' மக்களுக்குச் சட்ட மன்றங்களில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு நாங்கள் எத்தகைய விசேட வகையத்தையும் பகிர்ந்துரைக்கவில்லை. விசேட வாக்காளர் தொகதிகள் மூலமோ அல்லது நியமனத்தின் மூலமோதான் இதனைச் செய்ய முடியும்'' ஆனால் இந்த இரண்டு வகையான தீங்குவிளைக்கக் கூடியவை, தவறானவை என்று கருதப்பட்டதால் இவற்றில் எந்தக் கோட்பாட்டையும் பின்பற்றப் போவதில்லை என்று கமிட்டி தெரிவித்தது. தாங்கள் வெளியிட்டுள்ள உரிமைகள் பிரகடனம் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு ஊறுவிளைவிக்கும் அனைத்துத் தீமைகளுக்கும் முடிவுகட்கும் சர்வரோக நிவாரணியாக இருக்கும் என்று அவர்கள் குறிப்பிட்டனர்.** தீண்டத்தகாதவர்களின் பிரச்சினை குறித்து காங்கிரஸ் கட்சியின் போக்கு என்ன? அனைத்து பிரபல முஸ்லீம், பார்சி, கிறித்துவ, சீக்கிய, ஆங்கிலோ-இந்திய அமைப்புகளுக்கும் இன்னும் சொல்லப் போனால் பிராமணர் அல்லாத அமைப்புக்கும் திராவிட மகாஜன சபைக்கும்கூட அழைப்புகள் அனுப்பிய காங்கிரஸ் காரியக் கமிட்டி, டாக்டர் அம்பேத்கரைத் தலைவராகக் கொண்ட தாழ்த்தப்பட்ட இன மக்களின் அமைப்புக்கோ அழைப்பு அனுப்பவில்லை என்பதிலிருந்து இந்தப் பிரச்சினையில் காங்கிரசின் நிலை என்ன என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிந்து கொள்ளலாம். இதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்னர் சவுத்பரோ கமிஷன் முன்னர் டாக்டர் அம்பேத்கர் சாட்சியம் அளித்திருக்கிறார் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுகூறுவது உசிதமாக இருக்கும்.

---

* இது குறித்து டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் கருத்தைத் தெரிந்து கொள்ள 1929, ஜனவரி 18 ஆம் தேதியிட்ட 'பகிஷ்கிரித்பாரத்' தின் தலையங்கத்தைப் பார்க்கவும்.

** அனைத்துக் கட்சிகளின் மாநாட்டு அறிக்கை, 1928, பக்கங்கள் 59-60

சைமன் கமிஷனுடன் ஒத்துழைப்பதற்காக அனைத்து பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் மத்திய அரசாங்கம் ஒரு கமிட்டியை அமைத்தது; அது மட்டுமல்ல, சைமன் கமிஷனுடன் இணைந்து பணியாற்றுவதற்காக ஒவ்வொரு சட்டமன்றமும் தனது மாகாணக் கமிட்டியைத் தேர்ந்தெடுத்தது. 1928 ஆகஸ்டு 3 ஆம் தேதி பம்பாய் சட்டமன்றம் ஏனையோர்களுடன் சேர்த்து டாக்டர் அம்பேத்கரை பம்பாய் மாகாணக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுத்தது.

சைமன் கமிஷனின் செயப்பாடுகளும் சுற்றுப்பயணங்களும் இந்திய அரசியல் வானை ஒளிரச் செய்தன. இது இதர சக்திகளுடன் டாக்டர் அம்பேத்கரின் ஆற்றலையும், அறிவுத்திறத்தையும், உள்ளுரத்தையும் ஊர், உலகறியச் செய்தது.

தாழ்த்தப்பட்ட இன மக்களின் பதினெட்டு அமைப்புகள் கமிஷன் முன் சாட்சியம் அளித்தன; இவற்றில் பதினாறு அமைப்புகள், தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் உருவாக்கப்பட வேண்டுமென்று வேண்டிக் கொண்டன. பகிஷ்கிரித் ஹிதகரினி சபை சார்பில் சைமன் கமிஷனிடம் டாக்டர் அம்பேத்கர் ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தார்; தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இட ஒதுக்கீடுடன் கூடிய கூட்டு வாக்காளர் தொகுதிகள் உருவாக்கப்பட வேண்டும் என்று அதில் வலியுறுத்தி இருந்தார்.*

நியமனம் செய்யப்படும் உரிமை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று மெட்ராஸ் மத்திய ஆதி-திராவிட மகாஜன சபை கோரிக்கை முன்வைத்தது. பம்பாய் மாகாண பிராமணரல்லாத கட்சி சமர்ப்பித்த விண்ணப்பத்தில் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகளையும் இட ஒதுக்கீடுகளையும் கோரியிருந்தது. சிந்தை தனியாகப் பிரிக்க வேண்டும், வடமேற்கு எல்லைப் புறத்தில் ஒரு தனி மாகாணம் அமைக்கப்பட வேண்டும், முஸ்லீம்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் உருவாக்கப்பட வேண்டும், சமஷ்டி அரசியலமைப்பில் மாகாணங்களுக்கு எஞ்சிய அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டும் என்ற தனது கோரிக்கைகளை முஸ்லீம் லீக் மீண்டும் வலியுறுத்தியது.

* பேச்சும் எழுத்தும் பார்க்க, தொகுதி 2, பக்கங்கள் 429, 458

1928 அக்டோபர் 23 ஆம் தேதி சைமன் கமிஷன், மத்தியக் கமிட்டி, பம்பாய் மாகாணக் கமிட்டி ஆகியவை புனாவில் டாக்டர் அம்பேத்கரை விசாரணை செய்தன.* பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் மேஜர் அட்லி சைமன் கமிஷனின் உறுப்பினராக இருந்தார்; இவர் பின்னர் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக சேவை செய்தார். டாக்டர் அம்பேத்கரை விசாரித்தபோது அவரிடம் அட்லி பல முக்கிய கேள்விகளைக் கேட்டார்.

சைமன் கமிஷனின் பணி, குளிர்காலம் வரை தொடர்ந்தது. மாகாணக் கமிட்டிகளும் அவற்றின் சொந்த அறிக்கைகளைத் தயாரித்து வந்தன. சைமன் கமிஷனுடன் ஒத்துழைப்பதற்காக பம்பாய் சட்ட மேலவையால் நியமிக்கப்பட்ட கமிட்டி அரசியலமைப்புப் பிரச்சினை குறித்து அதிகாரப்பூர்வமான மற்றும் அதிகாரப்பூர்வமற்ற விசாரணை நடத்திய பிறகு 1929 மே 7 ஆம் தேதி தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.**

இந்தக் கமிட்டியுடன் அடிப்படையிலேயே வேறுபட்ட கருத்து கொண்டிருந்த டாக்டர் அம்பேத்கர் அதன் அறிக்கையில் கையொப்பமிடவில்லை; மாறாக,தனது சொந்தக் கருத்துகளையும் பரிந்துரைகளையும் கொண்ட ஒரு தனி அறிக்கையை 1929 மே 17 ஆம் தேதி சமர்ப்பித்தார்.** கர்நாடகாவின் பிரிவினை கோரிக்கை குறித்துக் குறிப்பிட்டுக் கூறும்போது பம்பாய் ராஜதானியிலிருந்து கர்நாடகாவைப் பிரிப்பதைத் தாம் எதிர்ப்பதாகக் கூறினார்; ''ஒரு மொழி ஒரு மாகாணம் என்னும் கோட்பாடு நடைமுறைப்படுத்த இயலாத மிகப்பெரிய கோட்பாடு'' என்று இதற்கு அவர் காரணம் கூறினார். வெகுஜனங்களிடையே ஒரு பொதுவான தேசிய உணர்வை, அதாவது நாங்கள் முதலில் இந்தியர்கள், அதன் பின்னர் இந்துக்கள், முகமதியர்கள் அல்லது சிந்தியர், கன்னடியர்கள் என்றல்லாமல் தாங்கள் முதலிலும் இந்தியர்கள் முடிவிலும் இந்தியர்கள் என்ற உணர்வை ஊட்டி வளர்ப்பது இன்றைய மிக ஜீவாதாரத் தேவையாகும் என்பதே என் கருத்து என்று டாக்டர் அம்பேத்கரிடம் பொதிந்துள்ள தேச பக்த உணர்வு வலியுறுத்திற்று. இதுவே நமது லட்சியம் எனில் ஸ்தல தேசபக்த உணர்வையும் கோஷ்டி மனப்பான்மையையும் வலுப்படுத்தும், ஊக்குவிக்கும் எதையும் செய்யலாகாது.''

---

★ பேச்சும் எழுத்தும் பார்க்க, தொகுதி 2, பக்கங்கள் 459-89.

★★ மேற்படி பக்கங்கள் 315-401

சிந்துவைப் பிரிக்க வேண்டும் என்று அந்நாட்களில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருந்த கோரிக்கையைப் பொறுத்த வரையில், இது வகுப்பு உணர்ச்சி சார்ந்த கோரிக்கை, ஐந்து மாகாணங்களில் முஸ்லீம்களின் வகுப்பு ரீதியான பெரும்பான்மையை அரசியல் ரீதியான பெரும்பான்மையாக்கும் ஒரு பெரிய திட்டத்தின் ஒரு பகுதி இது என்று அவர் கூறினார். ''இந்தத் திட்டம் மேலெழுந்தவாரி யாகப் பார்க்கும்போது தோன்றுவது போல் மாசற்றதோ அல்லது அபாயமற்றதோ அல்ல'' என்பதை அவர் எச்சரித்தார். இந்தத் திட்டத்திற்குப் பின்னாலுள்ள நோக்கம் ஐயத்துக்கிடமின்றிப் பயங் கரமானது, அடிக்கு அடி, பதிலுக்குப் பதில் கொடுப்பதன் மூலமே நீதியை, நியாயத்தை நிலைநாட்ட முடியும் என்ற கோட்பாட்டை இது அடிப்படையாகக் கொண்டது; சமாதானத்தை நிலை நாட்டு வதற்கு மிகச் சிறந்த மார்க்கம் போருக்குத் தயாராக இருப்பதே என்று இந்த சித்தாந்தம் கூறுகிறது. அம்பேத்கர் தமது கருத்தை நிலைநாட்டுவதற்கு கல்கத்தாவில் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாட்டில் காந்திய தேசியவாத முஸ்லீம் தலைவரான மௌலானா ஆஸாத் நிகழ்த்திய சொற்பொழிவை ஆதாரமாகக் காட்டினார். அந்த முஸ்லீம் தலைவர் கூறியதாவது: ''ஒரு புறம் ஒன்பது இந்து மாகா ணங்களும், இன்னொருபுறம் ஐந்து முஸ்லீம் மாகாணங்களும் இருந்துவரும். இந்துக்கள் தங்களது ஒன்பது மாகாணங்களில் முஸ்லீம்களை எவ்வாறு நடத்துகிறார்களோ அவ்வாறே முஸ்லீம்கள் தங்களது ஐந்து மாகாணங்களில் இந்துக்களை நடத்துவார்கள். இது ஒரு நல்ல ஏற்பாடு அல்லவா? முஸ்லீம்கள் தங்களது உரிமை களை நிலைநாட்டுவதற்குக் கிடைத்துள்ள ஒரு புதிய ஆயுத மல்லவா? காந்திய தேசிய முஸ்லீம் தலைவர்கள் பற்றிய ஒரு படப்பிடிப்பு என இதனைக் கூறலாம்.

தங்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் வேண்டும் என்ற முஸ்லீம்களின் கோரிக்கை பற்றி அடுத்தபடியாக டாக்டர் அம்பேத்கர் பேசினார். பொதுவாக்காளர் தொகுதிகள் பற்றி எவ்வகையிலும் ஆட்சேபிக்காமல் ஐரோப்பாவில் பல்வேறு இன மக்களும் ஒரு பொதுவான அரசாங்கத்தின் கீழ் எவ்வாறு அன்னியோன்னியமாக வாழ்ந்து வருகின்றனர் என்பதை எடுத்துரைத்தார். அவர் கூறினார்: ''முகமதியர்கள் சிறுபான்மையினராக உள்ள நாடு இந்தியா மட்டுமே அல்ல என்பது போதுமான அளவு தெரிந்திருப்பதாகத் தோன்ற வில்லை. அவர்கள் இதே நிலையில் இருக்கும் வேறு பல நாடுகளும் உள்ளன. அல்பேனியாவில் முகமதியர்கள் ஒரு மிகப் பெரிய சமுதாயமாக அமைந்துள்ளனர். பல்கேரியா, கிரீஸ்,

ருமேனியா ஆகிய நாடுகளில் அவர்கள் சிறுபான்மை சமுதாயமாக உள்ளனர். ஆனால் அதே சமயம் யுகோஸ்லாவியாவிலும் ரஷ்யாவிலும் ஒரு பெரிய சமுதாயமாக இருக்கின்றனர். இந்நாடுகளிலுள்ள முகமதிய சமுதாயத்தினர் தங்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் வேண்டுமென்று கோருகிறார்களா? இந்த நாடுகளிலுள்ள முகமதியர்கள் தங்களுக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் இல்லாமலேயே சமாளித்து வருகின்றனர். இன்னும் சொல்லப்போனால் திட்டவட்டமான பிரதிநிதித்துவ விகிதாசாரம் தங்களுக்கு உத்திரவாதம் செய்யப்படாமலேயே அங்கு அவர்கள் நிம்மதியாக வாழ்க்கை நடத்தி வருகின்றனர். அவ்வாறிருக்கும்போது என் அபிப்ராயத்தில் இந்தியாவிலுள்ள முகமதியர்கள் வரம்பு மீறி செயல்படுகின்றனர் என்றே தோன்றுகிறது; அரசியல் வரலாறு படிக்கும் மாணவர்கள் அனைவருக்குமே இது நன்கு தெரியும்.'' வகுப்புவாரி பிரதிநிதித்துவம் அடிப்படையிலேயே தவறானது, உணர்ச்சிவசப்பட்டு அதனை ஆதரிப்பது ஒரு தீமையை நிரந்தரப்படுத்துவதாகும் என்று அவர் மேலும் கூறினார்.

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து கூறியதாவது: '' சில வகுப்பினருக்கு விசேடப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்பதை நான் ஆதரித்தாலும் தனி வாக்காளர் தொகுதிகள் மூலம் அவர்கள் பிரதிநிதித்துவம் பெறுவதை நான் எதிர்க்கிறேன். பிரதேசவாரி வாக்காளர் தொகுதிகளும், தனி வாக்காளர் தொகுதிகளும் இரண்டு கடைக்கோடிகள்; ஜனநாயக மற்ற இந்த நாட்டில் ஒரு ஜனநாயக அரசாங்கத்தைத் தோற்றுவிப்பதற்கு உருவாக்கப்படும் எந்தப் பிரதிநிதித்துவத் திட்டத்திலும் இவை தவிர்க்கப்பட வேண்டும். ஒதுக்கப்பட்ட இடங்களுடன் கூடிய கூட்டு வாக்காளர் தொகுதிகள் முறைதான் மிகச் சிறந்ததாகும். இதற்குக் குறைந்த எதுவும் ஏற்புடையதாகாது; நல்ல அரசாங்கத்தின் லட்சியங்களையே அது சீர்குலைக்கும்.''

அன்று நடைமுறையில் இருந்த கோட்பாடுகள், தத்துவங்கள், கருத்துகள் முதலியவற்றின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது இந்த அறிக்கை பகுத்தறிவுபூர்வமானதாகவும், தேசியத் தன்மை கொண்டதாகவும் திகழ்ந்தது. அது எந்தப் பிரச்சினையையும் சரியாக எடைபோடுவதாகவும், எத்தகைய தயக்க மயக்கமின்றி உண்மையை உண்மையென அறுதியிட்டு உறுதி கூறுவதாகவும் அமைந்திருந்தது. அது பிரசுரிக்கப்பட்டபோது எங்கெங்கிருந்து எல்லாமோ பாராட்டுகள் வந்து குவிந்தன; கடைந்தெடுத்த,

மூர்க்கத்தனமான அவரது பகைவர்கள் கூட புகழ்ந்து தள்ளினர்; இதுவரை அவரை எதிர்த்து வந்த பத்திரிகைகளும் வானளாவப் பாராட்டின. டாக்டர் அம்பேத்கர் திடீரெனப் புகழ் ஏணியின் உச்சிக்கு ஏற்றப்பட்டார்; ஒரு மாபெரும் அரசியல்வாதியாக, ஒப்பற்ற தேசபக்தராக, தீண்டத்தகாதவர்கள் எனும் நிலக்கரிச் சுரங்கத்தில் கண்டெடுக்கப்பட்ட விலை மதிப்பற்ற வைரமாக, அரிய ஆற்றல் படைத்த ராஜதந்திரியாகப் போற்றிப் புகழப்பட்டார். நல்ல நம்பகமான ஆலோசகராக, அவரது தலைமுறையின் மிகச் சிறந்த அரசியல் அறிஞராக அவர் திகழ்ந்தார். இவ்வாறு அவரது இந்த அறிக்கை அவரது நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கக் கூடியதாக இருந்தது. வரலாற்றாசிரியர்களுக்கு இது ஒரு சிறந்த வழி காட்டியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

மேலே குறிப்பிட்டபடி டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தமது உயரிய கருத்துகளும் பரிந்துரைகளும் அடங்கிய தனி அறிக்கையைச் சமர்ப்பித்தார். அவரது இந்தப் பரிந்துரைகளின் சுருக்கம் வருமாறு:

## ''பரிந்துரைகளின் சுருக்கம்''

### பிரிவு I

பம்பாய் ராஜதானியிலிருந்து கர்நாடகமோ அல்லது சிந்துவோ பிரிக்கப்படமாட்டாது.

### பிரிவு II

அத்தியாயம் 1 - மாகாண நிர்வாகக் குழு பின்கண்ட நிபந்தனைக்கு உட்பட்டு முழுப் பொறுப்புள்ளதாக இருக்க வேண்டும்: சட்டமன்ற உறுப்பினர்கள் ஒரு விஷயத்தை ஒதுக்கீடு செய்யப்பட்டதாகத் தீர்மானித்தால் அவர்களது தீர்மானத்துக்குச் செயலுரு கொடுக்க வேண்டும்.

அத்தியாயம் 2 - எந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைமைகளிலும் நிர்வாகக் குழுவை அகற்ற முடியாததாக ஆக்கக் கூடாது. அமைச்சர்கள் தங்களுடைய சட்டவிரோதமான செயல்பாடுகள் விஷயத்தில்

1. கீர், பக்கங்கள் 114-117 மற்றும் 121-123.

நீதிமன்ற தீர்ப்புகளுக்கு உட்பட்டவர்களாவர். அமைச்சர்கள் மீது குற்றச்சாட்டுகள் தொடுப்பதற்கு அரசியலமைப்புச் சட்டம் வழிவகை செய்ய வேண்டும். நிர்வாகக் குழுவில் கூட்டுப் பொறுப்பு நிலவ வேண்டும். நிர்வாகக் குழுவுக்குப் பிரதமர் தலைமை வகிக்க வேண்டுமேயன்றி ஆளுநர் தலைமை வகிக்க லாகாது.

அத்தியாயம் 3 - ஆளுநருக்கு அரசியலமைப்பு ரீதியிலான தலைவர் என்ற அந்தஸ்து மட்டுமே இருக்க வேண்டும். அவருக்கு அவசர நிலைகளில் அதிகாரங்கள் இருத்தல் கூடாது.

## பிரிவு III

அத்தியாயம் 1 - வயதுவந்தோர் வாக்குரிமை இருத்தல் வேண்டும்.

அத்தியாயம் 2 - சட்டமன்றம் முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்டதாக இருக்க வேண்டும். ஐரோப்பியர்களுக்கான வாக்காளர் தொகுதி களைத் தவிர ஏனைய எல்லா இன மற்றும் வகுப்புவாரி வாக்காளர் தொகுதிகளும் ஒழிக்கப்பட வேண்டும். முகமதியர்கள், தாழ்த்தப் பட்ட வகுப்பினர், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் பிராமணரல் லாதோருக்கு இட ஒதுக்கிடுகள் செய்யப்பட வேண்டும்; வாக் குரிமை தொடர்ந்து கட்டுப்படுத்தப்பட்ட ஒன்றாக இருந்தால்தான் இவ்வாறு செய்ய வேண்டும்.

அத்தியாயம் 3 - சட்டமன்றம் 140 உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும். இவர்களில் முகமதியர்கள் 33 பேரும், தாழ்த்தப் பட்ட இனத்தினர் 15 பேரும் இருக்க வேண்டும். சில மாவட்டங்கள் குறைந்த பிரதிநிதித்துவம் பெற்றிருப்பதும் வேறு சில மாவட்டங்கள் அதிகப் பிரதிநிதித்துவம் பெற்றிருப்பதும் மக்கட்தொகை அடிப் படையில் திருத்தியமைக்கப்பட வேண்டும். பல்வேறு வகுப்பினர் களுக்கும் நலன்களுக்கும் இடையே இடங்களை ஒழுங்குபடுத்த ஒரு குழு அமைக்கப்பட வேண்டும். ஒரு வேட்பாளர் குடியிருப்புத் தகுதியுடையவராக இருக்க வேண்டும் என்பது அகற்றப்பட வேண்டும்.

அத்தியாயம் 4. - லக்னோ ஒப்பந்தம் நிரந்தரமானதல்ல. அது சம்பந்தமாக எழும் பிரச்சினைகளைப் புதிதாகவும் அவற்றின் தகுதி களின் அடிப்படையிலும் பரிசீலிப்பதைத் தடுக்க முடியாது.

அத்தியாயம் 5.- மாகாணத்தில் இரண்டாவது சட்டமன்றம் இருத்தல் கூடாது.

அத்தியாயம்.6 - ஜனாதிபதியை நியமிக்கவும், நீக்கவும் தனக்குள்ள சிறப்புரிமைகளை வரையறுத்துக் கொள்ளவும், தான் செயற் படும் முறையை ஒழுங்குபடுத்திக் கொள்ளவும் சட்டமன்றத்துக்கு அதிகாரம் இருக்க வேண்டும். இந்திய அரசாங்க சட்டத்தின் பிரிவுகள் 72 D யும், 80 C யும் நீக்கப்பட வேண்டும். ''நம்பிக்கை யில்லாத் தீர்மானம்'' கொண்டு வருவதற்கு சட்டமன்றத்துக்கு அதிகாரம் இருக்க வேண்டும். சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு அரசியலமைப்பை மாற்றுவதற்கு சட்டமன்றத்துக்கு அதிகாரம் இருக்க வேண்டும்.

## பிரிவு IV

அத்தியாயம் 1. - பரிபூரண மாகாண சுயாட்சி நிலவ வேண்டும். மத்திய, மாகாண அரசாங்கங்களுக்கிடையே தற்போது நிலவும் பணிகள் பிரிவினை முறை மறுபரீசீலனை செய்யப்பட வேண்டும்; முன்கூட்டியே அனுமதியளித்தல்; பின்னர் ரத்துசெய்தல் என்ற முறையின் மூலம் மத்திய அரசாங்கத்துக்கு இப்போதுள்ள கட்டுப் பாட்டு அதிகாரத்தை ஒழித்துக்கட்டும் நோக்கத்துடன் இதனைச் செய்ய வேண்டும்.

அத்தியாயம் 2. - மாகாண அரசாங்கத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ள பணிகளின் வரம்புக்குட்பட்டு அரசாங்கத்துக்கும் உள்துறை அரசாங் கத்துக்கும் இடையேயான உறவுகள் நேரடியானவையாக இருக்க வேண்டுமேயன்றி மத்திய அரசாங்கத்தின் மூலமாக இருக்கக் கூடாது. இந்திய அரசாங்க சட்டத்தின் பிரிவு 2 ரத்து செய்யப்பட வேண்டும்; ஏனென்றால் இந்தியாவை ஆளும் விஷயத்தில் மன்னர் பிரான் அரசின் நிலையை இது தெளிவற்றதாக்குகிறது.

## பிரிவு V

ஒரு தனி அரசுப் பணித்துறை இருக்க வேண்டும்; ஆளெடுக் கும் நிறுவனத்தின் பணியை மேற்கொள்வதை ராஜாங்க மந்திரி அறவே கைவிட வேண்டும். பணித்துறை சம்பந்தமான அவரது பொறுப்புகளை மாகாண பொதுப்பணி தேர்வு ஆணையமோ அல்லது இந்தியாவின் அரசுப்பணியாளர் தேர்வாணையத்துடன்

இணைந்து பணியாற்றும் ஓர் அதிகாரியோ மேற்கொள்ளலாம். அரசுப் பணித்துறையை இந்தியமயமாக்குவது இன்னும் அதிகத் துரிதமாக நடைபெற வேண்டும். அரசின் பல்வேறு இலாக்காக்களது இயல்பைப் பொறுத்து அதன் முன்னேற்ற வேகம் வேறுபட்டதாக இருக்க வேண்டும். இந்திய மயமாக்கம் பல்வேறு சம்பள விகிதங் களையும், படித் தொகைகளையும் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். அரசுப் பணித்துறை இந்திய மயமாக்கம் செய்யப்படும் போது பின்தங்கிய வகுப்பினரின் கோரிக்கைகளை நிறைவேற்று வதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும்.

*மே 17, 1929* **டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**

''கடைசியில் சைமன் கமிஷன் அறிக்கை 1930 மே மாதம் வெளியிடப்பட்டது. இந்திய தேசியத்தின், அதன் சக்திகளின் முக்கியத்துவத்தையும் குறிக்கோளையும் அறிக்கை உதாசீனம் செய்திருந்தது. இந்திய அரசியல் கட்சிகளுக்கிடையே உடன்பாடு ஏற்படாததால் இந்தியத் தேர்தல்களில் தனித்தொகுதி முறை தொடரலாம் என்று அது பரிந்துரைத்தது; நேருவின் அறிக்கை அனைவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு தீர்வாக இருக்க முடியாது என்று அது கருதிற்று.''[1].

இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்பு குறித்து விவாதிப் பதற்கு லண்டனில் ஒரு வட்டமேஜை மாநாட்டை நடத்துவது என்று அரசாங்கம் தீர்மானித்தது. இத்தகைய நெருக்கடியான சமயத்தில், தங்களது குடி உரிமைகளை நிலைநாட்டுவதற்கு இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்புச் சட்டத்தில் எத்தகைய பாதுகாப்புகளும் உத்திரவாதங்களும் இடம்பெற வேண்டும் என்பதைத் தெள்ளத் தெளிவாகவும் உறுதியாகவும் கூறுவது, வெளிப்படுத்துவது அவசிய மாக இருந்தது. இதனைக் கருத்திற்கொண்டு டாக்டர் பி.ஆர். அம்பேத்கருடன் கலந்துபேசி, இது குறித்து விவாதிப்பதற்கு இந்தியா வின் பல்வேறு மாகாணங்களைச் சேர்ந்தவர்களையும் அழைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. இதன்படி 1930 ஆகஸ்டு 8,9 தேதி களில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தலைமையில் நாகபுரியில் அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினர் காங்கிரஸ் கூட்டப்பட்டது. 1930 ஆகஸ்டு 8 ஆம் தேதி இந்தக் கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர்

1. கீர், பக்கம்.139

பேசினார். தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு உத்தேச இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் எத்தகைய பாதுகாப்புகளும் உத்தரவாதங்களும் அளிக்கப்பட வேண்டும் என்பதை அவர் தமது உரையில் எடுத்துரைத்தார்.

''ஏற்கனவே அறிவித்தபடி, ஒரு வட்டமேஜை மாநாட்டை பிரிட்டிஷ் அரசாங்கம் லண்டனில் கூட்டிற்று. இந்திய மக்களின் அபிலாஷைகளை நிறைவேற்றும் பொருட்டு இந்தியாவுக்கு ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்தளிப்பதற்காக நடைபெற்ற இந்த மாநாட்டில் இந்தியாவின் பிரதிநிதிகளும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மற்றும் பிரிட்டிஷ் அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர்.

இந்த மாநாட்டில் மொத்தம் எண்பத்து ஒன்பது உறுப்பினர்கள் பங்கேற்றனர். இவர்களில் பதினாறு பேர் மூன்று பிரிட்டிஷ் கட்சிகளின் பிரதிநிதிகள், ஐம்பத்து மூன்று இந்தியப் பிரதிநிதிகள், இது விஷயத்தில் ஒத்துழைக்காத காங்கிரஸைத் தவிர பல்வேறு நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்துபவர்கள் அவர்கள். இருபது பேர் இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகள். விசேட அழைப்பாளர்களில் பதின்மூன்று பேர் இந்து மிதவாதத் தலைவர்கள்; சர் தேஜ் பகதூர் சாப்ரூ, எம்.ஆர்.ஜெயகர், சர் சிமன்லால் செதல்வாட், சீனிவாச சாஸ்சதிரி, சி.ஒய்.சிந்தாமணி ஆகியோர் இவர்களில் முக்கியமானவர்கள். மாட்சிமை தங்கிய ஆகாகான், சர் முகமது ஷாபி, முகமது அலி ஜின்னா, பஸ்லுல் ஹக் ஆகியோர் முஸ்லீம்களையும், சர்தார் உஜ்ஜல் சிங் சீக்கியர்களையும், டாக்டர் பி.எஸ்.மூஞ்சே இந்து மகா சபையையும், கே.டி.பால் இந்தியக் கிறிஸ்தவர்களையும் பிரதிநிதித்துவப்படுத்தினர். மேலும் ஆல்வார், பரோடா, போபால், பிகானீர், காஷ்மீர், பாட்டியாலா மன்னர்களும், மற்றும் சர் அக்பர் ஹைதாரி, சர் சி.பி.ராமசாமி அய்யர், சர். மிர்ஸா இஸ்மாயில் ஆகியோர் இந்திய சமஸ்தானங்கள் சார்பில் வந்திருந்தனர். இவர்களைத் தவிர ஏ.பி.பத்ரோ, பாஸ்கரராவ், வி.ஜாதவ் ஆகியோர் ஏனைய நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்தினர். டாக்டர் அம்பேத்கரும், ராவ் பகதூர் சீனிவாசனும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகளாக வந்திருந்தனர். வட்டமேஜை மாநாட்டில் கலந்துகொள்ளும்படிக் கேட்டுக்கொள்ளும் அழைப்பிதழை 1930 செப்டம்பர் 6 ஆம் தேதி வைசிராய் மூலம் டாக்டர் அம்பேத்கர் பெற்றார். இந்த வட்டமேஜை மாநாடு இந்தியா மற்றும் இங்கிலாந்து ஆகிய இருநாடுகளின் வரலாற்றில் ஒரு மாபெரும் நிகழ்ச்சி என்பதில் ஐயமில்லை. அதிலும்

குறிப்பாக தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரையில் இது அவர்களது வரலாற்றில் சகாப்தகர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சியாகும்; ஏனென்றால் இந்தியாவுக்கான அரசியலமைப்பை வகுப்பதில் ஏனைய இந்தியர்களுடன் சேர்ந்து கலந்தாலோசிக்கப் படும் உரிமை இந்த மாநாட்டில்தான் அவர்களுக்கு வழங்கப்பட்டது. தங்கள் தாயகத்தை ஆளும் விஷயத்தில் இரண்டாயிரம் ஆண்டுக் கால வரலாற்றில் இந்த மாநாட்டில்தான் அவர்களது குரல் முதல் தடவையாக ஒலிப்பதாக இருந்தது.

1930 அக்டோபர் 4 ஆம் தேதி வைசிராய் ஆப் இந்தியா என்ற கப்பலில் டாக்டர் அம்பேத்கர் பம்பாயிலிருந்து லண்டனுக்குப் பயணம் மேற்கொண்டார். அப்போது நாட்டில் நிலவிய சூழ்நிலை அவரது பயணத்துக்கு உகந்ததாக, இசைந்ததாக இல்லை. நாடு முழுவதுமே பெரும் குழப்பத்தில் மூழ்கிப்போயிருந்தது. இந்தியா வின் பிரச்சினைக்குத் தமக்கே உரிய நேர்மையான, நியாயமான முறையில் தீர்வுகாணும் விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைத்த இந்தத் தலைவர்களை காங்கிரசார் வெறுத்தனர், பழி தூற்றினர், வசைவுமாரி பொழிந்தனர். நிலைமை மிகவும் பரபரப் பானதாகவும் அபாயகரமானதாகவும் இருந்தது. அக்டோபர் 8 ஆம் தேதி ஏடனிலிருந்து தமது செயலாளரும், நம்பிக்கையான உதவி யாளருமான சிவ்தர்கருக்கு எழுதிய கடிதத்தில் அவர்களுடைய பாதுகாப்பு சம்பந்தமாக மிகவும் கவலையடைந்திருப்பதாகக் குறிப் பிட்டிருந்தார். அவர்கள் தங்கள் நடைமுறைகளிலும் பேச்சுகளிலும் கவனமாக இருக்கும்படியும், இரவில் பணியாற்றுவதைத் தவிர்க்கும் படியும் வலியுறுத்தி இருந்தார். கட்சி அலுவலகத்தைப் பூட்டி, குறுக்கே ஓர் இரும்பு சலாகையைப் பொருத்தும்படி யோசனை தெரிவித்திருந்தார். பம்பாயில் தங்கள் அமைப்புடன் மோதலில் ஈடு பட்டிருக்கும் ஒரு குறிப்பிட்ட தாழ்த்தப்பட்ட இனத்தலைவரின் நடமாட்டத்தைக் கூர்ந்து கவனிக்கும்படியும் யோசனை தெரிவித் திருந்தார்.

இங்கிலாந்தில் அரசியல் சூழ்நிலைமை தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரச்சினைக்கு ஆதரவாக இருப்பதை டாக்டர் அம்பேத்கர் கண்டார். அவர் இங்கிலாந்து வந்து சேர்ந்ததுமே தாழ்த்தப்பட்ட மக்களின் பிரச்சினை சம்பந்தமாக பிரிட்டனின் முக்கிய அரசியல் கட்சித் தலைவர்களைத் தொடர்பு கொள்ளத் தொடங்கினார். பம்பாய் சட்ட மேலவைக்கு நியமிக்கப்பட்ட உறுப்பினர்களின் புதிய பட்டியலைப் பற்றியும் சௌதார் குள வழக்கில் நீதி மன்றத் தீர்ப்பு பற்றியும் தந்தி மூலம் தெரிந்து கொள்ள மிகவும் ஆவலோடு இருந்தார்.

1930 டிசம்பர் 12ல் திரை விலகியது. வட்ட மேஜை மாநாடு துவங்கும் விஷயத்தில் பிரிட்டிஷ் மக்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர். மாநாடு நடைபெறும் பிரபுக்கள் சபைக்குச் செல்லும் வழியெங்கிலும் கூட்டம் அலைமோதிற்று. மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அங்கு வந்தார். மாநாட்டைத் திறந்து வைத்து அவர் பேசியதாவது : ''பிரிட்டிஷ் மன்னர் இந்திய மண்ணில் எத்தனையோ வரலாற்றுச் சிறப்புமிக்க கூட்டங்களைக் கூட்டியிருக்கிறார்; ஆனால் இந்தியாவுக்கான எதிர்கால அரசாங்க அமைப்பு முறை பற்றி விவாதிப்பதற்கும், அது எந்த அடித்தளங்கள் மீது அமைய வேண்டும் என்று நமது நாடாளுமன்றத்தின் வழிகாட்டுதலைப் பெறுவதற்கான உடன்பாட்டை எட்டுவதற்கும் இப்போது போல் என்றுமே பிரிட்டிஷ், இந்திய ராஜீயவாதிகளும் இந்திய சமஸ்தான மன்னர்களும் ஒரே இடத்தில் ஒரே மேஜை முன்னர் கூடியதில்லை எனலாம்.'' பின்னர் பிரிட்டிஷ் சக்கரவர்த்தி பின்கண்ட நம்பிக்கையை வெளியிட்டார்: ''இந்தியாவுக்குச் சிறப்புப் பணி யாற்றியவர்கள் என்று உங்கள் பெயர்கள் வரலாற்றில் இடம் பெறட்டும்.'' அவையிலிருந்து சக்கரவர்த்தி சென்ற பிறகு வட்டமேசை மாநாட்டின் தலைவராக ராம்சே மக்டொனால்டு ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தியப் பிரச்சினைக்குத் தீர்வுகாண பிரிட்டன் உறுதி கொண்டுள்ளது எனத் தொழிற்கட்சித் தலைவரும் இந்திய அரசாங்கம் என்னும் நூலின் ஆசிரியருமான அவர் கூறினார்; நாம் ஒரு புதிய வரலாற்றின் உதய காலத்தில் இருக்கிறோம் என்று அவர் குறிப்பிட்டார்.

இந்த வட்டமேஜை மாநாடு ஓர் அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்தளிக்கும் அரசியல் நிர்ணயசபை அல்ல. இது இந்திய, பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் கூட்டம்; வாக்கெடுப்பு மூலம் எந்த முடிவுகளையும் அவர்கள் எடுக்க முடியாது. பிரதான பிரச்சினைகள் குறித்து மாநாட்டின் உணர்வைத் தெரிந்து புரிந்து கொள்வதே இதன் நோக்கம்.

இதன் பின்னர் மாநாடு நடைபெறும் இடம் செயிண்ட் ஜேம்ஸ் அரண்மனைக்கு மாற்றப்பட்டது. நவம்பர் 17 முதல் 21 வரை நடைபெற்ற பொதுவிவாதத்தின்போது சப்ரூ, ஜெயகர், மூஞ்சே, ஜின்னா, பிகானீர் மகாராஜா முதலியோர் கருத்தாழமும் உணர்ச்சியு மிக்க சொற்பொழிவுகளை ஆற்றினர். மாநாட்டின் வழிகாட்டியும், நண்பரும், தத்துவமேதையுமான சர் தேஜ் பகதூர் சப்ரூ தெள்ளத் தெளிவான, உணர்ச்சிகளைத் தொடும் நடையில் பின்கண்டவாறு

கூறினார்: ''சமத்துவ அந்தஸ்தைப் பெறுவதற்கு இந்தியா விரும்புகிறது, உறுதி பூண்டுள்ளது. பிரிட்டிஷ் காமன்வெல்த்தைச் சேர்ந்த மூன்று உறுப்பினர்கள் பெற்றுள்ள அந்தஸ்தாகும் இது - இந்த சமத்துவம் மக்கள் குரலுக்கு செவிசாய்ப்பதோடு நில்லாமல், அதற்குப் பொறுப்புக் கூறவும் கடமைப்பட்டுள்ள ஓர் அரசாங்கத்தை வழங்கக் கூடிய சமத்துவமாகும்.''

பிகானீர் மகாராஜா பேசும்போது பிரிட்டிஷ் இந்தியாவின் அபிலாஷைகளைத் தாமும் இதர சுதேச மன்னர்களும் ஆதரிப்பதாகக் கூறினார்; சுயாட்சி புரியும் பிரிட்டிஷ் சமஷ்டி இந்தியாவுடன் இணைய சுதேச மன்னர்கள் தயாராக இருப்பதாகவும் அவர் அறிவித்தார். அனைவரையும் இது வியப்பிலாழ்த்திற்று. இந்த சமஷ்டி பிரகடனத்துக்குப் பாட்டியாலா மகாராஜாவும், போபால் நவாபும் ஆதரவளித்தனர்.

அகில-இந்திய சமஷ்டியை உருவாக்கும் யோசனையை முஸ்லீம் உறுப்பினர்கள் ஆதரித்தனர்; ஆனால் பிரிட்டிஷ் இந்தியாவின் இதர மாகாணங்களுக்கு அளிக்கப்பட்டிருப்பதற்கு இணையான அந்தஸ்தை வடமேற்கு மாகாணத்துக்கு வழங்க வேண்டும் என்றும், ஒரு தனி சிந்து மாகாணத்தை உருவாக்க வேண்டும் என்றும் அவர்கள் பெரிதும் வலியுறுத்தினர்.

ஜெயகர் மடை திறந்த வெள்ளம் போன்ற தமது உத்வேகமிக்க ஆழமான உரையில் இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வழங்கப்படுவதாகப் பிரகடனம் வெளியிடப்பட வேண்டும் என்று கோரினார். அவர் மேலும் சொன்னார்: ''நீங்கள் இந்தியாவுக்கு இன்று குடியேற்ற நாட்டு அந்தஸ்து வழங்கினால், சுதந்திரம் வேண்டும் என்ற கூக்குரல் ஒரு சில மாதங்களிலேயே அதாகவே மாண்டு மறைந்துவிடும். இவ்வாறில்லாமல் மாநாட்டுக்கு வந்துள்ள இந்தியப் பிரதிநிதிகளை வெறுங்கையோடு அனுப்பினால் சுதந்திரக் கோரிக்கை பெரிதும் தீவிரமும், வலுவும் அடையும்.''

பாட்டியாலா மகாராஜாவுக்குப் பிறகு உரையாற்றிய டாக்டர் மூஞ்சே பீல் பிரபுவின் வாதங்களை எல்லாம் மறுதலித்தார்; அவற்றைத் தவிடுபொடியாக்கினார். கப்பல் கட்டும் தொழில், பஞ்சாலைத் தொழில், மற்றும் இதர பல தொழில்களை பிரிட்டிஷ் அரசாங்கம் எவ்வாறு அழித்தொழித்தது என்பதைப் புள்ளி விவரங்களோடு, ஆணித்தரமாக, அசைக்க மறுக்க முடியாத சான்றுகளோடு

விவரித்தார். சட்டமறுப்பு இயக்கத்தைக் கொடிய வன்முறையைக் கொண்டு அடக்கி ஒடுக்கி விடலாம் என்று பிரிட்டன் மனப்பால் குடிக்கிறது; இது முற்றிலும் தவறாகும்; அந்தக் காலம் எல்லாம் மலையேறிவிட்டது என்று கூறினார்.

புதிய அரசியலமைப்புச் சட்டத்தில் தொழிலாளர்களுக்கு அதிக உரிமைகள் வழங்க வேண்டும் என்று என்.எம்.ஜோஷி வலியுறுத்தினார். எதிர்கால அரசியலமைப்பானது சமஷ்டி அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும் என்று சர் மிர்ஸா கருத்துத் தெரிவித்தார். எதிர்கால அரசியலமைப்பு மக்கள் இன்புற்று வாழக்கூடியதாக அமைந்திருக்க வேண்டும் என்று சர் சி.பி.ராமசாமி கூறினார். இரண்டு அல்லது மூன்று பேர் பேசிய பிறகு ஒருவர் எழுந்தார். அவருக்கு ஆஜானபாகுவான உடல்; அவர் தன்னம்பிக்கையின், உறுதியின் சொந்தக்காரர்; தமது மனவலிமையால், தார்மிக சக்தியால் படுபாதாளத்திலிருந்து கொடுமுடிக்கு விண்ணெட்ட உயர்ந்தவர். கண்களை மின்வெட்டும் ஆடை அணிகள் அணிந்த முடி மன்னர்களுக்கும், மாபெரும் அறிவுலக மேதைகளுக்கும் எத்திக்கும் ஏற்றிப் போற்றும் சட்ட வல்லுநர்களுக்கும் புகழ்மிகு சிம்மாசனங்களையும், ஜாகீர்களையும் ஏனைய பல அமைப்புகளையும், நலன்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் பேராளர்களுக்கும் இடையிலிருந்து அவர் எழுந்தார். அவர் யார்? கோடீசுவர கோமானல்ல; கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று ஆர்ப்பரிக்கும் அடாவடிப் பேர்வழியல்ல. மாறாக அவர் இந்தியாவின் ஏழைகளிலும் ஏழைகளின் பிரதிநிதி; அரைவயிற்றுக் கஞ்சிக்கும் வழியின்றி, உடுத்த உடையின்றி, வாயிருந்தும் ஊமைகளாக அவல வாழ்வு வாழும் பரிதாபத்துக்குரிய மக்களின் பிரதிநிதி; இப்போது அவர் என்ன சொல்லப்போகிறார்? அதை எப்படிச் சொல்லப் போகிறார்? அவர் கல்வி கற்க உதவிய மன்னர் இந்த மன்றத்தில் இருக்கிறார். அவருடைய பள்ளி ஆசிரியர்களில் ஒருவர் இந்தக் கூட்டத்தில் இருக்கிறார். அனைவர் கண்களும் அசரவில்லை, துஞ்சவில்லை. அவர் தமது மனத்தை அறிவார்; என்ன சொல்ல வேண்டும், அதை எப்படிச் சொல்ல வேண்டும் என்பதை அறிவார். பிரதமர் மக்டோனால்டையும், ஜோஷியையும் தவிர அங்குக் குழுமியிருந்தோரில் வேறு எவரும் ஏழ்மையை, வறுமையை அதன் குரூரமான, கோரமான. இழிந்த, அருவருக்கத்தக்க வடிவத்தில் கண்டதில்லை. மாநாட்டில் எத்தனை எத்தனையோ பண்டிதர்கள் இருந்தார்கள், அறிஞர்கள் இருந்தார்கள், இலக்கிய மேதைகள் இருந்தார்கள், ஆனால் இவர்களை விட உயர்ந்தவராக, கல்வித் துறையில் மிக உயர்ந்த டாக்டர் பட்டம் பெற்ற பேரறிஞராக ஒரு மனிதர்

இருந்தார். அந்த மனிதர்தான் டாக்டர் அம்பேத்கர், இந்தியத் திருநாட்டின் அடக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களின் ஈடு இணை யற்ற தலைவர் அவர்.

மாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் பேசும்போது, பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கட் தொகையில் ஐந்திலொரு பங்கினரது - இது இங்கிலாந்து அல்லது பிரான்சின் மக்கட் தொகைக்குச் சமமானது - கண்ணோட்டத்தை எடுத்துரைப்பதாகக் கூறினார். இவர்கள் பண்ணை யாள் அல்லது அடிமையின் நிலைமைக்குத் தற்போது தாழ்த்தப் பட்டு விட்டனர். தற்போதுள்ள அரசாங்கத்துக்குப் பதிலாக மக்களால் மக்களைக் கொண்டு மக்களால் நடத்தப்படும் மக்கள் அரசாங்கங்கள் ஏற்பட வேண்டும் என்று தீண்டத்தகாதவர்கள் விரும்புகிறார்கள் என்று அனைவரின் ஆச்சரியத்துக்கிடையே கூறினார். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி குறித்து தீண்டத்தகாதவர்களின் போக்கில் ஏற்பட் டுள்ள இந்த மாற்றம் மிகவும் வியப்பான, பெரும் சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சிப்போக்கு எனலாம் என்று குறிப்பிட்டார். மேலும், தமது கருத்தை நியாயப்படுத்தும் வகையில், கண்களில் ஒளி வீசப் பின்கண்டவாறு கூறினார்; ''நமது இன்றைய நிலைமையை பிரிட்டிஷ் ஆட்சி காலத்துக்கு முன்னர் இந்திய சமுதாயத்தில் இருந்து நமது நிலைமையுடன் ஒப்பிடும்போது நாம் முன்னேறிச் செல்வதற்குப் பதிலாக நாம் நல்ல காலத்தை எதிர்பார்த்துக் கொண் டிருக்கிறோம். பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னர் தீண்டாமை யின் காரணமாக அருவருக்கத்தக்க நிலைமையில் இருந்தோம். இந்த அவல நிலையை அகற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் ஏதேனும் செய்ததா? பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் கிராமக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க முடியாதவர்களாக இருந்தோம். அவ்வாறு நாம் தண்ணீர் எடுக்கும் உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் நமக்குப் பெற்றுத் தந்ததா? பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னம் நாம் கோவிலுக் குள் நுழைய முடியாதவர்களாக இருந்தோம். பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் காவல் படையில் சேர நாம் அனுமதி மறுக்கப்பட்டோம். இப்போது நம்மை பிரிட்டிஷ் அரசாங்கம் நம்மைக் காவல் படையில் சேர அனுமதிக்கிறதா? பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் ராணுவத்தில் சேர்ந்து சேவை செய்ய நமக்கு அனுமதி மறுக்கப்பட்டது. அந்த வாய்ப்பு இப்போது நமக்கு இருக்கிறதா? இந்தக் கேள்விகள் எல்லா வற்றுக்கும் 'ஆம்' என்று நாம் பதிலளிக்க இயலாத நிலையில் இருக்கிறோம். நமக்கு இழைக்கப்பட்ட இந்தக் கொடுமைகள், காயங்கள் இன்னும் அப்படியே இருக்கின்றன. பிரிட்டிஷ் ஆட்சி வந்து 150 ஆண்டுகள் ஆகியும் இந்தக் காயங்கள், புண்கள் இன்னும் ஆற்றப்படவில்லை.''

''அந்த அரசினால் யாருக்கு என்ன நன்மை?'' என்று அவர் மாநாட்டில் வினவினார். இதைக் கேட்டதும் பிரிட்டிஷ் பிரதிநிதிகள் ஒருவர் மற்றொருவர் முகத்தை நோக்கினர். இந்தியப் பிரதிநிதிகளிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து பேசினார்: ''தொழிலாளிகளுக்கு ஒரு வாழ்க்கைச் சம்பளத்தையும், மதிப்புடன் கூடிய வேலை நிலைமைகளையும் முதலாளிகள் மறுத்து வந்தனர் என்பதை அந்த அரசு உணரவே செய்தது. நிலச் சுவான்தார்கள் மக்களைக் கசக்கிப் பிழிந்து வந்ததையும் அரசு உணரவே செய்தது. இருந்தபோதிலும் ஒடுக்கப்பட்ட வர்க்கங் களின் வாழ்க்கையில் பல ஆண்டுகளாகத் துன்ப துயரங்களை ஏற்படுத்தி வந்த சமூகத் தீமைகளை அது அகற்றவில்லை. இந்தத் தீமைகளை அகற்றுவதற்கு அதனிடம் சட்டப்பூர்வமான அதி காரங்கள் இருந்தபோதிலும், ஏற்கனவே இருந்து வந்த சமூக, பொருளாதார வாழ்க்கைச் சட்டத்தை அது திருத்தவில்லை, ஏனெனில், அதனுடைய தலையீட்டுக்கு எதிர்ப்பை ஏற்படுத்தும் என்று அது அச்சமடைந்தது.'' எனவே, அவர் இவ்வாறு பிரகடனம் செய்தார்: ''நாட்டின் சிறந்த நலன்களுக்குக் குறைவற்ற ஈடுபாடு செலுத்துபவர் களை அதிகாரத்தில் கொண்ட ஓர் அரசு நமக்கு வேண்டும். கீழ்ப் படிதல் எங்கு முடிவடைந்து எதிர்ப்புத் தொடங்கும் என்பதைத் தெரிந்துள்ளவர்களை, நீதியும் எதார்த்த நிலைமையும் மிக அவசர மாகத் தேவைப்படுத்துகிற சமூக, பொருளாதார வாழ்க்கை முறையைத் திருத்துவதற்கு பயப்படாதவர்களை அதிகாரத்தில் கொண்ட ஓர் அரசு நமக்கு அவசியம் இல்லை.

டொமினியன் அந்தஸ்துக்கான கோரிக்கையை டாக்டர் அம்பேத்கர் ஆதரித்துப் பேசினார்; ஆனால், புதிய அரசமைப்புக் கூட்டத்திற்கான அரசியல் ஏற்பாடு தனிச் சிறப்புடையதாக அமைக்கப் பட்டாலொழிய தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் அதனால் பலன் பெறுவார்களா என்பது குறித்து ஐயப்பாடு தெரிவித்தார். அந்த அரசமைப்புக் கூட்டத்தை உருவாக்கும்போது, ஒரு பக்கம் மரியாதை உயர்ந்து கொண்டு போவது, மறுபக்கம் அவமதிப்பும் இகழ்ச்சியும் அதிகரித்துக் கொண்டு போவதுடன் கூடியதும், சாதி ஏற்றத் தாழ்வுகளும் கொண்ட இந்திய சமுதாயம் சமத்துவமும் சகோதரத் துவமும் தழைப்பதற்கு எவ்வித வாய்ப்பும் அளிக்கவில்லை என் பதையும் அறிவு ஜீவிகள் மேல்தட்டிலிருந்து தோன்றியவர்கள் என்பதையும் அவர்கள்தான் அரசியல் இயக்கங்களை நடத்தினார்கள் என்பதையும், அவர்கள் குறுகிய சாதி மனப்பான்மைகளைக் கைவிடவில்லையென்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்

என்று அவர் கூறினார். எனவே, நாமே முயன்றால் அல்லாமல் வேறு யாரும் நம்முடைய குறைகளைப் போக்க முடியாது என்றும், மேலும் நமது கையில் அரசியல் அதிகாரம் பெற்றாலன்றி, நாம் அவற்றைப் போக்க முடியாது என்றும் நாங்கள் உணருகிறோம். இந்த அற்புதத்தை நிகழ்த்துவதற்கு தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் நீண்ட காலம் காத்திருக்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன்!'' என்று அவர் வலியுறுத்தினார்.

இந்திய முட்டுக்கட்டையைப் பற்றிக் குறிப்பிடுகையில், அரசியல் தத்துவ ஞானத்தின் மகத்தான ஆசான் என்று அவர் கருதிய எட்மண்ட் பர்க்கின் ''படை பலத்தை உபயோகிப்பது தற்காலிக மானதுதான்'' என்ற சொற்களை அவர் நினைவு கூர்ந்தார். தனது ஒளிவீசும் உரையின் முடிவில் அவர், பிரிட்டிஷ் அரசுக்கும், அந்த மாநாட்டில் கண்ணாமூச்சி விளையாட்டில் ஈடுபட்டிருந்தவர் களுக்கும் ஒரு கடும் எச்சரிக்கையை விடுத்தார். நாட்டின் இன்றைய மனப் பக்குவத்தில், பெரும்பான்மையான மக்களுக்கு ஏற்றுக் கொள்ளப்பட முடியாத எந்த அரசமைப்புச் சட்டமும் செயல்படுத் தப்பட முடியாது என்பது போதுமான அளவு உணரப்படவில்லை என்று நான் கருதுகிறேன். நீங்கள் தேர்வு செய்வதற்கும், இந்தியா அதை ஏற்றுக் கொள்வதற்குமான காலம் மலையேறிவிட்டது, இனி ஒருபோதும் அது திரும்பி வராது. உங்களுடைய புதிய அரசமைப்புச் சட்டம் செயல்படுத்தப்பட வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், தர்க்க நியாயத்திற்கு மாறாக, மக்களின் சம்மதம்தான் அதற்கு உரை கல்லாக இருக்க முடியும்''*× என்று அவர் கூறினார்.

அந்த உரையில் அவருடைய அச்சமற்ற தொனியும், துணிவான விமர்சனமும் மாநாட்டில் ஓர் அதிசயமான தாக்கத்தை ஏற்படுத்தியது. மாநாட்டின் முன் தெளிவான முறையில் டாக்டர் அம்பேத்கர் விவரங்களை முன்வைத்த வெளிப்படைத் தன்மையும், அச்சமற்ற தன்மையும் பிரதிநிதிகளைப் பெருமளவு கவர்ந்தது. மற்றும் அவருடைய உன்னதமான உரைக்காக அவர்கள் அவரைப் பாராட்டினார்கள்.

---

★ இந்திய வட்ட மேஜை மாநாடு, 1930-31, நடவடிக்கைகள், பக். 123-29.

× வட்ட மேஜை மாநாட்டில் டாக்டர் அம்பேத்கரின் உரைகள், டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் கட்டுரைகள் மற்றும் உரைகளைப் பார்க்கவும். தொகுதி-2. – **ஆசிரியர்கள்.**

பிரிட்டிஷ் பிரதம மந்திரியிடம் அது ஒரு நல்ல அபிப் பிராயத்தை ஏற்படுத்தியது. மாநாடு முழுவதிலும் மிக உன்னதமான சொற்பெருக்குகளில் இது ஒன்று என இந்த உரையை இந்தியன் டெய்லி மெயில் வர்ணித்தது. இந்த மாநாட்டில் ஒரு மனிதர் அவருடைய உரையினால் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவர் நிறைவான வியப்புணர்வுடனும், திருப்தியுடனும், உயர்வான பாராட்டுடனும் தனது அரச மாளிகைக்குத் திரும்பினார். அவருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. அன்றையப் பேச்சாளருக் காகத் தாங்கள் மேற்கொண்ட முயற்சிகளும், செலவழித்த பணமும் நிறைவெய்தின என்று அவர் தனது அரசி மனைவியிடம் கூறினார். அது ஒரு சாதனை, ஒரு புகழ்மிக்க வெற்றி! இவ்வாறு வியந்து பாராட் டியவர் மேன்மை தங்கிய பரோடா மகாராஜாவைத் தவிர வேறு யாருமல்ல! அவர், தனது நெருக்கமான நண்பர்களுக்காக லண்டனில் அளித்த ஒரு சிறப்பு இரவு விருந்துக்கு டாக்டர் அம்பேத்கரை அழைத்திருந்தார். ஒரு நாடகப் பாணியிலமைந்த பரபரப்பான சூழ்நிலைமையின் விளைவாக பல ஆண்டுகள் பகைமையில் கழிந்த தற்குப் பின்னர், கெய்க்வாடும் அம்பேத்கரும் சந்தித்தது ஒரு விநோதமான விதியின் விளையாட்டேயாகும்.

டாக்டர் அம்பேத்கரின் இந்த சக்தி வாய்ந்த உரையின் தாக்கம் பத்திரிகைகளின் மீது கூட பெருமளவாக இருந்தது, ஆங்கிலப் பத்திரிகைகளும், பத்திரிகையாளர்களும் தாழ்த்தப்பட்ட வர்க்கங் களின் இந்தத் தலைவரின் மீது கவனம் செலுத்தினர். லார்ட் சைடன்ஹாம், ஓட்வியர் போன்ற ஆங்கிலேய ராஜதந்திரிகளும், டாக்டர் அம் பேத்கரின் நாகபுரி உரையைக் கடுமையாகக் கண்டித்து ஸ்பெக் டேட்டர் இதழில் கருத்துத் தெரிவித்த மற்றவர்களும் இப்பொழுது, டாக்டர் அம்பேத்கர் ஒரு தேசியவாதியென்று பூரணமாக ஒத்துக் கொண்டனர். எனவே அவர்கள், இந்தியாவின் புரட்சிகரத் தலைவர் களில் அவரும் ஒருவர் என்று கிசுகிசுக்கத் தொடங்கினர். சில ஆங்கி லேய ராஜதந்திரிகள், அம்பேத்கர் புரட்சிகர முகாமைச் சேர்ந்தவரா என்று ஏ.பி. லாத்தேயை ரகசியமாக வினவினர். பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின்பால் இந்த விதமான விசாரணை எதிர்பாராததல்ல. 1917ல் அமெரிக்காவிலிருந்து டாக்டர் அம்பேத்கர் பிரிட்டனில் வந்திறங்கியபோது, பிரிட்டிஷ் ரகசிய போலீசார் எவ்வாறு அவரைப் பூரணமாக சோதனை போட்டார்கள் என்பது நினைவுகூரத்தக்கது.

மாநாட்டின் துவக்கக் காலகட்டத்தின்போது சாப்ரூ, சாஸ்திரி, செதல்வாட் ஆகிய மிதவாதத் தலைவர்கள் - வகுப்புவாதப் பிரச்சினை

சம்பந்தமாக முஸ்லிம் பிரதிநிதிகளுடன் ஓர் உடன்பாடு காண்பதற்கு ஒரு முயற்சி செய்தனர். இந்து பிரதிநிதிகள், சர். கொவாஸ்ஜி ஜெஹாங்கிர் இல்லத்தில் சாஸ்திரியின் தலைமையில் கூடி, முஸ்லிம் பிரதிநிதிகளுடன் ஓர் சமரசம் செய்து கொள்ளும் சாத்தியப்பாடு பற்றி விவாதித்தார்கள். டொமினியன் (குடியேற்ற நாட்டு) அந்தஸ்து வழங்கப்பட்டதற்குப் பின்னர், அத்தகைய உடன்பாடு சாத்திய மாகும் என்று மூஞ்சேயும் ஜயகரும் கருத்துத் தெரிவித்தனர். போபால் நவாப், ஆகாகான், ஜின்னா மற்றும் பிறருடன் போபால் நவாபின் இல்லத்தில் மிதவாதத் தலைவர்கள் ஜயகர், மூஞ்சே மற்றும் அம்பேத்கர் விவாதங்கள் நடத்தினர். ஆனால், சிந்து மாகாணத்தைப் பிரிக்க வேண்டும் என்ற முஸ்லீம் கோரிக்கை விஷயத்தில் பேச்சு வார்த்தைகள் முறிந்துபோயின. மூஞ்சேயும் ஜயகரும் அக்கோரிக் கையை உறுதியாக எதிர்த்தனர். தவிரவும், பிற மாகாணங்களில் தங்களுக்காக அவர்கள் கேட்ட அதே கோரிக்கையை, முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களில் இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் அதே விகிதாசார ரிசர்வ்ட் இடங்களை வழங்கு வதற்கு முஸ்லிம் தலைவர்கள் தயாராக இருக்கவில்லை.

விரிவடைந்த கூட்டத்தில் பொதுவான விவாதத்திற்குப் பின்னர், மாநாடு ஒன்பது துணைக் குழுக்களை நியமித்தது; டாக்டர் அம்பேத்கர், அனேகமாக எல்லா முக்கியத் துணைக் குழுக் களிலும் - கூட்டாட்சிக் கட்டமைப்புக் குழுவைத் தவிர - உறுப் பினராக இடம்பெற்றிருந்தார். சிறுபான்மையோர் துணைக்குழு, மாகாணங்கள் சம்பந்தமான துணைக்குழு, சேவைகள் துணைக்குழு ஆகியவற்றில் இந்தியாவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்துமான பிரபல நுண்ணறிவாளர்களுடன் அவர் சேவை புரிந்தார். மாகாணங்கள் சம்பந்தமான துணைக் குழுவின் அறிக்கை மீதான விவாதத்தில், இந்தியாவில் எந்த ஒரு மாகாணத்திலும் ஓர் இரண்டாவது அவை (மேலவை) முற்றிலும் அவசியமற்றது, விரும்பத்தகாததுமாகும் என்ற சிந்தாமணியின் கருத்தை டாக்டர் அம்பேத்கர் ஆதரித்தார்.

பாதுகாப்புக் கமிட்டியின் அறிக்கையின் மீதான விவாதத்தின் போது, திறமை மற்றும் அவசியமான தகுதிகளைப் பெற்றிருப்பது ஆகிய கண்ணோட்டங்களுடன் ஏற்புடைய முறையில் அனைத்து இந்தியர்களும் ராணுவத்தில் சேர்க்கப்பட வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் வாதித்தார். தனது குறிக்கோளை சாதிப்பதற்கு டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய மிக முக்கியமான பணி, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் கலாசார, சமய மற்றும் பொருளாதார உரிமைகளைப்

பாதுகாப்பதற்கான அடிப்படை உரிமைகள் பிரகடனத்தைத் தயாரித்ததாகும். மிகுந்த உழைப்புடனும், ராஜதந்திரத்துடனும் அவர் அந்தத் திட்டத்தைத் தயாரித்து, வருங்கால இந்தியாவின் அரசமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்காக அதை சிறுபான்மையோர் துணைக் குழுவிடம் சமர்ப்பித்தார். 'ஒரு தன்னாட்சி இந்தியாவின் வருங்கால அரசமைப்புச் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பாதுகாப்பதற்கான அரசியல் பாதுகாப்புகள்''[1] என்று அத்திட்டத்திற்குத் தலைப்பிடப்பட்டிருந்தது.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கரால் தயாரிக்கப்பட்ட, பின்னணியுடன் கூடிய ஆவணத்தின் வாசகம் பின்வருமாறு: ஆசிரியர்கள்

''1930 நவம்பர் 12ல், காலஞ்சென்ற மேன்மைதங்கிய ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்திய வட்டமேஜை மகாநாட்டை முறைப்படி துவக்கி வைத்தார். இந்தியர்களின் கண்ணோட்டத்தில், வட்ட மேஜை மாநாடு மகத்தான முக்கியத்துவமுடைய ஒரு நிகழ்ச்சியாகும். இந்தியாவுக்கு ஓர் அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கும் விஷயத்தில் கலந்தாலோசிக்கப்படுவதற்கு இந்தியர்களுக்குள்ள உரிமையை மேன்மைதங்கிய அரசு அங்கீகரித்திருப்பதில்தான் அதன் முக்கியத்துவம் அடங்கியுள்ளது. தீண்டப்படாதார்களுக்கு இது, அவர்களின் வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். ஏனெனில், தீண்டப்படாதார், முதல் தடவையாக, இரு பிரதிநிதிகளால் பிரதிநிதித்துவப்படுவதற்கு அனுமதிக்கப்பட்டனர். நானும் திவான் பகதூர் ஆர். சீனிவாசனுமே இப்பிரதிநிதிகள். தீண்டப்படாதார், இந்துக்களுக்கு அப்பாற்பட்ட ஒரு தனி இனமாகக் கருதப்பட்டனர் என்பது மட்டுமன்றி, இந்தியாவுக்கான ஓர் அரசமைப்புச் சட்டத்தை வகுப்பதில் கலந்தாலோசிக்கப்படும் உரிமை பெறும் அளவிற்கு முக்கியத்துவம் பெறுகின்றனர் என்பதும் இதன் பொருளாகும்.

மாநாட்டின் பணி ஒன்பது கமிட்டிகளிடையில் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இக்கமிட்டிகளில் ஒன்று, சிறுபான்மையோர் கமிட்டி என்றழைக்கப்பட்டது. வகுப்புவாதப் பிரச்சினைக்கு ஒரு தீர்வைக் கண்டறியும் மிகவும் கடினமான பணி இக்கமிட்டியிடம் விடப்பட்டது. இந்த கமிட்டி மிகவும் முக்கியமான கமிட்டி என்பதை முன்கூட்டியே அறிந்து, பிரதம மந்திரி, காலஞ்சென்ற திரு. ராம்சே மேக் டொனால்ட் அவர்களே இதனுடைய தலைமைப் பொறுப்பை

1. கீர், பக்கம் 144-153.

ஏற்றார். சிறுபான்மையோர் கமிட்டியின் நடவடிக்கைகள் தீண்டப் படாதாருக்கு மிக மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில், காங்கிரசுக்கும் தீண்டப்படாதாருக்கும் இடையில் வேறுபாடு ஏற்பட்டதன் பெரும் பகுதியும், அவர்களுக்கு இடையில் மனக் கசப்பை ஏற்படுத்தியதுமான இதை அந்தக் கமிட்டியின் நடவடிக்கை களில் காணலாம்.

வட்டமேஜை மாநாடு, தீண்டப்படாதாரின் கோரிக்கை களைத் தவிர, கமிட்டிகளின் அரசியல் கோரிக்கைகளுக்கு ஒத்துக் கொண்டது என்பது நன்கு அறியப்பட்டதே. உண்மையில், 1919ம் வருட அரசமைப்புச் சட்டம் அவர்களை சட்டப்படியான சிறு பான்மையோர் என்று அங்கீகரித்து, அவர்களது பாதுகாப்பு மற்றும் பந்தோபஸ்து சம்பந்தப்பட்ட விதிகளை அதில் சேர்த்திருந்தது. அவர்கள் விஷயத்தில் அந்த ஷரத்துகளை விரிவுபடுத்துவது, அல்லது அவற்றின் வடிவத்தை மாற்றியமைப்பது என்ற பிரச்சினை எழுந்தது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் சம்பந்தமாக நிலைமை வேறுவிதமாக இருந்தது. 1919-ம் ஆண்டின் அரசமைப்புச் சட்டத் திற்கு முந்திய மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை, அவர்களின் பாதுகாப்புக்கு அரசமைப்புக் கூட்டத்தில் வகை செய்யப்பட வேண்டுமென்று மிகவும் திட்டவட்டமாகக் கூறியிருந்தது. ஆனால் துரதிருஷ்டவசமாக, அரசமைப்புச் சட்டத்தின் விவரங்கள் வகுக் கப்பட்டபோது அவர்களின் பாதுகாப்புக்காக எந்த ஷரத்துக்களையும் வகுத்தளிப்பது மிகவும் சிரமமாக இருப்பதாக இந்திய அரசு கண் டறிந்தது. சட்டப் பேரவைகளின் நியமனத்தின் வாயிலாக அவர் களுக்கு அடையாளபூர்வமான பிரதிநிதித்துவம் அளிப்பதை மட்டுமே அது செய்தது. இந்துக்களின் கொடுங்கோல் மற்றும் ஒடுக்குமுறைக்கு எதிராக, தமது பாதுகாப்பிற்காக, தீண்டப்படாதார் அவசியம் என்று கருதிய பாதுகாப்புகளை வரையறுத்துக் கூறுவதே செய்யப்பட வேண்டிய முதலாவது காரியமாக இருந்தது. வட்ட மேஜை மாநாட்டின் சிறுபான்மையோர் கமிட்டிக்கு ஓர் ஆவணத்தை சமர்ப்பிப்பதன் மூலம் இதை நான் செய்தேன். என்னால் வரை யறுத்துக் கூறப்பட்ட பாதுகாப்புகள் குறித்த ஒரு கருத்தை அளிப் பதற்கு அந்த ஆவணத்தின் வாசகத்தை நான் கீழே மறுபிரசுரம் செய்கிறேன்:

இந்திய வட்ட மேஜை மாநாட்டுக்கு சமர்ப்பிக்கப்பட்ட ஒரு சுயாட்சி உடைய இந்தியாவின் வருங்கால அரசமைப்புச்

சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பாதுகாப்புக்கான அரசியல் பாதுகாப்புகளின் ஒரு திட்டம்.

ஒரு சுயாட்சியுடைய இந்தியாவில் பெரும்பான்மையோரின் ஆட்சியின்கீழ் தங்களை இருத்திக் கொள்வதற்கு தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் கீழ்வரும் விதிகள் மற்றும் நிபந்தனைகளின் கீழ் சம்மதிப்பார்கள்.

### நிபந்தனை எண் 1 :

## சமத்துவக் குடியுரிமை

தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், தங்களுடைய தற்போதைய பரம்பரையாக அடிமைப்பட்டவர்கள் என்ற நிலையில் பெரும்பான்மையோரின் ஆட்சிக்குத் தங்களைக் கீழ்ப்படுத்திக் கொள்வதற்கு சம்மதிக்க முடியாது. பெரும்பான்மையோரின் ஆட்சி நிறுவப்படுவதற்கு முன்னால் தீண்டாமை முறையிலிருந்து தங்களுடைய விடுதலை, நிறைவு பெற்ற உண்மையாக வேண்டும். இது பெரும்பான்மையோரின் சித்தத்திற்கு விடப்படக்கூடாது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் சுதந்திரமான குடியுரிமை பெற்றவர்களாக வேண்டும். நாட்டின் பிற குடிமக்களைப் போன்றே அனைத்துக் குடியுரிமையின் அனைத்து உரிமைகளுக்கும் தகுதியுள்ளவர்களாக்கப்பட வேண்டும்.

(அ) தீண்டாமை ஒழிப்பை சாத்தியமாக்குவதற்கும், குடிகளின் சமத்துவ உரிமையைத் தோற்றுவிப்பதற்கும், கீழ்வரும் அடிப்படை உரிமை இந்தியாவின் அரசமைப்புச் சட்டத்தின் பாகமாக்க வேண்டும் என்று பிரேரணை செய்யப்படுகிறது.

## அடிப்படை உரிமை

''இந்தியாவிலுள்ள அனைத்துக் குடிமக்களும் சட்டத்தின் முன் சமமானவர்கள். அவர்களுக்கு சமத்துவ சிவில் உரிமைகள் உண்டு. தீண்டாமையின் காரணமாக, எந்த அபராதமோ பாதிப்போ, இயலாமையோ சுமத்தப்படுவதற்கும் அல்லது நாட்டின் எந்த ஒரு பிரஜைக்கு எதிராகவும் எந்தப் பாரபட்சமோ காட்டப்படுவதற்கும் வகை செய்யும் தற்போதிருந்து வரும் எந்த

*அமெரிக்க அரசியல் சட்டத்தின் 14வது திருத்தமும் அயர்லாந்து அரசு சட்டத்தின்(1920) 10, 11 விதிகள், 5வது அத்தியாயம், 67வது பிரிவு 5(2).*

சட்டமோ, விதியோ, உத்தரவோ, வழக்கமோ அல்லது சட்டத்தின் வியாக்கியானமோ, இந்த அரசமைப்புச் சட்டம் அமலுக்கு வரும் நாளிலிருந்து இந்தியாவில் எந்த பாதிப்பும் ஏற்படுத்துவதினின்றும் ரத்தாகும்.''

(ஆ) 1919ம் வருட இந்திய அரசு சட்டத்தின் 110, 111வது பிரிவுகளின்படி நிர்வாக அதிகாரிகள் அனுபவித்துவரும் காப்புரிமைகளும் விதிவிலக்குகளும் ரத்து செய்யப்படும்; மேலும் நிர்வாக ரீதியிலான நடவடிக்கைக்கு அவர்கள் உள்ளாகும் நிலைமை, ஓர் ஐரோப்பிய பிரிட்டிஷ் பிரஜைக்கு உள்ளது போன்று அதே நிலைமையில் வைக்கப்படும்.

எல்லா அரசமைப்புச் சட்டங்களிலும் இது இவ்வாறு தான்உள்ளது. சிஎம். 207ல் பேராசிரியர் கீய்த் கூறியுள்ளவற்றைப் பார்க்கவும். பக். 56.

## நிபந்தனை 2

## சம உரிமைகளைத் தங்குதடையின்றி அனுபவித்தல்

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு சம உரிமைகள் உண்டு என்று பிரகடனம் செய்வதால் மட்டும் பயனில்லை. தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பிரஜைகளின் சம உரிமைகளைச் செயல்படுத்த முயலும் போது, வைதீகச் சமுதாயத்தின் முழு எதிர்ப்பு சக்தியையும் எதிரிட நேரும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. எனவே, உரிமைகள் பற்றிய இந்தப் பிரகடனங்கள் வெறும் புனிதமான அறிவிப்புகள் என்ற அளவில் இல்லாது அன்றாட வாழ்க்கையின் எதார்த்தங்களாக தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் உணர வேண்டுமெனில், இந்த அறிவிக்கப்பட்ட உரிமைகளை அவர்கள் அனுபவிப்பதற்கு இடையூறாக தலையிடுபவர்களுக்குப் போதிய தண்டனையும் அபராதமும் விதிக்கப்படும் வகையில் அவர்கள் பாதுகாக்கப்பட வேண்டும்.

(அ) எனவே, குற்றங்கள், நடவடிக்கை, அபராதங்கள் சம்பந்தமான 1919ம் வருட இந்திய அரசு சட்டத்தின் 11ம் பாகத்திற்குக் கீழ்வரும் பிரிவுகள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டுமென்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பிரேரணை செய்கின்றன.

*(i) குடியுரிமையை மீறும் குற்றம்*

*''எந்த நபருக்காவது, சட்டப்படியல்லாது, எல்லா வர்க்கங்களுக்கும் பொருந்துகின்ற, முந்தைய தீண்டாமை நிலைமையைக் கணக்கில் கொள்ளாது எந்த சலுகைகள், அனுகூலங்கள், வசதிகள், விடுதிகளில் தங்கும் உரிமைகள், கல்வி நிலையங்கள், சாலைகள், நடைபாதைகள், தெருக்கள், குளங்கள், கிணறுகள், இதர நீர்நிலைகள், நிலம், வானம் அல்லது நீரில் பொதுப் போக்குவரத்து வாகனங்கள், தியேட்டர்கள் அல்லது பொது மனமகிழ் இடங்கள், விடுதிகள் அல்லது கழிப்பிடங்கள் - பொதுமக்களின் நன்மைக்காக நிறுவப்பட்டவை, அல்லது பொதுமக்களின் உபயோகத்திற்காக பராமரிக்கப்படுபவை அல்லது லைசென்சுக்கு விடப்பட்டவை ஆகியவற்றைப் பயன்படுத்துவதை யாராவது மறுத்தால் அவர்கள் தண்டிக்கப்படுவார்கள், சிறைத்தண்டனை விதிக்கப்படுவர்; அது ஐந்தாண்டுகள் வரை நீடிக்கக்கூடும், மேலும் அபராதமும் விதிக்கப்படும்''.*

*அமெரிக்காவின் பொதுச் சட்டங்கள், சிவில் உரிமைகள் சட்டம், ஏப்ரல் 9, 1868 மற்றும் மார்ச் 1, 1895 - நீக்ரோக்களின்நலனுக்காக, அவர்களின் விடுதலைக்குப் பின் நிறைவேற்றப் பட்டது.*

*(ஆ) தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தமது உரிமைகளை அமைதி பூர்வமாக அனுபவிப்பதற்கு எதிராக வைதீகத் தனிநபர்கள் செய்யும் இடையூறுகள் மட்டுமே ஆபத்தானதல்ல. மிகவும் வழக்கமான இடையூறின் வடிவம் சமூக பகிஷ்காரம் ஆகும். வைதீக வர்க்கங்களின் கைகளில் அதுதான் மிகவும் வலிமையான ஆயுதமாகும். அதைக் கொண்டு அவர்கள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் எந்த நடவடிக்கைக்கான முயற்சியையும், அது அவர்களுக்கு ஜீரணிக்க முடியாததாகயிருந்தால், முறியடிக்கிறார்கள். அது செயல்படும் முறையும், அது செயலாக்கப்படும் சந்தர்ப்பங்களும் 1928ல் பம்பாய் அரசு நியமித்த கமிட்டியின் அறிக்கையில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. ''ராஜதானியில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் (தீண்டப்படாதாரின்) மற்றும் பழங்குடிகளின் கல்வி, பொருளாதார மற்றும் சமூக நிலைமையை விசாரணை செய்வதற்கும், அவர்களின் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளைப் பரிந்துரை செய்வதற்கும் இக்கமிட்டி அமைக்கப்பட்டது. அந்த அறிக்கையின் ஒரு பகுதி பின் வருமாறு:*

## தாழ்த்தப்பட்ட வர்க்கங்களும் சமூக பகிஷ்காரமும்

''102. அனைத்துப் பொது வசதிகளிலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தமது உரிமைகளைப் பெறுவதற்குப் பல்வேறு பரிகாரங்களை நாங்கள் பரிந்துரை செய்துள்ளபோதிலும், நீண்ட காலத்திற்கு அவர்கள் அவற்றை நடைமுறைப்படுத்தும் வழியில் சிரமங்கள் இருக்கும் என்று நாங்கள் அஞ்சுகிறோம். முதலாவது இடையூறு, வைதீக வர்க்கங்கள் அவர்களுக்கு எதிராக பகிரங்கமான வன்முறையில் ஈடுபடுவார்கள் என்ற அச்சம். ஒவ்வொரு கிராமத்திலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் ஒரு சிறிய சிறுபான்மையோராக இருக்கின்றனர்; அவர்களுக்கு எதிராக வைதீகர்கள் ஒரு மிகப் பெரும்பான்மையினராக உள்ளனர். அவர்கள், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களிடமிருந்து ஏற்படப் போவதாகக் கருதப்படும் எந்தப் படையெடுப்பினின்றும் தமது நலன்களையும், அந்தஸ்தையும் காப்பாற்றிக் கொள்வதற்கு அவர்கள் (வைதீகர்கள்) மூர்க்கமாக உள்ளனர். போலீசாரால் வழக்குத் தொடரப்படக்கூடும் என்ற பயம், வைதீக வர்க்கங்கள் வன்முறையைப் பயன்படுத்துவதற்கு ஒரு எல்லை வரம்பை விதித்துள்ளன; எனவே இதன் விளைவாக அத்தகைய வன்முறை சம்பவங்கள் அரிதாக உள்ளன.

''தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் இன்று இருந்துவரும் அவர்களுடைய பொருளாதார நிலையிலிருந்து இரண்டாவது சிரமம் ஏற்படுகிறது. ராஜதானியின் பெரும்பாலான பகுதிகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு பொருளாதார சுதந்திரம் இல்லை. சிலர் வைதீக வர்க்கங்களின் நிலங்களை, அவர்களுடைய வாரதார்களாகத் தங்களுடைய விருப்பத்தின் பேரில் பயிரிடுகின்றனர். சிலர் வைதீக வர்க்கங்களினால் வேலைக்கு வைத்துக் கொள்ளப்பட்ட விவசாயத் தொழிலாளிகள் என்ற முறையில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு வாழ்கின்றனர். மற்றவர்கள், கிராம வேலையாட்கள் என்ற வகையில் வைதீக வர்க்கங்களுக்கு சேவை புரிவதற்காக, அவர்களால் வழங்கப்படும் உணவு அல்லது தானியத்தைக் கொண்டு உயிர் வாழ்கின்றனர். கிராமங்களில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் துணிந்து தமது உரிமைகளை நடைமுறைப்படுத்த முயன்றபோது, அவர்களுக்கு எதிராக வைதீக வர்க்கங்கள் தமது பொருளாதார வலிமையை ஓர் ஆயுதமாக உபயோகப்படுத்திய எண்ணற்ற உதாரணங்களை நாம் கேள்விப்பட்டுள்ளோம்; அவற்றில், அவர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர்; அவர்களுக்கு வேலை கொடுக்க

மறுத்துள்ளனர். கிராம வேலையாட்கள் என்ற வகையில் அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய ஊதியத்தை நிறுத்தி விட்டனர். இந்த பகிஷ்காரம் அடிக்கடி, ஒரு பரந்த அளவில் திட்டமிடப்பட்டு நடத்தப்பட்டு வருகிறது. இதில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பொதுப் பாதைகளில் (தெருக்களில்) நடமாடுவதினின்றும் தடுக்கப்படுவது, கிராமக் கடைக்காரர்கள் அவர்களுக்கு வாழ்க்கைத் தேவைகளை விற்பதற்கு மறுப்பது ஆகியவையும் அடங்கும். நமக்குக் கிடைத்துள்ள சாட்சியங்களின்படி சில சமயங்களில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு எதிராக ஒரு சமூக பகிஷ்காரத்தைப் பிரகடனப்படுத்துவதற்கு சிறிய காரணங்கள் போதுமானதாக உள்ளது. அடிக்கடி, பொதுக் கிணற்றைப் பயன்படுத்துவதற்குத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தமது உரிமையைச் செயலாக்கும் போது இவ்வாறு சமூக பகிஷ்காரம் அறிவிக்கப்படுகிறது. தாழ்த்தப்பட்ட வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு நபர் பூணூலைப் போட்டுக் கொண்டாலோ, ஒரு துண்டு நிலத்தை வாங்கினாலோ, நல்ல துணிமணிகளை அல்லது நகைகளை அணிந்து கொண்டாலோ, அல்லது பொதுவான தெருவில் மணமகன் குதிரை மீது அமர்ந்தபடி திருமண ஊர்வலம் எடுத்துச் செல்லப்பட்டாலோ, ஒரு கடுமையான பகிஷ்காரம் பிரகடனம் செய்யப்பட்ட சம்பவங்கள் அரிதானதல்ல.

''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களை ஒடுக்குவதற்கு இந்த சமூக பகிஷ்காரத்தைக் காட்டிலும் கூடுதல் பயனுறுதியான வேறு எந்த ஆயுதமும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கக் கூடும் என்பதை நாம் அறியோம். பகிரங்கமான வன்முறை அதற்கு முன்னால் பிசுபிசுத்துப் போய்விடும், ஏனெனில் அது மிகவும் தொலைவீச்சுடைய மற்றும் பயங்கரமான விளைவுகளை உடையதாகும். அது மிகவும் அபாயகரமானது. ஏனெனில், அது ஒரு சட்டப்பூர்வமான முறை என்பதாகவும், தொடர்பு கொள்வதற்குரிய சுதந்திரம் என்ற தத்துவத்திற்கு இசைவுடையதாகும் என்று போக்கு காட்டுகிறது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு, அவர்களின் மேம்பாட்டிற்குப் பேச்சுரிமையையும், செயல் உரிமையையும் நாம் உத்தரவாதம் செய்ய வேண்டுமென்றால் பெரும்பான்மையினரின் இந்தக் கொடுங்கோன்மைக்கு உறுதியாக முடிவு சூட்டப்பட வேண்டும், என்று நாம் ஒப்புக்கொள்கிறோம்.

தமது பேச்சுரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் எதிரான இந்த வகைப்பட்ட பேராபத்தைப் போக்குவதற்குரிய ஒரே வழி

சமூக பகிஷ்காரத்தை சட்டப்படி தண்டிக்கப்படத்தக்க ஒரு குற்ற மாக்குவதுதான் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் கருதுகின்றன. எனவே, 1919ம் வருட இந்திய அரசு சட்டத்தில் குற்றங்கள், நடை முறை மற்றும் அபராதங்கள் சம்பந்தமான IIவது பாகத்தில், கீழ் வரும் பிரிவுகளையும் சேர்க்க வேண்டும் என்று அவர்கள் நிச்சயம் வற்புறுத்துவார்கள்.

## I. பகிஷ்காரம் என்ற குற்றத்தின் விளக்கம்

இதுவும் கீழ்வரும் சட்ட விதிகளும் 1922ம் வருட பர்மாவின் பகிஷ்கார எதிர்ப்புச் சட்டத்தி லிருந்து அப்படியே எடுத்துக் கொள்ளப் பட்டன. வழக்கின் தேவைகளுக்கு ஏற்ப ஒரு சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

(அ) ஒரு நபர் எந்த வீட்டையோ அல்லது நிலத்தையோ வாடகைக்கு விடுவதற்கு, அல்லது பயன்படுத்து வதற்கு அல்லது வசப்படுத்திக் கொள் வதற்கு அல்லது அதைக் கையாள்வதற்கு மறுத்தால், கூலிக்கு வேலை செய்வதற்கு அல்லது மற்றொரு நபருடன் வியாபாரம் செய்வதற்கு மறுத்தால், அல்லது ஒரு வருக்கு சேவை செய்வதற்கு அல்லது அவரிடமிருந்து சேவையைப் பெற்றுக் கொள்வதற்கு மறுத்தால், அல்லது சாதாரண மாக, அத்தகைய விஷயங்கள் பொதுவாக எந்த நிபந்தனைகளின் பேரில் செய்யப் படுகிறதோ, அவ்வாறு செய்வதற்கு மறுத்தால், அல்லது

(ஆ) சமுதாயத்தில் இருந்துவரும் பழக்கவழக்கங்களைக் கருத்தில் கொண்டு, செய்யப்படும் சமூக, தொழில் அல்லது வர்த்தக உறவுகளில் ஈடுபடாமல் நிறுத்திக் கொண்டால்; அரசமைப்புச் சட்டத்தில் பிரகடனம் செய்யப்பட்டுள்ள எந்த அடிப்படையான உரிமை அல்லது இதர குடிஉரிமைகளுக்கு முரணில்லாத வகையில் அந்த நபருடன் உறவுகொள்ள மறுத்தால், அல்லது

(இ) எந்த வகையிலாவது, ஒரு நபர் தனது சட்டப்படியான உரிமைகளைப் பிரயோகப்படுத்துவதனின்றும் அந்த நபரைக் காயப் படுத்தினால், அல்லது கோபமூட்டினால் அல்லது தலையிட்டால் அது பகிஷ்காரமாகக் கருதப்படும்.

## II. பகிஷ்காரத்திற்கு தண்டனை

எந்த ஒரு நபராவது, மற்றொரு நபரின் விஷயத்தில், அவர் சட்டப்படி செய்வதற்கு உரிமையுள்ள எந்த ஒரு காரியத்தையும் செய்ததற்காக, அல்லது சட்டப்படி செய்யாமலிருப்பதற்கு உரிமை யுள்ள எந்தக் காரியத்தையாவது செய்யாமல் விடப்பட்டதற்காகவோ அல்லது, சட்டப்படி செய்வதற்குக் கடமையில்லாத எந்த ஒரு காரியத்தையும் செய்யும்படி நிர்ப்பந்தப்படுத்தினாலோ, அத்தகைய நபருக்கு உடல் ரீதியிலோ, உள்ள ரீதியிலோ தீங்கு ஏற்படுத்த முயற்சித்தாலோ, அவருடைய செல்வாக்குக்கும் அல்லது சொத் துக்கும் பாதிப்பு ஏற்படுத்த முயற்சித்தாலோ, அவருடைய தொழில் அல்லது வாழ்க்கை சாதனத்திற்கு பாதிப்பு ஏற்படுத்த முயன்றாலோ, தன் விருப்பத்தின்படி அத்தகைய ஒரு நபரை பகிஷ்கரித்தாலோ, அத்தகைய நபர் சிறைவாசம் மூலம் தண்டிக்கப்பட வேண்டும்; அந்த தண்டனை ஏழாண்டுகளுக்கு நீடிக்கப்படலாம், அல்லது அபராதம் விதிக்கப்படலாம், அல்லது, சிறைத்தண்டனையும் அபராதமும் சேர்ந்து விதிக்கப்படலாம்.

இந்தப் பிரிவின்கீழ் எந்தக் குற்றமும் செய்யப்பட்டதாகக் கருதப்படாவிட்டால், குற்றம் சாட்டப்பட்ட நபர் எந்த நபரின் தூண்டுதல் பேரிலோ, அல்லது வேறு எந்த நபருடனும் உடந் தையாக இருந்தோ, அல்லது எந்த சதியின்படியோ, அல்லது பகிஷ் கரிப்பதற்கு எந்த உடன்பாடு அல்லது இணைந்த முறையில் செயல்பட்டோ குற்றம் புரியவில்லை என்று நீதிமன்றத்திற்குத் திருப்தி ஏற்பட்டால், அவர் தண்டிக்கப்படாமலிருக்கலாம்.

## III. ஒரு பகிஷ்காரத்தைத் தூண்டுவதற்கோ அல்லது அதை நடத்துவதற்கோ ஆன தண்டனை

யாரொருவர்,

(அ) பகிஷ்காரத்திற்கான ஒரு பிரேரணையை பகிரங்கமாக வெளியிட்டாலோ, அல்லது பிரசுரித்தாலோ அல்லது சுற்றுக்கு விடுத்தாலோ, அல்லது,

(ஆ) பகிஷ்காரத்தை ஏற்படுத்தும் சாத்தியப்பாடு உடையது என்று நம்புவதற்குக் காரணமுள்ள எந்த அறிக்கை வதந்தி அல்லது செய்தியை பிரகடனம் செய்தாலோ, பிரசுரித்தாலோ அல்லது சுற்றுக்கு விடுத்தாலோ, அல்லது,

(இ) எந்த ஒரு நபரை அல்லது நபர்களின் வர்க்கத்தை பகிஷ்காரம் செய்வதற்கு வேறு எந்த வகையிலாவது தூண்டினாலோ, அல்லது நடத்தினாலோ, சிறைத் தண்டனை மூலம் தண்டிக்கப் படுவார், அது ஐந்தாண்டுகள் வரையில் இருக்கக்கூடும், அல்லது அபராதம் விதிக்கப்படலாம், அல்லது இருவித தண்டனைகளும் வழங்கப்படலாம்.

விளக்கம்: இந்தப் பிரிவின் கீழான ஒரு குற்றம் - இங்கே குறிப் பிடப்படும் இயற்கையின் எந்த செயலினால் பாதிக்கப்படுகின்ற அல்லது பாதிக்கப்படும் சாத்தியப்பாடுடைய நபர் பெயரினாலோ அல்லது வர்க்கத்தினாலோ குறிப்பிடப்படாமல், அவருடைய செயல் அல்லது, சில குறிப்பிட்ட முறையில் செயல்படுவ தினின்றும் தவிர்த்துக் கொண்டாலும், - (குற்றம்) புரிந்ததாகக் கருதப்படுவார்.

## IV. பகிஷ்காரம் செய்யப் போவதாக அச்சுறுத்துவதற்கும் தண்டனை

யாராயிருந்தாலும், வேறொரு நபர் - சட்டப்படி செய்வதற்கு உரிமையுள்ளவர் - எந்த செய்கையையும் செய்ததற்காக, அல்லது, சட்டப்படி செய்யாமலிருப்பதற்கு உரிமையுள்ளவர் செய்யாமலிருந் ததற்காக, அல்லது சட்டப்படி செய்வதற்குக் கடமைப்பட்டிராத எந்த செய்கையையாவது செய்யும்படி நிர்ப்பந்தித்தாலோ, அல்லது சட்டப்படி செய்வதற்கு உரிமையுள்ளவர் செய்யாமலிருக்கும் நிலைமையில் அக்கறையுள்ள நபர், அத்தகைய நபரை பகிஷ் கரிக்கப் போவதாக அச்சுறுத்தினாலோ, அவர் சிறை தண்டனை மூலம் ஐந்தாண்டுகள் வரை தண்டிக்கப்படுவார், அல்லது அபராதம் விதிக்கப்படுவார், அல்லது இரண்டு தண்டனையும் விதிக்கப் படலாம்.

விதிவிலக்கு: அது பகிஷ்காரமல்ல.

(i) ஒரு உண்மையான தொழில் தகராறின் காரணமாக எந்த செய்கையையும் செய்வது,

(ii) வர்த்தகப் போட்டி என்ற சாதாரண நடைமுறைப் போக்கில் மேற்கொள்ளும் எந்த ஒரு நடவடிக்கை.

பின்குறிப்பு: இந்தக் குற்றங்களெல்லாம் தெரிந்து கொள்ளத்தக்க குற்றங்கள் என்றே கருதப்பட வேண்டும்.

## நிபந்தனை III
## பாரபட்சத்திற்கு எதிராகப் பாதுகாப்பு

வருங்காலத்தில் சட்டத்தின் மூலமாகவோ அல்லது நிர்வாக உத்தரவின் மூலமாகவோ பாரபட்சம் காட்டப்படலாம் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் மிகவும் அச்சமடைகின்றன. எனவே, தாழ்த்தப்பட்டவர்களுக்கு எதிராக, சட்டசபையினாலோ அல்லது நிர்வாகத்தினாலோ மனக்கசப்பை உண்டாக்கும் பாரபட்சம் காட்டுவதை சட்டப்படி அசாத்தியமாக்கினாலொழிய அவர்கள் பெரும்பான்மையோரின் ஆட்சியின் கீழ் தங்களை கட்டுப்படுத்திக் கொள்வதற்கு ஒத்துக்கொள்ள முடியாது.

எனவே, இந்தியாவின் அரசியல் சாசனப்படியான சட்டத்தில் கீழ்வரும் சட்ட விதி சேர்க்கப்பட வேண்டுமென்று பிரேரணை செய்யப்படுகிறது:

''இந்திய டொமினியனின் அதிகார வரம்பிற்குட்பட்ட எல்லாப் பிரதேசங்களிலும், முன்பு எத்தகைய தீண்டாமை இருந்ததையும் பொருட்படுத்தாது, நாட்டின் குடிமக்களின் உரிமைகளைப் புறக்கணிக்கும் வகையில் இந்தியாவில் எந்த சட்டமன்றமோ அல்லது நிர்வாகமோ ஒரு சட்டம் இயற்றவோ, அல்லது ஓர் உத்தரவு, விதி அல்லது கட்டுப்பாட்டை வெளியிடுவதற்கோ தகுதி உடையதல்ல.

*(1)* ஒப்பந்தங்களை செய்து கொள்வதற்கும், அமல் நடத்துவதற்கும், வழக்குத் தொடருவதற்கும், சாட்சியம் கூறுவதற்கும், அசையா சொத்துக்களையும், சொந்த தனிப்பட்ட சொத்துக்களையும் வாரிசுரிமையாகப் பெறவும் வாங்கவும், குத்தகைக்கு

விடுவதற்கும், விற்கவும், வைத்திருக்கவும், கைமாற்றிக் கொடுப்பதற்கும் உரிமையுண்டு.

(2) சிவில் மற்றும் ராணுவ வேலைவாய்ப்புக்கும் அனைத்துக் கல்வி நிலையங்களிலும் பிரவேசிப்பதற்கு உரிமை உண்டு; நாட்டின் குடிமக்களின் அனைத்து வர்க்கங்களுக்கும் உரிய மற்றும் போதிய பிரதிநிதித்துவம் அளிப்பதன் தேவையை முன்னிட்டு இதற்கு நிபந்தனைகளும் வரம்புகளும் விதிக்கப்படக்கூடும்.

(3) விடுதிகளில் தங்கும் வாய்ப்பு, அனுகூலங்கள், வசதிகள், கல்வி நிலையங்கள், ஓட்டல்களில் தங்கும் தகுதிகள், நதிகள், ஓடைகள், கிணறுகள், குளங்கள், சாலைகள், வழித்தடங்கள், தெருக்கள், நிலம், வான் மற்றும் நீரில் செல்லும் பொது ஊர்திகள், தியேட்டர்கள், மற்றும் பிற பொது பொழுதுபோக்கு, உல்லாச ஸ்தலங்கள் ஆகிய பூரணமாகவும், சம உரிமையுடனும் பயன்படுத்திக் கொள்வதற்கு (அனுபவிப்பதற்கான) உரிமை - ஒவ்வொரு இனம், வர்க்கம், சாதி, நிறம் அல்லது மத நம்பிக்கையுடைய அனைத்துக் குடிமக்களுக்கும் ஒன்றுபோல் பொருந்தச் செய்வதை முன்னிட்டு தேவையான நிபந்தனைகளும், வரம்புகளும் விதிக்கப்படக் கூடும்.

(4) அனைத்துப் பொதுமக்களுக்கு, அல்லது ஒரே நம்பிக்கை மற்றும் மதத்தைச் சார்ந்தவர்களுக்கு என்று உரிமம் வழங்கப்பட்டுள்ள அல்லது எந்த மத, அல்லது மனிதநேய அறக்கட்டளையின் அனுகூலங்களை வேறுபாடின்றி பகிர்ந்து கொள்வதற்கு வல்லவர்கள் என்று கருதப்படுவார்கள்.

(5) எத்தகைய முந்தைய தீண்டாமை நிலைமை மற்றும் தண்டனை, நிர்ப்பந்தம், அபராதம் மற்றும் வேறு எதையும் பொருட்படுத்தாமல், பிற குடி மக்கள் அனுபவிப்பதைப் போல் தனிநபரின் மற்றும் சொத்தின் பாதுகாப்புக்காக அனைத்து சட்டங்கள் மற்றும் நடைமுறைகளின் முழு மற்றும் சம அனுகூலத்தைக் கோரலாம்.

**சட்டப் பேரவைகளில் போதிய பிரதிநிதித்துவம்**

தமது நல்வாழ்வை பேணும் நோக்கத்திற்காக, சட்டப்பேரவையின் மற்றும் நிர்வாகச் செயல்பாடுகளின் மீது செல்வாக்குச்

செலுத்துவதற்காகத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குப் போதிய அரசியல் அதிகாரம் வழங்கப்பட வேண்டும். இதை முன்னிட்டுத் தங்களுக்குக் கீழ்வரும் உரிமைகள் கிடைக்கப் பெறுவதற்காகத் தேர்தல் சட்டத்தில் கீழ்வரும் விதிகள் சேர்க்கப்பட வேண்டுமென்று அவர்கள் கோருகின்றனர்:-

(1) நாட்டின் - மாகாண மற்றும் மத்திய சட்டப் பேரவைகளில் போதிய பிரதிநிதித்துவம் பெறுவதற்கான உரிமை.

(2) தங்களுடைய சொந்த நபர்களைத் தமது பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுப்பதற்கான உரிமை -

(அ) வயது வந்தோருக்கு ஓட்டுரிமை வாயிலாக மற்றும்

(ஆ) முதல் பத்தாண்டுகளுக்குத் தனி (தேர்தல்) தொகுதிகள்; அதற்குப் பின்னர், கூட்டுத் தொகுதிகள் மற்றும் ரிசர்வ் (தனியாக ஒதுக்கப்பட்ட) இடங்கள் வாயிலாக; கூட்டுத் தொகுதிகளுடன் கூடவே வயது வந்தோருக்கு ஓட்டுரிமை வழங்கப்பட வேண்டும். அவ்வாறில்லாவிட்டால் கூட்டுத் தொகுதிகள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் மீது நிர்பந்தமாகத் திணிக்கக் கூடாது.

பின் குறிப்பு : பிற சமூகங்களுக்கு எந்த அளவு பிரதிநிதித்துவம் அனுமதிக்கப்பட்டுள்ளது என்பது தெரிகின்ற வரையில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கான போதிய பிரதிநிதித்துவத்தின் அளவை நிர்ணயித்துக் கூற முடியாது. ஆனால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், தங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவத்தைக் காட்டிலும் அதிகமான அளவில் வேறு எந்த சமூகத்திற்காவது பிரதிநிதித்துவம் அனுமதிக்கப்பட்டிருந்தால், அந்த நிலையைத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் ஒத்துக்கொள்ள மாட்டா என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் அவர்கள் ஒரு பிரதிகூலமான நிலையில் வைக்கப்படுவதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எப்படியாயினும், பம்பாய் மற்றும் சென்னையின் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு மாகாணங்களில் பிற சிறுபான்மையோருக்கு அனுமதிக்கப்பட்டுள்ள பிரதிநிதித்துவத்தின் அளவு எத்தகையதாயிருந்த போதிலும் மக்கட் தொகையுடனான பிரதிநிதித்துவத்தின் தகவுக்கு மேலாக மதிப்புத் தரப்பட வேண்டும்.

## நிபந்தனை V

## சேவைகளில் போதிய பிரதிநிதித்துவம்

பொது சேவைகளை ஏகபோகமாகக் கொண்டுள்ள உயர்-சாதி அதிகாரிகளினால் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பெருமளவு தொல்லைகளுக்கு ஆளாகியுள்ளனர். அவர்கள் சட்டத்தைத் தவறாகப் பயன்படுத்தியும், அல்லது சட்டத்தை நிர்வகிப்பதில் தமக்குள்ள தன் விருப்புரிமையை துஷ்பிரயோகம் செய்தும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு பாதிப்பை ஏற்படுத்தியுள்ளனர்; நீதி, சமத்துவம் அல்லது நல்ல மனச்சான்றைப் பற்றி சிறிதும் கவலைப்படாமல் சாதி இந்துக்களுக்கு ஆதாயம் தேடித் தந்துள்ளனர். இந்தக் களங்கத்தை, பொது சேவைகளில் ஜாதி-இந்துக்களின் ஏகபோகத்தை ஒழிப்பதன் மூலமும், அவற்றுக்கு ஆட்களை வேலைக்குச் சேர்ப்பதை, தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் உள்ளிட்ட எல்லா சமூகங்களுக்கும் அவற்றில் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கும் வண்ணம் முறைப்படுத்துவதன் மூலமும் தவிர்க்க முடியும். இந்த நோக்கத்திற்காக, அரசியல் சட்டத்தின் பாகமாக சட்ட வடிவம் பெறுவதற்காக, தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் கீழ்வரும் பிரேரணைகளை முன்வைக்க வேண்டியுள்ளது:

(1) பொது சேவைகளுக்கு நபர்களை வேலைக்கு சேர்ப்பதற்கும், கட்டுப்பாடு செய்வதற்கும் இந்தியாவிலும் இந்தியாவின் ஒவ்வொரு மாகாணத்திலும் ஒரு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் ஏற்படுத்தப்பட வேண்டும்.

(2) பப்ளிக் சர்வீஸ் கமிஷனின் எந்த ஓர் உறுப்பினரும் சட்டப் பேரவையினால் நிறைவேற்றப்படும் ஒரு தீர்மானத்தின் மூலமாக அல்லாது பதவியினின்று அகற்றப்படக் கூடாது; அதேபோன்று அவர் ஓய்வு பெற்ற பின்னர், அரசின் எந்தப் பதவிக்கும் நியமிக்கப்படவும் கூடாது.

(3) வரையறுக்கப்படும் திறமை பற்றிய சோதனைகளுக்கு உட்பட்டு, பப்ளிக் சர்வீஸ் கமிஷன் கீழ்வருமாறு செயல்பட வேண்டியது அதனுடைய கடமையாகும்:

(அ) எல்லா சமூகங்களுக்கும் உரிய மற்றும் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் நபர்களை வேலைக்கு சேர்க்க வேண்டும்.

(ஆ) எந்த ஒரு குறிப்பிட்ட சேவையிலும் பல்வேறு சமூகங்களுக்கு அப்பொழுது இருந்துவரும் பிரதிநிதித்துவத்தின் அளவிற்கு ஏற்ப வேலைவாய்ப்பில் அவ்வப்போது முன்னுரிமையை முறைப்படுத்த வேண்டும்.

## நிபந்தனை எண் VI
## காழ்ப்புணர்ச்சியான நடவடிக்கை அல்லது நலன்கள் புறக்கணிக்கப்புக்கு உரிய நிவாரணம்

வருங்காலத்தில் பெரும்பான்மையோரின் ஆட்சி வைதீகர்களின் ஆட்சியாக இருக்கும் என்பதால், அத்தகைய பெரும்பான்மையோரின் ஆட்சி தங்களுக்கு அனுசரணையான ஆட்சியாக இருக்காது என்றும், தங்களுடைய நலன்களுக்கு பாதிப்பு ஏற்படும் என்றும், தமது ஜீவாதாரமான தேவைகள் புறக்கணிக்கப்படும் என்றும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பயப்படுவதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் இருக்க முடியாது. அதற்கு எதிராக அவர்களுடைய நலன்கள் பாதுகாக்கப்பட வேண்டும்; ஏனெனில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு எவ்வளவு போதிய அளவு பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டாலும், அனைத்து சட்டப்பேரவைகளிலும் அவர்கள் சிறுபான்மையோராகவே இருப்பார்கள். அரசியல் சாசனத்தில் வழங்கப்பட்டுள்ள, நிவாரணம் பெறுவதற்கான வழிவகை தங்களுக்கு இருக்க வேண்டியது அவசியமென்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் நினைக்கின்றன. எனவே இந்திய அரசியல் சட்டத்தில் கீழ்வருமாறு வகை செய்யப்பட வேண்டும்:

பிரிட்டிஷ்வட அமெரிக்க சட்டம், 186, பிரிவு 93

''ஒவ்வொரு மாகாணத்திலும் மாகாணத்திற்கும், மற்றும் இந்தியாவிலும் இந்தியாவிற்கும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் கல்வி, சுகாதாரம், பொது சேவைகளுக்கு ஆட்களை சேர்ப்பதும் மற்றும் சமூக, அரசியல் முன்னேற்றம் சம்பந்தப்பட்ட இதர விஷயங்களுக்குப் போதிய வகை செய்ய வேண்டியதும் அவர்களை பாதிக்கக்கூடிய எந்த விஷயத்தையும் செய்யாதிருப்பதும் சட்டப் பேரவை, மற்றும் நிர்வாகத்தினுடைய அல்லது சட்டத்தின்படி நிறுவப்பட்ட எந்த அதிகார அமைப்பினுடைய கடமையாகவும் பொறுப்பாகவும் இருக்க வேண்டும்.

"(2) எந்த மாகாணத்திலாவது அல்லது இந்தியாவிலாவது இந்த சட்டத்தின் பிரிவுகள் மீறப்பட்டால், எந்த மாகாண அதிகார அமைப்பின் எந்த சட்டம் அல்லது முடிவின்படி கவர்னர்-ஜெனரலுக்கு மேல் முறையீடு செய்து கொள்ளப்படலாம்; அது போன்றே, இந்த விஷயம் சம்பந்தமாக மத்திய அதிகார அமைப்பின் எந்த சட்டம் அல்லது முடிவின்படி இந்தியா மந்திரிக்கு (செக்ரட்ரி ஆப் ஸ்டேட்) மேல் முறையீடு செய்து கொள்ளலாம்.

"(3) அத்தகைய ஒவ்வொரு வழக்கு விஷயத்திலும், இந்தப் பிரிவின் விதிகளை முறைப்படி நிறைவேற்றுவதற்குரிய நடவடிக்கைகளை மாகாண அதிகார அமைப்போ அல்லது மத்திய அதிகார அமைப்போ எடுத்துக் கொள்ளவில்லை என்று கவர்னர்-ஜெனரலுக்கோ அல்லது இந்தியா மந்திரிக்கோ (செக்ரட்ரி ஆப் ஸ்டேட்) தோன்றினால், அப்பொழுது அத்தகைய ஒவ்வொரு சம்பவம் சம்பந்தமாகவும், ஒவ்வொரு சம்பவத்தின் சூழ்நிலைகளுக்குத் தேவைப்படுவதற்கு ஏற்ப, கவர்னர்-ஜெனரலோ அல்லது இந்தியா மந்திரியோ, ஒரு மேல்முறையீட்டு அதிகார அமைப்பாகச் செயல்பட்டு, அவர்கள் பொருத்தமானது என்று கருதும் காலகட்டத்திற்கு, இந்தப் பிரிவின் விதிகளும் அதனுடைய எந்த முடிவுகளும் உரிய முறையில் நிறைவேற்றப்படுவதற்கு பரிகார நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்; யாருக்கு எதிராக மேல்முறையீடு செய்து கொள்ளப்பட்டதோ, அவர்களையும் இது கட்டுப்படுத்தும்.

## நிபந்தனை எண் VII
## சிறப்பு இலாகா ரீதியான பாதுகாப்பு

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் உதவியற்ற, அநாதையான, நிர்க்கதியான நிலைமைக்கு வைதீக மக்களின் மூர்க்கமான, விடாப்பிடியான எதிர்ப்பே முற்றிலும் காரணமாகும். அவர்கள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்ளுக்கு சம அந்தஸ்தையோ, சமமாக மதிக்கப்படுவதையோ மறுத்து விடுகின்றனர். அந்த வர்க்கங்கள் வறுமைவாய்ப்பட்டவர்கள் அல்லது அவர்கள் நிலமற்ற தொழிலாளர்கள் என்று - இந்த இரண்டு கூற்றுக்களும் உண்மையென்ற போதிலும் - அவர்களின் பொருளாதார நிலைமையைப் பற்றிக் கூறினால் மட்டும் போதாது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் வறுமையானது பெருமளவு சமூகக் காழ்ப்புணர்ச்சிகளினால் ஏற்படுகிறது. இதன் விளைவாக, வாழ்க்கைக்கு ஊதியம் பெறுவதற்கான பல வேலைகள் அவர்களுக்கு மறுக்கப்படுகின்றன.

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் நிலைமையை சாதாரண ஜாதி இந்து தொழிலாளியின் நிலைமையிலிருந்து வேறுபடுத்துவது உண்மையாகும். இது அடிக்கடி இந்த இரு தரப்பாரிடையில் சச்சரவுக்கு ஆதாரமாக இருக்கிறது. மேலும், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு எதிராகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் கொடுங்கோன்மை மற்றும் ஒடுக்குமுறையின் வடிவங்கள் மிகவும் பலவகைப்பட்டவை, அதே சமயத்தில் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்குத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு உள்ள ஆற்றல் மிகவும் வரம்புக்குட்பட்டதாகும். இது சம்பந்தமாகக் கிடைக்கும் விவரங்கள் - இவை இந்தியா முழுவதிலும் பொதுவாக ஏற்படுகின்றவை - சென்னை மாகாண அரசின் ரெவின்யூ போர்டின், நவம்பர் 5, 1892 தேதிய எண் 723 நடவடிக்கைகளின் விவரக் குறிப்பில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

''134. இதுவரையில் சுட்டிக்காட்டப்பட்ட இந்த ஒடுக்குமுறை வடிவங்களைப் பற்றி, குறைந்தபட்சம் மேலோட்டமாகவாவது குறிப்பிட்டாக வேண்டும். கீழ்ப்படியாததற்காக பறையர்கள், தண்டிக்கப்படுவதற்கு, அவர்களது எஜமானர்கள் -

(அ) கிராம நீதிமன்றத்திலோ அல்லது குற்றவியல் நீதிமன்றங்களிலோ பொய்யான வழக்குகளைக் கொண்டு வருகிறார்கள்.

(ஆ) விண்ணப்பத்தின் பேரில், பறைச் சேரிக்கு சுற்றிலும் கிடக்கும் தரிசு நிலங்களை அரசிடமிருந்து பெறுவது; பறையர்களின் கால்நடைகளைப் பட்டியினுள் அடைத்து வைப்பதற்காக அல்லது அவர்கள் கோயிலுக்குச் செல்லும் பாதையை இடைமறிப்பதற்காக இவ்வாறு செய்வது.

(இ) பறைச் சேரிக்கு எதிராக, அரசுக் கணக்கில் மிராசுதார்களின் பெயர்களை மோசடியான முறையில் பதிவு செய்வது;

(ஈ) குடிசைகளைப் பிய்த்தெறிவது, புழக்கடைகளிலுள்ள செடிகளை அழித்து நாசப்படுத்துவது;

(உ) ஏதோ ஒரு பழங்காலத்தில் வழங்கப்பட்டுள்ள உப-குத்தகைகளில் வசப்படுத்திக் கொள்ளும் உரிமைகளை மறுப்பது.

*(ஊ) பறையர்களின் பயிர்களை பலாத்காரமாக வெட்டுவது. இதை எதிர்க்கும்போது, அவர்கள் மீது திருட்டு மற்றும் கலகம் செய்ததாகக் குற்றச்சாட்டுப் பதிவு செய்வது.*

*(எ) தவறான அனுமானங்களின்படி, சில ஆவணங்களில் அவர்களிடம் கையெழுத்து வாங்குவது; பின்னர் அதன் விளைவாக அவர்கள் சீரழிந்து போவது.*

*(ஏ) அவர்களின் நிலங்களுக்குத் தண்ணீர் பாயவிடாமல் தடுப்பது.*

*(ஐ) சட்டப்படியான நோட்டீஸ் கொடுக்காமலே, நிலச்சுவான்தார்களின் நிலவரி பாக்கிக்காக உப-குத்தகைதாரர்களின் சொத்துக்களை ஜப்தி செய்வது.*

*''135. இந்த இடுக்கண்கள் எதற்கும் நிவாரணம் பெறுவதற்கு சிவில் மற்றும் குற்றவியல் நீதிமன்றங்கள் உள்ளன என்று கூறப்படலாம். இவை நீதிமன்றங்கள் என்பது உண்மையே; ஆனால் இந்தியா கிராம நீதிபதிகளை உருவாக்குவதில்லை. நீதிமன்றங்களுக்குச் செல்வதற்கு ஒருவருக்குத் துணிவு இருக்க வேண்டும்; சட்ட அறிஞர்களை வழிகாட்டச் செய்வதற்கும், நீதிமன்றச் செலவுகளுக்கும் பணம் இருக்க வேண்டும். வழக்கு நடக்கும்போதும், மேல் முறையீடுகளின் போதும் உயிர் வாழ்வதற்கான வகை வசதி இருக்க வேண்டும். மேலும் பெரும்பாலும் வழக்குகள் முதல் நீதிமன்றத்தின் முடிவைப் பொறுத்ததாக இருக்கும்; இந்த நீதிமன்றங்களுக்கு அதிகாரிகள் தலைமை தாங்குவார்கள்; இவர்கள் சில சமயங்களில் லஞ்ச ஊழலுக்கு ஆட்பட்டிருப்பார்கள்; இவர்கள் பொதுவாக, வேறு காரணங்களுக்காக, பணக்காரர்களுக்கும் நிலவுடைமையாளர்களுக்கும் பரிவு காட்டுவார்கள்; ஏனெனில் அவர்களே அந்த வர்க்கங்களைச் சேர்ந்தவர்கள்.*

*''136. அதிகாரிகள் உலகத்துடன் (அதிகார) வர்க்கத்துடன் இந்த வர்க்கங்களின் செல்வாக்கை மிகைப்படுத்திக் கூற முடியாது. சுதேசி மக்களுடன் அவர்களது செல்வாக்கு கடைக்கோடி எனில், ஐரோப்பியர்களிடம் கூட அவர்களது செல்வாக்கு உயர்ந்த நிலையில் இருக்கும். ஒவ்வொரு அலுவலகத்திலும் மிக உயர்ந்த பதவியிலிருந்து கீழ்நிலை வரையிலும் அவர்களது பிரதிநிதிகளே நிறைந்திருப்பார்கள். அவர்களின் நலன்களை பாதிக்கும் எந்தப் பிரேரணையும் இருக்காது; ஆனால், ஆரம்பம் முதல் அமலாக்கம்*

வரையிலும் அதன் நடைமுறையில் அவர்கள் பெரும் செல்வாக்கை ஏற்படுத்த முடியும்.''

இந்த சூழ்நிலைமைகளை முன்னிட்டு, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் முன்னேற்றமானது - இந்தப் பணி அனைத்து அரசு நடவடிக்கைகளிலும் முன்னணியில் வைக்கப்பட்டாலொழிய, சம வாய்ப்புகள் ஒரு திட்டவட்டமான கொள்கையின் வாயிலாக நடைமுறையில் எய்தப்பட்டு அரசின்பால் உறுதியான முயற்சி மேற்கொள்ளப்பட்டாலொழிய (தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் முன்னேற்றம்) ஆர்வக் கனவாக மட்டுமே இருக்கும். இதை எய்துவதற்கு, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரச்சினைகளை கவனிப்பதற்காக, எல்லா சமயங்களிலும் ஓர் இலாகாவை பராமரிப்பது இந்திய அரசின் மீது சட்டத்தின்படியான ஒரு கடப்பாட்டை அரசியல் சட்டம் ஏற்படுத்த வேண்டும் என்பது அம்மக்களின் பிரேரணையாகும். இதற்காக இந்திய அரசு சட்டத்தில் பின்வரும் பகுதியை சேர்க்க வேண்டும் :

''1. இந்த அரசியல் சாசனத்தைப் பிரேரணை செய்யும் பொழுதே, மற்றும் இதனுடைய பகுதியாக, இந்திய அரசில் ஓர் இலாகா ஏற்படுத்தப்பட வேண்டும்; ஓர் அமைச்சர் இதற்குப் பொறுப்பாக இருக்க வேண்டும். தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் நலன்களைக் கண்காணித்து அவர்களது நல்வாழ்வை ஊக்குவிப்பது இந்த இலாகாவின் பணியாக இருக்கும்.

''2. மத்திய சட்டப் பேரவையின் நம்பிக்கையைப் பெற்றிருக்கின்ற வரையில் அந்த அமைச்சர் இந்தப் பதவியை வகிப்பார்.

''3. சட்டத்தின்படி இந்த அமைச்சருக்கு வழங்கப்பட்டுள்ள, அல்லது அவருக்கு மாற்றிக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் மற்றும் கடமைகளை செயல்படுத்தும் வகையில், நடவடிக்கைகளைத் தயாரிப்பதற்கும், அவற்றைப் பயனுறுதியான முறையில் நிறைவேற்றுவதற்கும் ஒருங்கிணைப்பதற்கும், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு எதிரான சமூக அநீதி செயல்கள், கொடுங்கோல் அல்லது ஒடுக்குமுறையைத் தடுப்பதற்கு தேவையான மற்றும் இந்தியா முழுவதிலும் அவர்களின் நல்வாழ்விற்கு அனுசரணையான எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டியது அந்த அமைச்சரின் கடமையாக இருக்கும்.

''4. கவர்னர்-ஜெனரல் சட்டப்படி பின்வரும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

(அ) கல்வி, சுகாதாரம் முதலியவை சம்பந்தமான எந்த சட்டத்தின் பயனாக எழுகின்ற, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் நல்வாழ்வு சம்பந்தமான அனைத்து அதிகாரங்கள் அல்லது கடமைகளை அமைச்சருக்கு மாற்றிக் கொடுக்கலாம்.

(ஆ) ஒவ்வொரு மாகாணத்திலும் அமைச்சரின் அதிகாரத்தின் கீழும், அவருடன் ஒத்துழைத்தும் செயல்படுவதற்கு தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் நல்வாழ்வுக் கமிட்டிகளை நியமிக்கலாம்.

## நிபந்தனை எண் VIII
## தாழ்த்தப்பட்ட வர்க்கங்களும் அமைச்சரவையும்

சட்டப் பேரவையில் இடங்களின் வாயிலாக, அரசாங்க நடவடிக்கையின் மீது செல்வாக்குச் செலுத்துவதற்குத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு அதிகாரம் இருக்க வேண்டியது அவசியம் என்பது போலவே, அரசின் பொதுவான கொள்கையை வகுப்பதற்கான வாய்ப்பும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு இருக்க வேண்டியது விரும்பத்தக்கதாகும். அமைச்சரவையில் (கேபினட்டில்) ஓர் இடத்தைப் பெற்றால் மட்டுமே அவர்களால் இதைச் செய்ய முடியும். எனவே, இதர சிறுபான்மையோரைப் போன்றே தங்களுடைய தார்மீக உரிமைகள் அமைச்சரவையில் பிரதிநிதித்துவப் படுத்தப்பட வேண்டியவை அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் உரிமை கொண்டாடுகின்றன. இந்த நோக்கத்தைப் பார்வையில் கொண்டு, தனது அமைச்சரவையில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குப் பிரதிநிதித்துவத்தைப் பெற்றுத் தருவதற்கு முயற்சி செய்வதற்கு ஆணைகளின் பத்திரத்தில் கவர்னர் மீதும், கவர்னர்-ஜெனரலின் மீதும் ஒரு கடப்பாடு சுமத்தப்பட வேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பிரேரணை செய்கின்றன.''[1]

''இந்த அடிப்படை உரிமைகள் பிரகடனத்தின் சில பிரதிகளை டாக்டர் அம்பேத்கர், இந்தியாவிலுள்ள தன்னைப் பின்பற்றுவோருக்கு அனுப்பி வைத்து, சிறுபான்மையோர் துணைக் கமிட்டிக்கு சமர்ப்பிக்கப்பட்ட கோரிக்கைகளுக்கு ஆதரவாக

1. துணைக் கமிட்டி எண். III (சிறுபான்மையோர்) விவாத விவரங்கள், பக். 168-176.

வெவ்வேறு நகரங்களில் கூட்டங்கள் நடத்துமாறு கேட்டுக் கொண்டார். மேலும், தீர்மானங்களின் பிரதிகளை ராம்சே-மாக் டொனால்டுக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொண்டார். இந்தக் கோரிக்கைகள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் விருப்பப் பூர்வமான ஒத்துழைப்புக்கு குறைக்கப்பட முடியாத குறைந்த பட்சமானவை என்றும், இல்லாவிட்டால் சுயாட்சிக்கான எந்த அரசியல் சாசனத்திற்கும் தாங்கள் ஒத்துக்கொள்ள மாட்டோம் என்றும் அந்தத் தீர்மானங்களில் கூறப்பட்டிருக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் ஆணையிட்டிருந்தார். எனவே அதன்படி இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் ஏராளமான தந்திகள் பிரிட்டிஷ் பிரதமரின் அலுவலகத்தில் வந்து குவிந்தன.''[2]

இதுபோன்றே, முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் ஐரோப்பியர்களும் வகுப்புவாதப் பிரச்சினையின் தீர்வுக்கான ஷரத்துக் களைக் கொண்ட கூட்டாக முன் வைக்கப்பட்ட ஆவணமும் சிறு பான்மையோர் கமிட்டிக்கு சமர்ப்பிக்கப்பட்டது. அந்த ஆவணத்தின் வாசகம் பின்வருமாறு: ஆசிரியர்கள்.

**''வகுப்புவாதப் பிரச்சினையின் தீர்வுக்காக முஸ்லீம்கள், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், இந்திய கிறித்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் ஐரோப்பியர்கள் கூட்டாக சமர்ப்பித்த ஷரத்துகள்**

## சிறுபான்மை சமூகங்களின் கோரிக்கைகள்

1. எந்த நபரும், அவருடைய பூர்வோத்திரம், மதம், சாதி அல்லது நம்பிக்கையின் காரணமாகப் பொது வேலைவாய்ப்பு, அதிகாரப் பதவி அல்லது கௌரவம் சம்பந்தமாகவோ, அல்லது சிவில் உரிமைகளை அனுபவித்தல் மற்றும் எந்தத் தொழில் அல்லது முயற்சிக்கு பாதிப்பு ஏற்படக்கூடாது.

2. எந்த சமூகத்தையும் பாதிக்கின்ற சட்டப்பேரவையின் முடிவுகள் அல்லது பாரபட்சம் காட்டும் சட்டங்களுக்கு எதிராகப் பாதுகாப்பு அளிப்பதற்காக, அரசியல் சாசனத்தில் சட்டப்பூர்வமான பாதுகாப்புகள் இணைக்கப்பட வேண்டும்.

2. கீர், பக்கம், 153.

3. எல்லா சமூகங்களுக்கும் - பொது ஒழுங்கு மற்றும் ஒழுக்கத்தைப் பராமரிப்பதற்கு உட்பட்டு - முழு மத சுதந்திரம், அதாவது, நம்பிக்கை, வழிபாடு, சடங்குகள், பிரச்சாரம், அமைப்புகள் மற்றும் கல்வி பெறுவதற்கான முழு சுதந்திரம் உத்தரவாதம் செய்யப்பட வேண்டும்.

மத நம்பிக்கையை மாற்றிக் கொண்டதினாலேயே எந்த நபரும் எந்த சிவில் உரிமையையோ அல்லது சலுகையையோ, இழக்கப்படக்கூடாது, அல்லது எத்தகைய தண்டனைக்கும் உட்படுத்தப்படக்கூடாது.

4. தங்களுடைய சொந்த செலவில் பரோபகார, சமய, மற்றும் சமூக அமைப்புகளையும், பள்ளிகளையும் பிற கல்வி நிறுவனங்களையும் நிறுவவும், நிர்வாகம் செய்யவும், கட்டுப்பாடு செய்யவும் - அவற்றில் தமது மதத்தை செயல்படுத்தவும் உரிமை இருக்க வேண்டும்.

5. சிறுபான்மை சமூகங்களின் சமயம், கலாசாரம், தனிப்பட்ட (நபர்) சட்டம் ஆகியவற்றின் பாதுகாப்பிற்கும், அவர்களின் கல்வி, மொழி, பரோபகார நிறுவனம் ஆகியவற்றை ஊக்குவிப்பதற்கும் மற்றும் அரசும், சுயாட்சி அமைப்புகளும் வழங்கும் உதவி மானியங்களில் அவற்றின் உரிய பங்குக்கும் போதிய பாதுகாப்புகளை அரசியல் சாசனம் கொண்டிருக்க வேண்டும்.

6. முழுமையாக அனுபவிப்பதைத் தடுக்கும் நோக்கத்துடன் தட்டிக் கழிப்பதற்காக செய்யப்படும் எந்த நடவடிக்கையையும் சட்டத்தின்படி தண்டிக்கப்படும் குற்றமாக்குவதன் மூலம் எல்லாப் பிரஜைகளும் சிவில் உரிமைகளை அனுபவிப்பதை உத்தரவாதம் செய்ய வேண்டும்.

7. மைய அரசிலும், மாநில அரசுகளிலும் அமைச்சரவைகளை அமைப்பதில் சாத்தியமான வரையில் முஸ்லீம் சமூகம் மற்றும் பிற சிறுபான்மையோரைச் சேர்ந்த உறுப்பினர்களுக்கு அதிக இடங்களை - மரபாக - வழங்க வேண்டும்.

8. சிறுபான்மை சமூகத்தினரைப் பாதுகாக்கவும், அவர்களின் நல்வாழ்வை ஊக்குவிப்பதற்கும் மைய மற்றும் மாநில அரசின்கீழ் சட்டப்படியான இலாகாக்கள் இருக்க வேண்டும்.

தற்பொழுது எந்த சட்டப்பேரவையிலும் நியமனம் வாயிலாகவோ, அல்லது தேர்தல் மூலமாகவோ பிரதிநிதித்துவம் பெற்றுள்ள அனைத்து சமூகங்களுக்கும் எல்லா சட்டப் பேரவை களிலும் தனித் தொகுதிகள் வாயிலாகப் பிரதிநிதித்துவம் வழங்கப் பட வேண்டும். ஆனால் எந்த மெஜாரிட்டியும் ஒரு மைனாரிட்டி யாகவோ அல்லது சம அளவினதாகவோ ஆக்கப்படக்கூடாது. அதேபொழுதில், பத்தாண்டு காலத்திற்குப் பின்னர், பஞ்சாபிலும் வங்காளத்திலும் உள்ள முஸ்லீம்களும், வேறு எந்த மாகாணத் திலும் உள்ள எந்த சிறுபான்மை சமூகங்களும் தங்கள் விருப்பத்தின் பேரில் கூட்டுத் தொகுதிகளை அல்லது இடஒதுக்கீடுகளுடன் கூடிய கூட்டுத் தொகுதிகளை ஏற்றுக்கொள்வதற்கு - சம்பந்தப்பட்ட சமூகத்தின் சம்மதத்துடன் உரிமையுண்டு. இதுபோன்றே பத்து ஆண்டுகளுக்குப் பின்னர், மத்திய சட்டப்பேரவையிலுள்ள எந்த மைனாரிட்டியும் - சம்பந்தப்பட்ட சமூகத்தின் சம்மதத்துடன் - கூட்டுத் தொகுதிகளை, இட ஒதுக்கீட்டுடன் அல்லது அவ்வாறில் லாமல் - விருப்பபூர்வமாக ஏற்றுக் கொள்வதற்கு உரிமையுண்டு.

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பொறுத்தமட்டிலும், தனித் தொகுதிகளின் 20 ஆண்டு அனுபவத்திற்குப் பின்னால் வரையிலும், மற்றும் அந்த சமூகத்திற்கு நேரடி வயது வந்தோர் வாக்குரிமை ஏற்படுத்தப்படும் வரையிலும் கூட்டுத் தொகுதிகளுக்கு மற்றும் இடஒதுக்கீடுகளுக்கான மாற்றம் எதுவும் செய்யக்கூடாது.

10. ஒவ்வொரு மாகாணத்திலும், மற்றும் மத்திய அரசு சம்பந்தமாகவும் ஒரு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும்; மற்றும் பொது சேவைப் பணிகளுக்கு ஆட்களை வேலைக்கு சேர்ப்பதில் வீதாசாரம் ஏதாவது இருந்தால், அதைத் தவிர கவர்னர்-ஜெனரலும், கவர்னர்களும் நியமனம் செய்து நிரப்பப்படுவதற்காக ஒதுக்கப்பட்டவை - அந்தக் கமிஷனால் செய்யப்பட வேண்டும்; அவ்வாறு செய்யும்போது, திறமை மற்றும் தேவையான தகுதிகள் இருப்பது ஆகியவற்றுக்கு ஏற்ப பல்வேறு சமூகங்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்ய வேண்டும். ஆட்களை வேலைக்கு சேர்ப்பது சம்பந்தமாக கவர்னர்-ஜெனரல் மற்றும் கவர்னர்களுக்கான ஆணைகளில் இந்தக் கோட்பாட்டை அமல்நடத்துவதற்கான ஆணை அடங்கியிருக்க வேண்டும். இந்த நோக்கத்திற்காக, வேலையில் சேர்க்கப்பட்டிருப் பவர்களின் இயைபு சம்பந்தமாகக் குறிப்பிட்ட காலத்திற்கு ஒருமுறை ஆய்வு செய்யப்பட வேண்டும்.

11. நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவானது, எந்த ஒரு சட்டப்பேரவையின், ஒரு குறிப்பிட்ட சமூகத்தைப் பிரதிநிதிப் படுத்துகிற உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினரின் அபிப் பிராயத்தில் அவர்களின் மதத்தை, அல்லது மதத்தின் அடிப்படை யிலான சமூகப் பழக்கத்தை பாதித்தாலோ, அல்லது, குடிமக்களின் அடிப்படையான உரிமைகள் விஷயத்தில், உறுப்பினர்களின் மூன்றில் ஒரு பகுதியினர் ஆட்சேபனை செய்தாலோ, அத்தகைய உறுப் பினர்கள், மசோதா நிறைவேற்றப்பட்டதன் ஒரு மாதத்திற்குள், சபையின் தலைவரிடம் தமது ஆட்சேபணையைத் தெரிவிக்கலாம். அவர் அதை கவர்னர்-ஜெனரல் அல்லது கவர்னருக்குத் தெரிவிக்க வேண்டும்; அவர் அதையொட்டி, அந்த மசோதாவின் அமலாக்கத்தை ஓர் ஆண்டிற்கு நிறுத்தி வைக்கலாம்; அந்தக் காலத்தின் முடிவில், அவர் அந்த மசோதாவை மறுபரிசீலனை செய்வதற்கு சட்டப் பேரவைக்கே திருப்பி அனுப்பலாம். அந்த மசோதா சட்டப் பேரவையினால் மீண்டும் பரிசீலனை செய்யப்பட்டு, ஆட்சே பணைக்கு திருப்திபடுத்தும் வகையில் மசோதாவைத் திருத்தி அமைக்கவோ மறுஆய்வு செய்யவோ சம்பந்தப்பட்ட சட்டப் பேரவை மறுத்துவிட்டால், கவர்னர்-ஜெனரலோ, அல்லது கவர்னரோ, அவருடைய உசிதப்படி அதற்கு அங்கீகாரம் அளிக்கலாம், அல்லது ஒப்புதல் அளிக்காமலிருக்கலாம்; மேலும், இந்த மசோதா தமது அடிப்படை உரிமைகளில் ஒன்றை பாதிக்கிறது என்ற காரணத்தின் பேரில், மேற்படி சமூகத்தைச் சேர்ந்த எந்த இரு உறுப்பினர்களும் அந்த மசோதாவின் செல்லுபடியாகும் தன்மையை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடரவும் செய்யலாம்.

## முஸல்மான்களின் சிறப்புக் கோரிக்கைகள்

அ. வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பிற மாகாணங் களைப் போன்ற அதே அடிப்படையில் ஒரு ஆளுநரின் மாகாண மாக்கப்பட வேண்டும்; அதே பொழுதில் எல்லையின் பாதுகாப் புக்குத் தேவையான அவசியங்களை உரிய கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

மாகாண சட்டப் பேரவையை உருவாக்கும்போது நியமன உறுப்பினர்களின் எண்ணிக்கை மொத்த உறுப்பினர்களின் எண் ணிக்கையில் 10 சதவீதத்திற்கு மேல் போகக்கூடாது.

அல்லது மசோதாவோ கவர்னர்-ஜெனரலின் முன் சம்மதம் பெறாமல் கொண்டு வரப்பட முடியாது.

இவற்றை ஒத்துக்கொண்டவர்கள் -

*மேன்மைதாங்கிய ஆகாகான் (முஸ்லிம்கள்)*
*டாக்டர் அம்பேத்கர் (தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள்)*
*ராவ் பகதூர் பன்னீர் செல்வம் (இந்தியக் கிறித்தவர்கள்)*
*சர். ஹென்றி ஜிட்னே (ஆங்கிலோ-இந்தியர்)*
*சர். ஹியூபர்ட் கார் (ஐரோப்பியர்கள்)*

## அட்டவணை

### சட்டப்பேரவைகளில் பிரதிநிதித்துவம்

அடைப்புக் குறிகளில் உள்ள புள்ளிகள் = 1931ம் வருட மக்கள் தொகை அடிப்படையில் மற்றும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சதவீதங்கள், சைமன் அறிக்கையின்படி

| | அவையின் உறுப்பினர் எண்ணிக்கை | சாதி | இந்துக்கள் தாழ்த்தப் பட்டவர் | மொத்தம் | முஸ்லிம் கள் | கிறித்தவர் கள் | சீக்கியர் கள் | ஆங்கிலோ-இந்தியர் | பழங்குடியினர் முதலியவர்கள் | ஐரோப்பியர்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மக்கட் தொகை கணக்கெடுப்பு அகில இந்தியா (1931) | | | | | | | | | | |
| | (47.5) | (19)* | (66.5) | (21.5) | | | | | | |
| மேலவை .. | 200 | 101 | 20 | 121 | 67 | 1 | 6 | 1 | .. | 4 |
| கீழவை .. | 300 | 123 | 45 | 168 | 100 | 7 | 10 | 3 | .. | 12 |
| | | (48.9) | (13.4) | (62.3) | | | | | | |
| அஸ்ஸாம் .. | 100+ | 38 | 13 | 51 | 35 | 3 | .. | 1 | .. | 10 |
| | | (18.3) | (24.7) | (43) | (54.9) | | | | | |
| வங்காளம் .. | 200 | 38 | 35 | 73 | 102 | 2 | .. | 3 | .. | 20 |
| | | (67.8) | (14.5) | (82.3) | (11.3) | | | | | |
| பீஹார், ஒரிஸ்ஸா | 100 | 51 | 14 | 65 | 25 | 1 | .. | 1 | 3 | 5 |

★ பிரிட்டிஷ் இந்தியாவின் கவர்னரின் மாகாணங்களில் சதவிகிதம்

\+ மக்கள் தொகைப் புள்ளிகள் (பழங்குடியினர் பிரதேசங்களைத் தவிர்த்து)

அட்டவணை (தொடர்ச்சி)

## சட்டப்பேரவைகளில் பிரதிநிதித்துவம்

அடைப்புக் குறிகளில் உள்ள புள்ளிகள் = 1931ம் வருட மக்கள் தொகை அடிப்படையில் மற்றும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சதவீதங்கள், சைமன் அறிக்கையின்படி

| | அவையின் உறுப்பினர் எண்ணிக்கை | இந்துக்கள் சாதி | இந்துக்கள் தாழ்த்தப்பட்டவர் | இந்துக்கள் மொத்தம் | முஸ்லிம்கள் | கிறித்தவர் | சீக்கியர் | ஆங்கிலோ-இந்தியர் | பழங்குடியினர் முதலியவர்கள் | ஐரோப்பியர்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | (68) | (8) | (76) | (20) | | | | |
| பம்பாய் | 200 | 88 | 28 | 116 | 66 | 2 | .. | 3 | .. | 13 |
| | சிந்து பிரிக்கப்பட்டதோடு பம்பாயில் முஸல்மான்களின் பிரதிநிதித்துவம் வ.மே.எ. மாகாணத்தில் இந்துக்களுக்கு உள்ள பிரதிநிதித்துவம் போன்று அதே அடிப்படையில் | | | | | | | | | |
| | (63.1) | (23.7) | (86.8) | (44) | | | | | | |
| மத்திய மாகாணங்கள் | 100 | 58 | 20 | 78 | 15 | 1 | .. | 2 | 2 | 2 |
| | (71.3) | (15.4) | (86.7) | (7.1) | | (3.7) | | | | |
| மதராஸ் | 200 | 102 | 40 | 142 | 30 | 14 | .. | 4 | 2 | 8 |
| | (15.1) | (13.5) | (28.6) | (56.5) | | (13) | | | | |
| பஞ்சாப் | 100 | 14 | 10 | 24 | 51 | 1.5 | 20 | 1.5 | .. | 2 |
| | | | (58.1) | (26.4) | (84.5) | (14.8) | | | | |
| உ.பி. | 100 | 44 | 20 | 64 | 30 | 1 | .. | 2 | .. | 3 |

சிந்து மற்றும் வ.மே.எ.மா.வுள்ள பிரதிநிதித்துவம் - மாகாணங்களில்.மக்கட் தொகையில் சிறுபான்மையாக உள்ள முஸ்லிம்கள் அனுபவிப்பதைப் போன்ற பிரதிநிதித்துவம் சிந்துவில் இந்து சிறுபான்மையோருக்கும், வ.மே.எ.மா.ல் இந்து மற்றும் சீக்கிய சிறுபான்மையோருக்கும் வழங்கப்பட வேண்டும்.

## மேலே குறிப்பிட்ட விண்ணப்பத்திற்கு விளக்கமளிக்கும் அறிக்கை

1. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்திற்கு ஆலோசனை கூறப்பட்டுள்ள விவரங்களை இந்துக்களோ, சீக்கியர்களோ ஏற்றுக் கொள்ளவில்லை; ஆனால் மத்திய சட்டப்பேரவையில் சீக்கியர்கள் கோரிய முழுப் பிரதிநிதித்துவத்திற்கு வகை செய்யப்பட்டுள்ளது.

2. வெவ்வேறு சிறுபான்மையோருக்கு உத்தேச இடங்கள் ஒதுக்கீடு ஒரு முழுத் திட்டமாக அமைந்துள்ளது. அவற்றின் தனித் தனிப் பிரேரணைகளை ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்க முடியாது.

3. எந்த வகையிலும் பெரும்பான்மை சமூகமானது சிறு பான்மையாகவோ அல்லது சிறுபான்மைக்கு சமமாகவோ குறைந்து போகக்கூடாது என்ற கோட்பாட்டை இட ஒதுக்கீடு கடைப்பிடிக்கிறது.

4. வணிகர்கள், நிலச்சுவான்தார்கள், தொழில்துறை தொழிலாளிகள் முதலியவர்களுக்கு எவ்விதப் பிரதிநிதித்துவமும் வழங்கப்படவில்லை. இந்த இடங்கள் இறுதியாக வகுப்புவாத அடிப்படையிலாகும் என்று கருதப்படுகிறது. எனவே, இந்த நலன்களுக்கு சிறப்புப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்று விரும்பும் சமூகங்கள் வகுப்புவாரிக் கோட்டாவிலிருந்து அதைப் பெற்றுக் கொள்ளலாம்.

5. மத்திய சட்டப் பேரவையில் முஸ்லீம்களுக்கு 33.5 சதவிகிதப் பிரதிநிதித்துவம் அனுமதிக்கப்பட்டிருப்பதானது பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து 26 சதவிகிதமும், இந்திய சமஸ்தானங்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் கோட்டாவிலிருந்து மரபாகக் குறைந்த பட்சம் 7 சதவீதமும் ஆக இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

6. பஞ்சாபில் ஆலோசனைக் கூறப்பட்டுள்ளபடி முஸ்லீம்கள், சாதி இந்துக்கள் மற்றும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பொதுவாகத் தியாகம் செய்வதன் அடிப்படையில் சீக்கியர்களுக்கு 54 சதவீதம் பிரதிநிதித்துவத்தை அளிக்கும். இது சட்டப்பேரவையில் அவர்களுக்கு 20 சதவீதப் பிரதிநிதித்துவத்தை வழங்கும்.

7. இந்தப் பிரேரணைகள் 115 மில்லியனுக்கு அதிகமான மக்களுக்கு அல்லது இந்தியாவின் மக்கட் தொகையில் சுமார் 46 சதவீதத்தினருக்கு ஏற்புடையதாயிருக்கும் என்று கருதலாம்.*

பிரிட்டிஷ் பிரதமர் தனது சொந்த முறையில், இந்தியப் பிரதிநிதிகளை ஓர் உடன்பாட்டுக்கு வருவதற்கான மனப்பக்குவத்தை ஏற்படுத்துவதற்கு முயன்றார். குறிப்பிட்ட பிரதிநிதிகளுக்கு பிரதமரின் மகள் விருந்தளித்தார். பரோடா மகாராஜா, டாக்டர் அம்பேத்கர், சர். மீர்ஸா இஸ்மாயில், ஜின்னா, தாம்பே மற்றும் சிலர் இதில் கலந்து கொண்டனர். பிரிட்டிஷ் பிரதமர் சில பிரதிநிதிகளை செக்கர்ஸில் உள்ள தனது நாட்டுப்புற இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். இந்தியப் பிரச்சினை சம்பந்தமாக அங்கு அவர்களிடையில் உரையாடல் நடைபெற்றது. ஆனால் அங்கு கூட அவர்கள் ஓர் உடன்பாட்டுக்கு வர முடியவில்லை.

சிறுபான்மையோர் துணைக் கமிட்டி தனது அறிக்கையை மாநாட்டுக்கு சமர்ப்பித்தது. அறிக்கையின் கடைசி பாராவில் இவ்வாறு கூறப்பட்டிருந்தது: ''தங்களுடைய கோரிக்கைகள் நியாயமான முறையில் ஏற்றுக்கொள்ளப்பட்டாலொழிய, இந்தியாவின் எந்த சுயாட்சி அரசியல் சாசனத்திற்கும் தாங்கள் சம்மதம் அளிக்க முடியாதென்று சிறுபான்மையோரும், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களும் திட்டவட்டமாக அறுதியிட்டுக் கூறியுள்ளனர்.''

ஜோஷி, ஜாதவ் மற்றும் பால் ஆகியோரைப் போன்றே டாக்டர் அம்பேத்கரும் ஓட்டுரிமை துணைக் கமிட்டியின் பிரேரணைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. ஏனெனில், அந்தப் பிரேரணைகள் போதுமானவையல்ல என்று அவர்கள் கருதினர். வயது வந்தோர் அனைவருக்கும் ஓட்டுரிமையை உடனடியாக அமலுக்குக் கொண்டு வர வேண்டுமென்று அவர்கள் வாதாடினர். கால அவகாசம் இல்லாததால், டாக்டர் அம்பேத்கார் எழுத்து வடிவிலான தனது உரையில், வாக்குரிமையை வரம்புக்குட்படுத்துவதன் மூலம் தொழிற் கட்சி அரசு, தங்களை, தங்களது நல்வாழ்வில் அக்கறையில்லாதவர்களின் தயவுக்கு விடுகிறார்களென்றும், அது தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு துரோகம் செய்வதாகும் என்றும் பிரிட்டிஷ் அரசுக்கு எச்சரிக்கை விடுத்தார்.

---

★ இது, சமஷ்டிக் கூட்டமைப்புக் கமிட்டி மற்றும் சிறுபான்மையோர் கமிட்டியின் அசல் நடவடிக்கைக் குறிப்பில் அட்டவணை III என்று வெளியாகியுள்ளது. பக். 1394-99

இந்தப் பிரச்சினை சம்பந்தமாகவும் தமது மக்களின் நல் வாழ்வுக்கும் டாக்டர் அம்பேத்கார் மிகவும் மனப்பூர்வமாகவும் அர்ப்பணிப்பு உணர்வுடனும் பாடுபட்டார். அதனால் அவர் இரவு பகலாக வேலை செய்தார், பலரைப் பேட்டி கண்டார், தானும் பேட்டியளித்தார், தகவல்களை வழங்கினார்; தீண்டப்படாதாரின் பிரச்சினையைப் பூரணமாகப் புரிந்து கொள்ளும்படி செய்வதற்காக பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் சில உறுப்பினர்களின் கூட்டத் திலும் கூட உரை நிகழ்த்தினார். வெளிநாட்டுப் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதி அனுப்புவதற்கும், வெளிநாட்டுப் பத்திரிகை களுக்கு அறிக்கைகள் விடுவதற்கும் லண்டனில் கூட்டங்களில் பேசுவதற்கும் அவர் ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்திக் கொண்டார். இதில் அவருடைய ஒரே நோக்கம், இந்தியாவில் காலங்காலமாகத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் எத்தகைய சகிக்க வொண்ணாத அவமானங்களுக்கு உள்ளாகி வந்துள்ளனர், நம்பற்கரிய துன்ப துயரங்களில் உழன்று வந்திருக்கின்றனர் என்பதை அம்பலப்படுத்துவதேயாகும். பத்திரிகைகளுக்கு மேலும் மேலும் அவர் விடுத்த வேண்டுகோள்களில், இந்தியாவில் தீண்டப்படாத வர்களின் லட்சியத்திற்கு அறிவொளி உலகத்தின் ஆதரவு தேவைப்படுகிறது என்று அவர் கூறினார். எனவே, மனிதநேயத்தின் அடிப்படையில், தங்களது பிரச்சினையின் தீர்வுக்கு உதவ வேண்டியது உலக மக்களின் புனிதமான கடமை என்று அவர் வலி யுறுத்தினார்.

இதன் பயனாக, இந்தியாவில் தீண்டப்படாதவர்களின் கதி, அமெரிக்காவில் நீக்ரோக்களின் கதியைவிட மோசமாக இருக்கிறது என்பதை முதல் தடவையாக உலகம் தெரிந்து கொள்ள முடிந்தது. அம்பேத்கரின் வேண்டுகோள் சில பிரிட்டிஷ் தலைவர்களை நெகிழ்ச்சியடையச் செய்தது, அதன் விளைவாக, மிஸ் இலியனார், மிஸ். எல்லென், நார்மன் ஆங்கிள் போன்ற பிரிட்டிஷ் பார்லி மெண்ட் உறுப்பினர்களும் வேறு சிலரும் அடங்கிய ஒரு தூதுக் குழு லார்டு சாங்கியை சந்தித்து, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு ஓட்டுரிமை வழங்க வேண்டுமென்றும், அவர்களின் இடர்ப் பாடுகளை அகற்ற வேண்டுமென்றும் வாதாடினர். லார்டு சாங்கி, தாங்கள் உத்தேசித்துள்ள அரசியல் கட்டமைப்பில், அவர்கள் இந்தி யாவின் பிற வர்க்கங்களுடனும் பொதுமக்களுடனும் ஒன்றாக வைக்கப்படுவார்கள் என்று வாக்குறுதியளித்தார். ஆயினும், சில பிரிட்டிஷ் பத்திரிக்கைகள் டாக்டர் அம்பேத்கருக்கு விரோதமாக

இருந்தன, ஏனெனில், ''டொமினியன் அந்தஸ்துக்கான முயற்சியை நான் எதிர்க்கவில்லை''* என்று அவர் கூறினார். தனது லட்சியத்தின் பால் அவர்கள் அசட்டையாக இருப்பதைப் பற்றியோ, அல்லது அதை எதிர்ப்பது பற்றியோ தானும் கவலைப்படவில்லை என்றும் அவர் கூறினார்.

டாக்டர் அம்பேத்கரின் ஆழ்ந்த ஞானமும், மிகுந்த விடா முயற்சியும், பிறரை வசியப்படுத்தும் அறிவாற்றலும் பிரதி நிதிகள் மீதும், பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் மீதும் ஒரு மகத்தான பதிவை ஏற்படுத்தியது. அவர் வெவ்வேறு வட்டாரங்களில் மதிப்பையும், அதுபோன்றே வெறுப்பையும் தோற்றுவித்தார். இந்தியன் டெய்லி மெயில் செய்தியாளர் இவ்வாறு எழுதினார்: ''ஏக காலத்தில், ஒரு மெய்யான பிரதிநிதித்துவ அரசும் உடன் இணைந்து ஏற்படாவிட்டால், எந்த பொறுப்பாட்சியும் நிறுவப் படாமல் பார்த்துக் கொள்ளும்படியான ஆணை தனக்கிருக்கிறது என்று டாக்டர் அம்பேத்கர் சுட்டிக்காட்டினார். உத்தேச வடிவத் திலான அரசு வர்க்கங்களால் மக்களுக்காக ஏற்படுத்தும் அரசாக இருக்கும் என்ற ஒரு அச்சத்தை அவர் வெளிப்படுத்தினார். அவருடைய எதிர்ப்பு கிரேட் பிரிட்டனில் தொழிற் கட்சி மற்றும் லிபரல் கட்சியில் அதிக அளவு பரிவை எதிரொலித்தது.''

வெவ்வேறு துணைக் கமிட்டிகளின் அறிக்கைகளைப் பதிவு செய்த பின், வட்டமேஜை மாநாடு 1931, ஜனவரி 19க்கு ஒத்திவைக்கப்பட்டது. இதைத் தொடர்ந்து காமன்ஸ் சபையில் இந்தியா சம்பந்தமான ஒரு விவாதம் நடைபெற்றது. அந்த விவாதத்தின்போது, ஒரு குரல் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் குறைகளை எதிரொலித்தது. அது ஐஸக் புட்டின் குரலாகும். அவர் பெருமளவு பரிவு கொண்டிருந்தார். தீண்டப்படாதாரின் இயலாமைகள் குறித்து அவர் இவ்வாறு கூறினார்: ''அவர்களின் பாதுகாப்பிற்கு பாதுகாப்பு அரண்களை நாம் ஏற்படுத்தாவிட்டால், அவர்களது ரத்தம் நமக்கு எதிராகக் கூக்குரலிடக்கூடும். வருங்கால ஆளுநர்களுக்கு நான் ஏதாவது ஆலோசனை கொடுக்க வேண்டி யிருக்கிறதெனில், அது 'இந்த மக்களுக்காகவே உங்களுடைய பிரதான அக்கறையை செலுத்த வேண்டும்' என்பதுதான். அவர்கள் இப்பொழுது தற்காப்பற்றவர்களாக இருக்கக்கூடும். ஆனால் ஒருநாள் அவர்கள் வலிமை பெற்றவர்களாக ஆவார்கள்.

★ டாக்டர் அம்பேத்கரின் கடிதம், டிசம்பர் 19, 1930.

உலகில் நீதி இருப்பதினால், இந்த மக்களின் பெருகியுள்ள துன்ப துயரங்களை என்றென்றைக்குமாக நிறுத்தி வைத்துக் கொள் வதற்கான அரண் எதுவும் கிடையாது. இருபதாண்டுகளுக்குப் பின்னால் இந்தியாவின் முன்னேற்றத்திற்கான மெய்யான சோதனை, 'இந்த மக்களுக்காக நீங்கள் என்ன செய்தீர்கள்?' என்பதுதான். இந்த உரை, லண்டனில் அம்பேத்கரின் இடை விடாத பணிக்கு ஒரு ஆற்றல் மிக்கப் பாராட்டாகும்.

லண்டனை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால், டாக்டர் அம்பேத்கர், வட்டமேஜை மாநாட்டின் பணி குறித்த தனது கருத்தைத் தனது செயலாளர் சிவதர்க்கருக்கு எழுதிய கடிதத்தில், மாநாட்டின் பயன் குறித்துத் தான் நிச்சயமில்லாதிருந்த போதிலும், அது இந்தியாவின் சுயாட்சிக்கு அஸ்திவாரத்தை இட்டுள்ளது என்று நான் நம்பிக்கைக் கொண்டிருக்கிறேன் என்று தெரிவித் திருந்தார். இந்த வெளிச்சத்தில் பார்க்கும்போது, மாநாடு ஒரு வெற்றிதான். ஆயினும் மற்றொரு கோணத்திலிருந்து பார்க்கும் போது, அஸ்திவாரத்தில் காரையைக் காட்டிலும் மணல்தான் அதிகமாயிருக்கிறது என்று அவர் கூறினார்.* எனவே அஸ்தி வாரம் போதிய அளவு வலுவானதாக இருக்கவில்லை. ஆனால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் உரிமைகளைப் பொறுத்தமட்டிலும், அது ஒரு மகத்தான வெற்றியாகும், என்று அவர் மேலும் கூறினார்.

இந்திய அரசியல் சிந்தனைக்கு வட்டமேஜை மாநாட்டின் இந்தக் கூட்டத் தொடரின் குறிப்பிடத்தக்க சாதனை ஓர் ஐக்கிய இந்தியா என்ற கருத்தமைப்பு பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளதாகும். மற்றொரு கணிசமான பயன், இந்தியாவின் அரசியல் படத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் திட்டவட்டமாக எழுச்சி பெற்றுள்ள தாகும்; இன்னும் கூடுதல் முக்கியமானதென்னவெனில், உலக அபிப்ராயம் எனும் நீதிமன்றத்தின் முன்னே, அந்த மக்களின் சொல்லொணாத் துன்ப துயர நிலைமைகளை உன்னதமான முறையிலும் நெகிழ்ச்சி ஏற்படுத்தும் வகையிலும் விளக்கிக் கூறிய தாகும். இடங்கள் பிரச்சினையிலான கருத்து வேறுபாட்டின் விளை வாக (வெவ்வேறு சமூகங்கள், உத்தேச சட்டப் பேரவைகளில் பெறுவதற்கு முயன்ற இடங்கள் சம்பந்தமான உடன்பாடின் மையின் விளைவாக, மற்றும், தனித்தொகுதி அல்லது ஒதுக்கப் பட்ட இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகளுடனான தேர்தல்

★ டாக்டர் அம்பேத்கரின் கடிதம், ஜனவரி 21, 1931.

முறை சம்பந்தமாக உடன்பாடின்மையின் விளைவாகவும் மாநாடு ஒத்தி வைக்கப்பட்டது. தவிரவும், அந்த சமயத்தில் எந்த ஜீவாதார மான முடிவையும் மேற்கொள்வது மற்றையத் தரப்பினர் இல்லாமல் கணக்கிடுவதாகவும் சிந்திக்கப்பட்டிருக்க வேண்டும்; ஏனெனில், இந்தியாவின் பிரதான அரசியல் கட்சியான காங்கிரஸ், வட்ட மேஜை மாநாட்டின் நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்ள வில்லை. 1931, பிப்ரவரி 31ல் மார்சேய்ல்ஸில் கப்பலேறி, டாக்டர் அம்பேத்கர் இந்தியாவிற்குப் புறப்பட்டார்.''[1]

## தாழ்த்தப்பட்ட வர்க்கங்களும் வருங்கால அரசியல் சாசனமும்

1931, பிப்ரவரி 27 வெள்ளிக்கிழமை காலையில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் பம்பாய் வந்து சேர்ந்தார். அங்கு பால்லார்டு கப்பல் துறையில் அம்பேத்கர் சேவாதளத் தொண்டர் படையினால் அவருக்கு உற்சாகமான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. டைம்ஸ் ஆப் இந்தியா இதழின் ஒரு நிருபருக்கு அளித்த பேட்டியில் அவர் பின்வருமாறு கூறினார்: ''வட்ட மேஜை மாநாடு ராஜதந்திரத்தின் ஒரு வெற்றி என்று நான் கருதுகிறேன். மாநாட்டில் சுருக்கமாக எடுத்துக் கூறப்பட்ட அரசியல் சாசனத்தில் குறைபாடுகள் இல்லை யென்று கூறுவது போலித்தனமாகும், ஆனால், அவை ஜீவாதாரமான தன்மையுடையவை அல்ல என்று நான் கருதுகிறேன். இதற்கு மாறானது உண்மையென்ற அனுமானித்துக் கொண்டாலும் இந்தியப் பிரச்சினைக்கு சமாதான பூர்வமான தீர்வு காண்பதில் நம்பிக்கை யுள்ள அனைவரும் முன்வந்து, கட்டமைப்பை மேம்படுத்துவதற்கு இன்னும் அவகாசமும் வாய்ப்பும் இருக்கிறது. மாநாட்டினால் விரித்துரைக்கப்பட்ட அரசியல் சாசனம் மிகவும் ஜனநாயக விரோத மானதாகும், ஏனெனில், அது மிகவும் குறுகிய வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்டது என்ற உண்மையிலிருந்துதான் என்னுடைய மிகப் பெரிய ஏமாற்றம் எழுகிறது. திரு. காந்தி, மாநாட்டின் முடிவுகளைப் பற்றிக் கூறியவை சம்பந்தமான செய்தி களை மதிப்பிடும்போது, அரசியல் சாசனத்தின் இந்த அம்சத்தை அவர் பூரணமாகக் காணத் தவறிவிட்டார் என்று தோன்றுகிறது; மேலும் மிகவும் அற்பமான மற்றும் மிகவும் நிலையற்றவை என்று நான் கருதும் கூறுகளை அவர் வலியுறுத்துவது மிகவும்

1. கீர், பக்கம் 154-157.

பரிதாபகரமானதாகும். தாழ்த்தப்பட்ட வர்க்கங்களையும் தொழிலாளர்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் நாம் இதர கட்சிகள் அனைத்தும், நேரு அறிக்கையில் கையெழுத்திட்டிருந்த வகையில் தங்கள் நிலைக்கு உண்மையாக நடந்து கொள்ளாததால் நாம் தோற்றுப்போன போதிலும் வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வேண்டும் என்பதற்காகப் போராடினோம். திரு. காந்தி அவர்கள், பிரச்சினையின் தீர்வுக்குத் தன் நிபந்தனைகளை முன் வைக்கும்போது, அவரும் ஒரு தரப்பாக இருக்கப்போகும் அரசியல் சாசனம் ஒரு முற்றிலும் ஜனநாயகபூர்வமானதாக இருக்கும் என்று நான் திடமாக நம்புகிறேன்.

இந்தியாவில் சாதாரண ஆணுக்கும் பெண்ணுக்கும் அரசியல் அதிகாரத்தைப் பெற்றுத் தருவதற்கான நமது முயற்சிகளுக்குத் திரு. காந்தி ஆதரவளிக்கத் தவறினால், அவருடைய செய்கையை அவர் மீது வைத்திருந்த நம்பிக்கைக்கு மிகப் பெரிய துரோகம் செய்துவிட்டார் என்று அவர் மீது குறை கூறுவதற்கு நான் தயங்க மாட்டேன்; மற்றும் அவருடைய சட்ட மறுப்பு இயக்கம், வர்க்கங்களின் சேவைக்காக வெகுஜனங்களை மிகவும் மோசமாக சுரண்டுவதாகும். திரு. காந்தியின் அரசியல் தத்துவஞானம் பலருக்குத் தெரியாததால், தங்களைப் பின்பற்றுவோரிடையிலும், சீடர்களிடையிலும் செல்வாக்குள்ள மக்கள் தலைவர்கள், காந்தியின் சட்ட மறுப்பு இயக்கத்திற்கு மேற்கொண்டு எந்த ஆதரவும் கொடுப்பதற்கு முன்னால், வயது வந்தோருக்கு ஓட்டுரிமை அளிக்கும் பிரச்சினை சம்பந்தமாக அவருடைய கருத்துக்களைத் தெரிவிக்கும்படி அவரிடம் கோர வேண்டியது விரும்பத்தக்கதாகும்.''

## சிறுபான்மையோர் பிரச்சினை

''மிகவும் முக்கியமான பிரச்சினை சிறுபான்மையோர் பிரச்சினைதான் என்பதில் ஐயமில்லை. இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணாமல், இந்தியாவுக்கு சுதந்திரம் இருக்க முடியாது. துரதிருஷ்டவசமாக மாநாடு இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்குத் தவறிவிட்டது. அரசியல் சீர்திருத்தத் திசை வழியில் மேற்கொண்டு எந்த நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்னால் ஒரு தீர்வு காணப்பட்டாக வேண்டும். அரசியல் அதிகாரம் வழங்கப்படுவது சிறுபான்மையோர் பிரச்சினைக்கு ஓர் ஒத்துக்கொள்ளப்பட்ட தீர்வின் மீது சார்ந்துள்ளது என்பதை மாநாடு நடைமுறையில்

கூறியுள்ளது என்பதை இந்தியாவில் அவர் உணரவில்லை என்று தோன்றுகிறது. திரு. ஆர்.எம். சீனிவாசனும் நானும் மாநாட்டில் பிரதிநிதித்துவப்படுத்திய தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், வருங்கால இந்திய அரசியல் சாசனத்தில் அவர்களுடைய இடம் பாதுகாப்பாக உள்ளது என்பதனாலும், அவர்களுடைய இயலாமைகள் இல்லாது போகும் என்பதனாலும் நான் மகிழ்ச்சியடைகிறேன்.''[1]

''இந்த சமயத்தில், வட்டமேஜை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடருக்கான பிரதிநிதிகளின் பெயர்கள், ஜுலை மூன்றாவது வாரத்தில் அறிவிக்கப்பட்டன. லண்டனில் நடைபெறவிருக்கும் இந்த மாநாட்டில் கலந்து கொள்ளும்படி டாக்டர் அம்பேத்கர் சாஸ்திரி (ரைட் ஹானரபிள் வி.எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி), சாப்ரூ, ஜெயகர், செதல்வாட், மாளவியா, சரோஜினி நாயுடு, காந்தி, மீர்ஸா இஸ்மாயில், ஜின்னா, ராமசாமி முதலியார் மற்றும் பிறர் அழைக்கப்பட்டனர். வட்டமேஜை மாநாட்டின் முதல் கூட்டத் தொடரின்போது, சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியிலிருந்து டாக்டர் அம்பேத்கர், திட்டமிட்டு நீக்கப்பட்டார். அவருடைய தேசபக்த மனப்பாங்கும், சாதாரண மக்களுக்கும் ஜனநாயகத்திற்கும் ஆதரவாக அச்சமின்றி அவர் பேசி வந்ததும் பிரிட்டிஷ்காரர்களை முகஞ்சுளிக்க வைத்தது. ஆனால் இந்த சமயத்தில் அவர் சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டிக்குத் தேர்வு செய்யப்பட்டார். இது நடைமுறையில் இந்தியாவின் புதிய அரசியல் சாசனத்தை வரைவதுடன் சம்பந்தப்பட்டிருந்தது.

இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும், இங்கிலாந்திலிருந்தும் கூட, டாக்டர் அம்பேத்கருக்குப் பாராட்டுக்கள் வந்து குவிந்தன. எதிர் முகாமைச் சேர்ந்த பத்திரிக்கைகளும் கூட அவருடைய தேசபக்தியையும், ஜனநாயகத்தின் பாலான அவருடைய நேசத்தையும் சாதாரண மக்களின் நல்வாழ்வு சம்பந்தமான அவருடைய அக்கறையையும் பாராட்டத் தொடங்கின. கொலாபா சமாச்சார் என்ற ஒரு பிரபல மாவட்டப் பத்திரிக்கை - சமூக சீர்திருத்தங்கள் சம்பந்தமான விஷயங்களில் அவருக்கு எதிராக இருந்த இந்த இதழ் - சிமர் விசாரணையில் நாட்டுக்கு ஆற்றிய தேச பக்த சேவைக்காக டாக்டர் அம்பேத்கருக்கு நன்றிக் கடன் பட்டிருப்பதாக எழுதியது. சைமன் கமிஷனின் விஜயத்தின் போதும், வட்ட

1. தி டைம்ஸ் ஆப் இந்தியா, பிப்ரவரி 28, 1931.

மேஜை மாநாட்டின் முதலாவது கூட்டத் தொடரிலும் அவரது சேவைகளை அது நினைவு கூர்ந்தது; டாக்டர் அம்பேத்கர் ஒரு மெய்யான தேசபக்தர் என்றும், நாட்டின் அடிமைத்தளைகளை முறிப்பதற்கு அவர் போராடுவார் என்றும், இரண்டாவது வட்ட மேசை மாநாட்டில் அவ்வாறு செய்வதற்கு மற்றவர்களுக்கு உதவுவார் என்றும் அது மேலும் கூறியது.''[1]

இந்தியன் டெய்லி மெயில் இதழ், தனது 1931, ஜூலை 21-ம் தேதிய பதிப்பில், சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டிக்கு டாக்டர் அம்பேத்கர் நியமனம் செய்யப்பட்டதற்கு வாழ்த்துக் கூறி, மேலும் அவரை மிகவும் பாராட்டியது. அது இவ்வாறு எழுதியது: ''சமஷ்டிக் கூட்டமைப்புக் கமிட்டிக்கு நியமனம் செய்யப்பட்டதற்காக டாக்டர் அம்பேத்கருக்கு வாழ்த்துக் கூறுகிறேன். வட்ட மேசை மாநாட்டில் அவர் ஒரு பெரும் தாக்கத்தை ஏற்படுத்தினார். அதன் துவக்கக் கூட்டத்தில், அவருடைய உரை, மாநாடு முழுவதிலுமே நிகழ்த்தப்பட்ட மிகச் சிறந்த சொற்பெருக்குகளில் ஒன்றாகும், சாங்கே அறிக்கை சம்பந்தமாக அவருடைய இறுதியான கண்ணோட்டம், 'அதை அங்கீகரிக்கவுமில்லை, அதே சமயத்தில் அதை ஆப்சேபிக்கவுமில்லை' என்றிருந்தது. ஒரு மெய்யான பிரதிநிதித்துவ அரசும் உடன் ஏற்பட்டாலொழிய, எந்தப் பொறுப்புள்ள அரசும் ஏற்படக்கூடாது என்பது தனக்கு வழங்கப்பட்டுள்ள ஆணையாகும் என்று அவர் சுட்டிக்காட்டினார். உத்தேசிக்கப்பட்டுள்ள அரசு வடிவமானது மக்களுக்காக வர்க்கங்களால் உருவாக்கப்படும் அரசாக இருக்கும் என்று அவர் அச்சம் தெரிவித்தார். அவரது எதிர்ப்புக்கு கிரேட் பிரிட்டனின் தொழிற்கட்சி மற்றும் லிபரல் கட்சியில் பெருமளவு ஆதரவு எதிரொலி ஏற்பட்டது. மறுபுறத்தில் டாக்டர் அம்பேத்கர், பத்தாம்பசலி மைனாரிட்டி சூதாட்டம் ஆடமாட்டார். அவர் ஒரு தேசபக்தர். சுயாட்சி பெறுவதில் மிகவும் அக்கறை கொண்டுள்ளார். செனட் மற்றும் பெடரல் சட்டப்பேரவை உறுப்பினர்கள் பற்றி நடக்கப்போகும் வருங்கால விவாதங்களில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் இந்த உன்னதமான பிரதிநிதி நிச்சயமாக ஒரு மிகவும் முக்கியமான பங்காற்றுவார்.[2]

தி சண்டே கிரானிகில் இதழ், தனது 1931, ஜூலை 26ம் தேதிய பதிப்பில், ஏ.டி.டி. என்ற முன்னெழுத்துக்களின் கீழ் ஒரு உண்மையான தேசியவாதி என்ற முறையில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின்

சேவைகளைப் பாராட்டி இவ்வாறு எழுதியது: ''சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டிக்கு நியமனம் செய்யப்பட்டவர்களில் எனது நண்பர் டாக்டர் அம்பேத்கரும் ஒருவராவார். கடந்த ஆண்டு அவர், வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்வதற்காக லண்டனில் இருந்தபோது, நான் அவருடைய சிறப்புக்களைப் பெருமளவு அறிந்து கொண்டேன். ஓர் உண்மையான தேசிய வாதியின் உள்ளம் படைத்திருந்த அவர், பிரிட்டிஷ் பழமை வாதிகளின் வசப்படுத்தும் வார்த்தை ஜாலங்களுக்கு எதிராக ஓர் உறுதியான போராட்டம் நடத்தினார். அவரைத் தங்கள் பக்கம் வெல்வதற்கு அவர்கள் மிகவும் ஆர்வத்துடனிருந்தனர். அதே பொழுதில், தனது சக-பிரதிநிதி ராவ் பகதூர் சீனிவாசனை தேசிய வாத அரவணைப்புக்குள் இருத்தி வைத்துக் கொள்வதற்கான அவருடைய ஆர்வம் அவருடைய பணியைக் கூடுதல் சிரமத்துக் குள்ளாக்கியது. செஸ்டர்ஃபீல்டு பூங்காவில், அவர், பரஸ்பரம் விட்டுக் கொடுக்கும் நிகழ்வுப் போக்கில், சர் தேஜ் பகதூர் சுதேச மன்னர்களுக்கு அதிகம் வழங்கி வருகிறார் என்று மீண்டும் மீண்டும் புகார் செய்தார். ஆனால், சர் தேஜ், ஒரு மிகவும் சிரமமான சூழ்நிலையில் சாமர்த்தியமாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது.''[1]

''டாக்டர் அம்பேத்கரின் நியமனம் குறித்து கேசரியும் வேறுபல செய்தித் தாள்களும் திருப்தி தெரிவித்தன. டாக்டரையும் என்.எம். ஜோஷியையும் பாராட்டி, இந்திய சேவா சங்கத்தின் சஞ்சிகை இவ்வாறு எழுதியது. ''சமுதாயத்தின் மிகவும் கீழ்த் தட்டிலிருந்து வந்தவர்கள், ஒருவர் தொழிலாளி வர்க்கத்தைப் பிரதி நிதித்துவப்படுத்துபவர். மற்றவர் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பிரதிநிதித்துவப்படுத்துபவர், இந்த நாட்டில் அறியப்பட்ட 'உயர் அரசியலுக்கு' அவர்கள் இயல்பாகவே அந்நியமானவர்கள். எளிய மக்களின் எளிய நம்பிக்கையை அவர்கள் பெற்றிருந்தனர், அவர்களது நலனுக்காக அவர்கள் பாடுபட்டனர். தங்களைச் சுற்றியுள்ள உயர் பிரமுகர்களின் கர்வத்துடன் கூடிய புன்னகை, புறக்கணிக்கப்பட முடியாதவை என்று தங்களுக்குப் போதிக்கப்பட்டுள்ள சில கோட் பாடுகளை நடைமுறையில் பிரயோகப்படுத்த வேண்டும் என்று வலியுறுத்துவதினின்றும் அவர்களைப் பின்வாங்கச் செய்யாது.'' இதற்கு சிறிது காலத்திற்கு முன்பு, பம்பாயின் ஒரு பிரபல தேசிய நாளிதழான ''ஃப்ரீபிரஸ் ஜெர்னலின் லண்டன் பிரதிநிதி,

மிஸ்மேயோவுக்கு விடுத்த பதிலில், வட்ட மேஜை மாநாட்டின் முதலாவது கூட்டத் தொடரில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய சேவைகளைப் புகழ்ந்துரைத்து, இவ்வாறு கூறியிருந்தார்: ''டாக்டர் அம்பேத்கர் ஓர் அச்சமற்ற, சுதந்திரமான, மற்றும் தேசபக்தி மனப் பாங்கு உள்ள தலைவர்; அவருடைய அச்சமற்ற தன்மையை இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இருசாராராலும் சகித்துக் கொள்ள முடியவில்லை. வட்ட மேசை மாநாட்டின் முதல் கூட்டத் தொடரில் அவரது துவக்க உரை, மாநாட்டின் நிகழ்ச்சிகள் முழுவதிலுமே சிறந்த உரையாகும்.''

காந்திஜி வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்வாரா என்பது அப்பொழுது இன்னும் முடிவாகாமல் இருந்தது. இயல்பாகவே எல்லோருடைய பார்வையும், பம்பாயில் 'மலபார் ஹில்' பகுதியிலுள்ள மணிபவன் மீது குவிமையப்பட்டிருந்தது. காந்திஜி பேச்சுத்திறன் மற்றும் அரசியல் அறிவுடைமை ஆகியவற்றினால் ஒரு மர்மச்சூழல் உருவாக்கப்பட்டிருந்ததே இதற்குக் காரண மாகும். பரபரப்பான சூழ்நிலையில், அம்பேத்கரின் கோரிக்கைகள் யாவை என்பதை அவரிடமிருந்து அறிந்து கொள்வதற்கு காந்தி விரும்பினார். எனவே, அவர் 1931, ஆகஸ்ட் 6ல் அம்பேத்கருக்கு எழுதிய கடிதத்தில், டாக்டர் அம்பேத்கர் நேரம் ஒதுக்க முடியு மென்றால், அவரை அன்றிரவு எட்டு மணிக்கு வந்து சந்திப்பதாக, அவருக்குத் தெரிவித்திருந்தார். மேலும், டாக்டர் அம்பேத்கருக்கு சௌகரியமாயிருந்தால், மகிழ்ச்சியுடன் அவருடைய வீட்டுக்கே வந்து அவரை சந்திப்பதாகவும் கூறியிருந்தார்.''[1]

எனவே, அதன்படி, அம்பேத்கர் - காந்தி சந்திப்பு 1931, ஆகஸ்டு 14ல் மணி பவனில், பிற்பகல் 2 மணிக்கு நடைபெற்றது.

## ''தீண்டப்படாதவர்களை தனியே ஒதுக்கிவைப்பது''

வட்டமேசை மாநாட்டில் பங்கு கொள்வதற்காக மூல்தான் கப்பலில் பயணம் தொடங்குவதற்கு முன் காந்தியை சந்தித்த தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் தலைவர் டாக்டர் அம்பேத்கர், தீண்டப்படாதவர்களின் கோரிக்கைகள் சம்பந்தமாகக் காங்கிரசின் நேர்மையற்ற கண்ணோட்டம் குறித்து மகாத்மாவிடம் ஒருசில

அப்பட்டமான உண்மைகளைத் தெரிவித்ததாகக் கூறப்படுகிறது. நாடு முழுவதும் தீண்டாமையில் நம்பிக்கை கொண்டிருக்கும் போது, அப்பாவி மகாத்மா என்ன செய்ய முடியும்?''[1]

மறுநாள், 1931, ஆகஸ்டு 15, அனேகமாக அனைத்து வட்ட மேசை மாநாட்டுப் பிரதிநிதிகளும் எஸ்.எஸ். மூல்தான் கப்பலில் லண்டனுக்குப் புறப்பட வேண்டியிருந்தது. பம்பாயில் பல்லார்டு கப்பல் துறை அன்று கோலாகலமாகக் காட்சியளித்தது. மன்னர்களிலிருந்து சாதாரணக் குடிமகன் வரை அனைத்து வகைப்பட்ட மக்களும் துறைமுகத்தில் இருந்தனர். நண்பர்கள், ஆதரவாளர்கள், பின்பற்றுவோர், சீடர்கள் முதலியவர்கள் தமது இளவரசர்களுக்கும் கதாநாயகர்களுக்கும் ''சென்று வருக, வென்று வருக'' என்று வழியனுப்புவதற்குக் கூடியிருந்தனர். காரிலிருந்து கீழே இறங்கியதும் பெரிய கரகோஷம், வாழ்த்தொலிகள் பெற்ற ஒரே தலைவர் டாக்டர் அம்பேத்கர்தான். வெளியில் சாலையில் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட தொண்டர்கள் கூடிநின்று, மோல் நிலையத்திற்கு வந்து சேர்ந்ததும் அவரை, ''டாக்டர் அம்பேத்கர் வாழ்க!'', ''டாக்டர் அம்பேத்கர் நீடுழி வாழ்க!'' என்ற கோஷங்களுடன் அவரை வரவேற்றனர்.''[2]

கப்பலில் பிரயாணத்தின்போது, சர். பிரபாசங்கர் பட்டாணி என்பவரை டாக்டர் அம்பேத்கர் சந்தித்தார். காந்தியுடனான சந்திப்பின் விளைவு என்ன என்று அவர் கேட்டார். பேட்டியின் மத்தியில் தான் மண்டபத்தை விட்டு வெளியே சென்று விட்டதால், பேட்டியின் விளைவோ முடிவோ தனக்குத் தெரியாது என்று சர். பிரபாசங்கர் டாக்டர் அம்பேத்கரிடம் கூறினார்: அவருடைய குரலின் விநோதமான தொனியினால் சந்தேகமடைந்த டாக்டர் அம்பேத்கர், பேட்டியின் மத்தியில் அவர் ஏன் மண்டபத்தை விட்டு வெளியேறினார் என்று கேட்டார். இந்து வேதங்களின்படி, பழித்துக்கூறும் ஒருவர் ஒரு நல்ல மனிதரை வசைபாடினால், ஒரு கனவான் அந்த இடத்திலிருந்து வெளியேறி விட வேண்டும் என்றும், அவ்வாறு அவர் வெளியேற முடியாவிட்டால், பழி கூறுபவரின் நாக்கை அந்த இடத்திலேயே அறுத்துவிட வேண்டும் என்றும் கடுமையாகக் கூறினார். பிரபாசங்கரின் விவேகமற்ற காழ்ப்புணர்ச்சி கண்டு துணுக்குற்ற அம்பேத்கர், முகத்தில் எந்தவித எரிச்சலின்

1. டைம்ஸ் ஆப் இந்தியா, ஆகஸ்டு 18, 1931.
2. கீர்: பக். 168-169

அடையாளத்தையும் வெளிப்படுத்தாமல், ஓர் அப்பட்டமான பாசாங்குக்காரனுக்கும், அடிமைப் புத்தியின் காரணமாக நேருக்கு நேர் முகஸ்துதி செய்பவருக்கும் பட்டானியின் இந்து வேதங்கள் என்ன தண்டனையைப் பரிந்துரைக்கின்றன என்று கேட்டார். இவ்வாறு அம்பேத்கர் சூடு கொடுத்ததும் பட்டானி ஆத்திரமடைந்து, இவ்வாறு தன்னைக் கடுமையாகத் தாக்கிப் பேசியதன் பொருள் என்ன என்று டாக்டர் அம்பேத்கரைக் கேட்டார். பட்டானி என்ன புரிந்து கொண்டாரோ அதுதான் அதன் பொருள் என்றும், அவரைப் போன்ற அப்பட்டமான முகஸ்துதி செய்வோரின் பிடியிலிருந்து காந்தி விடுவிக்கப்பட வேண்டுமென்றும் அவர் மேலும் கூறினார். போலீஸ் கமிஷனர் வில்சன் குறுக்கிட்டு, மேற்கொண்டு நிலைமை ரசாபாசமாகாமல் தடுத்தார். பட்டானி கொஞ்சம் விவேகம் பெற்று திரும்பியிருக்கக் கூடும். உண்மையில், அனைத்துப் பெருமக்களும் தங்களைத் தாங்களே ஆத்ம பரிசோதனை செய்துகொண்டு, தங்களைச் சுற்றியுள்ள முகஸ்துதி செய்யும் நிகழ்ச்சிகளிலிருந்து தங்களை விலக்கிக் கொண்டால், உலகத்திற்கு எவ்வளவோ நன்மை ஏற்படும்!

காந்தி தனது பயணத்தை அதுவரை முடிவு செய்யாததால் அதே கப்பலில் பயணம் செய்யவிருந்த சரோஜினி நாயுடுவும் மாளவியாவும் தமது பயணங்களை ரத்து செய்தனர். கப்பலில் டாக்டர் அம்பேத்கர் கொடுத்த பேட்டியில் வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்வதற்கு காந்தி மறுத்ததைக் குறிப்பிட்டு, பர்தோலியின் நலன்களை இந்தியாவின் நலன்களுக்கு மேலானதாக வைப்பதும், ''அற்பக் குறைபாடுகளைப் பற்றிக் கவலைப்படுவதும், அதனிலும் பெரிய பிரச்சினையைப் பற்றி - அதற்கு தீர்வு காண்பது, அவர் குறிப்பிடும் அந்த அதிகாரிகளின் மீதே கட்டுப்பாடு செலுத்த வகை செய்யும் என்பதை - மனதில் கொள்ளாமலிருப்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை'', அது மடமையின் உச்சநிலை என்று குறிப்பிட்டார்.

தன்னுடைய கோரிக்கைகளை எதிர்ப்பதென்ற காந்தியின் முடிவு குறித்து அம்பேத்கார் இப்பொழுது ஆழமாக சிந்தித்துக் கொண்டிருந்தார். எனவே அவர், கூட்டங்களை நடத்தும்படியும், தங்களுடைய கோரிக்கைகளின் பாலான காந்தியின் கண்ணோட்டத்தைக் கண்டனம் செய்யுமாறும், தனது மக்களுக்குத் தனது செயலாளர் மூலம் தந்தி அனுப்பினார். சூயஸிலிருந்து சிவதர்க்காருக்கு அனுப்பிய மற்றொரு கடிதத்தில், வட்ட மேஜை மாநாட்டின் முதல் கூட்டத் தொடரின் சிறுபான்மையோர் துணைக்

கமிட்டிக்கு சமர்ப்பித்த விண்ணப்பத்தின் பிரதிகளை அனுப்பும்படி அவர் கேட்டிருந்தார். தான் விட்டு விட்டுப் போன தோல் பையை ராவ் பகதூர் ஆர். சீனிவாசனுடன் அனுப்பி வைக்கும்படியும் அவர் கேட்டிருந்தார்.

கப்பலில் ஜயகர், ரீவா மகாராஜா மற்றும் பிற தலைவர்கள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சமதா சேவாதளத்தின் மகத்தான கட்சி குறித்துத் தமது திருப்தியைத் தெரிவித்தனர். ஷவுகத் அலி மகிழ்ச்சியடைந்தார்; டாக்டர் மூஞ்சே திருப்தி தெரிவித்தார்; ஒரு கட்டுப்பாடான தொண்டர் படையைத் திரட்டுவதற்கு இந்து மகாசபையினால் முடியாமற் போன போதிலும், முஸ்லிம் தொண்டர்களுடன் நேருக்கு நேர் எதிர்கொள்வதற்கு தீண்டப்படாத இருந்துக்களின் ஒரு ஸ்தாபனம் இருக்கிறது என்று அவர் மறைமுகமாகக் குதூகலமடைந்தார். தீண்டப்படாதவர்களின் தலைவராக இருப்பதற்காக மூஞ்சே டாக்டர் அம்பேத்கருக்குப் பாராட்டுத் தெரிவிக்கும் அளவிற்குச் சென்றார். அவர்கள் தங்களுடைய லட்சியத்திற்கு டாக்டர் அம்பேத்கரின் சேவைகளைத் தெரிந்து கொள்ளும் அளவிற்கு உணர்வுடன் இருக்கிறார்கள். தங்களுக்கு நன்மை செய்ய விழையும் தலைவர்களைத் தெரிந்து கொள்ளாமலிருக்கும் சாதி இந்துக்களைப் போல் அவர்கள் அசட்டையாகவும், நன்றியற்றவர்களாகவும் இருக்கவில்லை.

ஆகஸ்டு 29ல் லண்டனைச் சென்றடைந்தபோது, டாக்டர் அம்பேத்கர் இன்புளூயென்ஸா ஜுரத்தினால் பாதிக்கப்பட்டிருந்தார். வாந்தி மற்றும் பேதியினால் மிகவும் கஷ்டப்பட்டார். இந்த உடல்நலக் குறைவு அவருடைய ஆற்றலை மிகவும் வற்ற வைத்தது. இதனால் அவர் சிவதர்க்கருக்கு எழுதிய கடிதத்தில், தனது உடல்நிலை ஒரு நெருக்கடியின் விளிம்பில் இருக்கிறது என்று அவர் எழுதினார். செப்டம்பர் 7 திங்கட் கிழமையிலிருந்து, அவர் உடல் நலம் தேறி வருவதாக உணரத் தொடங்கினார், ஆயினும் பலவீனம் இன்னும் இருந்து வந்தது. தனது உடல் நலக்குறைவு குறித்துத் தன் மனைவியிடம் ஒரு வார்த்தை கூடக் கூறக்கூடாது என்று அவர் சிவதர்க்கரிடம் தொடர்ந்து கூறிவந்தார். ஒரு விஷயம் அவரிடம் பலமாகக் குடிகொண்டது. மஹத் சப்-ஜட்ஜு நீதிமன்றத்தில் தோல்வியடைந்த வைதீக இந்துக்கள், தாணாவிலுள்ள மாவட்ட நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்தார்கள். தாணா மாவட்ட நீதிபதியின் தீர்ப்பு நிலுவையிலிருந்தது. தீர்ப்பு வழங்கப்பட்டவுடனே அதுபற்றித் தனக்குத் தெரிவிக்கும்படி அவர் சிவதர்க்கருக்குத் தெரிவித்திருந்தார்.

இதற்கிடையில் காந்தி, வல்லபாய் பட்டேல், ஜவாஹர்லால் நேரு மற்றும் சர். பிரபாசங்கர் பட்டானி சிம்லாவில் வைஸ்ராயை சந்தித்தனர். இந்த சந்திப்பில் வேறுபாடுகள் சமரசம் செய்யப் பட்டன. லண்டன் போவதற்காக, விரைவில் கப்பலைப் பிடிப் பதற்காக காந்தி பம்பாயிக்குச் புறப்பட்டுச் சென்றார். சரோஜினி நாயுடு, பண்டிட் மாளவியா மற்றும் தன் பரிவாரங்களுடன் காந்தி, ஆகஸ்டு 29ல் கப்பலில் லண்டனுக்குப் பயணமானார், 1931 செப்டம்பர் 12ல் லண்டன் போய்ச் சேர்ந்தார்.

வட்ட மேசை மாநாட்டின் இரண்டாவது கூட்டத் தொடர், 1931 செப்டம்பர் 7ல் தொடங்கியது. இந்த தடவை மாநாட்டில் கலந்து கொள்வோரின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது; சர் முகம்மது இக்பால் - முஸ்லிம் லீக் தலைவர், டாக்டர் எஸ்.கே. தத்தா - கிறித்துவப் பிரதிநிதி, ஜி.டி. பிர்லா - பெரும் நிதியாளர், பண்டிட் மாளவியா - ஒரு சநாதன சீர்திருத்தவாதி, சரோஜினி நாயுடு - இந்தியாவின் இசைக் குயில், சர். அலி இமாம் ஆகியோரும் மாநாட்டில் கலந்து கொள் வதற்கு அழைக்கப்பட்டனர். இந்தக் கூட்டத் தொடரின் தனிச்சிறப்பு அம்சம் உடனடியாகப் புரிந்துகொள்ள முடியாத தன்மையை உடைய காந்தி இதில் கலந்து கொண்டதாகும். வ.மே.மா.வின் முதல் கூட்டத்தொடர், டென்மார்க் இளவரசர் இல்லாத 'ஹாம்லெட்' டாக இருந்தது.

மாநாடு தொடங்குவதற்கு சிறிது முன்பாக, பிரிட்டனில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. தொழிற்கட்சி அரசு மாற்றப்பட்டு, ஒரு தேசிய அரசு பதவிக்கு வந்தது. பிரதம மந்திரி ராம்சே மாக் டொனால்ட் முன்பு போலவே தொடர்ந்து பதவியில் இருந்தார். இந்தியத் துறை மந்திரி வெட்ஜ் வுட் பென்னுக்கு பதிலாக சர் சாமுவேல் ஹோர், அந்தப் பதவியில் நியமிக்கப்பட்டார். சர்ச்சில் போன்ற கன்சர்வேடிவ் தலைவர்கள் இந்தியாவுக்கு உத்தேச அதிகார மாற்றத்தைக் கடுமையாக எதிர்த்தனர். வட்டமேசை மாநாட்டின் பிரதான பணி பெடரல் கட்டமைப்புக் கமிட்டி யிலும், சிறுபான்மையோர் கமிட்டியிலும் நடைபெற வேண்டி யிருந்தது. வட்டமேசை மாநாட்டின் முதலாவது கூட்டத் தொடரின் இணையொத்த கமிட்டிகள் தயாரித்த அறிக்கைகளை மாநாடு மறுஆய்வு செய்து விரிவாக்கம் செய்ய வேண்டும். 1931 செப்டம்பர் 15ல் மகாத்மா காந்தி, மாநாட்டில் தனது முதலாவது உரையை நிகழ்த்தினார். அனைத்து இந்திய நலன்களையும், வர்க்கங் களையும் காங்கிரஸ் பிரதிநிதித்துவப்படுத்தியது என்று அவர்

உரிமை கொண்டாடினார். காங்கிரஸ், முஸ்லீம்களையும் பிரதி நிதித்துவப்படுத்தியது, ஏனெனில் முஸ்லிம்கள் அதன் தலைவர் களாக இருந்துள்ளனர், முஸ்லிம்கள் அதன் காரியக் கமிட்டி உறுப் பினர்களாகவும் உள்ளனர்`என்று அவர் மாநாட்டில் கூறினார். அது தாழ்த்தப்பட்ட வர்க்கங்களையும் பிரதிநிதித்துவப்படுத்துகிறது, ஏனெனில் தீண்டாமையை ஒழிப்பது, காங்கிரசின் அரசியல் கொள்கைகளில் ஒன்றாகும். காங்கிரஸ் சுதேச சமஸ்தானங்களையும் பிரதிநிதித்துவப்படுத்துகிறது; எவ்வாறெனில், ''தற்பொழுதும் கூட, அவற்றின் சொந்த மற்றும் உள்நாட்டு விவகாரங்களில் எத்தகைய தலையீடும் செய்யாமல், இந்திய மன்னர்களுக்கு சேவை செய்ய முயல்கிறது'' என்று காந்தி மன்னர்களைப் பார்த்துக் கூறினார். காங்கிரஸ் மாதர்களையும் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்று கூறிய காந்தி, ஏனெனில் டாக்டர் அன்னி பெசன்ட், சரோஜினி நாயுடு போன்ற மாதர் திலகங்கள் அதனுடைய தலைவர்களாக இருந்து வந்துள்ளனர். அவர் காங்கிரசின் ஒரே பிரதிநிதியாக வந்திருப்பதால், அவரே இந்திய நாட்டின் ஒரே பிரதிநிதியாகவும் இருந்தார் என்றாகிறது!

காந்தியின் இந்த உரையிலிருந்து, எந்தத் திசையில் காற் றடிக்கிறது என்பதை டாக்டர் அம்பேத்கர் உணர்ந்தார். அதே நாளில், டாக்டர் அம்பேத்கர் பெடரல் கட்டமைப்புக் கமிட்டியில் தனது முதல் உரையை நிகழ்த்தினார். பெடரல் கட்டமைப்புக் கமிட்டி, சமஸ்தானம் விரும்புவதையெல்லாம் கண்ணை மூடிக்கொண்டு, வழங்கிவிட முடியாது என்று அவர் மன்னர்களிடம் கூறினார். இதைக் கேட்டதும் உடனே பிகானீர் மகாராஜா பேசுவதற்கு எழுந்தார். சமஸ்தானங்கள் ஒரு வெற்றுக் காசோலையில் கையெழுத்திட முடியாது என்று அவர் பதில் கூறினார். டாக்டர் அம்பேத்கர் தனது கருத்தை வலியுறுத்துகையில், ஒரு சமஸ்தானம் சமஷ்டியில் சேருவதற்கு அனுமதிக்கப்படுவதற்கு முன்னால், அது தனது பிரஜைகளுக்கு ஒரு நாகரிகமான வாழ்க்கையை வழங்கு வதற்குத் தேவையான வளங்களும், திறனும் உடையது என்பதை நிரூபிக்க வேண்டும் என்று கூறினார். பெடரல் பேரவைக்கான சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் தேர்தலின் மூலம் தேர்ந்தெடுக் கப்பட வேண்டும், நியமனத்தின் மூலமாக அல்ல என்பதுதான் டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த பிரதான நிபந்தனை. நியமனமானது நிர்வாகத்தை சட்டப் பேரவைக்குப் பொறுப்பற்றதாக்கிவிடுகிறது, சட்டப் பேரவை மெஜாரிட்டி ஆட்சி அடிப்படையில் மாமூல மாகச் செயல்பட்டு வருவதாக வெளிஉலகத்திற்கு ஒரு பொய்யான

தோற்றத்தைக் கொடுக்கிறது என்பது அவருடைய உறுதியான கருத்தாகும். நியமனக் கோட்பாடு பொறுப்பாட்சிக் கோட்பாட்டுக்கு எதிரானதாகும். சிறப்புப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்ற நிலப் பிரபுக்களின் கோரிக்கை சம்பந்தப்பட்ட மட்டிலும், அவர்களுக்கு சிறப்புப் பிரதிநிதித்துவம் கொடுக்கக்கூடாது, ஏனெனில் அவர்கள் வைதீகர்களுக்கு ஆதரவாக இருக்கிறார்கள், அதன் மூலம் அவர்கள் சுதந்திரம் மற்றும் முன்னேற்றத்தின் நற்பயன்களைத் தோற்கடித்து விட்டார்கள் என்று அவர் கூறினார். சமஸ்தானங்களின் மக்களின் உரிமைகளுக்கு ஆதரவாக நிகழ்த்தப்பட்ட முதலாவதும் சிறந்ததுமான உரை இதுவேயாகும் என்பது வெளிப்படை.

இந்த வலுவான கருத்துக்கள் சமஸ்தான மன்னராட்சி முறைக்கு நிலப் பிரபுக்களுக்கும், அவர்களின் ஆதரவாளர்களுக்கும் - இவர்கள், பெடரல் பேரவைக்கான அவர்களின் பிரதிநிதிகள் நியமனத்தின் மூலம்தான் தேர்வு செய்யப்பட வேண்டும் என்ற மன்னர்களின் கருத்துக்கு ஆதரவு தெரிவித்தனர் - ஓர் அதிர்ச்சியைக் கொடுத்தது. இதன் விளைவு என்னவெனில், மாநாட்டில் பேசியவர்கள் ஒவ்வொருவரும் தமது உரையின் ஏதாவது ஒரு பகுதியில் டாக்டர் அம்பேத்கரின் உரையை மறுத்தோ அல்லது ஆதரித்தோ பேசினர்; ஏனெனில் அவர்களில் பெரும்பான்மையோர், அவருடைய கருத்துக்கள் தீவிரமானவையும் புரட்சிகரமானவையும் என்று கருதினர்.

அடுத்த நாள் காந்தி தனது கருத்துக்களைக் கூறினார். வட்ட மேசை மாநாட்டுப் பிரதிநிதிகள் தேசத்தினால் தேர்வு செய்யப்பட்ட பிரதிநிதிகள் அல்ல, மாறாக பிரிட்டிஷ் அரசினால் தேர்வு செய்யப்பட்டவர்கள் என்றார் அவர். லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன்னால் காந்திக்கு இது தெரியாது என்பதல்ல. ஆனால் இப்பொழுது அவர் பிரதிநிதிகளைக் கிண்டல் செய்து சினமேற்றத் தொடங்கினார். சமஷ்டி சட்டப் பேரவையில் சமஸ்தானங்களின் பிரதிநிதிகளைப் பற்றிய டாக்டர் அம்பேத்கரின் கருத்துக்களை பொறுத்தமட்டிலும், பொதுவாகக் கூறுமிடத்துத் தனது பரிவு டாக்டர் அம்பேத்கரின் பக்கம்தான் என்ற அதே சமயத்தில் தனது மனம் கேவின் ஜோன்ஸ் மற்றும் சர் சுல்தான் அகமது பக்கம்தான் என்று காந்தி கூறினார். அந்த இருவர் மன்னர்களின் கருத்துக்களை எதிரொலித்தனர். சமஷ்டிக்கான பிரேரணைக்கு காந்தி ஆதரவு கொடுத்தார். அதேபொழுதில், சமஸ்தான மக்களுக்கு எதிராக, மன்னர்களின் கருத்து நிலைக்கு ஆதரவு கொடுத்தார். ''சமஸ்

தானங்களுக்கு, அவர்கள் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக் கூடாது என்று கூறுவதற்கு இங்கு நமக்கு உரிமையில்லை என்று பணிவுடன் நான் கூறுகிறேன்!''

பின்னர் காந்தி, பிரதிநிதிகளுக்கு மன உளைச்சலை ஏற்படுத்தி வந்த அச்சாணியான பிரச்சினைக்குத் திரும்பினார். வெவ்வேறு சமூகங்கள் கோரிவந்த சிறப்புப் பிரதிநிதித்துவப் பிரச்சினையைப் பீற்றிக் குறிப்பிடுகையில் அவர் இவ்வாறு கூறினார்: ''இந்து-முஸ்லிம்-சீக்கியர் சிக்கலுக்குத் தனிப் பரிகாரம் காண வேண்டுமென்பதைக் காங்கிரஸ் ஒத்துக் கொண்டுள்ளது. அதற்கு சொல்லத்தக்க வரலாற்றுக் காரணங்கள் உள்ளன; ஆனால் அதை எந்த உருவத்திலும் வடிவத்திலும் காங்கிரஸ் விரிவுபடுத்தாது. சிறப்பு நலன்களின் பட்டியலை நான் காது கொடுத்துக் கேட்டேன். தீண்டப்படாதவர்களைப் பொறுத்தமட்டிலும், டாக்டர் அம்பேத்கர் என்ன கூறுவதற்கு விரும்புகிறார் என்பதை என்னால் இன்னும் கிரஹித்துக் கொள்ள முடியவில்லை. ஆயினும், தீண்டப்படாதவர்களின் நலன்களைப் பிரதிநிதித்துவப் படுத்துவதில் டாக்டர் அம்பேத்கருடன் காங்கிரஸ் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ளும். தாழ்த்தப்பட்டவர்களின் நலன்கள், இந்தியா முழுவதிலும் உள்ள வேறு எந்தப் பகுதி அல்லது எந்தத் தனி நபரின் நலன்களைப் போன்றே நேசிக்கத்தக்கதாகும். எனவே மேற்கொண்டு எந்த சிறப்புப் பிரதிநிதித்துவத்தையும் நான் மிகவும் வன்மையாக எதிர்க்கிறேன்.

இது, தீண்டப்படாதவர்களுக்கு எதிராக, காந்தியாலும், காங்கிரசினாலும் செய்யப்பட்ட போர்ப் பிரகடனம் அன்றி வேறொன்றுமல்ல. ''திரு. காந்தி இந்தப் பிரகடனம் செய்துள்ள நிலைமையில், இந்தப் பிரச்சினை மீதான விவாதத்திற்குப் பிரதான அரங்காகிய சிறுபான்மையோர் கமிட்டியில் திரு. காந்தி என்ன செய்வார் என்பதை நான் அறிவேன்'' என்று அம்பேத்கர் மேலும் கூறினார்.

செப்டம்பர் 18ல், சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் அம்பேத்கர் எழுந்து, பெடரல் சட்டப்பேரவை மற்றும் பெடரல் நிர்வாகக் கமிட்டியின் அமைப்பு சம்பந்தமாக காந்தி முன்வைத்த கருத்துக்கள் அவருடைய சொந்தக் கருத்துக்களா, அல்லது காங்கிரசின் கருத்துக்களா என்று கேட்டார். திவான் பகதூர் ராமசாமி முதலியார் எழுந்து, அரசியல் இலாகாவாக அமைந்துள்ள, அரசு ஊழியர்கள், இந்தியாவிலோ அல்லது வெளியில் வேறு

எங்கேயுமோ வேறு எந்த அரசு ஊழியர்களைப் போன்றே மனசாட்சி பூர்வமாகவும் நியாயமாகவும் செயல்படுகின்றவர்களேயாவர் என்றார். டாக்டர் அம்பேத்கர் உடனே, அது அப்படியென்றால், பின்னர் ஏன் அவர் பொறுப்பாட்சி வேண்டுமென்று விரும்பினார் என்று கேட்டார். தனது உரையில் பண்டிட் மாளவியா பொறு மையாக இருக்கும்படியும் மன்னர்களுக்கு மரியாதை காட்ட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். மேலும், அனைத்து செல்வாதாரங்களையும் அரசு பயன்படுத்தி, மக்களிடையே ஆரம்பக் கல்வியை ஊக்குவிப்பதற்குப் போதிய நிதியை செலவிட் டிருந்தால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் என்ற சொல், இதற்குள் வரலாற்றுப் பழங்கதையாகியிருக்கும் என்று அவர் உறுதியாகக் கூறினார். உடனே டாக்டர் அம்பேத்கர், தன்னுடைய சொந்த விஷயத்தையே சுட்டிக்காட்டி, தான் கல்வி கற்றவனாக இருந்த போதிலும், தான் இன்னும் ஒரு தீண்டப்படாதவனாகவே இருப் பதாகக் குறிப்பிட்டார். தனது உரையில் சர். அக்பர் ஹைதர், டாக்டர் அம்பேத்கருக்குப் பதில் சொல்லுகையில், ''டாக்டர் அம்பேத் கருடையதைப் போன்ற சொற்பொழிவுகள். நிலைமையின் எதார்த் தங்களைப் போதிய அளவு புரிந்து கொள்வதில்லை'' என்றார். இதற்கு பதில் கூறுகையில், ''எதார்த்த நிலைமைகளைப் புரிந்து கொள்ளாத குற்றத்தை நான் ஒருபோதும் புரிந்ததில்லை'' என்று கூறினார் அம்பேத்கர்.

சமஷ்டி அரசியல் சாசனத்தை உருவாக்குவது பற்றி விவா திக்கும்போது சமஷ்டியைத் துவக்குவதற்கான கால-நிர்ணயத்தைப் பற்றி ஒருவரும் குறிப்பிடவில்லை. டாக்டர் அம்பேத்கர்தான், இந்தத் திரையை அகற்றி, இவ்வாறு கூறினார்: ''மன்னர்கள் சமஷ்டி இந்திய அரசில் பிரவேசிப்பதற்கு ஒத்துக்கொள்ளும் வரையில் பொறுப்பாட்சி ஏற்படுவதை ஊறுகாய்ப் பானையில் போட்டு வைப்பதை விரும்புகிற எந்த பிரிட்டிஷ் இந்தியனும் இருப்பாரா என்று எனக்குத் தெரியவில்லை.

சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் இந்த விவாதங்களின் போது, மோதல்களும், கருத்துப் பரிமாற்றங்களும், உலகின் அரசியல் சாசன வரலாறு பற்றிய பரிசீலனையையும், சுதந்திர இந்தியா பற்றிய கருத்துகள் பரிமாற்றமும் நடைபெற்றது. அந்தப் பொருள்கள் மீதான டாக்டர் அம்பேத்கரின் பிரசங்கங்கள் - நிறையத் தகவல்களையும், அக்கறையையும், மதிப்பு மிக்க ஆலோசனை களையும் கொண்டதாக இருந்தது. அரசியல்வாதி, பாரிஸ்டர்,

அரசியல் சட்ட நிபுணர், பேராசிரியர், கோடிக்கணக்கான அடித்தட்டு மக்களின், சமஸ்தான மக்களின் நண்பன் என்ற வகையில் அம்பேத்கர், தனது ஆழ்ந்த கல்வி ஞானத்தின் பல்வேறு முகங் களுடன் மாநாட்டில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தினார்.

இப்பொழுது 1931 செப்டம்பர் மாதத்தின் மூன்றாவது வாரம் முடிவிற்கு வந்திருந்தது. சிறுபான்மையோர் கமிட்டி தனது பணியை செப்டம்பர் 28ல் தொடங்குவதாக இருந்தது. இந்த மாநாடு தொடங் கவிருந்த தருணத்தில், காந்தியின் மகன் தேவதாஸ் காந்தி, டாக்டர் அம்பேத்கரை அவருடைய இல்லத்தில் சந்தித்தார். சரோஜினி நாயுடுவின் வீட்டில் காந்திக்கும் டாக்டர் அம்பேத்கருக்கும் இடையில் இரவு 9 மணி முதல் நள்ளிரவு 12 மணி வரை சந்திப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதன்படி டாக்டர் அம்பேத்கர் காந்தியை சந்தித்து, தனது கோரிக்கைகளை முன்வைத்தார். ஆனால் காந்தி அதுகுறித்து மனம் திறந்து பேசவில்லை, மற்றவர்கள் ஒத்துக் கொண்டால் டாக்டர் அம்பேத்கரின் கோரிக்கைகளுக்குத் தானும் இசைவு தெரிவிப்பதாகக் கூறினார்.

1931, செப்டம்பர் 28ல், சிறுபான்மையோர் கமிட்டி, முதல் தடவையாகக் கூடியது. இந்தியாவில் சிறுபான்மையோரின் பிரச்சினை எல்லோரையும் திகைக்க வைத்துள்ளது என்று பிரதம மந்திரி கூறினார். பிரதிநிதிகள் தங்களுக்குள்ளாகவே உடன் பாட்டுக்கு வருவதற்குத் தவறிவிட்டதால் அரசு மத்தியஸ்தம் செய்து வைக்க வேண்டுமென்று சில பிரதிநிதிகள் ஆலோசனை கூறியிருப்பதாக அவர் தெரிவித்தார்; ஆனால் மத்தியஸ்தம் ஒரு வேளை அவர்களில் சிலர் ஏற்றுக்கொள்ளாமல் போகக்கூடும் என்று அவர் அபிப்பிராயப்பட்டார். இதைக் கேட்டதும் ஆகாகான், அன்று இரவு மகாத்மா காந்தி முஸ்லிம் பிரதிநிதிகளை சந்திக்கவிருக் கிறார், எனவே கூட்டத்தை ஒத்திப்போடலாம் என்று கூறினார். ஆகாகானின் யோசனையை ஆதரித்த மாளவியா, பொது விவா தத்தை ஒத்திவைக்கலாம் என்று விருப்பம் தெரிவித்தார்.

இந்து-முஸ்லிம் உடன்பாடு சம்பந்தமாக, முஸ்லிம் தலை வர்களுக்கும் காந்திக்கும் இடையில் நடைபெற்று வரும் ரகசியப் பேச்சுக்கள் பற்றி அம்பேத்கர் தெரிவித்திருந்தார். எனவே கூட்டத்தை ஒத்திப் போடவேண்டும் என்ற பிரேரணையைக் குறிப்பிட்டு அவர், ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பொறுத்தமட்டிலும், எங்களுடைய கோரிக்கைகளை ஏற்கனவே கடந்த தடவை சிறு பான்மையோர் துணைக் கமிட்டியின் முன் சமர்ப்பித்துள்ளோம்.

நான் செய்வதற்கு எஞ்சியுள்ள ஒரே ஒரு விஷயம் என்னவெனில், வெவ்வேறு சட்டப் பேரவைகளில் நாங்கள் விரும்பும் பிரதிநிதித்துவ அளவை எடுத்துக் கூறும் ஒரு சிறிய அறிக்கையை இந்தக் கமிட்டியின் முன்னால் சமர்ப்பிப்பதேயாகும்.''

வகுப்புவாதப் பிரச்சினையின் தீர்வுக்கு மேற்கொண்டு பேச்சு வார்த்தைகள் நடைபெறவிருப்பது அறிந்து தான் மிகவும் மகிழ்ச்சி அடைவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். அவர் மேலும் இவ்வாறு கூறினார்: ''ஆனால் தொடக்கத்திலேயே இந்த விஷயத்தை மிக மிகத் தெளிவாகக் கூறுவதற்கு நான் விரும்புகிறேன். பேச்சுவார்த்தை நடத்துகின்றவர்கள், தாங்கள் அதிகாரம் பெற்ற பிரதிநிதிகளல்ல என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். திரு. காந்தி அல்லது காங்கிரஸ்காரர்களின் பிரதிநிதித்துவத்தன்மை எதுவாக இருந்தபோதிலும், அவர்கள் எங்களைக் கட்டுப்படுத்தும் நிலையில் இல்லை, நிச்சயமாக இல்லை. இதை மிகவும் அழுத்தத் திருத்தமாக நான் இந்தக் கூட்டத்தில் கூறுகிறேன். தனது உரையின் முடிவில் ஓர் எச்சரிக்கையுடன் அவர் இவ்வாறு கூறினார்: ''யார் அதிகப் பிரதிநிதித்துவம் கோரிய போதிலும், யார் அந்தப் பிரதிநிதித்துவம் கோரிய போதிலும், யார் அந்தப் பிரதிநிதித்துவத்தை வழங்குவதற்குத் தயாராக இருந்த போதிலும், அவர் என்னுடைய பங்கிலிருந்து அதைக் கொடுக்கக் கூடாது, கொடுக்க முடியாது என்று மிகவும் அழுத்தந் திருத்தமாகக் கூறுவதற்கு நான் விரும்புகிறேன்''. இதைக் கேட்ட மாநாட்டுத் தலைவர் மாக்டொனால்டு, ''டாக்டர் அம்பேத்கரின் நிலை, அவருடைய வழக்கமான, உன்னதமான முறையில் மிகவும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அதுகுறித்து அவர் எவ்வித ஐயப்பாட்டுக்கும் இடம் வைக்கவில்லை.*

மகாத்மா காந்தி, அக்டோபர் 1ம் தேதியன்று மீண்டும் ஒரு வார கால ஒத்திவைப்பைக் கேட்டார். முஸ்லிம் தலைவர்களின் பல்வேறு குழுக்களுடன் தான் பேச்சுவார்த்தை நடத்தி வருவதாக அவர் குறிப்பிட்டார். இதைக் கேட்டதும் டாக்டர் அம்பேத்கர் எழுந்து, அத்தகைய உடன்பாட்டை எட்டுவதற்கு இடையூறாக எந்தச் சிக்கலையும் உருவாக்கத்தான் விரும்பவில்லையென்றும், ஆனால் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், அந்த சம்பிரதாய பூர்வமான கமிட்டியில் பிரதிநிதித்துவம் பெறுவார்களா இல்லையா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன் என்றார். காந்தி இதற்கு

* சமஷ்டி அமைப்புக் கமிட்டி மற்றும் சிறுபான்மையோர் கமிட்டி நடவடிக்கைகள், பக். 527.

சாதகமான பதிலளித்தார். இதற்காக டாக்டர் அம்பேத்கர் காந்திக்கு நன்றி கூறிவிட்டு, பிரதிநிதிகள் பக்கம் திரும்பி இவ்வாறு விளக்கினார்: ''சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் முதல் நாளன்று மகாத்மா காந்தி பேசுகையில், இந்திய தேசியக் காங்கிரசின் பிரதிநிதி என்ற வகையில், முஸ்லிம்களையும் சீக்கியர்களையும் தவிர, வேறு எந்த சமூகத்திற்கும் அரசியல் அங்கீகாரம் தருவதற்குத் தான் தயாராக இல்லை, என்று கூறினார். ஆங்கிலோ-இந்தியர்கள், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் மற்றும் இந்தியக் கிறித்தவர்களை அங்கீகரிப்பதற்கு அவர் தயாராக இல்லை. ஒரு வாரத்திற்கு முன்னால் மகாத்மா காந்தியை சந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைத்து அவருடன் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரச்சினை பற்றி விவாதித்தபோதும், பிற சிறுபான்மையோரின் பிரதிநிதிகள் என்ற வகையில் நேற்று அவருடைய அலுவலகத்தில் அவரை சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த பொழுதும், சமஷ்டிக் கட்டமைப்புக் கமிட்டியில் தான் மேற்கொண்ட கண்ணோட்டம் தனது முழுமையான, நன்கு சிந்திக்கப்பட்ட கண்ணோட்டமாகும் என்று மிகவும் தெளிவாக எங்களிடம் கூறினார் என்று கூறுவதின் மூலம் எந்த ஒழுங்கு முறையையும் மீறியதாக நான் நினைக்கவில்லை.''

பின்னர் அம்பேத்கர், வட்டமேசை மாநாட்டின் முதல் கூட்டத்தின்போது, சிறுபான்மையோர் துணைக் கமிட்டி செய்ததைப் போன்று, வருங்கால இந்திய அரசியல் சாசனத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் அங்கீகரிக்கப்பட மாட்டார்கள் என்றால், தான் அந்தக் குறிப்பிட்ட கமிட்டியில் சேரப் போவதுமில்லை, அது போன்றே, ஒத்திவைப்புக்கான பிரேரணையையும் முழுமனதாக ஆதரிக்கப் போவதுமில்லை என்று இடியோசை போல் முழங்கினார். சர். ஹெர்பார்ட் கார், டாக்டர் தத், மற்றும் இதரர்கள் ஒத்திவைப்பை ஆதரித்தார்கள்.

காந்திக்கும் முஸ்லீம் தலைவர்களுக்கும் இடையிலான விவாதங்கள் ஒருவார காலம் நடைபெற்றது. விவாதங்கள் ஓர் ஊக்கமளிக்கும் கட்டத்தை அடைந்துள்ளதாகப் பத்திரிகைகள் அறிவித்தன. முஸ்லிம்களுக்கு அவர்களுடைய 14 அம்சங்களை காந்தி விட்டுக் கொடுத்தார் என்றும், எஞ்சியுள்ள அதிகாரங்கள் சமஷ்டியில் சேர்ந்துள்ள மாகாணங்களுக்கு வழங்குவதை ஒத்துக் கொண்டார் என்றும், பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம்கள் பெரும்பான்மையோராக இருப்பதை ஏற்றுக்கொண்டார் என்றும், முஸ்லிம்களுக்குத் தொகை குறிப்பிடாத ஒரு வெற்றுக் காசோலையைக் கொடுத்துள்ளார் என்றும் தெரிவிக்கப்பட்டது. ஆயினும்

சீக்கியர்-முஸ்லிம் பிரச்சினையில் பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்தன.

வெவ்வேறு குழுக்களினுள்ளும் அவற்றின் பிரதிநிதிகளுடனும் வகுப்புவாரிப் பிரச்சினைக்கு தனி முறையிலான உரையாடல்கள் மூலம் ஓர் ஒன்றுபட்ட தீர்வு காண்பதில் முழுத் தோல்வி அடைந்ததாக காந்தி அக்டோபர் 8ல் ஆழ்ந்த துயரத்துடன் சிறுபான்மையோர் கமிட்டிக்கு அறிவித்தார். தோல்விக்கான காரணங்கள் இந்தியப் பிரதிநிதிக் குழுவின் இயைபிலேயே உள்ளார்ந்து அமைந்திருந்தன என்று அவர் கூறினார். மேலும் அவர்கள் அனேகமாக எல்லோரும் யாரைப் பிரதிநிதித்துவப் படுத்துவதாகக் கருதப்பட்டதோ, அந்தக் கட்சிகள் அல்லது குழுக்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளல்ல, மேலும், ஓர் ஒன்றுபட்ட தீர்வுக்கு அவர்களது பிரசன்னம் முற்றிலும் அவசியமானதாக இருக்கவில்லை. எனவே, அவர், மாநாட்டை மறுதேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கும்படிக் கோரினார். டாக்டர் அம்பேத்கர் சவாலை ஏற்று, காந்திக்கு பதில் கூறுவதற்கு எழுந்தார். பரஸ்பரம் ஒத்துக் கொண்டதை காந்தி மீறிவிட்டார் என்றும், முந்தைய நாள் இரவில், ஆத்திரமூட்டக் கூடிய எத்தகைய உரையையும் விமர்சனத்தையும் எந்தப் பிரதிநிதியும் நிகழ்த்தக்கூடாது என்று ஒத்துக் கொள்ளப்பட்டதாகவும் அவர் கூறினார்.

டாக்டர் அம்பேத்கரின் கடுகடுத்த தொனி உயரத் தொடங்கியது. அவர் இவ்வாறு முழங்கினார்: ''திரு. காந்தியின் பேச்சைக் கேட்டதற்குப் பின்னர் என்னைக் கலக்கமடையச் செய்திருப்பது என்னவெனில், அவர் தன்னுடைய நிலையுடன் நிறுத்திக் கொள்ளாமல், அதாவது, சிறுபான்மையோர் கமிட்டி மறுதேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட வேண்டும் என்று கூறுவதுடன் நிறுத்திக் கொள்ளாமல், இந்த மேசையைச் சுற்றி அமர்ந்து கொண்டிருக்கும் வெவ்வேறு சமூகங்களின் பிரதிநிதிகள் மீது பழி சுமத்துவதற்குத் தொடங்கியுள்ளார். பிரதிநிதிகள் அரசினால் நியமிக்கப் பட்டவர்கள் என்றும், அவர்கள் யாருக்காக நிற்கிறார்களோ முறையே அந்த சமூகங்களின் கருத்துக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லையென்றும் அவர் கூறினார். நாம் அரசினால் நியமிக்கப் பட்டவர்கள் என்ற குற்றச்சாட்டை மறுக்க முடியாது, ஆனால் என்னைப் பொறுத்தமட்டிலும், இந்த மாநாட்டிற்குத் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு வாய்ப்புக் கொடுத்தால்கூட, அப்பொழுதும்,

நான் இங்கு ஓர் இடம் பெறுவேன் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. எனவே, நான் ஒரு நியமனப் பிரதிநிதியானாலும், அல்லாவிட்டாலும், என்னுடைய சமூகத்தின் கோரிக்கைகளை நான் பூரணமாகப் பிரதிநிதித்துவப்படுத்துகிறேன். இது சம்பந்தமாக எந்த மனிதருக்கும் எத்தகைய தவறான கண்ணோட்டமும் இருக்க வேண்டியதில்லை.''

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து கூறினார்: ''காங்கிரஸ் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்காக நிற்கிறது என்றும், நானோ அல்லது என்னுடைய சகாக்களையோ காட்டிலும் கூடுதலாகக் காங்கிரஸ் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது என்றும் மகாத்மா உரிமை கொண்டாடி வருகிறார். இந்த உரிமை கொண்டாடலுக்கு பொறுப்பற்ற நபர்கள் தொடர்ந்து கூறிவரும் பல பொய்யான உரிமை கொண்டாடல்களில் இதுவும் ஒன்றாகும் என்று மட்டுமே நான் கூறமுடியும். அந்த உரிமை கொண்டாடல்கள் சம்பந்தமான நபர்கள் எப்போதும் அவற்றை மறுத்து வந்துள்ள போதிலும் தொடர்ந்து அவற்றைக் கூறி வருகிறார்கள். பின்னர் டாக்டர் அம்பேத்கர் எவ்வாறு இந்தியாவின் மிகத் தொலைவான தீண்டப்படாத மூலையிலிருந்து, அவர் ஒருபோதும் விஜயம் செய்யாத, அவர் ஒருபோதும் காணாத மக்களிடமிருந்து - தனது நிலையை ஆதரித்து தனக்குத் தந்திகள் வந்துள்ளன என்று காட்டினார். பின்னர் அவர், ஒன்று, கமிட்டி இப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டும்; அல்லது, பிரிட்டிஷ் அரசு இதற்குத் தீர்வுகாணும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கமிட்டியிடம் கூறினார். மிகவும் ஏமாற்றமும் அச்சமும் அடைந்த அவர், இன்றைய சூழ்நிலையில் அதிகார மாற்றம் குறித்துத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் ஆவலாக இருக்கவில்லை. ஆனால் அரசு அதிகார மாற்றத்தை விரும்பினால் அதிகாரம் ஒரு சிறு கோஷ்டியின் கைகளுக்கு, ஆதிக்க வர்க்கத்தின் கைகளுக்கு, முகமதியர்களாகவோ அல்லது இந்துக் களாகவோ இருந்தாலும் ஒரு குழுவினரின் கைகளுக்கு அதிகாரம் மாறிச் சென்றுவிடக்கூடாது என்ற நிபந்தனைகளுடனும் விதி களுடனும் அது செய்யப்பட வேண்டும்; அதிகாரம் எல்லா சமூகங் களும் முறையே அவர்களின் விகிதாசாரப்படி பகிர்ந்து கொள்ளப் படுமாறு தீர்வு அமைய வேண்டும் என்று கூறினார்.

பிரதம மந்திரி, பிரதிநிதிகளுக்கு விடுத்த வேண்டுகோளில், அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முறை பற்றியோ, அல்லது அவர்களது செரிந்த, தனிப்பட்ட குறைபாடுகளுக்கோ காரணங்கள்

கற்பிக்க வேண்டாமென்று கேட்டுக் கொண்டார். உண்மைகளை எதிர்கொள்ளும்படியும், இந்தப் பிரச்சினை இந்தியாவில் உள்ளதா, இல்லையா என்று கூறும்படியும் அவர் அவர்களை கேட்டுக் கொண்டார். பிரதம மந்திரியின் உரை ஓரளவு காரசாரமான தொனியில் அமைந்திருந்தது. சிலர் அதை நன்றி மறந்த செயல் என்று கூறினர். அது காந்திக்கு எதிராகக் கடுமையான மறைமுகத் தாக்குதல்களைக் கொண்டிருந்தது.

டாக்டர் அம்பேத்கரின் தீவிரமான பிரச்சாரம் இத்துடன் நின்றுவிடவில்லை. அவர் லண்டனிலிருந்து அக்டோபர் 12ல் டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகைக்கு எழுதிய ஒரு கடிதத்தில், இந்த நிகழ்ச்சி முழுவதையும் பற்றி விளக்கமளித்திருந்தார். அவர் இவ்வாறு எழுதினார். ''நமது முஸ்லிம் நண்பர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தியதில், அவர்களுடைய 14 அம்சங்களை ஒப்புக் கொள்வதற்கு அவர் விதித்த நிபந்தனைகளில் ஒன்று, தாழ்த்தப் பட்ட வர்க்கங்கள் மற்றும் சிறிய மைனாரிட்டிகளின் கோரிக்கை களை அவர்கள் எதிர்க்க வேண்டும் என்று கோரினார் என்பதுதான் என்று நமக்கு நம்பகமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ''மற்றவர்கள் எல்லோரும் ஏற்றுக்கொண்டால் நான் ஏற்றுக்கொள்கிறேன்'' என்று பகிரங்கமாகக் கூறிவிட்டு, ஒத்துக்கொள்ள விரும்புபவர் களை விலைக்கு வாங்குவதன் மூலம் ரகசியமாக அவ்வாறு ஒத்துக் கொள்ளாமல் தடுப்பதற்கு வேலை செய்வது, ஒரு மகாத்மாவுக்குப் பொருந்தாத நடத்தை என்பது எங்களுடைய அபிப்பிராயம். தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் ஓர் இறுகிப்போன எதிராளியிட மிருந்து மட்டுமே இதை எதிர்பார்க்க முடியும். திரு. காந்தி, தாழ்த்தப் பட்ட வர்க்கங்களின் நண்பன் என்ற பாத்திரத்தை ஆற்றவில்லை யென்பது மட்டுமன்றி, ஒரு நாணயமான எதிரியின் பாத்திரத்தைக் கூட அவர் ஆற்றவில்லை'' என்று மிகவும் குத்தலாகவும் ஈவிரக்க மற்ற முறையிலும் கூறியிருந்தார்.

நாட்டுக்கு அவர் எழுதிய கடிதத்தில், வட்டமேசை மாநாடு தோல்வியில் முடியுமென்றும், அந்தத் தோல்விக்கு காந்திதான் பொறுப்பு என்பது தனது அபிப்ராயம் என்றும் டாக்டர் அம்பேத்கர் முன்கூட்டியே கூறியிருந்தார். டாக்டர் அம்பேத்கரின் கருத்துப்படி, சிறுபான்மையோரின் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதில் காந்தியின் ஒரு சாராருக்கு ஆதரவான நிலை, பாரபட்சம், அவருடைய சமத்துவ மற்ற மனப்பாங்கு, இதர பிரதிநிதிகளின்பால் சிறிதும் மரியாதை காட்டாத நிலை, அவர்கள் மீது அவர் சுமத்திய அவமானம் - ஆகிய

இந்தப் பண்புகள் எல்லாம் பிரச்சினைக்கு சாமர்த்தியமாகத் தீர்வு காண்பதற்கு காந்திக்கு உதவவில்லை. ஒரு சமூகத்தை மற்றொரு சமூகத்திற்கு எதிராகத் தூண்டிவிடும் காந்தியின் கெட்ட எண்ணத்துடன் கூடிய வழிமுறை தற்பொழுது மிகத் தெளிவாகத் தெரிகிறது என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் கூறினார். அவருடைய ஜனநாயக மற்ற மனப்பாங்கு ஹரோல்டு லாஸ்கியைப் போன்ற மனிதருக்கு கடும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது, மற்றும் வித்தல்பாய் பட்டேல் போன்ற காங்கிரஸ் தலைவர்கள், காந்தி நிலைமையைத் தவறாகக் கையாண்டதற்கு ஆட்சேபணையை முணுமுணுத்துக் கொண்டிருந்தனர்.

டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த கோரிக்கைகளுக்கு காந்தியின் எதிர்ப்பு இந்தியா முழுவதிலும் தீண்டப்படாதவர்களின் வட்டாரங்களில் பரந்த பிரதிபலிப்பையும் கடுமையான விளைவையும் ஏற்படுத்தியது. ராவ் பகதூர் எம்.சி. ராஜாவின் தலைமையின் கீழ் அகில இந்தியத் தாழ்த்தப்பட்டோர் மாநாடு தனது குர்கான் அமர்வில், தீண்டப்படாதோரின் கோரிக்கையை காந்தி தவறாக எடுத்துக் கூறுவதாக அறிவித்து, ஆரம்பக் காலத்திலிருந்தே காங்கிரஸ் தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பாதுகாப்பு கொடுத்து வருகிறது, மற்றும் தாழ்த்தப்பட்டவர்களின் நலனுக்காகப் பாடுபட்டு வருகிறது என்று காந்தி உரிமை கொண்டாடியதை வன்மையாக மறுத்தது. மாநாட்டின் தலைவர் ராஜா, ''இந்தக் கூற்றுக்கள் உண்மையல்ல என்று நான் கூறுகிறேன்'' என்று கூறினார்.

டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த கோரிக்கைகளை மாநாடு ஆதரித்து, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குத் தனித் தொகுதிகள் முறையை உள்ளடக்கிக் கொள்ளாத எந்த அரசியல் சாசனமும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என்று அறிவித்தது. காந்தியாரிடமும் காங்கிரசிடமும் நம்பிக்கை வைக்க வேண்டாம் என்று டாக்டர் அம்பேத்கரை வேண்டிக் கேட்டுக் கொள்ளும் நூற்றுக்கணக்கான செய்திகள் (தந்திகள்) இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்களினாலும், அமைப்புகளினாலும், மற்றும் திருநெல்வேலி, ராபர்ட்சன் பேட்டை (சென்னை) லயால்பூர், கர்னால், சிதம்பரம், கள்ளிக்கோட்டை, பனாரஸ், கோலாப்பூர், யோத்மால், நாகபுரி, சந்தா, கான்பூர், காம்ப்தே, பெல்காம், தார்வார், நாசிக், ஹூப்ளி, ஆமதாபாத், தூத்துக்குடி, கொழும்பு மற்றும் வேறு பல இடங்களிலும் நடைபெற்ற பொதுக்கூட்டங்களிலிருந்தும் மாநாடுகளிலிருந்தும் டாக்டர் அம்பேத்கருக்கு அனுப்பப்பட்டன.

தாழ்த்தப்பட்ட மக்களின் மெய்யான பிரதிநிதி யார் என்பதை இந்த ஆவேசமான தந்திகள் எடுத்துக் காட்டின. காந்திக்கும் சில தந்திகள் கிடைத்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், லண்டனில் வெவ்வேறு இடங்களில் பேச்சுக்களின் போதும், உரையாடல் களின் போதும் காந்தியை நோக்கிக் கேட்கப்பட்ட கேள்விகளைத் திருப்தி செய்வதற்குப் போதுமானதாக இல்லை. டாக்டர் அம்பேத் கரின் போர்க்குணம் மிக்கப் பிரச்சாரத்தின் சக்திவாய்ந்த விளைவு இத்தகையதாக இருந்தது, எனவே மெய்யாகவே காந்தி திகைப் படைந்தார்; தீண்டப்படாதவர்களின் பாதுகாவலன் என்று அவர் தனக்குத்தானே வகுத்துக் கொண்ட தன்மை அம்பலப்படுத்தப்பட்டது!

இந்த சமயத்தில் இந்தியாவில் நாசிக்கிலும், குருவாயூரிலும் தாழ்த்தப்பட்ட மக்கள் தொடங்கிய ஆலயப் பிரவேச இயக்கத்தினால் இது கூடுதல் தெளிவாக அம்பலமாயிற்று. நாசிக்கில் சத்தியாகிரஹம் மீண்டும் தொடங்கப்பட்டதானது மகத்தான உந்து விசையை அளித்தது. ஐயாயிரம் தொண்டர்கள் நாசிக்கில் குவிந்தனர். டாக்டர் அம்பேத்கரின் ஈடுபாடு மிக்க துணை தளபதி பாபுராவ் கெய்க்வாட், தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்கள் ரங்காம்பே, பதித்பாவன தாஸ் போன்றவர்கள் மற்றும் நம்பிக்கைக்குரிய தளபதி தேவ்ராவ் நாயக் ஆகியோர் போராட்டத்தை முழு மூச்சாக நடத்தி, வைதீக இந்துக்களையும், இந்துத் தலைவர்களின் போலியான விசுவாசத் தையும் அம்பலப்படுத்தி, அவர்களின் உண்மை சொரூபத்தை தோலுரித்துக் காட்டினர். இந்த அவமானம் மிகவும் தாங்கொணா ததாக இருந்ததால், டாக்டர் மூஞ்சே, லண்டனிலிருந்து, இந்துக் களுக்கு வேண்டுகோள் விடுத்து, தங்களுடைய சொந்த சகோதரர் களுக்கு இந்த சமூக, மற்றும் மத உரிமைகளை மறுக்க வேண்டா மென்றும், அவ்வாறு செய்தால் அது தங்களுக்கே ஆபத்தாக முடியும் என்றும் எடுத்துக் கூறியிருந்தார். முந்திய சத்தியாகிரஹத்தின் போது நடந்தது போலவே காலாராம் கோயில் கதவுகள் மூடப்பட்டன.

ஜாதி-இந்துக்களின் நடத்தையை அம்பலப்படுத்துவதில் தனது மக்களிடமிருந்து உரிய காலத்தில் ஆதரவு கிடைத்தற்காக டாக்டர் அம்பேத்கர் மகிழ்ச்சியடைந்தார். லண்டனிலிருந்து அவர் தனது மக்களுக்கு செய்தி அனுப்பினார்.

நாசிக் சத்தியாகிரஹம் மிகுந்த உற்சாகத்துடனும், உறுதிப் பாட்டுடனும் நடத்தப்பட்டது. பெருங்கூட்டங்களும் ஊர்வலங் களும் நடத்தப்பட்டன. ஏராளமான தொண்டர்கள் கைது செய்யப் பட்டனர். அவர்கள் வீரமான சிறை புகுவதற்கு முன்வந்து, சிறை

வாசத்தை ஏற்றனர். இந்தக் கைதுகளைப் பற்றியும், சத்தியாகிரஹ நிகழ்ச்சிகளையும் பற்றி லண்டன் டைம்ஸில் வெளியிடப்பட்ட செய்திகள் டாக்டர் அம்பேத்கர் கூறியவற்றுக்கு மதிப்பைக் கூட்டின.

காந்தியுடனான மோதலுக்குப் பின்னர், சமஷ்டி அரசுக்கு துணைக் கமிட்டி வகுத்தளித்திருந்த, வருமானத்திற்குரிய வழி முறைகளைப் பற்றிய விவாதத்தில் டாக்டர் அம்பேத்கார் பங்கெடுத்துக் கொண்டார். சமஷ்டி நீதிமன்றத்தின் இயைபைப் பற்றி அவர் மிகவும் சிந்தனையைத் தூண்டும் மற்றும் அறிவு சார்ந்த உரை நிகழ்த்தினார். அதில் ஜின்னா, ஜெயகர், சாங்கே பிரபு மற்றும் லோதியன் பிரபுகூட அதிக ஆர்வம் காட்டினர்; அவரது உரையின் அம்சங்களில் சிலவற்றைத் தெளிவுபடுத்தும்படியும் அவரைக் கேட்டுக் கொண்டனர். இந்தப் பெரும் பணியையும் பொருட்படுத்தாது, அம்பேத்கர், லண்டனில், வட்டமேஜை மாநாட்டில் தனது நிலைக்கு ஆதரவாகத் தனியாருக்கான பேட்டிகள், விளக்கங்களைக் கொடுப்பதிலும், அறிக்கைகள் வெளியிடுவது, பதில் (மறுப்பு) அறிக்கைகளை வெளியிடுவது, பல்வேறு நிறுவனங்களில் உரைகள் நிகழ்த்துவது ஆகியவற்றில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். சர்வதேச விவகாரங்கள் நிறுவனத்தில் நிகழ்த்திய அவருடைய உரை, காந்தியின் கொள்கை நிலையை உடைத்தெறிவதில் மிகவும் பயனுறுதியுடையதாக இருந்தது. தாழ்த்தப்பட்ட மக்களின் கோரிக்கைகளுக்கு காந்தியின் கடுமையான எதிர்ப்பினால் திகைப்படைந்தவர்கள் டாக்டர் அம்பேத்கரிடம் ஓடிச்சென்று, அவருடைய நிலை குறித்த விளக்கத்தைக் கேட்டனர். மிஸ். முரியல் லெஸ்டர் - இவருடன் தான் காந்தி தங்கிக் கொண்டிருந்தார் - டாக்டர் அம்பேத்கரை சந்தித்தார்; அவர் தனது நிலையை லெஸ்டரிடம் விளக்கினார். அம்பேத்கருக்கும் காந்திக்கும் பொதுவான நண்பராகிய அவர், இருவரையும் தனது இல்லத்திற்கு தேநீர் விருந்துக்கு அழைத்து, அவர்களிடையில் சமரசம் ஏற்படுத்துவதற்கு முயன்றார். காந்தி, தனது மனிதாபிமான முறையில் தாழ்த்தப்பட்டவர்களின் முன்னேற்றத்திற்காகப் பணியாற்றியிருக்கிறார் என்பதையும், தீண்டாமையை ஒழிப்பதற்கு முயன்று வருகிறார் என்பதையும் அம்பேத்கர் ஒத்துக் கொண்டார். ஆனால் இந்தப் பிரச்சினையில் அவர்கள் அடிப்படையாகவே வேறுபட்டிருந்தனர்.

1931 அக்டோபர் இறுதியில் பிரிட்டனில் தேர்தல்கள் நடைபெற்றன. டோரிகள் அதிகாரத்திற்கு வந்தனர். தொழிற்கட்சி அரசின் தோல்வியைப் பொறுத்தமட்டிலும், அவர்களது வேலைத்

திட்டம் மிகவும் விஞ்ஞானரீதியாகவும் இருந்ததால், தொழிலாளிகளாலும், சராசரி பிரிட்டிஷ்காரராலும் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். தனது கடிதங்களில் ஒன்றில், டாக்டர் அம்பேத்கர் காந்தியை ஆதரித்த தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்கள், காந்தி சிறப்பு வாக்காளர் தொகுதியை எதிர்த்தது மட்டுமன்றி, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சிறப்பு (தனி) பிரதிநிதித்துவத்தையும் எதிர்த்தார் என்பதைப் புரிந்து கொள்ளவில்லையென்றும், இவ்வாறு இல்லாமலிருந்தால் நிலைமைக்கு நீண்ட காலத்திற்கு முன்பே தீர்வு ஏற்பட்டிருக்கும் என்றும் கூறினார்.''[1]

மாநாட்டின் முதலாவது கூட்டத் தொடரில் சிறுபான்மையோர் துணைக் கமிட்டியிடம் சமர்ப்பித்த முதலாவது கோரிக்கை மனுவோடு கூட, 1931 நவம்பர் 4ல் ஒரு துணை கோரிக்கை மனுவையும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் ராவ் பகதூர் ஆர். சீனிவாசனும் கூட்டாக சமர்ப்பித்தனர். துணை கோரிக்கை மனுவில் கீழ்வருமாறு கூறப்பட்டிருந்தது: - ஆசிரியர்கள்

## ''சிறப்பு பிரதிநிதித்துவத்திற்காக தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் உரிமைக் கோரிக்கைகள் பற்றி டாக்டர் பீமராவ் ஆர். அம்பேத்கரும் ராவ்பகதூர் ஆர். சீனிவாசனும் சமர்ப்பித்த துணை கோரிக்கை மனு

தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பாதுகாப்புக்காக ஒரு சுயாட்சி இந்தியாவின் அரசியல் சாசனத்தில் அரசியல் பாதுகாப்புகள் பிரச்சினை சம்பந்தமாகக் கடந்த ஆண்டு நாங்கள் சமர்ப்பித்த கோரிக்கை மனுவில் - இது, சிறுபான்மையோர் துணைக் கமிட்டியின் விவாதங்களின் அச்சிட்ட தொகுதியின் IIIவது பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது - தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சிறப்புப் பிரதிநிதித்துவம் அத்தகைய பாதுகாப்புகளில் ஒன்றாக அமைய வேண்டும் என்று கோரியிருந்தோம். அவர்களுக்குத் தேவையென்று நாங்கள் கோரியிருந்த சிறப்புப் பிரதிநிதித்துவத்தின் விவரங்களை அப்பொழுது நாங்கள் விளக்கவில்லை. இந்தப் பிரச்சினையை எட்டுவதற்குள், சிறுபான்மையோர் துணைக் கமிட்டியின் விவாதங்கள் முடிவுக்கு வந்துவிட்டதே இதற்குக் காரணமாகும். இந்தத் துணை மனுவின் மூலம், அப்பொழுது விடுபட்டதை இப்பொழுது சரிசெய்வதற்கு நாங்கள் விரும்பு

கிறோம். எனவே, இவ்வாண்டு, இப்பிரச்சினையை விவாதிப்பதற்கு சிறுபான்மையோர் துணைக் கமிட்டி முன்வரும்போது இந்த தேவையான விவரங்கள், அதற்கு உதவிகரமாக இருக்கும்.

## I. சிறப்புப் பிரதிநிதித்துத்துவத்தின் அளவு

அ. மாகாண சட்டப்பேரவையில் சிறப்புப் பிரதிநிதித்துவம்.

(i) வங்காளம், மத்தியமாகாணங்கள், அஸ்ஸாம், பீஹார், ஒரிஸா, பஞ்சாப் மற்றும் ஐக்கிய மாகாணங்களில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு, சைமன் கமிஷனும் இந்தியமத்தியக் கமிட்டியும் மதிப்பிட்டதன்படியான அவர்களின் மக்கட் தொகையின் வீதாசாரத்திற்கு ஏற்பப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும்.

(ii) சென்னை மாகாணத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு 22 சதவீதம் பிரதிநிதித்துவம் வேண்டும்.

(iii) பம்பாயில்-

(அ) சிந்துமாகாணம் பம்பாய்ராஜதானியின் ஒரு பகுதியாக நீடித்து இருக்கும்பட்சத்தில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு 16 சதவீதம் பிரதிநிதித்துவம் வேண்டும்.

(ஆ) பம்பாய் ராஜதானியிலிருந்து சிந்து பிரிக்கப் பட்டுவிட்டால் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், ராஜதானியின் முஸ்லிம் களுக்குள்ள அதே பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும்- ஏனெனில் இருதரப்பினரின் மக்கள் தொகையும் சமமாக உள்ளன.

ஆ. சமஷ்டி சட்டப்பேரவையில் சிறப்புப் பிரதிநிதித்துவம்-

சமஷ்டி சட்டப் பேரவயின் இரு அவைகளிலும் இந்தியாவில் அவர்களது மக்கட்தொகையின் வீதாசாரத்திற்கேற்பத் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும்.

### ஒதுக்கீடுகள்

சட்டப் பேரவைகளில் இந்தப் பிரதிநிதித்துவ வீதாசாரத்தைக் கீழ்வரும் அனுமானங்களின் பேரில் நாங்கள் நிர்ணயித்துள்ளோம்.

(1) தாழ்த்தப்பட்ட மக்களின் மக்கட்தொகை சம்பந்தமாக சைமன் கமிஷனும் (தொகுதி 1 பக்.40), இந்திய மத்தியக் கமிட்டியும் (அறிக்கை,பக்.44) கொடுத்துள்ள புள்ளிவிவரங்கள், இடங்களை

ஒதுக்கீடு செய்வதற்கு அடிப்படையாக அமைவதற்குப் போதுமான அளவு சரியானது என்று ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும் என்று நாங்கள் கருதுகிறோம்.

(2) சமஷ்டி சட்டப்பேரவை இந்தியா முழுவதையும் உள்ளடக்கியதாகும் என்று நாங்கள் கருதுகிறோம். இந்நிலையில் கவர்னர்களின் மாகாணங்களில் உள்ள அவர்களது ஜனத்தொகையோடுகூட இந்திய சமஸ்தானங்கமிலும், நேரடி மத்திய நிர்வாகத்தின் கீழ் உள்ள பிரதேசங்கள் ஆகியவற்றிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் மக்கட்தொகையும்- சமஷ்டி சட்டப்பேரவையில் தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதித்துவ அளவைக் கணக்கிடுவதற்கு மிகவும் சரியாக ஒரு கூடுதல் தொகையாக அமையும் என்று நாங்கள் கருதுகிறோம்.

(3) பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் நிர்வாகப் பரப்பு, தற்போதுள்ளது போன்றே தொடர்ந்து இருக்கும் என்று நாங்கள் கருதுகிறோம்.

ஆனால், சில அக்கறையுள்ள தரப்பினர் அச்சுறுத்துவதைப் போன்று, இந்த அநுமானங்களுக்கு சவால்விடப்படுமேயானால், தாழ்த்தப்பட்ட மக்களின் கட்டுப்பாட்டில் இல்லாத ஒரு புதிய மக்கட் தொகைக் கணக்கெடுப்பின்கீழ் தாழ்த்தப்பட்ட மக்களின் மக்கட்தொகை ஒரு தாழ்ந்த வீதாசாரத்தைக் காட்டுமேயானால், அல்லது மாகாணங்களின் நிர்வாகப் பிரதேசங்கள் மாற்றப்பட்டு, அதன் விளைவாய் தற்போதைய மக்கட்தொகை சமநிலை பாதிக்கப்படுமேயானால்,அப்பொழுது தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, தமது பிரதிநிதித்துவ வீதாசாரத்தை மாற்றுவதற்கும் கூடுதல் பிரதிநிதித்துவத்தைக் கோருவதற்கும் உரிமை உள்ளவர்களாவர். இதே முறையில், அ.இ.சமஷ்டி நடைமுறைக்கு வராமற்போகுமானால், சமஷ்டி சட்டப்பேரவையில் எந்த அடிப்படையில் கணக்கிடப்பட்டதோ அந்தப் பிரதிநிதித்துவ வீதாசாரத்தில் மறுசீரமைப்புக்கு அவர்கள் தயாராயிருப்பார்கள்.

## II. பிரதிநிதித்துவத்தின் வழிமுறை

1. தமது வாக்காளர்களின் தனித் தொகுதிகள் வாயிலாக, மாகாண மற்றும் மத்திய சட்டப்பேரவைகளுக்குத் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு

உரிமை இருக்க வேண்டும். சமஷ்டி அல்லது மத்திய சட்டப் பேரவையின் மேலவையில் தமது பிரதிநிதித்துவத்திற்கு, இந்த மாகாண சட்டப்பேரவைகளின் உறுப்பினர்களால் மறைமுகமாகத்தேர்ந்தெடுப்பது என்று முடிவுசெய்யப்படுமேயானால், மேல் சபைக்குத் தமது பிரதிநிதித்துவத்தைப் பொறுத்தமட்டிலும், தனித்தொகுதிகளுக்கான தமது உரிமையைக் கைவிடுவதற்குத் தாழ்த்தப்பட்ட மக்கள் ஒத்துக்கொள்வார்கள்; ஆனால் அதற்கு ஒரு நிபந்னை: வீதாசாரப் பிரதிநிதித்துவத்தின் எந்த முறையிலும், அவர்களது இடங்களின் எண்ணிக்கையை உத்தரவாதப்படுத்துவதற்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

2. தாழ்த்தப்பட்ட மக்களுக்கான தனித்தொகுதிகள் கூட்டுத் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட (ரிசர்வ்) இடங்கள் என்ற முறையினால்-பின்வரும் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்பட்டாலன்றி மாற்றப்படக்கூடாது:-

*(அ).* சம்பந்தப்பட்ட சட்டப்பேரவைகளில் அவர்களின் பிரதிநிதிகளின் பெரும்பான்யோரின் கோரிக்கையின் பேரில் வாக்காளர்களிடையில் ஒரு பொது வாக்கெடுப்பு நடத்தப்பட்டு, வாக்குரிமைபெற்ற தாழ்த்தப்பட்ட மக்களின் உறுப்பினர்களின் மிகப் பெரும்பான்மையோரின் ஆதரவு பெறுதல்.

*(ஆ).* இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பாகவும், வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை நிலைநிறுத்தப்படுவதற்கு முன்பாகவும், அத்தகைய பொது வாக்கெடுப்பு எதுவும் நடத்தப்படக்கூடாது.

## III. தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் யாரார் என்பதை நிர்ணயித்துக் கூறவேண்டியதன் அவசியம்

கடந்த காலத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரதிநிதித்துவம் மோசமாக துஷ்பிரயோகம் செய்யப்பட்டுள்ளது; அதன் விளைவாக தாழ்த்தப்பட்ட வர்க்கங்களல்லாத நபர்கள் சட்டப் பேரவைகளில் அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்காக நியமிக்கப்பட்டனர், தாழ்த்தப்பட்டவர்க்கங்களைச் சேர்ந்தவர்களல்லாத நபர்கள், தாழ்த்தப்பட்டவர்களின் பிரதிநிதிகளாக நியமனம் பெற்றது சம்பந்தமான சம்பவங்களும் இருக்கின்றன.

தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கான நபர்களை நியமனம் செய்வதற்கான அதிகாரம் ஆளுநருக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதே பொழுதில், தனது நியமனங்களைத் தாழ்த்தப்பட்ட மக்களோடு மட்டும் நிறுத்திக்கொள்ளுமாறு அவருக்குக்கூறப்படவில்லை, அதனால்தான் இந்த துஷ்பிரயோகம் ஏற்பட்டது, புதிய அரசியல் சாஸனத்தின்கீழ் நியமனத்திற்கு பதிலாக தேர்தல் நடத்தப்பெறவுள்ளதால், அப்பொழுது இந்த துஷ்பிரயோகத்திற்கு இடமிருக்காது, ஆனால், அவர்களுடைய சிறப்புப் பிரதிநிதித்துவத்தின் நோக்கத்தைத் தோற்கடிப்பதற்கான எந்த சந்து பொந்துகளையும் விட்டுவைக்காதிருப்பதற்காக, நாங்கள் பின்வருவனவற்றைக் கோருகிறோம்.

(i) தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தமதுசொந்த தனித் தொகுதிகளுக்கான உரிமை வேண்டும் என்பதுமட்டுமன்றி, தங்களைச் சேர்ந்தவர்களாலேயே பிரதிநிதித்துவப் படுத்தப்படுவதற்கான உரிமையும் அவர்களுக்கு இருக்க வேண்டும்.

(ii) ஒவ்வொரு மாகாணத்திலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள், நிலவி வருகின்ற தீண்டாமை முறையினால் பாதிக்கப்பட்டுள்ள சமூகங்களைச் சேர்ந்த நபர்கள் என்றும், தேர்தல் நோக்கங்களுக்காகப் பட்டியலிடப்பட்டவர்கள் என்றும் கறாராக விளக்கப்பட வேண்டும்.

## IV. துறைப்பெயர்த் தொகுதி

பிரச்சினையின் இந்தப் பகுதியைப் பொறுத்த மட்டிலும், தாழ்த்தப்பட்டவர்க்கங்களின் தற்போதிருந்துவரும் துறைப் பெயர் தொகுதியை, இது குறித்து சிந்தித்த தாழ்த்தப்பட்ட மக்களும், அவர்கள் பற்றி அக்கறை கொண்டுள்ள வெளியாட்களும் ஆட்சேபணை தெரிவித்துள்ளனர், இது அவமானப்படுத்துவதாகவும் இழிவுபடுத்துவதாகவும் உள்ளது, எனவே புதிய அரசியல் சாஸனத்தின் முன்வரைவைத் தயாரிக்கும் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அதிகாரப் பூர்வமான காரியங்களுக்காகத் தற்பொழுதுள்ள பெயர்த்தொகுதியை மாற்றவேண்டும். அவர்கள் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் என்பதற்குப் பதிலாக ''சாதி-இந்துக்கள் அல்லாதவர்கள்'', ''புராடெஸ்டண்ட் (சீர்திருத்த) இந்துக்கள்'' அல்லது ''சம்பிரதாய எதிர்ப்பு இந்துக்கள்'' அல்லது இது போன்ற பெயர்களால் அழைக்கப்பட வேண்டும். எந்தக் குறிப்பிட்ட

பெயர்த் தொகுதியையும் வலியுறுத்துவதற்கு எங்களுக்கு அதிகாரமில்லை. நாங்கள் ஆலோசனை மட்டுமே கூறமுடியும், முறையாக விளக்கப்பட்டால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தங்களுக்கு மிகவும் பொருத்தமான ஒன்றை ஏற்றுக்கொள்வதற்கு அவர்கள் தயங்கமாட்டார்கள் என்று நாங்கள் நம்புகிறோம்.

இந்தியா முழுவதிலுமிருந்து தாழ்த்தப்பட்ட வர்க்கங்களிடமிருந்து, இந்த விண்ணப்ப மனுவில் அடங்கியுள்ள கோரிக்கைகளுக்கு ஆதரவு தெரிவித்து எங்களுக்கு ஏராளமான தந்திகள் வந்துள்ளன.''*

''மாநாடு நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, மேன்மை தங்கிய மன்னர்பிரான், நவம்பர் 5-ல் இந்தியப் பிரதிநிதிகளுக்கு ஒரு வரவேற்பு(விருந்து)அளித்தார். ஒரு சில உறுப்பினர்கள் விருந்தில் பேசவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது. காந்தி, தலையில் ஏதும் அணியாமல் பிரசன்னமாயிருந்தார்.அவர் தன்னுடைய வழக்கமான கதராடையுடன் காலில் செருப்புகளை அணிந்து காட்சியளித்தார். இந்தியாவில் தீண்டப்படாதாரின் நிலைமை குறித்து மன்னர், டாக்டர் அம்பேத்கரைக் கேட்டார். டாக்டர் அம்பேத்கர், உணர்ச்சி பொங்க, கலங்கிய கண்களுடன், சோகமான முகத்துடன், தீண்டப்படாதாரின் கொடுமையான நிலைமை பற்றி எடுத்துக் கூறியதைக் கேட்ட சக்ரவர்த்தி அதிர்ச்சியுற்றார். பின்னர், மன்னர், அவருடைய கல்வி நிலை, அவர் எவ்வாறு கல்வித் துறையில் உயர்ந்த நிலையை அடைந்தார் என்பது பற்றியும் அன்புடன் டாக்டர் அம்பேத்கரிடம் விசாரித்தார்.''[1].

''சிறுபான்மையோர் பிரச்சினைக்கு ஒருமுகமான தீர்வு இல்லாமலிருப்பதைக்கண்ட பிரிட்டிஷ் பிரதமர்,வகுப்புவாரிப் பிரச்சினைக்குத் தீர்வுகாண்பதற்குத் தனக்கு அதிகாரமளிக்கும் ஒரு அறிக்கையில் சிறுபான்மையோர் கமிட்டி உறுப்பினர்கள் கையெழுத்திட்டுத் தன்னிடம் அளிக்க வேண்டுமென்றும், தனது முடிவை ஏற்றுக் கொள்வதாக அவர்கள் உறுதி கூறவேண்டு

---

★ முந்திய விண்ணப்ப மனுவுக்கு, மாநாட்டின் முதல் கூட்டத்தொடரின் சிறுபான்மையோர் துணைக்கமிட்டியின் விவாதங்களின் பிற்சேர்க்கையைப் பார்க்கவும். 1931, நவம்பர் 4 ம் தேதிய இந்தத் துணை விண்ணப்பமனு, மூல விவாதங்களில் பிற்சேர்க்கை VII என்று அச்சிடப்பட்டுள்ளது. பக். 1409-11.

1. அதே அறிக்கை, பக்கம் 181.

மென்றும் கேட்டுக்கொண்டார். பிற உறுப்பினர்களோடு கூட, காந்தியும் இந்த உறுதிமொழியில் கையெழுத்திட்டார்.

டாக்டர் அம்பேத்கர் இந்த அறிக்கையில் கையெழுத்திட வில்லை. ஏனெனில், அவர் தனது கோரிக்கைகள் நீதிபூர்வ மானவை என்று நம்பினார். பின்னர் பிரதம மந்திரி மாநாட்டை டிசம்பர் 1ம் தேதிக்கு தள்ளி வைத்தார். இதற்கு சிறிது முன்பாக, சர்.மீர்ஸா இஸ்மாயிலின் இல்லத்தில் காந்தியை அம்பேத்கர் சந்தித்துப் பேசினார். டாக்டர் அம்பேத்கரின் ஆதரவைப் பெறு வதற்கு காந்தி ஒரு புதுமையான வழிமுறையை யோசனை கூறினார். கூட்டுத்தொகுதிகளின் அடிப்படையில்,-இடங்கள் ஒதுக்கீடின்றி- நடைபெறும் பொதுத் தேர்தலில் தீண்டப்படாத வேட்பாளர்கள் தோல்வியுற்றால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தமது தகுதியை ஒரு நீதிமன்றத்தில் நிரூபணம் செய்யவேண்டும்,'' என்று அவர் கூறினார்.''[1].

இரண்டாவது வட்டமேசை மாநாடு ஒத்திவைக்கப்பட்ட தற்குப் பின், வெவ்வேறு பிரமுகர்களும் பத்திரிக்கைகளும் பல்வேறு விதமாக விமர்சனம் செய்தனர். அந்த விமர்சனங்கள் பின்வருமாறு:

''இந்தியாவிலிருந்தான ஒரு பிரபலபத்திரிக்கையாளர் திரு.டி.ஏ.ராமன், இந்தியாவுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அவருடைய சக-பயணிகளில் ஒருவர், தான் யாரையாவது கொலை செய்வதாயிருந்தால், அது டாக்டர் அம்பேத்கரைத்தான்''[2], என்று திரு. ராமனிடம் கூறினார். 'சுபோதா பத்திரிகா' என்ற ஒரு வார இதழ், தனது 1931 நவம்பர் 15ம் தேதிய பதிப்பில் இவ்வாறு எழுதியது.

''தாழ்த்தப்பட்ட மக்களின் கோரிக்கைகள் சம்பந்தமாக மகாத்மா காந்தியின் நிலையை நம்மால் புரிந்துகொள்ள முடிய வில்லை. சுருங்கக் கூறின், அது நியாயமற்றதும் மிக மிக எரிச்ச லூட்டுவதுமாகும். எந்த சமூகத்திற்காவது மிகவும் பூரணமான பாதுகாப்பு தேவைப்படுகின்றதென்றால், அது தீண்டப்படாத வர்க்கங் களுக்குத்தான். முஸ்லிம்களும் சீக்கியர்களும் நன்கு பாதுகாக்கப் பட்டிருக்கிறார்கள். ஒரு சக-பத்திரிக்கை கூறுவது போல, 'அவர் களாகவே உருவாக்கிக்கொண்ட அச்ச நிலைமை, காமன்வெல்த்தில் ஓர் உயர்ந்த நிலையைப் பெறுவதற்கான ஒரு முகமூடியேயாகும்.

1. அதே அறிக்கை, பக்கம் 190-191
2. அதே அறிக்கை, பக்கம் 183.

வலுவான சமூகங்களின் பொய்யான உரிமைக் கோரிக்கைகளுக்கு விட்டுக் கொடுத்துவிட்டு, தீண்டப்படாதாரின் கோரிக்கைகளை நிராகரிப்பது சரிதானா, என்று இப்பொழுது மகாத்மாஜியைக் கேட்கிறோம். யுக்தியாகப் பேசிப் பயனில்லை, வகுப்புவாரிப் பிரச்சினைக்குத் தீர்வுகாண்பதற்கான மகாத்மாவின் முயற்சிகள் இது வரையில் பயனளிக்காமற் போயிருக்கிறதெனில், அதற்கு அவருக்கும் பொறுப்பு உண்டு. டாக்டர் அம்பேத்கரின் ஆவேசக் குமுறல்கள் வருத்தமேற்படுத்தக்கூடியதாக இருந்த போதிலும், அவை நன்கு ஆதாரப்பட்டவையாக இல்லாது போயினும் புரிந்து கொள்ளத்தக்கதாகும். காங்கிரசின் ஆனண என்று கூறப் படுவதன் பின்னே பாதுகாப்புத் தேடுவது பயனற்றதாகும். இது நடைமுறையில் காந்தி விரும்புவது போல் நெகிழும் தன்மை யுடையதாகும். தீண்டாமையை அகற்றுவது குறித்து காங்கிரஸ் மேற்பூச்சு பூசிவருகிறது. இல்லாவிட்டால், நேருகமிட்டியில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் ஒரு பிரதிநிதியை ஏன் சேர்த்துக் கொள்ளவில்லை என்று நாங்கள் கேட்கிறோம்.''

''சிறுபான்மையோர் பிரச்சினை சம்பந்தமாக எந்த உறுதியான முடிவும் எடுப்பதற்கு அவகாசம் பிடிக்குமேயானால், அதனால் சுதந்திரம் கிடைப்பதும் தாமதமாகுமேயானால், அப்பொழுது, ஆரம்பத்தில் மாகாண சுயாட்சி ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும்.'' இவ்வாறுதான் காந்திஜி, தனது நண்பர்களுடன் ஆலோசனை கலக்காமலேயே, தனது இசைவை பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்குத் தெரிவித்தார். இந்த தனிப்பட்ட உரையாடல் வெளியாவது இந்தியப் பிரதிநிகளிடையில் ஒரு புயலைக் கிளப்பிவிட்டது. முற்போக்கு இந்துக்களைப் பிரதிநிதித்துவப்படுத்திய டாக்டர் சப்ரூ, ஜெயகர், மற்றும் இந்து மகாசபையைப் பிரதிநித்துவப்படுத்திய டாக்டர் மூஞ்சே, மாளவியா முதலியவர்களும் அதிர்ச்சியடைந்தனர். காந்திஜியின் அறிக்கைகளின் உண்மை நிலையை உறுதி செய்து கொள்ள முயன்றனர். ஒரு பிராமணரும் காந்திஜியுடன் நீண்ட காலத் தொடர்பு கொண்டிருந்தவருமான இந்துலால் யக்னிக், 'சண்டே அட்வகேட்' என்ற இதழின் சிறப்பு செய்தியாளராக லண்ட னுக்குச் சென்றிருந்தார். 1931 டிசம்பர் 6ம் தேதிய 'சண்டே அட்வகேட்' இதழில் அவர் இவ்வாறு எழுதினார்.

''மாகாண சுயாட்சியை காந்தி ஏற்றுக்கொள்கிறார். ஆனால், காந்தி ஏற்கனவே, பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் கனிவான கரங் களினுள் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டுவிட்டார் என்று நான்

துணிந்து கூறுகிறேன். இந்தியாவிற்குப் புதிய சுயாட்சித் திட்டத்தின் முதல் தவணையாக, மாகாண சுயாட்சிக்கு ஒத்துக் கொள்வதற்கு லோதியான் பிரபுவுடன் காந்தியின் ரகசிய ஒப்பந்தம் குறித்துக் கடந்த வாரம் நான் ஓரளவு போகிற போக்கில் குறிப்பிட்டேன். இந்தியாவிற்கான புதிய சமஷ்டி அரசியல் சாஸனத்தைத் தயாரிப்பதற்கு அதிகாரம் பெறுகின்ற அரசியல் நிர்ணயசபையை உருவாக்குவதற்கு சுய ஆட்சி மாகாணங்கள் மற்றும் சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் இறுதியில் அழைக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனையுடன் காந்தி சாமர்த்தியமாக இந்த நிபந்தனைக்கு, இயல்பாகவே அரசு உடன்படவில்லை என்று நான் அறிகிறேன். ஆனால் அவர்கள் சாதுர்யத்துடன் காந்தியின் இந்த உடன்பாட்டைப் பிடித்துக்கொண்டு, அதை சாத்தியமான அளவு பரவலாக அதிகாரப்பூர்வமற்ற முறையில் தான்- பிரபல்யப்படுத்தினார்கள். ஆனால், தேஜ்பகதூர் சப்ரூ, திரு. ஜெயகர் போன்ற மிதவாத அரசியல்வாதிகள், இந்த சம்பாஷணைகளை கேள்விப்பட்டு மிகவும் ஆத்திரமடைந்தார்கள். இது பற்றிக் காந்தியுடன் காரசாரமாக வாக்குவாதம் செய்தனர். குறிப்பாக திரு. ஜெயகர், காங்கிரஸ் பிரதிதியுடன் மிகவும் சீற்றம் கொண்டார், என்று என்னிடம் கூறப்பட்டது. இதைக் கண்டு காந்தி மிகவும் சீற்றமடைந்து, தான்விரும்பியதைச் செய்வதற்குத் தனக்கு சுதந்திரமிருக்கிறதென்றும், தான் செய்தவற்றுக்கெல்லாம் காங்கிரசை ஒத்துக்கொள்ளச் செய்ய முடியுமென்று தான் நிச்சயமாக நம்புவதாகவும் பதிலளித்ததாகக் கூறப்படுகிறது. ஆயினும் இந்த விஷயம் பத்திரிக்கைகளில் மறைமுகமாக வெளியானவுடனே, காந்தி, இந்த ரகசிய உடன்பாட்டிலிருந்து நழுவிக் கொள்வதற்கு தன்னாலான எல்லா முயற்சியும் செய்தார்; ஆனால், இந்த உடன்பாட்டின் ஓர் ஒருங்கிணைந்த பாகமான இந்த நிபந்தனைக்கு அரசு ஒத்துக் கொள்ளவில்லைதான். ஆனால் இந்த விஷயம் சம்பந்தமாக நியூஸ் கிரானிகிள் பத்திரிக்கை காந்தி அளித்த சிறப்புப் பேட்டியை நுணுக்கமாக ஆராய்ந்தால் காந்தி உடனடியாக சுதந்திரம் வழங்கப்பட வேண்டுமென்பதற்குத் தனது விருப்பத்தைத் தெரிவிக்கும் அதே பொழுதில்-இது பிரிட்டனுடன் பங்காளியாக இருப்பது, மற்றும் இந்தியாவுடன் ஏகாதிபத்திய இணைப்பைப் பராமரிப்பது என்பதே இதன் பொருளாகும் - இந்தியாவில் உடனடியாக ஒரு சமஷ்டி அரசியல் சாஸனத்தைத் துவக்கிவைப்பதில் கணிசமான இடர்ப்பாடுகள் உள்ளன என்பதை மறைமுகமாக நடைமுறையில் ஒத்துக் கொள்ளவே செய்கிறார்.''[1]

1. கணவீர், அம்பேத்கர் காந்தி: தீன் முலாக்காதி, பக். 22-23.

டாக்டர் அம்பேத்கர் லண்டனை விட்டுப்புறப்பட்டார், 1932 ஜனவரி 15 ல் மார்சேல்ஸில் கப்பல் பிரயாணத்தைத் தொடங்கிய அவர், ஜனவரி 29ல் பம்பாய் வந்தடைந்தார்.

''ஓட்டுரிமைக் கமிட்டி வெளியிட்ட கேள்விகளுக்கு டாக்டர் அம்பேத்கர் பதில்களைத் தயார் செய்தார். அதன் பிரதிகள் (நகல்கள்) பல்வேறு தனிநபர்கள் மற்றும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் சமூகத்தின் (காளான்கள் போல் தோன்றிய) சங்கங்களுக்கும் விநியோகம் செய்யப்பட்டு வருகின்றன. சங்கம் அல்லது தனி நபர்களின் பெயர்களைப் பூர்த்தி செய்வதற்காக ஒவ்வொரு பாராவின் துவக்கத்திலும் காலி இடம் விட்டு வைக்கப்பட்டது.

## ஒரே மாதிரியான பதில்கள்

விநியோகம் செய்யப்பட்ட கேள்வித்தாளுக்கு ஒரே மாதிரியான பதில்கள் நூற்றுக்கணக்கானவை வந்தன.

''......................(சங்கத்தின் பெயர் இங்கு பூர்த்தி செய்யப்பட வேண்டும்) பொதுவான தொகுதிகளில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கப்பெறாது என்று கருதுகிறோம். அது போன்றே தமது விருப்பப்படியான பிரதிநிதிகளையும் பெற முடியாது. வயது வந்தோருக்கு ஓட்டுரிமை வழங்கப்பட்டாலும்கூட, இதுதான் நிலைமை. இதற்கான காரணங்கள் பின்வருமாறு :-

''(அ) ஒவ்வொரு பிரதேசத் தொகுதியிலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் மக்கட்தொகையில் சிறுபான்மையோராகவே உள்ளனர். தொகுதியின் வாக்காளர்களிடையிலும் சிறுபான்மையோராகவே இருப்பார்கள், இவ்வளவு எண்ணிக்கையிலான வாக்காளர்களைக் கொண்டு, அவர்களால் ஓர் இடத்தையும் வெல்ல முடியாது.''

''(ஆ) சமூக வெறுப்புகளின் காரணமாக, உயர்சாதியின் எந்தவாக்காளரும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் வேட்பாளர்களுக்கு ஓட்டளிக்க மாட்டார்.''

"(இ) அதற்கு மாறாக, உயர்சாதிகளின் மீது பொருளாதார ரீதியில் சார்ந்திருப்பதாலும், உயர்வர்க்கங்களின் சமய மற்றும் சமூக செல்வாக்கினாலும் வாக்காளர்கள், தமது சொந்த வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு வேட்பாளருக்கு எதிராக, ஓர் உயர் சாதி வேட்பாளருக்கு ஓட்டளிக்கச் செல்லக்கூடும். எந்த தாழ்த்தப்பட்ட வர்க்க நபரும், உயர்சாதிகளின் ஆதரவுடன் ஒருபோதும் கவுன்சிலுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதில்லை".[1].

"லார்டு லோதியன் தலைமையிலான வாக்குரிமைக் கமிட்டியின் நடவடிக்கைகளில் பங்கு கொள்வதற்காக, டாக்டர் அம்பேத்கர் உடனே டில்லிக்குப் புறப்பட்டுச் சென்றார். டில்லிக்குச் செல்லும் வழியில் ஒவ்வொரு ரயில் நிலையத்திலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களினால், அவர் உற்சாகமாக வரவேற்கப்பட்டார். குறிப்பாக, நாசிக், இகாட்புரி, தியோலில், மன்மாட், புசாவல், மற்றும் ஜான்ஸி ரயில் நிலையங்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் வண்ணமயமாகவும் பிரமிப்பை ஏற்படுத்துவதாகவும் இருந்தன.

பிப்ரவரியின் ஆரம்ப நாட்களில், வாக்குரிமைக்கமிட்டி பீஹாருக்கு விஜயம் செய்தது. ஒவ்வோரிடத்திலும் தாழ்த்தப்பட்ட மக்கள் மிகுந்த உற்சாகத்துடன் டாக்டர் அம்பேத்கரை வரவேற்றனர். கமிட்டி பின்னர் பாட்னா வழியாகக் கல்கத்தாவுக்குச் சென்றது. அவருடைய கருத்தோட்டம் உள்ள தாழ்த்தப்பட்ட வர்க்கத் தலைவர்கள், வாக்குரிமைக் கமிட்டியின் முன்னால் சாட்சியமளிக்கும் போது, தனித் தொகுதித் திட்டத்திற்கு ஆதரவளித்தனர். ஏனெனில் ஒதுக்கப்பட்ட இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகள் முறையில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் வேட்பாளர்கள் பெரும்பான்மை வாக்காளர்களின் தயவை நம்பியிருக்க நேரிடும் என்றும், அல்லது பெரும்பான்மை சமூகத்தின் கையாட்களால் இடங்கள் வசப்படுத்திக் கொள்ளப்படுவதற்கு எல்லா சாத்தியப்பாடும் இருக்கும். கூட்டுத் தொகுதிகள் வெற்றிகரமாச் செயல்படவேண்டுமானால், அதற்கு முன்னதாக, பெரும்பான்மை சமூகத்திடம் பரந்த மனப்பான்மை ஏற்படவேண்டும் என்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பல தலைவர்கள் கருதினர். அத்தகைய ஒரு சாதகமான சூழ்நிலை அப்பொழுது இருக்கவில்லை என்று அவர்கள் கருதினர்".[2].

---

1. தி பாம்பே கிரானிகில், பிப்ரவரி 23, 1932.
2. அதே அறிக்கை, பக்கம் 194-195.

## “திரு. கவாய் அவர்களுக்குக் கடிதம்.

இதற்கிடையில், இது சம்பந்தமாக, டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், அகில இந்திய தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் சங்கத்தின் பொதுச்செயலாளர், திரு.ஜி.ஏ.கவாய்,எம்.எல்.சி. அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதம் பின்வருமாறு:-

பாட்னா, பிப்ரவரி 13

உங்களை நான் லக்னோவிலும், பாட்னாவிலும் கூட எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன், உங்களுடைய கடிதம் கிடைக்கின்ற வரையிலும், எந்த இடத்திலும் நீங்கள் ஏன் வரவில்லை என்று நான் வியப்படைந்தேன். நீங்கள் பயணத்தை மேற்கொள்ள முடியாமல் உங்களுடைய உடல்நலக்குறைவு இடையூறாக இருந்தது குறித்து நான் வருத்தமடைந்தேன்.

என்னுடைய கருத்துக்கள் அடங்கிய கோரிக்கை மனுவின் ஒரு பிரதியை, உங்களுடைய தகவலுக்காக, உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன். மனுவின் கடைசி பாராவில் நமது கமிட்டி வகுப்பு வாரிப் பிரச்சினையை விவாதிக்க ‘முடியாது’ எனவே, உங்களுடைய கமிட்டியும் விவாதிக்க ‘முடியாது’ என்றிருப்பதை நீங்கள் காண் பீர்கள். பிரதம மந்திரியின் கடிதமும், கமிட்டி வெளியிட்ட கேள்வித் தாளும் இதைத் தெளிவுபடுத்துகின்றன; மற்றும் இந்தப் பிரச்சினை சம்பந்தமாக டில்லியிலும் லக்னோவிலும் கொடுத்த தீர்ப்பு, இந்தக் கருத்துக்கு ஏற்புடையதாக இருக்கிறது. எனவே, நீங்கள் உங்கள் ‘கமிட்டி’ யிடம், அவர்கள் இந்தப் பிரச்சினையை விவாதிக்க முடியாது என்று கூறவேண்டும். அவர்கள் வற்புறுத்தினால், அதை விவாதிப்பதற்கு நீங்கள் மறுத்துவிட வேண்டும்”.

## “கருத்துக்கள் மாற்றமடைதல்”

உங்களுடைய தனிக்குறிப்பு, தனித்தொகுதியா, கூட்டுத் தொகுதியா என்று விவாதிப்பதற்கு பதிலாக, விவாதிப்பதற்கு நீங்கள் மறுப்பதாக மட்டும் சொல்லிவிட வேண்டும், ஏனெனில் அது கமிட்டியின் விவாத விதிகளுக்கு அப்பாற்பட்டதாகும். உங்களுடைய சங்கத்திற்கு ஒரு கேள்வித்தாள் வந்துள்ளது என்பதை

நான் அறிவேன். ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் நான் உங்களுக்கு சுட்டிக் காட்டவேண்டும். திரு.ராஜா அவர்கள் தனது கருத்தை மாற்றிக்கொண்டு, இப்பொழுது கூட்டுத் தொகுதிகளுக்கு ஆதரவாகப்பேசி வருகிறார் என்பதைக் காண நான் அதிர்ச்சியுற்றேன். ஒவ்வொரு வகையிலும் தற்கொலைக்கு ஒப்பான இந்தக் கொள்கையில் உங்களுடைய அமைப்பு அவரைப் பின்பற்றாது என்று நான் நம்புகிறேன். ஆனால் அது அவ்வாறு செய்தால், நம்மிடையே ஒரு நிரந்தரப் பிளவு மற்றும் 'நம்மிடையே' ஒரு போர் ஏற்படும் விளைவுகளை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். எப்படியும், அவ்வாறு ஏற்படுவதைத் தவிர்க்க நான் முயன்று வருகிறேன். எனவே அதை வலியுறுத்த வேண்டாம். எனக்குத் தெரியாமலும், சம்மதமில்லாமலும் நீங்கள் எதுவும் செய்ய மாட்டீர்கள் என்ற உங்களுடைய உறுதிமொழியைப் பெறுவதற்கு நான் மகிழ்ச்சியடைவேன், வாக்குரிமை சம்பந்தமான கேள்வித்தாளுக்கு ஒரு விரிவான பதில்களின் தொகுதியை நான் தயாரித்துள்ளேன். அவை தட்டச்சு செய்யப்பட்டவுடனே உங்களுக்கு அதன் ஒரு பிரதியை அனுப்பி வைக்கிறேன். உங்களுடைய உபயோகத்திற்காக கேள்வித்தாளுக்கான என்னுடைய பதில்களின் ஓர் அறிக்கையும் திருத்தப்பட்ட கேள்வித்தாளின் ஒரு பிரதியையும் உங்களுக்கு அனுப்புகிறேன். வகுப்புவாரிப் பிரச்சினை முற்றாக அகற்றப்பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள்''.[1].

''இப்பொழுது டாக்டர் அம்பேத்கருக்கு வேறொரு இடையூறு ஏற்பட்டது. ஒதுக்கப்பட்ட (ரிசர்வ்) இடங்கள் மற்றும் கூட்டுத் தொகுதிகள் அடிப்படையில் டாக்டர் மூஞ்சே, எம்.சி.ராஜாவுடன் ஓர் உடன்பாடு செய்து கொண்டார். ராஜா,பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்குத் தனது அறிக்கையைத் தந்திமூலம் தெரிவித்தார். அதில் டாக்டர் மூஞ்சேயுடனான தனது ஒப்பந்தத்தின் விவரங்களைக் கொடுத்திருந்தார். இந்த ஒப்பந்தம் டாக்டர் அம்பேத்கரை ஓர் இக்கட்டான நிலையில் வைத்துவிட்டது. ராஜாதான் டாக்டர் அம்பேத்கருக்குத் தந்தி மூலம், தனித்தொகுதிகளுக்கான அவருடைய கோரிக்கைக்கு ஆதரவு தெரிவித்திருந்தார் என்பது நினைவுகூரத் தக்கது. தங்களுடைய துன்பங்களை காந்தி அறியவில்லையென்பது தெளிவு என்றும், எனவேதான் அவர், கூட்டுத் தொகுதிகளை விரும்பாத தாழ்த்தப்பட்ட மக்களின் மீது திணிப்பதற்கு முயன்றுள்ளார் என்றும் ராஜா அதில் குறிப்பிட்டிருந்தார். ஆரம்பத்தில் ராஜா

1. தி பாம்பே கிரானிகிள், ஏப்ரல் 7, 1932.

கட்சி, ரிசர்வ் இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகளுக்காகத் தான் நின்றார், ஆனால் பின்னர் அவர் தன்நிலையை மாற்றிக் கொண்டார். மத்திய சட்டப்பேரவையில், ராஜாதான் தாழ்த்தப்பட்ட வர்க்கப் பிரதிநிதியாவார், ஆனால் வட்டமேசை மாநாட்டுக்கு அவர் அழைக்கப்படவில்லை. ஒருவேளை, வட்டமேசை மாநாட்டிற்குத் தான் அழைக்கப்படாமல் விடுபட்டுப்போனதால் வருத்தமடைந்து, அல்லது தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைப் பிரதி நிதித்துவப்படுத்தும் உரிமையை காந்தி தானே வரித்துக் கொண்டதால் மிகவும் மனக் கலக்கமடைந்ததினாலோ, அவர் கூட்டுத்தொகுதிகள் கருத்தைக் கைவிட்டு, தனித் தொகுதிகளை வற்புறுத்தினார். ஆனால் தற்பொழுது அவர் மீண்டும் பழைய கோரிக்கைக்கே மாறிச் சென்றுவிட்டார்''.[1].

## ''தவறான தகவல்''

திரு.கவாய், விரைவிலேயே, தாழ்த்தப்பட்ட வர்க்க உறுப்பினர்களுக்கு கீழ்வரும் அறிக்கையை விடுத்தார். தாழ்த்தப் பட்ட வர்க்கங்களின் சார்பில் இந்திய வாக்குரிமைக் கமிட் டிக்குக் கோரிக்கை மனுக்களை சமர்ப்பித்த தனிநபர்கள் அல்லது அமைப்புகளுடன் தொகுதிகள்முறை சம்பந்தமான பிரச்சினையை அக்கமிட்டி விவாதிக்க முடியாது என்று சில தவறான தகவல் உங்களுக்கு வினியோகம் செய்யப்படுகிறது, இது மிகவும் தவறான தாகும். ஏனெனில், அறிக்கை 2 ல் தாழ்த்தப்பட்டவர்களின் பிரதி நிதித்துவம் என்ற தலைப்பின்கீழ் கமிட்டியினால் அனுப்பப்பட்ட கேள்வித்தாளில், சட்டப்பேரவையில் மேற்படி சமூகத்திற்குப் பிரதிநிதித்துவம் பெறுவதற்கு ஒருவர் என்ன திட்டவட்டமான பிரேரணைகளை ஆலோசனை கூறவேண்டும் என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

## மாதிரி பதில்கள்

மேலும், மற்றவர்கள் தயாரித்த மாதிரி பதில்கள் எப்படி யிருந்த போதிலும், தங்களுடைய சொந்த மாகாணங்கள் சம்பந்தமாகத் தமது சொந்தக் கருத்துக்களை அனுப்புமாறு நமது அமைப்புகளுக்கு அறிவிக்குமாறு நான் ஆலோசனை

1. அதே அறிக்கை, பக்கம் 195-196

கூறுகிறேன். 1931 டிசம்பர்-1ல் பிரதம மந்திரி, இந்தியாவின் அரசியல் சாஸனத்தில் மாற்றங்கள் வரும் என்று கூறியுள்ளதை முன்னிட்டு மாகாணங்களுக்குப் பூரண மாகாண சுயாட்சி வழுங்கப்படும். நமது சமூகமும் காலத்திற்கு ஏற்ப நடந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்; எனவே, மேலே குறிப்பிட்ட பிரதம மந்திரியின் அறிக்கை வெளியிடுவதற்கு முன்னால் நாம் செய்த முடிவை நாம் மறு ஆய்வு செய்ய வேண்டும்''[1].

வாக்குரிமைக் கமிட்டி வைசிராய் மாளிகையில் கூடியது. தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சார்பில், டாக்டர் அம்பேத்கர், இந்திய தண்டனை சட்டத்திலா அல்லது வருங்கால அரசியல் சாஸனத்திலோ, தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் அடிப்படை உரிமைகளை சுதந்திரமாக அனுபவிப்பதினின்றும் தடைசெய்த, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு எதிரான தூண்டுதல் அல்லது பகிஷ்காரத்தை ஏற்பாடுசெய்வதற்கு தண்டணை விதிக்கப்படும் என்பதை சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று வாதித்தார். இந்த ஆலோசனையை வாக்குரிமைக் கமிட்டி ஏற்றுக் கொண்டது.

ராஜா-மூஞ்சே ஒப்பந்தம் பற்றிய செய்தி வெளியானவுடனே, வங்காள மற்றும் அஸ்ஸாம் தாழ்த்தப்பட்ட வர்க்கத் தலைவர்கள், ரிசர்வ் இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகள் முறைக்கு ராஜா மாறிச் சென்றுள்ளதைக் கண்டனம் செய்தார்கள்; அதோடு, டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த கோரிக்கைகளுக்கு ஆதரவு தெரிவித்தனர். வங்காள தாழ்த்தப்பட்டவர் அமைப்பின் தலைவர் எம்.பி.மாலிக் எம்.எல்.ஏ, உ.பி. ஆதி இந்து சங்கத்தின் தலைவர், அகில அஸ்ஸாம் தாழ்த்தப்பட்டவர் சங்கத்தலைவர், பஞ்சாபின் ஆதி-தர்மமண்டல் தலைவர், டில்லி தாழ்த்தப்பட்டவர் உதவிக் கழகத் தலைவர் முதலிய அனைவரும் ராஜாவைக் கண்டனம் செய்து, டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த கோரிக்கைகளுக்கு ஆதரவு தெரிவித்தனர்.

1932 ஏப்ரலில்தான் நாசிக் சத்தியாகிரஹம் மூன்றாவது கட்டத்தில் பிரவேசித்து, அதனுடைய தலைவர்கள் பாவ்ராவ் கெய்க்வாட்டும் ரங்காம்பேயும் கைதுசெய்யப்பட்டனர். அவர்களது கைது பற்றிய செய்தி, அதே நாளில், அதாவது 1932 ஏப்ரல் 14 ல் டாக்டர் அம்பேத்கருக்குத் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது.

1. தி பாம்பே கிரானிகிள், பிப்ரவரி 27 ,1931

வாக்குரிமை கமிட்டியின் இந்து உறுப்பினர்கள் சிந்தாமணி, பார்க்கலே, மற்றும் தாம்பே ஆகியவர்கள் தனித்தொகுதிகளுக்கான தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் கோரிக்கையைக் கடுமையாக எதிர்த்ததானது, அவர்களுக்கும் டாக்டர் அம்பேத்கருக்கும் இடையில் மனக்கசப்பை ஏற்படுத்தியது. அவர்கள் டாக்டர் அம்பேத்கருடன் பேசும் நிலையில் கூட இல்லை. அத்தகைய பதற்றமான சூழ்நிலையில், டாக்டர் அம்பேத்கர், தனது செயலாளரிடம், ஏக காலத்தில் இருவித நிலைமைகளுடன் தன்னால் சமாளிக்க முடியாத தற்கு வருந்துவதாகக் கூறினார். ஆலயப்பிரவேசப் பிரச்சினையைக் காட்டிலும் அரசியல் உரிமைகள் பிரச்சினையைக் காட்டிலும் அரசியல் உரிமைகள் பிரச்சினை கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்தது என்று அவர் கருதினார்; எனவே, முழுமூச்சுடன் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ள அந்தப் பணியிலிருந்து விலகிச் செல்வது விவேகமற்றதும் அபாயகரமானதுமாகும் என்று அவர் கருதினார்.

சிம்லாவிலிருந்து எழுதிய ஒரு கடிதத்தில் டாக்டர் அம்பேத்கர், வகுப்புவாரிப் பிரச்சினையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி தனது முடிவைத் தெரிவிப்பதற்கு முன்னால், அவரைப் போய்ப் பார்ப்பது மிகவும் அவசியமாகும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். எனவே, அவர் காரணங்களை வெளிப்படுத்தாமல், உத்தேசப் பிரயாணத்திற்குப் பணம் திரட்டுவது சாத்தியமா என்று பார்க்கும் படி தனக்கு நம்பகமான சகாக்களிடம் கேட்டுக்கொண்டார். அப்பொழுது லண்டனிலிருந்த ஆகாகானுக்கும் அவர் எழுதி, இந்த விஷயத்தில் அவருடைய ஆலோசனையையும் கோரி, வகுப்புவாரிப் பிரச்சினை சம்பந்தமாகப் பிரதம மந்திரியின் முடிவின் சாத்தியப் பாடும் மற்றும் அதன் உத்தேசத் தேதி குறித்தும் அவரிடம் கேட்டுக் கொண்டார். அதே வாரத்தில் எழுதிய மற்றொரு கடிதத்தில் டாக்டர் அம்பேத்கர், வாக்குரிமைக் கமிட்டியின் இந்து உறுப்பினர் களின் போக்கு குறித்துத் தன் அருவருப்பைக் கொட்டியிருந்தார். அவர்களுடைய மனப்போக்கைத் தான் வெறுப்பதாகக் குறிப்பிட்ட அவர், அதனால் அவர்களை அது, அவர்களுடைய சொந்த முகாமிலேயே சுயநலக்காரர்களாகவும் வலியத் தாக்கும் போக்கு உடையவர்களாக்குகிறதென்றும் அதே பொழுதில் வெளியில் கோழைத்தனமாகவும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை உடையவர்களாகவும் ஆக்குகிறது என்று கூறினார். அவர்களது சுயநல மற்றும் சிந்தனையற்ற போக்கும் தன்னை முற்றிலும் அருவருப்படையச்செய்கிறது என்றும் அதனால் இந்து சமுதாயத்

திலிருந்து வெளியே இருப்பதற்குத்தான் முயலப் போவதாகவும் அவர் எழுதினார். அவர் மன உளைச்சல் மற்றும் உடல் உளைச்ச லின்கீழ் செயல்பட்டு வந்தார். அதோடுகூட, அவர் வயிற்றுப் போக்கினாலும் சிரமப்பட்டு வந்தார்.

ஏப்ரல் மாதத்தில் வங்காள நாமசூத்திர சங்கம் கல்கத்தா ஆல்பர்ட் இன்ஸ்டிடியூட் ஹாலில் தனது 14 வது ஆண்டு மாநாட்டை நடத்தியது. டாக்டர் காளிசரண் மண்டல தலைமை வகித்தார். மாநாடு டாக்டர் அம்பேத்கரின் கோரிக்கைகளை ஏகமனதாக ஆமோதித்தது. டாக்டர் அம்பேத்கரின் நிலையை நியாயமற்ற முறை யில் விமர்சனம் செய்த பத்திரிகைகளைக் கண்டித்தது. தங்களின் பிரச்சினை சம்பந்தமாகக் காங்கிரசின் போக்கு அனுதாபமற்ற முறை யிலும் நடைமுறை சாத்தியமற்ற முறையிலும் இருப்பதாகவும் கூறியது.

வாக்குரிமைக் கமிட்டி, தனது பணியை 1932 மே 1ல் முடித்துக் கொண்டது; ஆனால், லார்டு லோதியன், சில ஜீவாதாரமான அம்சங்கள் பற்றி அவருடன் விவாதிக்க விரும்பியதால், டாக்டர் அம்பேத்கர் மேற்கொண்டு ஓரிரு நாட்கள் கூடுதலாகத் தங்கினார். வாக்குரிமைக் கமிட்டி விரிவான ஆலோசனைகளுடன் கூடிய தனது அறிக்கையைத் தயார் செய்திருந்தது, அதில் வாக்குரிமையைத் திருத்துவது மாகாண மற்றும் மத்திய புதிய சட்டப் பேரவை களுக்குத் தொகுதிகள் விநியோகம் மற்றும் எல்லை நிர்ணயம் செய்தல் முதலியவை அடங்கியிருந்தன. கமிட்டியின் இந்து உறுப் பினர்களுடன் டாக்டர் அம்பேத்கர் கருத்து வேறுபாடு கொண்ட தால் அவர் கமிட்டிக்கு ஒரு தனிக் குறிப்பை சமர்ப்பித்தார். கமிட்டியின் மிக முக்கியமான முடிவுகளில் ஒன்று தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் என்ற சொல்லின் திட்டவட்டமான (துல்லியமான) விளக்கம் சம்பந்தமானதாகும். இந்திய சட்டப் பேரவைக் கமிட்டி, 1916 ல் தனது முடிவில், இந்திய அரசின் கீழான கல்வித்துறைக் கமிஷனர் சர்.ஹென்ரி ஷார்ப்பும், சவுத்பரோ வாக்குரிமைக் கமிட்டியும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களை பூர்வ குடிகள் அல்லது மலைவாழ் பழங்குடி மக்களுடனும் கிரிமினல்கள் அல்லது மற்றவர்களுடனுடன் ஒன்றாக இணைந்திருந்தது. ஆனால் தற்போது லோதியன் வாக்குரிமைக் கமிட்டி தீண்டப்படாதவர் களுக்கு மட்டுமே அந்த சொல் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது தங்களுடைய கருத்து என்று கூறியது. இது தெளிவாக டாக்டர் அம்பேத்கரின் வெற்றியாகும். ஏனெனில், கமிட்டிக்கு சமர்ப்பித்திருந்த தனது குறிப்பில் தீண்டாமை என்பதன் சோதனை

''அதனுடைய கருத்து ரீதியான அர்த்தத்தில் பிரயோகிக்கப்பட வேண்டுமென்றும், ஏனெனில், தீண்டாமை என்ற சொல்லின் நேரடியான பொருள் இப்பொழுது இல்லாமல் போய்விட்டது''.[1].

வகுப்புவாரிப் பிரச்சினை சம்பந்தமான முடிவு அறிவிக்கப் படுவதற்கு முன்னால் பிரிட்டிஷ் பிரதம மந்திரியையும் இதர கேபினட் அமைச்சர்களையும் சந்திப்பதற்காக, டாக்டர் அம்பேத்கர் மே 26 ல் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுச் சென்றார். எஸ்.எஸ். கோன்டி ரோஸா என்ற இத்தாலியக் கப்பலில் அவர் புறப்பட்டார். அவருடைய புறப்பாடு வெளியில் யாருக்கும் தெரியாமல் ரகசியம் காக்கப்பட்டது. ஏனெனில், தனது புறப்பாட்டை யாருக்கும் தெரியப் படுத்தவேண்டாம் என்று அவர் தனது நண்பர்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். பம்பாய் கிரானிகள் பத்திரிக்கையின் ஒரு நிருபர் ஓர் ஆதாரத்திலிருந்து தகவல் சேகரித்து, டாக்டர் அம்பேத் கரின் புதிய முயற்சியைப்பற்றித் தகவல் வெளியிடுகின்ற வரையில் இது யாருக்கும் தெரியாது. டாக்டர் அம்பேத்கர் முதல் வகுப்பில் பிரயாணம் செய்தார், மிகவும் குறைவான மூட்டைமுடிச்சுகளே கொண்டிருந்தார். 1932 ஆகஸ்டு இறுதியில் திரும்புவதற்குத் திட்டமிட்டிருந்தார்.

ராஜாவின் கண்ணோட்டத்தில் ஏற்பட்ட திடீர் மாற்றம் டாக்டர் அம்பேத்கரை மிகவும் கவலைக்குள்ளாக்கியது என்பது உண்மையே. லோதியன் கமிட்டியின் தீர்ப்பும் அவருக்கு அவ்வளவு சாதகமானதாக இருக்கவில்லை. ஒரு பருவத்தில் இது ஒரு தடவை ஏற்பட்ட தருணம் என்று அவர் நினைத்தார். எனவே அவர் தன்னாலான யாவற்றையும் செய்வது என்றும் முடிவு செய்தார். லண்டனில் தனது பிரசன்னம், தனது கோரிக்கை களுக்கு வலுசேர்க்கும் என்று அவர் நம்பிக்கையுடனிருந்தார். லண்டனுக்குச் செல்லும் வழியில், நாட்டுக்கு எழுதிய கடிதங்களில், தனது அச்சகத்தின் பாதுகாப்பு பற்றி வேதனைமிக்க கவலை தெரிவித்தார், காங்கிரஸ் முகாமைச் சேர்ந்த சிந்தனையற்ற சாதி இந்துக்களால் அது எரிக்கப்பட்டுவிடுமோ என்று அவர் அச்சம் கொண்டார். ஒரு புதிய அறையை ஏற்பாடு செய்யும்படியும், புதிய புத்தகங்கள் அடங்கிய பெட்டிகளை அகற்றும்படியும், அல்லது அவற்றைப் பாதுகாப்பான வேறிடத்தில் வைக்கும்படியும் சிவதர்க் கருக்கு அவர் ஆலோசனை கூறினார். தனது புத்தகங்களின்

1. அதே அறிக்கை, பக்கம் 196-198.

பாதுகாப்பு பற்றிய சிந்தனை அவரைத் தொடர்ந்து அலைக்கழித்து வந்தது, 1932, ஜுன் 7 ல் டாக்டர் அம்பேத்கர் லண்டன் போய்ச் சேர்ந்தார். தனது பணித் திட்டம் சம்பந்தமாக அவர் ஒரு வார காலத்தில் ஒவ்வொரு பெரிய பிரிட்டிஷ் அதிகாரியையும் அனைத்துக் கேபினட் மந்திரிகளையும் சந்தித்து,தனது வாதத்தை முழு ஆற்றலுடன் எடுத்துரைத்தார். தட்டச்சு செய்யப்பட்ட இருபத்தியிரண்டு பக்கங்களைக் கொண்ட ஒரு மனுவை அவர் பிரிட்டிஷ் அமைச்சரவையிடம் சமர்ப்பித்தார். ஆனால், அவருடைய முயற்சிகளின் பலன் குறித்து அவரால் அப்பொழுது எதுவும் கூறமுடியவில்லை.விவாதங்கள் நடைப்பெற்றுள்ளன, ஒரு மிகவும் உயர் மட்டத்தில் முடிவுகள் எடுக்கப்படுகின்றன; பம்பாய், சென்னை மற்றும் மத்திய மாகாணங்களில் உள்ள தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் தனித்தொகுதிகளைப் பெறுவார்கள் என்று ஊகிக்கப்படுகிறது. ஜுன் 14 ம் தேதிக்குள், தனது லட்சியத்தை அடைவதற்கு சாத்தியமான யாவற்றையும் அவர் செய்துவிட்டார், எனவே நாடு திரும்ப விரும்பினார். ஆனால் அவருடைய ஆதரவாளர்களில் சிலர், அவர் அங்கு தன் இருப்பை நீட்டிக்கவேண்டுமென்று விரும்பியதால், டிரெஸ்டனில் டாக்டர் மோல்லர் நடத்திவந்த ஒரு ஜெர்மன் சானடோரியத்தில், உடல் நலம்பெறுவதற்காக மேலும் ஒரு மாதம் வாசம் செய்வதென்று முடிவு செய்தார். அதனால், தேவைப்பட்டால் அவர் அங்கிருந்து விரைவாக லண்டனுக்குச் செல்ல முடியும். டாக்டர் அம்பேத்கருக்குப் பணம் தேவைப்பட்டது, காலவரையின்றி அவர் அங்கு தங்க நேரிட்டதால் உடல்நலம் மற்றும் செலவுகள் பற்றி அவருக்குக் கவலை ஏற்பட்டது. எனவே, அவர், சாத்தியப்படின் தனக்குக் கொஞ்சம் பணம் ஏற்பாடு செய்யும்படி, சிவதர்க்கரைக் கேட்டுக் கொண்டார்.

ஜுலை மத்தியில் டாக்டர் அம்பேத்கரின் உடல்நலம் தேறியது, டிரெஸ்டனை விட்டுப் புறப்பட்டு பெர்லினில் ஒருவார காலம் தங்கினார், அப்பொழுது அங்கு ஹிட்லர் எழுச்சி பெற்று வந்த நிலைமை ஏற்பட்டிருந்தது. தான் வியன்னாவுக்குச் சென்று அங்கு 'கங்கா' என்ற கப்பலில் நாடு திரும்புவதாக பெர்லினில் இருந்து அவர் எழுதினார். ஆனால் இந்த தடவை, தனக்கு வரவேற்பு உபசாரம் போன்ற சம்பிரதாய ஏற்பாடுகள் மூலம் தன்னைத் தொந்தரவுக்கு உள்ளாக்கக்கூடாது என்று அவர் கூறினார். அதுதான் மனித இயல்பு. ஒருவர் தனக்கு இல்லாதது குறித்து வாட்டமுறுவார்.டாக்டர் அம்பேத்கர் தனது மாணவப் பருவத்தில் வெளிநாடுகளுக்குச் சென்றபோது, சமயத்தில் அவரது புறப்பாடு மற்றும்

வருகை குறித்து யாரும் கவலைப்பட்டதில்லை. ஆனால் வட்ட மேசை மாநாட்டுக்குக் காலத்திலிருந்து அவரது புறப்பாடு மற்றும் வருகை அவரைப் பின்பற்றும் ஆயிரக்கணக்கானவர்களும் மற்றும் பத்திரிக்கையாளர்களும் பொது வழியனுப்பு மற்றும் வரவேற்பு களை ஏற்பாடு செய்யும் சந்தர்ப்பங்களாக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கர், ஆகஸ்டு 17 ல் பம்பாய் வந்து சேர்ந்தார்.''[1].

வகுப்புவாரிப் பிரச்சினை மீதான பிரிட்டிஷ் பிரதம மந்திரி யின் முடிவு 1932, ஆகஸ்டு 17ல் அறிவிக்கப்பட்டது. தீண்டப்படாத வர்கள் சம்பந்தமான முடிவின் பகுதி கீழே தரப்படுகிறது :-

## மாட்சிமை பொருந்திய மன்னர் அரசின் வகுப்புப் பிரச்சினை பற்றிய முடிவு, 1932.

டிசம்பர் 1 ம் தேதியன்று, வட்டமேசை மாநாட்டின் இரண்டாவது அமர்வின் முடிவில் மாட்சிமை பொருந்திய மன்னராட்சியின் சார்பில், பிரதம மந்திரி வெளியிட்ட அறிக்கையில் - இது பின்னர் பாராளுமன்றத்தின் இரு அவைகளாலும் உடனடியாக ஆமோதிக்கப்பட்டது-

1. வகுப்புப் பிரச்சினைகளில் எல்லாத்தரப்புகளுக்கும் ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு உடன்பாட்டை எட்டுவதற்கு இந்தியாவிலுள்ள சமூகங்களால் முடியாமல் போனால் மற்றும் இதற்குத் தீர்வுகாண்பதற்கு மாநாடும் தவறியுள்ள நிலையில், அதன் காரணமாக இந்தியாவின் அரசியல் கூட்ட ரீதியான முன்னேற்றம் தவறிப்போகக் கூடாது என்று மாட்சிமை தங்கிய மன்னராட்சி உறுதிபூண்டுள்ள நிலையில், ஒரு தற்காலிகத் திட்டத்தை வகுத்து, அதைப் பிரயோகிப்பதன் மூலம் இந்த முட்டுக்கட்டையை அவர்கள் அகற்றுவார்கள் என்று தெளிவுபடுத்தப்பட்டது.

2. கடந்த மார்ச் 19 ம் தேதியன்று, மாட்சிமைதங்கிய மன்னராட்சி, சமூகங்கள் உடன்பாடு காண்பதற்குத் தொடர்ந்து தோல்வியடைந்து வருவதானது ஒரு புதிய அரசியல் சாஸனத்தை வகுப்பதற்கான திட்டங்களின் முன்னேற்றத்திற்கு இடையூறாக இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டுள்ள நிலையில் எழுகின்ற சிரமமான மற்றும்

1. அதே நூல், பக்கம் 202-204.

கருத்து வேறுப்பாடுகளுக்குரிய பிரச்சினைகளை கவனமாக மறு ஆய்வு செய்வதில் தாங்கள் ஈடுபட்டுள்ளதாகக் கூறினர். புதிய அரசியல் சட்டத்தின்கீழ் அம்சங்களிலாவது ஒரு முடிவு இல்லாமல், அரசியல் சாஸனத்தை உருவாக்குவதில் மேற்கொண்டு முன் னேற்றம் சாத்தியமில்லை என்று அவர்கள் இப்பொழுது கருது கின்றனர்.

3. எனவே, அதற்கேற்ப, உரியகாலத்தில் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பிக்கப்படவிருக்கிறது. இந்திய அரசியல் சாஸனம் சம்பந்தப்பட்ட பிரோணைகளில் கீழே வகுத்தளிக்கப்பட்டுள்ள திட்டத்தை அமலாக்குவதற்கான விதிகளும் அவற்றில் அடங்கும் என்று மாட்சிமை தங்கிய மன்னராட்சி முடிவுசெய்துள்ளது. இந்தத் திட்டத்தின் நோக்கம், மாகாண சட்டப் பேரவைகளில் பிரிட்டிஷ் இந்திய சமூகங்களின் பிரதிநிதித்துவத்திற்கு ஏற்பாடு செய்வது மட்டுமேயாகும்; மத்திய சட்டப்பேரவையில் பிரதிநிதித்து வத்திற்கான ஆலோசனை கீழே பாரா 20 ல் கொடுக்கப்பட்டுள்ள காரணத்திற்காக ஒத்திவைக்கப்படுகிறது. இந்தத் திட்டத்தின் நோக்கத்தை ஒரு வரம்புக்குட்படுத்துவதால், அரசியல் சாஸனத்தை வகுப்பதற்கு சிறுபான்மையோருக்கு மகத்தான முக்கியத்துவ முடைய இதர பல பிரச்சினைகளுக்கு ஒரு முடிவு எடுக்க வேண்டியது அவசியம் என்பதை உணரவில்லை என்று அர்த்தமாகாது. மாறாக, இந்த முடிவு எடுக்கப்பட்டதற்குக் காரணம் பிரதிநிதித்துவத்தின் வழிமுறை மற்றும் வீதாசாரங்கள் என்ற அடிப்படையில் பிரச் சினைகள் சம்பந்தமாக ஒரு பிரகடனம் வெளியிடப்பட்டுவிட்டால், தேவைப்படும் பரிசீலனை செய்யப்படாத இதர வகுப்புவாரிப் பிரச்சினைகள் சம்பந்தமாக ஒரு நடைமுறை உடன்பாட்டுக்கு வருவதற்கு சமூகங்களுக்கே சாத்தியமாகக் கூடும் என்பதுதான்.

4. தங்களுடைய முடிவை மாற்றும் நோக்கத்துடன் துவக்கப் படுகின்ற எந்தப் பேச்சுவார்த்தைகளுக்கும் தாங்கள் உடந்தையாக இருக்க முடியாது என்று மிகவும் தெளிவாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டும் என்று மாட்சிமை தங்கிய மன்னராட்சி விரும்புகிறது. மற்றும் பாதிக்கப்பட்ட எல்லாத்தரப்புகளாலும் ஆதரிக்கப்படாத, அதை மாற்றியமைப்பதை நோக்கமாகக் கொண்ட எந்த விண்ணப் பத்தையும் கவனத்தில் எடுத்துக் கொள்வதற்கு மாட்சிமை தங்கிய மன்னராட்சி தயாராயிருக்காது. ஆனால் மகிழ்ச்சிகரமான முறையில் ஓர் ஒன்றுபட்ட உடன்பாடு ஏற்படுமேயானால், மாட்சிமை தங்கிய

மன்னராட்சி அதற்கு எதிராக எந்தக் கதவையும் மூடாது என்று மிகவும் விருப்பத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். எனவே ஒரு புதிய இந்திய அரசு சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னால், சம்பந்தப் பட்ட சமூகங்கள், கவர்னர்களின் மாகாணங்களில் ஏதாவது ஒன்றுக்கு அல்லது அதற்கு மேற்பட்டவைகளுக்கு, அல்லது பிரிட்டிஷ் இந்தியா முழுமைக்கும் ஒரு நடைமுறை சாத்தியமான மாற்றுத் திட்டத்திற்கு பரஸ்பரம் உடன்பட்டுள்ளனர் என்று திருப்தியடைந் தால், தற்போது வகுத்தளிக்கப்பட்டுள்ள விதிகளுக்கு பதிலாக மாற்றுத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளும்படி அவர்கள் பாராளுமன்றத் திற்குப் பரிந்துரை செய்வதற்குத் தயாராக இருப்பார்கள்.

5. ஓட்டளிப்பதற்கு தகுதிபெற்றுள்ள ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின்'' உறுப்பினர்கள் ஒரு பொதுத் தொகுதியில் வாக்களிப் பார்கள். ஒரு நீண்ட காலத்திற்கு இந்த வர்க்கங்கள், இந்தமுறை யினால்மட்டுமே சட்டப் பேரவையில் போதிய பிரதிநிதித்துவம் பெறுவது சாத்தியமாகாது என்பதனால், அட்டவணையில் காட்டி யிருப்பது போன்று, பல சிறப்பு இடங்கள் அவர்களுக்கு ஒதுக்கி வழங் கப்படும். இந்த இடங்கள் சிறப்புத் தொகுதிகளிலிருந்தான தேர்தல் மூலம் பூர்த்திசெய்யப்படும். இதில் ஓட்டளிக்கத் தகுதி பெற்றுள்ள ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களை''சேர்ந்த உறுப்பினர்கள் மட்டும் ஓட்டளிக்கத் தகுதிபெற்றிருப்பார்கள். அத்தகைய ஒரு சிறப்புத் தொகுதியில் வாக்களிக்கும் எந்த நபரும், மேலே குறிப் பிட்டது போன்று, ஒரு பொதுத் தொகுதியில் வாக்களிக்கவும் தகுதி பெற்றிருப்பார். தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் மிகவும் அதிக அளவில் உள்ள, தேர்வு செய்யப்பட்ட பிரதேசங்களில் இந்தத் தொகுதிகள் உருவாக்கப்பட வேண்டும் என்பது நோக்கமாகும், மற்றும், சென்னையைத் தவிர அவை மாகாணத்தின் முழுப் பரப்பையும் தழுவியதாக இருக்கக்கூடாது.

வங்காளத்தில், சில பொதுத் தொகுதிகளில், வாக்காளர் களில் பெரும்பான்மையோர் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள் என்பது சாத்தியம் என்று தெரிகிறது. எனவே, அதன்படி, மேற்கொண்டு புலனாய்வு நிலுவையில் இருக்கும் நிலையில் அந்த மாகாணத்தில் சிறப்பு தாழ்த்தப்பட்ட வர்க்கத்தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப் பினர்களின் எண்ணிக்கை நிர்ணயிக்கப்படவில்லை. வங்காள சட்டப்பேரவையில் தாழ்த்தப்பட்டவர்க்கங்கள் 10 இடங்களுக்குக் குறைவில்லாமல் பெறவேண்டும் என்பது நோக்கமாகும்.

ஒவ்வொரு மாகாணத்திலும் சிறப்பு தாழ்த்தப்பட்ட வர்க்கத் தொகுதிகளில் ஓட்டளிக்க உரிமையுள்ளவர்கள் (தேர்தலில் ஓட்டளிக்கத் தகுதி பெற்றிருந்தால்) பற்றிய துல்லியமான விவரம் இறுதியாக இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. இது, ஒருவிதியாக, வாக்குரிமைக் கமிட்டியின் அறிக்கையில் கூறப்பட்டிருக்கும் பொதுவான கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டிருக்கும். ஆயினும் வடஇந்தியாவில் சில மாகாணங்களில், அங்குள்ள பிரத்தியேக நிலைமைகளுக்கு தீண்டாமை பற்றிய பொதுவான அடிப்படைக் கோட்பாட்டைப் பிரயோகப்படுத்துவது சில அம் சங்களில் பொருத்தமற்றதாகப் போகும் மாநிலங்களில் திருத்தம் தேவைப்படக்கூடும்.

இந்த சிறப்பு தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் தொகுதிகள் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு மேல் தேவைப்படும் என்று மாட்சிமை தங்கிய மன்னராட்சி கருதவில்லை. குறிப்பிட்டுள்ள வாக்காளர் பட்டியல் மறு ஆய்வுக்கான பொது அதிகாரங்களின்கீழ் முன்னதாக அவை ரத்து செய்யப்படாமலிருந்திருந்தால் 20 ஆண்டுகளுக்குப் பிறகு அவை முடிவுக்கு வரும் என்று அரசியல் சாஸனத்தில் வகை செய்யப்படும் என்று அவர்கள் கருதுகின்றனர்.''[1].

''இந்தத் தீர்ப்பின்படி, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு மாகாண சட்டசபைகளில் தனி இடங்களும் இரண்டு ஓட்டுகள் உரிமையும் வழங்கப்பட்டன. அதன்கீழ் அவர்கள் தங்களுடைய சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்,மற்றும் பொதுத் தொகுதிகளிலும் ஓட்டளிக்கலாம்.

டாக்டர் அம்பேத்கர் தான் வந்திறங்கியதற்கு அடுத்த நாள் சர்.சாமுவேல் ஹோருக்கு ஒரு மிக முக்கியமான கடிதத்தை எழுதினார். அதில் அவர், தீர்ப்பின் 9 வது பாராவின் கடைசி பாகத்தின் பொருளைத் தெளிவுபடுத்தும்படிக் கேட்டிருந்தார், ஏனெனில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சில உறுப்பினர்களிடையில் அது குறித்து ஓரளவு ஐயப்பாடு இருந்தது, இந்தத் தீர்ப்பில் ஒரு நிபந்தனை சேர்க்கப்பட்டுள்ளதால், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களை இந்தத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளச் செய்வது சாத்தியமல்ல என்றும் அவர் கூறியிருந்தார். ''உங்கள் பதில் வருகின்ற வரையில், இந்தியாவின் அனைத்து பாகங்களிலிருந்தும் தாழ்த்தப்பட்ட

1. எழுத்துக்களும் உரைகளும், தொகுதி 9, பக்கம் 79-82.

வர்க்கங்களிடமிருந்து ஏற்பட்டுவரும் எதிர்ப்புப் புயலை, பொது மக்கள் மத்தியில் (பகிரங்கமாக) வெடிப்பதினின்றும் தடுத்து நிறுத்துவதற்கு நான் முயல்கிறேன்'' என்று தன் கடிதத்தை முடித்திருந்தார்.[1]

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், பம்பாயிலிருந்து 1932, ஆகஸ்டு 23 ம் தேதி செவ்வாய்க்கிழமையன்று, வகுப்புவாரிப் பிரச்சினை குறித்த தீர்ப்பு சம்பந்தமாகப் பின்வரும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்:-

''வகுப்புவாரித் தீர்ப்பு எல்லோருக்கும் எல்லாவற்றையும் கிடைத்திடச் செய்யும் என்று யாரும் எதிர்ப்பார்க்கவில்லை, வட்டமேசை மாநாட்டில், தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சார்பில் நானும் என்னுடைய சகா ராவ்பகதூர் சீனிவாசனும் முன்வைத்த பிரேரணைகளில் சில மாற்றங்களுக்கு நானும் தயாராகத் தானிருந்தேன். ஆனால் வகுப்புவாரித் தீர்ப்பு மாகாண சட்டப் பேரவைகளில் அவர்களுடைய பிரதிநிதித்துவத்தை ஈவிரக்கமின்றி வெட்டிக் குறைத்து, மிகவும் அற்பமான அளவுக்கு சுருக்கிவிட்டது. இதன் விளைவாக, வகுப்புவாரித் தீர்ப்பு அவர்களுக்கு போதிய பிரதிநிதித்துவத்தை மறுத்ததன் மூலம் அவர்களுக்கு மெய்யான மனவருத்தங்களை ஏற்படுத்துகிறது.

இந்தப் பெரும் குறைபாட்டை (கொடுமையை) எவ்விதத்திலும் நியாயப்படுத்த முடியாது. ஆயினும் பஞ்சாப் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குப் பிரதிநிதித்துவ உரிமை மறுக்கப்பட்டிருந்ததுதான் என்னை மிகவும் அதிர்ச்சியடையச் செய்துள்ளது. அந்த மாகாணத்தில் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் நிலைமைகளை நானறிந்துள்ள நிலையில் - ஒப்புநோக்கில் அவர்களுடைய சமூக நிலைமை, வட இந்தியாவின் பிற மாகாணங்களிலுள்ள அவர்களுடைய சக மக்களின் நிலைமையைக் காட்டிலும் மெய்யாகவே படுமோசமாக இருக்கிறது என்பதை நான் தயக்கமின்றிக் கூறுவேன். சிறப்புப் பிரதிநிதித்துவத்திற்கான அவர்களுடைய கோரிக்கை மிகவும் வலுவானதாகும்.

''இந்த மிகவும் தகுதியுடைய வர்க்கத்திற்கு அவர்களுடைய இடத்தை மறுப்பதற்கு (பறிப்பதற்கு) மாட்சிமை தங்கிய

1. அதே நூல், பக்கம் 204

மன்னராட்சிக்கு என்ன காரணங்கள் இருக்கின்றன என்பதை என்னால் பார்க்கமுடியவில்லை. அந்த மாகாணத்தில் மிகவும் கொந்தளிப்பான மற்றும் உரக்கக் குரல் கொடுக்கின்ற பகுதிகளின் கோரிக்கைகளைத் திருப்திப் படுத்துவதற்காக இவ்வாறு இருக்கக் கூடும். இந்தியக் கிறிஸ்தவர்களும் ஆங்கிலோ-இந்தியர்களும் தாழ்த்தப்பட்ட மக்கட் தொகையின் பத்தில் ஒரு பகுதிகூட இல்லாதவர்கள், மற்றும் சமூகக் குறைபாடுகளின் ஒரு சாயல்கூட இல்லாதவர்களுக்கு-முன்னவர்களுக்கு இரு சிறப்பு இடங்களும், பின்னவர்களுக்கு ஓர் இடமும் வழங்கப்பட்டுள்ளதை உணரும் போது இந்த அநீதி மிகவும் அப்பட்டமானதாகிறது. இந்த அநீதிகள், இந்தப் பிரச்சினையைப் பரிசீலனை செய்யவிருக்கிற அகில இந்திய தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சம்மேளனத்தை, இந்தத் தீர்ப்பை ஏற்றுக்கொள்வதினின்றும் தடுத்துவிடும் என்று நான் அஞ்சுகிறேன்''.[1]

இந்தியாவுக்குத் திரும்பிய காந்தி, ஜனவரி 4 ல் கைது செய்யப்பட்டார். தீண்டப்படாத இந்துக்களை அரசியலில் சாதி இந்துக்களுடன் சேர்த்து முடிச்சுப்போடுவதற்கான தனது போராட்டத்தை காந்தி கைவிட்டுவிடவில்லை. மார்ச் தொடக்கத்தில் அவர், எர்வாடா சிறையிலிருந்து பிரிட்டிஷ் கேபினட்டுக்கு எழுதிய கடிதத்தில், தீண்டப்படாத இந்துக்களை சாதி இந்துக்களிடமிருந்து பிரிப்பதை தன் உயிருள்ளவரையிலும் எதிர்ப்பேன் என்று தெரிவித்திருந்தார். தீண்டப்படாதவர்களுக்குத் தனித் தொகுதிகளை வழங்கிய வகுப்பு வாரித் தீர்ப்பு அறிவிக்கப்பட்ட போது, தாழ்த்தப் பட்ட வர்க்கங்களுக்குத் தனித்தொகுதிகள் ரத்துசெய்யப்படா விட்டால், சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கதான் முடிவு செய் துள்ளதாக அவர் அறிவித்தார். இருந்தபோதிலும், கோட்பாட்டு அடிப்படையில் கிறித்தவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும், சீக்கியர் களுக்கும் தனித் தொகுதிகள் வழங்கப்பட்டால், அதற்கு எதிராகத் தான் எதுவும் கூறப் போவதில்லை என்று கூறினார்.

மேலும் ஒரு காரணத்திற்காக, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு தனித்தொகுதிகள் வழங்கப்பட்டால் சாகும்வரை உண்ணாவிரத மிருக்கப் போவதென்ற காந்தியின் முடிவை நியாயப்படுத்த முடியாது''.[2]

1. தி பிரீபிரஸ் ஜெர்னல், ஆகஸ்டு 24, 1932.
2.. அதே நூல், பக்கம் 204-05.

*மன்னராட்சிக்கு என்ன காரணங்கள் இருக்கின்றன என்பதை என்னால் பார்க்கமுடியவில்லை. அந்த மாகாணத்தில் மிகவும் கொந்தளிப்பான மற்றும் உரக்கக் குரல் கொடுக்கின்ற பகுதிகளின் கோரிக்கைகளைத் திருப்திப் படுத்துவதற்காக இவ்வாறு இருக்கக் கூடும். இந்தியக் கிறிஸ்தவர்களும் ஆங்கிலோ-இந்தியர்களும் தாழ்த்தப்பட்ட மக்கட் தொகையின் பத்தில் ஒரு பகுதிகூட இல்லாதவர்கள், மற்றும் சமூகக் குறைபாடுகளின் ஒரு சாயல்கூட இல்லாதவர்களுக்கு-முன்னவர்களுக்கு இரு சிறப்பு இடங்களும், பின்னவர்களுக்கு ஓர் இடமும் வழங்கப்பட்டுள்ளதை உணரும் போது இந்த அநீதி மிகவும் அப்பட்டமானதாகிறது. இந்த அநீதிகள், இந்தப் பிரச்சினையைப் பரிசீலனை செய்யவிருக்கிற அகில இந்திய தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் சம்மேளனத்தை, இந்தத் தீர்ப்பை ஏற்றுக்கொள்வதினின்றும் தடுத்துவிடும் என்று நான் அஞ்சுகிறேன்''.*[1]

இந்தியாவுக்குத் திரும்பிய காந்தி, ஜனவரி 4 ல் கைது செய்யப்பட்டார். தீண்டப்படாத இந்துக்களை அரசியலில் சாதி இந்துக்களுடன் சேர்த்து முடிச்சுப்போடுவதற்கான தனது போராட்டத்தை காந்தி கைவிட்டுவிடவில்லை. மார்ச் தொடக்கத்தில் அவர், எர்வாடா சிறையிலிருந்து பிரிட்டிஷ் கேபினட்டுக்கு எழுதிய கடிதத்தில், தீண்டப்படாத இந்துக்களை சாதி இந்துக்களிடமிருந்து பிரிப்பதை தன் உயிருள்ளவரையிலும் எதிர்ப்பேன் என்று தெரிவித்திருந்தார். தீண்டப்படாதவர்களுக்குத் தனித் தொகுதிகளை வழங்கிய வகுப்பு வாரித் தீர்ப்பு அறிவிக்கப்பட்ட போது, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்குத் தனித்தொகுதிகள் ரத்துசெய்யப்படாவிட்டால், சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கதான் முடிவு செய்துள்ளதாக அவர் அறிவித்தார். இருந்தபோதிலும், கோட்பாட்டு அடிப்படையில் கிறித்தவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும், சீக்கியர்களுக்கும் தனித் தொகுதிகள் வழங்கப்பட்டால், அதற்கு எதிராகத் தான் எதுவும் கூறப் போவதில்லை என்று கூறினார்.

மேலும் ஒரு காரணத்திற்காக, தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு தனித்தொகுதிகள் வழங்கப்பட்டால் சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போவதென்ற காந்தியின் முடிவை நியாயப்படுத்த முடியாது''.[2]

---

*1. தி பிரீபிரஸ் ஜெர்னல், ஆகஸ்டு 24, 1932.*

*2.. அதே நூல், பக்கம் 204-05.*

வர்க்கங்களுக்கான வகுப்புவாரித் தொகுதிகள் திட்டத்தை வாபஸ் பெற்றுக் கொண்டு, பொது வாக்குரிமையின்கீழ் - அது எவ்வளவு விரிவானதாக இருந்தாலும் பரவாயில்லை - தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் பிரதிநிதிகள் பொது வாக்காளர் தொகுதியினால் தேர்ந்தெடுக்கப்படும் முறைக்கு ஒத்துக்கொண்டால் உண்ணாவிரதம் உடனே நிற்கும்.

''உத்தேச உண்ணா நோன்பு அடுத்த செப்டம்பர் 20 ம் தேதி நண்பகலில் சாதாரணமாகத் தொடங்கும் . இதற்கிடையில் மேலே யோசனை கூறப்பட்டுள்ள முறையில் மேற்கண்ட முடிவு மாற்றப்படுமேயானால் உண்ணாவிரதம் தொடங்காது.

''உங்களுக்குப் போதிய அவகாசம் கொடுப்பதற்காக இந்தக் கடிதத்தின் வாசகத்தைத் தந்திமூலம் உங்களுக்குத் தெரிவிக்கும் படி அதிகாரிகளை நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். எப்படியிருந்தபோதிலும் மிகவும் மெதுவான பாதையில் இந்தக்கடிதம் உங்களுக்கு வந்து சேருவதற்கு நான் போதிய அவகாசமளித்திருக்கிறேன்.

''இந்தக் கடிதமும் ஏற்கனவே குறிப்பிட்ட சர்.சாமுவேல் ஹோருக்கு நான் எழுதிய கடிதமும் சாத்தியமான விரைவில் வெளியிடப்படவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். என்னைப் பொறுத்தமட்டிலும் சிறை விதியை நான் கறாராகக் கடைப்பிடித்து வந்துள்ளேன். என்னுடைய விருப்பத்தையோ அல்லது இந்த இரண்டு கடிதங்களின் சாராம்சத்தையோ என்னுடைய சகாக்களான சர்தார் வல்லபாய் படேல் மற்றும் திரு. மகாதேவதேசாய் ஆகிய இருவரைத் தவிர வேறு யாருக்கும் தெரிவிக்கவில்லை. ஆனால், நீங்கள் சாத்தியமாக்கினால், என்னுடைய கடிதங்களால் பொதுஜன அபிப்பிராயம் பாதிக்கப்பட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அதனால்தான் அவை விரைவில் வெளியிடப்பட வேண்டுமென்று நான் வேண்டுகிறேன்.

''நான் எடுத்துள்ள முடிவிற்காக வருந்துகிறேன் ஆனால் சமய சார்பான மனிதன் என்று நான் என்னைக் கருதிக் கொண்டிருக்கும் நிலைமையில் எனக்கு வேறு எந்த வழியும் இல்லை. சர்.சாமுவேல் ஹோருக்கு எழுதிய கடிதத்தில் நான் குறிப்பிட்டுள்ளபடி, இக்கட்டான நிலையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, என்னை விடுதலை செய்வதென்று மாட்சிமை தங்கிய

மன்னராட்சி முடிவுசெய்வதாலும்கூட, என்னுடைய உண்ணா விரதம் நீடிக்கவேண்டியேற்படும். ஏனெனில், வேறு எந்த முறையிலும் அரசின் முடிவை இப்பொழுது எதிர்க்க முடியாது; மேலும் கௌரவமான முறையிலன்றி, வேறு எந்த முறையிலும் என்னுடைய விடுதலையைப் பெறுவதற்கு எனக்கு விருப்பமில்லை.

''என்னுடைய மதிப்பீடு கோணலாக இருக்கக்கூடும் மேலும் தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு தனித் தொகுதிகள் அவர்களுக்கே தீங்கானது என்று நான் கூறுவது முற்றிலும் தவறாகவும் இருக்கக்கூடும். அப்படியெனில் வாழ்க்கை சம்பந்தமான என்னுடைய தத்துவத்தின் பிற பகுதிகள் சம்பந்தமாக நான் சரியாக இருந்திருக்க முடியாது. அப்படியெனில், உண்ணாவிரதத்தின் மூலமான என்னுடைய மரணம் என்னுடைய தவறுக்கான ஒரு பிராயச்சித்தமாக அமையும், மற்றும், என்னுடைய விவேகத்தில் குழந்தைத்தனமான நம்பிக்கை வைத்திருக்கிற எண்ணற்ற ஆண்கள், பெண்களின் மீதுள்ள சுமையை அகற்றுவதாகவும் அமையும். ஆனால் என்னுடைய மதிப்பீடு சரியாக இருந்தால், அது சரியானது தானென்பதில் எனக்கு ஐயப்பாடு எதுவுமில்லை. உத்தேசிக்கப் பட்டுள்ள நடவடிக்கையானது கால் நூற்றாண்டுக்கு மேலாகவே, வெளிப்படையாகப் பெருமளவு வெற்றியுடன் நான் முயன்று வந்துள்ள வாழ்க்கை ஏற்பாடு நிறைவு பெறுவதன் பயனேயாகும்''.

அன்புடன்,
உங்கள் உண்மையுள்ள நண்பன்,
எம்.கே. காந்தி''[1].

தாழ்த்தப்பட்ட வர்க்கங்கள் பிரச்சினை சம்பந்தமாக மகாத்மா காந்தியின் முரண்பாட்டை இது நிரூபணம் செய்கிறது.

இதற்கிடையில் சர்தார் வல்லபாய் பட்டேல், 1932, செப்டம்பர் 6 ல், எர்வாடா சிறையில் காந்திஜியை சந்தித்து அவருடன் இந்தப் பிரச்சினை குறித்து விவாதித்தார். *

''இயல்பாகவே, காந்தியின் அறிவிப்பு நாட்டை அதிர்ச்சியடையச் செய்தது. பொது மக்களின் வேண்டுகோள்கள் காந்திக்கும் அரசுக்கும் விடுக்கப்பட்டன, பத்திரிக்கைகளில் அறிக்கைகள்

1. எழுத்துக்களும் உரைகளும், தொகுதி 1, பக்கம் 82-83.
★ பின்குறிப்பு IV பார்க்கவும்.

வெளியிடப்பட்டன, பிரார்த்தனைகள் நடத்தப்பட்டன. டாக்டர் ராஜேந்திர பிரசாத் போன்ற தலைவர்கள் இந்து மதத்திற்கு சோதனைக் காலம் ஏற்பட்டிருக்கிறது என்று கூறினர். எல்லா இந்து வட்டாரங் களிலும் குழப்பமும் பதற்றமும் ஏற்பட்டன; தாழ்த்தப்பட்ட வர்க்கங் களுக்குத் தங்களுடைய கொடூரமான போக்கு குறித்து சாதி இந்துக் களும், அவர்களின் தலைவர்களும் அவமான உணர்ச்சி பெற்ற தனால் அல்ல, மாறாக, அவர்களுடைய அரசியல் கதாநாயகன் மற்றும் அவர்களுடைய அரசியல் விடுதலை வீரரின் உயிர் பணயம் வைக்கப்படுகிறது என்பதைக் கண்டுதான். இந்துக்களின் குணாம் சத்தில் மரபான சோக முடிவுப் போக்கு மேலோங்கி, அவர்கள் பீதியடைந்தார்கள்.

சிம்லாவிலிருந்து மாளவியா, முட்டுக்கட்டை நிலைமைக்குப் பரிகாரம் காணவும், மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றவும் செப்டம்பர் 19 ல் பம்பாயில் இந்துத் தலைவர்களின் மாநாடு ஒன்றைக் கூட்டுவதற்குத் தான் எண்ணியுள்ளதாக அறிவித்து, அத்தகவலை டாக்டர் அம்பேத்கருக்குத் தந்தி மூலம் தெரிவித்தார். ஏனெனில், மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றுவதற்காக பிரிட்டிஷ் பிரதமரின் தீர்ப்பை மாற்றுவது அவசியமாயிற்று; அதைத் திருத்துவதற்கு டாக்டர் அம்பேத்கரின் ஒப்புதல் தேவைப்பட்டது; தாழ்த்தப்பட்ட வர்க்கங்களுக்கு இந்த சலுகைகளை டாக்டர் அம்பேத்கர்தான் வென்றெடுத்திருந்தார். இயல்பாகவே, அப்போதைக்கு முக்கிய மான தலைவர் அம்பேத்கர்தான் என்ற வகையில் எல்லோருடைய கண்களும் அம்பேத்கரை நோக்கித் திரும்பின. டாக்டர் அம்பேத்கரை தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின் தலைவர் என்று அங்கீகரிக்க மறுத்த தலைவர்களும் பத்திரிக்கைகளும் தற்பொழுது தாழ்த்தப்பட்ட வர்க் கங்களுக்கு அவருடைய தலைமைப் பொறுப்பையும், அவர்களுக் காகப் பேசக்கூடிய பிரதிநிதி என்றும் அங்கீகரிப்பதற்குத் தற்பொழுது நிர்ப்பந்திக்கப்பட்டிருப்பது விதியின் கொடுமையான விளையாட் டேயாகும். அவர் இப்பொழுது நாடு முழுமையின் கவனத்தையும் ஈர்க்கும் குவிமையமாகிவிட்டார்.

காந்தியின் சாகும்வரை உண்ணாவிரத முடிவிலிருந்து தோன்றியுள்ள நெருக்கடியின் முக்கியத்துவத்தையும், அளவையும் டாக்டர் அம்பேத்கர் உணர்ந்தார். ஒரு மிகவும் அபாயகரமான மற்றும் உயிர்க்கொல்லியான ஆயுதத்தை காந்தி, அவரை நோக்கி எறிந்துள்ளார். அந்த ஆயுதத்தைத் திருப்பியடிப்பதற்கு அவர்

தன்னைத் தயார்படுத்திக் கொண்டார்.அவர், புனாவில் பம்பாய் ஆளுநரைப் பேட்டி கண்டார்.''[1].

தனித்தொகுதிகளின் உறுதியான ஆதரவாளரான டாக்டர் அம்பேத்கர், தனித்தொகுதிகள் திட்டத்தைக் கைவிடச் செய்யவும் மகாத்மாகாந்தியின் உயிரைக் காப்பாற்றவும் ''தாழ்த்தப்பட்ட வர்க்கங்களின்'' பிரதிநிதியை இணங்கச் செய்வதற்காக பம்பாயில் இன்று நடைபெறவுள்ள மாநாட்டின் தருணத்தில், ஞாயிறு காலையில் பம்பாயிலிருந்து புனாவுக்கு, பம்பாய் ஆளுநரைப் பேட்டி காண அவசரமாகப் புறப்பட்டது மாநகரத்தில் பெருமளவு ஊகத்தைத் தூண்டிவிட்டது.

காலையில் டாக்டர், புனாவுக்குப் புறப்பட்டுச் சென்றார். பம்பாய் ஆளுநருடன் நீண்ட உரையாடலுக்குப் பின்னர் மாலையில் பம்பாய்க்குத் திரும்பினார்.

''நாளைய மாநாட்டில் நீங்கள் கலந்து கொள்வீர்களா? என்று நமது பிரதிநிதி அவரிடம் கேட்டார்.

இந்தக் கேள்விக்கு பதிலளிக்கையில், டாக்டர் அம்பேத்கர் பண்டிட் மாளவியாவிடமிருந்து தந்தி மூலம் தனக்குக் கிடைத்த தகவலைத் தவிர, மாநாட்டுக்கான முறைப்படியான அழைப்பு இதுவரை தனக்கு கிடைக்கவில்லையென்றும், ஆனால் தனக்கு அழைப்புக் கிடைத்தால், மாநாட்டில் கலந்து கொள்வதற்கு எல்லா முயற்சியும் செய்வேன் என்றும் கூறினார்.

1932, செப்டம்பர் 11 ம் நாள் ஞாயிறு மாலையில் வெளியிட்ட அறிக்கையில் டாக்டர் அம்பேத்கர், தனித்தொகுதிகள்தான் ''தாழ்த்தப்பட்ட மக்களின்'' நலன்களுக்கு ஏற்றது என்ற தனது நம்பிக்கையை மீண்டும் வலியுறுத்தியதோடு, மகாத்மா காந்தி முதலில் தன்னுடைய பிரேரணைகளை முன்வைக்கவேண்டும்; அப்பொழுதுதான் டாக்டர் தன் சொந்தக் கருத்துக்களை வெளியிடுவதற்கு சாத்தியமேற்படும் என்று மீண்டும் வலியுறுத்தினார்''[2].

''இந்த அரசியல் பகட்டு வித்தைகளைப் பற்றி நான் கவலைப்பட மாட்டேன்'', என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

---

1. அதே நூல், பக்கம் 205-206
2. தி பாம்பே கிரானிகல், செப்டம்பர் 11, 1932. (இந்த இதழ் 1932, செப்டம்பர் 12 ம் தேதியதாக இருக்கக்கூடும் - ஆசிரியர்கள்)

அவர் மேலும் கூறினார்,''சாகும்வரை உண்ணாவிரதம் என்ற திரு.காந்தியின் இந்த அச்சுறுத்தல் ஒரு தார்மீகப் போராட்டமல்ல, மாறாக ஒரு அரசியல் நடவடிக்கையேயாகும். ஒரு நபர், தனது அரசியல் எதிராளியுடன், சமத்துவ அடிப்படையில், நேர்மையைப் பாராட்டி, பேச்சுவார்த்தை நடத்துவதற்கு முயன்றால் நான் அதைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் இத்தகைய வழிமுறைகளால் ஒருபோதும் என்னை அசைக்க முடியாது''.

''என்னுடைய முடிவில் மாற்றமில்லை, ஆனால் இந்து சமூகத்தின் நலன்களுக்காக தனது உயிரைப் பணயம் வைத்துப் போராடுவதற்கு திரு.காந்தி விரும்பினால், தாழ்த்தப்பட்ட சாதியினரும், தனது நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் தமது உயிர்களைப் பணயம் வைத்துப் போராடும்படி நிர்ப்பந்திக்கப்படுவார்கள்'', என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

தனித் தொகுதிகளுக்கான தனது கோரிக்கையைக் கைவிடுவதற்கு டாக்டர் அம்பேத்கர் ஒப்புக்கொண்டு, இடஒதுக்கீடுடன் கூடிய கூட்டுத் தொகுதிகளை ஏற்றுக் கொள்வாரேயானால், நிலைமை சுமுகமாக முடியும் என்று திரு.எம்.சி.ராஜா தெரிவித்த கருத்து சம்பந்தமாக, நான் அதற்கு உடன்படமாட்டேன் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்''[1].

பம்பாய் அரசுக்கு திரு.காந்தி, 1932, செப்டம்பர் 15 ல் எழுதிய ஒரு கடிதத்தில், சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போகும் முடிவை ஏன் எடுத்தேன் என்பதற்கான காரணங்களை எடுத்துக் காட்டியிருந்தார். இந்தக் கடிதம் 1932, மார்ச் 21 ல் பத்திரிக்கைகளுக்கு அனுப்பப்பட்டிருந்தது. அந்தக் கடிதத்தில் அவர் இவ்வாறு கூறியிருந்தார்.

''ஒரு குறுகிய காரணத்தையே என்னுடைய உண்ணாவிரதம் நோக்கமாகக் கொண்டது. தாழ்த்தப்பட்ட மக்களின் பிரச்சினை பெருமளவு மதம் சம்பந்தப்பட்ட பிரச்சினையாக உள்ள நிலையில், வாழ்நாள் பூராவும் அதில் கவனம் செலுத்தி வந்துள்ள காரணத்தால், குறிப்பாக அதை என்னுடைய சொந்தப் பிரச்சினையாகவே நான் கருதுகிறேன். இது ஒரு புனிதமான தனிப்பட்ட நம்பிக்கை, இதை நான் கைவிடமாட்டேன்''[1].

1. தி பாம்பே கிரானிகல், செப்டம்பர் 14, 1932.
2. கெய்ர்மோட், தொகுதி 5, பக்கம் 26.

இது சம்பந்தமாகத் தனது நிலையை விளக்கி டாக்டர் அம்பேத்கர், தி டைம்ஸ் ஆப் இந்தியா இதழுக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதம் பின்வருமாறு,

''தி டைம்ஸ் ஆப் இந்தியா'' ஆசிரியர்க்கு,

ஐயா,

தாழ்த்தப்பட்ட மக்களை பாதிக்கும் வகையில் உள்ள வகுப்புவாரித் தீர்ப்பு சம்பந்தமாக, தங்களுடைய கொள்கையை மாற்றிக் கொள்ளும்படி பிரிட்டிஷ் அரசை பொதுமக்கள் நிர்ப் பந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதற்காக மாநகரின் பல்வேறு பகுதிகளில் அவசர நிலைக் கமிட்டியின் சார்பில் சுமார் எட்டு பொதுக் கூட்டங்கள் நடைபெறவுள்ளன என்ற செய்தியை இன்றையப் பத்திரிக்கையில் கண்டு நான் வியப்புற்றேன். தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதித்து வத்திற்காக பிரதம மந்திரியின் தீர்ப்பில் வகை செய்யப்பட்டுள்ள சிறப்பு ஏற்பாட்டுக்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டு வதே இந்தத் தீர்மானத்தின் நோக்கம் என்பது வெளிப்படை.

இந்தப் பிரச்சினை சம்பந்தமாக உயிர்த் தியாகம் செய்யும் தனது முடிவை மகாத்மா காந்தி அறிவித்ததிலிருந்து, சில பிரபல இந்து தலைவர்களுக்கும் எனக்கும் இடையில் பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வருகின்றன நேற்று மாலையில் அவசரநிலைக் கமிட்டியின் ஒரு கூட்டத்தில் கலந்துகொள்ளும்படி எனக்கு அழைப்பு வந்தது, நான் அக்கூட்டத்தில் கலந்து கொண்டேன். நான் அக் கூட்டத்தில் இருந்த வரையிலும் அத்தகைய நிகழ்ச்சி பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. அல்லது பொதுக் கூட்டத்தில் நிறைவேற்ற உத் தேசிக்கப்பட்டுள்ளதாக அத்தகைய எந்தத் தீர்மானம் பற்றியும் எதுவும் பேசப்படவில்லை. நேற்றையக் கூட்டத்தில் அத்தகைய தீர்மானத்தின் நகல் என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவரப் பட்டிருந்தால், நான் அத்தீர்மானத்தின் வாசகத்திற்கு ஆட்சேபம் தெரிவித்திருப்பேன் என்பது மட்டுமன்றி, பேச்சுவார்த்தைகள் நடைபெற்று வரும் சூழ்நிலையில் எத்தகைய பொதுகூட்டங்கள் நடத்தும் யோசனையையும் நான் எதிர்த்திருப்பேன். உண்மையில் எந்தக் கட்சியினாலும் எத்தகைய பிரச்சாரமும் நடத்தப்படக் கூடாது என்று புரிந்து கொள்ளப்பட்டிருந்தது. எனவே இந்த நோக்கமானது எனது கட்சியின் உறுப்பினர்களிடமிருந்து நிறைய நிர்ப்பந்தம்

வந்தபோதிலும் வகுப்புவாரித் தீர்ப்புக்கு ஆதரவாக நிர்ப்பந்தம் வந்த போதிலும், வகுப்புவாரித்தீர்ப்புக்கு ஆதரவாக கூட்டங்கள் நடத்துவதினின்றும் அல்லது பிரச்சாரம் தொடங்குவதினின்றும் என்னைத் தடுத்தது.

அவசரநிலைக்கமிட்டி நடத்துவதாக உத்தேசித்துள்ள இந்தப் பொதுக் கூட்டங்களும், நிறைவேற்றப்படவுள்ள தீர்மானமும் என்னையும் எனது கட்சியையும் ஆத்திரமூட்டும் ஒரு சவாலேயாகும். என்னுடன் பேச்சுவார்த்தைகள் நடத்திவருபவர்கள் எனக்கு எதிராகப் பிரச்சாரம் நடத்த முடியாது; அதே சமயத்தில் பேச்சுவார்த்தைகளின் பயனாக சுமுகமான தீர்வு காண்பதை எதிர்பார்க்கவும் முடியாது. இது போன்ற பேச்சுவார்த்தைகள் நடைபெற வேண்டும், அல்லது நேரடியான மோதல்தான். இரண்டும் ஒருசேரச் செல்லமுடியாது. மற்றையத் தரப்பு பிரச்சாரம் நடத்துவதற்குத் தங்களுக்கு உரிமையிருக்கிறது என்று பிடிவாதம் செய்வார்களேயானால், என்னுடைய கட்சியும் அவர்களுக்கு எதிராகப் பிரச்சாரம் நடத்துவதற்கு முடிவு செய்தால் என்மீது பழிபோடுவதற்கு அவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது.

பி.ஆர். அம்பேத்கர்,
பம்பாய், செப்டம்பர் 18, 1932 "[1]

இந்து தலைவர்களின் மாநாடு நடைபெறவிருந்த தருணத்தில் டாக்டர் அம்பேத்கர் பத்திரிக்கைகளுக்கு வெளியிட்டிருந்த ஓர் அறிக்கையில் பின்வருமாறு கூறியிருந்தார், "என்னைப் பொறுத்த மட்டிலும், தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைகள் எந்தவிதத்திலும் பறிக்கப்படுவதை அனுமதிப்பதற்கு நான் தயாராயில்லை என்ற போதிலும் யாவற்றையும் விவாதிப்பதற்கு நான் தயாராயிருக்கிறேன். வெற்றிடத்தில் ஒரு மாநாடு நடத்துவதிலோ, அல்லது எத்தகைய திட்டவட்டமான புள்ளி விவரங்களின்றி விவாதிப்பதிலோ எத்தகைய பயனுமில்லை." ஆமதாபாத்திலிருந்து வந்திருந்த தாழ்த்தப்பட்ட மக்களின் ஒரு தூதுக் குழுவினரிடமும், மற்றும் இந்தியக் கோடீஸ்வரர் சேத் வால்சந்த் ஹீராசந்துக்கு அளித்த பேட்டியிலும் அவர் வெளிப்படையாக இதைக் கூறினார். காந்தி தனது பிரேரணையை பிரிட்டிஷ் பிரதமருடன் விவாதித்திருக்க முடியும்; அவர் எந்தப் பிரேரணையையும் சமர்ப்பிக்காததால்

1. தி டைம்ஸ் அப் இந்தியா, செப்டம்பர் 19, 1932

இந்த நிலைமைக்கு அவரே பொறுப்பாளியாகவார், என்று அவர்களிடம் அம்பேத்கர் கூறினார்.

பார்வையார்கள், தலைவர்கள் மற்றும் நண்பர்கள் தொடர்ந்து டாக்டர் அம்பேத்கரைக்கண்டு பேசுவதற்கு வந்து கொண்டேயிருந்தனர். முன்னதாக அவ்வாறு பேட்டி காண வந்தவர்களில் ஒருவர் தக்கர். அரசுக் கமிட்டியில் அம்பேத்கருடன் அவர் சேவை புரிந்துள்ளார். இப்பிரச்சினை பற்றிப் பேசி முடிவு காண்பதற்கு அவர் வந்திருந்தார். காலத்தை அறிவாகவும், விலைமதிப்பற்ற ஒன்றாகவும் கருதிவந்தத டாக்டர் அம்பேத்கர், ஒரு முக்கிய கிரிமினல் வழக்கை ஆய்வு செய்வதில் தான் மும்முரமாக ஈடுவட்டுள்ளதாகவும், எனவே தக்கருக்கு எவ்வளவு அவகாசம் வேண்டும் என்றும் கேட்டார். தனக்க ஏறத்தாழ ஒரு மணிநேரம் தேவைப்படும் என்று தக்கர் கூறினார். ஐந்துநிமிடங்கள்தான் தன்னால் கொடுக்க முடியும் என்று அம்பேத்கர் கூறினார். கூடுதல் நேரம் வேண்டும் என்று தக்கர் கேட்டார். பேட்டி சுருக்கமான நேரத்தில் முடிந்தது. டாக்டர் அம்பேத்கர் எழுந்து உள்ளே போனார். ஆயினும் தக்கர் மீண்டும் மறுநாளும் அம்பேத்கரை சந்தித்தார் டாக்டர் அம்பேத்கரை அவர் காரசாரமாகப் பேசினார். ''[1].

இந்துத் தலைவர்களின் மாநாட்டுத் தருணத்தில், அதாவது, 1932, செப்டம்பர் 19 ல் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பத்திரிகைகளுக்கு மற்றொரு அறிக்கையை வெளியிட்டார். அதனுடைய முழுவாசகம் கீழே தரப்படுகிறது-ஆசிரியர்கள்.

''பத்திரிகைகளில் அண்மையில் வெளியிடப்பட்டிருந்த, மகாத்மா காந்தி, சர்.சாமுவேல்ஹோர், பிரதம மந்திரி ஆகியோரிடையிலான கடிதப் போக்குவரத்தைக் கண்டு நான் அதிர்ச்சியடைந்தேன், *அதில் மகாத்மா காந்தி சாகின்ற வரையிலும் பட்டினி கிடக்கப் போவதாகத் தனது உறுதியைத் தெரிவித்திருந்தார்.'' பிரிட்டிஷ் அரசு தானாகவோ, அல்லது பொதுஜன அபிப்பிராயத்தின் நிர்ப்பந்தத்தின் விளைவாகவோ, தமது கருத்தை மாற்றிக் கொண்டு தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு வகுப்புவாரி பிரதிநிதித்துவம் வழங்கும் தமது திட்டத்தை வாபஸ் பெறும் வரையில் உண்ணாவிரதம் இருக்கப்போவதாகவும் அதில் காந்தி கூறியிருந்தார்.

1. எழுத்துக்களும் உரைகளும், தொகுதி 9, பக்கம் 206-207.

★ எழுத்துக்களும் உரைகளும், தொகுதி 9, பக்கம் 77-87 பார்க்கவும்.

*தனது வாழ்வை முடித்துக் கொள்ளப் போவதாக மகாத்மா சபத மேற்றிருப்பதானது எவ்வளவு இக்கட்டான நிலையில் என்னை வைத்திருக்கிறது என்பதை எளிதில் ஊகித்துக் கொள்ளலாம்.*

*வகுப்புவாரிப் பிரச்சினை, ஒப்புநோக்கில் சிறிய முக்கியத் துவமுடைய பிரச்சினைதான் என்று வட்டமேசை மாநாட்டில் கூறிய திரு.காந்தி, அதிலிருந்து எழும் ஒரு பிரச்சினைக்காக அவர் ஏன் தனது உயிரைப் பணயம் வைக்கவேண்டுமென்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. உண்மையில் திரு.காந்தியின் வழியில் சிந்திப்போரின் மொழியைக் கடைப்பிடிப்பதெனில், வகுப்புவாரிப் பிரச்சினையானது இந்திய அரசியல் சாஸனம் எனும் புத்தகத்தின் ஒரு பிற்குறிப்பேயாகும். பிரதான அத்தியாயமல்ல, வட்டமேசை மாநாட்டின் விவாதங்கள் அனைத்தின் ஊடேயும் திரு.காந்தி மிகவும் வலியுறுத்தி வந்த, நாட்டின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக அவர் இந்த மிகமிக தீவிரமான நடவடிக்கையை மேற்கொண்டிருந்தாரேயானால் அது நியாயமாக இருந்திருக்கும். வகுப்புவாரித் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு சிறப்புப் பிரதி நிதித்துவம் வழங்கப்படுவதை தனது வாழ்க்கைக்கு முடிவுகட்டு வதற்கான சாக்காகத் தனிமைப்படுத்தித் திரு.காந்தி தேர்வு செய்ததும் ஒரு வேதனையளிக்கும் ஆச்சரியமான விஷயமாகும். தனித் தொகுதிகள் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு மட்டுமின்றி, இந்தியக் கிறித்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், ஐரோப்பியர்கள் மற்றும் முகமதியர்களுக்கும், சீக்கியர்களுக்கும் கூட வழங்கப்பட்டுள்ளன. முகமதியர்களையும், சீக்கியர்களையும் தவிர, இதர ஒவ்வொரு சாதியினருக்கும், மதப்பிரிவுக்கும் சிறப்பு பிரதிநிதித்துவத்திற்கு காந்தி தனது எதிர்ப்பைத் தெரிவித்துள்ளார். அதே சமயத்தில், திரு.காந்தி, இப்பொழுது, தாழ்த்தப்பட்டவரையும், அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள தனித் தொகுதிகளை வைத்துக் கொள்வதற்கு அனுமதிக்கிறார்.*

*தாழ்த்தப்பட்ட சாதியினரின் பிரதிநிதித்துவத்திற்கான ஏற்பாடுகளின் விளைவுகள் குறித்து திரு.காந்தி வெளிப்படுத்திய அச்சங்கள் முற்றிலும் கற்பனையானது என்று நான் கருதுகிறேன். முகமதியர்களுக்கும், சீக்கியர்களுக்கும் தனித் தொகுதிகள் வழங்கப் படுவதினாலும் இந்து சமுதாயம் பிளவுபட்டுப் போகும் என்று கூற முடியாது. தாழ்த்தப்பட்ட சாதியினர் அல்லாத வர்க்கங்களும் சமூகங்களும் தனித் தொகுதிகள் வழங்கப்படும் ஏற்பாடுகளி னால் அவருடைய மனச்சாட்சி எழுச்சியடையவில்லை. சுயராஜ்ய*

அரசியல் சாஸனத்தின் கீழ் பெரும்பான்மையோரின் கொடுங்கோன் மைக்கு எதிராகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக சிறப்பு தகுதியுள்ள எந்த சாதியினராவது இருக்கிறார்களென்றால் அது தாழ்த்தப்பட்ட சாதியினர்தான் எவ்று பலரும் உணர்ந்திருப்பார்கள் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். உயிர் வாழ்வதற்கான போராட்டத்தில் ஐயத்திற்கிடமின்றி தன்னை நிலைத்திருக்கச் செய்ய முடியாத நிலையில் இந்த சாதியினர் இருக்கின்றனர். அவர்கள் பிணைக்கப்பட்டுள்ள மதம், அவர்களுக்க ஒரு கௌரவமான இடத்தை வழங்குவதற்கு பதிலாக, சாதாரண சமூக உறவுகளுக்குத் தகுதியற்ற குஷ்டரோகிகள் என்று முத்திரைகுத்தி ஒதுக்குகிறது. பொருளாதார ரீதியில் தனது அன்றாட உணவை சம்பாதிப்பதற்கு முற்றிலும் உயர்சாதி இந்துக்களைச் சார்ந்துள்ள வர்க்கமாகும் இது. அதற்கு சுதந்திரமான (சுயேச்சையான) வாழ்க்கை முறை எதுவும் திறந்திருக்கவில்லை. இந்துக்களின் சமூக வெறுப்புணர்ச்சியின் காரணமாக ஒவ்வொரு முன்னேற்றப் பாதையும் அவர்களுக்கு மூடப்பட்டுள்ளது என்பது மட்டுமன்றி, இந்து சமுதாயம் முழுவதிலும், அவர்களுக்கு சாத்தியமான ஒவ்வொரு கதவையும் மூடுவதற்கு ஒரு திட்டவட்டமான முயற்சி இருந்து வருகிறது, இதன் மூலம் தாழ்த்தப்பட்ட சாதியினர் வாழ்க்கைத் தராசில் உயர் வதற்கான எந்த வாய்ப்பையும் அனுமதிக்காமல் இருப்பதற்கு இவ்வாறு செய்யப்படுகிறது. உண்மையில், ஒவ்வொரு கிராமத்திலும் சாதி இந்துக்கள்- அவர்களுக்குள்ளேயே எவ்வளவு பிளவு பட்டிருந்தாலும், ஒரு சாதாரண இந்தியக் குடிமகனின் ஒரு சிறிய மற்றும் சிதறிய அமைப்பாக அமைந்துள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் பாலான எந்த முயற்சியையும் ஈவிரக்கமற்ற முறையில் அழுத்தி ஒடுக்குவதற்கு எப்போதும் நிலையான சதியில் ஈடுபடு கின்றனர்.

இந்தச் சூழ்நிலைகளில், மிகவும் ஒடுக்கப்பட்ட ஒரு சமூகத் திற்கு சட்டப்படியான அரசியல் அதிகாரத்தில் ஓரளவு பங்கு தலையாய அவசியமாகும். அப்பொழுது தான் வாழ்க்கைக்கான போராட்டத்திலும், ஒழுங்கமைந்த கொடுங்கோன்மைக்கு எதிராகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்குமான போராட்டத்தில் வெற்றியடைய முடியும் என்பதை ஒத்துக் கொள்வது சரியாக சிந்திக்கும் எல்லா நபர்களுக்கும் நியாயமானதாகும்.

புதிய அரசியல் சாசனத்தில் சாத்தியமானவரையில் அவர் களுக்கு அதிக அரசியல் அதிகாரத்தைப் பெற்றுத் தருவதற்கு,

தாழ்த்தப்பட்ட மக்களின் நலன் விரும்புபவர் உறுதியாகப் போராடுவார் என்று நான் நினைத்திருக்க வேண்டும். ஆனால் மகாத்மாவின் சிந்தனைப்போக்குகள் நிச்சயமாக என்னால் புரிந்து கொள்ள முடியாதவையாக இருக்கின்றன. வகுப்புவாரித் தீர்ப்பின் கீழ் தாழ்த்தப்பட்ட மக்கள் பெற்றுள்ள மிகவும் குறைவான அரசியல் அதிகாரத்தை அதிகரிப்பதற்கு அவர் முயற்சி செய்வதில்லை என்பது மட்டுமின்றி, அதற்கு மாறாக, அவர்கள் பெற்றுள்ள குறைவான அதிகாரத்தையும் பறிப்பதற்காக, அவர் தன்னுடைய உயிரையே பணயம் வைத்துள்ளார். இது தாழ்த்தப்பட்ட மக்களை அரசியல் வாழ்விலிருந்தே பூரணமாக அப்புறப்படுத்துவதற்கு மகாத்மாவின் முதலாவது முயற்சி அல்ல. சிறுபான்மையோர் ஒப்பந்தம் ஏற்படுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே, தாழ்த்தப்பட்ட மக்களின் கோரிக்கைகளை முறியடிப்பதற்காக மகாத்மா, முஸ்லிம்களுடன் ஓர் உடன்பாடு காண்பதற்கு முயன்றார். முஸ்லிம்கள் முன் வைத்த 14 கோரிக்கைகள் அனைத்தையும் அவர் வழங்கினார். அதற்குக் கைமாறாக தாழ்த்தப்பட்ட மக்களின் சார்பில் நான் முன்வைத்த சமூகப் பிரதிநிதித்துவத்திற்கான கோரிக்கைகளை எதிர்ப்பதில் தன்னுடன் சேர்ந்து நிற்கும்படி அவர் கேட்டுக் கொண்டார்.

அத்தகைய ஒரு கொடுஞ்செயலுக்குத் தாங்கள் பங்காளியாக இருக்கமாட்டோம் என்று மறுத்ததற்காக முஸ்லிம் பிரதிநிதிகளைப் பாராட்ட வேண்டும். மற்றும் முகமதியர்களும் திரு. காந்தியும் ஒன்று சேர்த்து எதிர்த்திருந்தால் அதன் விளைவாக ஒரு பேராபத்தே விளைந்திருக்கும், அவ்வாறு ஏற்படாமல் அவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களைக் காப்பாற்றியுள்ளனர்.

வகுப்புவாரித் தீர்ப்புக்குத் திரு.காந்தியின் எதிர்ப்புக்கான காரணத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. வகுப்புவாரித் தீர்ப்பு இந்து சமூகத்தைப் பிரித்துவிட்டது என்று அவர் கூறுகிறார். ஆனால் அதற்கு மாறாக, இந்து லட்சியத்தின் மிகவும் வலுவான ஆதாரவாளரும், அதனுடைய நலன்களுக்காக தீவிரமாக வாதாடுகின்றவருமாகிய டாக்டர் மூஞ்சே, இந்த விஷயம் சம்பந்தமாக ஒரு முற்றிலும் வேறுபட்ட பார்வையைக் கொண்டிருக்கிறார். லண்டனிலிருந்து திரும்பி வந்ததிலிருந்து அவர் நிகழ்த்திவரும் உரைகளில் டாக்டர் மூஞ்சே, வகுப்புவாரித்தீர்ப்பு தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் இந்துக்களுக்கும் இடையில் எத்தகைய பிரிவினையையும் ஏற்படுத்தவில்லை என்று வலியுறுத்தி வருகிறார். உண்மையில் அவர், தாழ்த்தப்பட்ட மக்களை இந்துக்களிடமிருந்து

அரசியல் நீதியில் பிரிப்பதற்கான என்னுடைய முயற்சியில் என்னை அவர் தோற்கடித்துவிட்டதாக பெருமை பேசிக் கொண்டிருக்கிறார். வகுப்புவாரித் தீர்ப்பு பற்றிய தனது வியாக்யானத்தில் டாக்டர் மூஞ்சே சரியாகவே கூறியிருக்கிறார் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். ஆனால் அதேபொழுதில், அதற்கான பெருமை நியாய மாக டாக்டர் மூஞ்சேயிக்குப் போய்ச் சேரும் என்று நான் நிச்சயமாகக் கூறமாட்டேன். எனவே,ஒரு வகுப்புவாதி என்று அறியப்படாத, தேசியவாதியாக உள்ள மகாத்மா, வகுப்புவாரித் தீர்ப்பை தாழ்த்தப் பட்ட மக்கள் சம்பந்தப்பட்ட வரையில் டாக்டர் மூஞ்சே போன்ற வகுப்புவாதிகள் பார்க்கின்றதற்கு நேர்முரணான முறையில் பார்ப்பது மிகவும் வியக்கத்தக்கதாயிருக்கிறது. வகுப்புவாரித் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட மக்களை இந்துக்களிடமிருந்து பிரிப்பதாக எதையும் டாக்டர் மூஞ்சே உணராத நிலைமையில், அது சம்பந்த மாக மகாத்மா மிகவும் திருப்தி உணர்வைப் பெற வேண்டும்.

வகுப்புவாரித் தீர்ப்பு இந்துக்களைத் திருப்திப் படுத்த வேண்டும் என்பது மட்டுமின்றி, தாழ்த்தப்பட்ட மக்களிடையில் உள்ள கூட்டுத் தொகுதிகளுக்கு ஆதரவாக உள்ள ராவ் பகதூர் ராஜா, திரு. பாலு அல்லது திரு.கவாய் போன்ற தனி நபர்களையும் திருப்திப்படுத்த வேண்டும். சட்டப் பேரவையில் திரு.ராஜாவின் உரத்த கண்டனம் எனக்குப் பெருமளவு வேடிக்கையாக இருந்தது. தனித்தொகுதிகளின் தீவிர ஆதரவாளரும், சாதி இந்துக் கொடுங் கோன்மையை மிகவும் கடுமையாகவும் தீவிரமாகவும் எதிர்ப்பவரும், தற்பொழுது கூட்டுத் தொகுதிகளில் நம்பிக்கை வைத்து இந்துக் களின்பால் நேசம் பாராட்டுகிறார். வட்டமேசை மாநாட்டிற்கு அழைக்கப்படாததால் மிகவும் மறக்கப்பட்டுப் போன நிலையி லிருந்து தன்னை மீட்டெடுத்துக் கொள்ளும் அவரது இயல்பான விருப்பத்தின் விளைவாக எந்த அளவு இந்த மனமாற்றம் ஏற் பட்டுள்ளது என்பதையும் எந்த அளவு அவர் நேர்மையாக இவ்வாறு மாறியுள்ளார் என்பதையும் நான் விவாதிக்க விரும்பவில்லை.

வகுப்புவாரித் தீர்ப்பு சம்பந்தமாக அவரது விமர்சனம் என்ற வகையில் திரு.ராஜா இரண்டு அம்சங்களைக் கூறுகிறார். ஒன்று, தாழ்த்தப்பட்ட சாதியினர், மக்கள் தொகை அடிப்படையில் அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய இடங்களை விடவும் குறைந்த எண்ணிக்கையிலான இடங்களையே பெற்றுள்ளனர். மற்றொன்று, தாழ்த்தப்பட்ட சாதியினர் இந்து அரவணைப்பிலிருந்து பிரிக்கப் பட்டுள்ளார்கள்.

அவருடைய முதலாவது ஆவலாதியை நான் ஒத்துக் கொள்கிறேன்; ஆனால்,வட்டமேசை மாநாட்டில் தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்தியவர்கள் தமது உரிமைகளை விற்று விட்டார்கள் என்று ராவ் பகதூர் குற்றம் சாட்டத் தொடங்கும் போது, இந்தியா மத்தியக் கமிட்டியின் ஓர் உறுப்பினர் என்ற வகையில் திரு.ராஜா என்ன செய்தார் என்பதை நான் சுட்டிக் காட்டுவதற்குக் கடமைப்பட்டுள்ளேன். அந்தக் கமிட்டியின் அறிக்கையில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு சென்னையில் 10 இடங்கள் (மொத்தம் 150); பம்பாயில் மொத்தம் 114 ல் 8 இடங்கள்; வங்காளத்தில் மொத்தம் 200ல் 8 இடங்கள்; உ.பி.யில் மொத்தம் 182 ல் 8 இடங்கள்; பஞ்சாபில் மொத்தம் 150ல் 6 இடங்கள்; பீஹார் மற்றும் ஒரிஸாவில் மொத்தம் 150ல் 6இடங்கள்; மத்திய மாகாணங்களில் மொத்தம் 125 ல் 8 இடங்கள்; அஸ்ஸாமில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் உள்நாட்டு மற்றும் பழங்குடி இனங்களுக்கு மொத்தம் 75 ல் 9 இடங்கள் வழங்கப்பட்டுள்ளன.

இந்த இடங்கள் வினியோகம் மக்கள் தொகையில் எந்தத் தகவுடன் ஒப்பாகிறது என்பதை சுட்டிக்காட்டுவதன் மூலம் இந்த அறிக்கையில் மேலும் சுமையேற்றுவதற்கு நான் விரும்பவில்லை. ஆனால், இது தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு மிகமிகக் குறைவான பிரதிநிதித்துவம்தான் என்பதில் எத்தகைய ஐயமும் இருக்க முடியாது. இந்த இடங்கள் விநியோகத்தை திரு.ராஜா ஒத்துக் கொண்டுள்ளளார். நிச்சயமாக திரு.ராஜா, வகுப்புவாரித் தீர்ப்பை விமர்சனம் செய்வதற்கும், மற்றவர்கள் மீது குற்றம்சாட்டுவதற்கும் முன்னதாக, அவர் இந்திய மத்தியக் கமிட்டியின் உறுப்பினர் என்ற வகையில், தாழ்த்தப்பட்ட மக்களின் சார்பில், எத்தகைய எதிர்ப்பும் இன்றி என்ன ஏற்றுக் கொண்டார் என்பதை மீண்டும் நினைவு படுத்திப் பார்க்கவேண்டும். பிரதிநிதித்துவத்தின் மக்கட் தொகையுடனான தகவு தாழ்த்தப்பட்ட மக்களின் இயற்கையான உரிமை என்றும், மற்றும் அவர்களின் பாதுகாப்புக்கு இது பூரணமாக நிறைவேற்றப்பட வேண்டியது அவசியம் என்றும் அவர் கருதியிருந்தார். அவருக்கு வாய்ப்புக் கிடைத்த போது திரு.ராஜா மத்தியக் கமிட்டியில் ஏன் இதை வற்புறுத்தவில்லை.

வகுப்புவாரித் தீர்ப்பில், தாழ்த்தப்பட்ட சாதியினர் சாதி இந்துக்களிலிருந்து பிரிக்கப்பட்டுள்ளார்கள் என்ற அவருடைய கூற்றை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. தனித் தொகுதிகளுக்கு திரு.ராஜாவுக்கு மனச்சாட்சி பூர்வமான ஆட்சேபனை ஏதும்

இருக்குமேயானால், தனித்தொகுதியில் ஒரு வேட்பாளராக அவர் நிற்க வேண்டுமென்று யாரும் அவரைக் கட்டாயப்படுத்த வில்லை. பொதுத் தொகுதியில் ஒரு வேட்பாளராக நிற்பதற்குள்ள வாய்ப்பும், மற்றும் அதிலேயே அவர் ஓட்டளிப்பதற்கான உரிமையும் இருக்கவே செய்கின்றன. திரு.ராஜா அவற்றைப் பயன் படுத்திக் கொள்வதற்கு அவருக்கு எவ்விதத் தடையுமில்லை. தாழ்த்தப்பட்ட சாதியினரின்பால் சாதி இந்துக்களிடம் பூரண மன மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு உறுதியளிப்பதற்கு திரு.ராஜா உரத்த குரலில் முழக்கமிடுகிறார். அந்த விவகாரத்தைத் தாழ்த்தப்பட்ட சாதியினருக்குத் திருப்தி ஏற்படு கின்ற வகையில் நிரூபணம் செய்வதற்கு அவருக்கு வாய்ப்புக் கிடைக்கும். பொதுத் தொகுதியில் அவர் வேட்பாளராக நின்று தேர்ந்தெடுக்கப்படுவதன் மூலம், அவருடைய வார்த்தையை நம்பு வதற்கு அம்மக்கள் தயாராக இல்லை. தாழ்த்தப்பட்ட மக்களின் பால் அன்பும் அனுதாபமும் கொண்டுள்ள இந்துக்களும் திரு.ராஜாவை சட்டப்பேரவைக்குத் தேர்ந்தெடுப்பதன் மூலம் தமது நேர்மையை நிரூபிப்பதற்கு ஒரு வாய்ப்பைப் பெறுவார்கள்.

எனவே, வகுப்புவாரித் தீர்ப்பு, தனித்தொகுதிகள் வேண்டு வோரையும் கூட்டுத்தொகுதிகளை விரும்புவோரையும் திருப்தி செய்துள்ளது என்று கருதுகிறேன். இந்தப் பொருளில், இது ஏற்கனவே ஒரு சமரஸத்திட்டமேயாகும், அதை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். மகாத்மாவைப் பொறுத்தமட்டிலும், அவர் என்ன விரும்புகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. தனித் தொகுதிகள் முறையை மகாத்மா எதிர்த்த போதிலும், ஒதுக்கப்பட்ட (ரிசர்வ்) இடங்களுடன் கூடிய கூட்டுத் தொகுதிகள் முறையை அவர் எதிர்க்க வில்லை என்று கருதப்படுகிறது. இது ஒரு மொத்தத் தவறாகும். இன்று அவருடைய கருத்துக்கள் என்னவாக இருந்த போதிலும், லண்டனிலிருக்கும்போது, தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு எந்த முறையிலான சிறப்புப் பிரதிநிதித்துவத்தையும்- கூட்டுத் தொகுதிகளாயினும் அல்லது தனித் தொகுதிகளாயினும் சரி- அவர் முற்றாக எதிர்த்தார்.

ஒரு பொதுத் தேர்தலில், வயது வந்தோருக்கு ஓட்டுரிமை அடிப்படையில் ஓட்டளிக்கும் உரிமைக்கு அப்பால், சட்டப் பேரவைகளில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்யும் வகையில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதுவும் வழங்குவதற்கு அவர் தயாராக இல்லை. ஆரம்பத்தில் இந்த நிலையைத்தான் அவர்

மேற்கொண்டார். வட்டமேசை மாநாட்டின் முடிவில் அவர் ஒரு திட்டத்தை எனக்கு யோசனை கூறினார், அதைப் பரிசீலனை செய்வதற்குத் தான் தயாராயிருப்பதாகவும் கூறினார். அந்தத் திட்டம் முற்றிலும் மரபுசார்ந்ததேயாகும், அதற்கு அரசியல் கூட்டம் சார்ந்த அனுமதி எதுவும் கிடையாது, தேர்தல் கூட்டத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தனியொரு இடம்கூட அதன்படி ஒதுக்கப்படவில்லை.

அந்தத் திட்டம் பின்வருமாறு :-

தாழ்த்தப்பட்ட சாதியினரின் வேட்பாளர்கள் பொதுத் தொகுதியில் இதர உயர் சாதி இந்து வேட்பாளர்களுக்கு எதிராகப் போட்டியிடலாம். தாழ்த்தப்பட்ட சாதி வேட்பாளர் எவராலும் தேர்தலில் தோற்கடிக்கப்பட்டால், அவர் தேர்தல் புகார் மனு தாக்கல் செய்து ஒரு தீர்ப்பைப் பெறவேண்டும். அத்தகைய ஒரு முடிவு பெறப்பட்டால், இந்து உறுப்பினர்கள் யாரையாவது ராஜினாமா செய்யும்படி தூண்டுவதற்குத் தான் முயற்சி எடுத்துக் கொள்வதாகவும், அதன் மூலம் ஒரு காலி இடத்தை ஏற்படுத்துவதாகவும் மகாத்மா கூறினார். அப்பொழுது மற்றொரு தேர்தல் நடைபெறும், அதில் தோற்கடிக்கப்பட்ட தாழ்த்தப்பட்ட வேட்பாளர் அல்லது வேறு எந்த தாழ்த்தப்பட்ட சாதி வேட்பாளராவது மீண்டும், இந்து வேட்பாளர்களுக்கு எதிராகத் தனது அதிர்ஷ்டத்தை சோதிக்கலாம். அவர் மீண்டும் தோற்கடிக்கப்பட்டால், அவர், பழையபடி, தான் தீண்டப்படாதவர் என்ற காரணத்தினால் தோற்கடிக்கப்பட்டதாகத் தேர்தல் கமிஷனிடமிருந்து தீர்ப்புப் பெற வேண்டும். இத்தியாதி, இது முடியாமல் தொடர்ந்து கொண்டே போகும். நான் இந்த விவரங்களையெல்லாம் கூறுவதற்குக் காரணமென்னவெனில், கூட்டுத் தொகுதிகளும் ஒதுக்கப்பட்ட (ரிசர்வ்) இடங்களும் மகாத்மாவின் மனச்சாட்சியை திருப்திப்படுத்தும் என்று சில நபர்கள் இப்பொழுதும்கூட எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். மகாத்மாவின் மெய்யான பிரேரணைகள் முன் வைக்கப்படாத வரையில் இந்தப் பிரச்சினையை விவாதித்துப் பயனில்லை என்று நான் ஏன் மீண்டும் வலியுறுத்துகிறேன் என்பதை இது காட்டும்.

ஆயினும், அவரும் அவருடைய காங்கிரசும் தேவையானதைச் செய்வார்கள் என்ற மகாத்மாவின் வாக்குறுதிகளை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை நான் சுட்டிக் காட்டியாக வேண்டும். என்னுடைய மக்களின் பாதுகாப்பு என்ற மிகமுக்கியமான பிரச்சினையை மரபுகளுக்கும் நல்லெண்ணங்

களுக்கும் நான் விட்டுவிட முடியாது. மகாத்மா சாகாவரம் பெற்ற ஒரு மனிதரல்ல, காங்கிரஸ் ஒரு தீயசக்தி அல்ல என்று கருதிக் கொள்வதும் ஒரு நிலையான வாழ்வு இல்லை என்பதாகும். இந்தியாவில் பல மகாத்மாக்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய ஒரே குறிக்கோள் தீண்டாமையை அகற்றுவதும், தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்தி, அவர்களை சுவீகரித்துக் கொள்வதுமாகும். ஆனால் அவர்களில் ஒவ்வொருவரும் அவர்களது லட்சியப் பணியில் தோல்வியடைந்துள்ளனர். மகாத்மாக்கள் தோன்றியுள்ளனர், மகாத்மாக்கள் மறைந்து போயுள்ளனர். ஆனால் தீண்டத்தகாதவர்கள் - தீண்டப்படாதவர்களாகவே இருந்து வந்துள்ளனர்.

சீர்த்திருத்தத்தின் வேகம் பற்றியும் மஹத்திலும், நாசிக்கிலும் நடைபெற்ற தகராறுகளில் (மோதல்களில்) இந்து சீர்திருத்தவாதி களின் நம்பிக்கை பற்றியும் எனக்குப் போதிய அனுபவமிருக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்தை அத்தகைய துரோகத் தனமானவர்களின் பொறுப்பில் விடுவதற்கு அனுமதிப்பதற்கும் தாழ்த்தப்பட்ட மக்களின் நலன் விரும்பிகள் ஒருபோதும் ஒத்துக் கொள்ள முடியாது. சீர்திருத்தவாதிகள், நெருக்கடி தருணங்களில், தமது உற்றார் உறவினர்களின் உணர்வுகளைக் காயப்படுத்துவதைக் காட்டிலும் தமது கோட்பாடுகளுக்கு முழுக்குப் போடுவதையே விரும்புவர். அவர்களால் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு எந்தப் பயனும் இல்லை.

எனவே, எனது மக்களின் பாதுகாப்புக்கு சட்டப்பூர்வமான உத்திரவாதம் வேண்டும் என்று நான் வலியுறுத்துவதற்குப் கடமைப்பட்டுள்ளேன், வகுப்புவாரித் தீர்ப்பை மாற்ற வேண்டு மென்று திரு.காந்தி விரும்புகிறாரென்றால் அவர்தான் தனது பிரேரணைகளை முன்வைக்கவேண்டும். தீர்ப்பின் கீழ் நமக்குக் கொடுக்கப்பட்டுள்ளதைக் காட்டிலும் மேம்பட்ட உத்திரவாதத்தைத் தாங்கள் கொடுப்பதாக அவர் நிரூபிக்கட்டும்.

மகாத்மா, அவர் உத்தேசித்துள்ள தீவிர நடவடிக்கையை நடைமுறையில் நிறைவேற்றுவதைத் தவிர்ப்பார் என்று நான் நம்புகிறேன். நாங்கள் தனித் தொகுதிகளைக் கோரும் போது, இந்து சமுதாயத்திற்கு எந்தவிதத் தீங்கையும் நாங்கள் உத்தேசிக்கவில்லை. தனித்தொகுதிகளை நாங்கள் தேர்வு செய்கிறோமென்றால், எங்களுடைய எதிர்காலத்தை பாதிக்கும் விஷயங்களில் சாதி இந்துக்களின் கனிவான விருப்பத்தை முற்றாக சார்ந்திருக்கச்

செய்வதைத் தவிர்ப்பதற்காகவே நாங்கள் அதைக் கேட்கிறோம். மகாத்மாவைப் போன்றே நாங்களும் தவறு செய்வதற்கு எங்களுக்கு உள்ள உரிமையைக் கோருகிறோம். அந்த உரிமையை அவர் எங்களிடமிருந்து பறிக்கக்கூடாது என்று நாங்கள் எதிர்பார்க்கிறோம். இறுதி மூச்சுவரை உண்ணாவிரதம் இருக்கப்போவதாக அவர் உறுதி பூண்டிருப்பது, இதைக்காட்டிலும் மிகவும் மேம்பட்ட ஒரு லட்சியத்திற்காக அவர் மேற்கொண்டிருக்கலாம். இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கும் இடையிலான கலகங்கள், அல்லது தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் இந்துக்களுக்கும் இடையிலான கலகங்கள் ஆகியவற்றைத் தடுப்பதற்கு அல்லது வேறு எந்த தேசிய லட்சியத்திற்காகவாவது இத்தகைய தீவிர நடவடிக்கையை மேற்கொண்டால் மகாத்மாவின் நேர்மையை நான் புரிந்து கொண்டிருக்க முடியும். இது நிச்சயமாகத் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலைமையை மேம்படுத்தாது. அவர் அறிவாரோ இல்லையோ, மகாத்மாவின் இந்த நடவடிக்கையினால், நாடு முழுவதிலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிராக அவரைப் பின்பற்றுபவர்களை பயங்கர நடவடிக்கைகளில் ஈடுபடும் விளைவையே ஏற்படுத்தும்.

இந்த வகையான நிர்பந்தம் செலுத்துவது தாழ்த்தப்பட்ட மக்களை - அவர்கள் வெளியேறிச் செல்வதற்கு உறுதி பூண்டிருந்தால் - இந்து அரவணைப்புக்கும் கொண்டு வருவதற்கு வெற்றிபெறாது. இந்து சமயத்திற்கும் அரசியல் அதிகாரத்தைப் பெறுவதற்கும் இடையில் தேர்வு செய்யும்படி தாழ்த்தப்பட்ட மக்களை மகாத்மா கேட்டால், தாழ்த்தப்பட்ட மக்கள் அரசியல் அதிகாரத்தைத்தான் தேர்வு செய்வார்கள் என்றும், மகாத்மாவை உயிர்தியாகம் செய்வதினின்றும் காப்பாற்றுவார்கள் என்றும் நான் மிகவும் நிச்சயமாகக் கருதுகிறேன். திரு.காந்தி, அவருடைய நடவடிக்கையின் விளைவுகள் குறித்துப் பொறுமையாக சிந்தித்துப் பார்ப்பாரேயானால், அவர் இந்த வெற்றி பெறுவது தகுதியுள்ளது தானா என்று அவர் காண்பது மிகவும் சந்தேகத்திற்குரியது என்று நான் கருதுகிறேன். மகாத்மா இந்த வழிமுறையைக் கையாள்வதன் மூலம் பிற்போக்கான மற்றும் கட்டுப்படுத்த முடியாத சக்திகளைக் கட்டவிழ்த்து விடுகிறார், மற்றும் இந்து சமூகத்திற்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் இடையில் வெறுப்புணர்வைப் பேணி வளர்க்கிறார் என்பதை கவனிப்பது மேலும் கூடுதல் முக்கியமானதாகும், இதன் மூலம் இந்த இருசாராருக்கும் இடையில் ஏற்கனவே இருந்து வரும் பிளவை மேலும் அதிகப்படுத்துகிறார். வட்டமேசை மாநாட்டில் நான் திரு.காந்தியை எதிர்த்தபோது, நாட்டில் எனக்கு

எதிராக ஒரு பெரிய கூக்குரல் எழுந்தது. தேசிய லட்சியத்திற்கு நான் ஒரு துரோகி என்று தேசியப்பத்திரிகைகள் என்று கூறப்படு பவற்றில் எனக்கு எதிராக சதி செய்யப்பட்டது. என்னுடைய தரப்பிலிருந்து எழுதப்பட்ட கடிதங்கள் வெளியிடப்படாமல் முடக் கப்பட்டன, என்னுடைய கட்சிக்கு எதிரான பிரச்சாரம் உசுப்பி விடப்பட்டது; இதற்காகக் கூட்டங்கள் மற்றும் மாநாடுகளைப் பற்றி மிகைப்படுத்தப்பட்ட செய்திகள் வெளியிடப்பட்டன. அவற்றில் பல கூட்டங்கள் நடத்தப் படவில்லை. தாழ்த்தப்பட்ட மக்களின் அணிகளில் பிளவுகளை உருவாக்குவதற்காக ''வெள்ளித் தோட்டாக்கள்'' தங்கு தடையின்றிப் பயன்படுத்தப்பட்டன. சில மோதல்களும் ஏற்பட்டு, அவை வன்முறையிலும் முடிந்துள்ளன.

இவையெல்லாம் இன்னும் பெரிய அளவில் திரும்ப ஏற்படுவதை மகாத்மா விரும்பவில்லையென்றால் அவர் தனது முடிவை மறுபரிசீலனை செய்து, அழிவுகரமான விளைவுகள் ஏற்படுவதை தவிர்க்க வேண்டும். மகாத்மா இதை விரும்பவில்லை என்று நான் நம்புகிறேன். ஆனால், அவர் இதைத் தடுத்து நிறுத்தா விட்டால், அவருடைய விருப்பங்களையும் மீறி, இந்த விளைவுகள், பகலைத் தொடர்ந்து இரவு ஏற்படுவதைப்போல், தொடர்ந்து ஏற்படுவது நிச்சயம்.

இந்த அறிக்கையை முடிப்பதற்கு முன்னால், இந்த விஷயம் முடிக்கப்பட்டுவிட்டது என்று நான் கருதுகிறேன் என்று கூறுவதற்கு எனக்குத் தகுதியுள்ள போதிலும், மகாத்மாவின் பிரேரணைகளைப் பரிசீலனை செய்வதற்கு நான் தயாராயிருக்கிறேன் என்று பொது மக்களுக்கு நான் உறுதிகூற விரும்புகிறேன். ஆயினும், அவருடைய உயிருக்கும் எனது மக்களின் உரிமைகளுக்கும் இடையில் தேர்வு செய்யும் அவசியத்திற்கு மகாத்மா என்னைத் தள்ளிவிடமாட்டார் என்று நான் நம்புகிறேன். ஏனெனில், என்னுடைய மக்களைக் கையையும் கால்களையும் கட்டி, தலைமுறைக்கு சாதி இந்துக் களிடம் ஒப்படைப்பதற்கு நான் ஒருபோதும் சம்மதிக்கமாட்டேன்.''[1]

''சாகும்வரை பட்டினிக் கிடக்கப்போவதாக திரு.காந்தி செய்துள்ள பிரகடனமானது, தீண்டப்படாதவர்களின் நிலைமை குறித்து மக்கள் கூடுதலாகத் தெரிந்து கொள்வதற்கு வழி செய்துள்ளது, மற்றும், தீண்டப்படாதவர்களின் நெஞ்சங்களில் குமுறிக்

1. ஜனதா, செப்டம்பர் 24, 1932.

கொண்டிருக்கும் உணர்ச்சிகளின்பால் சிறிது காலம் அவர்களுடைய கண்களைத் திறந்துவிட்டுள்ளது. மக்கள் பத்திரிக்கைகள் மற்றும் தேசப்பக்தர்கள், தங்களுடைய சமுதாயத்தின் மீது ஒரு களங்கம் உள்ளது என்பதை உணர்ந்து ஆவேசமடைந்துள்ளனர். ஒவ்வொரு அரசியல் கட்சியிலும், ஒவ்வொரு சமூக வட்டாரத்திலும், ஒவ்வொரு சமய நிறுவனத்திலும் டாக்டர் அம்பேத்கரைப் பற்றி முடிவில்லாமல் பேசப்பட்டு வந்தது. அவருக்குத் தந்திகளும் கடிதங்களும் வந்து குவிந்தன. சில தந்திகளும் கடிதங்களும் அவருடைய உயிருக்கு உலை வைக்கப் போவதாக பயமுறுத்தியிருந்தன. சில, அவருடைய மனச்சாட்சிக்கு வேண்டுகோள் விடுத்தன; சில, அவருடைய நிலைக்கு ஆதரவு தெரிவித்திருந்தன.

இத்தகைய பரபரப்பான சூழலில், ஏற்கனவே அறிவித்தபடி இந்து தலைவர்களின் மாநாடு, 1932, செப்டம்பர் 19, பண்டிட் மதன் மோகன் மாளவியா தலைமையில் இந்தியன் மர்ச்சென்ட்ஸ் சேம்பரின் விசாலமான மண்டலத்தில் நடைபெற்றது. டாக்டர் அம்பேத்கரும் டாக்டர் சோலங்கியும் தலைவரின் நாற்காலிக்கு அருகில் அமர்ந்திருந்தனர். ராஜாவும், டாக்டர் மூஞ்சேயும் கை கோர்த்துக் கொண்டு மண்டபத்திற்கு வந்தனர்.[2]

மாநாட்டில் கீழ்வருபவர்கள் பிரச்சன்னமாயிருந்தனர், ராஜேந்திரப் பிரசாத், சி. இராஜகோபாலாச்சாரி, பண்டிட் குன்ஸ்ரூ, டி.பிரகாசம், டாக்டர் சௌதிராம், சுவாமி சத்யானந்த், திரு.ஆனே, ஜி.ஏ.கவாய், திரு.சிவராஜ், திரு.ஜெகன்னாதன், திரு.தர்மலிங்கம், திரு.மண்டல், சர்.சுனிலால், ஹீரா சந்த் வால் சந்தி, சர்.செதல்வாட், சர்.மத்கோங்கர், சர்.புருஷோத்தம்தாஸ், திரு.தியோதர், திரு.நடராஜன், ராவ்பகதூர் வைத்யா, டாக்டர் தேஷ்முக், தால்வி, சுபேதார், சேத் பிர்லா, திரு.கரண்டிகர், டாக்டர் சாவாக்கர், சிவதர்க்கதர், பி.பாலு, நிகால்ஜி, கமலா நேரு, பேரணி கேப்டன், மஷோன் கேப்டன், சௌ.அவந்திகாபாய், கோகலே, திருமதி அன்ன பூர்ணாபாய் தேஷ்முக், ரத்தன் பென் மேத்தா மற்றும் குமாரி நடராஜன்.

மகாத்மா காந்தியின் உயிரைப் பாதுகாப்பதற்காக, பண்டிட் மதன்மோகன் மாளவியா, கூட்டத்தின் தலைவர், இரு தரப்பின ருக்கும் ஏற்புடைய ஒரு தீர்வைக் கண்டறிய வேண்டும் என்று ஆலோசனை கூறினார்.

2. ஜனதா, செப்டம்பர் 24, 1932, பக்கம் 208.

பண்டிட் மாளவியாவின் வேண்டுகோளின் பேரில், டாக்டர் அம்பேத்கர் பேசுவதற்கு எழுந்தார். அவர் தனது கருத்துக்களை மெய்யான முறையில் எடுத்துரைத்தார். அவர் கூறியதாவது,

''இந்த மாநாட்டின் குறிக்கோளைப் பார்க்கும் போது இத்தகைய ஒரு மாநாட்டைக் கூட்டுவதின் தேவையை என்னால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. எங்களுடைய கோரிக்கைகளை எதிர்ப்பதற்காக, மகாத்மா காந்தி சாகும் வரை உண்ணாவிரதத்தைத் தொடங்கியுள்ளார். மகாத்மா காந்தியின் மதிப்பிற்கரிய உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்று ஒவ்வொருவரும் விரும்புவது இயற்கையே, ஆனால் காந்திஜி, தனது உயிரைப் பணயம் வைப்பதற்கு முன்னால் சில உருப்படியான மாற்றுப் பிரேரணையை சமர்ப்பித்திருக்க வேண்டும். இன்றைய நிலையைப் பரிசீலனை செய்தபின், காந்திஜியிடமிருந்து எத்தகைய தெளிவான மாற்றுப் பிரேரணையும் வராத நிலையில், பேச்சுவார்த்தைக்கான எல்லா முயற்சிகளும் பயனற்றுப் போகும் என்று நான் உணர்கிறேன். மனந்திறந்து கூறுவதானால், முடிவு செய்வதற்கு வேறு ஒன்றுமேயில்லை. காந்திஜியின் மனதில் மெய்யாகவே என்ன இருக்கிறது என்பதை நாம் தெரிந்தாலன்றி, இந்தமாநாட்டில் திரும்பத்திரும்பப் பேசுவதெல்லாம் எத்தகைய பயனையும் அளிக்கப்போவதில்லை. இந்த மாநாடு எவ்வளவு நேரம் விவாதித்தாலும், காந்திஜியின் மனதில் மெய்யாகவே என்ன இருக்கிறது என்பதை நான் தெரிந்து கொள்வதற்கு முன்னால் என்ன தீர்வையும் காண்பதற்கு என்னால் இயலவில்லை. இந்த மாநாட்டைக் கூட்டியவர்களிடமிருந்தோ அல்லது எந்தத் தலைவரிடமிருந்தோ வரும் பிரேரணைகள் என்னைக் கட்டுப்படுத்தாது என்று நான் திட்டவட்டமாக உங்களுக்குக் கூறுகிறேன். மகாத்மா காந்தியின் கருத்தை மட்டுமே நான் பரிசீலனை செய்வேன், அவருடைய பிரேரணை என்ன என்பது எனக்குத் தெரிந்தாலன்றி என்னுடைய அபிப்பிராயத்தை நான் எவ்வாறு கூறமுடியும். அவருடைய பிரேரணையை முதலில் கொண்டு வாருங்கள், பின்னர் அதைப் பற்றி நான் சிந்திக்கிறேன். தொடக்கத்திலேயே நான் தெளிவாகக் கூறுகிறேன். காந்திஜியின் சார்பில் ஒரு தீண்டப்படாத தலைவரால் கொண்டுவரப்படும் எந்தப் பிரேரணையையும் நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். மகாத்மா காந்தியின் உயிரைக் காப்பாற்றுவதற்காக என்று, எனது மக்களின் நியாயமான கோரிக்கைகளை நான் தியாகம் செய்ய (விட்டுக்கொடுக்க) மாட்டேன்''.[1]

1. ஜனதா, செப்டம்பர் 24, 1932.

''1932 செப்டம்பர் 20 ஆம் தேதி திங்கட்கிழமை மதியம் 12 மணிக்கு சாகும்வரையிலான தமது உண்ணாவிரதத்தை மகாத்மா காந்தி ஆரம்பித்தார். இது விஷயம் பற்றி பேச்சு வார்த்தைகள் நடத்த ஒரு குழு அமைக்கப்பட்டது. சர். தேஜ்பகதூர் சாப்ரு, பாரிஸ்டர் ஜெய்கர், பண்டிட் மதன் மோகன் மாளவியா, மதுரதாஸ் வாஸன்ஜி ஆகியோர் உயர் சாதி இந்துக்களின் பிரதிநிதிகளாகக் குழுவில் இடம்பெற்று இருந்தனர். டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கூட்டத்திற்கு அழைக்கப்பட்டார். மாநாட்டில், மகாத்மா காந்தியின் சார்பில் கீழ்கண்ட கருத்துக்களை சர். சன்னிலால் குழுவின் முன் சமர்ப்பித்தார்.

அவை வருமாறு:-

1. தீண்டத்தகாதவர்களுக்கு தனித் தேர்தல் தொகுதிகள் வழங்குவது என்ற முடிவை மகாத்மா காந்தி எதிர்க்கிறார்.
2. கூட்டுத் தேர்தல் தொகுதிகள் மற்றும் இடங்கள் ஒதுக்கப் படுவதற்கு அவருக்கு முழு உடன்பாடு இல்லை. என்றாலும், தேர்தல் தொகுதிகள் ஒதுக்கப்படலாம் என்று பம்பாயில் அனைத்து இந்து மாநாடு ஒரு திட்டவட்டமான முடிவை எடுக்குமாயின் அவர் அதை ஆட்சேபிக்க மாட்டார்; ஆனால் அவர் அந்த முடிவுக்கு உடன்படுகிறார் என்று இதற்குப் பொருள் கொள்ளக்கூடாது. ஏதாவது ஒரு விஷயம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் ஒரு வேளை அவர் தமது சம்மதத்தை அளிக்கலாம்.

மகாத்மா காந்தியின் ஆலோசனைகளுக்குச் செவிமடுத்தபின், டாக்டர் அம்பேத்கர் பேச எழுந்தார். அவரது உரை உண்மையில் மிக ஆற்றல் வாய்ந்ததாகவும், நெஞ்சைத் தொடுவதாகவும் இருந்தது.

''இன்று இந்த இக்கட்டான நிலைமையில் நடைபெறும் பேச்சுவார்த்தைகளில், மற்ற எல்லோரையும்விட நான் மிகவும் விசித்திரமான நிலையில் உள்ளேன். இந்த சமாதானபூர்வமான பேச்சுவார்த்தைகளில் எனது மக்களின் நியாயமான கோரிக்கைகளைப் பாதுகாப்பதற்கு துரதிர்ஷ்டவசமாக நான் ஒரு வில்லனாகக் காட்சியளிக்கிறேன். எனது மக்களின் நியாயமான கோரிக்கைகள் நிறைவேற்றப்படுவதற்காக எந்த அளவுக்கும் கஷ்டப்பட நான் தயாராக உள்ளேன்.

*(ஆ) இந்த இடங்களுக்கான தேர்தல் கூட்டு வாக்காளர்கள் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட இடங்கள் என்னும் ரீதியில் நடைபெறும். இதற்கு ஒரு நிபந்தனை உண்டு; முதல் 10 வருடங் களுக்கு சென்னையில் 18 தனித் தொகுதிகள், பம்பாய் மத்திய மாகாணம் மற்றும் வங்காளத்தில் 10 தனித் தொகுதிகள், அஸ்ஸாமில் 4 தனித் தொகுதிகள், பீஹார், ஒரிஸ்ஸாவில் 5 தனித் தொகுதிகள், பஞ்சாபில் 5 தனித் தொகுதிகள், ஐக்கிய மாகாணத்தில் 12 தனித் தொகுதிகள் ஆகியவற்றில் பொதுத் தேர்தலுக்கு முன் 2 பேர்கள் கொண்ட பட்டியலிலுள்ளவர்களை ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் வாக்காளர்கள் ஒரு முதல் கட்டத் தேர்தலில் தேர்ந்தெடுப்பார்கள்; அதற்குப்பின் கூட்டு வாக்காளர் தொகுதியில் ஒடுக்கப்பட்ட சமூகத் தினரின் சார்பாக இவர்கள் போட்டியிடுவர்.*

## பத்து ஆண்டுகளுக்குப் பின்

*(இ) 10 வருடங்களுக்குப் பின் முதல்கட்ட தேர்தல் முறை முடிவுக்கு வரும்; விதிவிலக்கில்லாமல் எல்லா இடங்களும் கூட்டு வாக்காளர் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட இடங்கள் எனும் அடிப்படையில் நேரடித் தேர்தல் மூலம் நிரப்பப்படும்.*

*(ஈ) கூட்டு வாக்காளர் தொகுதிகள் மற்றம் ஒதுக்கப்பட்ட இடங்கள் என்ற அடிப்படையில் விசேஷப் பிரதிநிதித்துவம் பெறும் உரிமை ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு மேலும் 15 ஆண்டுகளுக்கு நீட்டிக்கப்படும். அந்தக் காலத்திற்குப்பின் ஒடுக்கப்பட்ட சமூகத் தினரது பொது வாக்காளர்களின் வாக்கெடுப்பு அடிப்படையில் விஷயம் தீர்வு செய்யப்படும்.*

*(உ) மத்திய சட்டமன்றத்தின் இரு அவைகளிலும் ஒடுக்கப் பட்ட சமூகத்தினரின் விசேஷப் பிரதிநிதித்துவ உரிமை மக்கள் தொகை விகிதாச்சாரத்திற்கேற்ப அங்கீகரிக்கப்படும்; மாகாணச் சட்ட சபைகள் விஷயத்தில் பின்பற்றப்படும் அதே முறை கையாளப் படும்.*

*(ஊ) குறைந்தபட்சம் ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்காவது வயது வந்த அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்படும். ஒடுக்கப் பட்ட சமூகத்தினரின் வாக்குரிமை மாகாண மற்றும் மத்திய சட்ட சபைகளுக்கு ஒரே மாதிரியானதாக இருக்கும்.*

### பாகம் 2ல் ஸ்தல ஸ்தாபனங்கள்

1. எல்லா மாகாணங்களிலும், எல்லா நகரசபைகள் ஸ்தல ஸ்தாபனங்கள், மாவட்ட மற்றும் தாலுகா அமைப்புகள், கிராம பஞ்சாயத்துகள் மற்றும் பஞ்சாயத்துப் பள்ளிகளின் போர்டுகள் மற்றும் எந்த ஸ்தல அமைப்பிலும் விசேடப் பிரதிநிதித்துவம் பெற ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் அனுமதிக்கப்படுவர்.

2. மத்திய மற்றும் ஸ்தல பொதுப்பணித் துறைகளில் குறைந்தது அவர்களின் மக்கட் தொகை விகிதாசாரப்படி ஒடுக்கப்பட்ட சமூகத் தினருக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படுவது உத்தரவாதம் செய்யப் படும்; அதற்காக நிர்ணயிக்கப்படும் வேலைத் தகுதியை அவர்கள் பெற்றிருக்க வேண்டும். ஒதுக்கீட்டைப் பூர்த்தி செய்ய கல்வித் தகுதி களைத் தவிர வேறு விஷயங்களில் உள்ள சட்ட ரீதியான விதிகளைத் தளர்த்துவதற்கு வகை செய்யப்பட வேண்டும்.

3. ஒவ்வொரு மாகாணத்திலும் ஒடுக்கப்பட்ட சாதியினருக்கு கல்வி வசதிகள் செய்து கொடுப்பதற்காக குறைந்தபட்சம் அவர்களின் எண்ணிக்கை விகிதத்திற்கு ஏற்ப, கல்விக்கான மானியத்திலிருந்து நிதி ஒதுக்க வேண்டும்.

4. கல்வி, சுகாதாரம், பொதுப் பணிகளில் வேலைக்கமர்த்தப் படுவது முதலிய விஷயங்களில் தங்கள் நலன் எந்த விதத்திலாவது பாதிக்கப்படும் (அலட்சியப்படுத்தப்படும்)போது, ஆளுநர் அல்லது வைசிராய்க்கு மேல்முறையீடு செய்யும் உரிமைக்கு அரசியல் சாசனத்தில் வழிவகை செய்யப்பட வேண்டும். அத்தகைய அரசியல் சட்டவிதி கனடாவின் அரசியல் சாசனம் பிரிவு 93ல் உள்ளது போன்று அமைய வேண்டும்.[1]

சர். தேஜ் பகதூர் சப்ரு "ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு முதல் கட்ட மற்றும் இரண்டாம் கட்ட வாக்காளர்கள் பற்றி ஒரு தரமான திட்டத்தை வகுத்தார். அதன்பேரில் தமது சகாக்களுடன் கலந் தாலோசித்து ஒரு திட்டத்துடன் 2 மணி நேரத்தில் திரும்ப வருவதாகச் சொன்னார் டாக்டர் அம்பேத்கர். அன்று இரவு திரும்பி வந்து அந்தத் திட்டத்தைத் தாம் ஏற்கப் போவதாக அவர்களிடம்

1. ஜனதா, 1932 செப்டம்பர் 24.

கூறினார்; ஆனால் பிரிட்டிஷ் பிரதமரின் தீர்ப்பு வழங்கியதைவிட அவர்களுக்கு அதிக எண்ணிக்கையில் இடங்கள் வேண்டுமென்று கூறினார்.

தலைவர்கள் அவரது திட்டத்தை ஏற்றுக்கொண்டனர்; ஜெயகர், சப்ரு, பிர்லா, ராஜகோபாலாச்சாரி மற்றும் ராஜேந்திர பிரசாத் ஆகியோர் செவ்வாய் நள்ளிரவில் ரயிலில் புனாவுக்குப் பயணமாயினர்.

செப்டம்பர் 21ம் தேதி மதியம் எரவாடாச் சிறைச்சாலையின் வாயிலுக்கு அருகில் உள்ள முற்றத்திற்கு காந்தி கொண்டு வரப் பட்டார். சர்தார் பட்டேலும் காந்தியின் செயலாளர் பியாரிலாலும் அவரது கட்டிலுக்கு அருகே அமர அனுமதிக்கப்பட்டிருந்தனர். உடனே புனாவுக்கு வரும்படி அன்று மதியம் டாக்டர் அம்பேத்கரை தொலைபேசியில் கேட்டுக்கொண்டார் சப்ரு''.[1]

புனாவுக்கு கிளம்பும் முன் ''டைம்ஸ் ஆப் இந்தியா'' இதழுக்கு 1932 செப்டம்பர் 21ம் தேதி அளித்த பேட்டியில் டாக்டர் அம்பேத்கர் பின்வருமாறு கூறினார்: ''மாநாடு நியமித்த குழுவிற்கு நேற்று இரவு நான் சமர்ப்பித்த யோசனையை என்னுடனும் திரு. ராஜாவுடனும் விவாதிக்க திரு. காந்தி விருப்பம் தெரிவித்ததாக கூறும் தகவல் புனாவிலிருந்து எனக்குக் கிடைத்தது''.

''அழைப்பை நான் ஏற்றுக்கொண்டேன். ஆனால், திரு.ராஜா வுடனும் அவரது கட்சியுடனும் நடக்கும் பேச்சுவார்த்தைக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதை தெளிவுபடுத் தினேன். நான் இவ்வாறு கூறியதற்கான காரணம் என்னவெனில் உண்மையில் சர்ச்சை ஒருபுறம் எனக்கும் எனது கட்சிக்கும் மறுபுறம் திரு.காந்திக்கும் இடையே உள்ளது என்பதால்''

''அத்துடன், ஒடுக்கப்பட்ட சமூகத்தினரிடையே தங்கள் சொந்த நோக்கங்களுக்காக தலைவர்களை உருவாக்கவும் அவர்களது பிரச்சாரத்தின் மூலம் அவர்களை ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் மீது திணிக்கவும் காங்கிரசும் இந்து மகாசபையும் கையாளும் கொள்கையை திட்டவட்டமாக நான் ஏற்க மறுக்கிறேன் என்பதை வெளிப்படுத்த விரும்புகிறேன். இதில் திரு.ராஜா மீது எனக்கு

★ கீர், பக்கம் 210.

.தனிப்பட்ட முறையில் எந்த பிரச்சினையும் இல்லை. இன்று இரவு புறப்படுகிறேன்''.

## எரவாடாவுக்கு மீண்டும் வருகை

புனாவுக்கு இரயிலில் வந்து தேர்ந்த சர் தேஜ்பகதூர் சப்ருவும் திரு.ஜெயகரும் புதன்கிழமை காலை 7.30க்கு சிறைச்சாலையில் திரு. காந்தியைச் சந்தித்து 10 மணிவரை அவருடன் விவாதித்தனர். அவர்கள் கிளம்பும்போது, மறுநாள் காலை மீண்டும் திரும்ப எதிர்பார்ப்பதாக அவர்கள் கூறினர். பேட்டிக்குப்பின் வெளியிடப் பட்ட ஓர் அறிக்கை பின்வருமாறு கூறுகிறது.

> சர் தேஜ் பகதூர் சப்ரு, திரு.ஜெய்கர், திரு.ராஜகோபாலாச்சாரி, பாபு ராஜேந்திரப் பிரசாத் மற்றும் பிர்லா அடங்கிய தூதுக் குழு திரு.காந்தியுடன் இன்று காலை ஒரு நீண்ட பேட்டியை நடத்தியது; நேற்றையப் பேச்சுவார்த்தைகளில் வகுக்கப்பட்டத் திட்டத்தை அவரிடம் விளக்கிக் கூறினர். பேட்டி நம்பிக்கை அளிப்பதாகவே இருந்தது; ஆனால் எதையும் முடிவாகக் கூறவில்லை. இது பற்றி டாக்டர் அம்பேத்கர், திரு.ராஜா உள்ளிட்டநண்பர்களுடன் மேலும் விவாதித்த பின்பே தமது இறுதியான கருத்தை வெளியிடப் போவதாக திரு.காந்தி தெரிவித்தார்.

எனவே, தூதுக் குழுவினர் மேலும் ஒரு நாள் புனாவில் தங்கினர். இந்த யோசனையின் மூலகர்த்தாவாகிய டி.பி.சப்ரு இந்த யோசனை திரு.காந்தி ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கும் என்றும், இவ்வாறு பிரச்சினைக்கு ஒரு தீர்வு கண்டுபிடிக்கப்படும் என்றும் மிகவும் நம்பிக்கையுடன் இருந்தார். தூதுக்குழுவில் சென்றவர்கள் திரு.காந்தி நன்றாகவும் உற்சாகத்துடனும் இருப்தைக் கண்டனர்.[1]

''டாக்டர் அம்பேத்கர் நள்ளிரவு ரயிலில் கிளம்பினார்.* அதே நாளில் ராஜாவும் மாளவியாவும் கூட புனாவிற்கு பம்பாயி லிருந்து கிளம்பினர்.

செவ்வாய்கிழமை காலை, அதாவது 1932 செப்டம்பர் 22ம் தேதி, டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்துடனும் ராஜகோபாலச்சாரியுடனும்

1 டைம்ஸ் ஆப் இந்தியா, 1932 செப்டம்பர் 22.

★ டாக்டர் அம்பேத்கருடன் டாக்டர் சோலங்கி சென்றார் - ஆசிரியர்கள்.

காந்தி பேசினார்; ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு முதல் கட்ட மற்றும் இரண்டாம்கட்ட தேர்தல்களில் சிலவற்றிற்கே கூட்டு வாக்காளர் களின் தேர்வுக்கு விடுவதை தாம் விரும்பவில்லை என்று கூறினர். முதல்கட்ட மற்றும் இரண்டாம் கட்டத் தேர்தல்கள் எல்லாத் தொகுதி களுக்கும் இருக்க வேண்டும் என்றும் அவர் கூறினார். நேஷனல் ஓட்டலில் டாக்டர் அம்பேத்கருக்கு இது எடுத்துக் கூறப்பட்டது. மீண்டும் சூழ்நிலை சூடுபிடித்தது. இதற்கிடையே, ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு தனித் தேர்தல் தொகுதிகளை ரத்து செய்யும்படி கேட்டுக் கொண்டு பிரிட்டிஷ் பிரதமருக்குத் தந்தி அனுப்ப வேண்டு மென்று சில தலைவர்கள் கூறினர்.[1]

அதேநாளில் ''சர்தேஜ் பகதூர் சப்ரும் மற்றும் பாரட்லா ஜெயகரும் டாக்டர் அம்பேத்கரை நேஷனல் ஓட்டலில் சந்தித்து மேற்கண்ட விவரங்களை எடுத்துக் கூறினார்.[2]

''ஆனால் தனித் தொகுதிகளுக்கு மாற்றாக அவருக்கு அளிக்கப் போகின்றவை பற்றி திட்டவட்டமாக நிலையைத் தெளிவுபடுத்தினால் தாம் பிரிட்டிஷ் பிரதமர் தங்களுக்கு அளிக்க முன்வந்துள்ள தனித் தொகுதிகளை இழக்கத் தயாராக இருப்பதாக டாக்டர் அம்பேத்கர் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் அவர் களிடம் கூறினார்; மேலும் தாம் கானல் நீரைத் தேடி ஓடும் மனிதரல்ல என்றும் சொன்னார். சூழ்நிலை சுவாரசியமற்ற நிலையிலிருந்து நம்பிக்கை இழக்கும் கடுமையான நிலைக்குச் சென்றது. ஜெயகர், சாப்ரு மற்றும் மாளவியா ஆகியோர் காந்தியை சிறைச் சாலையில் மதியம் பார்த்தனர். அவர்களைத் தொடர்ந்து பி.பாலு மற்றும் ராஜா அவரைச் சந்தித்து, அவருக்கு திருப்தியளிக்கும் உடன்பாடு ஒன்றை உருவாக்கப் போவதாக அவர்கள் சொன்னார்கள்.

பின் மாலைப் பொழுதில் ஜெயகர், சப்ரு, பிர்லா, சுனிலால் மேத்தா, மற்றும் ராஜகோபாலாச்சாரி பின்தொடர, காந்தியைச் சிறைச்சாலையில் சந்திக்க டாக்டர். அம்பேத்கர் சென்றார். அது மிகக் கடுமையான அரசியல் நெருக்கடிநிலை. இவர்கள் சிறைச்சாலை முற்றத்திற்குள் நுழைந்தபோது, உயரம் அதிகமில்லாத ஒரு மாமரத் தின் குளிர்ச்சியான நிழலின்கீழ், மிருதுவான சிறைச்சாலை மெத்தை விரிக்கப்பட்ட ஒரு வெள்ளை நிற இரும்புக் கட்டிலில் காந்தி

---

1. கீர், பக்கம் 210.
2. ஜனதா, 1932 அக்டோபர் 1.

படுத்திருந்தார்; காந்திக்கு அருகே சர்தார் பட்டேலும் சரோஜினி நாயுடுவும் அமர்ந்திருந்தனர். கட்டிலுக்கு பக்கத்தில், தண்ணீர், சோடா பாட்டில்கள் மற்றும் உப்பும் வைக்கப்பட்டிருந்தன.

டாக்டர் அம்பேத்கர் கட்டிலை நெருங்கியதும், ஆழ்ந்த அமைதியும் மிகுந்த எதிர்பார்ப்பும் கோலோச்சின. சிக்கல் நிறைந்த இந்த அமைதி டாக்டர் அம்பேத்கரை நெகிழச் செய்யுமா? காந்தியைப் பார்த்ததும் டாக்டர் அம்பேத்கரின் பிடிவாதம் கரைந்துவிடும் என்று ஜெயகர் ஏற்கனவே சொல்லியிருந்தார். பலம் வாய்ந்த மனிதர்கள் மீது தமது தாக்கத்தைச் செலுத்தி அவர்களை தமது சக்திவாய்ந்த ஆத்ம வெள்ளத்தில் மூழ்கடித்த காந்தி என்ற மாமனிதர் முன்னால் இப்போது டாக்டர் அம்பேத்கர் இருக்கிறார். சிறைச்சாலைக்கு வெளியில் கடுமையான புயல்காற்று வீசிக் கொண்டிருக்க் உள்ளே ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. டாக்டர் அம்பேத்கர் அமைதியாகவும் தெளிவாகவும் இருந்தார். சூறாவளி போன்ற இந்த நிகழ்வுகளில் பலஹீனமான ஒரு மனிதர் புதையுண்டு போயிருப்பார். ஆனால் டாக்டர் அம்பேத்கர் தமது இனத்தினரைத் தமது உயிரைவிட அதிகமாக நேசித்தார்; அவரது சொந்த மகிழ்ச்சியைவிட தமது மக்களின் மகிழ்ச்சியில் அதிக அக்கறை காட்டினார்.

காந்தி பலவீனமாக இருந்தார். அவர் படுக்கையில் படுத் திருந்தார். பேச்சுவார்த்தைகள் துவங்கின. காந்திக்கு எல்லா விவரங் களையும் சப்ரு எடுத்துரைத்தார். இந்துக்களின் கருத்தை மாளவியா முன்வைத்தார். அடுத்து மிருதுவாக அமைதியாக டாக்டர் அம்பேத்கர் துவங்கினார். மெதுவான குரலில் அவர் சொன்னார்''*

''மகாத்மாஜி, எங்களிடம் நீங்கள் மிகவும் நியாயமற்ற முறையில் நடந்து கொண்டிருக்கிறீர்கள்''.

காந்தி பதிலளித்தார்: ''எப்பொழுதும் நான் நியாயமற்ற முறையில் நடப்பதாக தோன்றுவது எனது விதி. அதைப்போக்க என்னால் இயலவில்லை''.

பேட்டி நீண்டதாக அமைந்தது; மிகப் பெரும்பாலும் டாக்டர் அம்பேத்கர் பேசினார்; காந்தி பலஹீனமாக இன்னமும் படுக்கை யில் படுத்திருந்தார். ''எனக்கு சேரவேண்டிய நஷ்டஈட்டை நான்

---

★ கீர், ப. 210-12.

பெற விரும்புகிறேன்'' என்று டாக்டர் அம்பேத்கர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார். ''நீங்கள் கூறும் மிகப்பெரும்பாலான விஷயங்களில் நான் உங்களுடன் இருக்கிறேன். ஆனால் எனது உயிர் மீது அக்கறை கொண்டுள்ளதாக நீங்கள் கூறுகிறீர்கள்'' என்றார் காந்தி.

டாக்டர் அம்பேத்கர் :- ''ஆம், மகாத்மாஜி, உங்கள் உயிர்மீது நான் அக்கறை கொண்டுள்ளேன். ஒடுக்கப்பட்ட சமுதாயத்தனரின் நலனுக்காக தாங்கள் முற்றிலுமாக தங்களை அர்ப்பணித்துக் கொண்டால், தாங்கள் எங்களின் புகழ்பெற்ற வீரராக ஆகிவிடுவீர்கள்''.

காந்தி :- ''நல்லது, எனது உயிர் மீது தாங்கள் அக்கறை கொண்டிருந்தால், அந்த உயிரைக் காப்பாற்ற நீங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைத் தாங்கள் அறிவீர்கள். தாங்கள் கூறியதிலிருந்து தாங்கள் நிலை இதுதான். அதாவது பிரிட்டிஷ் பிரதமரின் முடிவின்படி ஏற்கனவே தாங்கள் பெற்றுக் கொண்டதை கைவிடும் முன் அதற்குப் போதுமான விலையை, நஷ்டஈட்டை பெறத் தாங்கள் விரும்புகிறீர்கள். தாங்கள் முன்வைத்துள்ள இரட்டை வாக்கெடுப்பு, முறையற்ற தரப்பினர் முன்னேற வாய்ப்பை அளிக்கிறது என்றும், பட்டியல் முறையில் இடங்கள் நிரப்பப்படுவது தாங்கள் கூட்டத்தினரின் அபிலாசைகளை திருப்திப்படுத்துகிறது என்றும் தாங்கள் கூறுகிறீர்கள். சில தொகுதிகளுக்கு மட்டும் ஏன் பட்டியல் முறையைக் கோருகிறீர்கள்? எல்லாத் தொகுதிகளுக்கும் அந்த முறையை தாங்கள் ஏன் சிபாரிசு செய்யவில்லை? ஒரு பகுதியினருக்கு பட்டியல் முறை நல்லது என்றால், ஒடுக்கப்பட்ட சமுதாயத்தினர் அனைவருக்கும் அது நல்லதாகவே இருக்க வேண்டும். விஷயத்தை இவ்வாறுதான் நான் பார்க்கிறேன். பிறப்பால் நீங்கள் 'தீண்டத்தகாதவர்' என்னுடைய நிலையில் உள்ள ஒரு மனிதன் வியக்கத்தக்க ஒரு நிலையை எடுப்பதாகத் தோன்றும் ஒன்றைச் சொல்லப் போகிறேன். அதாவது தத்தெடுப்பின் மூலம் நான் தீண்டத்தகாதவன்''; எனவே மனதில் உங்களைவிட அதிகம் ''ஒரு தீண்டத்தகாதவன்'' நான். எந்த ஒரு நல்ல திட்டமும் ஒரு குறிப்பிட்ட பிரிவினர் நலனை மட்டும் பாதுகாப்பதாக இருக்கக் கூடாது. ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் அனைவர் நலனையும் அது பாதுகாக்க வேண்டும். இதுவே இந்தத் திட்டத்தை நான் நிர்ணயிப்பதன் அளவுகோலாகும். ஒதுக்கப்பட்ட சமூகத்தின் ஒரு பகுதியினருக்கு இந்தப் பட்டியல் முறை நல்லதாக இருந்தால் அதை ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் அனைத்துத் தொகுதிகளுக்கும் விரிவுபடுத்த வேண்டும்; இது எனது முதல் பரிந்துரை. சித்தாந்த அடிப்படையிலோ அல்லது

நடைமுறையிலோ உங்கள் சமூகத்தினரை என்னிடமிருந்து பிரிக்கும் எண்ணத்தையே என்னால் சகித்துக்கொள்ள முடியாது. நாம் பிரிக்க முடியாதபடி ஒன்றாக இருக்க வேண்டும். நான் நமது மற்ற நண்பர் களிடம் கூறியபடியே சில தொகுதிகளுக்கு ஒரு பெயர்ப் பட்டியலைத் தேர்ந்தெடுக்கும் உங்கள் திட்டத்தை ஏற்றுக்கொள்வதில் எந்த சிரமத்தையும் நான் உணரவில்லை. இதை எல்லாத் தொகுதிகளுக் கும் செய்யலாம் என்பதை ஒரு பரிசாக உங்களுக்கு வழங்க நான் விரும்புகிறேன். இப்பொழுது உள்ள திட்டத்தை நான் விரும்பவில்லை என்பதை கூறிக்கொளள விரும்புகிறேன். அது உங்கள் சமூகத்தைப் பிளவுபடுத்தும். அதைத் தடுக்க நான் எனது உயிரையே கொடுப்பேன். இந்து சமுதாயம் முழுவதையும் சீர்குலைப்பதைத் தடுக்க எனது உயிரையே கொடுத்துக் கொண்டிருப்பது போலவே இதைச் செய்வேன். (காப்பிய புகழ்பெற்ற உண்ணாநோன்பு, பக்கம் 209-210)''[1]

''டாக்டர் அம்பேத்கர், காந்தியின் யோசனையை ஏற்றுக் கொண்டார், பேட்டி முடிவடைந்தது. பட்டியலில் எத்தனை பேர் இருக்க வேண்டும், மாகாண சட்டசபையில் இடங்களின் எண் ணிக்கை, முதல்கட்ட முறையின் காலம் ஒதுக்கப்பட்ட இடங்களின் வினியோகம், பணி இடங்கள் வினியோகம் ஆகியவை பற்றிய விவரங்களை முடிவு செய்ய தலைவர்கள் முயற்சி மேற்கொண் டனர்.''[2] (வரலாற்றுச் சிறப்புமிக்க உண்ணாநோன்பு, ப. 209-10)

டாக்டர் அம்பேத்கரும் டாக்டர் சோலங்கியும் திரு.காந்தியைச் சந்தித்தபோது புனாவில் அப்போது இருந்த தலைவர்களில் மிகப் பெரும்பான்மையோர் அவர்களுடன் சென்றனர்.

''23 செப்டம்பர் வெள்ளிக்கிழமை விடிந்தது. வேட்பாளர் பட்டி யலில் இடம்பெறுவோர் எண்ணிக்கை பற்றி மணிக்கணக்கில் காரசார மாக விவாதம் நடந்தது. மேலும் தொகுதிகள் பற்றிய விஷயமும் விவாதிக்கப்பட்டது. மாகாணசட்ட சபைகளில் 192 இடங்களை அம்பேத்கர் கோரினார். தலைவர்கள் அதை 126 ஆகக் குறைத்தனர். பேச்சுவார்த்தைகள் இழுபரியாக இருந்தன. நேரம் வெகு வேகமாக கரைந்து கொண்டிருந்தது. 10 மணிநேர விவாதத்திற்குப்பின். சில விஷயங்கள் காந்தியின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன. டாக்டர் அம்பேத்கரின் கருத்துக்களை காந்தி ஏற்றுக் கொண்டார்.

1. மறுபதிப்பு, கயர்மோடு, தொகுப்பு 5, ப.45-46.
2. கீர். ப.212

ஆனால், இன்னமும் பூர்வாங்கத் தேர்தலின் காலம், ஒதுக்கப்படும் இடங்களின் காலவரையறை குறித்த பொது வாக்கெடுப்பு முதலியவை பற்றிய விவாதம் தோல்வியில் முடியலாம் எனத் தோன்றியது. முதல்கட்ட தேர்தல்முறை 10 ஆண்டுகள் முடிந்தவுடன் முடிவுக்குக் கொண்டுவரப்பட வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்; ஆனால் அதேசமயம், ஒதுக்கப்பட்ட இடங்கள் என்ற பிரச்சினை மேலும் 15 ஆண்டுகள் முடிந்தவுடன் ஒடுக்கப்பட்ட மக்களின் வாக்கெடுப்பு மூலம் தீர்வு செய்யப்பட வேண்டுமென்று வலியுறுத்தினார். தொகுதிகளை ஒதுக்கீடு செய்யும் தீமையை அகற்றுவதை ஒடுக்கப்பட்ட சமூகத்திரின் வாக்கெடுப்பை பொறுத்து ஒதுக்கினால் அந்தத் தீமை நெடுங்காலத்திற்கு நீட்டிக்கும் என்பது தலைவர்களின் கருத்தாக இருந்தது. இருபத்தைத்து ஆண்டுகள் கழித்து பொதுஜன வாக்கெடுப்பு நடத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை டாக்டர் அம்பேத்கர் முன்வைத்தார். இது சாதி இந்துக்கள் வட்டாரத்தில் பெரும் அமளியை ஏற்படுத்தியது. தீண்டாமை அடுத்த 25 ஆண்டுகளுக்கு பின் இருக்காது என்பதை தாம் நம்பத் தயாராக இல்லை என்று டாக்டர் அம்பேத்கர் அவர்களிடம் தெளிவாகக் கூறினார். எனவே, பொதுஜன வாக்கெடுப்பு எனும் அத்தகைய ஒரு நிர்ப்பந்தம் இருந்தால்தான் தீண்டத்தகாதவர் மீது சாதி இந்துக்கள் கொண்டுள்ள மனிதத் தன்மையற்ற தங்கள் கண்ணோட்டத்தை மாற்றிக் கொள்ள அவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவர்'' என்று அவர் கூறினார்.[1]

'' 10 ஆண்டுகள் கழித்து பொதுஜன வாக்கெடுப்பிற்கு காந்தி ஒத்துக் கொள்ள வேண்டும் என டாக்டர் அம்பேத்கர் விரும்பினார். காந்தி இப்போது ஓரளவு நலமாக இருந்தார். மெதுவாகவும், திட்டமிட்டும் பேசினார். ''தங்களின் தர்க்க ரீதியான நிலை மறுக்க முடியாதது'' என்றார். ''ஆனால் பொதுஜன வாக்கெடுப்பு ஐந்து ஆண்டுகள் முடிந்ததும் இருக்கட்டும்'' சாதி இந்துக்களின் நேர்மையை நிரூபிக்க ஐந்து ஆண்டுகள் போதுமானதாகும். ஆனால் வாக்கெடுப்பை மேலும் தள்ளிவைக்க வேண்டுமென நீங்கள் வலியுறுத்தினால், தாங்கள் விரும்புவது சாதி இந்துக்களின் நேர்மையைச் சோதிப்பதற்கல்ல, மாறாக வாக்கெடுப்பில் பாதகமான நிலையை ஏற்படுத்த ஒடுக்கப்பட்ட மக்களைத் திரட்டுவதற்குத்தான் தாங்கள் விரும்புகிறீர்கள் என்று நான் சந்தேகப்படத் துவங்குவேன்.

1. கீர், ப. 212.

''பரஸ்பர நல்லெண்ணம், நம்பிக்கை இருக்க வேண்டுமென்று அவர் உணர்ச்சியுடன், வேண்டுகோள் விடுத்தார்.

சகமனிதரை தீண்டத்தகாதவர் என்று எண்ணி தீங்கான கருத்துக்கு எதிராக 12 வயதிலிருந்து தாம் இருந்து வந்துள்ளதாகவும் எனவே அந்த தீங்கிற்கு எதிராக விடாப்பிடியாக போராடி வந்திருப்ப தாகவும் அவர் கூறினார். செய்யப்பட்ட ''நூறு சதவிகித பாதுகாப்புக்கு சட்டரீதியாக வழிவகையை வேண்டுமென நீங்கள் விரும்புவதற்குத் தங்களுக்கு முழு உரிமை உண்டு. ஆனால் அந்த உரிமையை வலி யுறுத்தாதீர்கள் என்று அனல் கக்கும் இந்தப் படுக்கையிலிருந்து உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இன்று இங்கே நான் கேட்டுக் கொள்ளப் போவதெல்லாம் எனது சாதி, இந்து சாதிக்காரர்களுக்கும் அவகாசம் கொடுங்கள் என்பதுதான்.

அவர்களது மனச்சான்று தட்டியெழுப்பப்பட்டிருப்பதற்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். அவர்களிடமிருந்து நூறு சதவீதப் பாதுகாப்பை எவ்வகையிலாவது சட்ட ரீதியாக பெற்றுவிட வேண்டுமென்று நீங்கள் செயல்பட்டால் என்ன நேரும் தெரியுமா? மனத்தைச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அவர்களிடையே துரிதமாக வளர்ந்து வரும் ஆர்வப்போக்கை அது தடுத்து நிறுத்தும். தீண்டத்தகாத மக்களுக்கு இழைக்கப்பட்டு வரும் இந்த அநீதி சிறிது காலத்துக்குத் தடுத்து நிறுத்தப்படலாம்; ஆனால் இந்து மதத்திற்கு ஏற்பட்டுள்ள இந்தக் கறை அப்படியே இருந்துவிடும். இவ்வாறு ஆழமாகப் பதிந்துள்ள இந்தக் கறையின் வெளிப்பாடே தீண்டாமை என்பது. இது இந்து மதத்திலிருந்து முழுவதுமாக நீக்கப்படாவிடில், அது மீண்டும் மீண்டும் பல்வேறு வழிகளில் வெளிப்பட்டு, நமது முழு சமூக, அரசியல் அமைப்பில் நஞ்சை கலக்கத் தொடர்ந்து முயலும். எனவே, தனது கடந்தகாலக் குற்றத் திற்கு அதுவாகவே பிராயச்சித்தம் செய்துகொள்ள ஒரு கடைசிச் சந்தர்ப்பத்தை இந்து சமயத்துக்கு அளிக்கும்படி வேண்டுகிறேன். சாதி இந்துக்கள் மத்தியில் பணியாற்ற எனக்கு ஒரு வாய்ப்பை அளியுங்கள். இது நியாயமான வேண்டுகோள். இதற்கு 10 அல்லது 15 ஆண்டுகள் என்று நீங்கள் கேட்டால் அந்த சந்தர்ப்பம் கைநழுவிப் போய்விடும். இந்துக்கள் தங்களைப் பற்றி நல்ல கருத்தை ஐந்து ஆண்டுகளுக்குள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அப்படி இல்லை யெனில் அவர்களுகு இதுபோன்ற சந்தர்ப்பம் கிடைக்காமலே போகலாம். எனவே பொது வாக்கெடுப்பு அவசியம் வேண்டும். ஐந்து

ஆண்டுகால எல்லையைத் தாண்டி அல்ல. இந்த விஷயத்தில் நான் விடாப்பிடியாக இருக்கிறேன் என்று நண்பர்களிடம் கூறுங்கள். நான் வெறுக்கத்தக்க நபராக இருக்கலாம். ஆனால் என் மூலம் சத்தியம் பேசுமானால், நான் வெல்லமுடியாதவனாக இருப்பேன். (காப்பியப் புகழ்பெற்ற நோன்பு, ப. 211-212).''[1]

''பேட்டி முடிந்தது; வேட்பாளர் பட்டியலில் எத்தனை பேர்கள், மாகாணச் சட்டசபைகளில் எத்தனை இடங்கள், முதல் கட்ட அமைப்பின் காலஅவகாசம், ஒதுக்கப்படும் இடங்களின் கால அவகாசம், பணி இடங்களின் வினியோகம் ஆகியவை பற்றிய விவரங்களை முடிவு செய்ய தலைவர்கள் துவங்கினர்''. ''இந்தக் கூட்டம் ராஜ்பகதூர் சிவ்லால் மோதிலால் இல்லத்தில் நடைபெற்றது''.

''அது அப்பொழுது மாலை நான்கு மணி. காந்தியின் உடல் நிலை மோசமாயிற்று. அவர் தமது சக்தியை வேகமாக இழந்து கொண்டிருந்தார். காந்தியின் புதல்வரான தேவதாஸ் காந்தி தமது தகப்பனாரின் நிலையை கண்ணீர் வழியும் கண்களுடன் டாக்டர் அம்பேத்கருக்கு விவரித்துக் கொண்டிருந்தார்; பொதுவாக்கெடுப்பை வலியுறுத்துவதன் மூலம் ஒப்பந்தம் ஏற்படுவதை தடுக்காது இருக்கும்படி டாக்டர் அம்பேத்கரை அவர் வேண்டிக் கொண்டார். இறுதியில் இந்த விஷயத்தை காந்தியிடம் தெரிவிப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அம்பேத்கர் முக்கியத் தலைவர்களுடன் இரவு 9 மணிக்கு சிறைச்சாலைக்குச் சென்று காந்தியைப் பார்த்தார். பொது வாக்கெடுப்பு என்ற கருத்தை காந்தி ஒப்புக்கொண்டார்; ஆனால் அது ஐந்து ஆண்டுகள் கழித்து நடைபெற வேண்டும் என்ற நிபந்தனை விதித்தார். காந்தியின் குரல் மிகவும் தாழ்ந்தது. சிறைச்சாலை மருத்துவர்கள் தலையிட்டு மேற்கொண்டும் பேச்சுவார்த்தைகளை தடை செய்தனர். மேலே இருந்த மாமர இலைகளும் அசைய மறுத்தன. அங்கு பரிபூரண அமைதி நிலவிற்று. அவரைக் காண வந்தவர்கள் திரும்ப வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தமது கருத்தை விட்டுக் கொடுக்க டாக்டர் அம்பேத்கர் தயாராக இல்லை. அவரது மனோபலம் மிகுந்த சோதனைக்குள்ளாயிற்று. அவரது உயிரை அச்சுறுத்தும் கடிதங்கள் குவிந்தன.[2]

1. மறுபதிப்பு, கயர்மோடு, தொகுப்பு 5, ப.47-48
2. கீர், பக். 213

அத்தகைய ஒரு கடிதம் இதோ:

''டாக்டர் அம்பேத்கர்,

நான்கு நாட்களுக்குள் மகாத்மா காந்தியின் கோரிக்கையை நீங்கள் ஏற்றுக்கொள்ளாவிடில், உங்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும். உங்கள் உயிரை நீங்கள் காப்பாற்றிக் கொள்ள விரும்பினால், காந்திஜியின் கோரிக்கையை ஏற்று அவரது உண்ணா நோன்பு உடனடியாக முடிவதற்கு உதவ வேண்டும். இது உங்களுக்கு ஒரு எச்சரிக்கை. உங்களுடைய பிடிவாதத்தை நீங்கள் கைவிடாவிடில் நீங்கள் கொலை செய்யப்படுவீர்கள்.

(ஒப்பம்) ஹரிபாய் கே. பட்
பிபிஇஇ உறுப்பினர் மற்றும் தொழிலாளி[1]

தெருவில் கொலைவெறி பார்வைகள் அவர்மீது வீசப்பட்டன. தலைவர்கள் சிலர் மூளை குழம்பி அவரது முதுகுக்குப் பின் அவதூறு கூறினர்.

''புனாவின் தீண்டத்தக்க சமூகத்தைச் சார்ந்த சில இளைஞர்கள் டாக்டர் அம்பேத்கரை கொலை செய்ய ஓர் இரகசிய சதித் திட்டம் தீட்டியது பற்றி ஜனதா (24-9-32, பக்கம் 8) பின்வருமாறு செய்தி வெளியிட்டது:

''டாக்டர் அம்பேத்கரின் உயிருக்கு ஆபத்து!

''புனா மாணவர்கள் ரகசியக் கூட்டத்தின் கொலை மிரட்டல்''

புனா, தேதி 23-9-32 இரவு 8 மணி

(ஜனதாவின் விசேட நிருபரின் தகவல்)

''இரு நாட்கள் கழிந்தன. பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. டாக்டர் அம்பேத்கரை நிர்பந்திக்கப் பல்வேறு முயற்சிகள் நடந்து வருகின்றன. ஆளுநரைச் சுட்ட கோகேட் சமயக் குழு ஆதரவு மாணவர்கள் இரகசியமாக

1. ஜனதா, 1932 அக்டோபர் 1

திட்டம் தீட்டி வருகிறார்கள் என்று தெரிகிறது. களத்திலிருந்து டாக்டர் அம்பேத்கர் அகற்றப்பட்டால் பிரச்சினை தீர்ந்துவிடும். காந்தியின் உயிர் பாதுகாக்கப்படும் என்று கூறப்படுவதாகச் சொல்லப் படுகிறது. இது பற்றி டாக்டர் அம்பேத்கருக்கு தெரிவித்தபோது, அவர் அதைக் கேட்டுச் சிரித்தார். அவரது பயமற்ற சிரிப்பு எத்தகைய ஒரு மரணத்திற்கும் அவர் பயப்படவில்லை என்பதை உணர்த் திற்று. எனினும், டாக்டர் அம்பேத்கரின் பாதுகாப்புப் பற்றி உள்ளூர் தீண்டத்தகாத சமுதாயத்தினர் கவலை கொண்டுள்ளனர். அவர்கள் மிகுந்த எச்சரிக்கை உணர்வுடன் இருக்கிறார்கள். டாக்டர் பாபா சாகிப் அம்பேத்கருக்கு ஒரு சிறுகாயம் ஏற்பட்டாலும், கடுமையான விளைவு ஏற்படும். அவருக்காக எத்தகைய தியாகத்தையும் புரிய ஆயிரக்கணக்கான தீண்டத்தகாத இளைஞர்கள் தயாராக உள்ளனர்.''[1]

''மகாத்மாஜியைக் காண இரவு 9.30 மணிக்குச் சென்ற தலைவர்கள் சிறிது நேரத்தில் திரும்பினர். அவர்கள் களைத்துப் போய் இருந்தாலும் உற்சாகமாக இருந்தனர். ''காந்திஜி என் பக்கம் உள்ளார்'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறுவது கேட்டது''.

''சனிக்கிழமை 8 மணிக்கு மாநாட்டில் தலைவர்கள் கூடு கிறார்கள்; மீண்டும் விரைவில் காந்தியைச் சந்திப்பார்கள். பரவ லான கருத்து என்னவெனில், ஒரு முழுமையான ஒப்பந்தத்தை அடைவது எட்டக்கூடிய தூரத்தில் உள்ளது என்பதுதான், முற்றிலும் எதிர்பாராத துரதிர்ஷ்டம் ஏதேனும் நிகழவில்லையெனில் ஒரு திட்டவட்டமான ஒப்பந்தம் ஏற்பட்ட மகிழ்ச்சிகரமான செய்தி களை புனா சனி நடுப்பகலில் வெளியிட முடியும்.

மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினைகள் குறித்த கருத்து வேறுபாடுகள் அநேகமாக தீர்க்கப்பட்டன. ஒடுக்கப்பட்ட சமூகத் தினரின் பொது வாக்கெடுப்பு என்ற பிரச்சினையைப் பொறுத்த வரை அதை எப்போது வைத்துக் கொள்ளலாம் என்ற விஷயத்தைப் பொறுத்தவரை அதில் தத்துவார்த்த ரீதியான கருத்து வேறுபாடு தான் நிலவிற்று. 10 ஆண்டுக்குப்பின் வாக்கெடுப்பை வைத்துக் கொள்ளலாம் என்று தலைவர்கள் ஒப்புக்கொள்ளலாம் என்று கருதப்படுகிறது.

ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயங்களில் கீழ்க்கண்டவையும் அடங்கும் என்று கூறப்படுகிறது :-

1. ஜனதா, 1932 செப்டம்பர் 24.

1. ஒவ்வொரு இடத்துக்கும் வேட்பாளர் பட்டியலில் 4 பேர்கள் இருப்பர்.

2. ஒற்றை வாக்குமுறை கடைப்பிடிக்கப்படும்.

3. எல்லா மாகாணக் கவுன்சில்களிலும் தீண்டப்படா சமுகத்தினருக்கு இடம் ஒதுக்கப்படும் இடங்கள் 150க்கும் 155க்கும் இடையாக உயர்த்தப்படுகின்றன. வகுப்புவாரிப் பிரதிநிதத்துவ தீர்ப்பின்படி இது 71 ஆக நிர்ணயிக்கப்பட்டிருந்தது.

அதிகாலையில் பண்டிட் மாளவியாவின் இல்லத்தில் கூடிய மாநாடு, இடைவெளியில்லாமல் பதின்மூன்று மணிநேரம் நடைபெற்று இரவு 9.30 மணிக்கு முடிவுக்கு வந்தது. அதை அடுத்து, பண்டிட் மாளவியா, திரு. சி. ராஜகோபாலச்சாரி, திரு.ஜெயகர், டாக்டர் சப்ரு, டாக்டர் அம்பேத்கர் ஆகியோரும் மற்றவர்களும் எரவாடாச் சிறைச்சாலைக்கு விரைந்தனர்.

மாளவியாவின் இல்லத்தில் நடைபெற்ற இந்த மாநாடு மக்கள் கூட்டத்தை ஈர்த்தது. இரவு 9.30 மணிக்கு தலைவர்கள் கூட்டம் முடிந்து எழுந்தபோதிலும் அன்று இரவு ஏதேனும் ஒப்பந்தம் ஏற்படும் என்ற நம்பிக்கை எதுவும் இருக்கவில்லை.

நேர ஓட்டத்தை எதிர்த்து தலைவர்கள் செயல்பட்டு வருகின்றனர். விவாதங்களுக்கு மத்தியில் மதிய உணவு மற்றும் இரவு உணவு அளிக்கப்பட்டன. கர்மமே கண்ணாக அவர்கள் கவலையுடன் தங்கள் பணியில் தீவிரமாக ஈடுபட்டனர். எனினும் மாலையில் உரத்த சிரிப்பொலிகள் அந்த வீட்டுச் சுவர்களுக்கு அப்பாலிருந்து வருவது கேட்டது.

சாதி இந்துக்கள் மற்றும் ஒடுக்கப்பட்ட சமூகத்தினரது தலைவர்களின் மாநாடு இன்று காலை 9 மணிக்கு மாளவியாவின் இல்லத்தில் இரகசியமாகக் கூடிற்கு. பல பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டு தேர்தல்களுக்கு வேட்பாளர் பட்டியல் பற்றியும் ஐக்கிய மாகாணத்தை தவிர பிரதிநிதித்துவத்துக்கான அடிப்படை பற்றியும் ஓர் ஒப்பந்தம் எட்டப்பட்டதாக தெரியவந்தது. ஆனால் இந்த விஷயம் குறித்து முடிவாக இன்னமும் எதுவும் கூறப்படவில்லை. வேட்பாளர் பட்டியலில் 2 பேர் இருக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கர் கோரினார்; காந்திஜி 5 பேர் இருக்க வேண்டும் என்று யோசனை கூறினார். அது நான்கு என்று நிர்ணயிக்கப்பட்டது.

பின் மாலைப் பொழுதில், பத்திரிகை நிருபர்களின் பரபரப் பான கேள்விகளுக்கு டாக்டர் தேஜ் அளித்த பதில் : ''விவாதங்கள் இதுவரை திருப்தியாக இருந்தன; இரவிலும் உட்கார்ந்து பேசி முடிக்க உத்தேசித்துள்ளோம்''

மாநாட்டிற்கு பின்பு டாக்டர் அம்பேத்கர் பின்வருமாறு கூறினார்:-

''சூழ்நிலை நம்பிக்கை அளிப்பதாக உள்ளது. முக்கியத் துவம் வாய்ந்த கருத்து வேறுபாடுகள் வெகுசிலவே; ஒப்பந்தம் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் உள்ளன. உண்ணா நோன்பின் காரண மாக காந்திஜி பலவீனமாக இருந்தார். எனினும் எங்களுடன் பதினைந்து நிமிடங்கள் விவாதித்தார்.''[1]

''சனிக்கிழமை காலை விவாதங்கள் மீண்டும் துவங்கின; ஒடுக்கப்பட்ட மக்களுக்கு மாகாண சட்டசபைகளில் மொத்த இடம் 148 ஆக முடிவு செய்யப்பட்டது. மேலும், பிரிட்டிஷ் இந்தியா விலிருந்து மத்திய சட்டசபைக்கான இந்துக்களின் இடங்களில் 10 சதவிகிதம் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு கொடுக்கப்பட வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. முன்போலவே வாக்கெடுப்பு பற்றிய பிரச்சினை மீது பலமணி நேரம் விவாதம் நடந்தது. டாக்டர் அம்பேத்கரின் கோரிக்கையை ஏற்றுக்கொள்ள யாரும் தயாராக இல்லை; இது விஷயமாக காந்தியை மீண்டும் சந்திப்பதுதான் சரியானதாக இருக்கும் என அம்பேத்கர் நினைத்தார். டாக்டர் சோலங்கி மற்றும் ராஜகோபாலச்சாரி உடன்வர காந்தியை காண அவர் வந்தார். அம்பேத்கரின் தர்க்க ரீதியான நிலை மறுக்க முடியாதது என்று காந்திஜி அவரிடம் கூறினார். சட்ட ரீதியான உத்திரவாதம் அளிப்பதால் மட்டும் நோயைத் குணப்படுத்தி விட முடியாது. எனவே, இந்து மதத்திற்கு ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கும் படி டாக்டர் அம்பேத்கரை கேட்டுக் கொண்டார். இந்துக்களது கடந்தகால பாவத்திற்கு பிராயச்சித்தம் செய்வதற்கு அவர்களுக்குக் கடைசிச் சந்தர்ப்பம் அளிக்கும்படி கேட்டுக் கொண்டார். பொது வாக்கெடுப்பு ஐந்து ஆண்டுகளுக்கு அதிகமாக இல்லாமல் நடக்க வேண்டும் என்றார். 'ஐந்து ஆண்டுகளா அல்லது எனது உயிரா'' என்று முடிவான தொனியில் காந்திஜி கூறினார்.

1. பிரிபிரஸ் பத்திரிகை, 1932, செப்டம்பர் 24.

விவாதம் நடந்த இடத்திற்கு திரும்பி வாக்கெடுப்பு காலம் பற்றிய விஷயத்தில் தாம்விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். அது 10 ஆண்டுகளுக்கு குறையாமல் இருக்க வேண்டும் என்றார். சுமார் ஒரு மணி நேரம் கழித்து, வாக் கெடுப்பு காலம் பற்றி எதையும் இணைக்காமல் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்தனர்! இதைச் சிறைச்சாலையில் 3 மணிக்கு காந்திக்கு ராஜகோபாலச்சாரி விளக்கினார். அற்புதமான ஏற்பாடு எனக் கூறி காந்திஜி தமது சம்மதத்தை அளித்தார். ராஜ கோபாலாச்சாரி, ராமகிருஷ்ண பண்டார்கர் சாலையில் உள்ள சிவ்வால் மோதிலால் பங்களாவிற்கு அதிவேகமாக வந்தார்; ஒப் பந்தத்திற்கு அவர் சம்மதம் அளித்ததாக மகிழ்ச்சி பொங்க அறிவித் தார். ஒப்பந்தத்தை வரைவதற்கு அதிக நேரம் எடுத்துக்கொள்ள வில்லை. சந்தோஷமும் புத்துணர்வும் கலகலப்பும் கலந்த சூழ் நிலையில் செப்டம்பர் 24 சனிக்கிழமை மாலை ஐந்து மணிக்கு ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று; அது புனா ஒப்பந்தம் என்று வர லாற்றில் இடம் பெற்றது.

ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் சார்பாக டாக்டர் அம்பேத்கர் அதில் கையொப்பமிட்டார். சாதி இந்துக்கள் சார்பாக மதன்மோகன் மாளவியா கையொப்பமிட்டார்.''[1]

**''புனா ஒப்பந்தத்தின் வாசகம்**

ஒப்பந்தத்தின் வாசகம் வருமாறு:-

(1) மாகாண சட்ட சபைகளுக்கு பொது வாக்காளர் தொகுதி களிலிருந்து ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு இடங்கள் கீழே குறிப்பிட்டுள்ளபடி ஒதுக்கப்படும்.

மதராஸ் 30; பம்பாய்-சிந்து உடன் சேர்த்து 15; பஞ்சாப் 8; பீஹார் மற்றும் ஒரிஸ்ஸா 18; மத்திய மாகாணங்கள் 20; அஸ்ஸாம் 7; வங்காளம் 30; ஐக்கிய மாகாணங்கள் 20; மொத்தம் 148.

பிரதம மந்திரியின் முடிவில் அறிவிக்கப்பட்ட மாகாணக் கவுன்சில்களின் மொத்த இடங்களை அடிப்படையாகக் கொண் டுள்ளன இந்தப் புள்ளிவிவரங்கள்.

(2) இந்த இடங்களுக்கு தேர்தல் கூட்டு வாக்காளர் தொகுதிப் படி நடைபெறும்; எனினும் கீழ்க்கண்ட செயல்முறைப்படி நடக்கும்: ஒரு தொகுதியில், பொது வாக்காளர் பட்டியலில் பதிவு

செய்யப்பட்டுள்ள ஒடுக்கப்பட்ட சமூகத்தினரைச் சார்ந்த உறுப்பினர்கள் எல்லோரும் வர்க்காளர் குழுவாக அமைவர். ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு நான்கு வேட்பாளர்களின் பெயர்கள் கொண்ட பட்டியலை ஒருவருக்கு ஒரு வாக்கு என்ற முறைப்படி வாக்காளர் குழாம் தேர்ந்தெடுக்கும்; நான்கு பெயர்களில் யார் யார் முதல் கட்டத் தேர்தலில் மிக அதிக எண்ணிக்கை வாக்குகளைப் பெறுகிறார்களோ அவர்கள் பொது வாக்காளர் தொகுதிகளில் வேட்பாளர்களாக இருப்பர்.

*(3)* மத்திய சட்டசபையில் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கான பிரதிநிதித்துவம், மாகாணச் சட்ட சபைகளில் அவர்களுக்குள்ள பிரதிநிதித்துவம் போலவே ஷரத்துகள் மேலே உள்ளபடி கூட்டுத் தேர்தல் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட இடங்கள் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் முதல் கட்ட தேர்தல் முறைப்படி இருக்கும்.

*(4)* மத்திய சட்ட சபையில், அந்த சட்டசபைக்கு பிரிட்டிஷ் இந்தியாவில் அளிக்கப்பட்ட இடங்களில் 18 சதவிகிதம் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு ஒதுக்கப்படும்.

*(5)* மத்திய மற்றும் மாகாண சட்டசபைகளுக்கு வேட்பாளர் பட்டியலில் உள்ளவர்களை தேர்ந்தெடுக்கும் முதல்கட்டத் தேர்தல் முறை முதல் 10 ஆண்டுகளுக்குப் பின்- பரஸ்பர ஒப்பந்தப்படி, பிரிவு 6ல் கூறியுள்ளபடி, அது முன்கூட்டியே ரத்து செய்யப்பட்டாலன்றி முடிவுக்கு வரும்.

*(6)* சட்டக் கூறுகள் 1 மற்றும் 4ல் வழிவகை செய்யப்பட்டுள்ளபடி, ஒதுக்கப்பட்ட சமூகத்தினர் மாகாண மற்றும் மத்திய சட்ட சபைகளில் இட ஒதுக்கீட்டின் மூலம் பிரதிநிதித்துவம் பெறும் முறை சம்பந்தப்பட்ட சமூகத்தினரின் பரஸ்பர இணக்கத்தின் வாயிலாக முடிவு செய்யும் காலம் வரை நீடிக்கும்.

*(7)* ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு மத்திய மற்றும் மாகாணச் சட்டமன்றங்களுக்கு வாக்களிக்கும் உரிமை லோதியன் குழுவின் அறிக்கையின்படி இருக்க வேண்டும்.

*(8)* ஸ்தல அமைப்புகளுக்கான எந்த தேர்தல்களிலும் பங்கு கொள்வதற்கோ பொதுப் பணிகளில் நியமிக்கப்படுவதற்கோ ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் உறுப்பினர் என்ற அடிப்படையில் எவருக்கும் எந்தத் தகுதியின்மையும் இருக்காது. இவ்வகையில் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு நியாயமான பிரதிநிதித்துவம்

கிடைக்க எல்லா முயற்சிகளும் செய்யப்படும். பொதுப் பணி களில் நியமிக்கப்படுவதற்கு அதற்காக நிர்ணயிக்கப்பட்ட கல்வித் தகுதிகளை அவர்கள் பெற்றிருக்க வேண்டும்.

(9) ஒவ்வொரு மாகாணத்திலும், ஒடுக்கப்பட்ட சமூகத் தினரைச் சார்ந்த உறுப்பினர்களுக்கு கல்வி பெறும் வசதிகள் பெறுவதற்கு கல்வி மானியத்திலிருந்து போதுமான தொகை ஒதுக்கப்படும்.[1]

''ஒப்பந்தம் கையெழுத்தாகும் முன்பு, ராவ் பகதூர் ராஜாவும் அவரைப் பின்பற்றுபவர்களும் கையெழுத்திடுவதை தாங்கள் அனுமதிக்க முடியாது என்று மதராஸிலிருந்து வந்துள்ள ஒடுக்கப் பட்ட சமூகத்தினரின் பிரதிநிதிகள் வலியுறுத்தினர். மேலும் அவர்கள் அவ்வாறு கையெழுத்திட அனுமதிக்கப்பட்டால், டாக்டர் அம்பேத்கரும் அவரைப் பின்பற்றுபவர்களும் ஒப்பந்தத்தில் கையொப்பமிட மாட்டார்கள் என்றும் கூறினர். இந்த நிபந்தனை களை ஏற்று டாக்டர் அம்பேத்கரும் அவரைப் பின்பற்றுபவர்களும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். அதை அடுத்து திரு. ராஜா மற்றும் அவரைப் பின்பற்றுபவர்களின் கையொப்பங்களைப் பெற ஏற்பாடு செய்யும்படி டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டார். நீண்ட விவாதத்திற்குப் பின் அவர்களை தனிப்பட்ட முறையில் அந்த ஆவணத்தின் இறுதிப் பகுதியில் கையெழுத்திட அனுமதிக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. அவ்வாறே அவர்கள் கையெழுத் திட்டனர். ஆனால் ஒரு பெரிய ஆச்சரியம் என்னவெனில் ஆவணத் தில் இறுதியில் ராஜா கையெழுத்திட்டிருக்க வேண்டும், அவ்வாறு செய்யாமல் ஜெயகர் மற்றும் சப்ரூ ஆகியோரின் கையொப்பங் களுக்கிடையே அவர் தமது கையொப்பத்தை செருகி இட்டார்.[2]

''புனா ஒப்பந்தத்தில், 24-9-1932 அன்று கையொப்பமிட்ட வர்கள் (வரலாற்று உண்ணாநோன்பு, ப. 153, 154)

(1) மதன்மோகன் மாளவியா
(2) தேஜ் பகதூர் சப்ரு
(3) எம்.ஆர். ஜெயகர்
(4) பி.ஆர். அம்பேத்கர்
(5) ஸ்ரீநிவாசன்
(6) எம்.சி.ராஜா
(7) சி.வி.மேத்தா
(8) சி.ராஜகோபாலாச்சாரி
(9) ராஜேந்திர பிரசாத்
(10) ஜி.டி. பிர்லா.

1. எழுத்தும் பேச்சும், தொகுப்பு 9, ப. 88,89
2. ஜனதா, 1932 அக்டோபர் 1.

(11) ராமேஸ்வரதாஸ் பிர்லா
(12) பி.எஸ்.காமத்
(13) ஜி.கே.தியோதர்
(14) ஏ.வி.தாக்கர்
(15) ஆர்.ஆர்.பாகலே
(16) பி.ஜி.சோலங்கி
(17) பி.பாலு
(18) கோவிந்த் மாளவியா
(19) தேவதாஸ் காந்தி
(20) பிஸ்வாஸ்
(21) பி.என்.ராஜ்போஜ்
(22) ராவை.ஜி.ஏ
(23) சங்கர்லால் பங்கர்

ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் போது, "மகிழ்ச்சி கரை புரண்டோட ராஜகோபாலாச்சாரி தமது பேனாவை டாக்டர் அம்பேத்கருடன் பரிமாறிக் கொண்டார்.

பம்பாயில் செப்டம்பர் 25 ஆம் தேதி நடைபெற்ற இந்து மாநாட்டின் கடைசிக் கூட்டத்தில் கீழ்க்கண்டவர்களின் கையொப்பங்களும் பெறப்பட்டன.

(1) லல்லுபாய் சாமல்தாஸ்
(2) ஹன்சாமேத்தா
(3) கே.நடராஜன்
(4) காமகோட்டி நடராஜன்
(5) புருஷோத்தம்தாஸ் தாசர்தாஸ்
(6) மதுரதாஸ்வாசன்ஜி
(7) வால்சந்த் ஹீராச்சந்த்
(8) கே.என்.குன்ஸ்ரு
(9) கே.ஜி.லிமாயி
(10) பி.கோதண்டராவ்
(11) என்.வி. காட்கில்
(12) மனுசுபேதார்
(13) அவந்திராபாய் கோகலே
(14) கே.ஜே.சிட்டாலியா
(15) ராதாசாந்த் மாளவியா
(16) ஏ.ஆர்.பாட்
(17) கோலம்
(18) பிரதான்"[1]

ஒப்பந்தத்தின் வாசகம் உடனடியாக பிரிட்டிஷ் அமைச்சரவைக்கும், வைசிராயிக்கும் ஒவ்வொரு கட்சியாலும் தனித்தனியாக தந்தி மூலம் அனுப்பப்பட்டது. மேலும் ஒவ்வொரு கட்சியினரும் ஒப்பந்த நகலை தனித்தனியே அளித்தனர். பம்பாய் ஆளுநரின் செயலாளருக்கும் அளிக்கப்பட்டது. அடுத்த நாள் காலை ஒப்பந்தத்தை உறுதி செய்ய பம்பாய்க்கு தலைவர்கள் திரும்பினர். பிற்பகல் 2 மணிக்கு

1. மறுபதிப்பு, கயர்மோட், தொகுப்பு 5, ப.56-57

இந்திய வணிகர் சங்க மண்டபத்தில் தலைவர்கள் ஒரு கூட்டம் நடத்தினர்.[1]

புனா ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்ய நடந்த இந்தக் கூட்டத்தைப் பற்றி ''பம்பாய் கிராணிகில்'' பின்வருமாறு செய்தி வெளியிட்டிருந்தது. பண்டிட் மதன்மோகன் மாளவியா கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். தமது உரையில், புனா ஒப்பந்தம் கையெழுத்தாக உதவிய எல்லோருக்கும் அவர் நன்றி கூறினார். டாக்டர் அம்பேத்கரின் உதவியில்லாமல் இந்த புனா ஒப்பந்தம் உருபெற்றிருப்பது கஷ்டம் என்று கூறி அவருக்கு விசேஷமாக நன்றி தெரிவித்தார். இப்பொழுது இந்த ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்தும் முழுப் பொறுப்பும் இந்துக்களின் தோள்களின் மீது உள்ளது.

சர் தேஜ் பகதூர் சப்ரு மற்றும் ராஜகோபாலாச்சாரி ஆகியோர் நிகழ்ச்சியில் உரையாற்றினர். திரு.மதுரதாஸும் மற்றும் விஸ்ஸோன்சி ஹிம்ஜியும் தீர்மானத்தை முன்மொழிந்தனர்.

திரு.மதுரதாஸ் விஸ்ஸோன்ஜி, புனா ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்யும் தீர்மானத்தை முன்மொழிந்தார்.[2]

கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேறிற்று :-

''சாதி இந்து தலைவர்களுக்கும் ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் தலைவர்களுக்கும் இடையே 1932 செப்டம்பர் 24ம் தேதி ஏற்பட்ட புனா ஒப்பந்தத்தை இந்த மாநாடு ஊர்ஜிதம் செய்கிறது. மேலும் இந்து சமுதாயத்திற்குள்ளேயே தனித் தேர்தல் தொகுதிகள் ஏற்படுத்திய பிரிட்டிஷ் அரசு அதன் முடிவைத் திரும்பப் பெறும் என்றும், புனா ஒப்பந்தத்தை முழுவதுமாக ஏற்றுக்கொள்ளும் என்றும் இந்த மாநாடு நம்புகிறது. மகாத்மா காந்தி தாம் விதித்த நிபந்தனைகளுக்கு உட்பட்டு தமது உண்ணா நோன்பை முடித்துக் கொள்வதற்கு உதவும் வகையில் காலம் கடப்பதற்குமுன் உடனடியாக நடவடிக்கை எடுக்கும்படி அரசை மாநாடு வலியுறுத்துகிறது.

1. கீர், ப:214
2. பம்பாய் கிராணிகில், 1932 செப்டம்பர் 26.

இந்துக்களில் எவர் ஒருவரையும் அவரது பிறப்பின் காரணமாக தீண்டத்தகாதவர் என்று கருதத்கூடாது என்று இந்த மாநாடு தீர்மானிக்கிறது; இதுவரை அவ்வாறு கருதப்பட்டவர்கள் பொதுக் கிணறு, பொதுப் பள்ளி, பொதுச் சாலைகள் மற்றும் ஏனைய பொது அமைப்புகளைப் பயன்படுத்த மற்ற இந்துக்களைப் போல் இவர்களும் அதே உரிமை பெறுவர். வெகு விரைவில் இந்த உரிமை சட்டரீதியாக அங்கீகரிக்கப்படும். அவ்வாறு அங்கீகாரம் பெறவில்லை எனில் நாடாளுமன்றம் இயற்றும் முதல் சட்டங்களில் ஒன்றாக இது இருக்கும்.

''தீண்டத்தகாத வர்க்கத்தினர் என்று அழைக்கப்படுபவர்கள் மீது பழக்க வழக்கத்தால் சுமத்தப்பட்டுள்ள அவர்கள் ஆலயங்களில் நுழைவதைத் தடுப்பது உள்ளிட்ட எல்லாத் தகுதியின்மைகளையும் விரைவில் நீக்க அனைத்து சட்டப்பூர்வமான சமாதான வழிகளில் பாடுபட வேண்டியது எல்லா இந்துத் தலைவர்களின் கடமையாகும் என்று மேலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது''.[1]

திரு. சப்ரு பின்வருமாறு கூறினார் : தாம் மேற்கொண்ட லட்சியத்திற்காக டாக்டர் அம்பேத்கர் வீரமாகப் போராடினார். நாட்டின் எதிர்கால வாழ்வில் ஒரு நல்ல போராளியாக இருக்கப் போவதாகவும் அவர் வாக்குறுதியளித்தார்''

புனா ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்யும் தீர்மானத்தை ஆதரித்து டாக்டர் அம்பேத்கர் பேசியபோது பலத்த கரகோஷம் எழுந்தது.

அவர் கூறினார்: ''சில தினங்களுக்கு முன்பு எந்த மனிதரும் என்னைவிட மிக அதிகமாக இக்கட்டான நிலையில் வைக்கப்பட்டிருக்க மாட்டார் என்று கூறுவது எல்லா வகையிலும் மிகைப்படுத்தப்பட்ட கூற்று அல்ல என்று நம்புகிறேன். என் முன் வைக்கப்பட்ட இரு கஷ்டமானவற்றில் ஒன்றை நான் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது.

ஒரு புறம், இந்தியாவில் மிகச் சிறந்த மனிதரின் உயிர் காப்பாற்றப்பட வேண்டியிருந்தது. இன்னொருபுறம் வட்டமேஜை மாநாட்டில் எந்த சமூகத்தின் நலன்களை பாதுகாக்க நான் முயன்றேனோ அந்த பிரச்சினையும் இருந்தது. நம் அனைவரின்

1. எழுத்தும் உரைகளும், தொகுப்பு 9, ப-103

ஒத்துழைப்பால் மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றவும் அதே சமயம் எதிர்காலத்தில் ''ஒடுக்கப்பட்ட'' சமூகத்தினரின் உரிமைகளைப் பாது காக்கும் அவசியத்திற்கு ஒரு தீர்வு காணவும் முடிந்தது என்று கூற முடிவதில் மகிழ்ச்சி கொள்கிறேன். இந்த எல்லாப் பேச்சுவார்த்தை களிலும் அதிக அளவிலான பெருமை மகாத்மா காந்தி அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டுமெனக் கருதுகிறேன். நான் அவரைச் சந்தித்த போது அவருக்கும் எனக்கும் இடையே பொதுவான அம்சங்கள் அதிகம் இருந்தது கண்டு பெரிதும் வியப்படைந்தேன் என்பதை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும் (கரகோஷம்).

உண்மையில் அவரிடம் எடுத்துச்செல்லப்பட்ட பிரச்சினை கள் பற்றி சர். தேஜ் பகதூர் சப்ரு உங்களுக்கு கூறியிருக்கிறார். அவை மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். வட்டமேஜை மாநாட்டில் எனது கருத்துக்களிலிருந்து பெரிதும் மாறுபட்ட கருத்துக்களை கொண்டிருந்த ஒரு மனிதர் என்னைக் காப்பாற்ற- மறுதரப்பில் உள்ளவர்களை அல்ல- எப்படி உடனே முன் வந்தார் என்பதைப் பார்த்தபோது நான் வியப்பால் திக்குமுக்காடிப் போனேன். மிகவும் இக்கட்டான நிலையிலிருந்து என்னை விடு வித்ததற்காக மகாத்மாவிற்கு நான் பெரிதும் நன்றிக் கடன்பட் டுள்ளேன்.

எனது ஒரே வருத்தம் வட்டமேஜை மாநாட்டில் மகாத்மா ஏன் இந்த கண்ணோட்டத்தை மேற்கொள்ளவில்லை என்பதுதான். அப்போது என்னுடைய கருத்து விஷயத்தில் இதே பரிவை அவர் காண்பித்திருந்தால், இந்தக் கடுமையான சோதனைக்கு அவர் தம்மை உட்படுத்திக் கொண்டிருக்க வேண்டிய அவசியமிருந்திருக்காது. எனினும் இவை எல்லாம் நடந்து முடிந்துபோன விஷயங்கள். இப்போது இந்தத் தீர்மானத்தை ஆதரிக்க நான் முன்வந்திருக் கிறேன் என்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் எல்லோரின் ஆதரவையும் இந்த ஒப்பந்தம் பெறுமா என்று பத்திரிகைகள் கேள்வி எழுப்பியுள்ளன. நான் தெளிவாக ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். என்னைப் பொறுத்தவரையிலும் எனக்கு ஆதரவாக நிற்கும் கட்சியைப் பொறுத்தவரையிலும் இந்த ஒப்பந்தத்திற்கு ஆதரவாக நாங்கள் இருப்போம் என்பதை உறுதியுடன் என் சார்பிலும் நம்மிடையே இங்கு இருக்கும் ஏனையோர் சார்பிலும் கூறிக்கொள்கிறேன். இதுபற்றி எந்த சந்தேகமும் இருக்க வேண்டியதில்லை. எனக்குள்ள

ஒரே கவலை என்னவெனில் இந்து சமூகம் இதை ஒப்புக்கொள்ளுமா என்பதுதான் (குரல்கள், ஆம், நாங்கள் ஒப்புக் கொள்வோம்). துரதிருஷ்டவசமாக, இந்து சமூகம் ஓர் ஒன்றிணைந்த சமூகம் அல்ல. மாறாக அது பல சிறிய சமூகங்களின் கூட்டமைப்பாகும். இந்துக்கள் இந்த ஆவணத்தைப் புனிதமானதாகக் காண்பர் என்றும் கண்ணிய உணர்வுடன் செயல்படுவர் என்றும் உறுதியாக நம்பு கிறேன்.

நான் சொல்ல வேண்டிய மற்றொரு விஷயத்தையும் கூற விரும்புகிறேன். இந்தப் பேச்சுவார்த்தைகளில் கலந்துகொண்ட எல்லா நண்பர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். அதிலும் முக்கியமாக தேஜ் பகதூர் சப்ருவையும் திரு.ராஜகோபா லாச்சாரியையும் குறிப்பிட்டுக் கூறவிரும்புகிறேன். சர் தேஜ் பகதூர் இல்லாவிடில், எல்லா விஷயங்களையும் விவாதத்திற்கு கொண்டு வருவது கஷ்டமாக இருந்திருக்கும். ஒரு விஷயத்தை நான் ஒப்புக் கொண்டாக வேண்டும். வகுப்புப் பகைமைக்கு அப்பாற்பட்ட மனிதர் எவரேனும் இந்தியாவில் இருக்கிறார் என்றால் அவர் சர்தேஜ் பகதூர் சப்ருதான் என்பதை, கடந்த இரு ஆண்டுகளாக நடைபெற்ற வட்ட மேசை மாநாட்டில் அவர் பற்றி எனது அனுபவத்தின் வாயிலாக இதை நான் கூற முடியும். அவரது நேர்மை நோக்கும் நியாயத் தன்மையும் புதிய அரசியல் சாசனத்தில் சில பாதுகாப்பு களைப் பெற ஏங்கும் எல்லா சிறுபான்மையினருக்கும் அவர் நம்பிக்கை நட்சத்திரமாகத் திகழ்கிறார்.

எனது நண்பர் ராஜகோபாலாச்சாரியையும் பற்றி நான் அவசியம் குறிப்பிட வேண்டும். பேச்சுவார்த்தைகள் அநேகமாக முறியும் கட்டத்திற்கு நாங்கள் வந்தபோது, எங்களை விடுவிக்க அவர்தான் வந்தார். அவரது நுண்மதியின் துணை இல்லாவிடில் ஒருவேளை ஒப்பந்தம் ஏற்படாமல் போயிருக்கக்கூடும். இந்த காரசாரமான விவாதங்களில் கடுமையான சொற்கள் பறிமாறப் பட்டபோது பண்டித மதன்மோகன் மாளவியா காட்டிய கண்ணியம் மற்றும் பொறுமைக்காக அவருக்கும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

தனித் தேர்தல் தொகுதிகள் நாட்டு நலன்களுக்கு தீங்கானவை என்ற கருத்தை வலியுறுத்தியதால்தான் வகுப்புவாரிப் பிரதிநிதித் துவத் தீர்ப்பில் மாற்றம் கொண்டுவரப்பட்டது. இந்த வாதத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்பதை நான் ஒப்புக்

கொண்டாக வேண்டும். பெரும்பான்மையின்ர் பிரதிநிதித்துவத்திற்கு தனித்தொகுதிகள் தீங்கானவை என்பதை நான் புரிந்துகொள்ள முடியும்; ஆனால், சிறுபான்மையினரைப் பிரதிநிதித்துவப்படுத்த, தனித் தொகுதிகள் தீங்கு விளைவிப்பவை என்பதை என்னால் இன்னமும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

இந்து சமுதாயத்தில் ''ஒடுக்கப்பட்ட'' சாதியினரை ஈர்த்துக் கொள்ளும் பிரச்சினைக்கு கூட்டுத் தொகுதிகள் இறுதியான தீர்வாக இருக்க முடியும் என்று நான் நம்பவில்லை.

பரந்த சமுதாயப் பிரச்சினைக்கு எந்தத் தேர்தல் ஏற்பாடும் ஒரு தீர்வாக இருக்க முடியாது என நான் கருதுகிறேன். எந்த அரசியல் தீர்வுக்கும் அதிகமாகாது அதற்குத் தேவைப்படும். இன்று நாம் செய்துவரும் அரசியல் ஏற்பாட்டிற்கு அப்பாலும் சென்று, ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் இந்து சமுதாயத்தின் பிரிக்க முடியாத பகுதியினராக ஆவதற்கு மட்டுமின்றி சமுதாயத்தில் அவர்கள் ஒரு கௌரவமான இடத்தை, சமத்துவ அந்தஸ்தைப் பெறுவதற்கு வழிமுறைகளைக் கண்டறிவது சாத்தியம் என்றும் நான் நம்புகிறேன்.

''ஒடுக்கப்பட்ட'' சமூகத்தினர் அறியாமையில் மூழ்கி இருக்கும் வரை, சுயமரியாதை உணர்வை பெறாதவரை, இந்து சட்டம் அவர்களுக்கு சாத்தியமாக இருக்கலாம்; ஆனால் அவர்கள் கல்வி அறிவு பெறப்பெற இந்த சமூகச் சட்டங்களின் கீழ் சாமர்த்தியமாக நடந்து கொள்ளத் துவங்குவர்; இந்து சமுதாயத்திலிருந்து அவர்கள் பிரிந்து போகும் ஒரு பேரபாயமும் உள்ளது. இதை உங்கள் மனதில் இருத்திக் கொள்ளும்படி உங்களை வேண்டிக் கொள்கிறேன்; இது விஷயத்தில் ஆவன செய்வீர்களென நம்புகிறேன்''.

ராவ்பகதூர் எம்.ஸி.ராஜா தீர்மானத்திற்கு மேலும் ஆதரவு அளித்தார். சாதி இந்துக்களிடையே ஒரு மனமாற்றத்தை தாம் தெளிவாகப் பார்த்ததாகவும், அதனால்தான் ஒப்பந்தத்தை ஆதரித்ததாகவும் அவர் கூறினார். நாட்டில் உள்ள ''ஒடுக்கப்பட்ட'' சமூகத்தினரின் பேராதரவை இந்த ஒப்பந்தம்பெறும் என்பதில் அவருக்கு சந்தேகமில்லை.

திரு. சி.ராஜகோபாலாச்சாரி கூட்டத் தலைவருக்கு நன்றி நவின்றார்.

மலபாரில் உள்ள குருவாயூர் கோவிலில் ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் நுழைவதற்கான உரிமையை நிலைநிறுத்த திரு. கேளப்பன் அறிவித்துள்ள உண்ணா நோன்பு பற்றி மகாத்மாஜிக்குக் தாம் கடிதம் எழுதப் போவதாக பண்டிட் மாளவியா அறிவித்தார்.

ஞாயிறு அன்று நடந்த இந்துத் தலைவர்கள் மாநாட்டில் கலந்து கொண்டவர்களில் பின்வருபவர்களும் இருந்தனர். சர் தேஜ் பகதூர் சப்ரு, சர் லல்லுபாய் சமால்தாஸ், சர் புருஷோத்தம்தாஸ் தாக்கூர்தாஸ், சர் சுனிலால் மேத்தா, சர்கோவிந்த் மட்கோகர், திரு.எம்.ஆர்.ஜெயகர், பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ. திரு.கே. தேவ்கர், திரு.எம்.பி.கராஞ்சியா, திரு.கே.நடராஜன், ராவ்பகதூர் எம்.சி.ராஜா, டாக்டர் அம்பேத்கர், திரு.பி.பாலு, திருமதி.டி.ஜி. தால்வி, செல்வி நடராஜன், திருமதி ஹான்சா மேத்தா, திருமதி அவந்திகாபாய் கோகலே, திரு.பி.எஸ்.காமத், திரு.மணி சுபேதார், திரு.ஜி.டி.பிர்லா, திரு.டி.வி.கைத்தான், திரு.பி.எப். பரூச்சா, டாக்டர் சோலங்கி, டாக்டர் சோயிட்ராம் தத்வானி, திருமதி சிமன்லால் செதல்வாத், திரு. வால்சந்த், ஹிராசந்த், பி.ஜே. தியோருக்கர், திரு. ராஜகோபாலாச்சாரி, திரு.தேவதாஸ் காந்தி, திரு.டி.பிரகாசம் மற்றும் பாபு ராஜேந்திர பிரசாத்.[1]

1932 செப்டம்பர் 26ம் தேதி மேன்மை தங்கிய மன்னர் பிரான் அரசாங்கம் புனா ஒப்பந்தத்திற்கு அங்கீகாரம் அளிக்க, பாராளு மன்றத்திற்குச் சிபாரிசு செய்யப் போவதாக அறிவித்தது.

1932 செப்டம்பர் 26ம் தேதி திங்கட்கிழமை, உள்துறை அமைச்சர் மாண்புமிகு திரு.எச்.ஜி.ஹய்க், மத்திய சட்ட சபையில் அவரது அறிக்கையைச் சமர்ப்பித்தார்.

''வகுப்புவாரித் தீர்ப்பைப் பற்றி: மாண்புமிகு சர்.சி.பி.ராமசாமி அய்யர்: ஐயா, வழக்கமான கேள்வி நேரத்தில் மாற்றம் செய்யும்படி கேட்டுக்கொள்ள அனுமதிப்பீர்களா? ஏனெனில் எனது சக உள்துறை உறுப்பினர் ஒரு முக்கியமான அறிக்கையை வெளியிட வேண்டியுள்ளது. அறிக்கையை கேட்கும்போது இந்த மாற்றம் நியாயமானது என்று அவை என்னோடு உடன்படும் என்றும் உறுதி யாக நம்புகிறேன். அவ்வாறு செய்ய எங்களை அனுமதிப்பீர்களா?

1. பாம்பே கிராணிகில், 26, செப்டம்பர் 1932.

அவைத்தலைவர் மாண்புமிகு இப்ராகிம் ரகீம்டூலா: என்ன அறிக்கை?

மாண்புமிகு சி.பி.ராமசாமி ஐயர்: வகுப்புவாரி தீர்ப்பு குறித்தும், ஒடுக்கப்பட்ட வகுப்பினர் மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அரசின் முடிவு பற்றியும் உள்துறை அமைச்சர் ஓர் அறிக்கை சமர்ப்பிக்க விரும்புகிறார்.

அவைத் தலைவர் (மாண்புமிகு இப்ராகிம் ரகீம்டூலா) : இந்தக் கட்டத்தில் அறிக்கையைச் சமர்பிக்க தனிச்சலுகை அளித்து அங்கீகரிக்கிறது.

மாண்புமிகு எச்.ஹி.ஹய்க் (உள்துறை அமைச்சர்): எய்தப் பெற்ற உடன்பாடு சம்பந்தமாக மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் சர்க்கார் விடுத்த அறிக்கையை தங்கள் அனுமதியுடன் அவையில் படிக்கிறேன். புதிய சட்ட சபைகளில் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு பிரதிநிதித்துவம் பெறுவது பற்றியும் மற்றும் அவர்களது நலம் பற்றியும் புனாவில் சனிக்கிழமை ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் மற்றும் பிற இந்து சமூகத்தினருக்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதை அறிந்து மன்னரின் சர்க்கார் மிகவும் திருப்தியடைகிறது. சென்ற ஆகஸ்ட் 4ம் தேதி சர்க்கார் தீர்ப்பில் கண்டுள்ள பொதுத் தொகுதிகள், அத்துடன் இணைந்த ஒடுக்கப்பட்ட வகுப்பினர் விசேஷ தொகுதிகள் என்பதற்கு பதிலாக ஒப்பந்தம் பொதுத் தொகுதிகளுக்கும் அத்துடன் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் என்ற முறையில் நிரப்பப்பட வேண்டும் என்ற நிபந்தனைகளுக்கு உட்பட்டு, ஒதுக்கப்படுகின்றன. சமூகங்களிடையே ஒப்பந்தம் இல்லாதபோது அளிக்கப்பட்ட தீர்ப்பில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக போதுமான பாதுகாப்பு அளிப்பது பற்றியும் இந்த வகுப்பினரின் நலன்கள் புதிய சட்டசபைகளில் கவனிக்கப்பட வேண்டும் என்பதே சர்க்காரின் அக்கறையாக இருந்தது. இப்பொழுது மன்னர் சர்க்காருக்கு அனுப்பியுள்ள திட்டம் இந்த நோக்கத்திற்கு போதுமானது என்று ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் மற்றும் மற்ற இந்துக்களின் பிரதிநிதிகள் கூட்டாகச் சேர்ந்து நம்புவதால், தங்களது தீர்ப்பான பாரா 4ல் வகுத்தபடி, தீர்ப்பின் 9வது பாராவில் வகை செய்யப்பட்டதற்குப் பதிலாக, மாகாண சட்ட சபைகளுக்கு பிரதி நிதித்துவம் அளிப்பது பற்றிய ஷரத்துக்களை ஏற்பதற்காக உரிய சமயத்தில் அரசாங்கம், பார்லிமென்டுக்குச் சிபாரிசு செய்யும் (கரகோஷம்)

ஒப்பந்தபடி, ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு ஒதுக்கப்பட்ட இடங்களையும் சேர்த்து பொது இடங்களின் மொத்த எண்ணிக்கை, மன்னர் சர்க்காரின் முடிவில் வகை செய்யப்பட்டிருந்த பொது இடங்கள், அத்துடன் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கான விசேஷ இடங்களும் சேர்ந்து எத்தனை இடங்கள் இருந்ததோ அதே எண்ணிக்கையில் ஒப்பந்தப்படியான மொத்த இடங்கள் இருக்கும் என்று புரிந்து கொள்ளப்படுகிறது.

தங்களது ஆகஸ்ட் தீர்ப்பின் எல்லை வட்டத்திற்கு வெளியே சில கேள்விகளை ஒப்பந்தம் கையாள்கிறது என்று மன்னர் அரசாங்கம் கவனத்தில் கொள்கிறது. ஷரத்துகள் 8ம் 9ம் பொதுவான விஷயங்களைக் குறிப்பிடுகிறது. அவை நடைமுறைப்படுத்தப்படுவது, பிரதானமாக அரசியல் சாசனம் செயல்படுவதை பொறுத்து இருக்கலாம். தீர்ப்பின் நோக்கத்திற்கு (எல்லைக்கு) அப்பால் இரண்டு மற்ற விஷயங்கள் உள்ளன (1) ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் ஓட்டுரிமை, ஓட்டுரிமை (லார்டு லோத்தியனின்) கமிட்டி சிபாரிசு செய்தபடி இருக்க வேண்டுமென்று ஒப்பந்தம் ஆலோசிக்கிறது. ஒடுக்கப்பட்ட சமூகத்தினரின் வாக்குரிமை அளவு (பொதுவாக மற்ற இந்துக்களுக்கும்தான்) மற்ற சமூகங்களுக்கு ஏற்ப தீர்த்து வைக்க வேண்டும். விஷயம் முழுவதும் மன்னர் சர்க்காரின் பரிசீலனையில் இருக்கிறது. (2) ஒப்பந்தம் சட்டசபைகளுக்கும் ஒடுக்கப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுப்பதற்கு ஒரு குறிப்பிட்ட முறைக்கு வகை செய்கிறது. இதுவும் இந்தத் தீர்ப்பின் (விதிகளுக்கு) எல்லைக்கு அப்பால் உள்ளது. சட்ட சபைகளுக்கு தேர்தல் என்ற ஒரு மொத்தத்தின் பகுதியாக இது பரிசீலனையில் இருக்கிறது. பகுதி பகுதியாக எந்த முடிவும் எடுக்க முடியாது. இந்த இரண்டு விஷயங்கள் மீது கூறப்படுவது, ஒப்பந்தத்தில் முன் வைக்கப்பட்டுள்ளவற்றிற்கு மன்னர் சர்க்கார் எதிராக உள்ளது என்று கருதக்கூடாது; ஆனால் இந்த விஷயங்கள் இன்னமும் பரிசீலனையில் உள்ளன. தவறாகப் புரிந்து கொள்வதைத் தடுப்பதற்காக, 18 சதவிகிதம் என்பதை, பிரிட்டிஷ் இந்தியாவில் மத்திய சட்டசபைக்கு ஒதுக்கப்படும் இடங்களில் எத்தனை இடங்கள் ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு ஒதுக்கப்பட வேண்டும் என்பது அவர்களுக்கும் மற்ற இந்துக்களுக்குமிடையே தீர்வு செய்யப்பட வேண்டிய விஷயமாகும் (கரகோஷம்)[1]*

1. (சட்ட சபையில் விவாதங்கள்-அதிகாரப்பூர்வ அறிக்கை தொகுப்பு V, 1932, பக்கம் 1307-08, 1932 செப்டம்பர் 26), மறுபதிப்பு, கயிர்மோடு, தொகுப்பு, ப.57-59

''மாலையில் சிறைச்சாலையின் முற்றத்தில் பிரார்த்தனைகள் நடைபெற்றன. பின் கஸ்தூரிபாய் ஆரஞ்சுப் பழரசத்தை காந்திக்கு அளித்தார்; அவரது சிஷ்யர்கள் மற்றும் அவரைப் போற்றுகிறவர்கள்-கவிஞர் தாகூர், சரோஜினி நாயுடு, சர்தார் பட்டேல், சுவரூப் ராணி நேரு மற்றவர்கள் உட்பட 200 பேர்கள் திரண்டிருந்த கூட்டத்தில் காந்தி தமது உண்ணா நோன்பை முடித்துக் கொண்டார்.''[1]

## மனித சமுதாயத்தின் அறைகூவலுக்குச் செவிமடுத்து திரு. காந்தியின் உயிரைக் காப்பாற்றினேன்.

இதுபற்றி டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூறினார்:

இந்தக் கதையின் விவரம் பற்றி ''வரலாற்று ரீதியான உண்ணா நோன்பு'' என்ற தலைப்பில் அழகான ஆடம்பரமான சொற்களுடன் ஒரு தொகுப்பில் திரு.பியாரிலால் கூறப்பட்டது; ஆர்வமுடையவர்கள் அதைப் படித்துப் பார்க்கலாம். ஆனால், அது ஒரு பாஸ்வெல்லால் (Bos well) எழுதப்பட்டது போன்று உள்ளது. அதாவது அறிஞர் டாக்டர் ஜான்சன் (Dr. Johnson) வாழ்க்கை வரலாற்றை வீரவழிப் பாட்டியல்புடையதாய் பாஸ்வெல் எழுதியது போல் உள்ளது என்று அவரை நான் எச்சரிக்க விரும்புகிறேன். அதற்கு வேறொரு பக்கமும் உள்ளது. அதை விளக்கிக் கூற நேரமோ, இடமோ இல்லை. திரு.காந்தியின் உண்ணாவிரதம் துவங்கும் சமயம் அவருடைய சாமார்த்தியச் செயலைப் பற்றி நான் வெளியிட்ட அறிக்கையை கவனத்தில் கொள்ளும்படி மட்டுமே நான் கூறமுடியும். இதுமட்டும் சொன்னால் போதும். திரு.காந்தி சாகும் வரையிலான ஒரு உண்ணா நோன்பு என்று அவர் பிரகடனப் படுத்திய போதிலும் அவர் இறக்க விரும்பவில்லை. அவர் வாழவே பெரிதும் விரும்பினார்.

எப்படியாயினும், உண்ணா நோன்பு ஒரு பிரச்சினையைத் தோற்றுவித்தது. அவர் உயிரை காப்பதற்கான ஒரே வழி, தமது உள் உணர்வை அதிகம் எது புண்படுத்துகிறது என்று திரு. காந்தி கூறினாரோ அந்த வகுப்புவாரி பிரதிநிதித்துவத் தீர்ப்பை மாற்றுவது தான். பிரிட்டிஷ் அரசாங்கம் தானாகவே அதைத் திரும்பப் பெறவோ அல்லது திருத்தி அமைக்கவோ செய்யாது என்று பிரதம மந்திரி தெளிவாக்கியிருந்தார். ஆனால், சாதி இந்துக்களும் தீண்டத்தகாதவர்

1. கீர், பக்கம் 215.

களும் ஒப்புக் கொள்ளும் ஒரு சூத்திரத்தை (formula) மாற்றாக ஏற்றுக் கொள்ள அவர்கள் தயாராக இருந்தனர். வட்டமேஜை மாநாட்டில் தீண்டத்தகாதவர்களை பிரதிநிதித்துவப்படுத்த எனக்கு வாயப்புக் கிடைக்காதிருந்தால், அதற்கு (ஒப்பந்தம்) நானும் ஒப்புதல் அளிக்காவிடில், அது ஏற்றுக்கொள்ளத்தக்கதாக ஆகாது என்று கருதப்பட்டது. விசித்திரமான உண்மை என்னவெனில், இந்தியா வின் தீண்டத்தகாதவர்களின் தலைவன் என்ற எனது நிலையைப் பற்றி காங்கிரஸ் காரர்கள் ஆட்சேபம் எதுவும் எழுப்பவில்லை; அது எதார்த்த உண்மை என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஒரு வில்லன் என்று நான் கருதப்படாமல், அந்த நேரத்தின் நாயகன் என்று இயல்பாகவே எல்லோருடைய கவனமும் என் மீது திரும்பியது.

என்னைப் பொறுத்தவரை, நான் அப்பொழுது இருந்ததை விட எந்த மனிதரும் மிகப் பெரிய, கடுமையான இக்கட்டான (Dilemma) நிலையில் இருந்திருக்க மாட்டார் என்று கூறுவது மிகைப்படுத்தப்பட்டதாகாது. இரு மாற்று வழிகளுக்கிடையே ஒன்றை நான் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. பொதுவான மக்கள் சமுதாயத்தில் ஒரு அங்கம் என்ற முறையில் காந்தியை நிச்சய சாவிலிருந்து காப்பாற்ற வேண்டிய கடமை என் முன்னால் இருந்தது. பிரதம மந்திரி தீண்டத்தகாதவர்களுக்கு அளித்த அரசியல் உரிமை களை அவர்களுக்காக காப்பாற்ற வேண்டிய பிரச்சினையும் என் முன் இருந்தது. திரு.காந்திக்குத் திருப்தியளிக்கும் முறையில் வகுப்புவாரித் தீர்ப்பை மாற்றி அமைக்க ஒப்புக் கொண்டதன் மூலம் மனித சமுதாயத்தின் அறைகூவலுக்கு செவிசாய்த்து (மதிப்பளித்து) திரு.காந்தியின் உயிரைக் காப்பாற்றினேன். இந்த ஒப்பந்தம் புனா ஒப்பந்தம் என்று அறியப்படுகிறது.

ஒப்பந்தத்தின் ஷரத்துகள் திரு. காந்தியால் ஏற்றுக்கொள்ளப் பட்டன; அவற்றை அரசாங்கம் உட்படுத்தி இந்திய அரசாங்கச் சட்டத் தில் நடைமுறைப்படுத்தியது. புனா ஒப்பந்தம் மாறுபட்ட பிரதி பலிப்புகளை உண்டாக்கியது. தீண்டத்தகாதவர்கள் வேதனைப் பட்டனர். அவ்வாறு அவர்கள் துக்கப்பட ஒரு காரணமும் உள்ளது. எனினும், இதை ஏற்றுக் கொள்ளாத மனிதர்களும் உள்ளனர். பிரதம மந்திரி தமது வகுப்புவாரித் தீர்ப்பில் தீண்டத்தகாதவர் களுக்கு அளித்த இடங்களை விட அதிகம் அவர்களுக்கு புனா ஒப்பந்தம் வழங்கியுள்ளது என்பதைச் சுட்டிக்காட்ட அவர்கள் ஒருபோதும் தவறுவதில்லை. வகுப்புவாரி தீர்ப்பு அவர்களுக்கு 78 இடங்கள் அளிக்க, புனா ஒப்பந்தம் 148 இடங்களை தந்தது

என்பது உண்மையே. இதிலிருந்து வகுப்புவாரித் தீர்ப்பில் அளிக்கப் பட்டதைவிட அதிகமாக அவர்களுக்கு புனா ஒப்பந்தம் வழங்கி யுள்ளது என்று முடிவு செய்வது வகுப்புவாரித் தீர்ப்பு உண்மையில் தீண்டத்தகாதவர்களுக்கு என்ன வழங்கியது என்பதைப் பார்க்க மறுப்பதாகும்.

வகுப்புவாரித் தீர்ப்பு தீண்டத்தகாதவர்களுக்கு இரண்டு நலன்களை (அனுகூலங்களை) வழங்கியது அவை, (i) தாழ்த்தப்பட்ட வர்களின் தனி வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படும் இடங்கள் நிர்ணயிக்கப்பட்டது. (ii) இரட்டை வாக்கு, ஒன்று தனிவாக்காளர் பட்டியல் மூலம், பொது வாக்காளர் தொகுதிகளில் மற்றொன்று.

இப்பொழுது, புனா ஒப்பந்தம் நிர்ணயிக்கப்பட்ட இடங் களின் அளவை அதிகரித்தது எனில், இரட்டை வாக்கு உரிமையை அது எடுத்துக் கொண்டுவிட்டது. இடங்களின் எண்ணிக்கையின் இந்த உயர்வு, இரட்டை வாக்களிப்பதை இழந்ததற்கு நஷ்டஈடாகக் கொள்ள முடியாது. வகுப்புவாரித் தீர்ப்பில் கொடுக்கப்பட்ட இரண் டாவது வாக்கு உரிமை விலை மதிக்க முடியாத சிறப்புரிமையாகும். ஒரு அரசியல் ஆயுதம் என்ற அதன் மதிப்பு கணக்கிலடக்க முடியாதது. ஒவ்வொரு தொகுதியிலும் தீண்டத்தகாதவர்களின் வாக்கு பலம் பத்துக்கு ஒன்றாகும். சாதி இந்துக்களின் அபேட்சகர் களின் தேர்தலில் இந்த வாக்குபலம் உபயோகிக்கும் உரிமை இருந்தால், பொதுத் தேர்தல் பிரச்சினையில் தீர்மானிக்கும்- ஆணை யிடும்படி இல்லாவிடினும் ஒரு நிலையில் தீண்டத்தகாதவர்கள் இருந்திருப்பர். தனது தொகுதியில் எந்த சாதி இந்து ஆபேட்சகரும் தீண்டத்தகாதவர்களை அலட்சியப்படுத்த துணிந்திருக்க மாட்டார். அல்லது தீண்டத்தகாதவர்களின் வாக்குகளை அவர் சார்ந்திருக்கும் படி செய்யப்பட்டால் அவர்களுக்கு விரோதமான நிலையில் அவர் இருக்கமாட்டார். இன்று வகுப்புவாரித் தீர்ப்பு வழங்கியதைவிட தீண்டத்தகாதவர்களுக்கு சில அதிக இடங்கள் உள்ளன. அவர் களுக்கு இருப்பது இது மட்டுமே. ஒரு பாதி உறுப்பினர்கள் விரோத மாக இல்லையென்றாலும் அலட்சியமாக உள்ளனர். இரட்டை வாக்களிப்பு முறையுடன் வகுப்புவாரித் தீர்ப்பு அமுலில் இருந்தால், தீண்டத்தகாதவர்கள் சில குறைவான இடங்களைப் பெற்றிருப்பர்; ஆனால் ஒரு பாதி உறுப்பினர்கள் தீண்டத்தகாதவர்களின் ஒரு உறுப்பினராக இருந்திருப்பர். இடங்களின் எண்ணிக்கை அதிகரிப்பு தீண்டத்தகாதவர்களுக்கு தனித் தொகுதி மற்றும் இரட்டை

வாக்குரிமைக்கு நஷ்டஈடாக ஆக முடியாது. இந்துக்கள், புனா ஒப்பந்தத்தைக் கொண்டாடாத போதிலும், அதை அவர்கள் விரும்ப வில்லை. காந்தியின் உயிரை காப்பதற்கான கலவரமான சூழ்நிலை யில் அவரது உயிரைக் காப்பதற்கான விலை மிக அதிகமாக இருக்க லாம் என்ற உணர்வுபூர்வமாக திட்டவட்டமான எண்ணம் இருந்தது. எனவே ஒப்பந்தத்தின் ஷரத்துகளை கண்டபோது, அதை மிக திட்டவட்டமாக அவர்கள் விரும்பவில்லை. ஆனால், அதை நிரா கரிக்கும் தைரியம் அவர்களுக்கு இருக்கவில்லை. இந்துக்கள் விரும்பாமலும், தீண்டத்தகாதவர்களால் ஏற்கப்படாமலும், இரு பக்கத்தினராலும் புனா ஒப்பந்தத்திற்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டு இந்திய அரசாங்கச் சட்டத்தில் இணைக்கப்பட்டது.[1]

புனா ஒப்பந்தத்திற்கு பின்பு, மூன்றாவது வட்டமேஜை மாநாடு இங்கிலாந்தில் நடைபெற்றது. இந்த மாநாட்டில் கலந்து கொள்ள 1932 நவம்பர் 7 ம் தேதி டாக்டர் அம்பேத்கர் இங்கிலாந் திற்கு கிளம்பினார். காந்தியின் உண்ணாவிரதமும் புனா ஒப்பந்தமும் எங்கிலும் விவாதிக்கப்பட்ட விஷயங்களாகும்.

''கப்பலில் பல பிரயாணிகள் இந்தியாவை உலுக்கிய புனா ஒப்பந்தம் பற்றியும் காந்தியின் உண்ணா நோன்பு பற்றியும் பேசினர். உண்ணா நோன்பு அவர்களிடம் ஆழமான உணர்வை ஏற்படுத்தியது. அம்பேத்கரைச் சுட்டிக்காட்டி பேசிய ஒரு ஐரோப்பிய பயணி, ''இந்திய வரலாற்றின் புதிய பக்கங்களை எழுதிக் கொண் டிருக்கும் இளைஞர் இவர்தான்'' என்று சொன்னார்.[2]

● ● ●

1. கட்டுரைகளும் உரைகளும், தொகுப்பு 9, ப.87-90
2. கீர், ப.120

# பிரிவு - IV

## நாசிக்கில் உள்ள கலாராம் கோவில் நுழைவுச் சத்தியாக்கிரகமும், கோவில் நுழைவு இயக்கமும்

# அரசியலுக்கும் கல்விக்கும் சக்தியையும் ஆதாரங்களையும் ஒருமுகப்படுத்திச் செயல்படல்

''இந்தியாவின் வரலாற்றில், 1930ம் ஆண்டு செயல் மற்றும் எதிர் செயலின் ஆண்டாகும். ஒரு புதிய சிந்தனைப் போக்கையும் ஒரு புதிய அணுகுமுறையையும் அது கொண்டு வந்தது. அடக்குமுறையில் புதிய நடவடிக்கைகள் மற்றும் புதுமுறையான சமரசம் செய்து கொள்வதும், இன்னும் சரியாகச் சொன்னால், அது சத்தியாகிரக காலகட்டமாகும். இந்த ஆண்டில்தான் காங்கிரஸின் உயர் தளபதியான மகாத்மா காந்தி நாட்டின் விடுதலைக்காக ஒரு மகத்தான இயக்கத்தை 1930 மார்ச் 12ல் துவக்கினார். தன்னை வருத்திக் கொண்டு அமைதியாக போராடும் களமாக நாடு முழுவதையும் ஆக்கினார்; மக்கள் கூட்டம் பெரும் எண்ணிக்கையில் குதிரை படைகளையும், துப்பாக்கி சூடுகளையும் நீண்டகால சிறை வாழ்க்கையையும் எதிர்கொண்டனர்.

காந்தியின் தண்டியாத்திரைக்கு பத்து நாட்களுக்கு முன்பு, டாக்டர் அம்பேத்கர் ஆலயப் பிரவேச இயக்கத்தை நாஸிக்கில் தொடங்கினார். இந்த இயக்கத்திற்கு மூன்று மாதங்களுக்கு மேலாக தயாரிப்புகள் நடைபெற்று வந்தன. தமது கடிதங்கள் மூலமும் சிஷ்யர்கள் மூலமும் பம்பாயிலிருந்து இந்த இயக்கத்திற்கு வழிகாட்டி, உற்சாகப்படுத்தி திட்டமிட்டு செயல்படுத்தினார். ஒடுக்கப்பட்ட சாதியினர் நாஸிக்கில் ஒரு சத்தியாகிரக குழுவை அமைத்து, அதன் செயலாளர் பாபுராவ் ஹேவார்டு மூலம், ஆலயத்தின் அறக்காவலர்கள் தீண்டத்தகாத இந்துக்களுக்கு ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் ஆலயத்தைத் திறந்துவிடாவிடில், அவர்கள் சத்தியாகிரகத்தை துவங்குவர் என்று அவர்களுக்கு தெரியப்படுத்தினர். அதே சமயத்தில், நாஸிக் வந்து அங்கு ஸ்ரீராமர் ஆலயத்தில் வழிபடும் தங்களது உரிமையை நிலைநாட்ட நாஸிக்குக்கு வரும்படி ஒடுக்கப்பட்ட சாதியினருக்கு உணர்ச்சிகரமான அறைகூவல் விடுக்கப்பட்டது. இந்த அழைப்பை ஏற்று விசேஷமாக நாஸிக்கில் ஒடுக்கப்பட்ட சாதியினர் வாழும் வட்டாரத்தில் அமைக்கப்பட்டிருந்த பந்தலில் செயல் வீரர்களும் பிரதிநிதிகளும் சுமார் 15000 பேர் கூடியிருந்தனர். அங்கு இருந்தவர்களில் முக்கியமானவர்கள் தியோராவ் நாயக், ராஜ்போஜ், பிரதனன், சிவ்டார்கர், படிட்பானதாஸ் மற்றும் பி.ஜி.கெர் முதலியோர்.

கடைசியில் செயலுக்கான நாள் விடிந்தது. அது 1930 மார்ச் 2, ஞாயிறு காலை 10 மணிக்கு நிலைமையை பரிசீலிக்கவும் சத்தியாகிரத்தை துவக்குவதற்கான வழிமுறைகள் பற்றி முடிவு செய்யவும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையின் கீழ் பந்தலில் ஒரு மாநாடு நடைபெற்றது.[1]

''கலாராம் ஆலயத்தில் நுழைவது பற்றி டாக்டர் அம்பேத்கர் சிந்தனையைத் தூண்டும் ஒரு உரையை ஆற்றினார். அவர் சொன்னார், இன்று நாம் ஆலயத்தில் நுழைய இருக்கிறோம். இந்த கோயிலில் நுழைவது, பிரச்சினை முழுவதையும் தீர்த்து வைக்காது. நமது பிரச்சினை பன்முகத்தன்மை கொண்டது. நமது பிரச்சினை அரசியல், சமூக, மத, பொருளாதார கல்வி முதலியவை கொண்டது. கலாராம் கோவிலில் நுழைவு இந்து மனதிற்கு ஒரு வேண்டுகோள் ஆகும். காலம் காலமாகச் சாதி இந்துக்கள் நமது உரிமையைப் பறித்தனர். இந்தக் கோவில் நுழைவுச் சத்தியாக்கிரகம் எழுப்பும் பிரச்சினை இந்துக்கள் நமது மனிதாபிமான உரிமையை அளிப்பார்களா என்பது. உயர்சாதி இந்துக்கள் நம்மை கேவலப்படுத்தி பூனை, நாய்களைவிடவும் மோசமாக நடத்தினர். மனிதன் என்ற உரிமையை இந்துக்கள் நமக்கு அளிப்பார்களா என்று நாம் அறிந்துகொள்ள விரும்புகிறோம். இந்தக் கேள்விக்கு சத்தியாக்கிரகம் பதில் அளிக்கும். உயர் சாதி இந்துக்களிடை ஒரு மன மாற்றத்தைக் கொண்டு வருவதற்கு செய்யப்படும் முயற்சிகளில் சத்தியாகிரகமும் ஒன்று. எனவே இந்த முயற்சி வெற்றி பெறுவது இந்து மனோநிலை யைப் பொறுத்து இருக்கும்.

ராமர் கோவிலில் நுழையும் உரிமை நமது உண்மையான பிரச்சினைக்கு தீர்வு அளிக்கப்போவதில்லை. நமது வாழ்வில் அது ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தாது. இந்துக்களின் மனதை அறிந்து கொள்ள இது ஒரு சோதனையாகும். ''மனிதன், மனிதனாக நடத்தப்பட வேண்டும். அவனுக்கு (மனிதாபிமான) மனித உரிமைகள் அவசியம் அளிக்கப்பட வேண்டும். மனித கௌரவம் நிலை நிறுத்தப்பட வேண்டும்'' என்ற உயர்வான லட்சியங்களை ஏற்றுக் கொள்ள இந்து மனம் விரும்புகிறதா என்பது சோதனை செய்யப்படப் போகிறது. இந்த லட்சியத்தை அடைவதற்காக நாம் சத்தியாக் கிரத்தை துவக்கியுள்ளோம். பிரதான கேள்வி என்னவெனில், உயர்ஜாதி இந்துக்கள் இந்த அம்சங்களை ஏற்று அதற்கேற்பச் செயல்படுவார்களா என்பதுதான்.

1. கீர், ப.136.

கோவிலில் உறையும் கடவுள் கல்லால் செய்யப்பட்டது என்பதை நாம் அறிவோம். அவரைச் சும்மா உற்று நோக்குவதோ அல்லது அவரை வழிபடுவதோ நமது பிரச்சினையை எவ்வகையிலும் தீர்த்து வைக்காது. இதுவரை லட்சக் கணக்கான மக்கள் இந்தக் கோயிலுக்கு வந்து கடவுளைக் கண்கொண்டு பார்த்திருப்பர். இந்தச் செயலால் அவர்களின் அடிப்படை பிரச்சினைக்கு தீர்வு கிடைத்தது என்று எவராவது சொல்வரா? இதை நாம் அறிவோம். ஆனால் நமது இன்றையச் சத்தியாகிரகம் இந்துக்களின் இருதயத்தில் ஒரு மாற்றத்தைக் கொண்டுவருவதற்கான ஒரு முயற்சி. இந்தக் கோட்பாடு ரீதியான நிலையில் இருந்து சத்தியாக்கிரகத்தை துவக்கியுள்ளோம்.[1]

மதியம் மாநாடு ஒத்தி வைக்கப்பட்டு பிற்பகல் ஒன்றரைக்கு மீண்டும் கூடியது.

பிற்பகல் 3 மணிக்கு கூட்டத்தில் இருந்தவர்கள் தங்களை நான்கு பகுதிகளாகப் பிரித்து கொண்டு ஒரு மைல் நீள ஊர்வலமாகச் சென்றனர். நாஸிக்கின் வரலாற்றில் இதுதான் மிகப்பெரிய ஊர்வலமாகும். ஒடுக்கப்பட்ட சாதியினரில் பலர் ராணுவ வாழ்க்கை வாழ்ந்திருந்த அனுபவம் பெற்றவர்கள்; எனவே அந்த ராணுவ பாணியில் பாண்ட் வாத்தியம் இசைக்கப்பட்டது. இதையடுத்து சாரணர் அணி சென்றது. தங்கள் கண்ணோட்டத்தில் ஏற்பட்டுள்ள புரட்சிகரமான மாற்றத்தை காண்பிப்பதுபோல் 500 பெண் சத்தியாகிரகிகள் பின்தொடர்ந்தனர்; அவர்களைத் தொடர்ந்து உயர்வான உணர்வுடன் பெரும் மக்கள் கூட்டம் ஊர்வலத்தில் கலந்து கொண்டது; அவர்கள் கட்டுப்பாட்டு உணர்வுடனும், அமைதியாகவும் உறுதியாகவும் சென்றனர். ஊர்வலம் கோவிலின் கிழக்கு வாயிலுக்கு வந்ததும், ஜில்லா மாஜிஸ்ரேட்டும் (நீதிபதி) போலீஸ் சூப்பிரன்டென்டும் கோவில் வாயில் பக்கம் சென்றனர். கோவிலில் எல்லா வாயில்களும் மூடப்பட்டிருந்ததால், ஊர்வலத்தில் இருந்தவர்கள் கோதாவரி சதுக்கத்தை நோக்கிச் சென்றனர். அங்கு ஊர்வலம் தன்னை ஒரு கூட்டமாக ஆக்கிக்கொண்டது.

அன்று இரவு 11 மணிக்கு, விஷயத்தின் எல்லா அம்சங்களையும் தலைவர்கள் மீண்டும் விவாதித்தனர்; கோவில் வாயிலின் முன்னால் ஒரு அகிம்சா போராட்டத்தை துவக்குவது என்று முடிவு

1. டாக்டர் பாபாசாகிப் அம்பேத்கரின் பத்திரிகை (மராத்தி) சங்கரராவ் காரத், ப. 46, 47, ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது - ஆசிரியர்கள்.

செய்தனர். இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க இப்போராட்டம் இவ்வாறு தான் 1930 மார்ச் 3 ஆம் நாள் துவங்கியது. முதல் தொகுதி (batch) யிலிருந்த 125 ஆண்களும் 25 பெண்களும் கோவிலின் நான்கு வாயில்களிலும் நிறுத்தி வைக்கப்பட்டனர். சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள 8000 பேர்கள் பதிவு செய்து கொண்டிருந்தனர்; மற்றவர் அவர்கள் தங்கள் சுற்றுக்காகக் காத்திருந்தனர். ஆனால் கோயிலின் எல்லா வாயில்களும் சாத்தப்பட்டிருந்ததோடு தெருத் தடுப்பும் போடப்பட்டிருந்தது. சத்தியாக்கிரகிகள் நுழைவாயிலில் தரையில் அமர்ந்து பாடல்களையும் பஜனைகளையும் பாடிக் கொண்டிருந் தனர். தீண்டத்தகாதவர் 3000 பேர் அதற்கு அருகில் திரண்டிருந் தனர்; ஆனால் போலீசார் உஷாராக இருந்து அவர்களை நகரும்படி கேட்டுக் கொண்டனர். ஒவ்வொரு வாயிலிலும் பெரும் எண்ணிக்கை கொண்ட போலீஸ் படை நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட்கள் இருவர் எந்த நெரிசலையும் சமாளிக்க ஒவ்வாரு வாசலிலும் போடப்பட்டிருந்தனர். எந்த நெருக்கடியை யும் சமாளிக்க போலீஸ் சூப்பரிண்டென்ட் தமது அலுவலகத்தை கோவிலுக்கு முன்னால் ஒரு டென்டில் வைத்துக் கொண்டார்.

தீண்டத்தக்கவர்கள்கூட வாயில்கள் மூடப்பட்டிருந்ததால் கோவிலுக்குள் நுழைவதை சாத்தியமற்றதாக்கிவிட்டது. இந்த சிக்கலுக்கு (நெருக்கடிக்கு) ஒரு வழி காண்பது குறித்து தலைவர்கள் உள்ளே விவாதித்துக் கொண்டிருந்தனர். சாதி இந்துக்களுக்கு ஆலய வாயில்கள் திறந்துவிடப்பட்டிருந்தால் ஒரு கஷ்டமான நிலை உருவாகியிருக்கும்.

இரவு, நாஸிக் நகரவாசிகளின் ஒரு பொதுக் கூட்டம் சங்கராச் சாரியார் டாக்டர் குர்டகோட்டி தலைமையில் நடந்தது. ஆனால் அதில் பெரும்பாலான எண்ணிக்கையில் சனாதனிகள் கலந்துகொண்டதால், (கூட்டம்) அது குழப்பத்தில் முடிந்தது. இதற்குள் சனாதனிகள் பீதியடைந்து ரௌடித்தனம் செய்தனர். கூட்டத்தில் கற்களையும் செருப்புகளையும் வீசி எறிந்தனர். கோவிலைத் தீண்டத்தகாதவர் களுக்குத் திறந்துவிடுங்கள் என்று ராமரே சனாதன இந்துக்களிடம் கூறியிருந்தால், அவரையும் அப்புறப்படுத்தியிருப்பர்.

சத்தியாகிரகப் போராட்டம் சுமார் ஒரு மாதத்திற்குத் தொடர்ந்தது. ஏப்ரல் 9 விடிந்தது. சாதி இந்துக்களுக்கும் தீண்டத் தகாதவர்களுக்குமிடையே ஒரு சமரசம் ஒரு மாதிரி எய்தப்பட்டது. இரண்டு பக்கங்களிலுமுள்ள பலமான மனிதர்கள் தேரை இழுக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. இந்தக் கோயிலின் பிரதான வாயிலின் முன் ஆயிரக்கணக்கானோர் குழுமினர். டாக்டர்

அம்பேத்கர் தாம் தேர்ந்தெடுத்த பயில்வான்ளோடு (gymnasts) வாயிலுக்கு அருகில் நின்றிருந்தார். அவர்கள் தேரைத் தொடு வதற்கு முன்பே; சாதி இந்துக்கள், ஏற்கனவே ரகசியமாகத் திட்ட மிட்டபடி ஒரு குறுகலான இருபக்கத்திற்கும் வசதியற்ற கரடு முரடான தெரு வழியாக தேரை இழுத்துக் கொண்டு ஓடினர். அதன் வாயில் ஆயுதம் தாங்கிய போலீசால் பாதுகாக்கப்பட்டிருந்தது. கட்ரேகர் என்ற பெயர் படைத்த ஒரு துணிச்சலான பந்தாரி இளைஞர் ஆயுதம் தாங்கிய போலீசாரின் தடையை உடைத்துக் கொண்டுவர- போலீசார் துப்பாக்கிச் சூட்டிற்கு உத்திரவை எதிர்நோக்கியிருந் தனர்- தீண்டத்தகாதவர்களின் ஒரு கூட்டம் நொடியில் மழைத் தூரலுக்கு மத்தியில் தேரைக் கைப்பற்றியது. கடுமையாக காய மடைந்த கட்ரேக்கர் ரத்த வெள்ளத்தில் கீழே விழுந்தார். டாக்டர் அம்பேத்கர் அவரது ஆட்களால் குடைகளால் பாதுகாக்கப்பட்டார். அவரைப் பாதுகாத்த குடைகள் நொறுக்கப்பட்டதால், அவருக்கு சிறுகாயங்கள் ஏற்பட்டன. நகர் முழுவதிலும் தீண்டத்தகாதவர், மற்றும் சாதி இந்துக்களின் குழுக்களிடையே தடங்கலற்ற போராட்டம் நடந்தது.

இந்த சத்தியாக்கிரகம் மாவட்டம் முழுவதும் சனாதன இந்துக்களிடையே மனக்கசப்பை ஏற்படுத்தியது. இந்த பதட்டத்தின் காரணமாக, தீண்டத்தகாதவர்களின் குழந்தைகள் பள்ளிகளிலிருந்து வெளியேற்றப்பட்டனர்; அவர்களுக்கு சாலைகள் மூடப்பட்டன; அவர்கள் மற்ற இந்துக்களுடன் சம உரிமைகள் கோரியதற்காக அவர்களது வாழ்க்கைத் தேவைகளை சந்தையில் பெறும் உரிமை கள் அவர்களுக்கு மறுக்கப்பட்டன. பல கிராமங்களில் அவர்கள் மோசமாக நடத்தப்பட்டனர் - இந்த கஷ்டங்களிடையேயும் நாஸிக்கில் போராட்டம் தொடர்ந்து நடந்தது. இரு பக்கங்களைச் சேர்ந்தவர்களுக்குமிடையே ஒரு சமரசத்தை செய்து வைக்க முயற்சிகள் நடந்தன. குர்டாசோட்டியும் டாக்டர் மூஞ்சேயும் சமரசம் செய்ய முயன்றனர். 1930 ஏப்ரல் மத்தியில் கோடீஸ்வரர் பிர்லா, டாக்டர் அம்பேத்கரைப் பார்த்தார். ஆனால், ஒடுக்கப்பட்ட சாதியினர் அவ்வளவு உறுதியாக இருந்ததால், அந்த புகழ்மிக்க கோவிலை ஒரு வருடம் முழுவதும் சாதி இந்துக்கள் மூடிவைக்க வேண்டியதாயிற்று; கிளர்ச்சி தொடர்ந்தது.

கலா ராம் கோவில் நுழைவுச் சத்தியாக்கிரகத்தின் போது, அதிகார வர்க்கத்தால் சிருஷ்டிக்கப்பட்ட பிரச்சினைகள் பற்றி, மேன்மை தங்கிய பம்பாய் கவர்னருக்கு டாக்டர் அம்பேத்கர் இரு கடிதங்கள் எழுதினார்.

கடிதங்கள் பின்வருமாறு :

பீம்ராவ் ஆர். அம்பேத்கர்
எம்.ஏ.பி.எச்.டி., டி.எஸ்ஸி.,
பாரட்லா
உறுப்பினர், மேல்சபை,
பம்பாய்

தாமோத்ர ஹால், பரேல்
பம்பாய்-12
1930 மார்ச் 24

மேன்மை தங்கிய தங்களின் மேலான பார்வைக்கு,

நாஸிக்கில் உள்ள கலாராம் கோவிலை மையமாகக் கொண்டு நடைபெறும் சத்தியாக்கிரகத்தில் தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இடையே உள்ள தாவாவில் பாரபட்சமின்றி நடந்துகொள்ள அரசாங்கம் உத்தேசித்துள்ளது என்ற வாக்குறுதியை எனது தந்திக்கு அனுப்பிய பதிலாக மேன்மைதங்கிய தங்களின் 1930 மார்ச் 13ம் தேதி கடிதத்திற்காக நான் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நிலைமையில் சமீபத்தில் ஏற்பட்ட வளர்ச்சிப் போக்கை மேன்மைதங்கிய தங்களது கவனத்திற்கு கொண்டு வருகிறேன். இந்தச் சூழ்நிலை மிகப் பெரும் அபாயத்துடன் கூடிய போராக உள்ளது. சத்தியாக்கிரகம் துவக்கப்பட்ட தினத்தன்று, கோவிலில் பூசாரியின் இல்லத்திற்கு இட்டுச் செல்லும் வாயிலை வேண்டுமென்றே தடுக்காமல் இருந்தோம். ஏனெனில், தெய்வ தரிசனத்திற்காக கோவிலுக்கு உள்ளே செல்ல பொது மக்களால் இந்த வாயில் பயன்படுத்தப்படாது என்று நினைத்திருந்தோம். அண்மையில், இந்த வாயில் பொதுமக்கள் நுழைந்து போகும் வாயிலாக ஆகிவிட்டது; கோவிலுக்குபோக நாஸிக்கின் பொது மக்கள் இந்த வழியைப் பயன்படுத்துகின்றனர். இதை அனுமதித்தால் சத்தியாக்கிரகத்தின் பிரதான நோக்கத்தை முற்றிலுமாகச் சீர்குலைக்கும். இதைத் தடுப்பதற்காக மாவட்ட போலீஸ் மேற்பார்வையாளரையும் (Superintendent) மாவட்ட நீதிபதியையும் (Magistrate) சத்தியாக்கிரக கமிட்டி இந்த விஷயத்தை விவாதிக்க அணுகியது; தனிப்பட்ட வாயிலை பூசாரியின் குடும்பத்தினர் மட்டுமின்றி மற்ற பொதுமக்களும் பயன்படுத்தக்கூடாது என்ற கமிட்டியின் நோக்கத்தை எடுத்து விளக்கியது. எனினும் மாவட்ட நீதிபதி, சத்தியாக்கிரகக் கமிட்டியின் உறுப்பினர்களைச் சந்திக்க மறுத்து அவர்களை திருப்பி அனுப்பினார். பூசாரியின் வாசலில் சத்தியாக்கிரகம் செய்பவர்களை அங்கிருந்து தாம் அனுப்பப் போவதாகவும் அவர்களுக்கு அனுப்பிய குறிப்பில் எழுதியிருந்தார். ஒரு மாவட்ட அதிகாரி இவ்வாறு நடந்து கொண்டது புத்திசாலித்தனமானதா என்று நான் கூறக் கூடாது.

மேன்மைதங்கிய தங்களுக்கு குறிப்பிட்டுக் காட்ட விரும்புவது என்னவெனில், மாவட்ட நீதிபதியின் இந்தக் கண்ணோட்டம் தொடர்ந்தால், அரசாங்கத்திற்கும் ஒடுக்கப்பட்ட சாதியினருக்கு மிடையே அது ஒரு மோதுதலைத் தூண்டும். உண்மையான எங்களது போட்டி (வாதம்) தீண்டத்தகும் இந்துக்களை விட்டுவிட்டு, அரசாங்கத்திற்கும் ஒடுக்கப்பட்ட சாதியினருக்கும் இடையே உள்ள விஷயமாக ஆக்கக்கூடிய ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நான் தவிர்த்து வந்திருக்கிறேன். முதல் நாளிலேயே சத்தியாக்கிரகிகளை தற்காலிக வழி அடைப்புக்கப்பால் நிறுத்த மறுத்து போலீஸ் பாதுகாவலர்களைக் கடந்து கோவில் வாசல்களுக்கு பக்கத்தில் நாங்கள் நிறுத்தி வைத்திருந்தால் இதை செய்திருக்க முடியும். அதை நாங்கள் ஏன் செய்யவில்லையெனில், போராட்டம் எங்களுக்கும் அரசாங்கத்திற்கும் இடையே என்று ஆக்க நாங்கள் விரும்பவில்லை. தனது ஆரம்ப நோக்கமான பாரபட்சமற்ற முறையில் நடப்பது என்பதிலிருந்து அரசாங்கத்தின் நிலைமாறி தனிப்பட்ட வாசலை பொதுமக்கள் நுழையும் வழியாக ஆக்கப்படுவதை அனுமதித்திருந்தால் எங்களது நோக்கத்தை சீர்குலைப்பதற்கு அரசாங்கம் பிரதிவாதியாக ஆகியிருக்கும். பூசாரியின் இந்த புதிய சாகசச் செயலை எங்களது சத்தியாக்கிரத்தை பயனற்றதாக ஆக்கும் அவரது சாகசத்தை - எந்தச் சூழ்நிலைமையிலும், அரசாங்கத்தோடு நாங்கள் மோதும் நிலை ஏற்பட்டாலும்-நாங்கள் அதை அனுமதிக்க முடியாத நிலைமையின் வளர்ச்சிப் போக்கைத் தெரிவிக்கவும், அவரைப் பார்க்க வந்த சத்தியாக்கிரக கமிட்டி உறுப்பினர்களை பார்க்காமல் திருப்பியனுப்பிய தமது நிலையை மாவட்ட நீதிபதி மறுபரிசீலனை செய்து எனக்கு எழுதும் ஒரு சந்தர்ப்பத்தை அளிப்பதற்காக நான் இக்கடிதத்தை எழுதுகிறேன்.

அந்த இடத்தை நானே சென்ற சனியன்று நேரில் பார்த்தேன். தெரிவிக்கப்படும் அச்சம் பற்றியும் சத்தியாகிரகம் எதிர் நோக்கும் அபாயம் பற்றியும் நான் கூறுவது சரியானது என்று நினைக்கிறேன்.

இப்படிக்கு
மேன்மைதங்கிய தங்களின்
கீழ்ப்படிதல் உள்ள சேவகன்
(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்'[1]

1. கயர்மோடு, தொகுப்பு 3, ப. 321-23

இரண்டாவது கடிதம் :-

''பீம்ராவ் ஆர். அம்பேத்கர்,
எம்.ஏ.,பி.எச்டி; டி.எஸ்ஸி;
பாரட்லா,
உறுப்பினர், மேல் சட்டசபை
பம்பாய்

தாமோதர்ஹால்
பரேல், பம்பாய்-12
11 ஏப்ரல் 1930

பெறுபவர்:

மேன்மைதங்கிய ரயிட் ஆனரபிள் சர்,
பிரெடரிக் சைக்ஸ், பி.ஸி,ஜி.ஸி.ஐ.இ;
ஜி.பி.இ., கே.ஸி.பி; ஸி.எம்.ஜி;
பம்பாய் கவர்னர்,
பம்பாய்

மேன்மைதங்கிய தங்களின் மேலான கவனத்திற்கு,

இம்மாதம் 9ம் தேதி நாஸிக்கில் தீண்டதக்கவர்களுக்கும், தீண்டத்தகாதவர்களுக்கும் இடையே நடந்த கலவரம் பற்றி அந்த மாவட்ட நீதிபதியிடமிருந்து (மாஜிஸ்ட்ரேட்) பம்பாய் அரசாங்கத் திற்கு ஒரு அறிக்கை வந்திருக்க வேண்டும். கலவரம் பற்றிய திருப் பத்தைப் பற்றி மேன்மை தங்கிய தங்களுக்கு சமர்பிக்க வேண்டியது அவசியம் என்று நான் நினைக்கிறேன்.

கலவரத்தின் தோற்றுவாய்:- நாஸிக்கிலுள்ள கலாராம் கோவிலின் நடைமுறைப்படி, ரதம் (கடவுள் ராமின் ரதம்) நகரம் முழுவதிலும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட வேண்டும். கோவிலில் பணியில் இருந்த போலீஸ் அதிகாரிகளில் ஒருவர் இன்ஸ்பெக்டர் கார்னிக், ரத ஊர்வலம் பற்றி நான் எடுக்கப்போகும் நிலை என்ன என்று என்னிடம் கேட்டார். தீண்டத்தகாதவர்கள் சமத்துவமாக நடத்தப்பட்டால் ரதம் வெளியில் எடுத்துச் செல்லப் படுவதற்கு எனக்கு ஆட்சேபமில்லை என்று சொன்னேன். மேலும் சமமாக நடத்தப்படுவது எப்படி இருக்க வேண்டும் என்றும் எடுத்துக் கூறினேன். நான் வலியுறுத்திக் கூறும் இரு விஷயங்களை நிர்ணயித்தேன்-

(1) ரதத்தை இழுத்துச் செல்வதில் தீண்டத்தக்கவர்களுடன் தீண்டத்தகாதவர்களும் பங்கெடுப்பர். (2) ரதத்தில் உள்ள சாமி விக்கிரகத்திற்கு தீண்டத்தகாதவர்கள் பூஜை செய்வர். அவ்விடத்தை விட்டு அகன்ற கார்னிக் பின்னர் மாவட்ட நீதிபதியுடன் திரும்பி

வந்தார். எனது நிபந்தனைகள் தீண்டத்தக்கவர்களான இந்துக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டன என்றும், தீண்டத்தக்கவர்கள் கோவிலின் பிரதான வாசலுக்கு ரதத்தைக் கொண்டு வருவார்கள். என்றும், பின் வாசலிலிருந்து 10 அடி தூரம் அவர்கள் இழுத்து வந்ததும், ரதத்தில் இணைக்கப்பட்டுள்ள கயிறை பற்றிக் கொண்டு தீண்டத்தகாத வர்கள் மற்றவர்களுடன் சேர்ந்து கொள்ளலாம் என்றும் கூறி, ரத ஊர்வலத்திற்கு ஆட்சேபணை ஏதாவது உண்டா என்று என்னிடம் கேட்டார். 'எதுவும் இல்லை எனக்கு' என்று கூறி சமாதான லட்சியத் திற்காக அதிகமாகவே செயல்பட்டேன்; 5000 தீண்டத்தகாதவர் களில் 50 பேர்களை மட்டும் பொறுக்கி அவர்கள் மட்டுமே வடம் பிடித்து தேரை இழுப்பதில் கலந்து கொள்வர் என்றும் அவர்களிடம் சொன்னேன். அவ்வாறே தீண்டத்தக்கவர்களால் கோவில் வாசலுக்கு ரதம் கொண்டுவரப்பட்டது. ஆனால், தீண்டத்தகாதவர்களையும் போலீஸ் அதிகாரிகளையும் ஏமாற்ற தீண்டத்தக்கவர்கள் இரண்டு காரியங்களைச் செய்தனர்- (1) தீண்டத்தக்கவர்கள் ரதத்தின் வடத்தை ஒருவருக்கொருவராய் நெருக்கமாக பிடித்துக் கொண்டிருந்ததால், தீண்டத்தகாதவர்கள் சேர்ந்து கொள்ள இடம் இல்லாமல் போயிற்று. (2) ஏற்கனவே ஒப்புக்கொண்டபடி, கோவிலின் வாசலில் ரதத்தை நிறுத்துவதற்கு பதிலாக, வடத்தைப் பிடித்துக் கொண்டு தேர் இழுப்பதில் பங்குகொள்ள தீண்டத்தகாதவர்களுக்குச் சந்தர்ப்பம் எதுவும் அளிக்காமல் தீண்டத்தக்கவர்கள் ரதத்துடன் ஓட ஆரம்பித் தனர். ஒப்பந்தத்தின் மிக முக்கிய நிபந்தனையை மீறும் அவர்களது துணிச்சல் நியாயமாகவே தீண்டத்தகாதவர்களின் உணர்வைத் தூண்டியது. போராட்டத்திற்கு (கலவரத்திற்கு) உடனடிக் காரணம் புரதானமாக சாதி இந்துக்களை கொண்டிருந்த போலீஸ் படை, வடத்தின் ஒரு சிறு பாகத்தையாவது பிடித்துக் கொள்வதற்காக முயற்சி செய்து கொண்டிருந்த தீண்டத்தகாதவர்களைத் தாக்கியது தான். தீண்டத்தகு இந்துக்கள் பக்கம் சாய்ந்திருந்த சாதி இந்து போலீஸ்காரர்களால் சண்டை ஆரம்பிக்கப்பட்டது.

50 பேர்கள் கொண்ட தீண்டத்தகாதவர்கள் குழு இரண்டு பக்கங்களிலிருந்தும் தாக்குதலுக்கு உட்படுத்தப்பட்டது. வடத்தைப் பிடித்திருந்த தீண்டத்தகும் இந்துக்கள் இவர்களை இடித்துத் தள்ளி வடத்தின் அருகில் இடம் பெறுவதைத் தடுத்தனர். தங்களை நிலை நிறுத்தி கொள்ளத் தீண்டத்தகாதவர்கள் போராடிக் கொண்டிருக்கும் போது, சாதி இந்து போலீசார் தங்கள் தடியாலும் துப்பாக்கியின் கூர்முனையாலும் அவர்களைத் தாக்கிக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு தங்கள் மனிதர்கள் தாக்கப்படுவதைக் கண்ட தீண்டத்தகாதவர்கள் அதி வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் தீண்டத் தக்கவர்களைப் பின் தொடர்ந்தனர். ரதத்தைத் தொடர்ந்து அதன் மிக அருகில் தீண்டத்தகாதவர்கள் வந்துவிட்டதைப் பார்த்த தீண்டத்தக்கவர்கள் ரதத்தை விட்டுவிட்டு அருகிலிருந்த வயலுக் குள் சென்று சாலையில் நின்று கொண்டிருந்த தீண்டத்தகாதவர்கள் மீது கற்களைச் சரமாரியாக வீசினர். சாலையில் ஒரு பக்கம் முள் இரும்புக் கம்பித் தடுப்புகள் இருந்தன. மற்றப் பக்கம் கள்ளிச் செடிகள்; எனவே சரமாரியான கல் வீச்சிலிருந்து தீண்டத்தகாத வர்கள் தப்பிக்க முடியவில்லை. இதன் காரணமாக அவர்களில் பலர் காயமடைந்தனர். தீண்டத்தகும் இந்துக்கள் பக்கம் ஒருவர்கூட காயமடையவில்லை என்பது தீண்டத்தகாதவர்கள் சமாதானபூர்வ மான நடந்து கொண்டனர் என்பதை நிரூபிக்கிறது.

தீங்கை விளைவித்த குறும்பு செயல்களின் வீச்சு:- எந்த வயலிலிருந்து கற்களை வீசினார்களோ அங்கிருந்து கலைக்கப்பட்ட தீண்டத்தகும் இந்துக்கள் அங்கிருந்து சத்தியாக்கிரக கமிட்டியின் கேம்ப்பிற்குச் சென்று டென்டை பிய்த்து எரிந்து, செயல் வீரர்களின் சைக்கிள்களை நொறுக்கினர். கமிட்டி உறுப்பினர் ஒருவருக்குச் சொந்தமான காரின் மீது கற்களை வீசினர்; சமையல் செய்யும் இடத்தில் இருந்த பெண்கள் மீதும் கற்கள் எறியப்பட்டன; அங்கு ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்த சிறு குழந்தைகளைக் காயப் படுத்தினர்.

அங்கிருந்து இந்த கூட்டம் ஆற்றங்கரைக்குச் சென்றது. தங்களது மாடுகளையும் வண்டிகளையும் பார்த்துக் கொள்ள யாரும் இல்லாததால், கோவில் வாசலில் இருந்த தீண்டத்தகாதவர்களின் கூட்டத்தில் சேர்ந்து கொள்ள முடியாமல் போன தீண்டத்தகாதவர் களை ஆண், பெண், குழந்தைகளை- ஆற்றங்கரையில் இக்கூட்டம் கண்டது; இவர்கள் கடுமையாகத் தாக்கப்பட்டனர்; இவர்களக்கு சொந்தமானவற்றைத் தீக்கிரையாக்கியது. சில தண்ணீருக்குள் தூக்கி எறியப்பட்டன.

எனக்குக் கிடைத்த தகவலின்படி, இந்தத் தாக்குதலில் ஒருவர் இறந்தார். ஆற்றங்கரையில் இருந்த இந்த துரதிர்ஷ்டசாலிகளான தீண்டத்தகாதவர்களுக்கு உதவி அநேகமாக கிடைக்கவில்லை எனலாம். தீண்டதகாதவர்களின் பிரதான கூட்டம் இவர்களுக்கு உதவ முடியவில்லை. காரணம் அவர்கள் இருந்த இடத்திலிருந்து

நகருவது தடுக்கப்பட்டது. போலீஸின் தடுப்பு வளையம் அவர்களைச் சுற்றி அமைக்கப்பட்டது. வாசலில் இருந்த தீண்டத்தகாதவர்களின் பிரதான கூட்டத்தை சுற்றிப் பார்த்துக் கொள்ளும் பணியில் போலீஸ் படையின் பிரதான பிரிவு ஈடுபடுத்தப்பட்டிருந்தது; ஆற்றங் கரையி லிருந்த தீண்டத்தகாதவர்களுக்கு உதவச் சென்ற சிலரும் அங்கு தாக்குதலுக்கு உட்படுத்தப்பட்டனர்.

**போலீஸ் கண்ணோட்டம்:** போலீஸ் அதிகாரிகளுக்கு எதிராக கூற என்னிடம் புகார் எதுவும் இருக்கிறது என்ற எண்ணத்தை ஏற்படுத்தாதபடி என்னை நான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். மாறாக, அவர்கள் தங்கள் கடமையை ஆற்றினர் என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. குறிப்பாக இன்ஸ்பெக்டர்கள் ஷெல்கி, நகார்கர் முற்றும் காரகா ஆகியவர்கள் பற்றி நான் சொல்லி யாக வேண்டும்; மிகவும் சிக்கலான, கடுமையான சூழ்நிலைகளில் அவர்கள் ஆற்றியது மேன்மையான பணி எனலாம்.

எனது புகார்: தங்கள் சாதி துவேஷத்தை வெளிப்படுத்திய சிப்பாய்கள் அன்பிற்குரிய தீண்டத்தகாதவர்களை மிக பண்பாடற்ற முறையில் வேண்டுமென்றே தாக்கி பாரபட்சமாக செயல்பட்டனர். அவர்களது பெயர்களும் எண்களும் அவர்களது உயர் அதிகாரி களிடம் சமர்பிக்கப்படும்; மேன்மை தங்கிய தாங்கள் அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க ஆணையிடுவீர்கள் என நான் நம்புகிறேன்.

**ஜில்லா நீதிபதியின் (Magistrate) கொள்கை :-** தீண்டத்தகாத வர்களின் சத்தியாக்கிரகத்தின்பால் மேற்கொள்ளப்பட்ட மாவட்ட நீதிபதியின் (Magistrate) போக்கு எனக்கு திருப்தியளிக்கவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடைய முந்தைய கடிதத்தில், பூசாரியின் இல்லத்திற்குச் செல்வதற்கான தனி யுரிமையுள்ள வாசல் பொது மக்கள் கோவிலுக்குள் செல்லும் வழியாகப் பயன்படுத்தப்பட்டதையும் எங்களது சத்தியாகிரகம் சீர் குலைக்கப்பட்டதையும் நான் மேன்மை தங்கிய தங்களுக்கு எடுத்துக் கூறியுள்ளேன்.

மாவட்ட நீதிபதி எங்கள் வாதம்பற்றி சிறிதும் கவலைப்பட வில்லை; ராமநவமி நாளன்று, சர்ச்சைக்குள்ளான காரணத்தை முற்றுமாகப் புறக்கணித்துவிட்டு, தனியுரிமையுள்ள வழியை பொது மக்கள் உபயோகிக்க அனுமதிக்கப்பட்டனர். மேலும் வழக்கமாக,

பொது வழியை அடுத்து உட்காருவதிலிருந்து சத்தியாக்கிரகிகள் தடுக்கப்பட்டனர்; தனியுரிமையுடைய வாசல் வழியாக தீண்டத்தக்க இந்துக்கள் நுழைவதற்காக வழித்தடுப்பு அகற்றப்பட்டது. இதன் விளைவாக, அங்கு சத்தியாகிரகத்தில் ஈடுபட்ட 300 தீண்டத்தகாத வர்களில் 18 பேர் ராமநவமியன்று கைது செய்யப்பட்டனர்.

9ம் தேதி கலவரத்திற்குப்பின், சத்தியாக்கிரகத்தை நான் கட்டாயம் நிறுத்த வேண்டும் என்றும், இல்லாவிடில் போலீஸ் பாதுகாப்பை தாம் நீக்கப் போவதாகவும் மாவட்ட நீதிபதி என்னிடம் கூறினார். சத்தியாக்கிரகக் கமிட்டி அவரது ஆலோசனையை நிராகரித்தது; அது சரியானது என்று நான் நினைக்கிறேன். இந்தச் சமயத்தில் சத்தியாக்கிரகத்தை நிறுத்துவதைவிட அதிகமாக எதுவும் இயக்கத்திற்கு தீங்காக இருக்க முடியாது. சிறிதளவு பலத்தைப் பயன்படுத்துவது தீண்டத்தகாதவர்களின் இயக்கத்தை நசுக்கப் போதுமானது என்ற எண்ணம் தீண்டப்படும் இந்துக்களிடையே ஏற்படும்.

இந்தச் சூழ்நிலைமையில் நானோ அல்லது சத்தியாக்கிரகக் கமிட்டியோ அத்தகைய ஒரு எண்ணம் பரவுவதை அனுமதிக்க முடியாது. இதற்காகவே, வேறு எந்த காரணத்திற்காக இல்லா விடினும், சத்தியாகிரகத்தை நாங்கள் கட்டாயம் தொடர்ந்து நடத்த வேண்டும். போலீஸ் படையை வாபஸ் பெறுவதைப் பொறுத்த வரை, அதன் விளைவுகளை முழுமையாக அரசாங்கம் உணர வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

இதன்பொருள் என்ன என்று என் மனதிற்கு தோன்றுகிற தெனில், தங்களது உரிமைகளுக்காக போராடி வரும் மக்கள் வெற்றி பெறுவதற்கு உதவத் தன் வசம் உள்ள அதிகாரத்தை பயன்படுத்த அரசாங்கத்திற்கு விருப்பமில்லை என்பதே. அத்தகைய அதிகாரம் யாருக்கும் நல்லதல்ல. ஒரு மாற்றம் வேண்டுமென்று பேசுபவர்களோடு கைகோர்த்து கொள்வது ஒடுக்கப்பட்ட சாதி யினருக்கு நியாயமாக்கப்படலாம். இது விஷயமாக மாவட்ட நீதிபதிக்கு சரியான உத்திரவை பம்பாய் அரசாங்கம் வழங்கும் என நான் நம்புகிறேன்.

Cr. P.C (குற்றச் சட்டம்) பிரிவு 144ன்படி கலாராம் கோவிலுக்கு அருகே மக்கள் வருவதை தடுக்கும் உத்திரவை மாவட்ட நீதிபதி பிறப்பித்துள்ளதாக இன்றைய தேதியின் ''டைம்ஸ் ஆப்

இந்தியா'' ஏட்டின் மூலம் நான் அறிந்து கொள்கிறேன். இதுவரை செய்து வருவது போல எங்கள் சத்தியாக்கிரகிகள் கோவில் வாசலில் உட்காருவதைத் தடுக்கும் நோக்கத்தில் இந்த உத்திரவு பிறப்பிக்கப் பட்டுள்ளதா என்பதை நான் அறியேன்.

மேன்மை தங்கிய தங்களின் கவனத்திற்கு மரியாதையுடன் நான் சமர்ப்பிக்கிறேன் : (சத்தியாக்கிரகக் கமிட்டியின் கருத்து எனக்கு தெரியாததால்) கோயில் வாசல் இந்தக் காலகட்டத்தில் மூடப்பட்டிருக்கும் என்றும் பூசாரியின் தனியுரிமை பெற்ற வாசல் பொது மக்களுக்கு திறந்துவிடப்படமாட்டாது என்றும் மாவட்ட நீதிபதி ஒரு உறுதியளித்தால் மட்டுமே இந்த உத்திரவு மதிக்கப்படுவதற்கு ஒரு சந்தர்ப்பம் உள்ளது என்று நன்கு யோசித்தே நான் கூறுகிறேன்.

எனது முந்தைய கடிதத்தில் நான் தெளிவாக்கியுள்ளது போல, போராட்டம் தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இடையே. தீண்டத்தகாதவர்களை அரசாங்கத்துடன் மோதவிடும் விருப்பம் எதுவும் எனக்குக் கிடையாது.

மேன்மை தங்கிய தங்களுடன் நேரில் நிலைமையைப் பற்றி விவாதிக்க தங்களைச் சந்திக்க நான் பெரிதும் விரும்புகிறேன்; அத்தகைய ஒரு பேட்டியை எனக்கு அளிக்கத் தாங்கள் விரும்பினால், நாளைப் பிற்பகல் 2 மணி வரை என்னைத் தொடர்பு கொள்ளலாம்.

இப்படிக்கு
மேன்மை தங்கிய தங்களின் மிகப்
பணிவான சேவகன்
(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்.[1]

------------

## ''உங்கள் சொந்த முயற்சியில் சுதந்திரத்தை வெல்லுங்கள்''

திருச்சூர் மக்களுக்கு டாக்டர் அம்பேத்கரின் ஆலோசனை

கள்ளிக்கோட்டை, 1931 ஜூன் 17

திருச்சூர் கோயில் நுழைவுச் சத்தியாக்கிரக ஆர்கனைசருக்கு (அமைப்பாளர்களுக்கு) பம்பாயிலிருந்து டாக்டர் அம்பேத்கர் தமது

1. கயர்மோடு, தொகுப்பு 3, ப.323-28

ஒரு கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறார். ''காங்கிரஸ் உதவியை நம்பி இருக்க வேண்டாம் என்று உங்களுக்கு ஆலோசனை கூறுகிறேன். இந்த விஷயத்தில் அது தங்களுக்கு உதவாது. அதன் உதவி தங்கள் பெருமையை உயர்த்த உதவாது. தமது சொந்த முயற்சிகள் மூலமே நமது மக்கள் சுதந்திரத்தை வெல்ல வேண்டும். என நான் விரும்புகிறேன்''[1]

## டாக்டர் அம்பேத்கரின் அறிவுரை

திருச்சூரின் கோயில் நுழைவுச் சத்தியாக்கிரக அமைப்பாளர்கள் இயக்கத்திற்கு காங்கிரஸ் உதவியை நாடக்கூடாது என்று டாக்டர் அம்பேத்கர் அளித்துள்ள அறிவுரையை விட அவரிடமிருந்து இயல்பானதாக வேறு எதுவும் இருக்காது. இல்லையெனில், காங்கிரஸ் பற்றி தவறாகக் கூறுவது மேலும் அதிகம் கஷ்டமாகும். இரண்டாவதாக, ஒருவர் இன்னொருவரிடம் சரணாகதியடைவதை எவரும் எதிர்பார்க்க முடியாது. டாக்டர் அம்பேத்கரின் கடிதம், ஜீவிதத்திற்காக ஒரு மிகப் புத்திசாலித்தனமான போராட்டமே தவிர வேறு எதுவுமல்ல.

### லண்டனிலிருந்து நாஸிக் சத்தியாக்கிரகிகளுக்கு ஆசிகள்

*பம்பாய், 1931 நவம்பர் 2*

நாஸிக் கோயில் நுழைவுச் சத்தியாக்கிரக கமிட்டியின் பொதுச் செயலாளர் லண்டனிலிருந்து டாக்டர் அம்பேத்கரின் கீழ்க்கண்ட செய்தியைப் பெற்றுள்ளார்.

கமிஷனருடன் தாங்கள் நடத்திய பேட்டி பற்றி தாங்கள் அனுப்பிய கடித்திற்கு பதில் எழுத முடியாமல் போனதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். சிறுபான்மையினர் பிசரச்னையை அதிகமாக எடுத்துக் கொண்டு வருகிறேன்; திரு.காந்தியின் கண்ணோட்டத்தின் காரணமாக அது மிக அதிகம் கஷ்டமாகியுள்ளதால், ஒதுக்க நேரம் (ஒரு நிமிடம் கூட) கிடைக்கவில்லை.

தாங்கள் எதிர்பார்த்தபடியே, நாஸிக் சத்தியாக்கிரகத்தை நிறுத்தும்படி நம் மக்களுக்கு ஆலோசனை அளிக்கக் கோரி

1. பாம்பே கிரானிகள், 1931 ஜூன் 18.

கமிஷனரிடமிருந்து ஒரு கடிதம் எனக்குக் கிடைத்து. அவருக்கு பதில் நான் அனுப்பவில்லை. ஆனால் அடுத்த தபாலில் அவருக்கு பதில் எழுதப்போகிறேன். நம்மால் நிறுத்த முடியாது என்று அவருக்குச் சொல்லப் போகிறேன். எனவே (சத்தியாக்கிரகத்தை) தொடரும்படி தாங்கள் நமது ஜனங்களுக்குத் தெரிவிக்கலாம். சனாதன இந்துக் களிடமிருந்து உத்திரவு எதையும் பெறக்கூடாது என்பது போல, அரசாங்கத்திடமிருந்தும் உத்திரவை நாம் ஏற்கக்கூடாது.

## போதுமான காலத்திற்கு அரசாங்கத்தை நம்பி வந்துள்ளோம்

''தீண்டாமையை'' நீக்க அரசாங்கத்தை போதுமான காலம் நம்பி இருந்தோம். இது விஷயத்தில் எதுவும் செய்ய அது ஒரு விரலைக்கூட எழுப்பவில்லை. நம்மை நிறுத்தும்படி சொல்ல அதற்கு எந்த உரிமையும் இல்லை. சுமையை நம் புஜங்களில் எடுத்துக் கொண்டு, இந்தச் சாபத்திலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ள நம்மால் முடிந்ததைச் செய்ய வேண்டும். அரசாங்கம் நமக்கு உதவி செய்யாவிடினும், குறைந்தது அது நமது லட்சியத் திற்கு இடைஞ்சல் செய்யக் கூடாது. பல்வேறு வர்க்கத்தினரிடையே, சமூகங்களினிடையே மனக்கசப்பை நாம் ஏற்படுத்தக்கூடாது என்று சொல்லி என்ன பயன்? அரசாங்கத்தின் இந்த வேண்டுகோள் எல்லா சமூகத்தினருக்கும் விடுக்கப்பட வேண்டும்; நமக்கு மட்டுமல்ல. தவறான நிலையில் உள்ளவர்களுக்கு, இந்த விஷயத் தில் பாவம் செய்யும் அந்த சமூகத்தினருக்கு இந்த வேண்டுகோள் விடுக்கப்பட வேண்டும்.

## ''எனது மக்களுக்கு நான் தேவைப்படவில்லை''

இந்தத் துண்டுப் பிரசுரங்களின் மொழியாக்கத்தை நீங்கள் பிரசுரித்து நமது மக்களிடையே விரிவாக பரப்பலாம். நமது மக்க ளுக்கும் சாதி இந்துக்களுக்கும் இடையே முகட்டில் நடந்துவரும் போராட்டம் பற்றிய தந்திகளை நான் படித்துக் கொண்டிருக் கிறேன். வெற்றியடையும் வரை போராட நம் மக்கள் தயாராக உள்ளனர் என்று அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இந்த உன்னத மான அவர்களின் முடிவுக்காக நான் அவர்களைப் பாராட்டுகிறேன். நவம்பர் 5ம் தேதி சத்தியாக்கிரகத்தை நீங்கள் துவக்கப் போவதாக நான் அறிகிறேன். சிறப்பான தயாரிப்புகளைத் தாங்கள் செய்திருப் பீர்களென நான் நம்புகிறேன். உங்களுக்கு உதவ நான் அங்கு இல்லை என்பதற்காக வருந்துகிறேன். ஆனால் நமது மக்கள் தங்கள்

பிரச்னை பற்றி இப்பொழுது நன்கு உணர்ந்திருக்கிறார்கள் என்றும், ஒவ்வொரு சமயமும் அவர்களுக்கு எனது உதவி தேவையில்லை என்பதையும் நான் அறிவேன் - அ.க.[1]

சத்தியாகிரத்தின் போது நாஸிக்கில் இருந்த நிலைபற்றி ''டைம்ஸ் ஆப் இந்தியா'' பின்வருமாறு அறிவித்திருந்தது. (ஆர்)

''புனிதமான தெப்பத்தில் (Kunds) குளிக்க உரிமையில்லை, தீண்டத்தகாதவர்களுக்கு எதிரான முடிவுகளை நாஸிக் சகித்துக் கொண்டிருக்கிறது.

(நமது நிருபரிடமிருந்து)

நாசிக், ஜூன் 6, 1932

''மொத்தத்தில் தீண்டத்தகாதவர்கள் நான்கு தெப்பங்களை (குளிக்கும் குளங்கள்) அணுகவோ அவற்றில் நீராடவோ உரிமை பெற்றிருக்கவில்லை என நான் நம்புகிறேன். எனவே இ்ணு.க.இ 147 (3) பிரிவின்படி லஷ்மணா, தனுஷ்யா, ராம் மற்றும் சீதா தெப்பங் களை அடையவோ அவற்றில் குளிக்கவோ தங்களுக்கு உள்ளதாக கூறிக்கொள்ளும் உரிமையை நிலை நாட்டுவதற்கு இவற்றில் குளிப்பதற்கு உரிமையளித்து சிவில் நீதிமன்றத்திலிருந்து உத்தரவு பெறும்வரை, மகர்கள், மாங்குகள், சமார்கள், தேத்துகள், பங்கிகள் மற்றும் ஏனைய தீண்டத்தகாதவர்களையும் இதன் மூலம் தடை செய்கிறேன்'' சனாதனிகளுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இடையே உள்ள தாவா - புனிதத் தெப்பங்களில் சென்று நீராட உரிமை கொண்டிருக்கின்றனர் தீண்டத்தகாதவர்கள் - சம்பந்தமாக நாஸிக் மாவட்ட நீதிபதி திரு. எல்.என்.பிரௌன் மேற்கண்டவாறு தமது உத்தரவில் கூறுகிறார்:

ராம் தெப்பத்தின் அருகிலுள்ள ஐரிஷ் பால சந்துரா பற்றிய பிரச்னையை பற்றிக் கூறுகையில், நீதிபதி மேலும் இந்த சந்துவா பிரதக்ஷனை (ஒரு மதச்சடங்கு) செய்ய யாத்திரிகர்களால் பயன்படுத்தப்படுகிறது என்று கூறுகிறார். அது ஒரு நடைபாதை யாக உபயோகப்படுத்தப்படுவது இரண்டாம் பட்சம் என்றும் நினைக்கிறார். சாட்சியங்களிலிருந்து பார்த்தால் கண்ணியமான உடையணிந்த கிருஸ்தவர்களும் முகமதியர்களும் சந்துராவைக்

1. 'பம்பாய் கிராணிக்கல்', 1931 நவம்பர் 3.

கடந்து செல்ல அனுமதிக்கப்பட்டுள்ளனர். தீண்டத்தகாத இந்துக்களின் உரிமை பற்றிய இப்போதைய தாவாவுக்கு, இது கறாராக பொருத்தமற்றது. இந்து தீண்டப்படாதவர்கள் இந்த சந்துராவை பயன்படுத்த உரிமை பெற்றிருக்கிறார்கள் என்று நிரூபிக்கப்படவில்லை.

கோயில் நுழைவுச் சத்தியாக்கிரகம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, அரசாங்கத்தால் கோவில் நுழைவு சட்டப்பூர்வமாக்கப்பட வேண்டும் என்ற ஒரு நிர்பந்தம் ஏற்பட்டது. இந்தப் பிரச்னையின் பின்னணி வருமாறு:- நிலைப்படுத்தப்பட்ட பழக்கத்திற்கு விரோதமாக இருப்பதால், தீண்டதகாதவர்கள் கோயிலில் நுழைவது சட்ட விரோதமாகும் என்று நீதிமன்றங்கள் தீர்ப்பளித்தது இந்தியாவில் கோயில்-நுழைவு இயக்கத்திற்கு ஒரு பின்னடைவு ஏற்பட்டது. மகாத்மா காந்தி மேற்கொண்ட சமூக சீர்திருத்தத்திற்கு அத்தகைய நீதிமன்றத் தீர்ப்புகள் தடைக் கற்களாக ஆயின. இதன் பின்புலத்தில், இந்தத் தடங்கல்களை சமாளிக்க ஒரு சட்டத்தைக் கொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. எனவே, மத்திய சட்டசபையிலும் மாகாணச் சட்டசபைகளிலும் அறிமுகப்படுத்த பல மசோதாக்கள் தயாரிக்கப்பட்டன. மேற்சொன்ன இந்த மசோதாக்களில் மிகமுக்கியமானவை, டாக்டர் சுப்பராயனின் கோயில் நுழைவு மசோதாவும் ரங்க அய்யரின் தீண்டாமை ஒழிப்பு மசோதாவுமாகும்.

நீதிமன்றங்கள் செய்த தவறை சென்னை கோயில் மானியச் சட்டத்தை திருத்துவதன் மூலம் சரிசெய்வதை நோக்கமாகக் கொண்டது டாக்டர் சுப்பராயனின் கோயில்-நுழைவு மசோதா. எனினும் பிரபல இந்து சனாதனிகளான பண்டிட் மதன்மோகன் மாளவியா, கொண்டா வெங்கடப்பய்யா மற்றும் என்.டி. ராமனுஜ ஐய்யங்கார் மற்றும் ஸ்ரீவாச ஐயங்கார் ஆகியோரால் அங்கீகரிக்கப்பட்டது.

ஒரு மாகாண சட்டசபையால் சட்டமாக்கப்பட்டால் அதன் விளைவு மிக கடுமையானதாக இருக்கும் என்ற காரணத்தால் டாக்டர் சுப்பராயனின் கோயில் நுழைவு மசோதாவுக்கு அனுமதி மறுக்கப்பட்டது. அதன்பின்பு, டாக்டர் சுப்பராயனின் மசோதாவை ஆதாரமாகக் கொண்டு, டாக்டர் ரெங்க அய்யர் 2வது மசோதாவை மத்திய சட்டசபையில் அறிமுகம் செய்ய வைஸ்ராய் நிபந்தனையோடு

அனுமதித்தார். தகுதியின் விதிகள் மேலே சொன்ன மசோதாவைப் போலவே அந்த நிபந்தனை என்னவெனில், அதன் கோட்பாடுகளை அரசாங்கம் ஏற்றுக் கொண்டதாகாது; மற்றும் அதன் ஷரத்துக்கள் மீது கருத்துத் தெரிவிக்க இந்து சமுதாயத்தின் ஒவ்வொரு பிரிவுக்கும் முழு சந்தர்ப்பம் அளிக்கப்படும். புனா ஒப்பந்தத்தின் ஒரு பகுதியாக பம்பாயில் சாதி இந்துக்கள் 1932 செப்டம்பர் 25ம் தேதி தீர்மானம் நிறைவேற்றியதன் காரணமாக, இந்திய அரசாங்கம் இந்த இரு சட்ட மசோதாக்களையும் ஆதரிக்க கடமைப்பட்டுள்ளது என்று மகாத்மா காந்தி தமது 1933 பிப்ரவரி 1ம் தேதிக் கடிதத்தில் வைஸ்ராயை வலியுறுத்திக் கேட்டிருந்தார்.

ரங்கா அய்யரின் மசோதா எல்லோராலும் அவசியம் ஆதரிக்கப் பட வேண்டும் என்று மகாத்மா காந்தி கருதினார். மத்தியச் சட்டமன்ற இந்து உறுப்பினர்களுக்கு ஒரு வேண்டுகோளை அவர் அனுப்பி னார். நேரில் பேசி ஆதரவு திரட்டும் வல்லமை வாய்ந்த ஒருவர் என்று திரு. சி.ராஜகோபாலச்சாரியை அவர் கருதியதால், இந்த மசோதாக்களுக்கு ஆதரவு தேட அவரைப் பயன்படுத்திக் கொண்டார். ''டாக்டர் அம்பேத்கரின் சீற்றத்தையும் அரசாங்க முடிவையும் மாளவியாவின் எதிர்ப்பையும்'' அதிகம் மனதில் எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று அவருக்கு (ராஜாஜிக்கு) ஆலோசனை கூறினார். இந்த மசோதாக்களுக்கு ஆதரவைத் திரட்ட ஜி.டி.பிர்லாவும் தேவதாஸ் காந்தியும் நியமிக்கப்பட்டனர். தேர்வுக் குழு (Select committee) நியமிக்கும் கூட்டத்திற்கு மசோதாக்கள் வந்தபோது, சட்டசபையைக் கலைத்து தேர்தல்கள் நடத்துவதென பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்தது. வாக்காளர்களை எதிர்கொள்ளப் போகும் எண்ணத்தால் பீதியடைந்து மசோதாவுக்கு சாதகமாக இருந்த உறுப்பினர்களில் சிலர் தமது நிலையை தலைகீழாக மாற்றிக் கொண்டனர். மசோதாவை முன்மொழிந்த ரங்க அய்யர் மனம் நொந்து போனார்; 'ஒரு நண்டுபோல' பின்வாங்கி விட்டார் என்.சி. ராஜகோபாலாச்சாரியை கடுமையாகச் சாடினார். அவர் மேலும் சொன்னார்: கோயில் நுழைவு மசோதாவை அல்லது தீண்டத்தகாதவர் பிரச்சினையை தொடர்ந்து ஆதரித்திருந்தால், அவர்கள் பலவாக்கு களை இழந்திருப்பர்; ஏனெனில் இது மக்களின் பேராதரவை பெறும் விஷயம் அல்ல; எனவே ''தமது நம்பிக்கைகளிலிருந்து அவர்கள் பின்வாங்கி ஓடினர்; முடிந்த அளவு பெரிய எண்ணிக்கை யில் சட்டசபைக்கு மீண்டும் வருவதற்கு எல்லாவிதமான சூழ்ச்சி களையும் அவர்கள் கையாண்டனர்''

இந்தப் பின்னணியில், இரு சிறந்த வல்லமை வாய்ந்தவர்களான மகாத்மா காந்தியும் பாபாசாகிப் அம்பேத்கரும் எரவாடாச் சிறைச்சாலையில் 1933 பிப்ரவரி 4ம் தேதி சந்தித்தனர்.

(டாக்டர் அம்பேத்கருக்கும் காந்திஜிக்கும் இடையே நடந்த பேச்சுவார்த்தைகள் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள ''டாக்டர் அம்பேத்கர் மகாத்மா காந்தியின் சந்திப்பு'' என்ற தலைப்பின் கீழ் தொகுப்பு IIல் காணவும்)

இந்தச் சந்திப்புக்குபின் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ஒரு அறிக்கை வெளியிட்டார். கோயில் நுழைவு மசோதா பற்றிய அவரது கருத்துக்களை அதில் அவர் வெளிப்படுத்தியுள்ளார்.

## கோயில்-நுழைவு மசோதா பற்றி அறிக்கை

### (1933 பிப்ரவரி 14)

கோயில்-நுழைவு பற்றிய இந்த இயக்கத்தின்பால் தீண்டத் தகாதவர்களின் கண்ணோட்டம் யாது? கோவில்-நுழைவுக்கான போராட்டத்திற்கு எனது ஆதரவை அளிக்கும்படி என்னை திரு. காந்தி கோரினார். அவ்வாறு செய்ய நான் மறுத்து இதுவிஷயம் பற்றி பத்திரிகைகளுக்கு ஒரு அறிக்கை தயாரித்து வெளியிட்டேன். இந்த விஷயம் பற்றிய எனது காரணங்கள் எவை என்பதை வாசகர் புரிந்து கொள்ள இது உதவுமாதலால் அதை முழுவதுமாக தந்துள்ளேன். அந்த அறிக்கை வருமாறு:-

கோயில் நுழைவு விஷயமாக எழுந்துள்ள கருத்து வேறுபாடுகள் சனாதனிகளுக்கும் மகாத்மா காந்திக்கு இடையிலானவை. இதில் ஒடுக்கப்பட்ட சாதியினர் சந்தேகமின்றி ஒரு முக்கிய பாகம் வகிக்க வேண்டியுள்ளது; அவர்களின் நிலை இந்தப் பிரச்னை ஒரு முடிவான தீர்வுக்கு வரும்போது தாரசின் முள்ளை இப்பக்கமோ அப்பக்கமோ கொண்டு செல்வதில் அவர்களின் நிலை முக்கிய பங்கு வகிக்கும்; எனவே அவர்களின் கருத்து விவரிக்கப்பட்டு, எந்தவித அய்யத்திற்கும் இடமின்றி கூறப்பட வேண்டியது அவசியம்.

திரு. ரங்க அய்யர் இப்பொழுது வரைந்துள்ள கோயில்-நுழைவு மசோதாவைப் பொறுத்தவரை, ஒடுக்கப்பட்ட சாதியினர் அதற்குத் தங்களது ஆதரவைத் தருவது சாத்தியமில்லை. இந்த மசோதாவின் கோட்பாடு என்னவெனில் எந்த ஒரு கோயிலையும் சுற்றியுள்ள

முனிசிபாலிட்டி அல்லது ஸ்தல ஸ்தாபன வாக்காளர்களில் பெரும் பான்மையினர் வாக்கெடுப்பால், ஒடுக்கப்பட்ட சாதியினரை கோயிலுக்குள் வர அனுமதிக்கலாம் என்று முடிவு செய்தால், அந்த கோவிலின் அறங்காவலர்களோ அல்லது மேலாளர்களோ அந்த முடிவை அமுல்படுத்தலாம். கோட்பாடு பெரும்பான்மை ஆட்சி என்ற கோட்பாடாகும். இந்த மசோதாவில் தீவிரமானதோ புரட்சி கரமானதோ எதுவும் இல்லை. சனாதனிகள் புத்திசாலிகளெனில் எவ்வித தயக்கமுமின்றி அதை அவர்கள் ஏற்றுக்கொள்வர்.

கோட்பாடு அடிப்படையிலான இந்த மசோதாவை ஏன் ஒடுக்கப்பட்ட சாதியினர் ஆதரிக்க முடியாது என்பதற்கான காரணங்கள் இரண்டு. ஒன்று, ஒடுக்கப்பட்ட சாதியினர் கோயிலில் நுழையும் நாளை இது துரிதப்படுத்தப் போவதில்லை. பெரும் பான்மையினரின் முடிவின்படி ஒடுக்கப்பட்ட சாதியினருக்கு கோயிலை திறந்துவிடும் அறக்காவலர் அல்லது மேலாளருக்கு எதிராக நீதிமன்றத்தில் சிறுபான்மையினர் தடையைப் பெறமுடியாது என்பது உண்மை. இந்த ஷரத்தின்பால் திருப்திப்பட்டு அதை தயாரித்தவரைப் பாராட்டும்முன், வாக்கெடுப்பிற்கு இந்த விஷயம் விடப்பட்டால், கோவில் நுழைவுக்கு ஆதரவாகப் பெரும்பான்மை கிடைக்குமா என்பதை முதலில் உறுதி செய்துகொள்ள வேண்டும். ஒருவருக்கு எந்தவித பிரமையும் இல்லையெனில், கோயில் நுழை வுக்கு பெரும்பான்மை வாக்குகள் கிடைக்கும் என்ற நம்பிக்கை அபூர்வமாகவே நிறைவேறும் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். சந்தேகமில்லாமல், இன்று பெரும்பான்மையினர் இதை நிச்சயமாக எதிர்க்கிறார்கள் - இந்த உண்மையை மசோதாரவை தயாரித்தவரே சங்கராச்சாரிக்கு எழுதிய தமது கடித்தில் ஒப்புக்கொண்டுள்ளார்.

இந்த மசோதா நிறைவேறிய சூழ்நிலையில், பெரும்பான்மை வேறு விதமாகச் செயல்படும் என்று ஒருவர் நம்புவதற்கு என்ன இருக்கிறது என என்னால் எதையும் காணமுடியவில்லை. குருவாயூர் கோவில் சம்பந்தமாக எடுத்த வாக்கெடுப்பின் முடிவுகள் பற்றி நான் நினைவுபடுத்திக் கொள்வேன் என்பதில் ஐயமில்லை. சாதாரண மான சூழ்நிலையில் வாக்கெடுப்பு எடுக்கப்படுவதைவிட இந்த வாக்கெடுப்பில் மகாத்மா காந்தியின் உயிர் அதிக மதிப்பு வாய்ந்த தாக இருந்தது என நம்ப நான் மறுக்கிறேன். அத்தகைய கணிப்புகள் எதிலும் மகாத்மாவின் உயிர் அவசியமாக மதிப்பிடப்பட வேண்டும்.

இரண்டாவதாக, கோயில்களில் தீண்டாமையை ஒரு பாவகர மான பழக்கமாக மசோதா கருதவில்லை. தீண்டாமையை ஒரு சமூகத் தீங்காக மட்டுமே - மற்ற பல சமூகத்தீங்குகளைவிட அதிகம் மோசமானது அல்ல என்று கருதுகிறது. தீண்டாமை என்பது சட்ட விரோதமானது என்று அது பிரகடனப்படுத்தவில்லை. பெரும் பான்மையான மக்கள் விரும்பும் போதுதான் அந்த மசோதாவின் ஆற்றல் நீக்கப்படுகிறது. ஆனால் பாவத்திற்கும் ஒழுக்கக்கேட் டிற்கும் பெரும்பான்மையான மக்கள் அடிமைப்பட்டு விட்டதனால் மட்டுமோ அல்லது பெரும்பான்மையினர் அவற்றை கடைப்பிடிப் பதனால் மட்டுமோ அவை சகித்துக் கொள்ளக் கூடியவையாகி விட முடியாது. தீண்டாமை பாவமானது, மற்றும் ஒரு ஒழுக்கக் கேடான பழக்கம் என்றால், அது பெரும்பான்மைக்கு ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருந்தாலும், எந்த தயக்கமுமின்றி அழிக்கப் பட வேண்டுமென்பது ஒடுக்கப்பட்ட சாதியினரின் கருத்து. பழக்க வழக்கங்கள் ஒழுக்கக் கேடானவை மற்றும் பொதுக் கொள்கைக்கு எதிரானவை என்று நீதிமன்றங்கள் கருதினால் அவற்றை இவ்வாறே கையாளுகின்றனர்.

இதைத்தான் இந்த மசோதா செய்யவில்லை. குடிப்பது பற்றி மிதமான மட்டுப்படுத்தப்பட்ட போக்கைக் கையாளும் சீர்திருத்தவாதியைவிட எந்தவிதத்திலும் தீண்டாமையைப் பற்றிய மசோதாவை தயாரித்தவர் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. இரண்டிற்கும் இடையிலுள்ள ஒருமைத்தன்மை அவரை மிகவும் கவர்ந்திருக்கிறது. குடிப்பழக்கத்தின் தீங்கை ஒழிக்க மிதமாக குடிப்பதை போதிக்கும் சீர்திருத்தவாதிகளைப் போல் இவரும் அதே நிலையைக் கையாளுகிறார். தீண்டாமை குடிப்பழக்கத்தை விட அதிகம் தீங்கானது அல்ல என்று கருதும் ஒரு ஒடுக்கப்பட்ட சாதி யினரின் நண்பருக்கு அதிகம் நன்றி தெரிவிக்க முடியாது. தீண்டாமை அகற்றப்படாவிடில் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்க மகாத்மா காந்தி சில மாதங்களுக்கு முன் தம்மை தயார்படுத்திக் கொண்டால் திரு.ரங்க அய்யர் மறக்கவில்லையெனில், தீண்டாமையை முற்றிலு மாக ஒழிப்பதை உத்திரவாதம் செய்யும் மிகவும் முழுமையான சீர்திருத்தத்தை அவர் முன் வைத்திருப்பார். பலனை ஏற்படுத்து கிறதா என்ற கண்ணோட்டத்தை கொண்டு பார்த்தால், அதன் குறை பாடுகள் எவையாக இருந்தாலும், ஒடுக்கப்பட்ட சாதியினர் இந்த மசோதாவில் மிகக் குறைந்த பட்சம் எதிர்பார்ப்பது, தீண்டாமை ஒரு பாவம் என்ற கோட்பாட்டை அங்கீகரிப்பதுதான்.

தீண்டாமை ஒரு பாவச் செயல் என்று வலியுறுத்திவரும் மகாத்மாகாந்தியை இந்த மசோதா எப்படி திருப்திப்படுத்துகிறது

என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை! ஒடுக்கப்பட்ட சாதியினரை நிச்சயமாக இது திருப்பதிப்படுத்தவில்லை. இந்தக் குறிப்பிட்ட மசோதா நல்லதா அல்லது கெட்டதா, போதுமானதா அல்லது போதுமானதாக இல்லையா என்ற கேள்வி இரண்டாம் பட்சமான கேள்வி.

பிரதான கேள்வி என்னவெனில், கோயில்-நுழைவை ஒடுக்கப் பட்ட சாதியினர் விரும்புகிறார்களாக அல்லது அவர்கள் விரும்ப வில்லையா? இந்தப் பிரதான கேள்வி ஒடுக்கப்பட்ட சாதியினர் இரண்டு சிந்தனைப் போக்குகளிலிருந்து அணுகப்படுகிறது. ஒன்று வாழ்க்கை நலன் பற்றிய கண்ணோட்டம். இதிலிருந்து துவங்கி, தங்களின் உயர்வுக்கு மிக நிச்சயமான வழி உயர்கல்வி, உயர்வேலை வாய்ப்பு மற்றும் நன்கு வாழ்வதற்கு நல்ல வழிகள் என்று ஒடுக்கப் பட்ட சாதியினர் நினைக்கின்றனர். சமூக வாழ்வில் நல்ல நிலையில் வைக்கப்படும் போது, அவர்கள் மதிக்கப்படுவர்; அவர்கள் மதிக்கப் படும்போது, அவர்கள் பால் உள்ள சனாதன மதக் கண்ணோட்டம் ஒரு மாற்றம் அடைவது நிச்சயம்; அது நிகழாவிடினும், அது அவர்களது வாழ்க்கை நலனுக்கு எந்தத் தீங்கையும் விளைவிக்காது. சிந்தனை வழியில் மேலும் சென்றால், கோயில்-நுழைவு போன்ற வெற்று விஷயங்களில் தங்களின் சக்திகளைச் செலவழிக்க மாட்டார்கள். அதற்காகப் போராடுவதில் அவர்கள் அக்கறை கொள்ளாததற்கு வேறு ஒரு காரணமும் உள்ளது. அந்த வாதம் சுயமரியாதை பற்றிய வாதம்.

கொஞ்ச காலத்திற்கு முன்பு, இந்தியாவில் இருந்த ஐரோப் பியர்களால் பராமரிக்கப்பட்ட கிளப்புகளின் கதவுகளில் ''நாய்களும் இந்தியர்களும் அனுமதிக்கப்படுவதில்லை'' என்ற போர்டுகள் இருப்பது வழக்கம். இந்துக்களின் கோயில்களில் இன்று அத்தகைய போர்டுகள் வைக்கப்படுகின்றன. இந்துக் கோயில்களில் உள்ள போர்டுகளில் கூறப்படுவது, ''எல்லா இந்துக்களும், நாய்கள் உள்ளிட்ட எல்லா மிருகங்களுக்கும் அனுமதி உண்டு. தீண்டத்தகாத வர்கள் மட்டுமே அனுமதிக்கப்பட மாட்டார்கள்'' தங்களது அகம் பாவத்தால் ஐரோப்பியர்கள் அந்தக் கிளப்புகளில் இந்துக்களை அனுமதிக்கவில்லை. தங்களை அனுமதியுங்கள் என்று இந்துக்கள் அவர்களிடம் யாசகம் கேட்கவில்லை. இந்துக்களின் அகம்பாவத் தால் தங்களை நுழைய அனுமதிக்காதபோது, அனுமதிக்கக் கோரி ஒடுக்கப்பட்ட சாதியினர் அவர்களிடம் ஏன் யாசகம் கேட்க வேண்டும்? தங்களது வாழ்க்கை நலனில் அக்கறை கொண்டுள்ள

ஒடுக்கப்பட்ட சாதியைச் சேர்ந்த மனிதன் நிலை இதுதான். அவன் இந்துக்களிடம் கூற தயாராக இருக்கிறான். உங்கள் கோயிலை திறப்பதா அல்லது இல்லையா என்ற கேள்வியை பரிசீலிக்க வேண்டியது நீங்கள். நாங்கள் கிளர்ச்சி செய்வதற்கல்ல. மனிதனின் புனிதத் தன்மையை மதிக்காதது நல்ல நடத்தை அல்ல என்று நீங்கள் கருதினால், உங்கள் கோயில்களை திறந்துவிட்டு கனவான்களாக நடந்து கொள்ளுங்கள். ஒரு கனவானாக இருப்பதைவிட ஒரு இந்து வாக இருக்க விரும்பினால், கோவில்களின் கதவுகளை மூடுங்கள், எப்படியாவது போங்கள், கோவிலுக்கு வருவதில் நான் அக்கறை கொள்ளவில்லை.''

இந்த வடிவில் வாதத்தை முன் வைப்பது அவசியம் என்று நான் பார்த்தேன். ஏனெனில் தங்களின் செல்வாக்குடன் கூடிய ஆதரவை ஒடுக்கப்பட்ட சாதியினர் எதிர்நோக்கியிருக்கிறார்கள் என்று மதன்மோகன் மாளவியா போன்றவர்களின் மனதில் உள்ள தவறான கருத்தைப் போக்க விரும்புகிறேன்.

இரண்டாவது கண்ணோட்டம் ஆன்மீகத் தன்மையது. எல்லா மத நம்பிக்கையுள்ளவர்களையும் போல, ஒடுக்கப்பட்ட சாதியினர் கோவில்-நுழைவை விரும்புகிறார்களா? அல்லது அவர்கள் விரும்ப வில்லையா? இதுதான் கேள்வி. ஆன்மீகக் கண்ணோட்டப்படி, வாழ்க்கை நலன் மட்டுமே என்றில்லையெனில், கோவில்-நுழைவில் அவர்களும் அக்கறை கொள்வர். கீழ்க்கண்ட கேள்விக்கு மகாத்மாவும் மற்றவர்களும் அளிக்கும் பதிலைப் பொறுத்திருக்கும் அவர்களது இறுதியான பதில். அக்கேள்வி கோயில்-நுழைவு என்று அவர் கூறுவதின் நோக்கம் என்ன? இந்து சமூகத்தில் ஒடுக்கப்பட்ட சாதியினரின் சமூக அந்தஸ்து உயர்வதுதான் கோவில்-நுழைவின் இறுதி லட்சியமா? அல்லது இது முதல் நடவடிக்கையா? இது முதல் படியென்றால், இறுதி லட்சியம் என்ன? கோயில்-நுழைவு இறுதி லட்சியம் என்றால் ஒடுக்கப்பட்ட சாதியினர் ஒருபோதும் அதை ஆதரிக்க முடியாது. அவர்கள் அதை நிராகரிப்பது மட்டுமல் லாமல், இந்து சமுதாயம் தங்களை நிராகரித்துவிட்டது என்று கருதி, தங்களது எதிர்காலத்தை (விதியை) தாங்களே நிர்ணயிக்கும் உரிமை பெற்றுள்ளதாக நினைத்துக் கொள்வர். மாறாக இத்திசையில் இது முதல்படி என்றால் அதை ஆதரிக்க அவர்கள் விரும்பலாம். அப்பொழுது நிலை இன்று இந்தியாவில் அரசியலில் நிகழ்ந்து கொண்டிருப்பதை ஒத்ததாக இருக்கும். எல்லா இந்தியர்களும் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தை விரும்புகிறார்கள். ஏன்? பதில் என்னவெனில், லட்சியம் வரையறுக்கப்பட்டுள்ளதால்,

அதை அடைவது படிப்படியாகவா அல்லது ஒரே முறையிலா என்பது அதிகம் முக்கியமானதல்ல. டொமினியன் அந்தஸ்து என்ற லட்சியத்தை பிரிட்டிஷ்காரர்கள் ஏற்றுக் கொள்ளவில்லையெனில், இன்று ஒத்துக்கொள்ள தயாராக இருப்பது போல பகுதிச் சீர்திருத் தங்களை எவரும் ஏற்றுக்கொண்டிருக்க மாட்டார். அதுபோலவே, இந்து சமுதாயத்திற்குள் ஒடுக்கப்பட்ட சாதியினரின் சமூக அந்தஸ்து உயர்வதற்கு மகாத்மா காந்தியும் மற்ற சீர்திருத்தவாதிகளும் எந்த லட்சியத்தைத் தங்களின் குறிக்கோளாக கொண்டுள்ளனர் என்பதை வெளிப்படையாக அறிவித்தால், கோயில்-நுழைவு பற்றி ஒடுக்கப் பட்ட சாதியினர் தங்களின் கண்ணோட்டத்தை வரையறுத்துக் கூற முடியும். ஒடுக்கப்பட்ட சாதியினரின் லட்சியம் பற்றி சம்பந்தப் பட்ட அனைவரின் தகவலுக்கும் பரிசீலனைக்குமாக இங்கு கூறப் படலாம். ஒடுக்கப்பட்ட சாதியினர் விரும்புவது, தங்களுக்கு சமத்துவ சமூக அந்தஸ்தை அளிக்கும் ஒரு மதத்தைத்தான். எந்தத் தவறான அபிப்பிராயத்தையும் போக்குவதற்காக, இந்த விஷயத்தை விளக்கிக் கூற விரும்புகிறேன்; மதசார்பற்ற லட்சியங்களின் காரணமாக எழுந்த சமூகத் தீங்குகளுக்கும், மத சித்தாந்தத்தின் மீது நிறுவப்பட்ட சமூகத் தீங்குகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஒரு நாகரீக சமுதாயத்தில் சமூக தீங்குகளுக்கு எவ்வித நியாயப்படுத்தலும் இருக்க முடியாது. தாங்கள் உட் படுத்தப்பட்டுள்ள சமத்துவமற்றவைகளை ஒடுக்கப்பட்ட சாதி யினரால் தூக்கியெறிய முடியாமல் இருக்கலாம். ஆனால், இந்தச் சமத்துவமின்மைகளை தொடர்வதற்கு தனது ஆதரவை நல்கும் ஒரு மதத்தை சகித்துக் கொள்ள முடியாது என்று தங்கள் மனதில் முடிவு செய்துள்ளனர்.

இந்து மதம் அவர்களது மதமாக இருக்க வேண்டுமெனில், சமூக சமத்துவம் கொண்ட ஒரு மதமாக அது மாறவேண்டும். இந்த மதச் சட்டத்தொகுப்பில் எல்லோரையும் கோயிலில் நுழைய அனுமதிக்கும் ஒரு திருத்தத்தை உட்படுத்தினால் மட்டும் சமூக அந்தஸ்தில் சமத்துவம் அளிக்கும். ஒரு மனதாக அதை மாற்ற முடியாது. அது செய்யக்கூடியது எல்லாம் என்னவெனில் இது சம்பந்தமாக அரசியலில் சகஜமாகப் பயன்படுத்தப் படும் பதங்களை நான் உபயோகிக்கலாமென்றால் அவர்களை நம் நாட்டுப் பிரஜைகள் என்றும் அன்னிய நாட்டினர் அல்ல என்றும் அங்கீகரிப்பதுதான். ஆனால், மற்ற எவருக்கும் உயர்வாகவோ அல்லது தாழ்ந்தோ இல்லாமல் சுதந்திரமான சம அந்தஸ்து கொண்ட நிலையை இதன்

மூலம் அவர்கள் அடைவார்கள் என்று பொருள் கொள்ள முடியாது என்பதுதான்; ஏனெனில், எளிமையான காரணம், சமூக அந்தஸ்தில் சமத்துவம் என்ற கோட்பாட்டை இந்து மதம் அங்கீகரிப்பதில்லை; அதற்கு மாறாக, மக்களை பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர் கள் மற்றும் சூத்திரர்கள் என்று படி வாரியாக பிரிப்பதை வற்புறுத்து வதன் மூலம் சமத்துவமின்மையை ஊட்டம் கொடுத்து வளர்த் துள்ளது; இந்த தரவாரிப் பிரிவுகள் ஒன்று மற்றொன்றோடு ஏறிவரும் வெறுப்பாகவும் கீழிறக்கும் அவமதிப்பாகவும் உள்ளது. சமூக சமத்துவம் கொண்ட ஒரு மதமாக இந்துமதம் இருக்க வேண்டுமானால், சட்டத் தொகுப்பில் கோயில் - நுழைவுக்கு வகை செய்யும் திருத்தம் போதாது. தேவைப்படுவது என்னவெனில், சதுர்வர்ணம் என்ற கோட்பாட்டை அதனின்று அகற்றி தூய்மைப் படுத்துவதுதான். எல்லா சமத்துவமின்மைக்கும் சாதி அமைப்பு முறைக்கும் தீண்டாமைக்கும், ஆணிவேர் அதுதான். இவையெல் லாம் சமத்துவமின்மையின் உருவங்களே. இதைச் செய்யாவிடில், ஒடுக்கப்பட்ட சாதியினர் கோயில்-நுழைவை நிராகரிப்பது மட்டு மல்லாமல், இந்து மத நம்பிக்கையையும் நிராகரிப்பர். சதுர்வர்ணமும் சாதி அமைப்பு முறையும் ஒடுக்கப்பட்ட சாதியினரின் சுய-கௌரவத் திற்கு ஒவ்வாதவை. அதனுடைய அடிப்படைச் சிந்தாந்தமாக அது தொடர்ந்தால், ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் கீழானவர்களாகவே கருதப்படுவர். சதுர்வர்ணம் மற்றும் சாதி அமைப்புமுறை என்ற தத்துவம் கைவிடப்பட்டு இந்து சாஸ்திரங்களிலிருந்து அகற்றப் பட்டால் மட்டுமே தாங்கள் இந்துக்கள் என்று ஒடுக்கப்பட்ட சாதி யினர் சொல்ல முடியும். இதை தங்கள் லட்சியமாக மகாத்மாவும் மற்ற இந்து சீர்திருத்தவாதிகளும் ஏற்றுக்கொள்கிறார்களா? அதற்காகப் பணியாற்றும் துணிச்சலை அவர்கள். காண்பிப்பார்களா? எனது முடிவான கண்ணோட்டம் பற்றி நான் முடிவு செய்யும்முன், அவர்களது பிரகடனத்தை எதிர் நோக்கி இருக்கிறேன் ஆனால், மகாத்மா காந்தியும் இந்துக்களும் இதற்கு தயாராக இருக்கிறார்களா அல்லது இல்லையா என்பது ஒருபுறம் இருக்க, இதற்குக் குறைவான எதுவும் ஒடுக்கப்பட்ட சாதியினரைத் திருப்திப்படுத்தி கோவில்-நுழைவை ஏற்றுக் கொள்ளச் செய்யாது என்பதை இப்பொழுதே அனைவரும் தெரிந்துகொள்ளட்டும். கோயில்-நுழைவை ஏற்று அத்துடன் திருப்தியடைவது தீர்வோடு சமரசம் செய்துகொண்டு, அவர்களுக்குள் நிலவும் மனிதத் தன்மையின் புனிதத்தை இழப்ப தாகும்.

எனினும் நான் எடுத்துள்ள நிலைக்கு எதிராக மகாத்மாவும் மற்ற சீர்திருத்தவாத இந்துக்களும் முன்வைக்கூடிய ஒரு வாதம் உள்ளது. அவர்கள் கூறக்கூடும்: இப்பொழுது கோயில்-நுழைவை ஒடுக்கப்பட்ட சாதியினர் ஏற்றுக்கொள்வது, சதுர்வர்ணத்தையும் சாதியையும் ஒழிக்க அவர்கள் இனி கிளர்ச்சி செய்வதைத் தடுக்காது என்பது அது அவர்கள் கருத்து என்றால், விஷயத்தைத் திட்ட வட்டமாக முடிவு செய்து எதிர்கால வளர்ச்சிப் போக்குகளுக்கு வழிகாட்ட இந்த வாதத்தை எதிர்கொள்ள நான் இப்பொழுதே விரும்புகிறேன். எனது பதில் இதுதான்: கோயில் நுழைவை இப்பொழுது நான் ஏற்றுக்கொள்வதால், சதுர்வர்ணத்தையும் சாதி அமைப்புமுறையையும் ஒழிப்பதற்காக கிளர்ச்சி செய்யும் உரிமையை நான் இழக்க மாட்டேன் என்பது உண்மை. ஆனால் கேள்வி என்னவெனில், இந்த கேள்வி முன்வைக்கப்படும் போது மகாத்மா காந்தி எந்த பக்கம் இருப்பார் என்பதே. எனது எதிரிகள் பக்கம் அவர் இருப்பார் என்றால், அவரது அணியில் நான் இருக்க முடியாது என்பதை நான் கட்டாயம் அவருக்கு சொல்ல வேண்டும். எனது அணியில் அவர் இருப்பார் என்றால், இப்பொழுதே அவர் அதில் இருந்திருக்க வேண்டும்.

**பி.ஆர். அம்பேத்கர்''**

டாக்டர் அம்பேத்கரின் கருத்தை ஆதரிக்கும் ஒடுக்கப்பட்ட சாதியினரின் தலைவர்கள் தங்கள் தலைவரின் கருத்துக்களை ஏற்றுக் கொண்டனர். ஸ்ரீநிவாசன், பிரேம்தாஸ், மற்றும் மாலிக்கும் தங்கள் தலைவரின் கருத்துகளை ஆதரித்தனர்.

தாம் வெளியிட்ட அறிக்கையில் காந்தி கூறுகிறார்: இந்து குடும்பத்தில் நான் பிறந்ததால் மட்டுமே நான் ஒரு இந்து அல்ல, ஈடுபாடு கொண்டு தேர்ந்தெடுத்தது மூலம் நான் ஒரு இந்து. இந்து மதம் என்ற எனது கண்ணோட்டத்தில், உயர்வானது அல்லது தாழ்வானது என்று எதுவும் இல்லை. ஆனால், வருணாச்சிரமத்தையே எதிர்த்து போராட டாக்டர் அம்பேத்கர் விரும்பும்போது, நான் அவர் அணியில் இருக்க முடியாது; ஏனெனில், வருணாச்சிரமம் இந்து மதத்தில் பிரிக்க முடியாத (உள்ளார்ந்த) பாகம் என்று நான் நம்பு கிறேன்''.[1]

---

1. கீர், பக். 230

★ கோவில் நுழைவுப் போராட்டம் பற்றிய அறிக்கை, பார்க்க இணைப்பு - VI

மேலே குறிப்பிட்டுள்ள சத்தியாகிரகம் பற்றி (கீழ்கண்ட கடிதத்தில்) பாபுராவ் கெயிக்வாட்டுக்கு டாக்டர் அம்பேத்கர் தமது நிலையை விளக்கிக் கூறியுள்ளார்.

பீம்ராவ் ஆர். அம்பேத்கர்
எம்.ஏ.,பி.எச்.டி.,டி.எஸ்.ஸி
பாரட்லா, ஜே.பி.எம்.எல்.ஸி

ராஜ்கிரகா காலனி,
தாதர் பம்பாய்-14
3-3-34

எனது அன்புள்ள பாபுராவ்,

தங்களது பிப்ரவரி 23ம் தேதிக் கடிதம் எனக்குக் கிடைத்தது. நாஸிக்கில் உள்ள கலாராம் கோயிலில் வரும் ராம நவமி நாளன்று ஒடுக்கப்பட்ட சாதியினர் சத்தியாகிரகத்தை மேற்கொள்ளப் போவதின் நியாயத்தைப் பற்றி எனது கருத்தைத் தாங்கள் கேட்டது தங்களது அன்பைக் காட்டுகிறது. அத்தகைய செயல் தேவையற்றது; மேலும் அது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட வேண்டும் என்பது மட்டுமல்லாமல் அது முற்றிலுமாக நிறுத்தப்பட வேண்டுமென்பது என் நிலை. சத்தியாகிரகத்தின் நாயகனான நான் இத்தகைய நிலை எடுப்பது ஆச்சரியமாகத் தோன்றலாம். இந்த மாற்றம் பற்றிக் கூற நான் அஞ்சுகிறேன். எந்த விக்கிரகங்களைப் பூஜிப்பதிலிருந்து ஒடுக்கப்பட்ட சாதியினர் தடுக்கப்படுகின்றனரோ அந்த விக்கிரகங்களைச் தொழும் பக்தர்களாக ஆக்குவதற்காக கோயில்-நுழைவு இயக்கத்தை நான் துவக்கவில்லை. அல்லது கோயில்-நுழைவு இந்து சமுதாயத்தின் சமத்துவ உறுப்பினர்களாக, அதன் பிரிக்க முடியாத பாகமாக அவர்களை ஆக்கும் என்று நான் நம்பியதாலல்ல. விஷயத்தின் இந்த அம்சத்தைப் பொருத்தவரை, ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் இந்து சமுதாயத்தின் முழுமையான ஒரு பாகமாக ஆவதற்கு அவர்கள் சம்மதம் அளிக்கும் முன், இந்து சமுதாயத்தையும் இந்து மதத்தையும் முழுவதுமாக பழுதுபார்க்க வேண்டும் என்று வலியுறுத்துங்கள் என்று அவர்களுக்கு நான் ஆலோசனை கூறுவேன். கோயில்-நுழைவு சத்தியாக்கிரகத்தை நான் ஏன் துவக்கினேன் என்றால், ஒடுக்கப்பட்ட சாதியினரை ஊக்குவிக்கவும் அவர்களது நிலையைப் புரிந்துகொள்ளவும் இது சிறந்தவழி என்று நான் கருதினேன். இந்த நோக்கத்தில் நான் வெற்றிபெற்றுள்ளேன் என நம்புகிறேன். கோயில்-நுழைவு இனி எனக்குப் பயன்படாது. அரசியல் மீதும் கல்வி மீதும் ஒடுக்கப்பட்ட சாதியினர் தங்கள் சக்தியையும் ஆதாரங்களையும் ஒருமுகப்படுத்தி செயல்பட வேண்டுமென நான் விரும்புகிறேன். இந்த

இரண்டின் முக்கியத்துவத்தை அவர்கள் உணர்வார்கள் என நம்பு கிறேன்.

தங்கள் உண்மையுள்ள
(ஒப்பம்) பி.ஆர்.அம்பேத்கர்[1]

இதன்படி உடனடியாக சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டது. - ஆசிரியர்.

## நாஸிக் கோயில் சத்தியாகிரகம் ஏன் கைவிடப்பட்டது.

## ''இனித் தேவையில்லை''

*நாஸிக், நவம்பர் 19, 1934*

விஞ்சூரைச் சேர்ந்த திரு.தொண்டிபாருன்சாம்பே மரண மடைந்த 11 வது நாள் சடங்கு நிகழ்ச்சியின்போது அங்கு ஒடுக்கப் பட்ட சாதியினரைச் சேர்ந்த 15,000 உறுப்பினர் திரண்டு கலந்து கொண்ட மாபெரும் கூட்டத்தில், டாக்டர் அம்பேத்கர் ஒரு முக்கிய மான அரசியல் அறிவிப்பை வெளியிட்டார். கலாராம் கோவில்-நுழைவு இயக்கம் ஏன் இரண்டு ஆண்டுகளாக நிறுத்தி வைக்கப் பட்டுள்ளது என்று திரும்பத்திரும்பத் தம்மிடம் கேட்கப்படுவதாக அவர் சொன்னார். ஒரே காரணம் அது இனித் தேவைப்படவில்லை என்று அவர் விளக்கினார். கோவில்-நுழைவு சத்தியாக்கிரகத்தின் மூலகர்த்தாவான தம்மிடமிருந்து வரும் இந்த விளக்கம் அதிசய மாகவும் ஆச்சரியமாகவும் இருக்கும்.

''ஒடுக்கப்பட்ட சாதியினருக்கு ஊக்கமளிக்கவும் அவர்கள் தங்கள் நிலையை உணர்ந்து கொள்ள வைக்கவும் சிறந்த வழி கோயில்-நுழைவு இயக்கம் என்று தாம் கருதியதால் அந்த சத்தியாகிரகம் துவக்கப்பட்டது. அந்த நோக்கத்தை தாம் அடைந்துவிட்டதாக கருதுவதால், கோயில் - நுழைவு அவர்களுக்கு இனித் தேவையில்லை.''

அதற்குப் பதிலாக, தங்களுடைய சக்திகளையும் ஆதாரங்களை யும் அரசியலில் தீவிரமாகப் பயன்படுத்தும்படி ஒடுக்கப்பட்ட சாதி யினருக்கு அவர் பலமாக ஆலோசனை கூறினார். வரவிருக்கும்

1. கயர்மோடு, தொகுப்பு 3, பக்கம் 357-358.

சீர்திருத்தங்களில், தங்களுடைய அரசியல் எதிர்காலத்தையும், தங்கள் தரத்தையும் உருவாக்கிக் கொள்வதில் அவர்கள் ஒரு முக்கிய பாத்திரம் வகிக்கப் போகின்றனர்.

முடிவாக, நாஸிக் கோவில்-நுழைவு சத்தியாகிரகிகளை, அம்பேத்கர் உணர்வுபூர்வமாகப் பாராட்டினார்; அவர்கள் தங்கள் சகோதரர்களை தட்டியெழுப்பி இந்து சமுதாயத்தில் அவர்களது உண்மை நிலை என்ன என்பதை உணரும்படி செய்ததோடு, நாகரீக உலகம் முழுவதிலும் ஒடுக்கப்பட்ட சாதியினர்பால் ஆழமான அனுதாபத்தை ஏற்படுத்தினர். அவர்கள் தங்கள் குழந்தைகளை கல்வி கற்க வைப்பதன் அவசியத்தையும் அவர் வலியுறுத்தினார்.[1]

**“காங்கிரஸும் காந்தியும் தீண்டத்தகாதவர்களுக்கு என்ன செய்துள்ளனர்” என்ற தமது நூலில் இந்தப் பொருள் பற்றி தமது கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார் டாக்டர் அம்பேத்கர்.**

“தீண்டாமைக்கு எதிரான தமது இயக்கத்தை முன்கொண்டு செல்வதற்கு திரு.காந்திக்கு ஒரு சந்தர்ப்பம் இருந்தது. ஒரு இந்து தம்மை ஒரு காங்கிரஸ் உறுப்பினராக சேர்த்துக் கொள்ளும்படியான தமது விருப்பத்தைத் தெரிவிக்கும்போது, தாம் தீண்டாமையை அனுசரிக்கவில்லை என்றும் மேலும் ஒரு தீண்டத்தகாதவரை தமது வீட்டில் வேலைக்கு அமர்த்தியிருப்பதற்கு ருசுவும் அளிக்க வேண்டும் என்று அவர் கோரியிருக்கலாம். அத்தகைய பிரேரணை நடைமுறை சாத்தியமற்றதாக ஆகியிருக்காது; ஏனெனில், ஒவ்வொரு இந்துவும், தங்களை உயர்சாதி இந்துக்கள் இன்று கூறிக்கொள் பவர்கள், தங்கள் வீட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட வேலைக்காரர்களை வேலைக்கு அமர்த்தியிருக்கிறார்கள். நூல்நூற்பதும் (அன்னியப் பொருள்கள்) பகிஷ்கரிப்பும் காங்கிரஸ் உறுப்பினருக்கான தகுதி என்று இந்துவை ஏற்றுக்கொள்ள திரு.காந்தியால் முடியும் என்றால், ஒரு இந்துக்குடும்பத்தில் ஒரு தீண்டத்தகாதவரை வேலைக்கமர்த் துவது என்ற ஒரு தகுதியை ஏற்றுக்கொள்ளச் செய்திருக்க முடியும். ஆனால் காந்தி அதைச் செய்யவில்லை.

1924லிருந்து 1930 வரை, அதுவெற்றிடமாகவே இருந்தது; தீண்டாமையை அகற்ற அவர் எந்தத் தீவிர நடவடிக்கைகளும் எடுத்ததாகத் தோன்றவில்லை; அல்லது இந்தக் காலகட்டத்தில்

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1934 நவம்பர் 21ம் தேதி.

தீண்டத்தகாதவர்களுக்கு அனுகூலமான எந்த நடவடிக்கையிலும் அவர் அக்கறை கொண்டிருக்கவில்லை. திரு.காந்தி எதுவும் செய்யாதிருந்தபோது, சத்தியாகிரகம் என்று அழைக்கப்பட்ட இயக்கத்தைத் தீண்டத்தகாத சாதியினர் துவக்கினர். இந்த இயக்கத்தின் நோக்கம் பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுக்கும் மற்றும் பொதுக் கோயில்களில் நுழையும் உரிமையை நிலைநாட்டுவதே. பம்பாய் மாகாணத்தில் கொலாபா மாவட்டத்தின் மகட் நகரில் சௌதார் குளத்தில் பொது தண்ணீர் சேகரிக்கும் இடங்களில் தண்ணீர் எடுக்க தீண்டத்தகாதவர்களின் உரிமையை நிலை நிறுத்த சத்தியாக்கிரகம் நடந்தது. பம்பாய் மாகாணத்தின் நாஸிக் மாவட்டத்தின் நாஸிக் நகரில் உள்ள கலாராம் கோயிலின் அருகில் இந்து கோயில்களில் தீண்டத்தகாதவர்கள் நுழைவதற்கான உரிமையை நிலைநிறுத்த சத்தியாகிரகம் நடந்தது. பல சிறிய சத்தியாக்கிரகங்களும் நடைபெற்றன. எனினும் இவைதான் முக்கியமானவையாக இருந்தன, இவற்றின்பால் தீண்டத்தகாதவர்கள் மற்றும் அவர்களின் எதிரிகளின் கவனம் கூர்மையாகத் திருப்பப்பட்டிருந்தது. இவை கிளப்பிய தூசும் சத்தமும் இந்தியா முழுவதிலும் கேட்டன. தீண்டத்தகாத சாதியினரின் ஆயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் இந்த சத்தியாக்கிரகங்களில் கலந்துகொண்டனர். தீண்டத்தகாத சாதியினரைச் சார்ந்த ஆண்களும் பெண்களும் இந்துக்களால் அவமானப்படுத்தப்பட்டனர்; அடித்து நொறுக்கப்பட்டனர். பலர் காயமடைந்தனர்; பொது அமைதிக்கு குந்தகம் விளைவிப்பதாகக் காரணம் கூறி சிலர் அரசால் கைது செய்யப்பட்டனர். இந்த சத்தியாக்கிரக இயக்கம் ஆறு முழு ஆண்டுகள் நடந்தது; நாஸிக் மாவட்டத்திலுள்ள யயோலா என்ற இடத்தில் நடந்த மாநாட்டில் 1935ம் ஆண்டு இது முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது; தங்களுக்கு சம உரிமைகள் அளிக்க மறுக்கும் இந்துக்களின் விடாப்பிடியான கண்ணோட்டத்தின் காரணமாக, மாநாட்டில் கூடியிருந்தவர்கள் இந்து மதத்திலிருந்து விடுபடுவது எனத் தீர்மானித்தனர். சத்தியாகிரக இயக்கம் காங்கிரஸ் சாராத சுதந்திரமான இயக்கம். அது தீண்டத்தகாதவர்களால் திட்டமிடப்பட்டது; தீண்டத்தகாதவர்களால் தலைமை தாங்கி நடத்தப்பட்டது; தீண்டத்தகாதவர்களால் நிதி உதவி செய்யப்பட்டது. அப்படியும் திரு.காந்தியின் தார்மீக ஆதரவு கிடைக்கும் நம்பிக்கை தீண்டத்தகாதவர்களுக்கு இல்லாமல் போகவில்லை. அதைப் பெறுவதற்கான சரியான அடிப்படையும் இருந்தது. சத்தியாக்கிரகத்தின் சாரம் என்னவெனில், துன்பப்படுவதன் மூலம் எதிரிகளின் மனதை இளகச் செய்யக் கூடியது. திரு.காந்தியால் உருவாக்கப்பட்டது இந்த ஆயுதம்; சுயராஜ்யம் பெற பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக நடைமுறைப்

படுத்தி காங்கிரஸுக்குத் தலைமை தாங்கி நடத்தினார். இந்துக்களுக்கு எதிரான தங்கள் சத்தியாக்கிரகத்திற்கு திரு.காந்தியின் முழு ஆதரவு கிடைக்கும் என்று தீண்டத்தகாதவர்கள் எதிர்பார்த்தது இயல்பே; அதன் நோக்கம் பொதுக் கிணறுகளில் தண்ணீர் எடுக்கும் இந்துகோயில்களில் நுழையும் தங்கள் உரிமையை நிலைநாட்டவே. எனினும் திரு.காந்தி இந்த சத்தியாக்கிரத்திற்கு தமது ஆதரவை அளிக்கவில்லை. அவர் ஆதரவு மட்டுமல்ல; கடுமையான சொற்களால் அதை அவர் கண்டனம் செய்தார்.

இது சம்பந்தமாக, மனிதத் தவறுகளைப் போக்குவதற்கான இரு அசாதாரணமான ஆயுதங்களைக் குறிப்பிடலாம். அவற்றை சரியாக உபயோகிக்கவும் முழுமையாகப் பயன்படுத்தவும் தமக்கு மட்டுமே திரு.காந்தி உரிமை கொண்டாடுகிறார். அதில் ஒன்று சத்தியாகிரகம். அரசியல் தவறுகளைப் போக்குவதற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக பல சந்தர்ப்பங்களில் திரு.காந்தி அதை உபயோகித்திருக்கிறார். ஆனால், தீண்டத்தகாதவர்களுக்கு குளங்களையும் கோயில்களையும் திறந்துவிடக்கோரி இந்துக்களுக்கு எதிராக சத்தியாகிரக ஆயுதத்தை ஒரு போதும் அவர் உபயோகிக்கவில்லை. உண்ணாவிரதம் இருப்பது திரு.காந்தியின் மற்றொரு ஆயுதம். அவர் 21 தடவை உண்ணாவிரதம் இருந்திருக்கிறார் என்று சொல்லப்படுகிறது. அவற்றில் சில உண்ணாவிரதங்கள் இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக நடத்தப்பட்டவையாகும். ஒரு தடவை தனது ஆசிரமத்தில் இருந்தவர்கள் செய்த ஒழுக்கக் கேடுகளுக்கு பிராயச்சித்தம் தேடும் வகையில் அவர் உண்ணாவிரதம் இருந்திருக்கிறார். மேலும் பட்டவர்த்தன் என்ற பெயர் கொண்ட சிறைக்கைதி கேட்டுக் கொண்டும் அவருக்கு தோட்டி வேலை கொடுக்க பம்பாய் அரசாங்கம் மறுத்தது. இதை கண்டித்தும் ஒரு தடவை காந்தி உண்ணாவிரதம் இருந்திருக்கிறார். ஆனால் அவரது 21 உண்ணாவிரதங்களில் ஒரு தடவை கூட, தீண்டாமையை அகற்றக் கோரி அவர் உண்ணாவிரதம் இருந்ததில்லை. இவை மிக முக்கியத்துவம் வாய்ந்த உண்மைகள்.

1930ல் வட்டமேஜை மாநாடு நிகழ்ந்தது. அதன் நடவடிக்கைகளில் திரு.காந்தி கலந்து கொண்டார். இந்தியாவிற்கு சுயாட்சி ஏற்படுவதற்காக ஒரு அரசியல் சாசனத்தை வரையும் ஜீவாதாரமான விஷயம் பற்றி மாநாடு அக்கறை கொண்டது. இந்தியா ஒரு சுய ஆட்சி செய்யும் நாடாக இருக்க வேண்டுமெனில், அரசாங்கம் மக்களின்,

மக்களால், மக்களுக்கான அரசாங்கமாக இருக்க வேண்டும் என்று ஏகமனதாக கருதப்பட்டது. அரசாங்கம் உண்மையில் ஒரு மக்களுக் கான அரசாங்கமாக இருந்தால்தான் அது மக்களின், மக்களுக்கான ஒரு அரசாங்கமாக இருக்க முடியும் என்று ஒவ்வொருவரும் ஒப்புக் கொண்டனர். பிரச்னை என்னவெனில், பல்வேறு சமூகங்களாக, சிறுபான்மையினராக மற்றும் பெரும்பான்மையினராக, அவர்களுக் குள் பிளவுகளும் சமூக பகை உணர்வுகளும் உள்ள ஒரு நாட்டில் அதை ஒரு மக்களின் அரசாங்கமாக எப்படி ஆக்குவது என்பது. இந்த சூழ்நிலைகளைக் கணக்கில் கொண்டு, வகுப்புவாரி பிரதிநிதித்துவ அடிப்படையில் சட்டசபையும் நிர்வாகமும் அமைக்கப்படாவிடில், மக்களுக்கான அரசாங்கம் என்பதற்கு சாத்தியப்பாடில்லை.

தீண்டத்தகாதவர்களின் பிரச்சினை மாநாடு முழுமையும் வியாபித்திருந்தது. அது புதிய அம்சத்தைப் பெற்றது. கேள்வி என்ன வெனில், இந்துக்களின் தயவில் இப்பொழுது உள்ளதுபோல் தீண்டத் தகாதவர்களை விட்டுவிட வேண்டுமா அல்லது வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் என்ற கோட்பாட்டை அவர்களுக்கு விரிவுபடுத்து வதன் மூலம் அவர்களே தங்களைக் காத்துக் கொள்வதற்கு ஒரு வழியை அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டுமா என்பது. இந்துக் களின் இஷ்டத்திற்கு விடப்படுவதை தீண்டத்தகாதவர்கள் கடுமை யாக ஆட்சேபித்தனர்; மற்ற சிறுபான்மையினருக்கு அளிக்கப்படும் அதே பாதுகாப்பு தங்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று கோரினர். தீண்டத்தகாதவர்களின் வாதம் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. அது ஒரு தர்க்க ரீதியானது. இந்துக்களுக்கும் முகமதி யருக்கும் இடையே, இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் இடையே, இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையே உள்ள வேற்றுமை இந்துக்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இருக்கும் பிளவுடன் ஒப்பிட்டால் ஒன்றுமில்லை. அது அதிகமாக பரவலானது. அதிகமாக ஆழமானது. இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் அரசியல் சீரழிவை ஏற்படுத்தாது; ஏனெனில், இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே உள்ள உறவுகள் எஜமானனுக்கும் அடிமைக்கும் இடையே உள்ள உறவு போன்றல்ல. அது ஒரு மனக்கசப்பே. மாறாக, இந்துக்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இடையே உள்ள பிளவால் தீண்டத்தகாதவர்கள் அனைவருக்கும் அரசியல் கேடு விளையும்; ஏனெனில், இரு பிரிவினருக்கும் இடையே உள்ள உறவு எஜமானனுக்கும் அடிமைக்கும் இடையே உள்ள உறவு போன்றது. சமூக வளர்ச்சிப் போக்கில் இவர்களுக்கு இடையே உள்ள இடைவெளியை நிரப்ப ஆண்டாண்டு காலமாக

முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவை எல்லாம் தோற்றுப் போயின. அவற்றின் வெற்றிக்கு நம்பிக்கை எதுவும் இல்லை. இந்துப் பெரும்பான்மையினருக்கு அதிகாரம் மாற்றப்படப் போவதால், தீண்டத்தகாதவர்களுக்கு ஏதாவது ஒருவித அரசியல் பாதுகாப்பு- முஸ்லீம்கள் மற்றும் சிறுபான்மையினருக்கு அளிக்கப்படும் பாதுகாப்புக்கு அதிகமாக இல்லாவிடினும் அதே அளவு பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும்.

தீண்டத்தகாதவர்களின் கோரிக்கைக்கு ஆதரவு அளிப்பதன் மூலம் இந்துக்களின் கொடுங்கோன்மைக்கும் அடக்குமுறைக்கும் எதிராக போராடும் அவர்கள் சக்தியை பலப்படுத்துவதற்கு திரு. காந்திக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. தமது அனுதாபத்தைத் தெரிவிப்பதற்குப் பதிலாக, அவர்களைத் தோற்கடிப்பதற்கு எல்லா வழிகளிலும் தமது சக்தியை அவர் உபயோகித்தார். தீண்டத்தகாதவர்களைத் தனிமைப்படுத்துவதற்காக அவர் முஸ்லீம்களுடன் ஒரு சமரசம் செய்து கொண்டார். முஸ்லீம்களை தம் பக்கம் இழுப்பதில் தோல்வியுற்ற அவர், முஸ்லீம்களுக்கும் மற்ற சிறுபான்மையினருக்கும் அளிக்கும் அதே அரசியல் உரிமைகளை தீண்டத்தகாதவர்களுக்கும் அளிக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முடிவை வாபஸ் பெற நிர்ப்பந்திப்பதற்காக சாகும் வரையிலான உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். உண்ணாவிரதம் தோல்வியுற்றபோது, புனா ஒப்பந்தம் என்ற ஒப்பந்தத்தில் கையெழுத்திட வேண்டியதாயிற்று; அது தீண்டத்தகாதவர்களின் அரசியல் கோரிக்கைகளை ஒப்புக் கொண்டது. அவர்களின் அரசியல் உரிமைகளையும் பயனற்றதாக்க, காங்கிரஸை தேர்தலில் தகிடுதத்தம் செய்ய அனுமதித்து தமது வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டார்.

• • •

★ டைம்ஸ் ஆப் இந்தியா, 1934, தொகுதி 9, பக். 246-249.

# 1

## நான் ஒரு பண்புள்ள மனிதன்

''பீம்ராவ் அம்பேத்கரின் தந்தையார் சுபேதார் ராம்ஜி மலோஜி 1913 பிப்ரவரி 2ம் தேதி மரண மடைந்தார். தனது சொந்தக் காலிலே நிற்கும் நிலையில் பீம்ராவ் அம்பேத்கர் விடப்பட்டார். அறிவாற்றல் பெறுவதற்கான தணியாத தாகமும் புகழ்பெற வேண்டுமென்ற உந்துதலும் அவரை அமைதியற்றவராக்கின. பரோடாவில் தமது வேலைக்கு திரும்பிச் செல்லும் மனோநிலையில் அவர் இப்போது இல்லை. அங்கு தங்கிய குறுகிய காலம் மகிழ்ச்சிகரமாக இருக்க வில்லை. கடைசியாக, 1914 ஜுன் மாதத்தில் மற்றொரு சந்தர்ப்பம் அவருக்குக் கிடைத்தது. அந்தச் சந்தர்ப்பத்தில், கொலம்பியா பல்கலைக்கழகத்தில்[1] மேற்படிப்பிற்காக சில மாணவர்களை அமெரிக்காவுக்கு அனுப்ப வேண்டுமென பரோடா மகாராஜா எண்ணினார்''.*

''கனம் மேன்மைதங்கிய மகாராஜா பம்பாயில் இருந்த போது, பரோடாவில் தாம் சேவையில் இருந்தபோது, தங்கும் வசதிகள் பற்றி தாம் எதிர்கொண்ட அசௌகரியத்தை அவரிடம் எடுத்துரைப் பதற்காக மலபார் ஹில் மாளிகையில் அவரை பீம்ராவ் சந்தித்தார். கனம் மேன்மைதங்கிய மகராஜாவுக்கு பீம்ராவ் பற்றி எல்லாம் ஏற்கனவே தெரிந்திருந்தது. பீம்ராவ் எதிர்கொண்ட அசௌகரியம் பற்றி ஒருவார்த்தை கூடச் சொல்லாமல் கனம் மேன்மை தாங்கிய மகாராஜா அவருடன் பல்வேறு விஷயங்கள் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார். கனம் மேன்மை தங்கிய மகாராஜா எழுப்பிய எல்லா விஷயங்கள் பற்றியும் தமது தெளிந்த கருத்துக்களை பீம்ராவ் எடுத்துக் கூறினார். அரைமணி நேர விவாதத்திற்குப் பின், மறுநாள் இதே நேரத்திற்கு வரும்படி மகாராஜா கேட்டுக் கொண்டார். புகார்களைப் பற்றி கனம் மேன்மை தங்கிய மகாராஜா எதுவும் பேசாததால், அவர் வருத்தமடைந்தார்.

---

★ கனம் மேன்மை தங்கிய மகாராஜா சயாஜிராவ் கெயிக்வாடு 1863 மார்ச் 1ல் பிறந்தார். அவரது முடிசூட்டு விழா 1881, டிசம்பர் 28ல் நடைபெற்றது. பம்பா யிலுள்ள அவரது ஜெய் மஹால் அரண்மனையில் 1939 பிப்ரவரி 6ல் அவர் மரணமடைந்தார்.

1. கீர், பக். 24-26

எந்தப் பொருள் பற்றி இவர் பயில விரும்புகிறார் என்பதை அடுத்த நாள் கனம் மேன்மை தங்கிய மகாராஜா கேட்டார்.

தாம் சமூக இயல், பொருளாதாரம் மற்றும் பொது நிதி பற்றி பயில விரும்புவதாக பீம்ராவ் பதிலளித்தார்.

கனம் மேன்மை தங்கிய மகாராஜா : இந்தப் பொருள்களைப் பயின்ற பின் தாங்கள் என்ன செய்வீர்கள்.

பீம்ராவ் : இந்தப் பொருள்களைப் பயில்வது எனது சமுதாயத்தின் மோசமான நிலைமை அபிவிருத்தி செய்வதற்கு எனக்கு வழிகாட்டும். மேலும் இதே வழியில் சமுதாய சீர்திருத்தப் பணியை மேற்கொள்வேன்.

கனம் மேன்மை தங்கிய மகாராஜா : (சிரித்துக் கொண்டு) ஆனால் தாங்கள் எங்களுக்குச் சேவை செய்யப் போகிறீர்கள். இல்லையா? அப்படியாயின் தாங்கள் எவ்வாறு பயின்று, பணியையும் சமூக சேவைகளையும் செய்யப் போகிறீர்கள்?

பீம்ராவ் : கனம்மேன்மை தங்கிய மகாராஜா எனக்குச் சந்தர்ப்பம் அளிப்பாராயின் எல்லாவற்றையும் செய்ய முயல்வேன்.

கனம் மேன்மை தங்கிய மகாராஜா : நானும் அதே முறையில்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். உங்களை அமெரிக்காவுக்கு அனுப்ப எண்ணியிருந்தேன். தாங்கள் போவீர்களா?

பீம்ராவ் : ஆம் ஐயா.

கனம் மேன்மை தங்கிய மகாராஜா : இப்பொழுது தாங்கள் போகலாம். வெளிநாட்டுக்குச் சென்று பயில விரும்புவதற்கு உபகாரச் சம்பளம் கேட்டு கல்வித்துறை அதிகாரிக்கு மனு அனுப்பி அதுபற்றி எனக்குத் தெரிவியுங்கள்.''

''தமது சமஸ்தானம் விளம்பரப்படுத்தியுள்ள உபகாரச் சம்பளங்கள் ஒன்றுக்கு மனு செய்யும் படி அவருக்கு மகாராஜா ஆலோசனை கூறினார். அவரும் அவ்வாறே செய்தார். மேற்படிப்புக்காக மூன்று மாணவர்களுடன் பீம்ராவை அனுப்ப மகாராஜா முடிவு

செய்தார். பீம்ராவ் பரோடாவுக்கு அழைக்கப்பட்டார். 1913 ஜுன் 4ம் தேதியன்று, தம் நேரத்தை குறிப்பிட்ட பொருள்கள் பற்றி பயில செலவழிக்கவும் கல்விப் பயிற்சியை முடித்தபின் பரோடா சமஸ்தானத்தில் 10 ஆண்டுகள் சேவை செய்யவும் ஒப்புக்கொண்டு பரோடா சமஸ்தானத்தின் கல்வித்துறை துணை அமைச்சர் முன்பு அவர் ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்.''

ஒப்பந்தக் குறிப்பு (Memorandum) பின்வருமாறு.

''ஒரு புறம் மேன்மை தங்கிய பரோடாவின் கைக்வாட் அரசாங்கத்திற்கும் மறுபுறம் பரோடாவில் வசிக்கும் திரு. பீம்ராவ் ஆர். அம்பேத்கர் பி.ஏ.யும் 1913 ஜுன் 4ம் தேதி செய்து கொண்ட ஒப்பந்தம்.

மேன்மை தங்கிய கையிக்வாட் மகாராஜாவின் அரசாங்கத்திற்கும் பீம்ராவ் அம்பேத்கருக்கும் இடையே கீழ்க்கண்டபடி ஒப்புக்கொள்ளப்படுகிறது:-

(1) கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் நிதி மற்றும் சமூக இயல் துறையில் பயிற்சி பெற்று இரண்டு ஆண்டுகளில் அல்லது தேவைப்படி அதிகமான காலத்தில் அங்கு தங்கியிருந்து பொருளாதாரம், நிதி மற்றும் சமூக இயல் துறையில் முதுநிலைப் பட்டபடிப்பில் தேற அமெரிக்காவுக்குச் செல்ல திரு. அம்பேத்கர் பீம்ராவ் ஒப்புக் கொள்கிறார். இந்தக் காலகட்டத்தில் டாக்டர் எச்.சி. பாம்பஸின் பொது மேற்பார்வையில் அவர் தங்கியிருப்பார்.

(2) ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ள பொருள்களைத் தவிர வேறு எந்தப் பொருளையும் அல்லது அப்பொருள்களுக்கு பாதகம் விளைவிக்கக்கூடிய வேறு எந்தப் பொருள்பற்றியும் கனம் மேன்மை தங்கிய (மகாராஜாவின்) அரசாங்கத்தின் அனுமதியின்றி பயிலுவதை பீம்ராவ் அம்பேத்கர் மேற்கொள்ள மாட்டார்.

(3) எந்தக் கல்வி அதிகாரிகளின் கீழ் அவர் பயின்று வருவாரோ அவர்கள் மூலமோ அல்லது அவரை மேற்பார்வை செய்யும் டாக்டர் எச்.சி.பம்பஸ் மூலமாகவோ அவரது நடத்தை பற்றியும் முன்னேற்றம் குறித்தும் 3 மாதத்திற்கு ஒரு முறை அறிக்கைகளை பரோடா சமஸ்தான கல்வித்துறை அமைச்சருக்கு அவர் அனுப்ப வேண்டும். அவ்வப்போது அவருக்கு அனுப்பப்படும் ஆணைகளுக்கு ஏற்ப அவர் நடந்து கொள்வார்.

*(4) பயணத்திற்கு தேவைப்படுபவைகளுக்காக அவர் கிளம்பும் முன் ரூ.500/- அவருக்குத் தரப்படும்.*

*(5) பம்பாயிலிருந்து அமெரிக்காவுக்கான அவரது பயணத்திற்கு பிரெஞ்சு அல்லது ஜெர்மன் கப்பலில் இரண்டாவது வகுப்புப் பயணச்சீட்டை கனம் மேன்மை தங்கிய (மகாராஜாவின்) அரசாங்கம் அவருக்கு வழங்கும். குறிப்பிட்டுள்ள பொருள் அல்லது பொருள்களை வெற்றிகரமாகப் பயின்று திரும்பும்போது அல்லது உடல் நலக் குறைவால் பயிற்சி முடிக்கும் முன்பே திரும்ப வேண்டி அவர் நிர்ப்பந்தப்படுத்தப்பட்டால், ஒரு மருத்துவச் சான்றிதழ் ஆதாரப்படி அவர் திரும்பும் பயணத்திற்கு இதே வசதி செய்து கொடுக்கப்படும். அவரது பயிற்சி சம்பந்தமாக மேற்கொள்ளப்படும் நியாயமான பயணங்களுக்கும் தேவைப்படும் ரயில் அல்லது கப்பல் பயணச் சீட்டுகளுக்கு தேவைப்படும் பணம் அவருக்குக் கிடைக்கும்.*

*(6) பம்பாயிலிருந்து கிளம்பும் தேதியிலிருந்து வருடத்திற்கு 230 பவுன்கள் (இருநூற்றுமுப்பது பவுன்கள்) படியாக திரு. அம்பேத்கர் பெறுவார்; மேலும் எல்லாச்செலவுகளையும் அரசாங்கம் ஏற்கும்.*

- பூர்த்தியாகவில்லை - ஒரு பக்கம் காணவில்லை-

*(ஒப்பம்) ஏ.ஸி. ஜோஷி*
*பீம்ராவ் ஆர். அம்பேத்கர்*
*(எட்டு அணா முத்திரைக் காகிதத்தில்)*

*என் முன்பு 1913 ஜூன் 4ம் தேதி கையொப்பமிட்டு உறுதிச்சான்று அளிக்கப்படுகிறது.*

*(ஒப்பம்) ஜி.எம். ஷா*
*கல்வித்துறைத் துணை அமைச்சர்,*
*பரோடா சமஸ்தானம்*
*அரசாங்கத்தின் சார்பாக''**

---

★ *ராட்டு (Rattu) டாக்டர் அம்பேத்கர் பற்றி அதிகம் தெரியாத உண்மைகள், ப. 227 -228.*

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் சார்பில் ஆன செலவுகள்

**அமெரிக்காவில்**

| ரூ | அ . பை | |
|---|---|---|
| 1,373 | 12 -0 | பயணத்திற்குத் தேவையானவை, 15.6.13 லிருந்து மூன்றுமாத உபகாரச் சம்பளம் மற்றும் பரோடா விலிருந்து ரயில் பயணச்சீட்டு. |
| 5900 -0 | | பயணம் (கப்பல் பயணம்) |
| 3,828 | 0 - 0 | 15.9.13 முதல் 14-6-14 வரை உபகாரச் சம்பளம் மேலும் புத்தகங்கள் கட்டணம் முதலியன - பட்டியல் 843/25.4.14 |
| 6,912 | 3 - 7 | உபகாரச் சம்பளம்: 15.6.14 முதல் 14.9.15 வரை, மேலும் புத்தகங்கள் கட்டணம் முதலியன, பட்டியல் எண் 898/28-7-16 |
| 3,651 | 7- 10 | உபகாரச் சம்பளம் 15.9.15 முதல் 14.6.16 வரை மற்றும் புத்தகங்களில் கட்டணம் முதலின, பட்டியல் எண் 1831/31-3-18 |

**இங்கிலாந்தில்**

| | | |
|---|---|---|
| 4,078 | 9 - 8 | உபகாரச் சம்பளம் 15.6.16 முதல் 14.6.17 வரை, பட்டியல் எண் 1831/ 31.5.18 கல்வி சம்பந்தமான செலவுகள் - பயணத்திற்காக |

----------------[1]
20,434-0 -6*
----------------

''மகாராஜாவின் நலன்களைக் காக்கவும் சமஸ்தானத்தின் நிதியை ஒழுங்குபடுத்தவும் அதி தீவிர ஆர்வத்தில் அம்பேத்கருக்கான உபகாரச் சம்பளச் செலவு ரூ. 20,434-05 தொகையைத் திருப்பித்

* விவரங்களுக்கு, தொகுப்புகள் VII, VIII, IX அட்டவணைகளைப் பார்க்க.
1. ரட்டு, டாக்டர் அம்பேத்கர் பற்றி அதிகம் தெரியாத உண்மைகள் ப.229.

தர வேண்டுமென்று வற்புறுத்தும் அசாதாரணமான நடவடிக்கைகளை பரோடா சமஸ்தான அதிகாரிகள் மேற்கொண்டனர்; ஆனால் மகாராஜாவின் கவனத்திற்கு கொண்டு வராமலே இவ்விதம் செய்தனர்.

தமது வெளிநாட்டுப் படிப்பிற்காக பரோடா சர்க்கார் செலவழித்த தொகையைத் திருப்பித்தர டாக்டர் அம்பேத்கர் ஒப்புக்கொண்டிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை; ஆனால் அவர் அன்றுள்ள நிலைமையில் ஜீவிதத்தை நடத்தவே போதுமான (வருமானம்) பணம் இல்லாதபோது கடனை அடைக்க பணம் எப்படிக் கிடைக்கும்? இந்தச் சூழ்நிலையில் அரசாங்கம் செலவழித்த பணத்தைத் திரும்பித்தர அவர் பெரிதும் விரும்பினாலும் தம் இயலாமையைத் தெரியப்படுத்தினார். திருப்பிக் கொடுக்கும் நிலையைத் தாம் அடையும்வரை அவகாசம் அளிக்குமாறு பரோடா அரசாங்க அதிகாரிகளை அவர் பணிவுடன் கேட்டுக்கொண்டார்.

தொகையை திரும்பப்பெற வழக்குப் பதிவு செய்ய வேண்டுமென்ற பரோடா சமஸ்தான அரசின் உத்தேசித்துள்ள நடவடிக்கை பற்றி திரு.பண்டிட்டுக்கு டாக்டர் அம்பேத்கரின் கடிதம். அவரது சொந்த கண்ணியமான முறையிலும் பண்பான எழுத்து நடையிலும் எழுதப்பட்டது. படிக்க மிக ருசிகரமானது. அது அப்படியே கீழே தரப்படுகிறது.

தனி நபருடையது<br>
பி.ஆர்.அம்பேத்கர்

தாமோதர் ஹால்,<br>
பரேல், பம்பாய்<br>
*9 -12 - 1924*

அன்பார்ந்த திரு.பண்டிட்,

இம்மாதம் 6ம் தேதிய தங்கள் கடிதத்திற்கு மிக நன்றி. அதன் உள்ளடக்கத்தை நான் மிகக் கவனமாகப் படித்தேன். பரோடா சமஸ்தான அரசாங்கத்துடனான எனது முந்திய கடிதப் போக்குவரத்தை தாங்கள் பார்த்திருந்தால், சமஸ்தானத்திற்குள்ள என் கடமையை ஞாபகப்படுத்த வேண்டிய அவசியத்தை தாங்கள் உணர்ந்திருக்க மாட்டீர்கள். எனக்கும் பரோடா சமஸ்தானத்திற்கும் இடையேயான சட்ட ரீதியான உறவுகள் எதுவாய் இருந்தாலும், எனக்காக சமஸ்தானம் செலவழித்த பணத்தை கொடுக்க நான் கடமைப்பட்டுள்ளேன் என்பதை பற்றி அவர்களுக்குப் பல தடவைகள் எழுதியுள்ளேன். என்னை நம்புங்கள், என்னிடம் பணமிருந்தால்,

இப்பொழுதே ஒரு கணம் தாமதிக்காமல் எனது கடமையை நிறை வேற்றியிருப்பேன். பரோடா சமஸ்தானம் என்னை நடத்தியது பற்றி நான் கூறவிரும்புவதை சொல்ல எனக்கு உரிமை உண்டு என நினைக்கிறேன்; ஏனெனில் அதுபற்றி தாங்கள் முற்றிலுமாக அறிய மாட்டீர்கள். ஆனால், நான் இன்றுள்ள நிலையில் ஜீவிப் பதற்கே போதுமான பணம் என்னிடமில்லை. அப்படியிருக்கும் போது என் கடன்களைத் திருப்பித்தர எப்படிப் பணம் ஒதுக்க முடியும். பம்பாயில் நான் என்னை இப்பொழுது 'நிலைநிறுத்தி'க் கொண்டேன் என்றும் எனது கடமையை நிறைவேற்ற எந்த கஷ்டமும் இருப்பதாக நீங்கள் காணவில்லை என்று தாங்கள் கூறுகிறீர்கள். ''நிலை நிறுத்திக் கொண்ட'' என்ற பதத்தால் நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்பதை புரிந்துகொள்வது உண்மையில் கஷ்டமாக இருக்கிறது. நான் ஏராளமாகச் சம்பாதிக்கிறேன் என்று தாங்கள் கருதினால், தாங்கள் முற்றிலும் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறீர்கள் என்று கூற வருந்துகிறேன். வழக்குகள் பெற போராடிக் கொண்டிருக்கும் ஒரு பாரிஸ்டர் மட்டுமே நான் என்பதைத் தாங்கள் மறந்துவிட்டதாகத் தோன்றுகிறது. முதலாவ தாக எனது தொழில் துவங்கி ஒரு வருஷம்தான் ஆகிறது என்ற யதார்த்தம் உள்ளது. இரண்டாவதாக, சாதி குரோதங்கள் எல்லாம் உள்ளன. அவை இந்தத் தொழிலில் கட்டுக்கடங்காது உள்ளன. எனது ஒவ்வொரு முன்னேற்றப் படியிலும் இவற்றை நான் எதிர் கொள்ள வேண்டியுள்ளது. போராட்டம் என்னைப் பொறுத்தவரை அதிகமாகச் கசப்பானது; எனவே சிரமத்துடன் மிகநிதானமாகச் செயல்பட வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். இந்த சூழ் நிலைமைகளில், நான் எவ்வளவுதான் விரும்பினாலும், இப்போ தைக்கு பணத்தை திருப்பிதர என்னால் இயலவில்லை. கொடுக்க முடியாத எனது இயலாமையை நான் திருப்பிக் கொடுக்க விரும்ப வில்லை என்று பரோடா அரசாங்கம் அர்த்தப்படுத்தினால், அவர் களுக்குள்ள ஒரே வழி - அது அவர்களுக்கு உண்மையில் அனுகூல மாக இருக்கும் என்று கருதினால் - நீதிமன்றத்திற்கு போய் தீர்ப்பைப் பெற்று அதை நடைமுறைப் படுத்துவது தான். விஷயம் நீதிமன்றத் திற்குச் சென்றால், சமூகத்தின் பெயர் பாதிக்கப்படும். மாறாக எனது நம்பிக்கை என்னவெனில், வழக்கு நடை பெறும்போது, பரோடா சமஸ்தான அரசாங்கத்தின்பால் நான் எப்படி நடந்து கொண்டேன் என்று சமுதாயம் தெரிந்துகொண்டால், என் பக்கம் நான் வெட்கப் பட வேண்டியது எதுவும் இருக்காது என்று நான் உறுதியாக நம்பு கிறேன். மாறாக, உத்தேசப்பட்டுள்ள வழக்கு நடைபெறும்போது தூசு, சேறு வாரி இரைக்கப்படும்; அதில் கொஞ்சம் சேறு கனம்

மேன்மை தங்கிய மகாராஜா மீதும் பரோடா சமஸ்தானம் மீதும் ஒட்டிக் கொள்ளும், அப்பொழுது இருவரும் வெட்கப்பட வேண்டும்.

இதெல்லாம் தவிர்க்கப்பட்டால் நிச்சயமாக நல்லது. இதைத் தவிர்ப்பதற்கு ஒரே வழி, திருப்பிக் கொடுக்கும் நிலைக்கு நான் வரும்வரை, பரோடா அரசாங்கம் எனக்கு அவகாசம் அளிப்பதுதான். பரோடா அரசாங்கம் என்னை போதுமான அளவு நன்கு புரிந்து கொள்ளவில்லை. நான் ஒரு பண்புள்ள மனிதன் என்பதை ஒரு முறை அவர்களுக்கு எடுத்துக் காண்பித்தேன். எனக்கு போதுமான பண்பு இல்லையெனில் நான் பரோடாவுக்க திரும்பி வந்திருக்க மாட்டேன். பிரிட்டிஷ் சேவையில் நுழைய ஏராளமான சந்தர்ப்பங்கள் எனக்கு வந்தன;

ஒரு பண்புள்ள மனிதனைத் தவிர யாரால் இவற்றைத் தூக்கி எறிந்திருக்க முடியும்? நான் ஒரு சுதந்திரமானவன் என்று மட்டுமே அவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஆனால் பண்புள்ள ஒருவன்தான் சுதந்திரமாக இருக்க முடியும் என்பதை அவர்கள் மறக்கின்றனர்.

சமஸ்தானத்திற்கான எனது கடமையை செய்ய நான் மிக அக்கறையுடன் இருக்கிறேன் என்றும், நான் கஷ்ட நிலையில் இருப்பதால்தான் உடனே அதை நிறைவேற்ற முடியவில்லை என்றும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என நான் நம்புகிறேன். எப்பொழுது நான் இலகுவான நிலையில் இருப்பேனோ அப்பொழுதே திருப்பிக் கொடுக்கத் துவங்குவேன் என்பதைத் தாங்கள் நம்பலாம். இதற்கு மேல் இப்பொழுது எதுவும் சொல்லவோ அல்லது செய்யவோ முடியாது. நான் வெளிப்படுத்தியுள்ள உண்மையான நோக்கம் என்னவெனில், அந்தத் தொகையைப் பம்பாய்ப் பல்கலைக் கழகத்துக்குத் திருப்பிக் கொடுத்து அந்தத் தொகையில் பரோடா மகாராஜா பெயரில் ஒடுக்கப்பட்ட சாதியினரின் பையன்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்க ஏற்பாடு செய்ய பல்கலைக்கழகத்தை கேட்டுக் கொள்ளத்தான் இந்தத் தொகை, ஒடுக்கப்பட்ட சாதியினரின் ஒரு உறுப்பினர் என்ற அடிப்படையில் எனக்காகச் செலவு செய்யப்பட்டது; என் கருத்தில் அரசாங்கத்தின் தனிப்பட்ட முறையிலான செலவுக்குப் போகக் கூடாது என்பதும் ஒடுக்கப்பட்ட சாதியினரின் நலனுக்காக அது பயன்படுத்தப்பட வேண்டும் என்பதும்தான். ஆனால் இத்தகைய ஒரு வியாபார முறையில் சமஸ்தானம் செயல்பட்டு வருவதால், எனது திட்டம் பாராட்டப்

படும் என்று நான் கருதவில்லை என்று கூற விரும்புகிறேன்.

இத்துடன், எனக்கும் பரோடா சமஸ்தானத்திற்கும் இடையே முடிவு செய்யும்படி இதை உங்களுக்கு விட்டுவிடுகிறேன்.

எந்த உணர்வின் மீது தாங்கள் எனக்கு எழுதியுள்ளீர்கள் என்பதை நான் தவறாகப் புரிந்துகொள்ளவில்லை. எந்த மனநிலையில் நான் உங்களுக்கு பதிலளித்திருக்கிறேன் என்பதைத் தாங்கள் தவறாகப் புரிந்துகொள்ள மாட்டீர்கள் என நம்புகிறேன்.

அவ்வப்போது தங்களிடமிருந்து கடிதத்தை எதிர்பார்க்கும்.

தங்கள்
உண்மையுள்ள
பி.ஆர்.அம்பேத்கர்[1]

1. ரட்டு, டாக்டர் அம்பேத்கர் பற்றி அதிகம் தெரியாத உண்மைகள், ப. 21 -24.

# 2

# சிலைக்குப் பதிலாக, ஒரு நூலகம் சர். மேத்தாவுக்குச் சிறந்த நினைவுச் சின்னமாக இருக்கும்

''அமெரிக்காவின் நியூயார்க் நகரிலுள்ள கொலம்பியாப் பல்கலைக் கழகத்தில் மாணவராக இருந்தபோது 1910-ல் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பிரசுரத்திற்காக அனுப்பிய முதல் கடிதம் இது. சர். பிரோஷா மேத்தாவுக்கு ஒரு சிலை வடிக்கப்பட வேண்டும் என்றும் அது பம்பாய் முனிசிபல் அலுவலகத்தின் முன்னால் நிறுவப்பட வேண்டுமென்றும் ஆலோசனை பம்பாய் நகரில் முன் வைக்கப்பட்டது. பத்திரிக்கை வாயிலாக இதைத் தெரிந்து கொண்ட டாக்டர்.அம்பேத்கர் ஒரு மாபெரும் மனிதருக்கு சிலை வடிவில் நினைவுச் சின்னம் அமைப்பது மிகச் சாதாரணமானது என்று கருதினார். அவரது கருத்துப்படி, நினைவுச் சின்னம் சமுதாயத் திற்குப் பயன்படும் முறையில், குறிப்பாக அறிவைப் பரப்புவதாக இருக்க வேண்டும். எனவே, ஸர் பிரோஷா மேத்தாவின் நினைவைப் போற்றும் முறையில், ஒரு பொது நூலகம் என்ற உருவில் நினைவுச் சின்னம் இருக்க வேண்டுமென்று ஆலோசனை கூறினார். புகழ் பெற்றவர்களுக்கு சிலைகள் வைக்க வேண்டுமென்ற வெறி இந்திய மக்களுக்கு இன்றும்கூட இருப்பதால், இந்தக் கடிதம் அறிவூட்டுவ தாகவும் வழிகாட்டுவதாகவும் அமையும்.''[1]

**காலம் சென்ற சர் பிரோஷா மேத்தா.**

பெறுநர்
ஆசிரியர், 'கிரானிக்கில்'

ஐயா,

சமூக, பொருளாதார மற்றும் அரசியல் துறைகளில் போதுமான நிலையிலுள்ள இந்தியா மாதிரியான ஒரு நாட்டில், நேர்மையான தலைவர்களின் தலையாய கடமை, புனரமைக்கும் பெரும் பணியை அவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டியதே என்று நான் கூறும் போது அதை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள். இத்தகைய தலைவர்களை

---

★ லோக் ராஜ்யா, டாக்டர் பாபா சாகிப் அம்பேத்கர் நினைவு மலர், பக்கம் 31, 1981 ஏப்ரல் 16.

காலம் சென்ற கோகலே மற்றும் பி.எம்.மேத்தாவிடம் கண்டோம். உற்சாகத்துடனும் தியாக உள்ளத்துடனும் நமது லட்சியத்தை பிரதி பலித்ததற்காக அவர்களுக்கு நாம் என்றென்றும் நன்றி செலுத்தத் தகுதி வாய்ந்தவர்கள். மக்களோடு அவர்கள் மீது கொண்ட நம்பிக்கை யும் அவ்வளவு முழுமையாக இருந்தது. அவர்களின் திடீர் மரணம் இயற்கையின் சூழ்ச்சியோ என்று கொஞ்ச காலத்திற்குத் தோன்றியது.

நமது பிரச்சனைகள் பலவற்றை எடுத்துக் கொண்டு சிலவற் றிற்கு தீர்வு கண்டு, மற்றவற்றை சமாளிக்கும்படி நமக்கு விட்டுச் சென்றது அவர்களுக்கு நீங்கா புகழை அளித்தது. ஆனால், அவர்கள் ஆற்றிய பணியின்பால் உணர்வு நம்மால் செய்யபட வேண்டிய எதிர்காலப் பணிகளை ஒதுக்கி வைக்கச் செய்துவிட்டது. அவர்கள்பால் உள்ள நமது பக்தி அவ்வளவு அதிகம் நமக்காக யார் யார் விடாப் பிடியாக செயல்பட்டார்களோ அவர்களுக்கு பொருத்தமான நினைவுச் சின்னங்கள் அமைப்பதைப் பற்றி - நம்மை நோக்கும் பிரச்சினைகளை எதிர்கொள்வதை விட அதிகமாக நாம் கவலைப் படுவது இயல்பே.

இதுவரை கிடைத்த பத்திரிகைகள் சுட்டிக்காட்டுவது போல, இந்திய ஊழியர்கள் அமைப்புக் கிளைகளை பல்வேறு இடங்களில் நிறுவுவது என்ற உருவில் திரு. கோகலேக்கு நினைவுச் சின்னம் என்றும் அதேசமயம் பி.எம்.மேத்தாவுக்க முனிசிபல் ஆபிஸுக்கு முன் சிலை வைப்பது அவருக்கு நினைவுச் சின்னம் என்றும் தோன்றுகிறது.

தனிப்பட்ட முறையில், சர். பி.எம். மேத்தாவுக்கு இந்த உருவில் நினைவுச் சின்னம் வைப்பதுமானச் சாதாரணமானதும் பொருத்தமில்லாததும் ஆகும் என்று நான் நினைக்கிறேன். அவருக் கான நினைவுச் சின்னம் உண்மையான நினைவுச் சின்னமாகவும் எதிர்கால சந்ததியருக்கு நிரந்தரமாக பயன்படும்முறையிலும் ஏன் இருக்கக்கூடாது என்று புரிந்து கொள்ள முயற்சிக்கிறேன்.

இந்த இரண்டு நோக்கங்களையும் இணைக்கும் முறையில் என்னுடைய பணிவான கருத்தில் ஸர்.பிரோஷா மேத்தாவுக்கான நினைவுச் சின்னம் பம்பாயில் ஒரு பொது நூலக உருவில் இருக்க வேண்டும் என்று நான் ஆலோசனை கூறுகின்றேன், அது ''ஸர் பிரோஷா மேத்தா நூலகம்'' என்று அழைக்கப்படும்.

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் நூலகம் என்ற நிறுவனத்தின் மதிப்பை நாம் இன்னமும் உணர்ந்துகொள்ள வில்லை என்பது துரதிர்ஷ்டமே.

அறிவாற்றல் கொண்ட பம்பாய் பொதுமக்கள் இதுவரை, காலத்தோடு ஒட்டிய வளர்ச்சியடைய, நூலகம் இல்லாமல் கஷ்டப் பட்டுக் கொண்டிருப்பது அபகீர்த்தியன்றி வேறல்ல; அக்குறையை எவ்வளவு சீக்கிரம் போக்கிக் கொள்கிறோமோ அவ்வளவுக்கு நல்லது.

தாங்களாகவே சுயேச்சையாக இயங்கிவரும் சில தனியார் நூலகங்கள் பம்பாயில் செயல்படுகின்றன. சரியாக நிர்வகிக்கப் படாத இந்த நிறுவனங்களை ஒரே கட்டிடத்திற்குள் கொண்டுவர முடிந்தால் இந்த நோக்கங்களை பம்பாய் சாதிக்கும். இந்தக் கட்டிடம் ஸர்.பி.எம். மேத்தாவின் பெயரால் அழைக்கப்படும். அவரது நினைவுச் சின்ன நிதியில் கட்டப்படும். புத்தகங்களை வாங்கவும், நவீன முறைகளில் நூலகத்தை நிர்வகிக்கவும் தேவைப் படும் நிதியை அளித்து உதவ தாராள மனப்பான்மை உள்ள நபர்கள் பலர் இருப்பார்கள் என நம்புகிறேன்.

அமெரிக்காவில் உள்ள மிகப்பெரிய பல்கலைக் கழகங்களில் ஒன்றின் மாணவன் என்ற முறையில் ஒரு மக்களின் அறிவு சார்ந்த, சமூக வளர்ச்சயில் நூலகத்தின் இடம் பற்றி நான் முற்றிலு மாக உணர்ந்துள்ளேன்; பம்பாய் நகரில் அத்தகையது இல்லாததை மனவேதனையுடன் உணர்கின்ற நான் இந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்தி நவீன இந்திய வரலாற்றின் அதி மிகச் சிறந்த தலைவ ருக்கு நான் நினைக்கும், மிகவும் நீடித்து நிலைக்கும் அதிகமாகப் பொருத்தமான நினைவுச் சின்னம் அதுவே என்று பம்பாய் பொது மக்களுக்கு வலியுறுத்தி கூற விரும்புகிறேன்.

இந்தியாவிலிருந்து 10,000 மைல்களுக்கு அப்பால் இருப்ப தால் நம் நாட்டின் செய்திகளை பெற நேரம் பிடிக்கிறது. எனவே எனது ஆலோசனையை சமர்பிப்பதில் கொஞ்சம் காலதாமதமாகி விட்டது. சொல்லாமல் இருப்பதைவிட காலம் தாழ்த்திச் சொல்வது மேல்.

தங்கள்

**பீம்ராவ் ஆர். அம்பேத்கர்**

லிவிங்டன் ஹால், கொலம்பியப் பல்கலைக்கழகம்

நியூயார்க் நகரம், ஐக்கிய அமெரிக்கா.[1]

1. பம்பாய் கிரானிக்கிள்: செவ்வாய்க்கிழமை, 1916, 28 மார்ச்.

# 3

# ஆதரவு சேகரிப்போருக்கு பொது அமைப்புகள் அவசியம் உதவ வேண்டும்

*ஆதரவு திரட்டும் ஒருவருக்கு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் வழங்கிய அதிகாரக் கடிதம் - ஆசிரியர்கள்*

**"ஜெய் பவானி"**

*பீம்ராவ்.ஆர்.அம்பேத்கர்*
*எம்.ஏ., எச்.டி, டி.எஸ்.ஸி.,*
*பாரட்லா*
*உறுப்பினர், பம்பாய் சட்ட மேலவை*
*பம்பாய்.*

*தாமோதர் ஹால்*
*பரேல், பம்பாய்*
*4.7.1927*

*இந்தக் கடிதத்தைக் கொண்டு வருபவரான சங்கர்தாஸ் நாராயணதாஸ் பார்வே ஒடுக்கப்பட்ட சாதியினரின் முன்னேற்றத் திற்காக அமைக்கப்பட்டுள்ள பகிஷ்கிரிட் ஹிட்காரினி சபாவின் ஊழியர்; மற்றும் ஒடுக்கப்பட்ட சாதியினரின் நலன்களை பாதுகாப் பதற்காக செயல்படும் 'பக்ஷிகிரிட் பாரத்' என்ற பத்திரிக்கைக்கு ஆதரவு திரட்டுபவரும் ஆவார் என இதன் மூலம் சான்றளிக்கிறேன்.*

*மாகாணம் முழுவதும் பயணம் செய்து, ஒடுக்கப்பட்ட சாதி யினரின் லட்சியத்துகாக உரையாற்றுவதும் தங்களின் முன்னேற்றத் திற்கு முயற்சிக்கும்படி அவர்களுக்கு ஊக்கமளிப்பதும் அவரது பணி. சாத்தியமான அளவு அவருக்கு உதவ வேண்டுமென பொது அமைப்புகள் கேட்டுக்கொள்ளப்படுகின்றன.*

*(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்.*

• • •

---

1. கீர்மோட், தொகுதி 6, பக். 217-218.

# 4

# பாபுராவ் பட்டேலின் நிறுவனம் ஆதரவு பெறத் தகுதி வாய்ந்தது

*சிறந்த சமூக சீர்திருத்தவாதியும் கல்வியினருமான கர்மவீர் பாபுராவ் பட்டேலால் சடாராவில் நடத்தப்படும் விடுதிபற்றி பார்வை யாளர் பதிவேட்டில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் எழுதியுள்ள குறிப்பு இது. - ஆசிரியர்கள்.*

*விடுதிக்கு விஜயம் செய்ய முடிந்ததற்காக நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இது ஒரு தனித்தன்மை வாய்ந்த நிறுவனம்; நாட்டின் சிறந்த நலன்களில் அக்கறை கொண்டுள்ள ஒவ்வொரு மனிதனின் ஆதரவைப் பெறத் தகுதிவாய்ந்தது. இந்தப் பெருமை எனது நண்பர் பாபுராவ் பட்டேலைச் சாரும். இந்த நிறுவனத்திற்கு ரூ.20/- ஐ நான் அளிக்கிறேன்.*

*சதாரா*
*29.07.1928*

*(ஒப்பம்) பி.ஆர். அம்பேத்கர்*

● ● ●

---

*1. கீர்மோட், தொகுதி 4, பக். 4.*

# 5

# எனக்கு எதிரான புகார் முற்றிலும் ஆதாரமற்றது

''கமிஷன் முன் அளித்ததாக கூறப்படும் அறிக்கையை மறுக்கிறார்.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் எங்களுக்கு ஒரு நீண்ட அறிக்கையை அனுப்பி வைத்துள்ளார். அதிலிருந்து கீழ்கண்ட விஷயங்களை எடுத்தளிக்கிறோம்.

தங்களின் இம்மாத 6ம் தேதி இதழில் வெளிவந்த அறிக்கை எனது கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அதில் முனிசிபாலிட்டியின் தலைவர் முனிசிபாலிட்டியின் தீர்மானத்தை வெளியிட்டுள்ளார். இந்து முஸ்லீம் கவலவரத்தின் பிரபலிப்பாகத்தான் ஷோலாப்பூரில் உள்ள ஒடுக்கப்பட்ட சாதியினருக்கான விடுதிக்கு வழங்கப்பட்ட மானியம் நிறுத்தப்பட்டது என்று நான் சாட்சியம் அளித்ததாக ஊகித்து அதை முனிசிபாலிட்டி மறுத்து மானியம் நிறுத்தப்பட்டது பற்றிய விவரங்களையும் அந்த அறிக்கை அளிக்கிறது.

1925ல் ஷோலாப்பூரில் ஏற்பட்ட இந்து முஸ்லீம் கலவரத்தில் சாதி இந்துக்களுக்கு ஒடுக்கப்பட்ட சாதியினர் உதவ மறுத்ததன் காரணத்தால் முனிசிபாலிட்டி ஷோலாப்பூரிலுள்ள ஒடுக்கப்பட்ட சாதியினருக்கான விடுதிக்கு அளிக்கப்பட்டு வந்த மீானியத்தை வேண்டுமென்றே நிறுத்திவிட்டதாக சைமன் கமிஷன் முன் நான் அளித்த சாட்சியத்தில் கூறியுள்ளதாக ஊகித்து அந்த ஊகத்தின் அடிப்படையிலானது இந்த புகார் என்று எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறு நான் குறிப்பிட்டது உண்மையற்றது என்று முனிசிபாலிட்டி கருதுகிறது.

இந்த அறிக்கைக்கு எனது பதில் என்னவெனில், எனக்கு எதிரான புகார் முற்றிலும் ஆதாரமற்றது; எனது சாட்சியத்தை

வேண்டுமென்றே தவறாகப் புரிந்து கொண்டதன் அடிப்படை யிலானது.

இந்து முஸ்லீம் கலவரத்தில் ஒடுக்கப்பட்ட சாதியினர் சாதி இந்துக்களுக்கு உதவ மறுத்ததன் காரணமாக மானியம் நிறுத்தப் பட்டதாக எனது சாட்சியத்தில் ஒருபோதும் நான் கூறவில்லை என்பதை நியாய சிந்தனையுள்ள ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்வார் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

சாட்சியம் அளிக்கும்போது நான் கூறியதிலிருந்து எழுந்ததாக அது தவறாக ஊகித்து என்னை அவதூறு செய்வதை முனிசிபாலிட்டி நிறுத்தும் என நான் நினைக்கிறேன். அது மேலும் ஒருபடி சென்று விடுதிக்கு மானியத்தை நிறுத்தியதற்கான உண்மையான காரணங் கள் என்று அது கருதுவதை அளிக்க அது முயலுகிறது. அந்த அறிக்கை கூறுகிறது, ''சந்தா புத்தகங்களில் மோசமான முறைகேடுகள் இருந்ததை தலைவர் பார்த்து சொசைட்டியின் கணக்கு புத்தகங் களை அனுப்பக் கோரினார்; சொசைட்டி அதற்கு மறுத்ததால் மானியம் நிறுத்தப்பட்டது'' கடினமான பதங்களை உபயோகிக்க வேண்டியுள்ளதற்காக நான் வருந்துகிறேன்; ஆனால் இந்த அறிக்கை கள் எல்லாம் பொய்யின் குவியல்; அவற்றை குறைத்து மதிப்பிட முடியாது.

இப்பொழுது உண்மையான விவரங்கள் இவையே:- ஷோலாப் பூரில் உள்ள விடுதி 1925ல் துவக்கப்பட்டது. விடுதிக்கு அது துவங்கப் பட்டதிலிருந்து முனிசிபாலிட்டி ஒரு மானியம் அளித்து வந்தது; 1925, 1926 ஆகிய இரண்டு ஆண்டுகளுக்கு மானியம் எவ்விதச் சிக்கலுமின்றி முறையாக வழங்கப்பட்டது. மேற்பார்வை எதுவும் இல்லை; இந்த நிறுவனத்தின் கணக்குகள் பரிசீலனை செய்யப் படவும் இல்லை. நிறுவனத்தின் கணக்குகள் முறையாகத் தணிக்கை செய்யப்பட்ட தணிக்கையாளர்களின் அறிக்கை பற்றி முனிசிபாலிட்டி திருப்தியடைந்தது. 1927 தேர்தல்களுக்கு பின் ஏற்பட்ட முனிசிபாலிட்டி யின் குறிப்பாக தலைவர் டாக்டர் வி.வி.முலேயின் கண்ணோட்டம் முற்றிலுமாக மாறியது. பள்ளியின் போர்டுத் தலைவர் 1927 துவக் கத்தில் விடுதிக்கு திடீர் விஜயம் செய்தார். அப்பொழுது விடுதியை மேற்பார்வை செய்து கணக்குகளையும் பரிசீலனை செய்தார். வழக்கம் போல, கணக்குகள் எவ்வளவு சிறந்த முறையில் வைக்க முடியுமோ

அவ்வாறு வைக்கப்பட்டிருக்கின்றன என்று பார்வையாளர் பதிவேட்டில் அவர் குறிப்பிட்டார். அக்குறிப்பின் நகலை மேற்பார்வையாளர் தலைவருக்கு அனுப்பி வைத்தார்.

ஆனால் அந்த கனவான் சந்தோஷமடைவதற்குப் பதிலாக, பள்ளிப் போர்டின் தலைவருடைய சாதகமான குறிப்பு அவருடைய திட்டத்தைத் தோற்கடித்ததாக அவர் கருதியதாக அவருடைய பிந்திய நடவடிக்கை எடுத்துக்காட்டியது. ஏனெனில், இதற்கு அடுத்து உடனே, நிறுவனத்தின் 1925, 1926 ஆண்டுகளுக்கான கணக்குகளை அனுப்பி வைக்கும்படி தமது 1927 மார்ச் 19ம் தேதிக் கடிதத்தின் மூலம் மேற்பார்வையாளரைக் கோரினார். அதற்கு பழைய கணக்கு ஏடுகள் பம்பாய் தலைமை அலுவலகத்திற்கு அனுப்பப்பட்டதாகவும், வருஷம் முடிந்ததும் அவை அழிக்கப்பட்டன என்றும், நடப்பு ஆண்டுக் கணக்கு ஏடுகள் உள்ளன என்றும் அவற்றை பரிசீலனைக்கு அனுப்ப முடியும் என்றும் மேற்பார்வையாளர் பதில் அனுப்பினார்.

இதற்கிடையில் முனிசிபாலிட்டி ஒரு சப்-கமிட்டியை அமைத்தது; பள்ளியின் போர்டுத் துணைத் தலைவர் திரு.புல்வலால் வக்கீல் மற்றம் அதன் உறுப்பினர் திரு.சிவ்லால் அப்பாதேஷ்முக் இடம் பெற்றனர். இந்த நிறுவனத்தின் மீது சாதகமான நிலையில் இல்லாத தலைவரின் ஆட்களைச் கொண்ட இந்தக் கமிட்டி, கணக்குகளை பரிசோதனை செய்து, கணக்குகள் சிறந்த முறையில் வைக்கப்படுகின்றன என்றும் விடுதிக்கு எதிராகக் கூற எதுவும் இல்லை என்றும் தனது 1927 மே 2 ம் தேதி அறிக்கையில் கூறியது. அறிக்கை முனிசிபாலிட்டிக்குச் சமர்ப்பிக்கப்பட்டது.

தான் வெறுக்கும் நிறுவனம் பற்றி தமது ஆட்களே சாதகமான அறிக்கை அளித்துள்ளபோது, தமது கண்ணோட்டத்தை மாற்றிக் கொள்வதற்குப் பதிலாக, அதனால் அவர் அதிகம் எரிச்சல் அடைந்தார். அதன் விளைவாக, 1925, 1926 ஆண்டுகளின் கணக்கை சமர்பிக்குமாறு இன்னமும் வலியுறுத்தினார். அளிக்கக் கூடிய ஒரு பதிலைத்தான் தலைமை அலுவலகம் அவருக்கு அளித்தது; அதாவது சொசைட்டியின் பழைய கணக்குகள் தணிக்கையாளர்களால் (auditors) பரிசீலிக்கப்பட்டன என்றும், அவர்கள் அளித்த அத்தாட்சிப் பத்திரங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், நடப்பு ஆண்டு கணக்கு ஏடுகள் முனிசிபாலிட்டியின் பரிசோதனைக்கு எந்த நேரமும்

தயாராக உள்ளன என்றும் தலைமை அலுவலகம் அவருக்கு பதில் அளித்தது. அதற்குப்பின்பு, முனிசிபாலிட்டியின் நிர்வாக அதிகாரி கணக்குகளை பரிசோதனை செய்து அவற்றில் தவறு எதுவும் இல்லை என அத்தாட்சி வழங்கினார். இது தலைவருக்கு அவமானத்தை ஏற்படுத்தியது எனத் தோன்றுகிறது. ஏனெனில் பழைய கணக்கு ஏடுகளை சமர்பிக்க வேண்டுமென்ற அவரது கோரிக்கையை அவர் கைவிட்டார்; நடப்பு ஆண்டின் கணக்கு ஏடுகளை தன்முன் சமர்ப் பித்தால் போதும் என்று மேற்பார்வையாளருக்குத் தெரிவித்தார். அவர் கோரியபடி செய்யப்பட்டது; அவரால் அந்த நிறுவனத்திற்கு எதிராக எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை என்று மகிழ்ச்சியுடன் கூறுகிறேன். ஒவ்வொரு கட்டத்திலும் அந்த நிறுவனத்தின் தகுதி யைப் பறிக்க முடியாமல் போக சரியாக நிர்வகிக்கப்படவில்லை என்று காரணம் காட்டி, அந்த நிறுவனத்திற்கு அளிக்கப்படும் மானியம் நிறுத்தப்பட வேண்டுமென்ற யோசனை வரவு-செலவு கணக்கை விவாதிக்கும் முனிசிபாலிட்டியின் கூட்டத்தில் தலைவர் முன் வைத்தார். ஆனால் அவர் அப்பொழுது நிறுவனத்திற்கு எதிராக செய்த குற்றச்சாட்டுகள் தவறானவை, விஷமத்தனமானவை என்று தெரிந்துவிட்டது. அவற்றிற்கு காட்ட வேண்டிய அவமதிப்பை முனிசிபல் கவுன்சிலர்கள் காட்டினர்...... ஒரு கவுன்சிலரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் ஒன்றுபட்டு தலைவரைப் புறக்கணித்து மானியத்தை அளிப்பதென முடிவு செய்தனர். மானியத்தை நிறுத்து வதற்குப் பதிலாக தனது தலைவரின் குற்றச்சாட்டுகள் நம்புவதற்கு தகுதியற்றவை என்று கருதி தனது வரவு-செலவு கணக்கில் மானி யத்தை அங்கீகரித்தது. உண்மையில் என்ன நடந்தது என்றால், சொசைட்டி காண்பித்த கணக்கு திருப்தியளிக்கவில்லை என்று காரணம் காட்டி, மானியம் அங்கீகரிக்கப்பட்ட பின்பும் அதை வழங்கத் தலைவர் மறுத்தார்.

சொசைட்டியின் பதில் எவ்வாறு திருப்தியற்றது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நடப்பு ஆண்டின் கணக்கு களை காண்பிக்க சொசைட்டி எப்பொழுதும் தயாராக உள்ளது. முந்திய ஆண்டுகளுக்கான கணக்குகளச் சமர்பிப்பது பொறுத்தரை, சொசைட்டி அளித்த பதிலைத்தான் அளிக்க முடியும். சென்ற ஆண்டு கணக்குகளை யாரால் சமர்ப்பிக்க முடியும்? இந்தக் கோரிக்கை நியாயமற்றது மட்டுமல்ல முறைகேடானதுமாகும்; இதை எந்த

சொசைட்டியாலும் நிறைவேற்ற முடியாது. இதிலிருந்து முனிசிபாலிட்டியும் அதன் தலைவரும் எதை அம்பலப்படுத்த முயற்சிக்கிறார்கள். ஒரு பொய்யை அல்ல - ஒரு ஊகித்த பொய்யை - எந்த மட்டுப்படுத்தக் கூடிய நிலைமையிலும் குறைத்துக்காட்ட முடியாத அளவு அவற்றிற்கு விளம்பரம் கொடுத்தார்கள் என்பதை ஒவ்வொரு நேர்மையான சிந்தனையாளரும் பார்ப்பார்.

*தாமோதர் ஹால்,*
*பரேல், டிசம்பர் 8, 1928.*

*பி.ஆர். அம்பேத்கர்*

● ● ●

# 6

# அனுப்பி வைக்கப்பட்ட கடிதம்

பீம்ராவ் ஆர். அம்பேத்கர்
எம்.ஏ.,பி.எச்.டி; டி.ஸி.,
பாரட்லா,
ஜே.பி.எம்.எல்.சி

ராஜ்கிரகா,
புது தாதர்,
பம்பாய் - 14

அன்பார்ந்த ஐயா,

இந்திய சீர்திருத்தங்கள் பற்றி கூட்டு பாராளுமன்ற குழுவின் அறிக்கைப் பற்றி மான்செஸ்டர் கார்டியனில் பிரசுரிக்க கருத்துக் களடங்கிய ஒரு அறிக்கையை தாங்கள் என்னிடமிருந்து கேட்டதாக இந்தியாவிலுள்ள தங்கள் விசேஷ நிருபர் எனக்கு எழுதினார். அதற் கேற்ப, இத்துடன் எனது கருத்துக்களடங்கிய அறிக்கையை அனுப்பி யிருக்கிறேன். தாங்கள் நிர்ணயித்துள்ளபடி எனது அறிக்கையை 1200 வார்த்தைகளுக்குள் சுருக்க என்னால் இயலவில்லை என்பதற் காக நான் வருந்துகிறேன். தாங்கள் குறிப்பிட்டுள்ள எல்லையை விட 300 வார்த்தைகள் அதிகமாக உள்ளன. இந்த விஷயத்தின் முக்கியத்துவம் காரணமாகவும், முழுத் தெளிவின் அவசியம் கருதியும், இந்த அறிக்கையை எதுவும் குறைக்காமல் பத்திரிகையில் வெளி வரட்டும் என்ற விசேஷ வேண்டுகோளை செய்ய வேண்டியுள்ளது.

இதற்காக தங்களுக்கு நன்றியுடன்

தங்கள் உண்மையுள்ள
பி.ஆர். அம்பேத்கர்

பெறுநர்:

ஆசிரியர், மான்செஸ்டர் கார்டியன்

சர்வதே, தொகுப்பு 1, ப. 146-47
தேதி கிடைக்கவில்லை.

# 7

# கோயில் நுழைவை விடப் பொருளாதார, கல்வி, சமூக மேம்பாடடைவதில் மிகுந்த கவனம் செலுத்துங்கள்

''புனா, அக்டோபர் 18, 1932

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் நேற்று புனா வந்து சட்டமன்ற மேலவையில் சிறிது நேரம் செலவிட்டார்; ஆனால் எரவாடா சிறையில் காந்தியடிகளைச் சந்திக்க அவருக்கு அனுமதி கிடைத்திருந்தது என்பதை அவர் யாருக்கும் தெரிவிக்கவில்லை. அனுமதியைப் பயன்படுத்தி, மாலையில் அவர் காந்தியடிகளுடன் ஒன்றரை மணிநேரம் உரையாடினார். பின்னர் தமது தொழில் பணிக்காக சாவந்தவாடிக்குச் சென்றார். அடுத்து அக்டோபர் இருபத்தாறாம் தேதி பம்பாய் திரும்புகிறார்; நவம்பர் ஏழாம் தேதி இங்கிலாந்துக்குக் கடற்பயணம் மேற்கொள்ளக் கருதியுள்ளார்.

நவம்பர் 12க்கு முன்னதாகப் பிரதிநிதிகளில் பலர் இலண்டன் வந்து சேர இயலாது என்பதால், நவம்பர் 22 க்கு முன், வட்டமேசை மாநாடு தொடங்காது என்று டாக்டர் அம்பேத்கர் கருதுகிறார். மேல் சாதி இந்துக்களுக்கும், ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் இடையில் நிலவும் இன்றைய சூழலில், அரசியலுக்கும் சமுதாய நலத்துக்கும் இடையே தெளிவானதொரு வரம்பைச் சுட்டுதல் மிகக் கடினமாயிருத்தலால், அவருக்குக் கிடைத்திருந்த (எரவாடா சிறையில் காந்தியைச் சந்திப்பதற்கான) அனுமதியில் அரசியல் குறித்துப் பேசத் தடை விதிக்கப்பட்டிருந்தமையால், புனா ஒப்பந்தம் குறித்து ஏதும் விவாதிக்கப்படவில்லை.

எனவே, டாக்டர் அம்பேத்கர், காந்தியடிகளிடம் தீண்டாமை எதிர்ப்பு சங்கத்தின் வருங்கால நிறுவன அமைப்பு குறித்து, குறிப்பாக மாநில, மாவட்டக் குழுக்கள், பொதுவான முன்னேற்றம் ஆகியன குறித்துத் தமது கருத்துக்களை எடுத்துரைத்தார். குழுக்களின் அமைப்பு குறித்துப் பேசுகையில், குழு உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் ஒடுக்கப்பட்ட சாதி மக்களாய் இருக்க வேண்டுமெனும் கருத்தை அவர் மிக உறுதியாய் வலியுறுத்தினார் குழுக்களில் அவர்களது குரலே மேலோங்கியிருக்க வேண்டுமென்றும்,

அவர்களுக்கு ஏற்பில்லாதன ஏதும் செய்யப்படலாகாதெனவும் அவர் கருத்து தெரிவித்தார்.

ஒடுக்கப்பட்ட சாதிமக்களின் மேம்பாட்டுக்கான பணிகள் நிறைவாக நடைபெறவேண்டுமெனில், தங்கள் மேம்பாட்டுக்காக அவர்கள் தேர்ந்தெடுக்கும் வழிகளில் முன்னேற மேல்சாதி இந்துக்கள் ஒத்துழைக்க வேண்டுமேயன்றி, எல்லா வகையிலும் மேல்சாதி இந்துக்களின் நோக்கங்கள், வழிமுறைகளைப் பின்பற்றியே அவர்கள் மேம்பாடுற வேண்டுமென முயலக்கூடாது.

## சிறப்பு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு

மேலும், ஒடுக்கப்பட்ட சாதி மக்களைக் குறித்துச் சிறப்பு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு வேண்டும் எனும் சங்கத்தின் முன் மொழிவை அவர் காந்தியடிகளுக்குச் சுட்டிக்காட்டி, அது தேவை யற்றது என்பதையும காங்கிரஸ் தலைவரிடம் எடுத்துரைத்தார்.

இந்நேர்காணலின் போது திருமதி சரோஜினி நாயுடுவும் உடனிருந்தார்; நேர்காணலுக்குப் பின்னர் அம்பேத்கரைச் சந்தித்த அவர், தீண்டாமை எதிர்ப்புச் சங்கக் குழுக்களின் அமைப்பு குறித்த அம்பேத்கரின் கருத்துக்களைக் காந்தியடிகள் ஏற்றுக் கொண்ட தாகவே தாம் உணர்ந்ததாய்த் தெரிவித்தார்.

காந்தியடிகள் முழு நலத்துடன் இருப்பதாக எரவாடா விலிருந்து கிடைக்கும் அண்மைய தகவல்கள் தெரிவிக்கின்றன; காந்தியடிகள் முழுமையாக நலம் தேறியிருப்பதாகவும், முழுமை யான உயிர்ப்புடன் இருப்பதாயும் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

## பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் - தமது இன மக்களுக்கு டாக்டர் அம்பேத்கரின் அறிவுரை

''தீண்டாமைக்கெதிரான இயக்கத்தில் பொதுவான தொய்வு ஏற்பட்டுள்ளதென்பது உறுதி'' என்று நேர்காணல் ஒன்றில் டாக்டர் அம்பேத்கர் கூறினார். மேலும் அவர் கூறியதாவது: ''ஆனால், கோயில் நுழைவுக்கான தடையை நீக்குதல், உடனமர்வு விருந்துகள் ஆகிய வற்றில் மட்டுமே சங்கம் கவனம் செலுத்தி வருதல் குறித்து நான் மிக வருந்தமடைகிறேன். இந்த நிலைப்பாட்டினால், மக்களிடையே பகையுணர்வு விளையுமேயன்றி, ஒடுக்கப்பட்ட சாதியினர்களுக்கு உருப்படியான பயன் ஏதும் கிட்டாது''.

''தீண்டாமை எதிர்ப்புச் சங்கமும், தொண்டர்களும், தீண்டப் படாத மக்களுக்குக் கோயில் நுழைவுரிமையும் உடனமர்வு விருந்து களும் பெறுவதைவிட அவர்களது பொருளாதார, கல்வி, சமுதாய மேம்பாட்டில் தமது கவனத்தைச் செலுத்த வேண்டும். பொதுக் கிணறுகளில் அவர்கள் புழங்கவும், அவர்களது பிள்ளைகளைப் பொதுப் பள்ளிகளில் சேர்க்கவும் மக்கள் கருத்தை ஆதரவாய்த் திரட்ட வேண்டும்.''

பெல்காம் மாவட்டத்தில் ஒடுக்கப்பட்ட சாதி மக்கள் தமக்கெனத் தனிக் கிணறு தோண்ட அனுமதி வேண்டியிருப்பது பற்றிக் குறிப்பிட்ட அவர், அத்தகைய அனுமதியை மாவட்ட ஆட்சி மன்றம் வழங்கலாகாதென்று கூறினார். தீண்டப்படாத மக்கள், பொதுக் கிணறுகளில் நீரெடுப்பதற்கான தமது உரிமையை வலியுறுத்த வேண்டுமென்று குறிப்பிட்டு, இந்த விவகாரத்தில் தன்னலமிக்கோர் ஒருசாராரின் தூண்டுதல் பின்னணியிருப்பதாய்த் தாம் ஐயுறுவதாக வும் தெரிவித்தார்.[1]

★★★

1. டைம்ஸ் ஆப் இந்தியா, அக்டோபர் 19, 1932.

# 8

# சாதி அமைப்பை அழித்தாலன்றித் தாழ்த்தப் பட்டோரை உய்விக்க வழிகிடையாது

தீண்டப்படாத மக்களின் நலன்கள் குறித்துப் பிரசாரம் செய்தற் பொருட்டாக என்று, 1933 ஆம் ஆண்டு பிப்ரவரி 11 ஆம் நாளில் 'ஹரிஜன்' என்ற பெயரில் செய்தித்தாள் ஒன்றினைக் காந்தியடிகள் தொடங்கினார்.[1]

இத்தருணத்தில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ''என்னால் இது குறித்துக் கருத்துரையேதும் தர இயலாது'' என அறிவித்தார்.[2]

மேலும் அவர் உரைத்ததாவது:

''சாதியமைப்பு முறையின் உடன் விளைவுகளில் ஒன்றுதான் சாதியால் தீண்டப்படாத மக்கள் பகுதி. சாதிகள் இருக்கும் வரை கீழ் சாதியார் எனப்படுவோர் தொடர்ந்து இருந்து கொண்டுதான் இருப்பர். வருங்கால உய்வுக்கான போராட்டங்களைச் சமாளித்து இந்துக்கள் உய்வடைய வேண்டுமெனில், அவர்கள் தம்பால் நிலவுகின்ற கேடு களும் தீங்கும் நிறைந்த மூடநம்பிக்கைகளை தங்கள் சமூகத்திட மிருந்து அறவே களைந்து விடுதல் ஒன்றே உற்ற வழியாகும்.''

இதற்கு விடைகூறு முகத்தான், காந்தியடிகள் கூறியதாவது:

''கற்றறிந்த இந்துக்கள் பலரிடையே இத்தகைய கருத்து நிலவு வதை நான் அறிவேன். எனினும் என்னால் இதை ஏற்றுக் கொள்ள இயலாது.''[3] மேலும் அவர் கூறுகிறார்:

''தீண்டாமை என்பது சாதி அமைப்பின் விளைவு அன்று. இந்து சமயக் கருத்துக்களில் எப்படியோ ஊடுருவிவிட்ட, சாதி களுக்கிடையே தாழ்ச்சி, உயர்ச்சி வேறுபாடுகள் கற்பிக்கப்படுதலே இத்தீமைக்குக் காரணம், இந்த மனப்பான்மையே இந்து சமயத்தை இன்று அரித்துக் கொண்டு வருகிறது. தீண்டாமைக்கெதிரான தாக்குதல் என்பது சாதிகளுக்கிடையே உயர்வு தாழ்வு காணும் போக்குக்கு எதிரான தாக்குதலேயாகும்.''[4]

---

1. கீர், பக். 227
2. குபேர், பி.ஆர்.அம்பேத்கர், பக். 47
3. கீர், பக் 227
4. குபேர், பி.ஆர். அம்பேத்கர், பக். 47

## 9

# (சட்டமன்ற) இரண்டாம் (மேல்) அவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர்

## நாடாளுமன்றக் கூட்டுக்குழு அறிக்கை குறித்து டாக்டர் அம்பேத்கர் : கூடுதல் பிரதிநிதித்துவம் கோரல்

''புனா ஒப்பந்தம் நாடாளுமன்றக் கூட்டுக் குழுவினால் பாதிப் படையவில்லை என்பது எனக்கும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கும் மிகவும் மனநிறைவு தருவதாய் அமைந்துள்ளது, எனும் போதிலும், மாநிலங்களிலும், மைய நாடாளுமன்ற அவையிலுமான மேலவை (இரண்டாம் அவை) களில் ஒடுக்கப்பட்ட மக்களுக்கான இடங்களை ஒதுக்குவதில் நாடாளுமன்றக் கூட்டுக் குழு செய்துள்ள மாற்றங்கள் நீதிக்குப் புறம்பாகவேயுள்ளன என்பதை நான் சுட்டிக் காட்டியாக வேண்டும்''. நாடாளுமன்றக் கூட்டுத் தேர்ச்சிக் குழுவின் அறிக்கையில் ஒடுக்கப்பட்ட குழுவினர் பற்றிய பகுதிகள் குறித்து டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் இவ்வாறு எழுதியுள்ளார்.

அவர் மேலும் தொடர்ந்து எழுதியுள்ளதாவது:-

மாநிலங்களில் இரண்டாம் அவையொன்றை அமைப்பதை ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எதிர்த்து வந்துள்ளனர். மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களில் அவை தேவையற்றவை என்றே கருதப்பட்டன. சைமன் கமிஷனும் அவற்றைப் பரிந்துரைக்கவில்லை. இந்தியாவின் அரசியல் அமைப்புகள் யாவும் அவை குறித்துக் கண்டனத்தையே தெரிவித்துள்ளன. இது ஒரு பிற்போக்கு நடவடிக்கையேன்றும், நாட்டின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாகவே இம்முயற்சி விளங்கமென்றும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் கருதுகின்றனர்.

### அமைப்பு

இரண்டாம் அவைகளை ஒடுக்கப்பட்ட வகுப்பு எதிர்ப்பதற்கான இரண்டாவது காரணம், அவற்றின் அமைப்பைப் பற்றியதாகும். சில மாநிலங்களில் உருவாக்கப்பட்டுள்ள மேலவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்காக இடஒதுக்கீடுகள் ஏதும் செய்யப்படவில்லை என்பது வெளிப்படையான உண்மை. இம்மாநிலங்களில் இரண்டாம் அவைகளில் முஸ்லீம்கள், ஐரோப்பியர்கள் இந்தியக்

கிறித்தவர்கள் ஆகியோருக்கு இட ஒதுக்கீடு செய்வதற்கெனச் சிறப்பு வழிவகைகள் செய்யப்பட்டுள்ளதைக் காண்கிறோம். ஆனால் ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்களுக்கு இடஒதுக்கிடு செய்வதற்கான வழிவகை ஏதும் செய்யப்படவில்லை. பம்பாய், சென்னை, ஐக்கிய மாகாணம் ஆகிய மாநிலங்களின் இரண்டாம் அவைகளுக்கு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள், பொது இடங்களுக்கான தேர்தல்களில் மேல் சாதி இந்துக்களுடன் போட்டியிட்டுத் தம்மால் பெற முடிந்த இடங்களைப் பெற்றுக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டார்கள்.

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் மேல்சாதி இந்துக்களை எதிர்த்து நேரடியாகப் போட்டியிட்டுத் தேர்தல்களில் வெற்றிபெறச் சற்றேனும் வாய்ப்பு இருக்குமெனில், புனா ஒப்பந்தமே தேவை யற்றது. எனவே இந்த மாநிலங்களின் இரண்டாம் அவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எவரும் இடம்பெற மாட்டார்கள் என்பது தெளிவு. வங்காளத்தில் 65 இடங்களில் 27ம், பீகாரில் 30 இடங்களில் 12 பேரும், சட்டப் பேரவை உறுப்பினர்களால், மாற்றத்தகு ஒற்றை வாக்கு முறையில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

## இடங்கள் போதாது

இந்த முறையில், ஒடுக்கப்பட்ட மக்கள் (மேலவை) இரண்டாம் அவைகளில் இடம் பெற இவ்விரு மாநிலங்களிலும் வழிமுறை உருவாக்கப்பட்டுள்ளது. ஆனால் உண்மை நிலவரத்தை நோக்குங்கால் இது போதுமான இடங்கள் பெற உதவாதென்பதை உணரலாம். பீகார் கீழவையில் 152 உறுப்பினர்களில் ஒடுக்கப்பட் டோர் இடஒதுக்கீடு 15 தான் என்பதையும், வங்க மாநிலத்தின் கீழவை உறுப்பினர்கள் 250 இல் ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கான ஒதுக்கீடு 30 தான் என்பதையும் நோக்க, இம்மாநில மேலவை களில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் ஒரு இடத்திற்கு மேல் பெறுதல் அரிது என்பதைக் காணலாம்.

மாநிலங்களின் மேலவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இடம் பெறுவதற்கான வாய்ப்பில்லை என்பது மட்டுமின்றி இந்த அவைகளுக்கான தேர்தல்களின் வாக்குரிமையாளர் அடிப் படையில் நோக்கினால் இத்தேர்தல்களில் அவர்கள் எவ்வித பாதிப்பையும் விளைவித்து விட இயலாது என்பதும் தெளிவு.

## இட ஒதுக்கீட்டின் தேவை

இத்தகைய பின்னடைவுகளைக் குறித்து நாடாளுமன்றக் கூட்டுக்குழு கருத்தில் கொண்டதாய்த் தெரியவில்லை; குழுவின் முன்மொழிவுகள் இரண்டாம் அவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர்கள் இடம் பெறுவதைத் தடுப்பதற்கெனத் திட்டமிட்டு உருவாக்கப்பட்டவை போலும்; வாக்குரிமை தொடர்பான முன்மொழிவு பற்றி இக்குழு கூறுவதாவது: ''மேலே சுட்டப்பட்டுள்ள தகுதிகள் வேட்பாளர்களுக்கும் பொருந்தும்; எனினும் பெண்களுக்கும், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்குமாகத் தனித்தனியே வழிவகைகள் தேவைப்படலாம்.'' வழிவகைகள் தேவை என்பதில் சிறிதும் ஐயத்திற்கு இடமில்லை. ஆனால் வாக்குரிமை முறையில் மாற்றம் ஏதுமின்றி வேட்பாளர்களின் தகுதிகளை மாற்றியமைப்பதால் மட்டும் எவ்விதமான பயனும் விளையாது. ஒடுக்கப்பட்ட வகுப்பினரான வேட்பாளர்களுக்கான தகுதிகளை மட்டும் மாற்றியமைத்துவிட்டு, அவர்களுக்கு இடஒதுக்கீடு ஏதும் செய்யப்படவில்லையெனில், அவர்கள் எவரும் தேர்தல்களில் வெற்றிபெற இயலாது.

மைய அரசின் மேலவை குறித்துப் பெருமளவில் செய்யப்பட்டுள்ள மாற்றங்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு பாதகமாகவே அமைந்துள்ளன. இந்த அவைக்கான உறுப்பினர்கள், மாநிலங்களின் கீழவை உறுப்பினர்களால் மாற்றத்தகு ஒற்றை வாக்கு முறையில் தேர்ந்தேடுக்கப்படுவார்கள் என்று வெள்ளை அறிக்கையின் முன்மொழிவு கூறுகிறது. தற்போதைய நிலையின்படி, எட்டு அல்லது ஒன்பது மாநிலங்களின் கீழவைகளில், ஒடுக்கப்பட்ட வகுப்பினர்க்குப் போதுமான அளவில் இடஒதுக்கீடு இருப்பதால், இம்மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் இருந்து மைய மேலவைக்குக் குறைந்தது ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தனுப்ப இயலும்; அதாவது மைய மேலவையில் எட்டு அல்லது ஒன்பது ஒடுக்கப்பட்ட வகுப்பினர்கள் இடம்பெற முடியும். ஆனால் நாடாளுமன்றக் கூட்டுக் குழுவின் முன்மொழிவு இவ்வாய்ப்பையும் அடியோடு அழித்துவிடுகிறது.

## வாக்காளர் குழுமங்கள்

நான் ஏற்கனவே சுட்டிக்காட்டியுள்ளபடி, இரு அவைகள் கொண்ட மாநிலங்களில், இரண்டாம் அவைகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பினர் எவரும் இடம் பெறுவதற்கு இயலாத நிலையில், மைய

கருதினால், இந்தியக் கிறத்தவர்கள் எண்ணிக்கையில் குறைவான வர்களாயிருப்பதால் போதிய ஆதரவை அவர்கள் தர இயலாது என்றாலும், கிறித்துவ சமயத்திற்கு அரசாங்கத்தின் ஆதரவு உண்டு, அரசியல் நோக்கில், இஸ்லாத்தில் சேருவதால் கிடைக்கம் உரிமை கள் யாவும் கிறித்துவத்திலும் கிடைக்கும். முஸ்லீம்களைப் போன்றே கிறித்தவர்களுக்கும் சட்டமன்றங்களில் இட ஒதுக்கீடுகள், பணி உரிமைகள் ஆகியன அரசியலமைப்புச் சட்டத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. இஸ்லாத்துடனும், கிறித்துவத்துடனும் ஒப்பிடும்போது சீக்கியத்தில் கவர்ச்சிகள் அவ்வளவாக இல்லை. எண்ணிக்கையில் குறைவாக 40 லட்சம் மக்களே கொண்ட சீக்கிய சமூகத்தினர் நிதி யுதவியேதும் செய்துவிட இயலாது. சீக்கியர்களில் பெரும்பாலோர் பஞ்சாப் மாநிலத்தில்தான் வாழ்கின்றனராதலின், நாடெங்கிலும் வாழும் பெரும்பாலான ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு அவர் களிடமிருந்து சமுதாய ஆதரவு ஏதும் கிடைப்பதற்கில்லை. அரசியல் நோக்கில், இஸ்லாத்துடனும் கிறித்துவத்துடனும் ஒப்பிடுகையில் பெரியதொரு பின்னடைவும் உண்டு; சட்டமன்ற இட ஒதுக்கீடு, பணியிடவுரிமை ஆகியவை சீக்கியர்களுக்குப் பஞ்சாப் மாநிலத் தில் மட்டுமே உண்டு.

நமது அடுத்த கேள்வி, 'ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள், இஸ்லாம், கிறித்துவம், சீக்கியம் ஆகிய மூன்று சமயங்களில் எதில் சேருதல், இந்துக்களின் கண்ணோட்டத்தில் மிக உகந்ததாய் இருக்கும்?' என்பதாகும். சீக்கியம் என்பதே தெளிவான விடை யாகும். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இஸ்லாத்திலோ கிறித்தவத் திலோ சேருவார்களெனில், அவர்கள் இந்து சமயத்திலிருந்து மட்டுமல்ல, இந்துப் பண்பாட்டிலிருந்தும் வெளியேறிவிடுவார்கள். மாறாக அவர்கள் சீக்கிய சமயத்திற்கு மாறினாலும், இந்துப் பண்பாட்டையே தொடர்ந்து பின்பற்றுவார்கள். எவ்வகையினும் இது இந்துக்களுக்கு அற்பமான நலன் அல்ல; பெருத்த நலனே.

சமயமாற்றத்தினால், நாட்டுக்கு என்ன விளைவு என்பதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இஸ்லாத்துக்கோ கிறித்துவத்திற்கோ மாறுவார்களெனில் நாட்டு நலன்கள் பெரிதும் பாதிக்கப்படும். அவர்கள் இஸ்லாத்தில் சேரு வார்களெனில் இஸ்லாமியர்களின் எண்ணிக்கை இருமடங்காகி விடும்; இஸ்லாமியர்களின் மேலாதிக்கம் பெருகிவிடுமோ எனும் அச்சம் மெய்யாகிவிடும். அவர்கள் கிறித்துவத்திற்கு மாறுவார் களெனில் கிறித்தவர்களின் எண்ணிக்கை ஐந்தாறு கோடிக்கு மேல்

பெருகிவிடும்; அது நாட்டையாளும் பிரிட்டானியர்களுக்கு நாட்டின் மீது மேலும் பிடிப்பை மிகுதியாக்கவே உதவும். மாறாக, அவர்கள் சீக்கிய சமயத்தைத் தழுவினால், இந்நாட்டின் வருங்கால நலன் களுக்குத் தீங்கு ஏதும் நிகழாது; நாட்டின் வருங்கால நலன்களுக்கு உதவியாகவே இருப்பார்கள். அவர்கள் இந்திய தேசியத்திலிருந்து விலகிவிடமாட்டார்கள். மாறாக நாட்டின் அரசியல் முன்னேற்றத் துக்கு உதவியாக இருப்பார்கள். எனவே, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பிற சமயத்திற்கு மாறுவதென்று முடிவு செய்தால், சீக்கிய சமயத்திற்கு மாறுவதே நாட்டின் நலன்களுக்கு உகந்ததாகும்.

ஒடுக்கப்பட்ட மக்கள் சீக்கிய சமயத்திற்கு மாறுவதுதான் இந்துக்களுக்கு உகந்ததெனில், சீக்கிய சமயத்திற்கும், இஸ்லாமிய, கிறித்துவ சமயங்களுக்கு ஒப்பான உயர்நிலை பெறுதற்குச் செயல்பட இந்துக்கள் தயாராயுள்ளனரா என்பது மூன்றாவது கேள்வி. அப்படித் தயாராயிருக்கிறார்ளெனில், சீக்கிய சமயத்தில் சேருவதில் உள்ள பின்னடைவுகளை நீக்க அவர்கள் தயாராயிருக்க வேண்டும் என்பது தெளிவு. சீக்கிய சமயத்தில் சேருவதிலுள்ள பின்னடைவுகள், பொரு ளாதார, சமூக, அரசியல் என மூவகையானவை. சீக்கியத்தின் சமூகப் பின்னடைவுகளை அகற்ற இந்துக்களால் உதவ இயலாது. ஆனால் பொருளாதார, அரசியல் பின்னடைவுகளை நீக்குவதில் அவர்கள் நிச்சயமாய் உதவ முடியும். இவற்றுள் மிக அவசரமாய், உடனவடி யாய் நீக்கப்பட வேண்டியது அரசியல் பின்னடைவுதான், ஏனெனில் சீக்கிய சமயத்தில் சேருவதற்குப் பெருந்தடைக் கல்லாயிருப்பது அதுவே. நல்ல வேளையாக அரசியல் பின்னடைவுக்குத் தீர்வு காணல் ஓர் எளிய செயல்தான். செய்ய வேண்டுவதேல்லாம் பஞ்சாப் தவிரப் பிற மாநிலத்திற்கான தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பட்டியலில், சீக்கியர் என்பவர் ஒடுக்கப்பட்ட வகுப்பினரிலிருந்து சீக்கிய சமயத் திற்கு மாறியவர் என்பதைச் சேர்த்து விடுவோமாயின், சீக்கியர்களாக மாறும் ஒடுக்கப்பட்ட வகுப்பினர்களுக்கும், அவர்கள் மாறாமலே யிருந்திருந்தால் கிடைத்திருக்கக்கூடிய அரசியல் உரிமைகள் யாவும் கிடைக்கும். வகுப்புவாரி ஒதுக்கீட்டில், பல்வேறு வகுப்புகளின் பங்கீடுபற்றிப் பலதரப்பு மக்களிடையேயும் ஒப்பந்தம் ஒன்று காணப்பட்டால் ஒப்பந்தத்திற்கேற்பப் பங்கீடுகளை மாற்றியமைப் பதற்கு அரசாங்கம் கடமைப்பட்டதாகும்.

ஒடுக்கப்பட்ட மக்களோடு ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொள்ள இந்துக்கள் முன்வருவார்களெனில் இம்மாற்றத்தை எளிதில் செய்துவிட முடியும். இதற்குப் புனா ஒப்பந்தத்தில் பெரிய மாற்றங்கள்

ஏதும் செய்ய வேண்டியதில்லை. இதற்கென இட ஒதுக்கீட்டையும் கூடுதல் செய்ய வேண்டியதில்லை. ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கான மொத்த ஒதுக்கீட்டில் மாறுதல் ஏதுமிராது. சீக்கியரல்லாத ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களும் சீக்கியச் சமயத்தைத் தழுவி சமமான தகுதிநிலையில் போட்டியிடலாம் என்பதொரு மாற்றம் மட்டுமே செய்யப்பட வேண்டும். சீக்கியர்களாக மாறும் ஒடுக்கப்பட்ட மக்களின் பின்னடைவை நீக்குவதொன்றே இம்மாற்றத்தின் நோக்கமாகும்.

இந்த ஆலோசனையை எதிர்க்க முனையும் இந்துக்கள் பின்வரும் வினாக்களுக்கு விடையளித்தாக வேண்டும்:

1. புனா ஒப்பந்தத்தின்படி ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட இடங்களை இந்துக்கள் திரும்பப்பெற இயலாது. அவர்கள் முஸ்லீம்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ மாறினால் இவ்விடங்கள் முஸ்லீம்களுக்கோ கிறித்தவர்களுக்கோதான் போகுமென்பதுடன் முஸ்லீம்கள் அல்லது கிறித்தவர்களது மக்கள் தொகை கூடும்; இதன் விளைவாக சட்டமன்றங்களில் அச்சமயத்தவர்களுக்கான ஒதுக்கீடு கூட்டப்பட வேண்டுமெனும் கோரிக்கையும் எழும். ஆக இந்த ஒதுக்கீடுகள் பிற சமயத்துக்குத்தான் போய்விடும் எனில், இவை சீக்கியர்க்குப் போவதில் இந்துக்களுக்கு என்ன தடையிருக்க முடியும்?

2. அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் உள்ள உரிமைகள் எவையும் இஸ்லாத்துக்கோ, கிறித்தவத்துக்கோ மாறுவதால் பறிபோகாது எனில், சீக்கியராய் மாறும் ஒடுக்கப்பட்ட மக்கள் மட்டும் ஏன் தமது அரசியல் உரிமைகளை இழக்க வேண்டும். இது, இஸ்லாத்துக்கோ, கிறித்தவத்துக்கோ மாறுவதை ஊக்குவித்து, சீக்கியத்துக்கு மாறுவதைத் தண்டிப்பதாகாதா? இது ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களைக் கிறத்துவத்துக்கோ, இஸ்லாத்துக்கோ விரட்டும் செயலாகும். இதை அனுமதிப்பது இந்துக்களின் நலன்களுக்கு உகந்ததாகுமா?

3. இப்போதைய நிலையிலேயே கூட சீக்கிய சமயத்திற்கு மாறும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் தமது அரசியல் உரிமைகளை இழந்து விடமாட்டார்கள்; ஏனென்றால் சட்டமன்றங்களில் அவர்களுக்கு ஒதுக்கீடு செய்ய வழிவகுக்கும் புனா ஒப்பந்தத்தின் படி, இவ்வுரிமைகளைப் பெற அவர்கள் இந்து சமயத்தைத்தான் பின்பற்ற வேண்டுமேன்ற நிபந்தனை ஏதுமில்லை. அவர்களுக்கான

ஒதுக்கீடுகள் அவர்கள் குறிப்பிட்ட வகுப்பினராகவோ இனத்தவராகவோ இருப்பதன் அடிப்படையிலேயே கிடைத்தவை. ஆனால் சீக்கியர்களிடையே இந்துக்களின் மீது பகையுணர்வு தோன்ற ஏன் இடம் கொடுக்க வேண்டும்?

4. பல்வேறு மாநிலங்களின் பல்வேறு அரசியல் உரிமைகளுக்கான தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பட்டியலில் சீக்கியர்களையும் சேர்க்கலாமென்பது கடுமையான முன்மொழிவு அன்று. மாறாக அத்தகையதொரு ஒப்பிசைவை வழங்கத் தவறுவதே விசித்திரமான நிலைமையாகும்.

அரசியல் உரிமைகளுக்காக பஞ்சாபில் சீக்கியர்களுக்கு ஒப்பிசைவு வழங்கப்படும்போது இதே ஒப்பிசைவைப் பிற மாநிலங்களிலும் ஏன் வழங்கலாகாது?

பஞ்சாபில் வாழும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சீக்கிய சமயத்திற்கு மாறுவதால் தமது அரசியல் உரிமைகளை இழக்க மாட்டார்கள் என்றால் பிற மாநிலங்களில் வாழும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு மட்டும் இவ்வுரிமை ஏன் மறுக்கப்பட வேண்டும்?

● ● ●

இவ்வறிக்கை குறித்த, டாக்டர் மூஞ்சே, திரு. ராஜா, மகாத்மா காந்தி ஆகியோரின் கருத்துக்களைப் பிற்சேர்க்கை X -ல் காணலாம்.

- ஆசிரியர்கள்.

# 12

# சமய மாற்றத்தால் உரிமைகள் பாதிக்கப்பட மாட்டாது

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இந்து சமயத்தில் இருந்து விலகிப் பிறசமயங்களில் சேருவார்களெனில், புனா ஒப்பந்தத்தின் படி அவர்களுக்குக் கிடைக்கும் அரசியல் உரிமைகளை இழக்க நேரும் என்று பேசப்படுவதை டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ஒப்புக் கொள்ளவில்லை; மாறாக அது தம்மையும் தமது கட்சியினரையும் தேர்தலில் நிற்கவிடாமல் அச்சுறுத்தக் காங்கிரசார் மேற்கொள்ளும் பிரச்சார தந்திரமாகவே அவர் அதனைக் கருதுவதாய்க் கூறினார்.

''என்னையும் எனது கட்சித் தோழர்களையும் வரும் தேர்தல் களில் போட்டியிட விடாமல் அச்சுறுத்தவும், இந்துக்களின் பிடியி லிருந்து நாங்கள் விடுபடாமல் வலிந்து தடுக்கவும் காங்கிரசார் செய்யும் திட்டமிட்ட பொய்ப்பிரச்சாரமே இது என்பதற்கான சான்று என்னிடம் உள்ளது.''

இயோலா, பம்பாய் மாநாடுகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் நிறைவேற்றிய தீர்மானங்களையும் இந்து சமயத்தை தாம் துறக்கவிருப்பதாய் டாக்டர் அம்பேத்கர் விடுத்த அறிக்கையையும் தொடர்ந்து இந்து சமயத்தைத் துறக்கும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் புனா ஒப்பந்தத்தின்படி, தாம் பெற்ற உரிமைகளை இழக்க நேரிடும் என்று நகரில் உலவும் வதந்திகள் குறித்துக்கேட்டபோது டாக்டர் அம்பேத்கர் அளித்த பதிலே இது :

இதைப் பற்றி எண்ணினால் தமக்குச் சிரிக்கத்தான் தோன்று கிறது எனக் கூறிய டாக்டர் அம்பேத்கர், இத்தகைய கூற்றுகள், அரசியலமைப்புச் சட்டம் குறித்தும், புனா ஒப்பந்தத்தின்படித் திருத்தியமைக்கப்பட்ட வகுப்புவாரி ஒதுக்கீடுக் குறித்தும் அறியாமை யின் விளைவே என்பது அவர் கருத்து.

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கென வகுப்புவாரி ஒதுக் கீடுகள் நடைமுறைக்கு வந்த தொடக்கத்தில் அவர்கள் பொதுத் தொகுதிகளில் வாக்களிக்கலாம் என்றும் அவர்களுக்கான சார்பாளர்கள்

போதிய எண்ணிக்கையில் தேர்ந்தெடுக்கப்படுவதை உறுதி செய்வதன் பொருட்டு அவர்களுக்கெனத் தனி இட ஒதுக்கீடுகளுக்கும், தனி வாக்காளர் தொகுதிகளுக்கும் வழிவகை செய்யப்பட்டிருந்தது.

ஆனால் புனா ஒப்பந்தத்தின் விளைவை சுருங்கக் கூறுவதெனில், அது ஒடுக்கப்பட்ட மக்களுக்கெனத் தனித் தொகுதிகள் என்பதற்கு பதிலாக கூட்டு வாக்காளர் தொகுதிகள் எனும் திட்டத்தை முன்வைத்தது. இத்தொகுதிகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாகப் போட்டியிடும் வேட்பாளர்கள் அம்மக்கள் ஏற்றுக் கொள்ளத் தக்கவர்களாக இருத்தலை உறுதி செய்வதற்காக, அந்த சமூகமே முதனிலைத் தேர்தலை நடத்த வேண்டுமென்றும், அவ்வாறு நடக்கும் முதனிலைத் தேர்தலில் முதல் நான்கு தர வரிசைக்குள் இருக்கும் வேட்பாளர்கள் மட்டுமே கூட்டு வாக்காளர் தொகுதிகளில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கான ஒதுக்கீட்டு இடத்திற்குப் போட்டியிடலாம் என்றும் புனா ஒப்பந்தத்தின்படித் திருத்தம் செய்யப்பட்டது.

## புனா ஒப்பந்தம் : இந்துக்களின் வாதம்

இந்து சமூகத்தினர் தற்சமயம் வலியுறுத்திக் கூற முன்வரும் வாதத்தின்படி, புனா ஒப்பந்தம் உருவாக்கப்பட்டதே ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இந்து சமயத்தில் தொடர்ந்து இருப்பதற்காகத்தான் என்பது ஐயத்திற்கிடமில்லாத காரணம் என்பதாகும். இவ்வொப்பந்தம் உருவாவதற்குக் காரணமாயிருந்த காந்தியடிகளின் உண்ணா நோன்பு, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கெனத் தனியே தொகுதிகள் ஒதுக்கிடப்படுவதன் வாயிலாய் இந்து சமூகம் பிளவுற்றுச் சிதைந்து விடாமல் தடுப்பதற்காகவே என்று கூறப்படுகிறது.

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் அச்சங்களை நீக்கி அவர்கள் தொடர்ந்து இந்து சமூகத்திலேயே இருக்க வேண்டும் என்பதற்காகவே இந்துக்கள் வகுப்பு வாரி ஒதுக்கீட்டில் தங்களுக்குக் கிடைத்த இடங்களில் சிலவற்றைத் தியாகம் செய்தார்கள் என்று வாதிடப்படுகிறது.

ஆனால் அதற்குப் பிறகும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களில், டாக்டர் அம்பேத்கரின் தலைமையிலான சிலர் இந்து சமயத்தைத் துறப்பதென்று தீர்மானித்துள்ளனர். எடுத்துக்காட்டாக, மகர் இன மக்களின் பம்பாய் மாநாட்டில் தீர்க்கமான ஆலோசனைகளுக்குப் பின்னர் கீழ்க்காணும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:-

(அ) ''சமத்துவத்தையும் விடுதலையையும் அடைவதற்கு மகர் இன மக்களுக்கான ஒரே வழி சமய மாற்றமேயாகும்.''

(ஆ) மகர் சமூகம் ஒட்டுமொத்தமாக தனது சமயத்தை மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கிறது என்று தாங்கள் மிகுந்த நம்பிக்கை வைத்துள்ள தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கு உறுதி கூறுகிறது.

(இ) ''சமய மாற்றத்திற்கான முன் நடவடிக்கையாக (முதல் படியாக) மகர் இனமக்கள், இந்துக் கடவுள்களை வழிபடுவதையும், இந்துக்களின் விழாக்களைக் கொண்டாடுவதையும் உடனடியாகக் கைவிடுவதுடன் இந்துக்களின் புனிதத்தலங்களுக்குப் பயணம் செய்வதையும் நிறுத்திக் கொள்ளுமாறு இம்மாநாடு வலியுறுத்துகிறது.

## பழைமைவாதிகளின் கண்ணோட்டம்

இந்து சமூகத்தின்பால் மகர் இன மக்களின் நோக்கம் என்னவென்பதை இத்தீர்மானங்கள் ஐயத்திற்கிடமின்றித் தெள்ளத் தெளிவாய்ப் புலப்படுத்துகின்றன. எனவே, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் தொடர்ந்து இந்து சமயத்திலேயே இருப்பார்கள் என்று கூறப்படாத நிபந்தனையின் பேரில் அவர்களுக்கு அளிக்கப்பட்ட உரிமைகள் அவர்களுக்கு மறுக்கப்பட்டால் அவர்கள் அது குறித்துக் குறை கூறக் கூடாது.

வேறு சொற்களில் கூறுவதெனில், அண்மையில் காங்கிரஸ் தலைவர் ஒருவர் பின்வருமாறு கூறினார்:

''அவர்கள் இரண்டு வகையிலும் ஆதாயம் பெற இயலாது, ஒன்று இந்துக்களாகவே இருந்து புனா ஒப்பந்தம் தரும் சலுகைகளை அனுபவிக்கட்டும்; அல்லது இந்து சமயத்திலிருந்து விலகுவதெனில் இச்சலுகைகளை இழக்கத் தயாராயிருக்கட்டும்.''

இந்த நிலைபாடு குறித்துத் தமது விளக்கம் கேட்கப்பட்ட போது, டைம்ஸ் ஆப் இந்தியா நிருபர் ஒருவருக்கு அளித்த நேர்காணலில் டாக்டர் அம்பேத்கர், ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்காக இந்து சமூகத்தினர் தியாகம் செய்தார்கள் என்று கூறப்படுவதை மிக வன்மையாக மறுத்தார்.

''ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்காகப் பழைமைவாத இந்துக்கள் தமது இடங்களில் சிலவற்றைத் தியாகம் செய்ததாய்க் கூறுவது மிகத் தவறான கருத்து'' என்று கூறினார்.

அம்பேத்கரின் கருத்துப்படி, முஸ்லீம்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், (பஞ்சாபில்) சீக்கியர்கள் ஆகியோருக்கெனத் தனித் தொகுதி ஒதுக்கீடுகள் இருப்பதைப் போன்று இந்துக்

களுக்கெனத் தனி ஒதுக்கீடுகள் எதையும் அரசியலமைப்புச் சட்டம் ஏற்றுக் கொள்ளவில்லை. பொதுத் தொகுதிகள் இந்துக்களுக்கு மட்டுமன்றிப் பார்சிகள், யூதர்கள், சமணர்கள், பௌத்தர்கள் உள்ளிட்ட பல்வேறு சமய மக்களுக்கும் அத்தொகுதிகள் பொதுவானவையே. எனவே, புனா ஒப்பந்தத்தின்படி ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கென ஒதுக்கப்பட்ட தொகுதிகள் பொதுத் தொகுதிகளேயன்றி, இந்துக்களின் தொகுதிகள் அல்ல; ஏனெனில் இந்துக்களின் தொகுதிகள் என ஏதும் கிடையாது. வகுப்புவாரி ஒதுக்கீட்டின் கீழோ, புனா ஒப்பந்தத்திலோ, வாக்குரிமையையும் தேர்தல் நடைமுறையையும் வரையறுக்கும் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்திலோ அவ்வாறு ஏதும் கூறப்படவில்லை.

## தொகுதிகளின் வகைப்பாடு

*(வினா எழுப்பக் காலம் கடந்த நிலை)*

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின்படியான தொகுதிகளின் வகைப்பாட்டு வரையறை குறித்து, இன்றைய நிலையில் வினா எழுப்புதல் காலங்கடந்த செயல் என்று டாக்டர் அம்பேத்கர் வலியுறுத்தினார். ''அது நிலைபெற்றுவிட்டது; அது பின்பற்றப்பட வேண்டும். முஸ்லீம்கள் பெரும்பான்மையோராகவும், இந்துக்கள் சிறுபான்மையோராகவும் வாழும் பஞ்சாப் மாநிலத்தில் கூட முஸ்லீம்களுக்கெனத் தனித் தொகுதிகள் இருக்க இந்துக்களுக்குப் பொதுத் தொகுதிகளே உரியனவாயிருக்கின்றன'' என்று அவர் மேலும் சுட்டிக் காட்டினார்.

இவ்வாறான நிலையில், ''ஒடுக்கப்பட்ட மக்களுக்காக இந்துக்கள் தியாகம் செய்தனர் என்று கூறுதல் தவறான பொல்லாங்கு உரையாகும்; அப்படிக் கூறுவதெனில் பொதுத் தொகுதிகளில் போட்டியிடற்குரிய எண்ணிறைந்த பல்வேறு சமூக மக்களும் தியாகம் செய்தார்கள் என்றுதான் கூறிக்கொள்ள வியலும்'' என்றும் அவர் வலியுறுத்தினார்.

டாக்டர் அம்பேத்கர் சுட்டிக் காட்டிய மற்றொரு முக்கியமான கருத்து, வகுப்புவாரி ஒதுக்கீடு, புனா ஒப்பந்தம், 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம் ஆகியவற்றின்படி ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசியல் உடன்பாடுகளுக்கும் சமயத்திற்கும் தொடர்பேதும் இல்லை என்பதாகும். ஐரோப்பியர் தொகுதிகள் என்பவற்றில் எந்த சமயத்தைச் சார்ந்த ஐரோப்பியர்களும் போட்டியிடலாம்; ஆங்கிலோ இந்தியர்

களுக்கான தொகுதிகளும் அத்தகையனவே. மூஸ்லீம் சமூகத்தைப் பொறுத்தவரை மட்டிலுமே சமய அடிப்படையில் அரசியல் வகைப்பாடு செய்யப்படுகிறது. பொதுத் தொகுதிகளாக வரையறுக்கப்பட்ட தொகுதிகளில் அரசியல் உரிமை பெற்றவர்கள் தமக்கிடையே சமய ஒற்றுமை ஏதுமில்லா நிலையிலும்கூட அரசியல் உரிமைகளை அடைவதற்கான தடையேதும் விதிக்கப்படவில்லை.

## வாக்குரிமை உடன்பாடுகள்

வேறு வகையாய்ச் சொல்வதெனில், வாக்குரிமை உடன்பாடுகள், பல்வேறு சமூகங்களின் மக்கள் தொகையின் அடிப்படையில் உருவானவையேயன்றி அவர்கள் பின்பற்றும் சமயங்களின் அடிப்படையிலன்று எனலாம். தொடக்கத்தில் 'ஒடக்கப்பட்ட வகுப்பினர்' என்றிருந்த வகைப்பாடு இப்போது 'தாழ்த்தப்பட்ட சாதியினர்' என்று மாற்றப்பட்டுள்ளது. இந்த சமூக வகைப்பாடு சமூக, பொருளாதாரக் கண்ணோட்டத்தில் செய்யப்பட்டதேயன்றிச் சமயத்தின் அடிப்படையில் அல்ல.

இந்த வகைப்பாட்டில் சமயச் சார்பும் ஓரளவுக்கு இருப்பதாய் வாதத்திற்காக வைத்துக் கொள்வோமென்றாலும், சமயத்தைத் துறப்பதோ, சமயச் சார்ந்த நம்பிக்கைகள் சிலவற்றை ஏற்க மறுப்பதாய் அறிவிப்பதோ, அரசியல் உரிமைகள் எவையும் பறிபோகக் காரணமாக இருக்காது என்று டாக்டர் அம்பேத்கர் மேலும் வலியுறுத்தினார்.

ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இந்து சமயத்தைத் துறந்து இஸ்லாம், கிறித்துவம் போன்ற பிற சமயம் எதிலேனும் சேர்ந்து விட்டார்களா என்பது கேள்விக்குரியதன்று.

அப்படியொருவர் சமயம்மாறிய பின்னர்தான் அவர் சமயத்தைச் சார்ந்த பிற மக்களுக்கான அரசியல் குழு எனும் வகைப்பாட்டின் கீழ் அவர் கருதப்படுவார். அந்த நிலையொன்றில் மட்டுமே அவர் இந்து சமயத்தவர் என்ற முறையில் தாம் பெற்ற உரிமைகளை இழக்க வேண்டியவராவார்.

''இந்து ஒருவருக்கு வேதங்களில் ஆழ்ந்த நம்பிக்கையில்லையெனில் அவரது நிலை என்ன?'' எனும் வினாவை எழுப்பிய அம்பேத்கர், இந்தியாவில் வாழும் இந்துக்களில் எண்ணிறந்த பலர், இந்துக்களுக்கெனக் குறிப்பிடப்பட்டுள்ள சமயச் சடங்குகளைப்

பின்பற்றுவதில்லையென்று குறிப்பிட்டார். இதன் காரணமாய் அவர்கள் இந்துக்கள் அல்லர் என்று ஒதுக்கப்படவில்லையே என்று கூறி, இந்து ஒருவருக்கு அவரது சமயத்தின் மீதான நம்பிக்கைக்கான அளவுகோல் என்னவென்றும் வினா எழுப்பினார்.

## உரிமைகளை வலியுறுத்தல்

ஒருவர் இயல்பாகத் தாம் பின்பற்றும் சமயத்தைச் சார்ந்தவர்களில், அநீதியான, அருவருக்கத்தக்க நடைமுறைப் பழக்க வழக்கங்களைக் கொண்டதோர் பிரிவினரிடமிருந்து தமது தொடர்புகளை அறுத்துக் கொள்ளுதல், அவர் தமது சமயத்திலிருந்து தொடர்பறுத்துத் கொள்ளுதலாகாது.

''எடுத்துக்காட்டாக, இன்றைய கிறித்தவர்கள் அனைவரும் உண்மையான கிறித்தவர்கள் அல்லர் என்று உறுதியாய்க் கூற வியலும். இன்றைக்கும் ஐரோப்பிய நாடுகளில், கிறித்தவத்தில் நம்பிக்கையில்லாதவர்கள், கிறித்தவம் பற்றி அக்கறை கொள்ளாதவர்கள், பகுத்தறிவுவாதிகள் ஆகியோர் ஞாயிற்றுக்கிழமைகளில் கிறித்தவர் ஆலயங்களுக்கு எதிரே அணிவகுப்பு நடத்தி எதிர்ப்பு காட்டுவதை நாம் காண்கிறோமல்லவா? ஆனால் சட்ட நோக்கில் அவர்களும் கிறித்தவர்கள் என்றுதான் கருதப்படுகின்றனர்.''

''நீங்கள் வேண்டுமானால் சட்ட நோக்கில் என்னை இந்து என அழைத்துக் கொள்ளலாம்'' என நகைப்புடன் குறிப்பிட்ட அம்பேத்கர், ''ஆனால் எனது அரசியல் உரிமைகளுக்கு, எனது சமயப் பற்றின் ஆழம் அடிப்படையன்று'' எனக் கூறினார்.

தமது வாதத்திற்கு ஆதரவாக டாக்டர் அம்பேத்கர் பஞ்சாப் மாநிலத்தில் இருந்து இரண்டு எடுத்துக்காட்டுகளைச் சுட்டிக் காட்டினார். அங்கு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களில் இரு பிரிவினர் ''தாழ்த்தப்பட்ட சாதியினர்'' எனும் பிரிவின் கீழ் வகைப்படுத்தப் பட்டுள்ளனர்; இத்தனைக்கும் அவர்கள் இந்துக்கள் அல்லர். **ஆதி தார்மிகள், இராமதாசிகள்** என்போரே அப்பிரிவினர். இவர்களில் முதலாவது பிரிவினர் தாமாகவே முன்வந்து தாங்கள் இந்துக்கள் அல்லர் என்று அரசுக்கு முறையாக அறிவிப்பு கொடுத்துள்ளனர். இருப்பினும் அவர்கள் ''தாழ்த்தப்பட்ட சாதியினர்'' என்றே வகைப் படுத்தப்பட்டு பொதுத் தொகுதிகளிலேலே இடம்பெறுகின்றனர்.

1931 ஆம் ஆண்டின் பஞ்சாப் மாநில மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் கூறப்படுவதாவது:

சமய நோக்கில், தற்போதைய மக்கள் தொகைக் கணக்கெடுப்பிலிருந்து புலப்படும் முக்கியமானதொரு அம்சம், ஏராளமான சாமர்களும், சூத்திரர்களும் ஏனைய தீண்டப்படாதவர்களும் தங்களை ஆத்தர்மிகள் என்று குறிப்பிட்டுள்ளமையாகும். இந்த ஆண்டில், ''ஆத்தர்மிகள் என்று தம்மைக் குறிப்பிடுவோரை 'ஆத்தர்மிகள்' என்றே குறிப்பிட வேண்டும்'' என்ற ஆணை பிறப்பிக்கப் பட்டுள்ளது.

''1930ஆம் ஆண்டில், மக்கள் தொகைக் கணக்கெடுப்புக்கான செயல்பாடுகள் தொடங்கப்படுவதற்கு முன்பாகவே, பஞ்சாப் ஆத் தர்ம மண்டல் எனும் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் அமைப்பு, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் இந்தியாவின் தொல் குடிமக்களின் மரபினர், ஆகையால், அவர்கள் தமது சமயமாக 'ஆதி தருமம்' என்பதைப் பதிவு செய்து கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும் என்று பஞ்சாப் மாநில அரசுக்கு விண்ணப்ப மனு விடுத்திருந்தனர்; இந்துக்கள் தம்மை ஒதுக்கி வைப்பதையும், தமக்கு இந்து சமயத்தில் நம்பிக்கை இல்லையென்பதையும் இதற்குக் காரணமாய்க் குறிப்பிட்டிருந்தனர். மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் போது, தமது சமயம் ஆதி தருமம் என்று குறிப்பிடுவோரை அவ்வாறே பதிவு செய்து கொள்ளுமாறு புதிய விதிப் பிரிவு சேர்க்கப்படுவதாய், பஞ்சாப் மாநில ஆதி தரும மண்டலத் தலைவருக்கு அறிவிப்பு தரப்பட்டது, ஆதி தருமம் என்பதன் பொருள் மூலசமயம் அல்லது பழைய சமயம் என்பதாகும்.''

## எதிர்மறையான மனப்போக்கு

ஆதி தர்மப் போராட்டத்தின் மீதான சச்சரவு மிகக் கடுமையாய் உருவெடுத்து பல கொலைகள் நிகழுமளவுக்குச் சென்றுள்ளதாய் டாக்டர் அம்பேத்கர் கூறுகின்றார். எவ்வாறாயிலும் ஆதி தர்மிகள் தாம் இந்துக்கள் அல்லர் என்பதைத் தெளிவாகவே எடுத்துரைத்த பின்னரும் அவர்கள் ''தாழ்த்தப்பட்ட சாதியினர்'' என்றே வகைப் படுத்தப்பட்டுப் பொதுத் தொகுதிகளிலேயே இடம் பெற்றுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

தம்மையும் தம்மைப் பின்பற்றுவோரையும் குறித்து டாக்டர் அம்பேத்கர் கூறும்போது எங்கள் மனப்போக்கு இந்து சமயத்துக்கு எதிரானது என்பது உறுதி. ஆனால் அதே சமயம் பிற சமயத்திற்கும் தற்சமயம் அது ஆதரவாயில்லை என்று குறிப்பிட்டார்.

அவ்வாறே, இராமதாசிகள் என்போர், சீக்கிய சமயத்தவர்

ஆவர்; எனினும் அவர்கள், 'தாழ்த்தப்பட்ட சாதியினர்' என்றே வகைப் படுத்தப்பட்டுள்ளனர்; பொதுத் தொகுதிகளில் இடம் பெற்றுள் ளனர். இவையெல்லாம், தேர்தல் தொடர்பான வகைபாடுகளில் சமயத்திற்கு எந்த இடமும் இல்லையென்பதையும் சமயப் பிரிவு களுக்கு மாறாகவே வகைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன என்பதை யுமே காட்டுவதாக டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்.

இவ்வாறாக, குறைபட்டுக் கொள்ளவோ, புனா ஒப்பந்தத் தின்படி ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் பெறும் உரிமைகளை மறுக்கவோ இந்துக்களுக்கு எந்தவிதமான உரிமையும் கிடையா தென்று கூறும் டாக்டர் அம்பேத்கர் அவரது சமூகத்தின் உரிமைகள் எந்த விதத்திலும் கட்டுப்பட்டவை அல்லவென்றும், இந்து சமயத் தையே துறந்தாலும் அவ்வுரிமைகளை அவர்கள் தக்கவைத்துக் கொள்வர் என்றும் கூறினார்.[1]

• • •

1. டைம்ஸ் ஆப் இந்தியா, 1936, ஜூலை 24.

# 13

# தன்னல நோக்கமில்லாத சமய மாறுதல் இயக்கம்

தீண்டப்படாத மக்கள் சமயம் மாறுவதற்கு எதிராக ராவ் பகதூர் எம்.சி.ராஜா விடுத்த அறிக்கை குறித்து டாக்டர் அம்பேத்கர் தெரிவித்த கருத்துரைகள் வருமாறு:

திரு.ராஜா இக்கடிதத் தொடர்பைப் பத்திரிகைகளில் வெளியிட அனுப்பியது தரம் தாழ்ந்த செயல் என்பதை முதலில் தெரிவித்துக் கொள்கிறேன். சமய மாற்றம் குறித்து உறுதியான முடிவொன்றை எடுக்கும் வரை இக்கடிதம் தனிப்பட்டதாகவும், இரகசியமாகவும் இருக்க வேண்டுமென்று டாக்டர் மூஞ்சே தமது கடிதத்தின் இறுதியில் மிகத் தெளிவாகவே குறிப்பிட்டுள்ளார். இது திரு. ராஜாவின் கவனத்தில்படாது போயிருக்கும் என்று என்னால் நம்ப முடியவில்லை. எனவே, கடிதத்தைப் பத்திரிகைகளுக்கு அனுப்பு முன் டாக்டர் மூஞ்சேயிடம் திரு.ராஜா அனுமதி வேண்டியிருக்க வேண்டும். திரு. ராஜாவின் இச்செயல் பண்பட்ட மனிதருக்குரிய செயல் அன்று.

தீண்டப்படாத மக்கள் தமது சமய மாற்றத்திற்கு சீக்கிய மதத்தைத் தேர்ந்தெடுக்கலாம் என்பது இந்து நண்பர்கள் பலருக்கும், தீண்டப்படாத மக்களின் சமய மாற்றத்தில் ஆழ்ந்த அக்கறை கொண்டுள்ள தீண்டப்படாத சமூக மக்கள் பலருக்கும் இவ்வுண்மை மிக நன்றாய்த் தெரியும்.

தீண்டப்படாத மக்கள் சீக்கிய சமயத்தைத் தழுவவிருப்பது தொடர்பாய் ராவ் பகதூர் எம்.சி.ராஜா, டாக்டர் மூஞ்சே ஆகியோருக்கிடையே நிகழ்ந்த கடிதப் போக்குவரத்து அண்மையில் செய்தித்தாள்களில் வெளியானது. அதை நான் படித்துப் பார்த்தேன்.

டாக்டர் அம்பேத்கரின் மிகப் பெரிய இரகசியம் ஒன்றை வெளிப்படுத்தி விட்டதாய் ராஜா மகிழ்ச்சி கொள்ள அதில் எதுவுமில்லை. திரு. ராஜாவின் கடிதங்களை நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. திரு.ராஜா தீண்டப்படாத மக்கள் திரளின்

மரியாதையை அவ்வளவாகப் பெற்றவருமல்லர் என்பது என் கருத்து; சமயமாற்றங் குறித்து அவரது கருத்துக்களுக்கும் மதிப்பேதும் கிடையாது. அவரது கருத்துக்களுக்கு மக்களிடையே மதிப்பேதும் இருப்பதாய்க் கருதியிருந்தால், சமய மாற்றம் குறித்து அவர் மனத்தை மாற்றுவதற்காக நானே அவருடன் ஒத்துழைத்துப் பாடுபட்டிருப்பேன்.

வட்டமேசை மாநாட்டில், தீண்டப்படாத மக்களின் சார்பாக ராவ் பகதூர் ராஜாவைப் புறக்கணித்து ராவ் பகதூர் சீனிவாசனும் நானும் மட்டுமே அழைக்கப்பட்டிருந்தோம். இதன் விளைவாகத் திரு. ராஜா அடைந்த மன எரிச்சல் மற்றும் உலைவின் காரணமாகவே அதிலிருந்து திரு.ராஜா தொடர்ந்து என்னைக் குறை கூறியும் எதிர்த்தும் வருகிறார்.

நான் எனது மக்களுக்காக உழைக்க முயன்று கொண்டுள்ளேன். திரு.ராஜா என்னை எதிர்ப்பதிலும் எனது பணிகளில் குறை காண்பதிலும் ஈடுபட்டு வருகிறார். அதே சமயத்தில் செய்தித்தாள்களின் வாயிலாகத் தம்மைப் பற்றிய சுய விளம்பரக் கலையிலும் நன்கு தேறி வருகிறார். இதற்கு நான் மிக முக்கியத்துவம் ஏதும் அளிக்கவில்லை. எனினும், தீண்டப்படாத சமூக மக்கள் இந்து சமயத்தைத் துறப்பதற்கும், தாங்கள் தொடங்கும் புதியதொரு சமயத்தைத் தழுவிக் கொள்வதற்குமான இயக்கம் குறித்து ராஜா ஏன் வருத்தமுற வேண்டுமென்று எனக்குப் புரியவில்லை.

திரு.ராஜா இந்து சமயத்தைத் துறக்கவில்லையென்றால், அவரை யாரும் வற்புறுத்தப் போவதில்லை; எனவே சமய மாற்றம் குறித்துக் குறைகூற அவருக்கு உரிமை ஏதுமில்லை. ''நான் இந்துவாக வாழ்ந்து இந்துவாகவே சாவேன்'' என்று திரு.ராஜா கூறுகிறார் அதற்கு அவருக்கு முழு உரிமையுண்டு. ஆனால் அவருக்கு ஒன்றைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். அவர் செய்தித்தாள்களில் அறிக்கை விடுவதில் தமது திறமையைப் புலப்படுத்தலாம்; இந்து சமயத்தின்பால் அவருக்குள்ள ஆழ்ந்த பற்றையும் வெளிப்படுத்தலாம்; ஆனால், அவராகப் பிறிதொரு சமயத்துக்கு மாறாத வரையில் அவர் தொடர்ந்து 'பறையராக' வாழ்ந்து 'பறையராகவே' சாவார் என்பதில் ஐயமில்லை. அவர் இந்து சமயக் கட்டுக்குள் தொடர்ந்து இருக்கும் வரை, அவரது பிறந்த சாதி காரணமாக அவர்மீது சுமத்தப்பட்டுள்ள தீண்டாமை எனும் கறையில் ஒரு சிறு துளியும் அகற்றப்பட மாட்டாது. ஆன்மீக காரணங்களுக்காகத்தான் சமய மாற்றம் நிகழ வேண்டுமென்று கூறுவது பொருள் அற்ற வெட்டிப் பேச்சாகும்.

ஆன்மீகக் காரணங்களுக்காகத்தான் அவர் இந்து சமயத்திலேயே தொடர்ந்து இருக்க விரும்புகிறாரா என்று திரு. ராஜாவைக் கேட்க விரும்புகிறேன். ஆன்மீக மனநிறைவு என்பது தவிர வேறெதிலும் அவருக்கு நாட்டமில்லையென்றால், சட்டமன்றங்களில் இட ஒதுக்கீடு பெறுவதால் கிடைக்கும் பொருளியல், அரசியல் நலன்கள் குறித்து அவர் ஏன் அக்கறை காட்ட வேண்டும்? இந்துவாக வாழ்ந்து இந்துவாக இறப்பதில் அவர் அக்கறை கொண்டிருக்கிறார் எனில் ஒதுக்கீட்டு இடங்களில் ஏன் அவர் நாட்டம் செலுத்த வேண்டும்?

தீண்டப்படாத மக்கள், சமயம் மாறுவதை எதிர்க்கத் திரு. காந்தி, திரு.மாளவியா இருவருக்கும் தார்மீகத் துணிவு ஏதும் கிடையாது; ஏனெனில், புனா ஒப்பந்தத்தின் படி அவர்கள் அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்ற அவர்கள் தவறிவிட்டார்கள்.

எனது நிலைபாட்டைத் தம்மால் புரிந்து கொள்ள முடிய வில்லை என்று திரு.காந்தி கூறுகிறார்; நானோ அவரது வாக்கையும் செயலையும் புரிந்து கொள்ளுதல் கடினமாயிருக்கக் காண்கிறேன். ''தீண்டப்படாத மக்களின் மேம்பாடு என்பது தனித்ததொரு விவகாரம்'' என்று அவர் கூறுகிறார். காந்தியடிகள் பயன்படுத்தும் இந்த மொழி ஒரு துறவி மற்றொரு துறவியிடம் கூறப்படுவதா யிருந்தால் ஒருவேளை அவர்களால் இதனைப் புரிந்து கொண் டிருக்கக் கூடுமோ என்னவோ, ஆனால் அன்றாட நடைமுறைச் சமுதாயக் கோட்பாடுகளைப் பின்பற்றும் என்னைப் போன்ற எளிய மக்களுக்கு, இத்தகைய மகாத்மாத்தனமான மொழி பொருளற்ற தாய்த்தான் தோன்றுகிறது. சமயம் என்பது பண்ட மாற்றத்திற் குரியதோர் பொருள் அல்ல என்று திரு.காந்தி கூறுகிறார். இத்துணைக் காலம் கடந்த கட்டத்தில் இத்தகையதொரு போக்கில் திரு.காந்தி பேசுதல், நாணயக் குறைவானதொரு செயலே என்று சுட்ட விரும்பு கிறேன். புனா ஒப்பந்தத்தின் போது ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தல் என்ற கோட்பாட்டை ஏற்றுக் கொண்டவராகவே திரு. காந்தி பேசினார். தமது அடிப்படை உரிமைகளுக்காகப் போராடு கின்ற மக்கள், ஆன்மீக அமைதி பெறுதல் எனும் பசப்பு வார்த்தை களில் ஏமாந்து தமது அன்றாட அடிப்படைத் தேவைகளான உணவு, நீர் போன்றவற்றைப் பறிகொடுக்கும் காலம் மலையேறிவிட்டது.

தீண்டப்படாத மக்கள் தங்களது சமயத்தைப் பண்டமாற்று செய்வதாய்த் திரு.காந்தி கூறுகிறார்; ஆனால் சமயமாற்ற இயக்கம் என்பது எத்தகைய தன்னல நோக்குடனோ, சில தனிப்பட்டோர் நலன்களுக்காகவோ தோற்றுவிக்கப்பட்டதன்று என்பதை அவர்

தமது மனத்தில் கொள்ள வேண்டும். திரு.காந்தியின் கருத்துப்படி, இந்துக்கள்தான் பிராயச்சித்தம் செய்ய வேண்டுமாம்; தீண்டாமையை ஒழிக்க இந்துக்கள் தாமாகவே முன்வந்து பாடுபட வேண்டுமாம். தீண்டாமையை அகற்றுவதற்காகவோ, தமது மேம்பாட்டுக்காகவோ, தீண்டப்படாத மக்கள் எப்பணியையும் மேற்கொள்ளாமல் கையைக் கட்டிக் கொண்டு அமர்ந்து, இறைவா, இந்துக்களுக்கு அறிவையும், துணிவையும் ஒளியையும் தந்து அவர்களது பாவச் செயல்களை மன்னிப்பீராக. அவர்களுடைய பாவங்களுக்கு மன்னிப்பு வழங்கித் தமது சமுதாயத்தைச் சீர்திருத்தம் செய்வதற்கு வேண்டிய வலிமையையும் அறிவையும் அவர்களுக்குக் கொடுப்பீராக என்று தொழுது கொண்டிருந்தால் போதுமாம். தீண்டப்படாத மக்களுக்குக் காந்தியடிகளின் தூய அறிவுரை இதுதான். இத்தகைய பசப்பு உரைகளால் எவருக்கும் நன்மை விளைந்திடாது; எந்தவொரு சிக்கலுக்கான தீர்வும் கிடைத்துவிடாது. அறிவுள்ள எவரும் இத்தகையதொரு ஆலோசனைக்குச் செவிசாய்க்க மாட்டார்கள். ஏதாவதொரு பகுதியில் பிளேக் போன்றதொரு கொள்ளை நோய் பரவிக் கொண்டிருப்பதாய்க் கொள்வோம். அவர்களிடையே சென்று, ''அருமை உடன்பிறப்புகளே, அமைதியாய் நின்று எனது அறிவுரையைக் கேளுங்கள். இக்கொள்ளை நோய்க்கு நீங்கள் அஞ்ச வேண்டாம். ஒரு காலத்தில் நகராட்சி மன்றக் குழு உறுப்பினர்கள் தங்கள் கடமையைச் செய்யத் தவறியமைக்காக வருந்தி மன்னிப்புக் கோருவார்கள். பிளேக் நோயை ஒழிப்பதற்கென்றொரு திட்டத்தைத் தீட்டத்தான் போகிறார்கள். அதுவரையில் நீங்கள் பொறுமை காக்க வேண்டும். அவசரப்பட்டு உங்கள் வீட்டையும் அடுப்பங்கரையையும் துறந்து வெளியேறலாகாது'' என்றொருமூடன் அறிவுரை கூறுவானாகில் எப்படியிருக்கும். இத்தகையதோர் ஆலோசனையில் எத்தகைய அறிவீனம் காணப்படுகிறதோ அத்தன்மையானது தானே தீண்டப்படாத மக்களுக்கு காந்தியார் நல்கும் அறிவுரையும்?

திரு.இராசகோபாலாச்சாரி, வேறொரு காரணமாய்க் கோப வயப்பட்டிருப்பதாய்த் தோன்றுகிறது. இந்த முதிய வீட்டுக்காரர், தாமே உருவாக்கிய சொற்சிலம்ப வலையின்று விடுபட இயலாதவராய்ப் பழிதூற்றும் இயல்பினர். சமயமாற்ற இயக்கத்தை இவர் சாத்தான் தன்மை வாய்ந்ததெனப் பழிதூற்றியுள்ளார்.

தீண்டப்படாத மக்கள் சீக்கிய சமயத்தைத் தழுவுதல் குறித்துத் தீவிரமாக எண்ணிக் கொண்டிருக்கிறார்களெனில், தீண்டப்படாத மக்களின் இச்செயல்பாடு சாத்தான் தன்மை வாய்ந்ததுதான்

என்பது குறித்து இந்துக்கள்தான் தமக்குள் ஆய்வு செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். இந்து சமயத்தின் வருங்காலத்தில் அக்கறை கொண்டுள்ள இந்து மக்கள்தான், மாபெரும் பார்பனரான இராச கோபாலாச்சாரி, சீக்கிய மதத்திற்கு மாற்றம் பெறுதலை சாத்தான் தன்மை வாய்ந்தது என்று கூறுகையில், அவர் தமது அறிவு, உணர்வு களையெல்லாம் துறந்துதான் பேசினாரா என்பதை முடிவு செய்ய வேண்டும்.

சாத்தானர் தன்மை (பிசாசுத்தனம்) எனும் குற்றச்சாட்டை எவர் மீதாவது சுமத்த வேண்டுமெனில், அதற்கு இலக்காக வேண்டியவர், தனிப்பட்ட, இரகசியக் கடிதங்களைப் பத்திரிகைகளில் வெளியிடும் பண்பற்ற செயல்புரிந்த டாக்டர் மூஞ்சேதான். ஆனால், இதுகுறித்து நான் மேலும் எதையும் கூற விரும்பவில்லை.

தீண்டப்படாத மக்கள் சீக்கிய சமயத்தைத் தழுவுவதை சங்கராச்சாரியார், டாக்டர் குற்றக்கொடி போன்ற முன்னணி இந்துத் தலைவர்கள் ஆதரிக்கின்றனர். உண்மையில், தீண்டப்படாத மக்கள் சீக்கிய சமயத்தைத் தழுவலாம் எனும் கருத்தை முன்னிறுத்திப் பிரச்சாரம் செய்தவர்களும், என்னை இதன்பால் ஊக்குவித்து ஈடுபடுத்தியவர்களும் இத்தகைய இந்து சமயத் தலைவர்கள்தாம். இந்துப் பண்பாடு, நாகரிகம் ஆகியவை குறித்து எனக்கிருந்த பொறுப் புணர்வு காரணமாகவே நானும் இக்கருத்தால் ஈர்க்கப்பட்டு அதை ஏற்றுக் கொண்டேன். செய்தித்தாள்களில் வெளிவந்த கடிதப் போக்குவரத்து குறித்த எனது கருத்துக்களைப் படித்த பின்னர், தீண்டப்படாத மக்கள் சீக்கிய சமயத்திற்கு மாறுதல் குறித்து திரு. காந்தி, திரு எம்.சி.ராஜா, திரு இராசகோபாலாச்சாரி ஆகியோர் கடைப்பிடிக்கும் கொள்கை இந்து சமுதாயத்தின் எதிர்கால நலன் களுக்கு உகந்ததா என்பதை இந்துக்கள் தமது விருப்பப்படி முடிவு செய்து கொள்ளலாம்.

● ● ●

ஜனதா எனும் மராத்தி இதழின் ஆகஸ்ட் 15, 1936 பதிப்பில் டாக்டர் அம்பேத்கர் வெளியிட்ட அறிக்கை.

# 14

# சுதந்திரத் தொழிலாளர் கட்சி : ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நலம் பேணுதற்கோர் ஊற்றுக்கண்

*1937 ஆம் ஆண்டு ஜனவரி 14இல் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் லண்டனிலிருந்து பம்பாய் வந்தடைந்தார். அப்போது டைம்ஸ் ஆப் இந்தியா இதழின் நிருபர் அவரைச் சந்தித்து உரையாடினார். அந்த நேர்காணலின் விவரங்கள் கீழே தரப்படுகின்றன: ஆசிரியர்கள்.*

டாக்டர் அம்பேத்கர் தமது ஐரோப்பியப் பயணம் முற்றிலும் உடல்நலம் பேணுதற்காகவே என்று கூறிப் பெரும்பாலான காலம் தாம் வியன்னாவிலும் பெர்லினிலுமே தங்கியிருந்ததாய் தெரிவித்தார். இலண்டனில் ஒருவார காலம்தான் அவர் தங்கியிருந்தார். அச்சமயத்திலும் அவர் இலண்டனில் எவரிடமும் அரசியல் தன்மையிலான உரையாடல்கள் ஏதும் நிகழ்த்தவில்லை என்று கூறினார்.

இந்து சமயத்திலிருந்து விலகும் உத்தேசம் குறித்து ஏதேனும் முடிவெடுத்துள்ளாரா என்று கேட்கப்பட்ட போது, இந்து சமயத்திலிருந்து விலக வேண்டும் எனும் தமது முடிவில் எவ்வித மாற்றமும் இல்லையென்றும், ஆனால் எந்தப் புதிய சமயத்தைத் தழுவுவது என்பது குறித்து இறுதி முடிவு ஏதும் எடுக்கப்படவில்லை யென்றும் தெரிவித்தார்.

வரவிருக்கும் பம்பாய் மாநிலச் சட்டமன்றத் தேர்தல்களில் தான் தமது உடனடிக் கவனம் என்றும் தேர்தல் பிரச்சாரத்தில் தம்மை முழுமையாய் ஈடுபடுத்திக் கொள்ளப் போவதாகவும் டாக்டர் அம்பேத்கர் கூறினார். ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் நல மேம்பாட்டுக்கு சட்டமன்றத்தில் உழைக்கும் நோக்கோடு தாம் தோற்றுவித்த சுதந்திரத் தொழிலாளர் கட்சி தொடர்ந்து உழைக்குமென்று கூறிய அம்பேத்கர் வரும் தேர்தலில் கட்சி நிறுத்தும் வேட்பாளர்கள் அனைவருமே வெற்றி பெறுவார்கள் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

டாக்டர் அம்பேத்கர் திரும்பி வந்தவுடன் அவருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. பாலாட்டுபியர் நிலையத்திலிருந்து,

அலெக்சாண்டிரா துறை எண் 18 வரை வழிநெடுகிலும், சமூக சமத்துவ மன்றத்தைச் சேர்ந்த, ஆயிரத்துக்கும் மேற்பட்ட, காக்கிச் சீருடையணிந்த தொண்டர்கள் அணிவகுத்து நின்று அவர் செல்லுங்கால் உற்சாகமூட்டினர்.

டாக்டர் அம்பேத்கர் தொடங்கிய சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் சார்பில் வரவிருக்கும் பம்பாய் மாநிலச் சட்ட மன்றத் தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்கள் அனைவருமே அவரை வரவேற்கத் தரைத் தளத்திற்கு வந்திருந்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் : பி.கே.கெய்க்வாடு (நாசிக் மாவட்டம்), திரு. பிரபாகர் ரோகம் (அகமது நகர்), திரு.பி.எச்.வாரளே (பெல்காம்), திரு.ஆர்.ஆர்.போலே (புனா), திரு.பி.ஜே.சவாத்கர், திரு.எஸ்.ஜி. திப்னிஸ் (கொலாபா), திரு.ஜி.ஆர்.காட்டே (இரத்தினகிரி), திரு. ஆர்.இ. பட்னாகர் (தாணா), திரு. வி.ஏ. காட்காரி ஆகியோர்.

# 15

# இந்தியர்களின் குடிமையுரிமைகள்

தீண்டாமையும் சுரண்டலும் குடியுரிமை மீறல் செயல்பாடுகளாக டாக்டர் அம்பேத்கரால் கருதப்பட்டதென்பது சுவையானதொரு கருத்தாகும். இயல்பான பொருளில் மீறல் இல்லையென்றாலும் முழுமையான சமூகங்களின் கண்ணியத்தையே அவை தாழ்த்துவதால் அவை குடிமையுரிமை மீறல்களே என்பது அவர் கருத்து. நெடுங்காலத்திற்கு முன்னரே, 1937 ஜூனில், குடிமையுரிமைகள் ஒன்றியத்தின் செயலாளர் டாக்டர் கே.பி.மேனனுக்கு டாக்டர் அம்பேத்கர் எழுதிய பொருள் செறிந்த கடிதம் வருமாறு.

பீமராவ் ஆர்.அம்பேத்கர்
M.A., Ph.D., D.Sc.,
பாரிஸ்டர் (சட்டம்)

'ராஜக்கிருகம்'
தாதர், பம்பாய்-14
ஜூன் 8, 1937

அன்பார்ந்த திரு. மேனன் அவர்களுக்கு,

1937, மே 19 ஆம் தேதியிட்ட தங்கள் கடிதம் (எண் 998) கிடைக்கப் பெற்றேன். அத்துடன், 'இந்தியாவில் குடியுரிமைகள்' பற்றிய லண்டன் மாநாட்டில், இந்தியக் குடிமையுரிமை ஒன்றியத்தின் சார்பில் இந்தியாவிலிருந்து வாசிக்கப்படும் செய்தியான இயக்க அறிக்கையில் கையொப்பமிடுமாறு என்னை வேண்டித் தாங்கள் அனுப்பியிருந்த அஞ்சல் அட்டையும் கிடைக்கப் பெற்றேன். நான் மே 25ல் பம்பாய்க்கு வரும்வரை, தங்களது கடிதம் குறித்து எனக்குத் தெரியாதாகையால் முன்னரே பதில் எழுத இயலவில்லை.

தங்கள் இயக்க அறிக்கையைப் படித்துப் பார்த்தேன்; அதில் நான் கையொப்பமிட இயலாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்திய அரசின் எல்லைக் கொள்கை குறித்து அதில் கண்டனம் தெரிவித்துள்ளீர்கள். அது இந்தியர்களின் குடியுரிமைகளுடன் எவ்வாறு தொடர்புடையது என்று என்னால் காண முடியவில்லை. மாறாக இந்தியர்களின் குடியுரிமை விவகாரங்களில் முக்கியமானதும் மேல்சாதி இந்துக்களால் காலங்காலமாய்த் திட்டமிட்டு நடத்தப்பட்டு வரும் கொடூர ஒடுக்கு முறையான தீண்டாமை குறித்து அதில் ஏதும் கூறப்படவில்லை.

தங்கள் உண்மையுள்ள,
பி.ஆர். அம்பேத்கர்

1. நீதியரசர் வி.ஆர். கிருஷ்ணையர், தொடக்கவுரைகள், பகுதி VII.

## 16

# வேறெந்த நாட்டிலும் இத்தகைய அமைச்சர் பதவியிலிருந்து நீக்கப்பட்டிருப்பார்

*ஆசிரியர்,*
*டைம்ஸ் ஆப் இந்தியா, அவர்களுக்கு*

*ஐயா,*

*சூதாடிகள் இருவருக்கு உயர்நீதிமன்றம் விதித்த தண்டனைக்கு பம்பாய் மாநில உள்துறை அமைச்சர் விலக்களித்த செய்தியைத் தொடர்ந்து, மத்திய மாநிலத்தில், பதினான்கு வயதுச் சிறுமியொருத்தியைக் கற்பழித்த குற்றத்திற்காக, ஜாபர் ஹாசன் என்பவருக்கு நீதியியல் ஆணையாளர்கள் நீதி மன்றம் விதித்திருந்த மூன்றாண்டுக் கடுங்காவல் தண்டனையை, மத்திய மாநில உள்துறை அமைச்சர் நீக்கி ஆணையிட்டுள்ளார் எனும் செய்தியும் வெளிவந்துள்ளது. தண்டனை வழங்கப்பட்டது 1936இல்; குற்றவாளி ஓராண்டு தண்டனைதான் அனுபவித்துள்ளான்; ஆக அவனுக்கு தண்டனைக் காலத்தில் இரண்டு ஆண்டுகள் குறைக்கப்பட்டுள்ளன.*

*மத்திய மாநில காங்கிரஸ் அமைச்சரின் இந்தச் செயல் வேறு எங்கும் காணவியலாத மிக வெட்கங்கெட்ட செயல் என்று கருதுகிறேன். காங்கிரசைக் கண்மூடித்தனமாய் ஆதரித்து வரும் இந்துப் பொதுமக்கள் இச்செயலைக் குறித்து என்ன கருதுகிறார்கள்?*

*காங்கிரஸ் கட்சி ஒன்றின் மீதுதான் இந்துக்கள் முழுமையான நம்பிக்கையைக் கண்மூடித் தனமாய் வைத்திருக்கிறார்கள் என்பதுடன், மகாத்மா காந்தி ஒருவரைத் தவிர வேறு எவராலும் தங்களுக்கு விடுதலை கிட்டாது என்றும் திடமான நம்பிக்கை வைத்துள்ளார்களாதலால், இது மேல்சாதி இந்துக்களின் விவகாரமாக இருந்திருக்குமெனில்-நான் தங்களுக்குக் கடிதமெழுதித் தொல்லை தந்திருக்கமாட்டேன். மேல்சாதி இந்துப் பெண் கற்பழிக்கப்பட்டிருந்தால் அது குறைவான குற்றமென்று பொருளன்று. ஆனால் இந்துக்கள் தமது முழுமையான நம்பிக்கையையும் அந்தவொரு கட்சியின் மீதுதான் வைத்துள்ளார்கள்; அக்கட்சியை முழுமையாய் நம்புவதால்*

அவர்களது செயல்பாடுகளின் நன்மை தீமைகளைச் சீர்தூக்கிப் பார்க்க மறுக்கிறார்கள். எனவே அவர்கள் ஏதேனும் பாதிப்புக்குள் ளாவார்கள் என்றால் அது அவர்களது தவறு காரணமாகத்தான் இருக்க முடியும். ஆனால் பாதிக்கப்பட்ட பெண் ஒடுக்கப்பட்ட வகுப்பான சண்டாளர் சாதியைச் சேர்ந்தவள். எனவேதான் இதில் நான் ஆழ்ந்த அக்கறை காட்டுகிறேன். நாங்கள் சிறுபான்மையினர் ஆதலால் குறை கூறத்தான் இயலும்; நிலையைக் கட்டுப்படுத்தாலம் என ஒருபோதும் நம்பிக்கை கொள்ள இயலாதவர்கள்.

மத்திய மாநில உள்துறை அமைச்சரின் இந்த அடாத செயலை இந்துப் பொது மக்கள் அமைதியாய்ப் பொறுத்துக் கொள்கிறார்கள் என்றால், தமக்கு நியாயமும் நீதியும் கிடைக்குமென ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் எவ்வாறு நம்பிக்கை கொள்ள முடியும்? இச்செயலைப் பிரதமர் ஏற்றுக் கொண்டுள்ளார்; மகாத்மாவோ கண்டுங்காணாது விட்டுவிட்டார். ஆனால் வேறெந்த நாட்டிலேனும் இவ்வாறு நிகழ்ந்திருந்தால், அத்தகைய அமைச்சர் உடனடியாய் நீக்கப்பட் டிருப்பார் என்று உறுதியாய்க் கூறுவேன். ஆனால் இந்தியாவில் இதை எதிர்பார்க்க கூடாதா? அமைச்சரின் கண்டனத்திற்குரிய செயலை எப்படி மகாத்மாவும், பிரதமரும் நியாயப்படுத்துவர் என்று ஒடுக்கப்பட்ட மக்களுக்கு விளக்கமளிக்கக் கடமைப்பட்டுள்ளனர்.[1]

பி.ஆர். அம்பேத்கர்

1. டைம்ஸ் ஆப் இந்தியா, மார்ச்சு 19, 1938.

# 17

# தற்போது செயலற்றிருக்கும் சமதருமவாதிகள்

டாக்டர் அம்பேத்கர் 1938, மே 21 இல் பம்பாய் வந்தடைந்த போது அளித்த நேர்காணலின்போது, தமது கட்சிக்குப் பொது மக்களிடையே ஆதரவு பெருகி வருதல் குறித்தும், அவர்களது அடிமைத் தளையை விடுவிக்கும் தமது முயற்சிகளைப் பாராட்டி நன்றி காட்டுதல் குறித்தும் தமது மனநிறைவைத் தெரிவித்தார்.

அவரது சுதந்திரத் தொழிலாளர் கட்சி, தனது தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றத் தனக்குரிய வழியிலேயே பாடுபட்டு வருவதாகவும், ஆனால் காங்கிரஸ் அமைச்சரவையோ, அரசியலமைப்புச் சட்டத்தின் பாதையில் நிவாரணம் வழங்க மறுத்து வருவதாகவும், மக்களின் நம்பிக்கையை இழந்து வருவோரின் ஒரே வழி இதுதான் என்றும் கூறினார். ஆனால் ஜமீன்தாரி நிலங்களைப் பறிமுதல் செய்வோம் என்றும், முதலாளித்துவ முறையை ஒழிப் போம் என்றும் இது வரை கூவிவந்த சமதருமவாதிகளின் போக்கு தமக்கு வியப்பளிப்பதாய்க் கூறினார். கோட்டி முறையை ஒழிப்பதற் கான சட்ட வரைவு கொண்டுவரப்பட்டுள்ள இந்நாளில் அவர்கள் செயலற்றுக் காணப்படுகின்றனர்.[1]

1. கீர், பக். 310.

# 18

# இத்தகு நிறுவனங்கள் பெரும் நூலகங்களாய் வளரட்டும்

*(மராட்டிய மாநிலம்) துலியாவில், இராஜ்வதே சன் சூதான் மண்டல் நிறுவனத்தின் பார்வையாளர் குறிப்பேட்டில் 1938 ஜூன் 18இல் டாக்டர் அம்பேத்கர் எழுதிய குறிப்புரை - ஆசிரியர்கள் :*

*ஐரோப்பிய, அமெரிக்க நூலகங்களில் ஆறேழு ஆண்டுகள் கழித்தவன் என்ற முறையில் இராஜ்வதே சன்சூதான் மண்டல் தொகுத்துள்ள கையெழுத்துப் படிகள், ஓவியங்கள் ஆகியவற்றைக் காண்பதில் நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். ஐரோப்பிய நூலகங் களுடன் ஒப்பிடும்போது இது மிகச் சிறிய இடம்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதனை நிறுவியவர்கள் அதற்குப் பொறுப் பாளிகளல்லர். புதிய அரசு இதன்பால் போதிய அக்கறை காட்டி இது பெரிய நூலகமாய் வளர்ச்சியடைய உதவும் என்று நம்புவோ மாக. இந்நிறுவனம் வெற்றிகளை ஈட்ட என் வாழ்த்துக்கள்.*

*18.6.1938.* ஒப்பம் - **பி.ஆர்.அம்பேத்கர்**

19

# வட்டிக்கடன் தொழிலைக் கட்டுப்படுத்துவதற்கும் நெறிப்படுத்துவதற்குமான சட்ட வரைவு

வரைவாளர்

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**

எம்.ஏ., பி.எச்.டி.,டி.எஸ்சி., பார் அட்லா

**சுதந்திரத் தொழிலாளர் கட்சி வெளியீடு**

**எண். 2**

*1938* விலை : *1 அணா*

# வட்டிக் கடன் தொழில்.... சட்ட வரைவு

## 1938 ஆம் ஆண்டின் சட்ட வரைவு எண்....

## கடன் வட்டித் தொழிலைக் கட்டுப்படுத்துவதற்கும் நெறிப்படுத்துதற்குமான சட்டவரைவு

### பொருளடக்கம்

#### அதிகாரம் I

#### பாயிரம்



#### அதிகாரம் II

#### வட்டித் தொழிலுக்கு உரிமம் நிறுவுதல்



---

கடன் வட்டித் தொழில் குறித்த சட்ட வரைவின் வாசகம் இது; வரைவு 1938 இல் தயாரிக்கப்பட்டது - ஆசிரியர்கள்

பகுதி 15 உரிமக் கட்டணம்
பகுதி 16 உரிம விதிகள் மீறலுக்கான தண்டனை

## அதிகாரம் III
## உரிம விலக்கலும் மீட்பளித்தலும்

பகுதி 17 உரிம விலக்கல் முதலியன - உரிமம் பெற்றோர் தண்டனையுறல்
பகுதி 18 விலக்கலுக்கெதிரான முறையீடும் உரிமம் மீட்பளித்தலும்
பகுதி 19 நீதிமன்ற ஆணைப்படி உரிமம் காட்டுதல்

## அதிகாரம் IV
## தொழில் நடத்தும் முறை

பகுதி 20 கடன் வட்டி குறித்து விளம்பரத்திற்குத் தடை
பகுதி 21 முகவர்கள் பணியமர்த்தத் தடை
பகுதி 22 பகுதி 20, 21களை மீறுதலுக்கான தண்டனை
பகுதி 23 செலவுகள் கட்டணங்களைக் கடனாளிகள் மீது சுமத்தும் ஒப்பந்தம் செல்லாது.

## அதிகாரம் V
## கடன்காரரின் கடமைகள்

பகுதி 24 கொடுக்கல் வாங்கல்கள் எழுத்தில் பதியப்படுதல்
பகுதி 25 நினைவூட்டுகளின் நகல்கள் கடனாளிக்கு வழங்கப் படுதல்
பகுதி 26 பகுதி 24, 25 களை மீறிய கொடுக்கல் வாங்கல்கள் செல்லுபடியாகா.
பகுதி 27 கூட்டுவட்டி செலுத்துவதற்கான ஒப்பந்தம் செல்லுபடி யாகாது.

## அதிகாரம் VI
## கணக்குகளின் வைப்புமுறை

பகுதி 28 கடன்காரர் கடனாளிக்கு இருப்புக் குறிப்பேடு வழங்குதல்
பகுதி 29. கடன்காரர் கடனாளிக்கு ஆண்டுதோறும் கணக்கு அறிக்கை வழங்குதல்
பகுதி 30 நிலுவையின் போது வழக்கு தொடுக்கக் கடன்காரருக்கு உரிமையின்மை

பகுதி 31 நிலுவையானதற்கான தண்டனை
பகுதி 32 அரசிடமிருந்து பெறும் குறிப்பேடுகளிலேயே கணக்குகள் பதிவு செய்யப்பட வேண்டும்.
பகுதி 33 ஒப்பிசைவு ஆண்டில் கணக்கு ஏடுகள் காட்டுதல்
பகுதி 34 பகுதிகள் 32, 33 க்குப் புறம்பான ஏடுகளின் பதிவுகள் சான்றாக ஏற்கப்படாமை

## அதிகாரம் VII

### வழக்குகளும், தொடர்தலும்

பகுதி 35 சிறு காரண வழக்கு மன்றங்களின் வரம்பு விலக்கம்.
பகுதி 36 வழக்குப் படிமத்தில் தரப்படவேண்டிய உரிம விவரங்கள்.
பகுதி 37 கடன்காரருக்குத் தரப்படும் வினவல்கள்.
பகுதி 38 சில கொடுக்கல் வாங்கல்களை மீட்டு நோக்க நீதிமன்றத்திற்கு அதிகாரம்
பகுதி 39 மீட்டு நோக்கப்படுதற்காக கொடுக்கல் வாங்கல்கள்
பகுதி 40 அதிக வட்டி வீதம் எதுவெனல்.
பகுதி 41 கணக்கெடுப்பு முறை
பகுதி 42 அடமானக் கடன் : பகுதிகளாய்ச் செலுத்த ஆணையிடும் அதிகாரம்
பகுதி 43 அடமானக் கடன் தொகையை நேரடியாய் பகுதிகளாய்ச் செலுத்த ஆணையிடப்படலாம்
பகுதி 44 கடனாளியின் சொத்து மதிப்பை நீதிமன்றம் தீர்மானிக்கலாம்.
பகுதி 45 கடனாளியின் சொத்தில் தேவையான அளவுப் பகுதி மட்டுமே விற்கப்படலாம்.
பகுதி 46 வட்டிக் கடன் சட்டங்கள் கீழ் நீதிமன்ற அதிகாரம் இருத்தப்பெறல்
பகுதி 47 மாநிலத்திற்கு வெளியே செலுத்துதற்கான ஒப்பந்தம் செல்லுபடியாகாமை
பகுதி 48 வட்டி பாக்கி செலுத்தும் ஒப்பந்தம் செல்லுபடியாகாமை

## அதிகாரம் VIII

### குற்றங்கள் சம்பந்தமாக வழக்கு தொடரல்

பகுதி 49 எல்லாக் குற்றங்களும் தண்டனைக்குரியன
பகுதி 50 தண்டனை/விடுதலை குறித்த முறையீடுகள்

## அதிகாரம் IX
### துணைப்பகுதி

பகுதி 51 விதிகளை மாற்றுதற்கான அதிகாரம்

**1938 ஆம் ஆண்டின் சட்ட வரைவு எண்....**

# கடன் வட்டித் தொழிலைக் கட்டுப்படுத்துவதற்கும் நெறிப்படுத்துதற்குமானதோர் சட்ட வரைவு

கடன் வட்டித் தொழில் நடத்துவோருக்கான கடமைகளையும் கடப்பாடுகளையும வரையறுத்துக் கடன் வட்டித் தொழிலைக் கட்டுப் படுத்தி நெறிப்படுத்தலின் தேவை உணரப்பட்டதன் விளைவாய்க் கீழ்க்கண்டவாறு சட்டம் இயற்றப்படுகிறது :-

## அதிகாரம் I
பாயிரம்

**குறுந்தலைப்பு, விரிவும் தொடக்கமும்**

1. (1) இச்சட்டம், 1938 ஆம் ஆண்டின் பம்பாய் மாகாண கடன்காரர்கள் சட்டம் என்று அழைக்கப்படும்.

(2) இச்சட்டம் பம்பாய் மாகாணம் முழுவதிலும் செல்லும். இச்சட்டம் நிறைவேற்றப்பட்ட பின் ஓராண்டு காலத்திற்குள் பம்பாய் மாகாண அரசிதழில் முறையாக அறிவிக்கை கொடுப்பதன் வாயிலாய் நடைமுறைக்கு வரும்.

**வரையறைகள்:**

2. பொருளுக்கோ இடத்துக்கோ ஒவ்வாதவாறு இருந்தாலன்றி இச்சட்டத்தில் இடம்பெறும் சொற்களின் வரையரையாவது-

(i) 'அனுமதிக்கப்பட்ட பெயர்', 'அனுமதிக்கப்பட்ட முகவரி' என்பது ஒரு கடன்காரர் எந்தப் பெயரிலும் எந்த முகவரியிலும் இச்சட்டத்தின் கீழ் கடன் வட்டித்தொழில் நடத்த அவருக்கு வழங்கப்படும் உரிமத்தில் அனுமதிக்கப்படுகிறாரோ அந்தப் பெயரையும், முகவரிமையும் குறிக்கும்.

(ii) கடன் வட்டித்தொழில் எந்தப் பெயரின் கீழ் எந்த முறை

யில் - கூட்டுத்தொழிலாகவோ, பிற வகையாகவோ நடத்தப்படுகிறதோ அந்தப் பெயரே ''தொழிலின் பெயர்'' எனப்படும்.

(ii) எந்தவொரு நபர் மீது கடன்காரர் ஒருவர் கடன் கொடுத்திருப்பதாய் உரிமை கோர இயலுமோ அந்த நபர் ''கடனாளி'' எனப்படுவார்.

(iv) கடன்காரர் ஒருவருக்கு அவர் கொடுத்த கடன் தொகைக்கு மேல் கூடுதலாகச் செலுத்தப்படுவதற்குரிய தொகை, அது பணமாகவோ, பொருளாகவோ, பணியாகவோ, எவ்வடிவில் இருப்பினும், அத்தொகையே ''வட்டி'' எனப்படும்.

(v) ''கடன்'' என்பது பணமாகவோ பொருளாகவோ, வட்டியுடன் திருப்பித் தருவதாய் ஒப்புக் கொள்பவருக்குக் கொடுக்கப்படும் முன் பணமாகும். கடந்த காலக் கொடுக்கல் வாங்கல்களின் விளைவாய் மீதி செலுத்தப்பட வேண்டிய தொகையும் இதில் அடங்கும்.

(vi) ''கடன்காரர்'' என்ற வரையரையில், விளம்பரத்தின் மூலமோ, தன்னறிவிப்பு மூலமோ அன்றிப் பிற வாயிலாகப் புலப்படுவதன் மூலமோ, கடன் வட்டித் தொழில் நடத்துபவர்கள் அனைவரும் அடங்குவர். இதில் அடகு வட்டிக் கடைக்காரர்களும் அடங்குவர். ஆனால் இவ் வரையறைக்குக் கீழ்வரும் விலக்குகள் உண்டு :-

(அ) 1912 ஆம் ஆண்டின் கூட்டுறவுக்கழகங்கள் சட்டத்தின் கீழும், 1912 ம் ஆண்டின் வருங்கால வைப்புக் காப்பீட்டுக் கழகங்கள் சட்டத்தின் கீழும் பதிவு செய்யப்பட்ட கழகங்கள்.

(ஆ) சிறப்புச் சட்டங்களின் கீழ் கடன் வழங்குவதற்காக நிறுவப்படும் கூட்டமைப்பு நிறுவனங்கள்.

(இ) அரசு அல்லது அரசின் சார்பில் கடன் வழங்க அனுமதிக்கப்பட்ட நபர்

(ஈ) தமது தொழிலின் நிமித்தமாகவோ, அல்லது தொழில் நடைமுறைவாயிலாகவோ உரித்தான முறையில் கடன் வழங்கும் நபர். இவ்வரையரையில் அடங்கும் தொழில்களாவன :

(i) வங்கி அல்லது காப்பீட்டுத் தொழில்

(ii) கடன் வழங்கலை முதன்மையான நோக்கமாகக் கொள்ளாத பிற தொழில்கள் அனைத்தும்.

(vii) 'தொகை செலுத்தல்'' ''தொகை திருப்பிச் செலுத்தல்'' என்பன பணமாகவோ, பண்டமாகவோ, பணியாகவோ செலுத்தப்படும், அல்லது திருப்பிச் செலுத்தப்படும் தொகைகள் அனைத்தையும் குறிக்கும்.

(viii) ''நபர்'' என்ற வரையறையில் 'நிறுவனம்' 'கூட்டு நிறுவனம்' ஆகியவையும் அடங்கும்.

விளக்கம் I : கடன்காரர்களின் கடமைகள் கடப்பாடுகளின் நோக்கில் ஒரு நிறுவனம் என்பதில் அதன் மேலாண்மை முகவர்களும் மேலாண்மை இயக்குநரும் அடங்குவர். ஒரு கூட்டு நிறுவனமாயின் நிறுவனத்தின் பங்குதாரர்கள் அனைவரும் அடங்குவர்.

விளக்கம் II : கடன் தொழில் நிறுவனம் ஒன்றின் மீது வயது வராத சிறுவருக்கோ, ஒப்பந்தம் ஏதும் செய்துகொள்ளத் தகுதியில்லாத நபர் ஒருவருக்கோ உரிமை ஏதும் இருக்குமெனில், 'நபர்' என்பது தொழிலின் மீது மேலாண்மைப் பொறுப்புள்ள நபரையே குறிக்கும்.

(ix) ''வரையறுக்கப்பட்ட'' என்பது இச்சட்ட விதிகளின்கீழ் வரையறுக்கப்பட்ட என்றே பொருள்படும்.

(x) 'முதல்' என்பது கடனாளிக்கு மெய்யாகவே முன் பணமாகவோ, கடனாகவோ தரப்படும் தொகையை குறிப்பிடும்.

(xi) ''அடையப்பட்ட கடன்'' என்பது கடன்காரர் ஒருவருக்கு அடமானத்திற்காகவோ, கட்டணமாகவோ, குத்தகையாகவோ கடனாளியொருவர் செலுத்த வேண்டிய தொகையையோ அதன் பகுதியையோ குறிக்கும்.

(xii) 'அடையப்படாத கடன்' என்பதில் அடையப்பட்ட கடன் தவிர ஏனைய கடன்கள் யாவும் அடங்கும்.

**இச்சட்ட விதிமுறைகள், பிறசட்டங்கள், மரபுகள், ஒப்பந்தங்களால் பாதிக்கப்படாமை.**

3. பிற சட்டங்களில் கூறப்பட்டிருப்பதெவ்வாறாயிருப்பினும், மரபுகளிலோ நடைமுறைகளிலோ, ஒப்பந்தங்களிலோ மாறாக எவ்வாறு கூறப்பட்டிருப்பினும் அவற்றுக்கும் எதிராக இச்சட்ட விதிகள் செல்லுபடியாகும்.

## அதிகாரம் II

கடன்காரர்களுக்கு உரிமம் வழங்குதல்

எந்தவொரு நபரும், அவர் தொழில் நடத்தவிருக்கும் முகவரிகள் ஒவ்வொன்றுக்கும் ஆண்டுதோறும் 'கடன்காரர் உரிமம்' பெற்றிருந்தால் அன்றி (உரிமம் பெற்றிருப்பவர் 'உரிமதாரர்' என அழைக்கப்படுவார்), தனியாகவோ, அன்றிப் பிறவேறு வழியாகவோ, தனக்காகவோ அன்றிப் பிறருக்காகவோ, தனக்கும் பிறருக்குமாகவோ கடன் வட்டித் தொழில் நடத்தலாகாது.

உரிமம் எவர் பெயரில் வாங்கப்படுகிறதென்பது

5. கடன் வழங்குவோர் ஒருவர் தமது பெயரில்தான் ''கடன் வழங்குவோர் உரிமம்'' வாங்க வேண்டும். வேறு எவர் பெயரிலாவது வாங்கப்படும் உரிமங்கள் செல்லுபடியாகா.

மேலும் நபர் ஒருவர் தமது பெயரில் அல்லாமல், ''தொழிலின் பெயர்'' ஒன்றின் பெயரில் கடன் வட்டித் தொழில் நடத்தி வருவார் எனில், தொழிலின் பெயரில் உரிமம் வாங்க அவர் தொழில் நடப்படும் பெயரையும் முகவரியையும் தெரிவித்தே உரிமம் வாங்க வேண்டும். மேலும், வயது வராத சிறுவன் ஒருவனின் சார்பில் அல்லது ஒப்பந்தம் எதையும் செய்துகொள்ளத் தகுதியில்லாத நபர் ஒருவரின் சார்பில் கடன்வட்டித் தொழில் ஒரு நிறுவனத்தாலோ, கூட்டு நிறுவனத்தாலோ நடத்தப்படுவதாயின், நிறுவனத்தின் பெயரில் அல்லது கூட்டு நிறுவனத்தின் பெயரில்தான் உரிமம் வாங்கப்பட வேண்டும்.

**உரிமத்தில் குறிப்பிடப்பட வேண்டிய விவரங்கள்**

6. (1) கூட்டு நிறுவனம் ஒன்றின் பெயரில் வாங்கப்படும் உரிமத்தில் நிறுவனப் பங்குதாரர்கள் அனைவரின் பெயரும் இடம் பெற வேண்டும். நிறுவனம் ஒன்றின் பெயரில் வாங்கப்படும் உரிமத்தில் மேலாண்மை முகவர்கள், மேலாண்மை இயக்குநர்கள் அனைவரின் பெயர்களும் இடம் பெற்றிருக்க வேண்டும். சிறுவர் அல்லது ஒப்பந்தத்தில் ஈடுபடத் தகுதியில்லாத நபர் ஒருவரின் சார்பில் கடன் வட்டித் தொழில் நடைபெறுவதாயிருப்பின், தொழில் நடத்தப் பொறுப்பாளராய் நியமிக்கப்படும் நபரின் பெயர் உரிமத்தில் இடம் பெற வேண்டும்.

(2) உரிமம் பெற்ற தொழில் நடத்தப்படவிருக்கும் இடத்தின் அனுமதிக்கப்பட்ட முகவரியும் உரிமத்தில் இடம்பெற்றிருக்க வேண்டும்.

உரிமதாரருக்குச் சான்றிதழின் தேவை

7. (1) எந்தவொரு நபரும் (இச்சட்டத்தில் குறிப்பிட்டுள்ளவாறு) சான்றிதழ் பெற்றிருந்தால் அன்றி உரிமத்துக்குரியவராய்க் கருதப்படமாட்டார்; மேலும் இச்சட்ட விதிகளின் படிச் சான்றிதழ் பெற்றிராத எவருக்கும் உரிமம் வழங்கப்பட மாட்டாது.

(2) ஒவ்வொரு உரிமத்திற்கும் தனித்தனியே சான்றிதழ் கோரப்படும்.

**சான்றிதழ் குறிப்பிடப்பட வேண்டிய விவரங்கள்**

8. ஒரு நபருக்கு வழங்கப்படும் சான்றிதழ் ஒவ்வொன்றிலும், அவரது உண்மையான பெயரும் அவர் வட்டித் தொழில் நடத்தக் கருதியிருக்கும் இடத்தின் முகவரியும் இடம் பெறுவதுடன், அவர் தனக்காகவே இத்தொழிலை நடத்தவுள்ளாரா அல்லது தனக்கும் மற்றொருவருக்குமாகவா அல்லது ஒரு நிறுவனத்திற்காகவோ அல்லது ஒரு கூட்டு நிறுவனத்திற்காகவா எனும் விவரங்கள் இடம் பெற வேண்டும்.

**சான்றிதழ் வழங்கும் தகுதியதிகாரம் படைத்தவர்**

(1) கடன் வட்டித் தொழில் நடைபெறவுள்ள இடத்தின் மீது அதிகா வரம்பு கொண்ட நீதிபதியொருவரோ, இதற்கென அரசினால் தனி அதிகாரம் வழங்கப் பெற்றுள்ள அலுவலர் ஒருவரோ, குறிப்பிட்ட படிவத்தில் விண்ணப்பிக்கும் நபர்களுக்குத் தகுதிச் சான்றிதழ் வழங்கலாம்.

(2) ஒரு நபரிடமிருந்து விண்ணப்பத்தைப் பெற்றுக் கொள்ளும் அலுவலர், தமது அலுவலகத்தில் எல்லோரும் பார்க்கக்கூடிய இடத்திலுள்ள அறிக்கைப் பலகையில் விண்ணப்பத்தின் பிரதி ஒன்றைக் காட்சிக்கு வைத்து அதன் பின் 15 நாட்களுக்கு வேறு செயல்பாடு ஏதும் அது குறித்துத் தொடங்காமல் காத்திருக்க வேண்டும்.

(3) குறிப்பிட்ட நபர் ஒருவருக்கு சான்றிதழ் வழங்குவதை எதிர்த்து எவர் வேண்டுமானாலும் மனு கொடுக்கலாம். அவ்வாறு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டால், பொறுப்புள்ள அலுவலர் விசாரணை நடத்திய பின்னரே சான்றிதழ் தரவோ, மறுக்கவோ செய்யலாம்.

(4) எதிர்ப்பு ஏதும் இல்லாவிட்டாலும் கூட விண்ணப்பத்தை தள்ளுபடி செய்ய அலுவலருக்குள்ள அதிகாரத்தை இப் பிரிவில் கூறப்பட்டுள்ள விதிமுறைகள் எவையும் பாதிக்கமாட்டா.

**சான்றிதழ் மறுக்கப்படுவதற்குரிய காரணங்கள்**

10. கீழே குறிப்பிடப்படும் காரணங்களில் ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்டோ காரணங்கள் இருந்தாலன்றி எவருக்கும் சான்றிதழ் மறுக்கப்படலாகாது.

(i) விண்ணப்பதாரர் நல்ல நடத்தையுள்ளவர் என்பதற்குப் போதிய சான்று தரப்படாமை.

(ii) கடன் வட்டித் தொழிலை நடத்தக் கருதியிருக்கும் நபரோ, நடத்தப்படவிருக்கும் தொழிலின் மேலாண்மைப் பொறுப்பை ஏற்கவிருக்கும் நபரோ, ஆதற்குப் பொருத்தமோ தகுதியோ அற்றவர் என்பதற்குப் போதிய சான்று தரப்படுதல்.

(iii) விண்ணப்பதாரரோ, தொழிலை நடத்தவிருக்கும் நபரோ, தொழில் மேலாண்மைக்குப் பொறுப்பு ஏற்கவிருக்கும் நபரோ உரிமம் பெறுதற்குத் தகுதியிழந்தவர் என நீதிமன்ற ஆணை பிறப்பிக்கப்பட்டிருத்தல்.

(iv) விண்ணப்பதாரர், இச்சட்டத்தின் விதிமுறைகளுக்குப் புறம்பாக விண்ணப்பம் செய்திருத்தல்.

**சான்றிதழ் மறுப்பதற்கான காரணங்களைப் பதிவு செய்தல்**

11. சான்றிதழ் வழங்கவோ மறுக்கவோ அதிகாரம் பெற்றுள்ள அலுவலர், ஒரு நபருக்குச் சான்றிதழ் வழங்க மறுக்கும் போது, அதற்கான காரணங்களை எழுத்து வடிவில் பதிவு செய்ய வேண்டும்.

**சான்றிதழ் மறுப்புக்கு எதிரான முறையீடு**

12. சான்றிதழ் மறுப்பினால் பாதிக்கப்படும் நபர் எவரும், அதற்கு எதிராக அமர்வு நீதிபதியிடம் மேல் முறையீடு செய்யலாம்; மேல்முறையீடு குறித்த அமர்வு நீதிபதியின் முடிவே இறுதியானது.

**உரிமம் வழங்கத் தகுதியுள்ள அலுவலர்**

உரிமம் வழங்குவதற்கென அரசால் அனுமதிக்கப்படும் அலுவலர் எவரும், இச்சட்ட விதிகளுக்குட்பட்டு முறையான படிவத்தில், விதிக்கப்பட்டுள்ள கட்டணத் தொகையுடனும் உரிய சான்றிதமுடனும் விண்ணப்பம் செய்வோருக்கு உரிமம் வழங்கலாம்.

**உரிமத்தின் கால வரம்பு**

14. எந்தவொரு உரிமமும் நடப்பு ஆண்டு டிசம்பர் 31 ஆம் தேதியில் செல்லுபடியிழக்கும்

**உரிமக் கட்டணம்**

15. கடன்காரர் உரிமம் ஒவ்வொன்றுக்கும் கட்டணம் ரூ.50/- ஆகும். உரிமத்தின் செல்லுபடிக் காலம் முடிவதற்கு ஆறு மாத காலத்திற்கு முன்பாகவே விண்ணப்பிக்கப்பட்டால் உரிமம் தொடர் வதற்கான கட்டணம் ரூ. 30/- ஆகும்.

**உரிமம் குறித்த சட்ட விதிகளை மீறலுக்கான தண்டனை**

16. எவரொருவரேனும்,

(அ) தமது பெயரிலன்றிப் பிறிதொருவர் பெயரில் உரிமம் வாங்கித் தொழில் நடத்தினாலோ,

(ஆ) கடன் வட்டித் தொழில் நடத்த அனுமதிக்கும் முறையான உரிமம் இன்றி அத்தொழிலை நடத்தினாலோ,

(இ) கடன் வட்டித்தொழில் செய்வதற்குரிய உரிமம் பெற்றிருந்தாலும், உரிமத்தில் உள்ள பெயரில் அல்லாது பிறிதொரு பெயரில் தொழில் நடத்தினாலோ, அல்லது உரிமத்திலுள்ள முகவரியின்றிப் பிறிதோர் இடத்தில் தொழில் நடத்தினாலோ,

(ஈ) கடன்காரர் ஒருவர், தமது தொழில் நிமித்தமாக, கடன் அசல் தொகை குறித்தோ, திரும்ப அடைக்கும் தொகை குறித்தோ, கடனுக்காகப் பெறப்படும் அடமானப் பொருள் குறித்தோ, தமது பெயரில் அல்லது தமது தொழிலின் பெயரில் அல்லாமல் பிறிதொருவர் பெயரில் ஒப்பந்தம் ஏதும் செய்து கொண்டாலோ,

அவருக்கு ரூ.100/-க்குக் குறையாத தொகை தண்டனையாக விதிக்கப்படும்.

மேலும் அத்தகைய நபர் இக்குற்றங்களுக்காக இரண்டாம் முறையோ அதற்கதிகமோ தண்டனைக்குரியவராவாரேல், இச் சட்டத்தின்கீழ், நீதிமன்றம் அவருக்கு மூன்று மாதங்களுக்கு மிகாமல், ஏதாவது ஒருவகைச் சிறைதண்டனை விதிக்கலாம்.

## அதிகாரம் III

உரிமம் நிறுத்தி வைத்தலும், மீட்டளித்தலும்

**குற்றம் மெய்ப்பிக்கப்படல் உரிமம் நிறுத்தி வைத்தல் முதலியன**

17. உரிமம் வைத்திருக்கும் நபர் ஒருவர், இச்சட்டத்தின் கீழான குற்றங்கள் எவற்றுக்காகவேனும் தண்டனைக்கு உரியவராவார் எனில், அபபோது நீதிமன்றம்

(i) (அ) அவருடைய உரிமத்தைக் குறிப்பிட்ட காலத்திற்கோ, நீதிமன்றம் அதை மீட்டளிக்கும் வரையிலோ நிறத்தி வைக்க ஆணையிடலாம்.

(ii) அத்தகைய நபர் மீண்டும் நீதிமன்றம் அனுமதிக்கும் வரை வேறெந்த உரிமமும் பெறுவதற்குத் தகுதியிழந்தவராவென்று ஆணையிடலாம்.

(iii) தண்டிக்கப்படும் நபருக்கு பிரிவு (i)ன்படி விதிக்கப்படும் ஆணையை அவரது பிற உரிமங்களில் பதிவு செய்யவும், இதனால் பாதிக்கப்படும் பிறநபர்களுக்கு அறிவிக்கவும் ஆணையிடலாம்.

(iv) தண்டனை ஆணையின் படிகளை அந்நபருக்குச் சான்றிதழ் வழங்கிய அலுவலர்களுக்கும் உரிமம் வழங்கிய அலுவலர்களுக்கும் அனுப்ப ஆணையிடலாம்.

**உரிமம் நிறுத்திவைத்தலுக்கெதிரான முறையீடும் உரிமம் மீட்டளித்தலும்**

18. உரிமதாரின் உரிமம் நீதிமன்றத்தால் நிறுத்தி வைக்கப்பட்டாலோ, உரிம மீட்டளிப்பு செய்தாலோ, எவரேனும் உரிமம் பெறுவதற்கான தகுதியிழந்தவராய் அறிவிக்கப்பட்டாலோ, பாதிக்கப்பட்ட நபர் மேல் முறையீட்டு நீதிமன்றம், தக்கதெனக் கருதினால், மேல்முறையீட்டு நிலுவையிலிருக்கையில் கீழ்நீதிமன்ற ஆணையின் நிறைவேற்றத்தை நிறுத்தி வைக்க ஆணையிடலாம்.

**நீதிமன்றம் ஆணையிட்டால் உரிமம் கொணரப்பட வேண்டும்**

19. (1) இச்சட்டத்தின் முந்தைய விதிமுறைகளின்படி, நீதிமன்ற ஆணை பதிவுசெய்யப்படுவதற்காக உரிமம் கொணரப்பட வேண்டுமென்று நீதிமன்றம் ஆணையிட்டால்,

உரிமதாரர் நீதிமன்ற ஆணை குறிப்பிடும் விதத்தில், குறிப்பிடும் காலவரையறைக்குள் தமது உரிமத்தைக் கொணர வேண்டும்.

(2) இவ்வாறான நீதிமன்ற ஆணையின்படிக் கொணருமாறு பணிக்கப்பட்ட உரிமத்தைத் தகுந்த காரணமின்றிக் கொணரத் தவறும் நபர் எவராயினும், அவர் தாமதிக்கும் காலத்திற்கு நாளொன்றுக்கு ரூபாய் 5க்கு மிகாமல் அபராதம் விதிக்கப்படுவதற்குரியவராவர்.

## அதிகாரம் IV

### தொழில் நடத்தும் முறை

**கடன் வட்டித் தொழில் பற்றி விளம்பரங்கள், சுற்றறிக்கைகளுக்குத் தடை**

20. (1) வட்டிக் கடன் தொழில் நடத்தும் ஒருவர்,

(அ) கடன் வாங்க அழைப்பு விடுக்கும் போக்கிலோ

(ஆ) அல்லது அவர் வட்டித் தொழில் நடத்துவதை உணர்த்தும் விளம்பரமோ, சுற்றறிக்கையோ, வணிகக் கடிதமோ ஏதும் வெளியிடுதலோ, தமக்காகப் பிறரை வெளியிடச் செய்தலோ கூடாது.

(2) இப்பிரிவின் துணை விதி (1) க்கு மாறாக எந்தவொரு கடன் வழங்குவோரும் செயல்படுவாரெனில், அவரது குற்றம் மெய்ப்பிக்கப்படின் ஒவ்வொரு மீறலுக்கும் ரூ. 100/-க்கு மிகாமல் அபராதம் விதிக்கப்படுவதற்குரியவராவார்.

**முகவர்கள் நியமிக்கத் தடை**

21. (1) கடன் வழங்குவோர் ஒருவரோ அன்றி அவரது சார்பில் வேறு எவருமோ, அவரிடம் கடன் வாங்குவதற்கோ, கடன் தொடர்பான கொடுக்கல் வாங்கல்களில் ஈடுபடுவதற்கோ எவரையும் தூண்டி ஊக்கப்படுத்தும் பொருட்டு முகவர்களையோ தூண்டல்காரர்களையோ நியமிக்கக்கூடாது: அத்தகைய முகவராகவோ, தூண்டல்காரராகவோ எவரும் செயல்படலாகாது; கடன் வாங்கக் கருதும் நபர்களைக் கடன் வழங்குவோருக்கு அறிமுகப்படுத்துவதற்கோ,

அறிமுகப்படுத்துவதாக ஏற்றுக் கொள்வதற்காகவோ தரகு ஊதியமாக ஒரு தொகையையோ, அல்லது அத் தொகைக்கு ஈடான பொருளையோ எவரும் பெறலாகாது.

(2) இச்சட்டப் பிரிவின் துணைப்பிரிவு (1)க்கு மாறாகச் செயல்படும் நபர், குற்றம் மெய்ப்பிக்கப்பட்டால், மூன்று மாத காலத்திற்கு மிகாத வெறுங்காவல் சிறைத் தண்டணையோ 100 ரூபாய்க்கு மிகாத அபராதமோ அல்லது இரண்டு தண்டனைகளையுமோ விதிக்கப் படுவதற்குரியவர் ஆவார்.

**சட்டப் பிரிவுகள் 20,21 ஆகியவற்றை மீறலுக்கான தண்டணை**

22. கடன் வழங்கல் தொடர்பான கொடுக்கல் வாங்கல்கள் எவையேனும், சட்டப் பிரிவுகள்* 19,20 ஆகியவற்றின் விதிமுறை களுக்கு முரணாக நடந்திருப்பதாய் மெய்ப்பிக்கப்பட்டால், குறிப் பிட்ட முரண்பாடான செயல் தனது இசைவுடன் நடைபெறவில்லை யென்றோ, அதற்குத் தான் உடந்தையாய் இல்லையென்றோ கடன் வழங்குவோர் மெய்ப்பித்தாலன்றி இது தொடர்பான கொடுக்கல் வாங்கல்கள், இச்சட்டத்தின்படியான முறையான உரிமத்தைக் கடன்காரர் பெற்றிருந்தாலும், செல்லுபடியாகாமற் போகும்.

**செலவுகள், கட்டணங்களைக் கடனாளி செலுத்துவதான ஒப்பந்தம் எதுவும் செல்லுபடியாகாமை**

23. கடன் வழங்குதல், கடன் வழங்க ஒப்புதல் தொடர்பான கட்டணங்கள், இதற்கான பேரங்கள், பேச்சுவார்த்தைகள் முதலிய வற்றுக்கான செலவுகள், மேலும் இன்ன பிற செலவுகளைக் கடனாளியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கடன் வழங்குவோர், கடனாளி அல்லது கடன்வாங்கக் கருதியிருப்பவருக்கும் இடையே ஒப்பந்தம் ஏதேனும் செய்துகொள்ளப்பட்டால் அவ்வொப்பந்தம் செல்லுபடியாகாது. அவ்வாறு, இந்த வகையில் கடன் வழங்குவோர், கடனாளியிடமிருந்து தொகை ஏதும் பெற்றிருப்பாராயின் அத் தொகை கடன் வழங்குவோர் கடனாளியிடமிருந்து பெற்ற கடனாய்க் கருதப்பட்டு மீட்டு வசூலிக்கப்படக் கடவதாகும்; அவ்வாறு மீட்டு வசூலிக்கப்படவில்லையென்றால், அத்தொகை கடனாளி தமது கடனுக்காகத் திருப்பிச் செலுத்த வேண்டிய தொகை அல்லது

★ சட்டப் பிரிவுகள் 20, 21 ஆக இருக்க வேண்டும். - பதிப்பாசிரியர்.

தொகைகளிலிருந்து கழித்துக் கொள்ளப்படுவதற்கு உரியதாகும். விலக்காக, கொடுக்கல் வாங்கல் தொடர்பான ஆவணப் பதிவுக்காக ஆகும், முத்திரைத்தாள் கட்டணம் உட்பட்ட செலவுகளில் பாதிக்கு மேல் மிகாமல், கடனாளியிடமிருந்து கடன்காரர் பெற்றுக் கொள்ளுதல் சட்டமீறிய செயலாகாது.

## அதிகாரம் V

## கடன் வழங்குவோரின் கடமைகள்

**கொடுக்கல் வாங்கல்கள் எழுத்து வழி இருக்க வேண்டும்**

24. (1) இச்சட்டம் நடைமுறைக்கு வந்தவுடன், கடன் அடைத்தல், கடன் மீது வட்டி செலுத்துதல், அடமானம் ஆகியன குறித்த ஒப்பந்தங்கள் எவையாயிலும் அவை கடனாளியின் சொந்தக் கையொப்பமிடப்பட்ட நினைவூட்டு ஆவணங்களாகவே (எழுத்து வடிவில்) இருக்க வேண்டும்.

(2) நினைவூட்டு ஆவணம் வரையறுக்கப்பட்ட படிவத்தில் தான் இருக்க வேண்டும் என்பதுடன் ஒப்பந்தத்தின் கூறுகள் அனைத்தும் அதில் இடம்பெற்றிருக்க வேண்டும் - குறிப்பாக,

(அ) கடன் வாங்கும் தேதி,
(ஆ) கடன் தொகை,
(இ) எத்தகைய நோக்கில் கடன் தரப்படுகிறதென்பது,
(ஈ) வட்டி
(உ) அடமானத்தின் தன்மை,
(ஊ) முந்தைய கடனும் அடமானமும் உள்ளடக்கியுள்ளதா எனும் விவரம்.

**நினைவூட்டு ஆவணத்தின் படி கடனாளிக்குக் கொடுக்கப்பட வேண்டும்**

25. நினைவூட்டு ஆவணம் ஒவ்வொன்றுக்கும், ஒப்பந்த நாளிலிருந்து ஏழு நாட்களுக்குள், ஆவணத்தின்படி கடனாளிக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

**பிரிவுகள் 23, 24 ஆகியவற்றுக்கு முரணான கொடுக்கல் வாங்கல்கள் செல்லுபடியாகா**

26. ஓர் ஒப்பந்தம் அல்லது அடமானம் தொடர்பாக, கடன் கொடுக்கப்படுவதற்கும், அடமானம் வாங்கப்படுவதற்கும் முன்னதாகவே நினைவூட்டு ஆவணத்தில் கடனாளியின் கையொப்பம்

வாங்கப்பட்டிருப்பதுடன் ஏழு நாட்களுக்குள் ஆவணத்தின்படி ஒன்றும் பிரிவு 24*ன்படி கடனாளிக்கு வழங்கப்பட்டிருக்க வேண்டும்; இல்லையேல் அவ்வொப்பந்தமோ, அடமானமோ செல்லுபடியாகாது.

**கூட்டு வட்டி தருவதான ஒப்பந்தம் செல்லுபடியாகாது**

27. இச்சட்டம் நடைமுறைக்கு வந்த பிறகு, நேரடியாகவோ மறைமுகமாகவோ கூட்டுவட்டி வசூலிக்கப்படுமென்று செய்து கொள்ளும் ஒப்பந்தம் எதுவும் செல்லுபடியாகாது; அல்லது கடன் அடைவுக்காகச் செலுத்தப்பட வேண்டிய தவணைத் தொகைகள் செலுத்தத் தவறும் போது கூடுதலான வட்டி வசூலிக்கப்பட்டாலோ ஒப்பந்தம் செல்லாது என்பதுடன் கடன் வழங்குவோர் எந்தவொரு வட்டியும் பெறற்குரியராகார்.

விலக்காக, தவணைத் தொகைகள் செலுத்துவதில் தாமதம் ஏற்படும்போது, உரிய தவணைத் தொகைக்கு அது செலுத்தப்பட வேண்டிய நாளிலிருந்து செலுத்தப்படும் நாள் வரை தனி வட்டி வசூலிக்கப்படலாம் என்று ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். அவ்வாறு தொகைக்கு வசூலிக்கப்படும் வட்டிக்கு மிகாமல் இருக்க வேண்டும். தவணைத் தொகை தாமதத்திற்காகச் செலுத்தப்பட வேண்டிய வட்டி கடனுக்காகச் செலுத்தப்படும் வட்டியாகக் கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட மாட்டாது.

★ பிரிவு 23 அல்லது 24 என இருக்க வேண்டும். - பதிப்பாசிரியர்.

## அதிகாரம் VI

### கணக்கு வைப்பு முறை

**கடன் வழங்குவோர் கடனாளிக்கு இருப்புக் குறிப்பேடு வழங்க வேண்டும்**

*28. ஒவ்வொரு கடன் வழங்குவோரும் தமது கடனாளிகள் ஒவ்வொருவருக்கும் (அரசால் வழங்கப்படும்) இருப்புக் குறிப்பேடு ஒன்று வழங்குவதுடன், கடனாளி செலுத்தும் ஒவ்வொரு தொகைக் கும் வரவு வைத்து வரவைத் தமது கையொப்பமிட்டு உறுதி செய்ய வேண்டும்.*

**கடனாளியின் கணக்கு விவர அறிக்கையை கடன் வழங்குவோர் ஆண்டுதோறும் கடனாளிக்கு அளிக்க வேண்டும்.**

*29. ஒவ்வொரு கடன் வழங்குவோரும் தமது கடனாளிக்கும் மற்றும் எவரிடமிருந்தெல்லாம் தமக்குக் கடன் வசூலிக்க உரிமை யுண்டோ அவர்களெல்லோருக்கும் ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி 31 ஆம் தேதிக்குள் கடந்த ஆண்டு டிசம்பர் 31 ஆம் தேதிய நிலை யிலான கணக்கு விவர அறிக்கையை அரசு நிர்ணயிக்கும் படிவத்தில் கொடுத்தாக வேண்டும்; அறிக்கையை அவர் கையொப்பத்தின் வாயிலாய் உறுதிசெய்ய வேண்டும்.*

**நிலுவைக் காலத்தில் வழக்குத் தொடரக் கடன் வழங்குவோருக்கு உரிமையின்மை**

*30. பிரிவு 28 இன்படிச் செயல்படத் தவறும் கடன் வழங்கு வோரும் எவரும், அத்தவறைச் சரிசெய்யாமல் இருக்கும் காலகட்டத் தில், ஒப்பந்தத்தில் கண்டுள்ளவாறு அசலோ, வட்டியோ பெறக் கோரி வழக்கு ஏதும் தொடர இயலாது; அவரது தவறு நிலுவையா யிருக்கும் வரை (இருப்புக் குறிப்பேடு வழங்கப்படும் காலம் வரை) இடைக் காலத்திற்கு அவர் வட்டி ஏதும் பெறுவதற்குரியவராக மாட்டார்.*

**தவறுதலுக்கான தண்டனை**

*31. பிரிவு 28 அல்லது பிரிவு 29 ஆகியவற்றில்படிச் செயல்படத் தவறும் கடன் வழங்குவோர், ரூ 100/-க்கு மிகாமல் தண்டம் விதிக்கப் படுதற்குரியவராவார்.*

**அரசிடமிருந்து பெறப்படும் புத்தகங்களில்தான் கணக்குகள் பதியப்பட வேண்டும்**

*32. கடன் வழங்குவோர் ஒவ்வொருவரும், தமது கடன் தொழி லுக்குத் தேவையான அன்றாடக் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவு*

செய்வதற்காக, கணக்குப் பதிவுப் புத்தகங்களை அரசிடமிருந்து, அதற்குரிய கட்டணத்தைச் செலுத்திப் பெற்றுக் கொள்ள வேண்டும். அன்றாடம் கடன், வட்டி, அடமானம் முதலான விவரங்கள் அனைத்தையும் அந்தப் புத்தகங்களில் பதிய வேண்டும். விவரங்கள் அவ்வப் போது அரசு குறிப்பிடும் மையினால் எண்ணாலும் எழுத்தாலும் பதியப்பட வேண்டும்.

**இசைவொப்பத்திற்காகக் கணக்குப் புத்தகங்கள் கொணரப்படுதல்**

*33. (1) ஒவ்வொரு ஜனவரி மாதம் 31 ஆம் தேதியோ, அதற்கு முன்பாகவோ கடன் வழங்குவோர் ஒவ்வொருவரும் முந்தைய ஆண்டின் கணக்குப் பதிவுகள் விவரங்கள் அடங்கிய புத்தகங்களை உரிமம் வழங்கும் அலுவலரின் ஒப்பிசைவுக் கையொப்பத்திற்காகக் கொணர வேண்டும்.*

*(2) கணக்கு ஏடுகளைப் பார்வையிடும் உரிம அலுவலர், நடப்புக் கணக்கேடுகளில் முதலாவது பதிவு இறுதிப் பதிவு ஆகியவற்றுக்கு அண்மையில் ஏட்டின் இரு பக்கங்களிலும் தேதியுடன் கையொப்பம் இட வேண்டும்; கணக்குப் பேரேடுகளில் ஒவ்வொரு கணக்கின் முதல் பதிவு இறுதிப் பதிவு ஆகியவற்றுக்கு அண்மையில் தேதியுடன் கையொப்பம் இட வேண்டும்.*

*(3) மேலும், நடப்புக் கணக்குகளின் இறுதிப் பதிவை யடுத்து, கடன்காரர் கடந்த ஆண்டில் வாங்கிய கணக் கேடுகளில் பயன்படுத்தப்படாத ஏடுகள் (இருப்பின்) குறித்த விவரங்களை உரிம அலுவலர் பதிவு செய்து தேதியுடன் கையொப்பம் இட வேண்டும்.*

***பிரிவுகள் 31, 32* ஆகியவற்றின் படி வைக்கப்படாத கணக் கேடுகள் சான்றாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.***

*34. 1872 ஆம் ஆண்டின் சான்று (கூறல்)சட்டத்தில் கூறப் பட்டிருப்பது எவ்வாறாக இருப்பினும், கணக்குப் புத்தகங்கள், பதிவேடுகள், பதிவுப் பத்திரங்கள் ஆகியவற்றிலுள்ள பதிவுகள் அரசாங்கத்திடமிருந்து பெறப்பட்ட புத்தகங்களில் பிரிவு 32 இல்*

*★ பிரிவுகள் 32, 33 ஆக இருக்கலாம் - பதிப்பாசிரியர்கள்.*

கூறப்பட்டுள்ளவாறு பதிவுசெய்யப்பட்டு பிரிவு 33 இல் கூறப்பட்டுள்ளவாறு ஒப்பிசைவுக் கையொப்பங்கள் பெறப்பட்டிருந்தால் அன்றி, கடன், அல்லது அடமானம் தொடர்பான வழக்குகள் எதிலும் அவை சான்று ஆவணங்களாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

## அதிகாரம் VII

### வழக்குகளும் வழக்காடுதலும்

### சிறுவழக்கு மன்றங்களுக்கு அதிகாரமின்மை

*35.* மாநில, மாகாண சிறுவழக்கு மன்றங்கள் சட்டத்தில் கூறப்பட்டிருப்பது எவ்வாறாயிருப்பினும் கடன் கொடுக்கல் வாங்கல் தொடர்பாக, ஒரு கடன்காரராலோ, கடன்காரருக்கெதிராகவோ, சிறுவழக்கு மன்றங்களில் வழக்குகள் தொடர இயலாது; வழக்குரிமை கோருவோர்களுக்கிடையிலான, பழைய கொடுக்கல் வாங்கல்களுடன் நேரடியாகவோ மறைமுகமாகவோ தொடர்பில்லாத, ஒற்றைக் கொடுக்கல்/வாங்கல் தொடர்பாக எழும் பூசல்கள் மட்டுமே இதற்கு விதிவிலக்காகும்.

### வழக்கு மனுவில் தரப்பட வேண்டிய உரிம விவரங்கள்

*36.* (1) வழக்கு தொடுக்கும் கடன் வழங்குவோர் ஒவ்வொருவரும் தமது வழக்கு மனுவில், வழக்கு தொடர்பான கொடுக்கல் வாங்கலின்போது தம்மிடம் இருந்த உரிமம் குறித்த விவரங்களைத் தெரிவிக்க வேண்டும்.

(2) கடன் வழங்குவோர் ஒருவர் சட்ட ரீதியாக சாக்கு கூறாமல் இச்சட்டப் பிரிவின் உட்பிரிவு (1)இன்படிச் செயல்படவில்லையெனில், நீதிமன்றம் அவரது எதிர் வழக்காளிக்கு ஆகும் செலவுத்தொகையை, வழக்காளியே ஏற்றுக்கொள்ளுமாறு ஆணையிட வேண்டும்.

### கடன் வழங்குவோருக்கு அளிக்கப்பட வேண்டிய வினவல்கள்

*37.* (1) எந்தவொரு வழக்கிலும், அது கணக்குகள் தொடர்பானதாயினும், அன்றி கடன் அல்லது முன்பணத் தொகை மீட்டல் தொடர்பானதாயினும் வழக்காளியொருவர் தாம் வட்டிக்கடன் தொழில் செய்பவரல்லர் என்று மறுப்பாராயின், அவரிடமிருந்து கீழ்க்காணும் விவரங்களை அறிந்து கொள்ளற் பொருட்டாக, நீதிமன்றம் வினவல்களை அளிக்க வேண்டும்.

*(அ) வழக்கு தொடர்பான கொடுக்கல் வாங்கல் நிகழ்வுக்கு முன்னரோ பின்னரோ ஏற்றுக்கொள்ளத் தக்க காலவரம்புக்குள், அவர் தனியாகவோ, கூட்டாகவோ, குறிப்பிட்ட பெயரிலோ, நிறுவனம் ஒன்றின் மூலமாகவோ, பிறரது முகவர் அல்லது முகமை அமைப்பு வாயிலாகவோ, கடன் அல்லது முன்பணம் ஏதும் தந்துள்ளாரா? தந்திருந்தால் கடன் தொகை எவ்வளவு, கடன் தன்மை எத்தகையது என்பதும் தந்திருப்பாராயின்*

*(ஆ) அவரது பெயரில் அன்றிப் பிறர் பெயரால் எந்தெந்த சூழ்நிலைகளில் கடனாகவோ, முன்பணமாகவோ என்னென்ன தொகைகள் வழங்கியுள்ளார் என்பதும்,*

*(இ) அவர் தம்மை இதற்கு முன், தமது பெயரிலோ, பிறிதொரு பெயரிலோ கடன் வழங்குவோராய்ப் பதிவு செய்து கொண்டுள்ளாரா என்பதும், பதிவு செய்திருந்தால் என்ன பெயரில் என்பதும் ஆகிய வினவல்கள் தரப்பட வேண்டும்.*

*(2) இத்தகைய வினவலில், 1908 ஆம் ஆண்டின் உரிமையியல் வழக்கு நடைமுறைச் சட்டத்தின் ஆணை 11இன் விதிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும்.*

**குறிப்பிட்ட கொடுக்கல் வாங்கல்களை மீள்பார்வை செய்ய நீதிமன்றத்திற்கு அதிகாரம்**

*38. இச்சட்டம் நடைமுறைக்கு வரும்போது நிலுவையிலிருக்கும் வழக்குகளாயினும், சட்டம் நடைமுறைக்கு வந்தபின் தொடரப்படும் வழக்குகளாயினும், தொடர்புடைய கொடுக்கல் வாங்கல் விவகாரத்தில்,*

*(அ) வட்டி மிகையானதாயிருந்தாலோ, அல்லது*

*(ஆ) கொடுக்கல் வாங்கல் நிகழ்வு சட்டத்திற்குட்பட்டதாய் கருதவியலாத இரு தரப்பிடையிலான தனிப்பட்ட விவகாரமாயிருந்தாலோ,*

*நீதிமன்றம் கீழ்க்கண்ட அதிகாரங்களில் ஒன்றைப் பயன்படுத்தி வழக்கை மீள்பார்வைக்கு எடுத்துக் கொள்ளலாம் :-*

(i) வழக்கை மீண்டும் எடுத்துக் கொண்டு இருதரப்பின ருக்குமிடையிலான கணக்குகளை ஆராய்ந்து மிகையான வட்டி வசூலிக்கப்பட்டிருப்பின், மிகை வட்டித் தொகை யைச் செலுத்துவதிலிருந்து கடனாளியை விடுவிக்கும் அதிகாரம்,

(ii) பழைய கடனை அது தீர்க்கப்படாமலே முடிவுக்குக் கொண்டு வந்து, அக்கடனின் நிலுவையை அசலாய்க் கொண்டு புதிய கடன் கணக்கு தொடங்குவதென்று இரு தரப்பாரும் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தால் கூட, அக்கணக்கு விவரங்களை மீண்டும் ஆய்வு செய்து பழைய கடனுக்கு விதிக்கப்பட்டிருந்த வட்டி மிகையாயிருப்பின், மிகை வட்டியிலிருந்து கடனாளியை விடுவிப்பதற்கும், ஏற்கனவே செலுத்தப்பட்ட வட்டித்தொகை மிகுதியா யிருப்பின் கூடுதலாகச் செலுத்தப்பட்ட வட்டித் தொகை யில் நியாயமான வட்டி போக எஞ்சியதைக் கடன் வழங்குவோர் கடனாளிக்குத் திருப்பித்தர ஆணையிடும் அதிகாரம்,

(iii) கடனுக்காக வைக்கப்படும் அடமானத்தை முற்றிலு மாகவோ, ஒரு பகுதியாகவோ திருத்தியமைக்கவும் அடமானம் கைமாறியிருப்பின் நீதிமன்றம் தக்கது எனக் கருதும் அளவுக்கு, கடனாளியைத் தொகை செலுத்தும் கடப்பாட்டிலிருந்து விடுவிக்கும் அதிகாரம்.

**மீள்பார்வைக்குரியன அல்லாத கொடுக்கல் வாங்கல்கள்**

39. பிரிவு 38 இன் கீழ் நீதிமன்றத்திற்குரிய அதிகாரங்கள் கீழ் வரும் வகையான வரம்புகளுக்கு உட்படும்-

(i) முந்தைய கடன் வாங்கி, அக்கடன் இருபது ஆண்டுகளுக் குள் அடைபடாதிருக்கும் நிலையில் அக்கடன் கணக்கு களை முடிவுக்குக் கொண்டு வந்து நிலுவைக் கடனுக்குப் புதிய கணக்கு தொடங்குவதாய்ச் செய்து கொள்ளப்படும் ஒப்பந்தங்கள் மீள்பார்வைக்குரியனவாக மாட்டா.

(ii) வேறொரு நீதிமன்றத்தின் ஆணை எதையும் பாதிக்கக் கூடிய செயல்களை மேற்கொள்ள நீதிமன்றத்துக்கு அதிகாரம் இல்லை.

விளக்கம் :- துணைப் பிரிவு 38 (1) இல் இடம் பெறும் கொடுக்கல்-வாங்கல் எனும் தொடர், பல்வேறு கொடுக்கல் வாங்கல் நிகழ்வுகளின் தொடர்ச்சியான விவகாரத்தில், முதன் முதலான கொடுக்கல் வாங்கல் நிகழ்வினையே குறிக்கும்.

**மிகைவட்டி எனப்படுவதாவது**

*40. சட்டப் பிரிவு 37 இல் கூறப்படும் விதிமுறைகளில் மிகை வட்டி எனக்கருதப்படற்குரியன வருமாறு: ரிசர்வ் வங்கி, பேரரசு வங்கி, பம்பாய் வங்கி ஆகிய வங்கிகள் நிர்ணயிக்கும் வட்டி வீதத்தில் கடன் தொடங்கும் தேதியில் ஏற்கத்தக்கதான வட்டி வீதத்தைப் போன்று*

(i) *மூன்று மடங்குக்கு மேல் வட்டி நிர்ணயிக்கப்படும் அடமானமில்லாத கடன் விவகாரங்கள்,*

(ii) *இரண்டரை மடங்குக்குமேல் வட்டி நிர்ணயிக்கப்படும் இரண்டாவது அல்லது அடுத்துவரும் அடமானக் கடன்கள்.*

(iii) *ஒன்றரை மடங்குக்கு மேல் வட்டி நிர்ணயிக்கப்படும் முதல் அடமானக் கடன்கள்.*

**கணக்கு ஆய்வு முறை**

*41. சட்டப் பிரிவு 37-ன்படியான கணக்கு விவரங்கள் பின்வரும் விதிகளைப் பின்பற்றியே ஆய்வு செய்யப்பட வேண்டும் :-*

(i) *அசல், வட்டி, ஆகியவற்றுக்கான கணக்குகள் தனித்தனியே நோக்கப்பட வேண்டும்.*

(ii) *கடன் வழங்குவோரிடமிருந்து அவ்வப்போது கடனாளி பணமாகப் பெற்ற தொகைகள், கடன் ஒப்பந்தத்தின் ஒரு பகுதியாய்க் கடனாளி அவ்வப்போது கடன் வழங்குவோரிடமிருந்து பெற்றுக் கொண்ட பண்டங்களின் விலை மதிப்புகள் ஆகியன, கடனாளியின் கடன் அசல் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்படும்.*

(iii) *உரிய காலங்களில் செலுத்தப்படாமல் நிலுவைத் தேக்கமாய்ச் சேரும் கடன் வட்டித் தொகைகள் எதுவும், கடன் கொடுக்கல் வாங்கலின் உடன் நிகழ்வன ஒப்பந்தம் ஏதாவதொன்றின் படியாகவோ, கணக்கு முடிப்பு நிலுவை வட்டியை அசலாக மற்றும் ஏற்பாட்டின் வாயிலாகவோ, கடனாளியின் கடன் அசல் கணக்கில் சேர்க்கப்படலாகாது.*

(iv) *ஒவ்வொரு மாதத்திலும் அந்தக் காலகட்டத்தில் நிலுவையாயிருக்கும் கடன் அசல் தொகையின் மீது இருசாராருக்குமிடையே ஒப்புக்கொள்ளப்பட்ட வீதத்தில் தனிவட்டி கணக்கிடப்பட்டு அத்தொகை கடனாளியின் கடன் வட்டிக் கணக்கில் சேர்க்கப்பட வேண்டும்; ஒப்புக் கொள்ளப்படும்*

வட்டி வீதம் சட்டப் பிரிவு 38-ல் வரையறுக்கப்பட்ட வீதத்திற்குள் இருக்க வேண்டும்.

(v) கடனாளியிடமிருந்தோ, கடனாளியின் சார்பிலோ கடன் வழங்குவோருக்குச் செலுத்தப்பெறும் பணத்தொகைகள், பண்டங்கள், சேவைகள், அடமானச் சொத்தில் இருந்து கிடைக்கும் பயன்கள், ஊதியங்கள் ஆகியவற்றின் பண மதிப்பு முதலில் கடனாளியின் கடன் வட்டிக் கணக்கிலிருந்து கழித்துக் கொள்ளப்பட வேண்டும்; நிலுவையிலுள்ள வட்டி முழுமையாக அடைபட்ட பின்னர் எஞ்சியிருக்கும் தொகை மதிப்பு கடனாளியின் அசல் கணக்கிலிருந்து கழித்துக் கொள்ளப்பட வேண்டும்.

விளக்கம் :- கடன் வழங்குவோர் பெற்றுக் கொண்ட சேவைகள், பண்டங்கள் ஊதியங்கள், அவர் வசம் வந்த அடமானச் சொத்தின் வாயிலாய்ப் பெறப்பட்ட பயன்கள், ஊதியங்கள், வருவாய்கள், பிற நலன்கள் ஆகியவற்றுக்கான பண மதிப்பீடு செய்தல் அவசியம் எனில், அவை அவ்வவற்றுக்கான அவ்வப்போதைய சந்தை நிலவரத்தையொட்டி நிர்ணயிக்கப்படலாம்; நீதிமன்றமே இதற்கெனத் தனியே மதிப்பீட்டாளர்களை நியமித்தோ அன்றி நேரடியாகவோ மதிப்பீடு செய்யலாம்.

(vi) கடன் தொகை பாக்கியை வசூலிப்பதற்காக வழக்கு தொடரப்படுமானால், வழக்கு தொடரப்படும் நாள் வரைக்குமான வட்டிக் கணக்கு, அசல் கணக்கு இரண்டும் தனித்தனியே கணக்கிடப்பட்டு இரண்டின் கூட்டுத் தொகை, கடனாளியிடமிருந்து அந்தத் தேதியில் வசூலிக்கப்பட வேண்டிய கடன்பாக்கியாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்; ஆனால் அன்றைய தேதியில் கணக்குப்படி, கடனில் அசல் பாக்கியை விட மிகுதியாக வட்டி பாக்கி இருக்குமாயின், கடன் அசல் பாக்கியைப் போன்று இரண்டு மடங்கு தொகையே செலுத்தப்பட வேண்டிய கடன் பாக்கியாக எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**அடமானக் கடன் பாக்கிக்காகச் செலுத்துமாறு நீதிமன்றம் ஆணைவழங்கும் தொகையைத் தவணை முறையில் செலுத்துமாறு ஆணை பிறப்பிக்கும் அதிகாரம்**

42. அடமானக் கடன் வழக்கு ஒன்றின் பாக்கித் தொகையைச் செலுத்துமாறு நீதிமன்ற ஆணைபிறப்பிக்கப்பட்ட கடனாளி ஒருவர்

விண்ணப்பம் செய்து கொண்டால், நீதிமன்ற ஆணை இச்சட்டம் நடைமுறைக்கு வருமுன்னர் பிறப்பிக்கப்பட்டிருப்பினும் அல்லது பின்னர் பிறப்பிக்கப்பட்டாலும், நீதிமன்றம், கடன்காரருக்கு உரிய அறிவிப்புக் கொடுத்துவிட்டு, அது தக்கதெனக் கருதும் தவணைகளில் பாக்கித் தொகையை இன்னின்னத் தவணைகளில் இந்தந்த அளவில், இன்னின்ன நிபந்தனைகளுக்குட்பட்டுச் செலுத்தலாம் என அனுமதியளிக்கும் ஆணை பிறப்பிக்க அதிகாரம் உண்டு.

**அடமானக் கடன் பாக்கியைத் தவணைகளில் செலுத்த நீதிமன்ற ஆணையில் கூறப்படலாம்**

43. அடமானம் வாயிலாய்ப் பெறப்பட்ட கடன் தொடர்பான வழக்கில் நீதிமன்றம் தனது ஆணையைப் பிறப்பிக்கும் சமயத்தில், செலுத்தப்பட வேண்டியதென வழக்கில் முடிவு செய்யப்பட்ட தொகையைத் தவணைத் தொகைகளாய்ச் செலுத்தலாமென்று நீதிமன்றம் கட்டளையிடுவதற்கு, தொடக்கத்தில் கடன் வழங்குவோருக்கும் கடனாளிக்குமிடையே செய்து கொண்ட ஒப்பந்தத்தில் முரணான நிபந்தனைகள் இருப்பினும் அவை தடையாக மாட்டா.

**கடனாளியின் சொத்து மதிப்பை நீதிமன்றம் நிர்ணயிக்கலாம்**

44. 1908 ஆம் ஆண்டின் உரிமையியல் நடைமுறைச் சட்ட விதிகளில் கூறப்பட்டிருப்பது எவ்வாறாயினும், கடன் பாக்கியைச் செலுத்த நீதிமன்ற ஆணை பிறப்பிக்கப்படும் வழக்கு ஒன்றில், கடனாளியின் சொத்தைப் பிணையாக்கி அதன் விற்பனை மூலம் கடன் அடைக்கப்பட வேண்டுமென மனு கொடுக்கப்படுமாயின், நீதிமன்றம் தனது தீர்ப்பில் தொடர்பினர் அனைவரையும் விசாரித்த பின்னர், கடனாளியின் சொத்துக்களை மதிப்பீடு செய்து அதில் எவ்வளவு பகுதி கடனை முழுமையாய் அடைக்கப் போதுமானது என முடிவு செய்து ஆணையிடலாம்.

**கடனாளியின் சொத்தில் போதுமான பகுதி மட்டுமே விற்கப்பட வேண்டும்**

45. 1908 ஆம் ஆண்டின் உரிமையியல் நடைமுறைச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது எவ்வாறிருப்பினும் கடனாளியின் சொத்தில் எவ்வளவு பகுதி கடனை முழுமையாய் அடைக்கப் போதுமானதென்று நீதிமன்ற ஆணையில் கூறப்பட்டுள்ளதோ அப்பகுதி மட்டுமே

சொத்து விற்பனை அறிவிப்பில் இடம்பெற வேண்டும்; அறிவிப்பில் குறிப்பிட்டுள்ள சொத்து மதிப்பை விடக் குறைவான விலைக்கு, சொத்து விற்கப்படலாகாது.

**மிகைவட்டிக் கடன் சட்டத்தின் கீழான நீதிமன்றத்தின் அதிகாரம் இச்சட்டத்தினால் பாதிக்கப்படாது**

46. இச்சட்டத்தில் தெளிவாக விலக்குகள் அளிக்கப்பட்டிருந்தாலன்றி, இச்சட்டத்தின் பொது விதிமுறைகள் எவையும் மிகை வட்டிக் கடன் சட்டத்தின் கீழ் நீதிமன்றங்களுக்குள்ள அதிகாரம் எதையும் பாதிக்கமாட்டா.

**மாநிலத்துக்கு வெளியே பணம் செலுத்துவதான ஒப்பந்தம் செல்லுபடியாகாது**

47. இச்சட்டம் நடைமுறைக்கு வந்த பின்னர், கடனுக்காகச் செலுத்தப்படுதற்குரிய தொகைகளை மராட்டிய மாநிலத்துக்கு வெளியே செலுத்தலாம் என்று கடனாளியொருவரும் கடன்காரர் ஒருவரும் செய்து கொள்ளும் ஒப்பந்தம் எதுவும் செல்லுபடியாகாது.

**நிலுவை வட்டி செலுத்துவதான ஒப்பந்தம் செல்லுபடியாகாது**

48. நிலுவை வட்டித் தொகைகளை செலுத்துவதாக கடனாளியுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தம் எதுவும் செல்லுபடியாகாது.

## அதிகாரம் VIII

குற்றங்கள் குறித்த நடைமுறைகள்

**குற்றங்கள் அனைத்துமே சட்டத்தின் பார்வைக்குரியவை**

49. இச்சட்டத்தின் கீழ் குற்றமாக்கத்தக்கன யாவும் சட்டத்தின் பார்வைக்குரியன; அவை குறித்து எந்த நீதிமன்றத்திலும் வழக்கு தொடரப்படலாம்.

**குற்றம் உறுதிப்படுத்தல், விடுவிப்பு ஆகியன குறித்த மேல் முறையீடுகள்**

50. இச்சட்டத்தின்படி நீதிமன்றம் ஒன்று பிறப்பிக்கும் குற்றத்தை உறுதிசெய்தல், விடுவித்தல் ஆகிய ஆணைகளுக்கு எதிராக மேல்முறையீடு செய்ய விதிமுறை உண்டு. அவ்வாறான மேல்

முறையீடுகள், 1898 ஆம் ஆண்டின் குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் கீழ் பிறப்பிக்கப்படும் ஆணைகளுக்கு எதிரான மேல் முறையீடுகள் செய்வதற்குரிய விதிமுறைகளையொட்டிய தன்மை யிலானவையாகவே கொள்ளப்படும்.

## அதிகாரம் IX

### கூடுதல் விதிகள்

**விதிகளை இயற்றும் அதிகாரம்**

51. (1) கீழ்க்காணும் பொருண்மைகள் குறித்து விதிகள் இயற்றி நிர்ணயிக்க அரசுக்கு சட்டபூர்வ அதிகாரம் உண்டு :-

(அ) கடன் வழங்குவோர் பயன்படுத்தற்குரிய சான்றிதழ், உரிமம் இவற்றுக்கான படிமங்கள்,

(ஆ) சான்றிதழ்கள், உரிமங்களுக்காக விண்ணப்பத்திற் குரிய செயல்பாட்டு முறைமைகள்,

(இ) உரிமங்கள் சான்றிதழ்கள் வழங்கவும், கணக்குப் புத்தகங்கள், இருப்புக் குறிப்பேடுகள் நினைவூட்டு அறிக்கைப் படிவங்கள் ஆகியவற்றை வழங்கவும், அவற்றின் வடிவத்தை நிர்ணயிக்கவும் அதிகாரம் பெறும் அலுவலர்கள்,

(ஈ) இச்சட்டத்தின்படி பிறப்பிக்கப்படும் நீதிமன்ற ஆணை களுக்கு எதிராக மேல் முறையீடு செய்வதற்கு உரிய நடைமுறை,

(உ) கணக்குப் புத்தகங்கள், இருப்புக் குறிப்பேடுகளின் வடிவமும் அவற்றின் ஒப்பிசைவு முறையும்.

(ஊ) கடன்காரர்கள் கடனாளிகளுக்கு அளிக்க வேண்டிய ஆண்டுக் கணக்கு அறிக்கைப் படிவம்,

(எ) கணக்குப் புத்தகங்கள் இருப்புக் குறிப்பேடுகள் ஆகிய வற்றுக்கான கட்டணம்,

(ஏ) வட்டிக்கடன் தொடர்பாகக் கடன்காரர்களுக்கு கடனாளிகள் செலுத்த வேண்டிய கட்டணங்கள்.

(2) இச்சட்டப்பிரிவின்கீழ் அரசு விதிகள் வகுப்பதாயிருப் பின், சட்டமன்றத்தின் இரு அவைகளும் அமர்வில்

*இருக்கும் போது, அவற்றின் கூட்டத்தொடர் முடிவடைவதற்கு 21 நாட்களுக்கு முன்னதாக, விதிகளின் வரைவு சட்டமன்றத்தின் ஒப்புதலுக்காக வைக்கப்பட வேண்டும். சட்டமன்ற அவைகளில் ஏதாவது ஒன்று கூடி 21 நாட்கள் முடிவதற்கு முன்னதாக வரைவுக்கு அல்லது வரைவின் ஒரு பகுதிக்கு ஒப்புதல் அளிக்க மறுத்துத் தீர்மானம் இயற்றினால், அது குறித்து அரசு மேற்கொண்டு செயல்பாடு எதையும் தொடரலாகாது; ஆனால் இந்த மறுப்பு, மீண்டும் புதிய விதிமுறைகளை வரைவு செய்து சட்டமன்றத்தில் வைப்பதற்குத் தடையாய் இராது.*

### சட்ட வரைவின் நோக்கங்கள், காரணங்கள் குறித்த அறிக்கை

*கடன் வட்டித் தொழிலைக் கட்டுப்படுத்தி நெறிப்படுத்தும் நோக்குடன் இச்சட்ட வரைவு கொண்டுவரப்படுகிறது. இந்நோக்கில் செய்யப்படும் விதிமுறைகளின்படி-*

*முதலாவதாக:*

(i) *உரிமம் பெறாமல் எவரும் கடன் வட்டித் தொழில் செய்ய அனுமதி கிடையாது; நன்னடத்தைக்கான சான்றிதழ் பெற்றிராத எவருக்கும் உரிமம் வழங்கப்பட மாட்டாது;*

(ii) *இச்சட்டங்களின்படி கடன் வட்டித் தொழில் செய்வோருக்கு விதிக்கப்படும் கடமைகளில் தவறுவோர்க்கான உரிமங்கள் தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ பறிக்கப்படலாம்;*

*இரண்டாவதாக,*

(i) *அடமானத்தின் மீதோ, அடமானம் இன்றியோ வழங்கப்படும் கடன் எதுவாயினும் அதற்கு எழுத்துச் சான்று கடனாளியின் கையொப்பத்துடன் தேவை என்று இச்சட்டம் விதிவகுக்கிறது;*

(ii) *கடனாளிக்குக் கடன் வழங்குவோர் இருப்புக் குறிப்பேடு வழங்க வேண்டும் என்றும் கொடுக்கல் வாங்கல்கள் அனைத்தும் அக்குறிப்பேட்டில் பதிவு செய்யப்பட வேண்டும் என்றும் இச்சட்டம் விதி வகுக்கிறது;*

(iii) கடன் வழங்குபவர் ஆண்டுதோறும் கடன் கணக்கு அறிக்கையைக் கடனாளிக்கு அளிக்க இச்சட்டம் விதி வகுக்கிறது;

(iv) கூட்டு வட்டியையும், பிற செலவுகளையும் இச்சட்டம் தடை செய்கிறது.

மூன்றாவதாக, கடன் வழங்குவோர் கடன் கணக்குகளை வைத்துக் கொள்ளும் முறைமை வகுக்கப்படுகிறது; அதன்படி,

(i) கடன் வழங்குவோர் தங்கள் கணக்குகளை அரசிடமிருந்து பெறும் புத்தகங்களில்தான் பதிவு செய்ய வேண்டும்;

(ii) ஒவ்வோராண்டின் இறுதியிலும் இக்கணக்குப் புத்தகங்கள் உரிய அரசு அலுவலரின் பார்வைக்கு வைக்கப்பட்டு முதலாவது பதிவிலும் இறுதிப் பதிவிலும் ஒப்புதல் கையொப்பம் பெறவேண்டும்;

(iii) இச்சட்ட விதிகளின்படிக் கணக்குப் புத்தகப் பதிவுகள் இருந்தாலன்றி, எந்தவொரு வழக்கிலும் அவை சான்றாக ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

நான்காவதாக, கடன் வழங்குவோருக்கும் கடனாளிக்குமிடையிலான வழக்குகள் குறித்து இச்சட்டம் விதிகள் வகுக்கிறது. அவற்றின்படி:

(i) கடன் வழக்குகள் கொடுக்கல், வாங்கல் நிகழ்ச்சியாய் இருந்தாலன்றி அவை குறித்துச் சிறுவழக்கு மன்றங்களில் வழக்கு தொடர இயலாது;

(ii) பழைய கணக்குகளில் வட்டிவீதம் மிகையாக இருந்தாலோ, கொடுக்கல் வாங்கல் விவகாரங்கள் வெளிப்படையாய் இல்லாமலிருந்தாலோ நீதிமன்றங்கள் அவற்றை மீள் பார்வை செய்யலாம்;

(iii) வங்கி நிர்ணயிக்கும் வட்டி வீதத்தைப் போன்று ஒரு குறிப்பிட்ட மடங்குக்குமேல் வசூலிக்கப்படும் வட்டிகள் மிகை வட்டியாய்க் கருதப்படும்;

(iv) கடன் வழங்குவோருக்கும் கடனாளிக்குமிடையிலான கணக்கு விவரங்கள் டி.ஏ.ஆர். சட்டத்தில் கூறப்பட்டிருக்கும் சில விதிகளின்படி மதிப்பிடப்படும்.

(v) வழக்கில் கடன்பாக்கி செலுத்துமாறு ஆணையிடப்பட்ட கடனாளி அதைத் தவணைகளில் செலுத்தவும், பிணைப் புடன் சொத்தை விற்றுக் கடன் அடைப்பதாயின், கடன் அடைவதற்குத் தேவையான சொத்தின் பகுதியை மட்டும் விற்கவும் நீதிமன்றம் விதிவகுக்கிறது.

ஐந்தாவதாக, கடன்காரர் ஒருவர் இச்சட்டத்தின் நோக்கத்தை மீறுவதற்காகக் கடன் தொகை திருப்பச் செலுத்துவதை மாநிலத் துக்கு வெளியே செய்யலாம் என ஒப்பந்தம் செய்து கொள்வதை செல்லாததாக்குகிறது.

**பி.ஆர். அம்பேத்கர்**

---

திரு. இலக்குமி நாராயணன் அச்சகம் (364, தக்கூர்த்வார், பம்பாய் வெளியிட்ட துண்டுப் பிரசுர வெளியீட்டிலிருந்து.

# 20

# நான் கொள்கையில் உறுதியாய் நிற்பேன் அதற்காகத் தனித்தே போராடுவேன்

*அகமதாபாத், அக்டோபர் 22, 1938*

''தொழில் தகராறுகள், குத்தகைகள் சம்பந்தமான சட்ட வரைவு குறித்து சட்டமியற்றுவதில் பம்பாய் மாநில காங்கிரஸ் அரசு எவ்வித முன்னேற்றமும் அடைந்துள்ளதாக என்னால் நம்ப முடிய வில்லை. பல ஆண்டுகளாக எங்களுக்குக் காங்கிரசுடன் கருத்து வேறுபாடுகள் உண்டு. நாங்கள் இந்த மாநிலத்தில் எந்தப் பதவிக் காகவும் போராடவில்லை; மாறாக எங்கள் உரிமைகளுக்காகவே போராடுகிறோம்.''

இன்று காலை இங்கு வந்து சேர்ந்த டாக்டர் அம்பேத்கர் பத்திரிகையாளர் கூட்டத்தில் மேற்கண்டவாறு கூறினார்.

மேலும் தொடர்ந்து அவர் கூறியதாவது: ''இன்று நான் காங் கிரசுடன் கைகோர்த்தால், நான் விரும்புவதைப் பெற முடியும்; ஆனால் எங்கள் நோக்கமோ முற்றிலும் மாறுபட்டது. எனது சமுதாய மக்கள் அனைவருமே என்னுடன் கருத்து வேறுபாடு கொண்டு காங்கிரசில் சேர்ந்தாலும் அதைப்பற்றிக் கவலையுறாது, எனது கொள்கையில் உறுதியாய் நின்று, அதற்காகத் தனித்தே போராடு வேன்''.

திரு. ஜின்னாவைப் பற்றிக் குறிப்பிட்டு அவர் கூறியதாவது: ''திரு. ஜின்னா முஸ்லீம்களை முற்றிலும் தவறான பாதையில் இட்டுச் செல்கிறார். அவருக்குக் காங்கிரசுடன் என்ன கருத்து வேறுபாடு உள்ளது என்பது எனக்குப் புரியவில்லை. சிறுபான்மையோரின் நலன்களுக்காக லீக் பாடுபடுவதாயின், காங்கிரசுடன் கருத்து வேறுபாடு கொண்ட ஏனைய சிறுபான்மை மக்களுடன் சேர்ந்து, காங்கிரசுக்கு எதிராக ஒன்றுபட்டுப் போராட முன்வருமாறு திரு. ஜின்னாவுக்கு அழைப்பு விடுக்கிறேன். ஆனால் முஸ்லீம் லீகோ, தேர்தலுக்காகவும், மந்திரிப் பதவிகளுக்காகவும் மட்டுமே போராடு வதாய் எனக்குத் தோன்றுகிறது.

திரு. ஜின்னா ஒரு பக்கம் காங்கிரசுக்கு எதிராகப் போராடிக் கொண்டு, மற்றொரு பக்கம் காங்கிரசுடன் ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொள்ளும் நோக்கம் கொண்டுள்ளார்; இது முற்றிலும் பொருளற்ற போக்காகும். புனா ஒப்பந்தத்திலிருந்து சரியான பாடம் ஒன்றைக் கற்றுக் கொள்ளுமாறு அவருக்கு வேண்டுகோள் விடுக்கிறேன்.

• • •

பம்பாய் கிரானிகள்: அக்டோபர் 22, 1938.

# 21

# அதிகார போதையில் அமைச்சரவை

பம்பாய், வியாழன்*

''மாண்புமிகு அமைச்சர் முன்ஷியின் தலைமையில் செயல் படும் காவல் துறையினர் மேற்கொண்டுள்ள வேலை நிறுத்தத்தின் பால் மிகவும் தவறான அணுகுமுறையே கடைப்பிடிக்கப்பட்டு வருவது குறித்து பாரபட்சமற்ற பொது விசாரணை தேவை என்று பம்பாய் மாநிலப் பாட்டாளி மக்களின் சார்பிலும், சட்டம் ஒழுங்கின் பெயராலும், மாநிலத்தில் ஒழுங்கான செம்மையான நிர்வாகம் வேண்டும் என்ற நோக்கிலும் கோருகிறேன். முற்றிலும் தேவை யில்லாது தடியடியிலும், துப்பாக்கிச் சூட்டிலும் காவல் துறையினர் மீண்டும் மீண்டும் ஈடுபடுவது குறித்துப் பொதுவிசாரணை நடத்தப் பட வேண்டும் என்று வலியுறுத்துகிறேன்'' எனச் சுதந்திரத் தொழி லாளர் கட்சித் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பத்திரிகை களுக்கு விடுத்த அறிக்கையொன்றில் கூறியுள்ளார்.[1]

''ஒரேயொருநாள் வேலை நிறுத்தத்தைக்கூட இத்தகைய கேவலமான கொடூர அடக்குமுறையை மேற்கொள்ளாமல் சமாளிக்க இயலாத அளவுக்கு காங்கிரஸ் அமைச்சரவைக்கு என்ன நேர்ந்து விட்டது?'' என்று மேலும் டாக்டர் அம்பேத்கர் வினவுகிறார்.

''கடந்த காலங்களில் நாள் கணக்கில், வாரக் கணக்கில், ஏன் மாதக் கணக்கில் கூட வேலை நிறுத்தங்கள் நடந்துள்ளன. முன்னர் ஒரு சமயம் ஓர் வேலை நிறுத்தம் ஏழரை மாத காலம் நடைபெற்றது; ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் பல அச்சமயம் இடம்பெற்றன. இந்தக் காலம் முழுவதிலுமே, தடியடியோ, துப்பாக்கிச் சூடோ ஏதும் நிகழ்ந்ததில்லை.

''ஆனால் இன்றோ, காங்கிரஸ் ஆட்சியின்கீழ் காட்டுமிராண்டித் தனமான அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்படாமல் ஒருநாள் வேலை நிறுத்தம் கூட நடைபெற இயலவில்லை. இதுதான் காங் கிரசுக்கு நேர்ந்துள்ள நிலைமை.''

---

1. பிரீபிரஸ் ஜர்னல் 9, நவம்பர் 1938 (புதன்)
★ நவம்பர் 3, 1938.

## பத்திரிகைத் துறை

காங்கிரசாருக்கு பத்திரிகைத்துறையின் ஆதரவு தேவைப் பட்ட போதெல்லாம் விடுதலைக்காகவும், தொழிலாளர்களின் உரிமை களுக்காகவும் தோள் கொடுத்து ஆதரவு தந்த பத்திரிக்கைத் துறைக் கும்கூட இன்று என்ன நேர்ந்து விட்டது?

இன்றோ பிரிட்டானிய, ஆங்கிலோ இந்தியப் பத்திரிகை யாளர்களும் வெட்கிக் குன்றும் அளவுக்கு நமது பத்திரிகையாளர்கள் பொய், புரட்டு, திரித்துக் கூறுதல், உண்மைகளை மூடி மறைத்தல் முதலான கேவலமான செயல்பாடுகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

இந்த வேலை நிறுத்தம் பிசுபிசுத்து முழுத் தோல்வியடைந்து விட்டதாகவும், தொழிலாளர்கள் தமது தலைவர்களின் கட்டளை களை மீறினார்கள் என்றும் அவை கூறுகின்றன. வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள் உருட்டி, மிரட்டி, அச்சுறுத்தப்பட்டுத் தமது விருப்பத்திற்கெதிராகவே அதில் ஈடுபட்டார்கள் என்றும் இப்பத்திரிகைகள் கூறுகின்றன.

இத்தகைய சொற்களெல்லாம் பொது மக்களுக்கு மிகப் பழக்கமானவைதாம். ஆனால் இதுவரை இத்தகைய சொற்கள் நாட்டு விரோதப் பத்திரிகைகள் எனக் கருதப்படும் பத்திரிகைகளில்தான் வந்தன. இன்றோ அவை காங்கிரஸ் மற்றும் காங்கிரஸ் ஆதரவுப் பத்திரிகைகளில் வருகின்றன. இதுவே இன்றைய அவலநிலை. இந்த அப்பட்டமான உண்மையை நாம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

'உங்களுடைய உண்மை, அகிம்சை ஆகியவற்றுக்கும் அடிப் படைப் பண்புக்கும் என்ன நேர்ந்துவிட்டது?' என்று இப்பத்திரிகை களை வினவ விரும்புகிறேன்.

தொழிலாளர்களைப் பொறுத்தமட்டில், இத்தகைய பொய்ப் பிரச்சாரங்களில் அவர்கள் ஏமாந்துவிடமாட்டார்கள். தொழில் தகராறுச் சட்ட வரைவுக்கு எதிராக நடந்த மாபெரும் ஆர்ப்பாட்டங் களைக் கண்டவர்கள், நடத்தியவர்கள் அவர்கள். அந்த வேலை நிறுத்தம் எத்துணை பெரிய வெற்றியை ஈட்டியது என்பதை அவர்கள் அறிவார்கள்.

## அமைச்சரவைக்கு எச்சரிக்கை

தொழிலாளர்கள் மீது நடத்தப்பட்ட ஒவ்வொரு தடியடியும், பாட்டாளி வர்க்க உறுப்பினர்கள் மீது பாய்ந்த ஒவ்வொரு துப்பாக்கிக்

குண்டும், இந்நகரத்திலும் சரி, இம்மாநிலம் முழுவதிலும் சரி வாரக் கணக்கில், மாதக்கணக்கில் தொடர்ந்து எதிரொலித்துக் கொண்டு தான் இருக்கும் என்பதைக் காங்கிரஸ் அமைச்சரவையும், காங்கிரஸ் தலைவர்களும் தெளிவாகத் தம் நினைவில் இருத்திக் கொள்ளட்டும்.

இத்தடியடியும் துப்பாக்கிச் சூடும் வரவிருக்கும் நகரமன்றத் தேர்தல்களின் போது நூற்றுக்கணக்கான மேடைகளில் மீண்டும் மீண்டும் எதிரொலித்து கொண்டேயிருக்கப் போகின்றன. இத் துப்பாக்கிச் சூட்டுக்கும் தடியடிக்கும் காங்கிரஸ் கொடுக்கவிருக்கும் விலை இன்று அதன் தலைவர்கள் உணர இயலாத அளவு கடுமை யாகவே இருக்கும்.

எங்களது உரிமைகளின் மீதும் சுதந்திரத்தின் மீதும் தொடுக்கப் பட்ட இத்தாக்குதல் குறித்து இந்த மாநிலத்தின் மூலை முடுக்கு களிலும், தொலை தூரச் சிற்றூர்களிலும் உள்ள மக்கள் கேட்டறியத் தான் போகிறார்கள்.

காங்கிரஸ் அமைச்சரவை அதிகார போதையில் மூழ்கிக் கிடப்பதாய்த் தோன்றுகிறது, நாடாளுமன்றத்திலும் சட்டப் பேரவை யிலும் வலுவான பெரும்பான்மை பெற்றுள்ள அமைச்சரவைகள் கூட, தவறான எண்ணத்தில் செய்யப்படும் ஒரேயொரு தவறான நடவடிக்கையால் தூக்கியெறியப்படலாம் எனும் மக்களாட்சி முறையின் பெரும்பாடத்தை அறியாதவையாய் இவை தோன்று கின்றன. அந்தப் பாடம் அவர்களுக்கு, வரவிருக்கும் நகரமன்றத் தேர்தல்களில் புகட்டப்படும். அடுத்து மாநில அரசை எதிர் நோக்கும் தேர்தலிலும் இதேபோன்ற பாடம் கடுமையாய்ப் புகட்டப்படும்.

இந்தப் பாடத்தை அவர்கள் மிகக் கடுமையான விளைவு களுடன் கற்றுக் கொள்ளப் போகிறார்கள் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயம் இல்லை.

# 22

# நிலம் உழுபவர்களுக்கு அநீதி

## பிரகாசம் குழுவின் பரிந்துரைகள் குறித்த ஆய்வு

சுதந்திரத் தொழிலாளர் கட்சியின் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பின்வருமாறு அறிக்கை விடுத்துள்ளார்:-

ஜமீன்தாரிப் பகுதிகள் குறித்த பிரகாசம் குழுவின் பரிந்துரை களை படித்துப் பார்த்தேன். ஜமீன்தார்கள் என்போர் நில வருவாயில் ஒரு பகுதியைப் பெறற்குரியவர்களேயன்றி வேறு உரிமைகள் ஏதும் அற்றவர்கள் எனும் கருத்து ஏற்கத்தக்கதாய் உள்ளது. அதே சமயம் நிலத்தை உழுது பயிரிடுவோர்களுக்கு அவர்கள் உழுது பயிரிடும் நிலங்களின் உடைமையாளர்களிடமிருந்து குத்தகைதாரர் உரிமைகள் ஏதும் உரித்ததாகாது என்னும் குழுவின் நிலைப்பாடு சட்டப்படிச் சரியானதன்று என்பதுடன், உழவர்களுக்கு அநீதி யானது; மேலும் இது வலுவான வேளாண்மைப் பொருளாதார வளர்ச்சிக்கு உகந்ததும் அல்ல.

இது சட்டப்படி சரியானதன்று என்பதற்குக் காரணம், கடந்த நூற்றாண்டில், பல்வேறு தரப்படியான உடைமையுரிமைகள் உருவாகி வளர்ச்சி பெற்று வந்துள்ளன என்பது குத்தகைச் சட்டங் கள் இயற்றலில் எல்லாச் சட்டங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்டு உள்ளது. உழவர்கள் தமது வாழ்விற்குத் தேவையான வருவாயைப் பெறுவதுடன், அவர்களது பண்ணையை மேம்படுத்தவும், பஞ்ச காலங்களுக்காகச் சேமித்து வைக்கவும் போதுமான கூடுதல் வருவாய் இருக்க வேண்டும் என்பதற்காகவே நிலத்துக்கான குத்தகை குறைவான அளவில் நிர்ணயிக்கப்படுகிறது என்பதைக் கருதும் போது, குழுவின் பரிந்துரை உழுபவர்களுக்கு அநீதியானது என்பதை உணரலாம். ஜமீன்தாரர்களின் வருவாயையும் பறித்து, உழவர்களின் வருவாயையும் பறித்து, எண்ணிக்கையில் பெருத்த குட்டி ஜமீன்தார் களை இடைநிலையில் உருவாக்குதல் அல்ல குத்தகைக் குறைப்பு முயற்சி.

நிலவுடைமை உரிமைகள் நிலத்தைப் பேணிக் காத்து வேளாண்மை வளர்ச்சிக்குப் பயன்படுத்தலால் அன்றி உழுபவர் களையே வாடகைக் கூலிகளாய் மாற்றிச் சுரண்டல் கொள்ளையடிப்

பதற்கு அனுமதிப்பதால் வேளாண்மை மேம்பாடு அடையாது, இது வேளாண்மையின் நலனுக்கும் உகந்ததன்று.

உழவர்களிடமிருந்து நிலவுடைமையாளர்கள் பெற்றுவரும் மிகைக்குத்தகை மதிப்பீடு என்பதற்குமேல் பிரகாசம் குழுவின் அறிக்கையில் உருப்படியாக ஏதும் கிடையாது.

அண்மையில் சட்டமன்றத்தில் எழுப்பப்பட்ட கேள்வியொன் றுக்கு பதிலாக, ''ரயத்துவாரிப் பகுதிகளில், ரயத்துவாரி உரிமை பெற்றவர்களே நிலத்துக்கு முழு உரிமையாளர்கள், ஆதலால் அப் பகுதிகளில் குத்தகைதாரர் சட்டம் எதுவும் கொண்டுவரப்பட மாட்டாது'' என்று திரு. பிரகாசம் கூறியிருப்பது, காங்கிரஸ் அமைச் சரவையால் உழுவோர்க்கு நலன்கள் ஏதும் கிடைக்கக் கூடும் எனும் நம்பிக்கைகளுக்கு ஒரேயடியாய் முற்றுப்புள்ளி வைத்துவிட்டது.

உடமையாளர் உரிமைகள் என்ற பெயரால் புதிய குத்தகை வசூல் முகவர்கள் எனும் இனத்தை உருவாக்க முயலும் இப்புதிய சட்டத்தை நிறைவேற்றுவதற்குச் சென்னை மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களாயுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பு உறுப்பினர்கள் உடந்தையாய் இருக்க மாட்டார்களென நம்புகிறேன். அவ்வாறு அளிக்கப்படும் ஆதரவு உழவர்கள் நலன்களுக்குத் துரோகமிழைப்ப தாகுமெனக் கருதுகிறேன்.

---

பம்பாய் கிரானிகிள், ஜனவரி 18, 1939.

# 23

# குவையர் தீர்ப்பை டாக்டர் அம்பேத்கர் எதிர்க்கிறார்

''1939 பிப்ரவரியில் இருந்து, அரசியல் சீர்திருத்தம் கோரி வலுவான போராட்டம் நிகழ்ந்து வரும் ராஜ்கோட் சமஸ்தானத்தில் காலவர நிலையொன்று உருவாகி வருகிறது. காங்கிரஸ் கட்சித் தலைவர் பதவிக்கான தேர்தலில், சுபாஷ் சந்திரபோஸ் வெற்றியால், தோல்வியும் ஏமாற்றமும் அடைந்த திரு.காந்தி ராஜ்கோட் சமஸ் தானத்துக்கு விரைந்து சென்று அங்குள்ள சிக்கலுக்குத் தீர்வு காண்ப தாய்க் கூறிக் கொண்டு உள்ளார்; ஆனால் சுபாஷ் போஸ் தலைமை யேற்க இருக்கும் திரிபுரா காங்கிரஸ் அமர்வின்போது போஸுக்குத் தலைவலி உண்டாக்குவதே அவரது உள்நோக்கம். சமஸ்தானத்தின் சீர்திருத்தக்குழு குறித்த முன்மொழிவில் தாங்கள் விடுபட்டிருப் பதால் எழுந்துள்ள பூசலையடுத்து அங்குள்ள ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் டாக்டர் அம்பேத்கருக்கு அவசரமான அழைப்பினை விடுத் துள்ளனர். எனவே அவர், ஏப்ரல் 18 ஆம் தேதி மாலை விமானத் தின் மூலம் ராஜ்கோட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார்; அந்த சமஸ்தானத்தின் ஆட்சியாளரான தாகூர் சாகிபைச் சந்தித்த பின்னர் அன்றிரவு ஒடுக்கப்பட்ட மக்களின் பேரணியில் பேசிய டாக்டர் அம்பேத்கர் அரசியல் உரிமைகளுக்கான போராட்டத்தைத் தொடரு மாறு அம்மக்களுக்கு அறிவுரை கூறினார்.

மறுநாள் காலை அவர் திரு.காந்தியைச் சந்தித்து, சீர்திருத்தக் குழுவில் அரிசனங்களின் சார்பாளர்களுக்கும் இடம் வேண்டி நாற்பந்தைந்து நிமிட நேரம் உரையாடினார். பின்னர் ராஜ்கோட்டில் நேர்காணல் ஒன்றில், காந்தியடிகளுக்குத் திடீரென்று காய்ச்சல் வந்து விட்டமையால் எல்லாக் கருத்துகளையும் அவருடன் விவரமாய்ப் பேச முடியவில்லை என்று கூறினார். எனினும், தமது மாற்றுத் திட்டத்தை திரு.தேஜ்பகதூர் சப்ரு போன்ற அரசியலமைப்புச் சட்ட வல்லுநர் ஒருவரின் சீர்தூக்கலுக்கு வைக்க வேண்டும் என்ற யோசனையைக் காந்தி ஏற்கவில்லை என்பதைக் குறிப்பிட்டார். அகிம்சை முறையில் மனமாற்றத்தை ஏற்படுத்துவதில் தோல்வி

யுற்ற காந்தி, இறுதியில் பலவந்தத்தையே நம்பி, வைசிராயின் தலையீட்டைக் கோரியுள்ளார். அகிம்சை, மனமாற்றம் ஆகியவற்றின் நம்பிக்கை தூதரான காந்தி, தமது அகிம்சை முறை இன்னும் முழுமையான வலிமையை வளர்த்துக் கொள்ளவில்லை என்று பொது மக்களிடையே ஒப்புக்கொண்ட காந்தி, அவரே கூறியவாறு, நம்பிக்கை மாய்ந்து, உடல்நலம் சீர்குலைந்து ராஜ்கோட்டை விட்டு அகன்றார்.

இதைத் தொடர்ந்து, கூட்டாட்சித் தலைமை நீதிபதியான சர். மாரிசு குவையர், ராஜ்கோட் சமஸ்தானப் பூசல் குறித்த தீர்வு ஒன்றை வெளியிட்டார். அதில், 'பரிந்துரை' என்ற சொல்லுக்கான குவையரின் பொருள் விளக்கம் தவறானது என்று டாக்டர் அம்பேத்கர் சவால் விடுத்தார். ''இப்போதைய சிக்கலுக்கு பொருந்துமாறு அறுதியான முன்மாதிரி ஏதும் கிடையாது'' என்ற அடிப்படையில் குவையர் தமது முடிவினை வெளியிட்டிருந்தார். மாறாக டாக்டர் அம்பேத்கர் தமது கருத்தை வலியுறுத்த, 'கோட்டி க்கு எதிராக நோல்ட்டர்', 'ரோலண்ட்சுக்கு எதிராக ஜான்சன்' ஆகிய இரண்டு எடுத்துக்காட்டு வழக்குகளை[1]ச் சுட்டிக் காட்டியுள்ளார்.

இதன் பற்பல கட்டங்களின் விவரங்கள் வருமாறு :- பதிப்பாசிரியர்கள்.

## I

## குழுவில் அரிசன சார்பாளர்களுக்கு இடம் காந்திஜிக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தந்தி

சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் காந்தியடிகளுக்குக் கீழ்க்கண்டவாறு தந்தியனுப்பியுள்ளார் :

> ''ராஜ்கோட்டின் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் சீர்திருத்தக் குழுவில் இடம்பெறுகிறார்களா என்றறிய விரும்புகிறேன்''[2]

---

1. கிர், பக். 322-323
2. பம்பாய் கிராணிகள், ஏப்ரல் 14, 1939.

## II

# குழுவில் இடம் பெற மற்றொரு கோரிக்கை

## வீரவல்லாவுக்கு டாக்டர் அம்பேத்கரின் தந்தி

இன்று, பேச்சுவார்த்தைகள் முறிவடைந்து விட்டன என்பதை முஸ்லீம் சார்பாளர்கள் மறுத்து மீண்டும் காந்தியை இரவில் சந்திக்க விருப்பதாய்க் கூறினார்கள். அதற்கிடையே,பம்பாயிலுள்ள முக்கிய மான முஸ்லீம் லீக் தலைவர் ஒருவருடன் தொடர்பு கொண்டு அவரது செயலாணைகளைப் பெறவிருப்பதாய்த் தெரிவித்தனர்.

சீர்திருத்தக் குழுவில் தாமும் இடம் பெற வேண்டுமென்று கிராஸ்யாஸ், பாயத்ஸ் ஆகியோரின் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப் படாமையால் அவர்கள் இன்றிரவு தாக்கோர் சாகிபைச் சந்தித்துக் கோரிக்கையை வலியுறுத்தக் காத்துக் கொண்டுள்ளனர்.

சீர்திருத்தக் குழுவில் தமக்கும் சார்பான்மை வேண்டும் என்று இறுதியாக ராஜ்கோட் சமஸ்தான ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் கோரிக்கையும் வந்துள்ளது. ''முன்னரே தாங்கள் உறுதி யளித்திருந்தவாறு, தங்களுடைய சீர்திருத்தக் குழுவில், ஒடுக்கப் பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர்களையும் சேர்த்துக் கொள்ள மறக்க மாட்டீர்கள் என நம்புகிறேன்'' என்று தர்பார் வீரவல்லாவுக்கு டாக்டர் அம்பேத்கர் தந்தி ஒன்று அனுப்பியுள்ளார்.

இத்தந்தியை ராஜ்கோட் ஆட்சிக்குழுவின் முதல் உறுப்பினர் காந்தியடிகளிடம் சேர்த்துள்ளார்.

தாக்கோர் சாகிபின் சார்பில் தர்பார் வீரவல்லா, டாக்டர் அம்பேத்கருக்குப் பின்வருமாறு தந்தியனுப்பினார்: ''அரசர் சமூகத் திற்குத் தங்களுடைய தந்தி விவரம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அரசர் அவர்கள் பெரிதும் விருப்பப்படுகிறார் என்றாலும்கூட, ஒடுக்கப் பட்ட மக்களின் சார்பாளர் எவரையும் குழுவில் திரு.பட்டேல் பரிந் துரைப்பாரெனத் தோன்றவில்லை என்று தெரிவிக்கப் பணிக்கப் பட்டுள்ளேன். தங்களுக்கு விருப்பமானால் அரசப் பெருமான் தங்களுக்கு நேர்காணல் வாய்ப்பு ஒன்றை நல்கி, ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களுக்கு எவ்வாறு உதவலாம் என்று தங்களுடன் உரையாட விருப்பு தெரிவித்துள்ளார்.'' ''ஏ.பி.''[1]

---

1. பம்பாய் கிரானிக்கல், ஏப்ரல் 15, 1939.

## III

## அரசு விருந்தினராய் டாக்டர் அம்பேத்கர்
## (நமது நிருபரிடமிருந்து)

*ராஜ்கோட், ஏப்ரல் 18.*

*டாக்டர் அம்பேத்கர் இன்று காலை பம்பாயிலிருந்து விமானம் மூலமாய் இங்கு வந்து சேர்ந்தார். விமான நிலையத்தில் கிராய்சியர்கள் சிலர் அவருக்கு வரவேற்பு அளித்தனர். அவர் அரசுக்காரில் அரசு விருந்து மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.*

*அம்பேத்கருடன் வந்துசேர்ந்த குவாஜி ஹாசன் நிசாமி இன்று காலை ஆனந்த் கஞ்சில் காந்தியடிகளால் வரவேற்கப்பட்டார்; காந்தியடிகளுடன் ஒரு மணி நேரம் கலந்துரையாடினார்.*[1]

## IV

## டாக்டர் அம்பேத்கர் தாக்கோரைச் சந்திக்கிறார்
## (நமது நிருபரிடமிருந்து)

*ராஜ்கோட், ஏப்ரல் 18*

*அரிசனங்களின் இன்னல்களை ஆய்வு செய்வதற்காக இன்று காலை இங்கு வந்து சேர்ந்த டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் நாளை பம்பாய் திரும்புகிறார். தாகூர் சாகிபுடன் இன்றிரவு நேர்காணல் நிகழ்த்திய டாக்டர் நாளை காந்தியடிகளைச் சந்திக்கவிருக்கிறார்.*

*மாலையில் முக்கியமான முஸ்லீம் தலைவர்களும் பாயத்து களும் அவரைச் சந்தித்து, சீர்திருத்தக் குழுவில் அவர்கள் நலன்களைக் காக்கும் சார்பாளர்களும் இடம்பெறுதல் குறித்து காந்தியடிகளுடன் நடத்திய பேச்சுவார்த்தைகள் எவ்வாறு முறிவடைந்தன என்பது குறித்துக் கலந்துரையாடல் நிகழ்த்தினர். மேலும் டாக்டர் அம்பேத்கர் இன்று மாலை திரு. வீரவல்லாவுடன் தனித்து உரையாடினார்.*

---

*1. பம்பாய் கிராணிக்கில், ஏப்ரல் 19, 1939.*

ராஜ்கோட்டில் பல்வேறு சமூக மக்களுடனும் தாம் நடத்திய கலந்துரையாடல்களின் அடிப்படையில் டாக்டர் அம்பேத்கர் ராஜ்கோட் சிக்கல் குறித்து அறிக்கையொன்று வெளியிடுவார் என்று தெரிகிறது.[1]

## V

## ''டாக்டர் அம்பேத்கரின் மாற்றுத் திட்டம்

ராஜ்கோட், ஏப்ரல் 19

ஐக்கிய செய்தி நிறுவனத்துக்கு அளித்த நேர்காணல் ஒன்றில், சீர்திருத்தக் குழுவில் தமக்கு இடம் கிடைக்காததால் எழுந்த பூசலில் தலையிட்டுத் தீர்வுக்கு வழிகாட்டுமாறு ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்கள் விடுத்த அழைப்புக்கு இணங்கியே தாம் ராஜ்கோட் வந்ததாகவும், ராஜ்கோட் தர்பாரின் அழைப்புக்கு இணங்கி வரவில்லையென்றும், டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

அவர் மேலும் கூறியதாவது : ''நான் இங்கு வந்து சேர்ந்தவுடன் மேற்கொண்ட முதல் பணி, சீர்திருத்தக் குழுவில் ஒடுக்கப்பட்ட வகுப்பு மக்களின் சார்பாளர் ஒருவரை ஏற்றுக்கொள்ள தர்பார் தயாராயுள்ளாரா என்பதைத் தெரிந்துகொள்ள முயன்றதுதான்.

### மாற்றுத் திட்டம்

''இன்று காலை 11.30 மணிக்கு நான் காந்தியடிகளைச் சந்தித்தேன். ஆனால் அவருக்கு திடீரெனக் காய்ச்சல் வந்துவிட்டதால், எல்லாக் கூறுகளையும் பற்றி விவரமாய்ப் பேச இயலவில்லை. எனினும் குழுவின் அமைப்பை மாற்றியமைத்தல் குறித்த எனது மாற்றுத்திட்டத்தை அரசியலமைப்புச் சட்டவியலில் தேர்ந்த சர் தேஜ்பகதூர் சப்ருவிடமோ, அல்லது சர் சிவசாமி ஐயரிடமோ அல்லது பிறிதொரு வல்லுநரிடமுமோ ஆய்வுக்கு வைக்கலாம் எனும் எனது கருத்தை அவர் ஏற்க மறுத்துவிட்டார். மாறாக, அத்தகைய தோர் அறிக்கை அறுதி முடிவாகவே இருக்க வேண்டும் என்று அவர் கூறிவிட்டார்'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

1. பம்பாய் கிராணிக்கில், ஏப்ரல் 19, 1939

டாக்டர் அம்பேத்கர் இன்று மாலை புகைவண்டி மூலம் பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றார் - ஐக்கிய செய்தி நிறுவனம்.[1]

# VI

## "குவையரின் தீர்ப்புக்கு டாக்டர் அம்பேத்கர் எதிர்ப்பு 'பரிந்துரை என்பது கட்டளையாகாது' என்பதைக் காட்டும் வழக்குகளை எடுத்துக் காட்டுகிறார்

குவையரின் தீர்ப்பு குறித்த சட்டவியல் ஆய்வில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூறுவதாவது:-

ராஜ்கோட் ஆட்சியாளர் தாக்கோர் சாகிபுக்கும் திரு.வல்லபாய் படேலுக்கும் இடையிலான 'பரிந்துரை' என்பதன் பொருள் விளக்கம் பற்றிய பூசலில் சர் மாரிஸ் குவையரின் தீர்ப்பு, பூசலில் தொடர்புடைய தரப்பினர்களுக்கு மட்டுமின்றிப் பெருவாரியான பொது மக்களுக்கும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

பூசலில் தொடர்புடைய தரப்பினர் இருவரையும் இத்தீர்ப்பு கட்டுப்படுத்துமாதலால், குவையரின் பொருள் விளக்கம் சரியா, தவறா என்பதை ஆய்வதால் அவர்களுக்குப் பெரிதாக ஒன்றும் பயன் கிட்டாது. ஆனால் பொதுமக்களைப் பற்றி அவ்வாறு கூறிவிட முடியாது; அவர்களைப் பொறுத்தமட்டில் சிக்கலின் தீர்வு முக்கிய மானதுதான். இத்தீர்ப்பு ஒரு நீதிமன்றத் தீர்ப்பு அல்லவென்றாலும், சர் மாரிஸ் குவையர் எனும் பெரிய நீதிபதியின் பெயரால் அளிக்கப் பட்டுள்ளதாகும்.

## இறுதி முடிவு சர்தாரிடம்

இச்சட்டவியல் கோட்பாட்டை நுணுக்கமாய்ப் புரிந்துகொள்ள வேண்டுமெனில் முதலில் தாக்கோர் சாகிபின் வழக்கு என்ன என்பதையும், அதற்கு சர் மாரிஸ் குவையர் அளித்த தீர்ப்பு என்ன வென்பதையும் எடுத்துரைக்க வேண்டும்.

சர் மாரிஸ் குவையர் தமது தொகுப்புரையில் கூறுவதாவது: "தாக்கோர் சாகிப் அவர்களின் வாதம் என்ன என்பதன் சுருக்கம்,

1. பம்பாய் கிரானிக்கில், ஏப்ரல் 20, 1939

அவரது மனுவில் அவர் எழுத்து மூலமாகவே அளித்துள்ள ''பரிந்துரை'' என்பதன் வெளிப்படையான பொருளின்படி, பரிந்துரைப் பட்டியலில் உள்ள ஒவ்வொருவரையும் குறித்து நன்கு ஆய்ந்து அப்பட்டியலில் உள்ளவர்கள் எவரேனும் தகுதியில்லாதவராகவோ, திறமையில்லாதவராகவோ, விரும்பத்தகாதவராகவோ தாக்கோர் சாகிபால் கருதப்பட்டால், அவரைக் குழுவில் சேர்க்க மறுப்பதற்குத் தாக்கோர் சாகிப் அவர்களுக்கு உரிமையுண்டு' என்னும் வாக்கியத்தால் புலப்படும். சர் மாரிஸ் குவையர் இவ்வாதத்தை ஏற்றுக் கொள்ள வில்லை.

அவர் கூறுவதாவது, ''எனது கருத்துப்படி, தொடரின் உண்மை யான அமைப்பு தரும் பொருளாவது: ''திரு வல்லபாய் பட்டேல் பரிந்துரைக்கும் நபர்கள் அனைவரையும் குழு உறுப்பினர்களாய் நியமிக்க தாக்கோர் சாகிப் ஒப்புக்கொண்டுள்ளார்; அப்பட்டியலி லிருந்து தமக்கு ஏற்பில்லாத எவரையும் ஒதுக்கும் உரிமை அவருக்கு இல்லை. குழுவின் பரிந்துரைகளில் குறை காணவோ, பரிந்துரைகளைக் குழு மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்பதற்கான காரணங்களைக் கூறவோ அவருக்கு உரிமையுண்டே தவிரக் குழு உறுப்பினர் எவரையும், அவர் சமஸ்தானக் குடிமகனோ, சமஸ்தானப் பணியாளரோ அல்லர் என்பதைத் தவிர வேறு எக்காரணத்திற் காகவும் நீக்கவியலாது. குழுவின் அமைப்பு குறித்து திரு. வல்லபாய் பட்டேலின் முடிவே ''இறுதியானது''.

## இரண்டு மறுப்புகள்

இந்த முடிவுக்கும், தாக்கோர் சாகிபின் வாதத்தைத் தள்ளுபடி செய்வதற்கும் சர் மாரிஸ் குவையர் கூறும் மறுப்புகள் இரண்டு. சர் மாரிஸ் குவையரின் சொற்களாலேயே கூறுவதாயின், '' (தாக்கோர் சாகிபின் வாதத்தின் படி) 'பரிந்துரைக்கப்படும்' என்ற சொல் இடம் பெற்றதனாலேயே அது வெறும் பரிந்துரைதான் என்ற பொருள் ஏதும் தந்துவிடாது. வழக்கின் ஒட்டுமொத்த சூழ்நிலையை ஒட்டியே அதற்குப் பொருள் காணவேண்டும்.

இரண்டாவது காரணம் பரிந்துரையைக் கருதியாய்ந்து தள்ளுபடி செய்யும் அதிகாரம் ஏதும் தாக்கோர் சாகிபுக்குக் கிடையாது. ஆதலால் திரு. வல்லபாய் பட்டேலின் பரிந்துரைக்கும் நபர் எவரையும் ஏற்க மறுத்துத் தள்ளுபடி செய்ய அவருக்கு உரிமையில்லை. சர் மாரிஸ் குவையர், 1917 ஆம் ஆண்டின், ரெக்சுக்கும், கிறிஸ்து மருத்துவ மனை நிர்வாகிகளுக்குமிடையிலான வழக்கு எண் 1.K.B.19ஐச்

சுட்டிக் காட்டியுள்ளார். ஆனால் அவர் அதனையே ஆதாரமாய்க் கொள்ளவில்லை. எனினும் அவ்வழக்கை ஏன் சுட்டுகிறார் என்பதைத் தெளிவுப்படுத்தியுள்ளார். '' ஒரு நபர் பரிந்துரைக்க மற்றொரு நபர் நியமிக்கும் சூழல்களில் எல்லாம் ஒரே மாதிரியான கோட்பாடு பின்பற்றப்படுவதில்லை என்பதைக் காட்டவே அவ்வழக்கைச் சுட்டியுள்ளேன்'' என்று அவர் கூறுகிறார். சொல்லப் போனால் இப்போதைய வழக்குக்குத் தகுந்த முடிபான எடுத்துக்காட்டு ஏதும் முன்னர் இருந்ததில்லை என்னும் அடிப்படையிலேயே அவர் தமது தீர்ப்பைக் கூறியுள்ளார்.

## முன்னை எடுத்துக்காட்டும் கோட்பாடும்

இவ்வழக்கு தொடர்பான நன்கு நிறுவப்பட்ட கோட்பாடும், அதற்குத் துணை நிற்கும் முந்தை எடுத்துக்காட்டு ஒன்றும் உண்டு என்பதை அவருக்கு உரிய மரியாதையுடன் கூற முனைகிறேன். இதற்கு என் மனதல் முன் எழும் எடுத்துக்காட்டு, வழக்கு எண் 2 Phil 192, அதாவது 41E.R 915 எனப்படும் நாட், கோட்டி இடையிலான வழக்காகும். இவ்வழக்கின் விவரங்களை மிகச் சுருக்கமாய்க் கூறி விடலாம்.

'அ' என்பவர் உயில் ஒன்று எழுதி, அதைச் செயல்படுத்துவோராயும், அறங்காவலர்களாகவும் தமது மனைவி, திரு. கோட்டி, திரு.இப்பெட்சன் ஆகியோரை நியமித்ததுடன் தமது குழந்தைகளின் பாதுகாவலர்களாகவும் அவர்களையே நியமித்தார். தமது மகனுக்கு 21 வயது நிறைவடையும் முன்பாகவோ, தமது மகள்கள் வயதடைவதற்கு அல்லது திருமணம் செய்து கொள்வதற்கு முன்பாகவோ தமது மனைவி இறந்துவிட்டால், உயிருடன் எஞ்சியிருக்கும் பாதுகாவலர்கள் தமது வயதுக்கு வராத குழந்தைகளைத் தமது உறவினள் மேரி பிரியர் என்பாரின் காப்பில் விட வேண்டுமென்றும் அவர் பரிந்துரை செய்திருந்தார். 'அ' வின் மனைவி இறந்த பின், எஞ்சியிருந்த நிறைவேற்றச் செயலுக்குரியவரும், பாதுகாவலருமான திரு. கோட்டி, குழந்தைகளை மேரி பிரியரின் காப்பில் விடுத்தார். பரிந்துரை என்பது தம்மைக் கட்டுப்படுத்துவது என்றும், உயிலின்படிக் குழந்தைகளை மேரி பிரியரின் காப்பில் விடுக்கத் தாம் கடமைப் பட்டவர் என்றும் கருதியே திரு. கோட்டி இவ்வாறு செயல்பட்டார்.

## உள்ளுறை அதிகாரங்கள்

இங்கு எழுந்த வினாவானது, பரிந்துரையினால், சட்டப் படியான பாதுகாவலர் திரு.கோட்டியின் நெறிப்படுத்தும் அதிகாரம் பறிக்கப்படுகிறதா? என்பதே. இவ்வழக்கிற்கான முடிவெடுப்பதில் தலைமை நீதிபதியான டென்மான் பிரபு கூறுவதாவது; ''பரிந்துரை எனும் சொல்லின் விளைவைக் கூர்ந்து நோக்கற்கரிய வாய்ப்புகள் பல எனக்கு அடிக்கடிக்கிட்டியுள்ளன. அண்மையில் இந்த நீதிமன்றத் திலேயே, உயில் எழுதிய ஒருவரின் பரிந்துரை, சொத்தினைப் பெற்று நிருவகிக்கப் போகும் நபரைக் கட்டுப்படுத்துமா, அந்த நபருக்குச் சட்டப்படியான உரிமைகள் உண்டா என வினாவிற்குரிய வழக்கு ஒன்று வந்தது.

ஷா, லாலஸ் இருவருக்கிடையிலான அந்த வழக்கில், பிரபுக் கள் அவை (பிரிவு கவுன்சில்) ஒரு விதியாக நடைமுறைப்படுத்திய கோட்பாட்டின் படிதான் நான் அப்போதிருந்து செயல்பட்டு வரு கிறேன். பரிந்துரை என்பது சில சூழல்களில் ஒரு கட்டளையாகவே எடுத்துக் கொள்ளப்பட்டு அறக்கட்டளையொன்று உருவாக்கப் படலாம் என்றாலும், இளக்கமான அச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ள விதத்தில் உயிலின் நேரடியான வரைவு எதனுடனாவது முரண்படுமாறு அமையுமாயின் அது வெறும் பரிந்துரையாக மட்டுமே கருதப்படும்.

அந்த வழக்கில் உயிலில் பரிந்துரைக்கப்பட்ட நபருக்கான உரிமை, உயில் சொத்தின் அறங்காவலர்கள் அதை நிருவகிப்பதற் கான நேரடி அதிகாரங்களுக்கு முரண்பட்டிருந்ததாலும், அறங்காவ லர்களின் அதிகாரங்கள் உயிலில் தெளிவாக வரையறுக்கப்பட்டு இருந்ததாலும், உயிலின் இவ்விரு கூறுகளும் ஒன்றுக்கு ஒன்று முரண் பட்டிருக்கும் நிலையில், உறுதியான வரைவுக்க இளக்கமான சொல்லின் வழியான வரைவு வழிவிட்டு விலக வேண்டும்'' என்று முடிவு வழங்கப்பட்டது. எனவே, பரிந்துரைகள் கட்டுப்படுத்த வல்லன என்றாலும் அவை உயிலின்படி நியமிக்கப்பட்ட காப்பாள ரான திரு.கோட்டியின் குழந்தைகளை நெறிப்படுத்தும் அதிகாரங் களைப் புறந்தள்ளிவிட மாட்டா என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

## கட்டுப்படுத்தும் கட்டளையன்று

அந்த வழக்கு அறக்கட்டளை ஒன்றின் தொடர்பானது என்பதில் ஐயமில்லை. ஆனால் அறக்கட்டளை என்பது சட்டப்படியான

கடப்பாடு என்பதன் மற்றொரு வடிவம்தான். எனவே அறக்கட்டளை உருவாக்கும் பரிந்துரையாயினும், பிற சட்டக்கடப்பாடுகளை உருவாக்கும் பரிந்துரையாயினும் அவற்றின் தகுநிலை ஒன்றுதான். எனவே பரிந்துரை என்ற சொல்லுக்குப் பொருள் விளக்கம் காண முற்பட்ட அவ்வழக்கு இந்த வழக்குடன் தொடர்புடைய ஒன்றுதான். டென்மான் பிரபுவின் தீர்ப்பிலிருந்து, பரிந்துரை என்பது அதனின்று மீளவே இயலாத கட்டளை அல்ல வென்பதையும், பரிந்துரை செய்யப் படுபவரின் வேறு நேரடி அதிகாரங்களுடன் அது முரண்பட்டு நிற்குமாயின் அது பரிந்துரைக்கு மேல் வேறெந்தப் பொருளும் பெறாது என்பதையும் நாம் காணலாம்.

தற்போது தாக்கோர் சாகிப், வல்லபாய் பட்டேல் இருவருக் கிடையிலான பூசலில் தாக்கோர் சாகிபின் நிலை திரு. கோட்டியின் நிலையை ஒத்தது என்று கூற இயலாதா? மேலும் திரு. கோட்டியைப் போன்றே, தாக்கோர் சாகிபுக்கும் சமஸ்தானத்தின் அரசர் என்கிற முறையில் நேரடி அதிகாரங்கள் உண்டு என்று கூற முடியுமல்லவா? அந்த நேரடி அதிகாரங்களில் நபர்களைப் பதவிக்கு நியமித்தல், நியமிக்க மறுத்தல், பதவி நீக்கம் செய்தல் ஆகிய அதிகாரங்கள் அவருக்கு இல்லையென மறுக்க முடியுமா? இவ்வாறாக திரு.கோட்டியின் நிலையில் தாக்கோர் சாகிபை இருத்திப் பார்ப்போமானால் நாட்-கோட்டி வழக்கில் பயன்படுத்தப்பட்ட சட்டக் கோட்பாட்டு விதி தாக்கோர் சாகிப்-வல்லபாய் பட்டேல் வழக்கிலும் பயன்படுத்தப் படலாம் என்ற முடிவினை எவ்வாறு மறுக்கவியலும்?

## மற்றுமோர் ஆதாரச் சான்று

இந்த வழக்கு தொடர்பாக நோக்குதற்குரிய முன்னை எடுத்துக் காட்டுகளில் மற்றொன்று ஜான்சன்-ரோலாண்டு வழக்கு (17 L.J Ch. 438) ஆகும். இந்த வழக்கிலும் உயில் ஒன்றில் பயன்படுத்தப்பட்டிருந்த பரிந்துரை எனும் சொல்லின் பொருள் விளக்கமே முக்கியமான சிக்கலாகும். உயிலை எழுதியவர், அதில் ''நான் இந்த சொத்தை (குறிப்பிட்ட பணத் தொகை) அவள் சரியென்று கருதும் வகையில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அளிக்கிறேன்'' என்று எழுதியிருந்தார். மேலும் அவர் ''ஆனால் அதில் பாதியைத் தனது உறவினர்களுக்கு அளிக்க வேண்டும் என்று பரிந்துரை கூறுகிறேன்'' என்றும் குறிப்பிட்டிருந்தார். ஆயின் சட்டப்படி சொத்துக்கு உரிமையடைந்த பெண்மணி அச்சொத்தில் பாதியைத் தனது உறவினர்களுக்குக் கொடுக்கவில்லை. இவ்வாறு உயில் எழுதியவரின் பரிந்துரையை

அவள் மீறலாமா என்பதே நீதிமன்றத்தின் முன்பு வைக்கப்பட்ட வினா. அவள் அவ்வாறு மீறலாம் என்பதுதான் நீதிமன்றத்தின் தீர்ப்பு. தீர்ப்பின் மொழியில் கூறுவதாயின் பரிந்துரை என்பது கட்டளையாகவும் இருக்கலாம். ஆனால் அது நிறைவேற்ற வேண்டிய நபரின் சட்ட உரிமைகளுடன் முரண்படுமாயின், அதனை மீறி நடப்பதைத் தடுக்க வல்ல கட்டளையாக அது இருக்க முடியாது.

ஜான்சன்-ரோலண்ட்ஸ் வழக்கு தொடர்பான உயிலின் மொழி அமைப்பும், தாக்கோர் சாகிப் எழுதிய கடிதத்தின் மொழி அமைப்பும் வேறுபட்டவை என்பது உண்மைதான். தாக்கோர் சாகிப், வல்லபாய் பட்டேலுக்கு எழுதிய கடிதத்தில் ''குழுவை நாங்கள் விரும்புமாறு அமைத்துக் கொள்ள எமக்கு உரிமை உண்டு. எனினும், குழுவில் நியமிப்பதற்கென ஏழு நபர்களை நீங்கள் பரிந்துரைக்க வேண்டும்; அவர்களை நாம் நியமிப்போம்'' என்று எழுதப்பட்டு இருப்பதாய்க் கருதுவோம். ஜான்சன்-ரோலண்ட்ஸ் வழக்கில் சட்டப்படியான உரிமையாளருக்கும் அவரது உறவினர்களுக்குமிடையே தாக்கோர் சாகிபுக்கும் வல்லபாய் பட்டேலுக்குமிடையே இருந்ததைப் போன்ற ஒப்பந்தம் ஏதும் இல்லை என்பது மெய்தான். அரசர் என்ற முறையில் தாக்கோர் சாகிப் செய்து கொண்ட ஒப்பந்தம் அவரைக் கட்டுப்படுத்தி நடைமுறைப்படுத்தத்தக்கதா என்ற வினாவைப் பற்றிய விவாதத்தில் நாம் இப்போது இறங்கவில்லை. அது மேலும் பல புதிய பிரச்சினைகளை எழுப்பக்கூடிய பிறிதொரு சிக்கல் ஆகும்.

## இடம்பெறாத தொடர்

'பரிந்துரை' என்பதற்கான சரியான பொருள் விளக்கம் குறித்து நாம் மேற்கொண்டிருக்கும் இந்த ஆய்வில், தாக்கோர் சாகிப், வல்லபாய் பட்டேல் ஆகியோரிடையிலான பூசல் அதன் நான்கு கூறுகளிலும் ஜான்சன், ரோலண்ட்ஸ் இடையிலான வழக்குடன் ஒத்துப் போகிறது. தாக்கோர் சாகிப், வல்லபாய் பட்டேலுக்கு எழுதிய கடிதத்தில், ''நாங்கள் விரும்பும் வகையில் குழு அமைத்துக் கொள்ள எமக்கு உரிமையுண்டு'' எனும் தொடர் இடம் பெறாதது எந்த வேறுபாட்டுக்கும் இடம் தராது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ராஜ்கோட்டின் இறையாண்மை கொண்ட ஆட்சியாளர் என்ற முறையில் அவர் கையொப்பமிடும் ஆவணம் எதிலும் இத்தகைய தொனியிலான தொடர் இடம் பெற்றிருப்பதாகவே கருதப்பட வேண்டும். இச்சொற்கள் ஆங்கு இடம் பெற்றிருந்தாலும் இல்லையென்றாலும் முடியரசர் என்ற தகுதி நிலையிலும், அவரது இறுதி அதிகாரங்களின்

கீழும் அவர் விரும்பியவாறு குழுவை அமைத்துக் கொள்ளும் நேரடி அதிகாரம் அடங்கியுள்ளது. திரு. வல்லபாய் பட்டேல் பரிந்துரைக்கும் குழுவை ஏற்காது தள்ளத் தமக்கு அதிகாரம் உண்டு என்று அவர் எழுதிய கடிதத்தில் கூறப்படாமலிருப்பது இந்நிலைமையை மாற்றி அவரது நேரடி அதிகாரத்தை இழக்கக் காரணமாகிவிடாது.

பட்டியலைப் புறக்கணித்துத் தள்ளுபடி செய்யும் அதிகாரத்தைத் தம்மிடம் தாக்கோர் சாகிப் தக்கவைத்துக் கொண்டுள்ளாரா என்பது இங்கு வினாவன்று. மாறாக பரிந்துரை எதையும் மறுத்தொதுக்கதக்கோர் சாகிப்புக்கு எப்போதுமே உள்ள உள்ளுறை அதிகாரங்களைப் பறிக்கும் வகையில் 'பரிந்துரை' எனும் சொல்லில் இடமேதும் உண்டா என்பதுதான் இங்கு எழும் வினா. உள்ளுரை அதிகாரம் தமக்கு எப்போது உண்டு என்று அவர் பறைசாற்றித் தெரிவிக்க வேண்டிய தேவை இல்லை.

இவ்வாறிருக்க 'பரிந்துரை' எனும் சொல்லின் வரம்புக்கு முந்தைய இரு எடுத்துக்காட்டு வழக்குகளின் தீர்ப்பிலும் உரைக்கப் பட்டதற்கு மாறான பொருள் விளக்கம் எதையும் கற்பிக்க இயலாது.

## உள்ளுறை அதிகாரங்கள்

முந்தைய இரு வழக்குகளைப் போன்றே, இந்தப் பூசலிலும் தாக்கோர் சாகிபின் உள்ளுறை அதிகாரங்கள் எனும் உறுதிப் பொருள் கொண்ட சொல்லுக்கு எதிராக 'பரிந்துரை' எனும் இளக்கமான பொருள் கொண்ட சொல் முன்னிறுத்தப்படுகிறது. இவ்வாறான நிலையில் இளக்கச் சொல்தான் உறுதிச் சொல்லுக்கு வழிவிட்டு விலக வேண்டும். அதாவது, 'பரிந்துரை'யால் கட்டளையிடவோ கட்டுப்படுத்தவோ முடியாது.

சர் மாரிஸ் குவையர் குறிப்பிட்டுள்ள, 1917 ஆம் ஆண்டின் வழக்கு எண் I.K.B.19 நான் குறிப்பிட்டுள்ள இரண்டு வழக்குகளுடன் முரண்பட்டிருப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால், கூர்ந்து நோக்கினால் இவற்றிடையே முரண் ஏதும் இல்லையென்பதையும் அவர் சுட்டும் வழக்கின் தன்மை தனிப்பட்டது என்பதையும் உணரலாம். 1917 ஆம் ஆண்டின் வழக்கு எண் I.K.B 19 இல் நியமிக்கும் அதிகாரம் கொண்டவர், வெறுமனே நியமிக்கும் அதிகாரம் மட்டுமே கொண்டவர். அவருக்கு பரிந்துரை எனும் சொல்லுக்கு பொருள் விளக்கமாய் கட்டளை எனக் கொண்டால் இழக்க நேரிடும் உள்ளுறை அதிகாரங்கள் ஏதும் கிடையாது.

நான் குறிப்பிட்டுச் சுட்டியுள்ள எடுத்துக்காட்டு வழக்குகள் இரண்டிலும் அடிப்படைக் கோட்பாடாய் அமைந்துள்ள சட்ட விதி யாவது, உள்ளுறை அதிகாங்கள் உள்ள சூழலில் பரிந்துரை எனும் சொல் கட்டுப்படுத்தும் கட்டளை என்ற பொருளைப் பெறமுடியாது என்பதும், உள்ளுறை அதிகாரங்கள் ஏதும் இல்லாத நிலையில் பரிந்துரை எனும் சொல்லுக்குக் கட்டுப்படுத்தும் கட்டளை எனும் பொருள்கொள்ளலாம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நான் குறிப்பிட்டுச் சுட்டிக்காட்டியுள்ள எடுத்துக்காட்டு வழக்குகள் இரண்டிலும் நிறைவேற்றும் பொறுப்பிலுள்ளோர்க்கு உள்ளுரை அதிகாரங்கள் இருந்தன; எனவே ஆங்கு, பரிந்துரை எனும் சொல் லுக்குக் கட்டுப்படுத்தும் கட்டளை என்று பொருள் கொள்ள முடியாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

சர். மாரிஸ் குவையர் சுட்டிக் காட்டியுள்ள வழக்கில் (நிறை வேற்றுபவருக்கு) உள்ளுறை அதிகாரங்கள் ஏதும் கிடையாது. ஆகவே அங்கு பரிந்துரை என்பது கட்டுப்படுத்தும் ஆணையே எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. தாக்கோர் சாகிப், வல்லபாய் பட்டேல் ஆகியோருக்கிடையிலான பூசல் நான் குறிப்பிட்ட இரண்டு வழக்கு களின் தன்மையின் பாற்பட்டதேயன்றி வழக்கு எண் *(1917)* I.K.B 19இன் தன்மையின் பாற்பட்டதன்று.[1]

★★★

1. பம்பாய் கிரானிக்கில், மே 2, 1939.

## 24

# திரு. ஜின்னாவைக் காட்டிலும் நான் மிகுந்த ஆர்வத்துடன் இருக்கிறேன்....

பார்சிகள் பலருக்கு ஆதரவாய், ''முஸ்லீம் விடுவிப்பு விழா நாளில் டாக்டர் அம்பேத்கர் கலந்து கொள்கிறார்.''

சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அடுத்த வெள்ளிக் கிழமை நடைபெறவுள்ள ''விடுவிப்பு நாள்'' விழாவில் கலந்து கொள்ளத் தீர்மானித்துள்ளார்.

அனைத்திந்திய முஸ்லீம்லீக் தலைவர் திரு. எம்.ஏ. ஜின்னாவுடன் ஒத்துழைத்து விழாவை வெற்றிகரமாய் நடத்துவதில் தாங்கள் தனிப்பட்ட முறையில் மிகுந்த ஆர்வம் கொண்டிருப்பதாய்ப் பார்சிகள் பலர் ஏற்கெனவே தெரிவித்துள்ளனர்.

காங்கிரசின் மதுவிலக்குக் கொள்கைக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் நடத்தத் திட்டமிடப்பட்டுள்ள ''விடுப்பு நாள் விழாவில்'' பங்குபெறுமாறு விடுவிக்கப்பட்ட அழைப்பு குறித்து கலந்தாலோசிப்பதற்காக சில மாதங்களுக்கு முன்னர் பார்சி சமூகத்தினரால் சர் கவாஸ்ஜி ஜஹாங்கீர் அரங்கில் நடைபெற்ற கூட்டத்தில் நியமிக்கப்பட்ட துணைக்குழுவில், செவ்வாய்க்கிழமை கூடி முடிவெடுக்கும். துணைக்குழுவில், பார்சி பஞ்சாயத்துத் தலைவர் திரு. எம்.பி. காரேகாட், சர் கவாஸ்ஜி ஜஹாங்கீர், சர் எச்.பி.மோடி, சர் பைராம்ஜி ஆகியோர் உள்ளிட்ட 50 முன்னணித் தலைவர்கள் இடம்பெற்றுள்ளனர்.

இச்செய்தித்தாளின் நிருபருடன் திங்கள் கிழமை உரையாடிய போது டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:

''டைம்ஸ் ஆப் இந்தியாவின் நிருபருக்கு நான் அளித்திருந்த உட்பொருள் செறிந்த பதில் அவ்விதழில் கடந்தவாரம் வெளியிடப்பட்டதிலிருந்து திரு.ஜின்னா நடத்தவிருக்கும் விடுப்பு நாள் விழாவில் கலந்துகொள்ள அவர் விடுத்திருக்கும் வேண்டுகோளைப் பற்றி

ஏராளமான நண்பர்களும் எதிர்ப்பாளர்களும் நான் என்னதான் கருதுகிறேன் என்பதை விளக்கி எனது நிலைப்பாட்டைத் தெளிவுறுத்துமாறு வேண்டுகோள் விடுத்த வண்ணம் உள்ளனர்.

திரு. ஜின்னாவின் அறிக்கையை நான் படித்துப் பார்த்தபோது, அவரினும் எனக்கு மிக உரித்தான மொழி நடையையும் உணர்வுகளையும் என்னை முந்திக் கொண்டு அவர் வெளியிடுவதற்கு இடம் கொடுத்து விட்டேனே என மிகவும் நாணமுற்றேன்.

## "அரிசனங்களின் நிலைப்பாடு"

காங்கிரசார் ஆட்சியின் போது முஸ்லீம்களின் மீது இந்துக்கள் செலுத்திய வல்லாண்மை குறித்து எவர் எவ்வாறு கூறினாலும் காங்கிரஸ் ஆளப்படுகையில் தாங்கள் எதிர்கொள்ள நேர்ந்த அவலங்கள் குறித்து லட்சோப லட்சக் கணக்கான அரிசனங்களின் நிலைப்பாடு எவ்வாறு இருக்கும் என்பதில் யாருக்கும் ஐயம் இருக்கத் தேவையில்லை. இந்த மாநிலத்தில் வேறு பிறரும் கூட அத்தகைய அவலங்களுக்கு ஆளாகியிருப்பது உண்மைதான். இது பற்றி, பட்சபாதமில்லாத விசாரணைக் குழு ஒன்றின் முன்பு நூற்றுக்கு ஐந்து சான்றுகளைத் திரு. ஜின்னாவால் தரமுடியும் என்றால் நூற்றுக்கு நூறு சான்றுகளை என்னால் தர இயலும். எனவே, காங்கிரஸ் அரசின் வல்லாண்மையையும் அடக்கு முறையையும் குறித்து ஆய்வு செய்யப் பேரரசு விசாரணைக் குழு ஒன்றை நியமிக்க வேண்டும் என்பதில் நான் திரு. ஜின்னாவை விடவும் மிகுந்த அக்கறை கொண்டுள்ளேன்.

தீண்டப்படாத மக்களைப் பொருத்த மட்டில் ஒடுக்குமுறைக் கொடுமையாளர்கள் பெரும்பாலும் இந்துக்கள்தான் என்றாலும், இது இந்து எதிர்ப்புச் செயல்பாடு அல்ல; காங்கிரசுக்கு எதிரான அரசியல் செயல்பாடுதான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். காங்கிரசுக்கு எதிரான இப்போராட்டம் இந்துக்களுக்கு எதிரானதென இந்துக்கள் கருதினால் (அது அவர்களது செயல்களுக்கெதிரான உளச்சான்றின் உறுத்தலேயாகும்) அதன் விளைவுகளுக்கு அவர்கள் தயாராயிருக்க வேண்டும். அதன் பொருள் காங்கிரசானது இந்துக்களுக்கான நிறுவனம் என்பதும் அதைப் பொது மக்களுக்கான நிறுவனமாய்ச் செயல்படவிடாமல் இந்துக்களே தடையாயுள்ளனர் என்பதுமேயாகும்.[1]

● ● ●

1. டைம்ஸ் ஆப் இந்தியா, செவ்வாய் 19.12.1939. பக்கம் 9; மறு அச்சீடு: கயிர்மோடு பகுதி 9, பக். 12 -13.

# 25

# விலங்குகள் உயிர்ப்பலியை புத்தர் தடுத்து நிறுத்திய போது பசு வதையை அவர்கள் கடைப்பிடித்திருந்தனர்

## "புத்த சமயத்தை உறுதியாய்ப் பற்றி நின்றார்க்குப் பார்ப்பனர்கள் விதித்த தண்டனையே" தீண்டாமை

சுதந்திரத் தொழிலாளர் கட்சித் தலைவர், டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் எமது சார்பாளரிடம் உரையாடிக் கொண்டிருந்தபோது தீண்டாமையின் தோற்றம் குறித்துப் புதிய கோட்பாடு ஒன்றினை வெளியிட்டார்.

தீண்டாமை என்பது நன்கு வேரூன்றிய சமூக நடைமுறை வழக்கமாய்க் கடைபிடிக்கப்பட்டு வருதல் இந்தியாவின் தனித்த இழிநிலையேயன்றி உலகில் வேறெங்கேயும் இத்தகைய நடைமுறை நிலவவில்லை. பல வகையிலும் இது இயற்கைக்கு முரணானது என்பதுடன் மனித உளவியலுக்கும் சமூக சக்திகளுக்கும்கூட எதிரானதுமாகும். எனவே உளவியலுக்கும், சமூக சக்திகளையும் மீறிய புறம்பானதொரு காரணமே இந்நடைமுறையை வேரூன்ற வைத்திருக்க வேண்டும்.

டாக்டர் அம்பேத்கரின் கருத்துப்படி, வேதகாலத்திலும் அதையடுத்த பல நூற்றாண்டுகளிலும் தீண்டாமை நிலவியிருக்க இயலாது; கணிசமான பிந்தைய காலத்தில்தான் அது தோன்றியிருக்க வேண்டும். வேதங்களில் எவ்விடத்தும் தீண்டாமை கூறப்படவில்லை. பின்னர் எவ்வாறு அது நடைமுறைக்கு வந்தது?

## ஓரளவிலான பழங்குடி ஆட்சி

மனிதர்களில் பெரும்பாலோர் கூட்டம் கூட்டமாய் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு நாடோடிகளாய்த் திரிந்து கொண்டிருக்க, ஒரு சிறு பகுதி மாந்தர் மட்டும் உழவுத் தொழிலில் ஈடுபட்டு

நிலையாக ஓரிடத்தில் வாழத் தொடங்கியிருந்த காலத்தை நமது மனக்கண் முன்பாக டாக்டர் அம்பேத்கர் நிறுத்துகிறார்.

அவ்வாறு வாழத் தொடங்கியவர்களில் மற்றவர்களிலும் சிறிது மேம்பட்ட தமது நாகரிக வாழ்க்கையின் அடித்தளங்களான நிலவுடைமை, வீடுகள், பயிர் ஆகியவற்றை இடைக்குல நாடோடிக் கூட்டங்கள் தாக்கித் தமது அமைதியான வாழ்க்கைக்கு ஊறு விளைவிப்பதினின்று காத்துக் கொள்ளவே விரும்பினர். ஆனால் வீடு, நிலம் போன்ற சொத்து சுமைகள் இல்லாத உடல் வலிமை மிக்க நாடோடிக் கூட்டங்களுக்கு ஈடுகொடுக்க வல்லவர்களாய் அவர்கள் இருக்கவில்லை. எனவே, நாடோடிக் கூட்டங்கள் ஒன்றுடன் ஒன்று போரிடுகையில் தோல்வியுற்றுச் சிதறிய நாடோடி இன மக்களில் சிலரை இவர்கள் தமது ஊர்க்காவல் குழுக்களாய் அமர்த்திக் கொண்டனர். இவர்களுக்கு ஊருக்கு வெளிப்புறத்தில் வீடும் சிறிது நிலமும் ஒதுக்கப்பட்டது. இற்றை நாள் போன்றே அந்தக் காலத்திலும் சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாப்பதே அவர்களது தலையாய கடமையாகும்.

நாடோடிக் கூட்டங்களின் தாக்குதல்களிலிருந்து ஊரைப் பாதுகாக்கும் பணியை இவர்கள் தலைமுறை தலைமுறையாய் ஆற்றி வரலாயினர். ஊரில் வாழ்ந்த குடிமக்களுக்கும் ஊருக்குப் புறத்தே வாழ்ந்த காவல் பணி மக்களுக்கும் இடையே தீண்டாமையின் அடையாளம் ஏதுமற்ற இயல்பான மனித உறவே நிலவிவந்தது. இந்த நிலை மாறி தீண்டாமை எவ்வாறு புகுந்தது?

இதற்கான காரணத்தை புத்த சமயத்தின் எழுச்சியில் காட்ட முனைகிறார் டாக்டர் அம்பேத்கர்.

இந்நாட்டில் புத்த சமயம் தோன்றி வேறெந்தப் படையெடுப்பாலும் இயலாத அளவு வேகத்தில் காட்டுத் தீயெனப் பரவலாயிற்று. நாட்டு மக்களில் பெரும்பாலோர், குறிப்பாகப் பல்வேறு வகைக் கைதொழில்களில் ஈடுபட்டிருந்த மக்கள் மிகப் பரவலாய் புத்த சமயத்தில் சேரலாயினர்.

தான் அழிந்து விடுவோமோ என்ற பேரச்சம் பார்ப்பனீயத்தைப் பற்றிக் கொண்டது. அப்போது வாழ்ந்த பார்ப்பனர்கள்

துணிந்து தமது பல நூற்றாண்டுக்காலப் பழைய மரபுகளைத் தூக்கி யெறிந்துவிட்டுப் புதிய மாற்றங்களை ஏற்கத் தயாரானார்கள்; அவ்வாறு மாற்றத்தை அவர்கள் ஏற்றிராவிடில் பார்ப்பானீயமே முற்றிலுமாய் அழிய நேரிட்டிருக்கும். அந்தக் காலகட்டத்தில் அவர்கள் அப்படி என்ன மாற்றங்களைச் செய்தார்கள்?

## பௌத்தத்தின் பரவலான ஈர்ப்பு

புத்தர் போதித்த மூன்று முக்கியமான அடிப்படைக் கோட்பாடுகள் அக்கால மக்களைக் கவர்ந்து ஈர்த்தன. அவர் சமூக சமத்துவத்தை போதித்து நால்வருண முறையை அடியோடு ஒழிக்க வேண்டுமென்று கோரினார்; அகிம்சையை வலியுறுத்தியதுடன், பெரும்பாலான மக்களை வறியவர்களாக்கும் வகையில் பெருத்த பொருட் சேதத்துடன் நடத்தப்படும் பொருளற்ற யாகங்களையும், புன்மையான சமயச் சடங்குகளையும் வன்மையாய்க் கண்டித்தார்; சமயச் சடங்குகளின்பால் மக்களுக்கு அருவருப்பைத் தோற்று வித்தார்.

அக்காலகட்டம் வரை பார்ப்பனர்கள் மரக் கறியுணவாளர் களாய் இருந்ததில்லை என்பதை டாக்டர் அம்பேத்கர் சுட்டிக் காட்டுகிறார். மாறாக மிகுந்த ஈடுபாட்டுடன் புலால் உண்ணும் பழக்கம் அவர்களிடையே நிலவிவந்தது. கடவுளை மகிழ்விப் பதாய்க் கூறிக்கொண்டு பசுக்களையும் பிற விலங்குகளையும் ஆயிரக்கணக்கில் கொன்று நடத்தும் யாகங்கள் உண்மையில் அவர்களது மட்டுமீறிய புலால் வேட்கையை நிறைவு செய்யும் பொருட்டேயாகும்.

## வேதகால உயிர்பலிகளின் பின்னுள்ள உண்மைகள்

வரைமுறையற்ற வகையில் இறைச்சிக்கான கோரிக்கையை பிராமணர்கள் முன்வைத்தனர். இதனால் உயிர்ப்பலியிடுவதற்காகப் பசுக்களைத் தேடும் நிலை விவசாயிகளுக்கு ஏற்பட்டது. அதனால் தங்களுக்கு வாழ்வாதாரமாக விளங்கிய பால் மற்றும் அதன் உப பொருட்கள் கிடைக்காத நிலைமைக்கு அவர்கள் ஆளானார்கள்.

இத்தகைய இரத்தப் பலிகள் எந்த அளவிற்கு நடைபெற்றன என்பதற்கான ஆதாரங்களை, வேதங்களில் சடங்குமுறைகளைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கும் கொடூரமான வருணனைகளிலிருந்து இன்றைக்கும் அறியலாம். எத்தகைய மனிதாபிமான நடவடிக்கைகளுக்கும் அவை சிறிதுகூட மரியாதை அளிக்கவில்லை. ஆகவே, பிராணிகளைப் பலியிடுதல், மதச்சடங்கு முறைகளைக் கைக்கொள்ளுதல் ஆகியவற்றை ஒழிக்க வேண்டுமென்று புத்தர் போதனை மேற்கொண்டபோது, பொருளாதார ரீதியாகவும், ஒழுக்க நெறிமுறைகள் ரீதியாகவும் இந்தக் கோட்பாடுகள் எந்த மக்களுக்கெல்லாம் கவர்ச்சிகரமானவையாக இருந்தனவோ அந்த மக்களெல்லாம் ஆவலோடு இவற்றை ஏற்றுக் கொண்டனர்; பிராமணீய போதனைகளை ஒதுக்கித் தள்ளினர்.

இவ்வாறு பொங்கி எழுந்த புத்த சமய அலையிலிருந்து பிராமணீயம் தன்னை எவ்வாறு காப்பாற்றிக் கொண்டது? இந்து மதம் சார்ந்த பலியிடுதல், சடங்குமுறை ஆகியவற்றை உடனடியாக அது கைவிட்டது. புத்தருக்கும் ஒருபடி மேலே சென்று இதுவரை பலியிடப்பட்டு வந்த பசுவை மிகப் புனிதமான பிராணியாகப் ஏற்றுப் போற்றிற்று.

இதுவரை இறைச்சி சாப்பிட்டு வந்த பிராமணர்கள் சைவ உணவாளர்களானார்கள். இதேபோல் குடிப்பழக்கமும் அடியோடு நிறுத்தப்பட்டது. மிகக் கடுமையான ஒழுக்க முறைகளை இந்து மதம் மேற்கொண்டது.

## சத்திரியர்களுடன் சமரசம்

சத்திரியர்கள் புத்த மதத்திற்குத் தாவுவதைத் தடுப்பதற்காக, பிராமணர்கள் தங்களுக்குச் சமமான அந்தஸ்தை அவர்களுக்கும் கொடுத்தார்கள். எத்தனையோ ஆதாரங்களுக்கிடையில் மத சம்பந்தமான ஒரு புத்தகத்திலிருந்து ஒரு செய்யுளை டாக்டர் அம்பேத்கர் சுட்டிக்காட்டுகிறார். 'ஒரு கைதி தப்பி ஓடிப்போய்விடாமல் தடுக்கும் பொருட்டு அவனுடைய இரண்டு பக்கங்களிலும் இரண்டு காவலர்கள் நிற்பதைப்போல, வைசியர்களும் சூத்திரர்களும் தங்கள் பிடியிலிருந்து நழுவிப் போய்விடாமல் தடுப்பதற்காக பிராமணர்களும் சத்திரியர்களும் ஒருங்கிணைந்து செயலாற்றுகிறார்கள்' என்று அந்தச் செய்யுள் கூறுகிறது.

## பசு எவ்வாறு புனித பிராணியாயிற்று

பசு புனிதமாக்கப்பட்டது. பலியிடும் சடங்குமுறைகள் நிறுத்தப் பட்டன. ஏராளமான புத்தமதப் போதனைகள் இந்து மதத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டன. புத்த மதத்திற்கு மாறிய மக்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் திரும்பத் தொடங்கினர். சமத்துவம் மற்றும் நான்கு வருண சாதி அமைப்பை ஒழித்தல் ஆகிய முக்கிய போதனை களை மட்டும் பிராமணர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் ஒரு விஷயம். அவர்கள் அப்போதைக்கு, சத்திரியர்களைத் தங்களுக்குச் சமமானவர்களாக அங்கீகரித்தார்கள். பிராமணக் கடவுள்களைப் பின்னுக்குத் தள்ளினார்கள். அந்த இடத்தில் சத்திரியக் கடவுளர்களை நிறுவினார்கள். மேலும் காலத்திற்கேற்ப பல சமரசங்களையும் செய்துகொண்டார்கள்.

## எதிர்பாராத நிகழ்வுகள்

இசைவான போக்குகள், சமரச நடவடிக்கைகள் ஆகிய பிராமணீய முயற்சிகளுக்கிடையே, புத்தரே முற்றிலும் வெறுத் தொதுக்கத்தக்க சற்றும் எதிர்பாராத நிகழ்வுப் போக்குகள் நிகழ்ந்தன. பசுக்கள் பலியிடப்படுவதைப் புத்தர் நிறுத்தினார். பசுக்களைப் பிராமணர்கள் புனிதமானவையாகக் கருதினர். இவ்வாறு பசுக்கள் புனிதமாக்கப்பட்டதை இந்து சமுதாயம் ஏற்று அவற்றைக் கொல்லு வதை நிறுத்திக் கொண்டது. இன்றைய தீண்டத்தகாதவர்களும் அவ்வாறே ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் தீண்டத்தகாதவர்கள், புதிய இறைச்சியை வாங்கி உண்ணமுடியாத அளவு மிகுந்த ஏழ்மை யில் உழன்று வந்ததால், இறந்த பசுக்களின் இறைச்சியை உண்ணும் வழிவழிவந்த முறையைத் தொடர்ந்தார்கள்.

இறந்தவற்றின் இறைச்சியை உண்பதை புத்தரோ பிராமணர் களோ தடுக்கவில்லை. உயிருள்ள பசுக்கள் வெட்டிக் கொல்லப் படுவது மட்டும்தான் தடைசெய்யப்பட்டது. ஆனால் தீண்டத்தகாத வர்கள் ஒரு மிகப் பெரிய தவறு செய்தார்கள். ஏழையிலும் ஏழையாய் சமுதாயத்தின் அடிமட்டத்தில் இருந்தாலும் நெடுங்காலமாகப் புத்த மதத்தில் அவர்கள் ஒட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்களை வழிக்குக் கொண்டு வருவதற்கு மிகப்பெரும் முயற்சி மேற்கொள்ள வேண்டி யிருந்தது. வேறு எதுவும் முடியாதபோது, சமுதாயப் புறக்கணிப்பு, தீண்டாமை ஆகியவை பிரயோகிக்கப்பட்டன.

இறந்த பசுக்களின் இறைச்சியை உண்ணும் அவர்கள் பழக்கம் அவர்களுக்கெதிராகப் பயன்படுத்தப்பட்டது. அது இயல்பாகவே இந்து உணர்விற்கு எதிராக இருந்தது. அது அருவருக்கத்தக்கது எனக் கருதப்பட்டது. பிராமணர்கள் இந்தச் சூழ்நிலையை எந்தவிதக் கஷ்டமும் இல்லாமல் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். ஆகவே, அந்த வர்க்கம் முழுமையின் மீதும் தீண்டாமை புகுத்தப்பட்டது. மற்றவர்களெல்லாம் புத்த மதத்தை விட்டு விலகிய பின்னரும், அம்மதத்திலேயே ஒட்டிக் கொண்டிருந்ததற்கு அவர்களுக்குக் கிடைத்த தண்டனை இது. ஆக, கல்வி, நவீன சுதந்திர சிந்தனைகள் மற்றும் சமூக சமத்துவம் ஆகிய எல்லாம் இருந்தும்கூட இன்றைக்கும் தீண்டாமை தொடர்கிறது.''[1]

● ● ●

1. பம்பாய் கிராணிக்கில்

## 26

# மகர்கள் வீரஞ்செறிந்த மக்கள்

மகர்கள் வீரஞ்செறிந்த மக்களாக இருந்திருக்கிறார்கள். பேஷ்வா படையை எதிர்த்துப் போரிட்டு வென்ற கிழக்கிந்தியக் கம்பெனியின் படைவீரர்கள் மகர்களிலிருந்து சேர்க்கப்பட்டவர்கள் தான். பேஷ்வாக்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையிலான கடைசிப் போர் புனா மாவட்டத்திலுள்ள கோரிகோவன் என்னு மிடத்தில் நடைபெற்றது. அந்தப் போரின் நினைவாக கோரி கோவனில் ஆங்கிலேயர்கள் எழுப்பிய நினைவுத்தூண் இருக்கிறது. அந்தப் போரில் சண்டையிட்டு வீர மரணமடைந்த ஆங்கிலப் படையைச் சேர்ந்த வீரர்களின் பெயர்கள் அந்த நினைவுத்தூணில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அதில் பத்தில் ஒன்பது பெயர்கள் மகர் களினுடையது. படையில் மகர்களைச் சேர்ப்பது 1892 ஆம் ஆண்டு வரை தொடர்ந்தது. எல்லாப் போர்களிலும் தங்களது வீரச் செயல் களை மகர்கள் வெளிக்காட்டியிருக்கிறார்கள். திடீரென்று 1892 ஆம் ஆண்டு மகர்களைப் படைக்குச் சேர்ப்பது நிறுத்தப்பட்டது. அதிலிருந்து ஆங்கில அரசின் மீது மகர்களுக்குத் தீராத மனக்குறை இருந்து வந்தது. ஏனெனில் இது நன்றிக்கெட்ட நடவடிக்கை என்று அவர்கள் கருதினார்கள். அவர்கள் அவ்வாறு குறைபட்டுக் கொண்டதில் நிரம்ப நியாயம் இருக்கிறது. ஏனெனில் இந்தத் தாழ்த்தப்பட்டவர்களின் உதவியில்லாமல் ஆங்கிலேயர்கள் இந்தியா வில் வெற்றி பெற்றிருக்க முடியாது; இதில் எத்தகைய ஐயமும் இருக்க முடியாது.

படையிலிருந்து தங்களைப் புறக்கணித்ததை எதிர்த்து மகர்கள் பெருங்கிளர்ச்சியை மேற்கொண்டார்கள். ஆனால் அது பலனளிக்க வில்லை. 1914 யுத்தத்தின்போது, ஆங்கில அரசாங்கம் நிர்ப்பந்தத்தின் காரணமாக, தடையினை அகற்றி, மகர் படை ஒன்றை உருவாக்கியது. அதுவும் யுத்தம் முடிகிற சமயத்தில் உருவாக்கப்பட்டது. எனவே அந்தப் படைவீரர்கள் யுத்தத்தில் பங்கேற்று தங்கள் திறமைகளைக் காட்ட முடியவில்லை. அந்தப் படை வடமேற்கு எல்லை மாகாணத் திலுள்ள வஸிரிஸ்தானில் நிறுத்தப்பட்டிருந்தது. வடமேற்கு எல்லை யில் நிறுத்தப்படும் எல்லாப் பட்டாளங்களின் ஆயுதக் கிடங்குகள் மீதும் பத்தான்கள் திடீர்த் தாக்குதல்கள் நடத்தித் தங்களுக்குத் தேவையானவற்றை கைப்பற்றிச் செல்வது வழக்கம். அத்தகைய பத்தான்களிடம் ஒவ்வொரு பட்டாளமும் சில துப்பாக்கிகளையும் தோட்டாக்களையும் இழந்திருக்கின்றன. அப்படிப்பட்ட பத்தான்களே,

மகர் பட்டாளத்திடமிருந்து ஒரு துப்பாக்கியைக்கூட, ஒரு தோட்டாவைக்கூடக் கைப்பற்றிச் செல்லமுடியவில்லை என்பது வரலாற்றுப் பதிவு பெற்ற செய்தியாகும். ஆங்கில அரசாங்கம், இராணுவப் பயன்பாடுகளுக்காக மகர்களை மீண்டும் பயன்படுத்த ஆரம்பித்திருப்பதால், மகர் படைகள் தொடரும் என்றும், மேலும் சில படைகள் சேர்க்கப்படும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் மாறாக பொருளாதாரத்தைக் காரணம் காட்டி, மகர் படையை ஆங்கில அரசாங்கம் கலைத்துவிட்டது. இது மகர்களிடையே பெரும் கசப்புணர்வை ஏற்படுத்தியது. இந்த யுத்தம் வந்தவுடன் தங்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று மகர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் யுத்தத்தின் ஆரம்ப கட்டத்தில் ஆங்கில அரசாங்கம் எடுத்த நடவடிக்கைகள் வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுவது போலிருந்தது. மகர்கள் பணிப் படைகளுக்குத்தான் தேவைப்பட்டார்களே தவிர, போர்ப் படைகளுக்கு அல்ல. போர்ப்படைகளை விட பணிப்படைகள் பாதுகாப்பானவை. ஆனாலும் போர்ப்படைகளில்தான் மகர்கள் சேர விரும்பினார்கள்.

போர் வேட்கையுள்ளவர்களுக்கும் அல்லாதவர்களுக்கும் இடையில் வேறுபாடு காட்டியது இந்தியாவிலிருந்த ஆங்கில அரசின் அற்பச் செயல்களுள் ஒன்றாகும். இதைவிடப் பெருங்கேடு வேறேதும் இல்லை. இத்தகைய விவேகமற்ற வேறுபாட்டை ஆங்கில அரசாங்கம் கைவிடச் செய்வதற்கு மிகப்பெரும் பேரழிவைத் தரும் யுத்தம் ஒன்று தேவைப்பட்டிருப்பதுதான் வேதனைக்குரிய செய்தியாகும். ஒரு மகர் படையை உருவாக்குவதற்கு அரசாங்கம் ஆணையிட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இதற்கான பெருமையெல்லாம் மேதகு பம்பாய் ஆளுநரையே சேரும். நான் இந்தக் குறையை அவரிடம் கூறியதும், அவர் இந்த விஷயத்தை மத்திய அரசுக்கு எடுத்துக் கூறி, வெற்றிகரமாக முடித்துவிட்டார். இந்த சந்தர்ப்பத்தைத் தங்களுக்கும், இந்த நாட்டிற்கும் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுமாறு மகர்களை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். மகர்களின் மீது நம்பிக்கை வைக்குமாறும், இந்த யுத்தம் முடிந்ததும் படையிலிருந்து அவர்களைக் கழற்றிவிட வேண்டாம் என்றும் ஆங்கில அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

பம்பாய் **(டாக்டர்) பி.ஆர். அம்பேத்கர்**[1]

• • •

1. டைம்ஸ் ஆப் இந்தியா, ஜூன் 18, 1941.

# 27

# வட்டண்டர்கள், மகர்கள், மாங்குகள் ஆகியோரின் மனக் குறைகள் பற்றிய முறையீடு

''மகர் வட்டன்கள் மீது பம்பாய் அரசாங்கம் கூடுதல் வரி விதித்தது. இந்தப் பிரச்சினை குறித்து 1927 லிருந்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் போராடி வந்திருக்கிறார். ஆனால் இப்போது அந்த ஏழைகளைக் கொத்தடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பதற்குப் பதிலாக அவர்கள் மீது கூடுதல் வரிகளை விதித்ததன் மூலம் அவர்களின் வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சியிருக்கிறார்கள். மகாராஷ்டிரத்திலும் கர்னாடகத்திலும் உள்ள மகர்களும், மாங்குகளும், வேதியாக்களும் தங்கள் குறைகளை எடுத்துரைக்க டாக்டர் அம்பேத்கரின் தலைமையில் 1939 டிசம்பர் மத்தியில் அகமத் நகர் மாவட்டத்திலுள்ள ஹரேகோவனில் ஒரு மாநாட்டைக் கூட்டினார்கள்''[1].

*1939 டிசம்பர் 16ல் 20,000 மகர்களும், மாங்குகளும், வேதியர்களும் குழுமியிருந்த மாநாட்டில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் உரையாற்றினார். அவர்களது கோரிக்கைகளை அரசாங்கத்திடம் எடுத்துரைப்பதாக அப்போது அவர் உறுதியளித்தார். அதன்படி அவர் மனு ஒன்றைத் தயாரித்து 1941 ஜூலை 14ஆம் தேதி சமர்ப்பித்தார். அந்த மனு வருமாறு :- ஆசிரியர்கள்.*

பெறுநர்

மேதகு சர் ரோஜர் லும்லே
ஜி.ஸி.எஸ்.ஐ.இ., பம்பாய் ஆளுநர்,
மேதகு தங்கள் திருவுள்ளம் இசைவதாகட்டும்.

இந்த மாகாணத்தில் கீழ்நிலை கிராம சேவகர்களாகக் கருதப்படும் வட்டன் மகர்கள், மாங்குகள் மற்றும் வேதியாக்களின்

1. கீர், பக்கங்கள் 330 - 331.

குறைகள் பற்றிய கீழ்க்கண்ட முறையீட்டை, மேதகையீரின் அன்பான பார்வைக்காகவும் உரிய நடவடிக்கைக்காகவும் சமர்ப்பிக்கறேன்:-

1. வட்டண்டர்கள் எனப்படும் கீழ்நிலை கிராம சேவகர்கள் தொடர்பாக பம்பாய் அரசாங்கம் பிறப்பித்திருக்கிற புதிய கொள்கையினால் இந்தக் குறைகள் எழுந்துள்ளன. இரண்டு மிகமுக்கியமான விஷயங்களில் அவர்களை அவை பாதிக்கின்றன. அவையாவன :-

(i) அவர்களின் ஊதியத்தில் மிகப் பெரும் வெட்டு, மற்றும்
(ii) அவர்களின் வேலைகள் கணிசமாக அதிகரிப்பு.

2. அவர்களுடைய ஊதியத்தைப் பொறுத்தவரையில் கிராம மக்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம் மிக அதிகம் என்னும் ஊகத்தில், அதைக் குறைக்க வேண்டும் என்ற நோக்கில் புதிய கொள்கை செயல்படுகிறது. ஏற்கனவே வரி விதிக்கப்படாத இனாம் நிலங்களின் மேல் ஜுடி (பணமாக வரி விதிப்பு) யைப் புகுத்தவும், ஏற்கனவே வரி விதிக்கப்பட்டிருக்கும் நிலங்களின் மேல் ஜுடியை அதிகரிக்கவும் கட்டளையிடப்பட்டிருக்கிறது.

3. அவர்களின் வேலைகளைப் பொறுத்தவரை, பம்பாய் அரசாங்கம், வருவாய்த்துறை வழியாக 13.9.1938 தேதியிட்ட அரசுத் தீர்மானம் எண் 7420/33 ஐ வெளியிட்டிருக்கிறது. அதில், மகர்களும், மாங்குகளும், வேதியாக்களும் இனி செய்ய வேண்டியதென எதிர்பார்க்கப்படுகிற பணிகளனைத்தும் தீர்மானம் 19 இல் குறிப்பிடப் பட்டுள்ளன.

4. இந்தக் கொள்கையின் அநீதிகளை எதிர்க்க 1939 நவம்பர்* 16 அன்று அகமத் நகர் மாவட்டத்திலுள்ள ஹரே கோவனில் எனது தலைமையில் மகர்கள், மாங்குகள் மற்றும் வேதியாக்களின் மாநாடு ஒன்று நடைபெற்றது. அந்த மாநாட்டில் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இந்தத் தீர்மானங்கள் மேதகையீரின் சாதகமான ஆய்விற்காகவும், அரசின் உரிய நடவடிக்கைக்காகவும் அனுப்பி வைக்கப்பட்டன. உடனடி பார்வைக்காக, மேற்படி தீர்மானங்களின் பிரதிகளை பிற்சேர்க்கை ஒன்றில் இணைத்திருக்கிறேன்.

5. 1940 ஜுன் 7 ஆம் நாள் நடைபெற்ற பிற்படுத்தப்பட்டோர் ஆணையக் கூட்டத்தில் கூட திரு.பி.கே.கெய்க்வாட், எம்.எல்.ஏ.

---

★ மாதம், டிசம்பர் - ஜனதா: 9 மற்றும் 23 டிசம்பர் 1939 என்று வாசிக்கப்பட வேண்டும்.

அவர்களால் இந்தத் தீர்மானங்கள் முன்வைக்கப்பட்டன. இந்தப் பிரச்சினை சம்பந்தப்பட்ட அக்கூட்ட நடவடிக்கைகளின் நகல் இத்துடன் பிற்சேர்க்கை இரண்டில் இணைக்கப்பட்டிருக்கிறது.

6. மேற்படி மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் சம்பந்தமாக இந்த அரசாங்கம் இதுவரை உரிய கவனம் செலுத்த வில்லை என்பதைப் பணிவுடன் தெரிவிக்கக் கடமைப்பட்டுள் ளேன். நான் அந்தத் தீர்மானங்களை அனுப்பி ஒன்றரை ஆண்டு களுக்கு மேலாகிவிட்டது. ஜூடி வரிவிதிப்பு விஷயத்திலோ அல்லது கீழ்நிலைக் கிராமச் சேவகர்கள் செய்யப்பணிக்கப்பட்டுள்ள நீண்ட பளுமிகுந்த வேலைப் பட்டியலைத் திருத்தும் விஷயத்திலோ அர சாங்கத்தின் கொள்கையில் எந்த மாற்றமும் காணப்படவில்லை. அதற்கு மாறாக, ஜூடி வரி வசூல் செய்யும் பணி தீவிரப்படுத்தப் பட்டுள்ளது. மிகுந்த ஏழ்மை நிலையிலுள்ள கீழ்நிலை கிராம சேவகர்களின் குடும்பங்களிலுள்ள சட்டி பானைகளெல்லாம்கூட நீதிமன்ற நடவடிக்கைகளின் பெயரால் ஜப்தி செய்யப்படுகின்றன. பெரும்பாலான இக்குடும்பங்கள் அனாதரவாக்கப்பட்டுள்ளன.

இந்தக் காரணங்களினால்தான், கீழ்நிலை கிராம சேவகர் களின் கோரிக்கைகளை மேதகையீர் மிகுந்த கவனத்துடனும் அன்புடனும் அனுதாபத்துடனும் பரிசீலித்து, அவர்களுக்கு மிகவும் தேவைப்படுகிற, நீண்ட காலமாக எதிர்பாக்கப்படுகிற நிவா ரணத்தை அளிப்பீர்கள் என்னும் திட நம்பிக்கையுடன், இந்த மனுவை மேதகையீரிடம் சமர்ப்பிக்கிறேன்.

## I. ஊதியக் குறைப்பு

7. முதலில் ஜூடி வரிவிதிப்பு பிரச்சினையை எடுத்துக் கொள்ள விழைகிறேன். மகர்களின் இனாம் நிலங்களுக்கு மட்டுமே தற்போது இந்தக் கொள்கை அமுல்படுத்தப்படுகிறது. காலப் போக்கில் இது மற்றவர்களுக்கும் விரிவுபடுத்தப்படலாம். மகர் களின் இனாம் நிலத்தின் மீது ஜூடி விதிக்கப்படும் விஷயத்தில், மகர்களின் ஊதியத்தைக் குறைக்கும் கொள்கையை அரசு கடைப் பிடிப்பதற்கான சரியான காரணம் எனக்குத் தெரியவில்லை. அதற்கு இரண்டு காரணங்கள் இருக்கலாம்.

8. முதலில், பணியாற்றும் மகர்களின் எண்ணிக்கை குறைந் திருப்பதை, ஜூடி வரி விதிப்பு அதிகமாக்கப்பட்டிருப்பதற்குக் காரணமாகக் காட்டி, அரசு நியாயப்படுத்த முனைகிறது. மகர்கள்

வைத்திருக்கும் இனாம் நிலங்களின் மீதான ஜூடி வரிவிதிப்பை அதிகப்படுத்துவதன் மூலம் அவர்களின் ஊதியத்தைக் குறைக்கும் முறையே, பணியாற்றும் மகர்களின் எண்ணிக்கையைக் குறைக்கும் திட்டத்தின் விளைவுதான் என்று கூறப்படுகிறது.

9. தொடக்கத்திலேயே, இந்த வாதத்தில் புதைந்திருக்கும் தவற்றை மேதகையீரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். உண்மையிலேயே, பொதுவாகவோ அல்லது குறிப்பிட்ட கிராமத்திலோ பணியாற்றும் மகர்களின் மெய்யான எண்ணிக்கை குறைக்கப்படவே இல்லை. பணியாற்றும் மகர்களின் எண்ணிக்கை மாறாமல் அப்படியே இருக்கிறது. ஆனால், என்ன நடந்தது என்றால், வட்டன் பதிவேடுகள் திருத்தப்பட்டு உண்மை நிலைக்குக் கொண்டுவரப் பட்டன. ஒரு சமயத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள பதிவேடுகளிலும் பணியாற்றும் மகர்களின் எண்ணிக்கை மிக அதிகமாகக் காட்டப்பட்டிருந்தது. இரண்டு காரணங்களுக்காக, மக்கள் இதனை ஆட்சேபிக்கவில்லை. முதலாவதாக, பதிவேடுகளில் காண்பிக்கப் படும் எண்ணிக்கை பெயரளவிலானது. ஆனால் தினசரி பணியாற்று கிறவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவானது. இரண்டாவதாக தான் வட்டன் சொத்து மற்றும் வட்டன் அலுவலகத்தோடு தொடர்புடைய வட்டண்டர் என்பதை நிரூபிப்பதற்காகவும், மகரின் நன்மை கருதி அவரின்பெயர் பதிவேட்டில் இருப்பதற்காகவும் ஆகும். மகர்கள் சுயமரியாதை இயக்கம் ஆரம்பித்தவுடன், ஒவ்வொரு கிராமத்திலும் மகர்களுக்கும் கிராமத்தவர்களுக்குமிடையில் பகைமை வளர்ந்தது. கிராம அதிகாரிகள் வட்டன் பதிவேட்டைத் தவறாகப் பயன்படுத்த ஆரம்பித்தார்கள். பதியப்பட்ட எண்ணிக்கையில் பத்தில் ஒரு பகுதியினர்கூட இதற்குமுன் எப்போதுமே வேலைக்குத் தேவைப்படாத நிலையில், பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள அத்தனை மகர்களும் வேலைக்கு வரவேண்டும் என்று அழைக்கப்பட்டார்கள். தாலுகா அதிகாரிகளும் கிராமத்துப் பட்டீல்களை ஆதரித்தார்கள். பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து மகர்களும் முழு நேரப் பணியிலிருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இது, கிராமத்திலுள்ள மொத்த மகர் மக்களையும் அரசு வேலைக்குக் கட்டாய ஆளெடுப்புச் செய்வதற்கொப்பாகும். அவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள இனாம் நிலத்திலிருந்து கிடைக்கும் வருவாய் அவர்களின் பிழைப்பிற்குப் போதாத காரணத்தால், அவர்களில் மிகப் பெரும்பாலானவர்கள் வாழ்வாதாரத்திற்காக பிற உதிரி வேலைகளைச் செய்யவேண்டியிருக்கிறது. எனவே பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து மகர்களும் முழுநேரப் பணியில் ஈடுபடமுடியாது

என்ற காரணத்தால், இத்தகைய கசக்கிப் பிழிகிற அநீதியான கட்டளைகளுக்கு அடிபணிய மகர்கள் மறுத்துவிட்டார்கள். பணிபுரியும் மகர்களின் எண்ணிக்கையைக் குறைத்து வட்டன் பதிவேட்டைச் சரிசெய்யும்படி கோரி வட்டன்டார் மகர்கள் கிளர்ச்சி மேற்கொண்டார்கள். இதில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். மகர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டது. ஆனால், நான் முன்னர் சொன்னபடி, பணியாற்றும் மகர்களின் எண்ணிக்கை குறையவில்லை. தவறான பதிவேடு சரிசெய்யப்பட்டிருக்கிறது, அவ்வளவுதான். இதைக் குறைப்பு என்று கூறுவது, உண்மையை மறுப்பதாகும். அல்லது தவறாகப் புரிந்துகொள்வதாகும். நிகழ்ந்தது என்னவென்றால், தவறான வட்டன் பதிவேடு சரிசெய்யப்பட்டிருக்கிறது என்பதேயாகும். உண்மை இவ்வாறிருக்க இந்த விஷயத்தில், ஜூடி வரிவிதிப்பின் மூலமோ அல்லது ஜூடி வரியை அதிகரிப்பதன் மூலமோ மகர்களின் ஊதியத்தைக் குறைக்கும் தங்களது கொள்கையை அரசாங்கம் எவ்வாறு நியாயப்படுத்த முடியும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

10. பணிபுரியும் மகர்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டிருப்பதாகவே வைத்துக் கொண்டாலும் - ஆனால் அது உண்மையல்ல - அதை வைத்துக் கொண்டு ஜூடி வரிவிதிப்பின் மூலமோ அல்லது ஜூடி வரிவிதிப்பை அதிகரிப்பதன் மூலமோ அவர்களின் ஊதியத்தைக் குறைக்கும் நடவடிக்கையில் அரசாங்கம் எவ்வாறு ஈடுபட முடியும் என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நடவடிக்கைகளைக் கைக்கொள்ளுவதன் மூலம், வட்டன் சொத்துக்கள் சிறப்புப் பிரிவின் கீழ்வருகின்றன என்பது, மற்றும் அது ஊதியம் என்று கூறப்பட்டாலும், ‘வேலையில்லையென்றால் ஊதியமில்லை’ அல்லது, ‘இவ்வளவு வேலைக்கு, இவ்வளவு ஊதியம்’ போன்ற விதிகளை, வட்டண்டர்களையும் மற்றும் வட்டன்களையும் பொறுத்தவரை இதுவரை அரசாங்கம் அமுல்படுத்தியதில்லை என்பது போன்ற இந்த மிகமுக்கிய பிரச்சினையில் பெரும் பங்கு வகிக்கும் மிக முக்கிய சூழ்நிலை பற்றி கவனமே செலுத்தப்படவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

11. இது தொடர்பாக, இதேபோன்ற சூழ்நிலைகளில் பிற வட்டண்டர்கள் அரசினால் எவ்வாறு நடத்தப்படுகிறார்கள் என்பதைக் காட்ட கீழ்க்காணும் உண்மைகளை மேதகையீரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். நாட்டின் இந்தப் பகுதியில் ஆங்கி

லேயர்கள் ஆட்சி மேற்கொண்டபோது, மராத்திய அரசாங்கம் ஊதாரித்தனமாக ஆட்சியதிகாரத்தைப் பயன்படுத்தியிருந்ததைக் கண்டார்கள். அரசின் உரிமைகளை தனிமனிதர்களுக்கு மாற்றிக் கொடுத்து, மிகப்பெரிய அளவிலான நிலங்களை **இனாம்கள்** என்ற பெயரில் உருவாக்கியிருந்தனர். அந்த நிலங்களின் உரிமையாளர்கள் இனாம்தார்கள் அல்லது வட்டன்டர்கள் என்றழைக்கப்பட்டனர். இந்த இனாம்கள் 1) தனியார், 2) தேவஸ்தானம், 3) அரசியல் சார்ந்தது, 4) அரசியல் சாராதது என்று நான்கு வகைப்படுத்தப்பட்டன: அவையாவும் பாரம்பரிய **இனாம்களாயின.** சேவையைப் பொறுத்த மட்டில் இந்த **இனாம்கள்** இரண்டு வகைப்படுத்தப்பட்டன. (அ) அரசுக்குச் செய்யும் சேவைக்கான ஊதியமாகக் கொடுக்கப் பட்ட **இனாம்கள்,** (ஆ) கொடையாகக் கொடுக்கப்பட்டதால் அரசுக்குச் சேவை செய்யத் தேவையில்லாத **இனாம்கள்.** தனியார் மற்றும் தேவஸ்தான **இனாம்கள்,** சேவை தேவையில்லாத **இனாம்** வகைப்பட்டன. அரசியல் சார்ந்த மற்றும் அரசியல் சாராத **இனாம்கள்** சேவை தேவைப்படும் **இனாம்** வகைப்பட்டன.

12. ஆங்கில ஆட்சியின் முதல் 23 ஆண்டுக் காலத்தில் (1818-1841) **இனாம்** நிலங்களை வைத்துக் கொள்வதற்காகத் தனிப்பட்ட வர்களால் எழுப்பப்பட்ட மிகப் பரந்த அளவிலான கோரிக்கைகள், ஆங்கில அரசினால் ஏற்கப்படவில்லை. 1941 இல்தான், இக்கோரிக்கை களைப் பரிசீலிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது. தெற்கு மராத்தா பகுதியில் அரசுக்கு அன்னியமாக்கப்பட்ட நிலங்களைப் பற்றி விசாரிக்க இரண்டு பேர் கொண்ட குழு ஒன்று 1943 இல் நியமிக்கப் பட்டது. 1843 இல் நியமிக்கப்பட்ட விசாரணைக் குழு 1852 வரை ஒன்பது ஆண்டுகள் இயங்கியது. அதன்பிறகு அது **இனாம்** குழுவாக மாற்றி அமைக்கப்பட்டது. 1852 ஆம் ஆண்டு சட்டப்பிரிவு XI-இன் படி அதன் நடவடிக்கைகளெல்லாம் சட்ட அங்கீகாரம் பெற்றன. இந்த சட்டப்படி, நிலத்தை வைத்திருப்பவர்கள் அல்லது நில உடைமைக் காக அரசுக்கெதிராகக் கோரிக்கை வைப்பவர்கள் அல்லது **இனாம்** மற்றும் **ஜாஹிர்களின்** பாத்தியதை விழைபவர்கள் அவர்களின் மற்ற ஈடுபாடுகள் மற்றும் நிலவரியிலிருந்து தவிர்ப்பு வேண்டுவோர் ஆகியோர்களின் உரிமைப் பத்திரங்களை ஆய்வு செய்ய ஆணையர் களையும் துணை ஆணையர்களையும் நியமனம் செய்யும் உரிமை அரசுக்கு அளிக்கப்பட்டது. இந்தக் குழுவின் நடவடிக்கைகள் மிக மெதுவாக இருந்தன. மேலும் அது குஜராத் வரை விரிவடைய வில்லை. கடைசியாக, இக்குழு விசாரிக்கும் முறையை ஒழிப்பது என்று முடிவெடுக்கப்பட்டது. அதற்கு மாற்றாக, 'மொத்தத் தீர்வு'

முறை மாநில முழுமைக்குமாக விரிவுபடுத்தப்பட்டது. புதிய மாநிலங்களென்று அழைக்கப்படும் தக்காணம், கண்டேஷ் மற்றும் தெற்கு மராத்தியப் பகுதிகளுக்குப் பொருந்தும் 1863 ஆம் வருடத்திய சட்டப் பரிவு II, மற்றும் பழைய மாநிலங்களென்று அழைக்கப்படும் குஜராத் மற்றும் குடகு பகுதிகளுக்குப் பொருந்தும் 1863 ஆம் வருடத்திய சட்டப் பிரிவு VII ஆகிய இரண்டு சட்டங்களால் இந்த மொத்தத் தீர்வு முறை செயலாற்றப்பட்டது.

## (அ) சேவை தேவையில்லாத இனாம்கள்

13. மொத்தத் தீர்வு சட்டத்தின் விதிமுறைகள் (1) தனியார் மற்றும் (2) தேவஸ்தான இனாம்கள் ஆகிய சேவை தேவையில்லாத இருவகை இனாம்களுக்கு மட்டும் பொருந்தும். தீர்வுச் சட்டத்தில் பொதிந்திருக்கும் முக்கிய கொள்கைகளாவன :-

(a) (வர்ஷாசன்கள் என்று கூறப்படும்) தனியார் இனாம்கள் அனைத்தையும், அவை இனாம் குழுவினால் தீர்ப்பளிக்கப்பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், மாற்றத்தக்க இறையிலி நிலமாக மாற்றுதல்.

(b) அவ்வாறு மாற்றப்படுவதனால், அத்தகைய நிலங்களின் மீது நஸரானா எனப்படும் வரி விதித்தல். அதற்கான கட்டணமும் நிர்ணயிக்கப்பட்டது:

(i) 1863 ஆம் ஆண்டு சட்டம் II-ன்படி, விதிக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாய் வரிக்கும் 4 அணா அதோடு கூட, ஒவ்வொரு ரூபாய்க்கும் கூடுதலாக ஒரு அணா நஸரானா.

(ii) 1863 ஆம் ஆண்டு சட்டம் VII ன் படி, நஸரானா இல்லாமல், ஒவ்வொரு ரூபாய்க்கும் 2 அணா.

14. இந்தச் சட்டங்களால் முழுத் தீர்வை அமுல்படுத்த, தனது உரிமைகளை விட்டுக் கொடுத்ததன் மூலம் ஆண்டொன்றுக்கு அரசுக்கு ஏற்படும் இழப்பு கொஞ்சநஞ்சமல்ல. கீழ்க்காணும் விவரங்களிலிருந்து அது தெளிவாகும் :

**தனியார் மற்றும் தேவஸ்தான இனாம் நிலங்களாக வைத்துக் கொள்ளப்பட்டிருக்கும் சேவை தேவையில்லாத இனாம் நிலங்களினால் அரசுக்கு ஏற்படும் வருடாந்திர இழப்பு**

| பிரிவு | ஜூடி வரி நீங்கலாக அன்னியப்படுத்தப்பட்ட நிலங்களின் மீதான வரி விதிப்பு. | | |
|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. |
| 1. வடக்குப் பிரிவு | 1,26,529 | 15 | 1 |
| 2. மத்தியப் பிரிவு | 2,86,292 | 2 | 3 |
| 3. தெற்குப் பிரிவு | 2,02,827 | 3 | 6 |
| **மொத்தம்** | **6,15,649** | **4** | **10** |

15. முன்னர் கூறியபடி, தனியார் **இனாம்கள்** மற்றும் தேவஸ்தான **இனாம்களாகிய** சேவை தேயில்லாத **இனாம்களுக்கு** மட்டுமே மொத்தத் தீர்வுச் சட்டத்தின் விதிமுறைகள் பொருந்தும். அரசியல் சார்பான **இனாம்கள்** மற்றும் அரசியல் சார்பற்ற **இனாம் களான** சேவை தேவைப்படும் **இனாம்**களுக்கு அவை பொருந்தாது. அவைகள் திட்டமிட்டே இச்சட்ட நடவடிக்கைகளிலிருந்து விடுவிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றிற்குத் தனி நடவடிக்கை காத்திருக்கிறது.

## (ஆ) சேவைக்காகக் கொடுக்கப்பட்ட இனாம் நிலங்கள்

16. (1) **அரசியல் சார்ந்த இனாம்கள்:** இவை **'ஜெஹாகிர்கள்'** மற்றும் **'சரண்ஜாம்கள்'** என்றழைக்கப்படும் வகை சார்ந்த **இனாம்கள்.** இவை, சமுதாயப் பணி மற்றும் இராணுவப் பணியாற் றியமைக்காக அல்லது கடந்த காலத்தில் அரசுப் பணியாற்றிய பிரபுக்கள் மற்றும் உயர் அதிகாரிகள் தங்களின் கௌரவத்தைப் பேணிக் காப்பதற்காக அரசாங்கம் அளிக்கும் மானியங்களாகும். இந்த அரசியல் சார்ந்த **இனாம்**களின் தீர்வுகளெல்லாம், தனியார் **இனாம் களுக்கான** தீர்வுகளின் அடிப்படையிலேயே ஆங்கில அரசினால் நடைமுறைப்படுத்தப்பட்டன. அதாவது, அரசுக்குச் சேவை செய்யும் கடப்பாட்டிலிருந்து அவர்களுக்கு விலக்களிக்கப் பட்டிருந்தாலும், தொடக்க மானியம் கொடுக்கப்பட்ட தேதிக்கேற்ப ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட தலைமுறையினர் பரம்பரையாகத் தொடர்ந்தனர். இதன் விளைவாக, இந்த **சரண்ஜம்தார்கள்,** அரசாங்கத்திற்கு எவ்விதச் சேவையுமே செய்யாமல் மானியத்தை அரசுக் கருவூலத்தி லிருந்து ரொக்க உதவித் தொகையாகப் பெற்று வருகிறார்கள்.

**சரண்ஜாம்கள்** காரணமாக அரசுக்கு ஏற்படும் இழப்பானது, ஆண்டுதோறும் அரசுக் கருவூலத்திலிருந்து **சரண்ஜம்தார்களுக்கு** அளிக்கப்பட்ட ரொக்க உதவித் தொகையினால் குறிக்கப்படுகிறது. இதனால் அரசுக்கு ஏற்பட்ட ஆண்டு இழப்பை கீழ்க்காணும் அட்டவணை காட்டுகிறது:

**சரண்ஜாம்களினால்** அரசுக்கு ஆண்டுதோறும் ஏற்படும் இழப்பு.

| மாவட்டம் | **சரண்ஜாம்தார்களுக்கு** அளிக்கப்பட்ட | | ரொக்கம். |
|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. |
| புனா | 34,091 | 11 | 11 |
| ஷோலாப்பூர் | 10,651 | 13 | 9 |
| அகமத்நகர் | 30,590 | 12 | 5 |
| சதாரா | 25,447 | 9 | 3 |
| கண்டேஷ் | 38,714 | 5 | 5 |
| பீஜப்பூர் | 11,738 | 12 | 1 |
| நாசிக் | 47,037 | 10 | 4 |
| பெல்காம் | 32,875 | 12 | 4 |
| ரத்னகிரி | 1079 | 2 | 3 |
| கொலாபா | 1655 | 10 | 6 |
| தார்வார் | 30091 | 0 | 3 |
| தெற்கு எம்.சி. | 3378 | 15 | 1 |
| சதாரா அரசியல் முகவர் | 158 | 8 | 0 |
| மொத்தம் | 26,7501 | 11 | 7 |

17. இந்த மாநிலத்தில் மொத்தமாக 104 **சரண்ஜம்தார்கள்** உள்ளனர்.அதாவது அரசுக்கு எந்தவிதச் சேவையும் செய்யாமலேயே ஒவ்வொரு **சரண்ஜம்தாரும்** ஆண்டுக்குச் சராசரியாக ரூ.2,500 பெறுகிறார்கள் என்றாகிறது. 104 **சரண்ஜம்தார்களில்** 54 பேர் பிராமணர்கள், 38 மராத்தியர்கள், 7 முஸ்லீம்கள், 3 கயஸ்தாக்கள், ஒரு ராஜபுத்திரப் பரதேசி மற்றும் ஒரு மகர் ஆகியோர் உள்ளனர் என்பதை இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

18. (II) அரசியல் சார்பில்லாத **இனாம்கள்** - வருவாய் மற்றும் நிருவாகத்திற்காக பேஷ்வாக்களால் பணியமர்த்தப் பட்டிருந்த 1) மாவட்ட அதிகாரிகள் மற்றும் 2) கிராம அதிகாரிகள் ஆகியோர் அரசியல் சார்பற்ற **இனாம்** நிலங்களை வைத்திருப்போரில் அடங்குவர்.

***(1) மாவட்ட அதிகாரிகள் :***

*19. மாவட்ட அதிகாரிகளெனப்படுபவர்கள் தேசாய்கள், தேஷ்முக்குகள், தேஷ்பாண்டேக்கள் என்றழைக்கப்படும் பாரம்பரிய அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பேஷ்வா அரசாங்கத்தின் வரிவசூல் செய்யும் தாலுகா முகவர்களாக இருந்தார்கள். பிறகு அவர்கள் ஆங்கில அரசாங்கத்தினால், **மம்லட்தார்கள்** மற்றும் **மஹல்காரி**களைக் கொண்டு இடப்பெயர்ச்சி செய்யப்பட்டார்கள். அவர்களுக்கு 'பணிக்குப் பண ஈடு செய்தல்' என்ற கொள்கையடிப் படையில் தீர்வு காணப்பட்டது. அதன் மூலம் அவர்களின் உதவித் தொகையில் பெரும் பகுதியைத் தக்க வைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டனர். ஒரு ரூபாயில் 3 லிருந்து 8 அணா வரையிலுமுள்ள பணம் தான், பண ஈடாகவும் அவர்கள் இதுவரை கொண்டிருந்த பட்டத்தை இழப்பதற்கு ஈடாகவும் கொடுக்கப்பட்டது.*

*20. மாவட்ட அதிகாரிகளோடு ஏற்படுத்திக் கொண்ட இத்தகைய தீர்வினால் அரசுக்கு ஏற்பட்ட ஆண்டு இழப்பு பின்வருமாறு :-*

*தங்கள் அலுவலகங்கள் மூடப்பட்டு விட்ட நிலையில் மாவட்ட அதிகாரிகள் வைத்திருக்கும் **இனாம்** நிலங்களினால் அரசுக்கு ஏற்படும் ஆண்டு இழப்பு :*

| *பிரிவு* | *ஜூடி வரி நீங்கலாக நிலங்களின் மீதான வரி விதிப்பு.* | | | |
|---|---|---|---|---|
| | *ரூ.* | *அ.* | *பை.* | |
| *1. வடக்குப் பிரிவு* | *1,04,753* | *1* | *9* | |
| *2. மத்தியப் பிரிவு* | *3,16,602* | *7* | *9* | |
| *3. தெற்குப் பிரிவு* | *3,93,189* | | *5* | *8* |
| *மொத்தம்* | *8,14,545* | *9* | *2* | |

***(2) கிராம அதிகாரிகள்***

*21. கிராம அதிகாரிகள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்பட்டார்கள் :*

(i) *அரசாங்கத்திற்கும் சமூகத்திற்கும் பயனில்லாதவர்கள்.*
(ii) *கிராம சமுதாயத்திற்குப் பயனுள்ளவர்கள்.*
(iii) *அரசாங்கத்திற்குப் பயனுள்ளவர்கள்.*

*22. அரசாங்கத்திற்கும் சமூகத்திற்கும் பயனில்லாதவர்கள் - இந்த வகை **இனாம்தாரர்கள், பொட்தார்** என்பவர்கள் கிராம வெள்ளிக் கம்மியராக இருப்பதோடு கூட, அரசாங்கத்திடமும்,*

*தனியாரிடமும், **படேல்களுக்கு** உதவியாளர் போலுள்ள **சவுகுலா** விடமும் செலுத்தப்படுகின்ற பணத்தை மதிப்பீடு செய்து கொடுக்கிறார்கள். அதோடுகூட குல்கர்னியின் பதிவேட்டைப் பாதுகாக்கிறார்கள். அவர்களின் **இனாம்களைப்** பண ஈடுசெய்வதைப் பொறுத்தவரை, இத்தகைய சேவகர்கள் வைத்திருக்கும் நிலங்கள் கீழ்க்கண்டவாறு தீர்வை செய்யப்பட்டன:*

*i) பழைய மாநிலங்களில் - முழுநில ஆய்வு மதிப்பீடு விதிக்கப்பட்டது.*

*ii) புதிய மாநிலங்களில் - முழுநில ஆய்வு மதிப்பீட்டில் பாதியளவு எடுத்துக் கொள்ளப்பட்டது.*

*இரண்டு பகுதிகளிலும், நிலங்கள் மாற்றத்தக்க இறையிலியாக மாற்றப்பட்டன.*

*23. கிராம சமுதாயத்திற்குப் பயனுள்ளவர்கள் - இந்த வகை **இனாம்தாரர்கள்,** கும்பர்கள், சுத்தர்கள் போன்ற கிராம சேவகர்களை உள்ளடக்கியவர்கள். அவர்கள் இன்னமும் கிராம சமுதாயத்திற்குச் சேவை செய்து வருகிறார்கள். அவர்கள் விஷயத்தில் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட தீர்வு பின்வருமாறு :-*

*i) பழைய மாநிலங்களில் - அவர்கள் செய்யும் சேவை ஏறத்தாழ சமுதாயத்திற்குப் பயனுள்ளதாக உள்ளதால், அவற்களிடமுள்ள நிலங்கள், நில ஆய்வு மதிப்பீட்டில் பாதி அல்லது கால் பங்காக மதிப்பீடு செய்யப்பட்டன.*

*ii) புதிய மாநிலங்களில் - அவர்களிடமுள்ள நிலங்கள் நில ஆய்வு மதிப்பீட்டில் கால் பங்காக மதிப்பீடு செய்யப்பட்டன.*

*இத்தகைய கிராம அதிகாரிகளின் நிலங்கள், பணிக்கேற்றவாறு அமைவதால் அவை மாற்றத்தகாதவை ஆக்கப்பட்டன.*

*24. இந்த வகை கிராம சேவகர்களுடன் செய்து கொண்ட தீர்வின் காரணமாக அரசுக்கு ஏற்படும் ஆண்டு இழப்பு, கீழ்க்காணும் பட்டியலிலிருந்து தெளிவாகப் புலப்படும்.*

*சமுதாயத்திற்குப் பயனுள்ள கிராம சேவகர்களிடமுள்ள **இனாம்** நிலங்களை பண ஈடுசெய்த வகையில் அரசுக்கு ஆண்டிற்கு ஏற்படும் இழப்பு இங்கு காட்டப்பட்டுள்ளது.*

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| *1. வடக்குப் பிரிவு* | *79,177* | *0* | *0* |
| *2. மத்தியப் பிரிவு* | *72,343* | *5* | *1* |
| *3. தெற்குப் பிரிவு* | *64,256* | *15* | *3* |
| மொத்தம் | *2,15,777* | *4* | *4* |

*25. அரசாங்கத்திற்குப் பயனுள்ள கிராம அதிகாரிகள் - இவர்கள் (1) பட்டீல் (2) குல்கர்னி மற்றும் (3) மகர் ஆகிய மூன்று பிரிவைச் சேர்ந்தவர்கள்.*

*26. கிராம அதிகாரிகளைப் பொறுத்தவரையிலும் அவர்கள் சேவை செய்யும் கடமையிலிருந்து விடுவிக்கப்படவில்லை. பிற பாரம்பரிய அதிகாரிகளுக்குச் செய்ததுபோல் அவர்களுக்குப் பண ஈடு செய்யப்படவில்லை. ஏனென்றால் அவர்கள் நிர்வாக அமைப் பின் இன்றியமையாத அங்கமாக இருக்கிறார்கள். முந்தைய பேஷ்வா அரசுக்கு இருந்ததுபோல் ஆங்கிலேயர்களுக்கும் தவிர்க்க முடியாத வர்களாக இருந்தனர்.*

*27. இந்த ஆய்விலிருந்து கீழ்வரும் உண்மைகள் தெளிவா கின்றன :*

(i) *தனியார் மற்றும்* **தேவஸ்தான இனாம்** *நிலங்களை வைத்திருப்பவர்கள் அரசுக்கு எந்தப் பணியும் செய்வ தில்லை. பேஷ்வா அரசாங்கத்தால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த உதவித் தொகையை தொடர்ந்து பெற்றுக்கொள்ளும்படி ஆங்கில அரசு அனுமதித்தது. பணிசெய்ய வேண்டிய கடப்பாடேயில்லாமல் பரம்பரை பரம்பரையாக அனுபவித்துக் கொள்ளவும் அனுமதித்தது. அதன் பயனாக அரசுக்கு ஆண்டிற்கு ஏற்பட்ட இழப்பு ரூ. 6,15,649-4-10*

(ii) *அரசியல் சார்ந்த* **இனாம்** *நிலங்கள் வைத்திருப்பவர்களை அரசுக்குப் பணி செய்யும் கடமையிலிருந்து ஆங்கில அரசு விடுவித்தது. ஆனால் அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட ஊதியம் தொடர்ந்து வழங்கப்பட்டது. அவர்களின் வழித் தோன்றல்களும் பரம்பரை பரம்பரையாக இதை*

அனுபவித்து வருகின்றனர். அவர்களால் அரசுக்கு ஏற்பட்ட இழப்பு ஆண்டிற்கு ரூ. 2,67,501-11-7.

(iii) பேஷ்வா அரசாங்கத்தில் மாவட்ட அதிகாரிகளாயிருந்த தேசாய்களும் தேஷ்பாண்டேக்களும் ஆங்கில அரசாங்கத் திற்கு எந்தப் பணியும் செய்வதேயில்லை. அவர்களின் சேவைக்கான ஊதியமாக பேஷ்வா அரசாங்கம் அவர் களுக்குக் கொடுத்திருந்த **இனாம்** நிலத்தை அவர்களே தொடர்ந்து வைத்துக் கொள்ள ஆங்கில அரசு அனுமதித்தது. ஆனால் அதில் **ஜூடி** வரியாக ஒரு சிறு தொகையைக் கழித்துக் கொண்டது. இது, ஆங்கில அரசு அவர்களோடு ஆயுள் முழுமைக்குமாகச் செய்து கொண்ட ஒப்பந்தத் தினால் கிடைத்த ஓய்வூதியம் மட்டுமல்ல. இத்தகைய மானியங்களின் மீது உரிமையே பாராட்ட முடியாத அவர் களின் வழித்தோன்றல்களுக்குக் கிடைத்த பரம்பரை ஓய் வூதியமாகும். மீண்டும் இதனால் ஏற்பட்ட ஆண்டு இழப்பு, ரூ. 8,14,545-8-4.

(iv) கிராம சமூகத்தினருக்கும் அரசுக்கும் பயனில்லாதவர் களாகிப்போன கிராம சேவகர்கள், பணி செய்யும் கடப்பாட் டிலிருந்து விடுவிக்கப்பட்டார்கள். ஆனால் அவர்களின் ஊதியம் முழுமையாகத் திரும்பத் தொடரவில்லை. அவர்கள் தங்கள் இனாம் நிலத்தைத் தொடர்ந்து வைத்துக் கொண்டார்கள். சில பேர் விதிக்கப்பட்ட முழு வரியையும் கட்டிவிட்டார்கள். மீதியுள்ளவர்கள் பாதி வரியை மட்டுமே கட்டியிருக்கிறார்கள்.

28. **வட்டன்** மற்றும் **இனாம்** சொத்துக்களை சிறப்புப் பிரிவின் கீழ் வருவதாகவே பம்பாய் அரசாங்கம் எப்போதும் கணக்கிட்டிருக் கிறது என்பதை இந்த நிகழ்வுகள் காட்டுகின்றன. சேவைக்கான ஊதியம் என்று மிகச் சாதாரணமாக அது எப்போதும் கருதவே யில்லை. ஊதியத்திற்கான முழு குணாம்சங்களோடு அதுவிளங்கிய இடங்களில் கூட அது 'வேலையில்லையேல் ஊதியமில்லை' என்ற கொள்கையை அமுல்படுத்தவில்லை.

29. மகர் வட்டன் நிலங்களின் மீது **ஜூடி** வரி விதிக்க இப்போது மேற்கொள்ளப்படும் கொள்கையானது முற்றிலுமாக விலகிச் செல்லுகின்ற நிலையாகும். அதற்கு எந்தவிதமான முன் னுதாரணமும் இல்லை.

30. மகர்களின் வட்டன் சொத்துக்களை வெறும் ஊதியமாகக் கணக்கிடும் மோசமான சமத்துவமின்மையையும் அநீதியையும் எடுத்துக்காட்ட, குல்கர்னி வட்டன் பக்கம் கவனத்தைத் திருப்பப் பணிவுடன் வேண்டுகிறேன். அரசுக்குப் பயனுள்ள கிராம சேவகர்களான வட்டன்கள் பிரிவில் குல்கர்னிவட்டன் வருகிறார். அந்தப் பிரிவில் (1) பட்டீல் (2) குல்கர்னி மற்றும் (3) மகர் ஆகிய மூன்று வட்டன்கள் இடம்பெறுகின்றனர். பரம்பரை வட்டனாகிய குல்கர்னி வட்டன்கள் 1914 வரை தொடர்ந்தனர். 1914 மே 30 தேதியிட்ட அரசுத் தீர்மானம் எண். 5070ன்படி 1914 ஆம் ஆண்டு குல்கர்னி வட்டனுக்கு பணி ஈடு செய்யப்பட்டது. அரசுச் சேவை செய்யும் கடப்பாட்டிலிருந்து குல்கர்னி விடுவிக்கப்பட்டார். பண ஈடு செய்யப்பட்ட நிபந்தனைகள் வருமாறு :-

(1) வட்டன் நேரடி வாரிசு, இணை உறவினர் அல்லது தத்து எடுக்கப்பட்டோருக்கு ஆண் வாரிசு இருக்கிறவரைக்கும் வட்டன்களின் பிரதிநிதிகள், அவர்களின் நேரடி வாரிசுகள், இணை உறவினர்கள் அல்லது தத்தெடுக்கப்பட்டோருக்கு நிலையான ஊதியம் கொடுக்கப்பட்டுவரும். அது (நிலவரி வசூலிப்பதற்கான ஊதியமான) **அகர்னியில்** மூன்றில் ஒரு பங்கு ரொக்க உதவித் தொகையாகக் கொடுக்கப்படும். 1913-14 ஆம் ஆண்டிற்கான **பொட்கி** கொடுக்கப்பட்டது.

(2) வட்டன் நிலங்களைப் பெற்றிருக்கிற உடைமையாளர்களுக்கும் அவர்களது நேரடி வாரிசுகள், இணை உறவினர்கள் மற்றும் தத்தெடுக்கப்பட்டவர்களுக்கு ஆண் வாரிசு உள்ள வரையில் அனைத்து நேரடி வாரிசுகளுக்கும், இணை உறவினர்களுக்கும் அல்லது தத்தெடுக்கப்பட்டோருக்கும் தொடர்ந்தளிக்கப்படும். இது நடைமுறையிலுள்ள **ஜுடி** வரியைச் செலுத்துவதைப் பொறுத்திருக்கும். இத்தொகை முழு மதிப்பீட்டை விடக் குறைவாக இருந்தால், கூடுதலான வரியும் நடைமுறையிலுள்ள **ஜுடியும்** சேர்ந்து அந்த நிலத்தின் அப்போதைய முழு மதிப்பீட்டை விட மிகாமல் இருக்க வேண்டும் என்ற நிபந்தனையுடன், முழு மதிப்பீட்டில் 16 ல் 1 பங்குக்கு மிகாத கூடுதல் தொகை கொடுக்கப்படும்.

(3) பரம்பரை கிராம அதிகாரிகள் சட்டத்தின் உட்பிரிவுகள் 10, 11, 11A மற்றும் 12 ஆகியவற்றிற்கு இந்த நிலம் உட்பட்டிருக்கும். ஆனால், மேற்படி பிரிவுகளின் நடைமுறைகளிலிருந்து அந்நிலத்தை மாவட்ட ஆட்சியர் விடுவிக்கலாம்.

(4) வட்டன் நிலமும், ரொக்க உதவித் தொகையும் தொடருவ தானது, அவற்றிற்கு உரியவர்கள் ஆங்கில அரசாங்கத்திற்குத் தொடர்ந்து விசுவாசமுடையவர்களாக இருப்பதைப் பொறுத்தது என்றாக்கப்பட்டது.

(5) ஒரு ரூபாயில் ஒரு பின்னப் பகுதி, அதன் மதிப்பைப் போல் இருபது மடங்குக்குக் கண்டிப்பாக வாங்க வேண்டும். அந்தப் பின்னப் பகுதி, 14 அணா அல்லது அதற்கு மேலிருந்தால், அந்தப் பின்னத்திற்கும் ஒரு ரூபாய்க்கும் இடையிலான வித்தியாசத்தை இருபது மடங்கிற்கு அந்தப் பெறுநர் வாங்க வேண்டும்.

31. எல்லா வட்டண்டர்களிலும், மிகவும் விரும்பப்படுகிற தேசிய பிரிவின் அந்தஸ்து குல்கர்னிக்குக் கொடுக்கப்படுகிறது. சேவை செய்யும் கடப்பாட்டிலிருந்து அவர் விடுவிக்கப்பட்டிருக் கிறார். அவர் பணி புரிவதில்லை. இருந்தாலும் அவர் தமது நிலத்தைத் தக்க வைத்துக் கொண்டுள்ளார். அதற்கு ஜூடி வரி மட்டும்தான் கட்ட வேண்டும். 1913-14 ல் அரசு கொடுத்த **பொட்கியையும், அகர்னியில்** 3ல் 1 பங்கை நிரந்தரமாகவும் பெறுவதற்கு அனுமதிக் கப்பட்டுள்ளார். தவிர, பணஈடு செய்தல் திட்டத்தின் கீழ், பரம்பரை யாகப் பணி செய்யும் குல்கர்னியின் உரிமையை அரசு ஒழித்து விட்ட தென்றாலும், குல்கர்னியின் இடத்தை நிரப்ப அரசு உருவாக்கியுள்ள **தலாத்தி** என்னும் முகவர் அமைப்பில் முந்துரிமை அடிப்படையில் குல்கர்னி பணியமர்த்தப்பட அரசு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது.

32. இப்பொழுது நான் எழுப்ப நினைக்கிற கேள்வி இதுதான் : (i) **வர்ஷசந்தார்கள்,** (ii) **இனாம்தார்கள்** மற்றும் **ஜஹாகிர்தார் கள்,** (iii) பரம்பரை மாவட்ட அதிகாரிகள், (iv) பிற கிராம அதிகாரிகள் மற்றும் (v) குல்கர்னிகள் ஆகியோரெல்லாம் பணி செய்யும் கடப்பாட் டிலிருந்து விடுவிக்கப்பட்டுவிட்டார்கள். ஆனாலும் அவர்களின் ஊதியத்தில் கணிசமான பகுதியைத் தொடர்ந்து பெற்றுவர அனு மதிக்கப்பட்டிருக்கிறார்கள். 'வேலையில்லையேல் ஊதியமில்லை' அல்லது 'செய்த வேலைக்கேற்ற ஊதியம்' என்ற கொள்கை அல்லது கோட்பாட்டில் அரசுக்கு நம்பிக்கையிருக்குமானால், அந்தக் கோட் பாட்டை இவர்கள் மீது ஏன் நடைமுறைப்படுத்தியிருக்கக் கூடாது? பிற வட்டன்டார்கள், அதிலும் குறிப்பாக குல்கர்னியை நடத்தும் விதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், மகர்களை நடத்தும் விதம்

மிகக் கொடுமையானதாக இருக்கிறது. மகர்களிடம் காட்டப்படும் வேறுபாடு எல்லை கடந்தது. இந்தக் கோட்பாட்டை மகர்களிடம் மட்டும் ஏன் காட்ட வேண்டும்? இத்தகைய பகைமைப் பாகுபாட்டிற்கு என்ன விளக்கம் கொடுக்க முடியும்? என்னால் எவ்விதக் காரணமும் கூற இயலவில்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன். அதற்குமாறாக, மகர்களுக்கெதிராக நடைமுறைப்படுத்தப்படுகிற கோட்பாடுகள் தவறானவை என்றும், மற்ற வட்டன்டார்களின்பால் அனுசரிக்கப்படுகிற கொள்கைகள் சரியானவை என்றும் நான் துணிந்து கூறுவேன். பேஷ்வா அரசாங்கத்தில் பரவலாக இருந்த சட்டப்படி, வட்டன் சொத்து என்பது பரம்பரையானது மட்டுமல்ல, கைமாற்றத்தக்கதாகவும் இருந்தது. ஆகவே ஒரு வட்டன்டார் தனது பணியையும் தனது வட்டன் சொத்தையும் கைமாற்ற முடியும். வட்டன் சொத்து என்பது தனியார் சொத்துப் போன்ற தன்மையைப் பெற்றிருந்தது. வட்டன்டார் அதன் உரிமையாளர். அவர் அந்தச் சொத்தைத் தனது சொந்த சொத்தைப் போல எதுவும் செய்யலாம். இந்தச் சட்டம் 1827 வரை இருந்தது. வட்டன் சொத்து கைமாற்றத் தக்கதல்ல என்றும், அந்தப் பணியிலிருக்கும் ஏக உரிமையாளரோ அல்லது அப்பணியில் அக்குடும்பம் சாராத, உடன் பணியாற்றுபவரோ, அவர் வாழ்நாளுக்கு மேலான காலத்திற்குக் கைமாற்றுவதைத் தடைசெய்து, 1827 ஆம் ஆண்டு ஒழுங்கு படுத்தும் சட்டம் XVI-ன் படி முதன் முறையாக பம்பாய் அரசாங்கம் அறிவித்தது.

33. வட்டன் சொத்துப் பற்றிய கருத்துப்போக்கு இவ்வாறிருக்க, வட்டன் நில விஷயங்களில், கிராமப்புற வட்டன்டார்களிடம் நிலவும் உணர்ச்சிப் போக்குகளில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டுவிடாமல், இப்போது செய்திருப்பதைவிட அரசாங்கம் வேறுமாதிரியான நடவடிக்கை எடுத்திருக்க முடியாது என்று கூறலாம். என்னுடைய பணிவான வாதம் என்னவென்றால், பிற வட்டன்களிடமிருந்து **மஹார்கி வட்டன்கள்** எந்தவிதத்திலும் வேறுபட்டவர்களல்ல. அந்த வட்டன்களுக்குப் பண ஈடு செய்து மாற்றும்போது, 'வேலையில்லையேல் கூலியில்லை' என்ற கொள்கையையோ அல்லது 'எவ்வளவு வேலை செய்தார்களோ அதற்கேற்ப கூலி' என்ற கொள்கையையோ அரசாங்கம் அமுல்படுத்தாதபோது, **மஹார்கி வட்டன்களுக்கு** அவற்றை அமுல்படுத்துவதில் என்ன நியாயம் இருக்க முடியும்?

34. வேறொரு வகை கீழ்நிலை கிராம சேவகர்களின் ஊதியத்தை மேம்படுத்துவதற்கான அவசியத்தை, **ஜூடி** வரி அதிகரித்ததற்கான மற்றொரு காரணமாக முன்வைத்தார்கள். பம்பாய் அரசாங்கத்தின் வருவாய்த்துறை துணைச் செயலாளர் திரு.எம்.ஜே.தேசாய்,

*ஐ.சி.எஸ் அவர்கள், **ஜூடி** வரி அதிகரித்ததை நியாயப்படுத்தி திரு.பி.கே.கெய்க்வாட், எம்.எல்.ஏ. அவர்களுக்கு (1938 நவம்பர் 11 தேதியிட்ட வருவாய்த் துறை கடித எண் எல்ஏ 26 எஃப்) எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறார்:-*

> *''3. மத்தியப் பிரிவில் உள்ள ஒரு மகரின் திட்டவட்டக் குறைந்த ஊதியமானது கிராமத்தின் அளவிற்குத் தகுந்தாற்போல், ரூ.10 லிருந்து ரூ.20 வரை **நுக்சகான்** பெறுமானமுள்ள நிலம் அல்லது ரூ.50 முதல் ரூ.100 வரை ரொக்க உதவித் தொகை ஆகும். இந்த அளவு ஊதியம்கூடக் கிடைக்காத கீழ்நிலை கிராம சேவகர்கள் பலர் இன்னமும் இருக்கிறார்கள். மிகவும் மோசமான ஊதியம் பெறும் கீழ்நிலை கிராம அதிகாரிகள் கூடுதலான ஊதியம் பெறுவதற்கான நடவடிக்கைகள் சீராக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அதற்கான ஒரு வழியாகத்தான், ஊதிய விகிதத்தைவிட அதிகமான சம்பளம் பெறுகிறவர்களின் ஊதியத்தில் குறைப்புச் செய்யப்படுகிறது''.*

*35. **ஜூடியை** அதிகரித்து மகர்களின் ஊதியத்தைக் குறைத்ததற்கான ஒரு காரணம், அதுவும் உண்மையான காரணம், பிற கீழ்நிலை கிராமச் சேவகர்களின் ஊதியத்தை மேம்படுத்துவதற்காகத்தான் என்பது இந்தப் பிரிவிலிருந்து தெளிவாகிறது. எல்லாக் கீழ்நிலைக் கிராமச் சேவகர்களுக்கும் மொத்தமாகவே மோசமான ஊதியமளிக்கப்படுகிறதென்பதில் சந்தேகமே தேவையில்லை. தாங்கள் செய்யும் பணியை மதித்துச் செய்யும் **மகர்களும்** கூட, பிற கீழ்நிலை கிராம சேவகர்களைவிட மேலான ஊதியம் பெற்றுவிடவில்லை. பிற கீழ்நிலை கிராம சேவகர்களின் ஊதியத்தை அதிகரிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறதென்று வைத்துக் கொண்டால், அதற்காக அரசாங்கம் மேற்கொள்ளுகிற கொள்கை, கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைப்பதைவிட மோசமானது என்றும் அரசாங்கம் ஏற்றுக் கொண்ட கொள்கைக்கும் வட்டன் சட்ட விதிகளுக்கும் புறம்பானதென்றும் மிகவும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*36. **ஜூடியை** அதிகப்படுத்தும் விஷயத்தில், பல அரசுத் தீர்மானங்கள் இருக்கின்றன. அவை பல நிபந்தனைகளை விதிக்கின்றன. அதன்படி **ஜூடியை** அதிகரிக்கும் உரிமையை அரசு பெற்றிருக்கிறது. அவை எல்லாம், வடக்குப் பிரிவு நில அளவை மற்றும் குடியேற்ற ஆணையர் கர்னல் டபுள்யூ.சி.ஆண்டர்சன், வருவாய்த்*

துறை அரசு முதன்மைச் செயலாளருக்கு 1877 ஜூலை 23 தேதியிட்டு எழுதிய கடிதத்தில் சுருங்கக்கூறி, எடுத்துக்காட்டப்பட்டு விளக்கப் பட்டிருக்கிறது. ஆர்.ஜி.கார்டன் ஐ.சி.எஸ் அவர்களின் பம்பாய் நில அளவை, குடியேற்ற கையேட்டின் இரண்டாம் பாகம் பிற் சேர்க்கை IV (c)யில் 496-505 ஆம் பக்கங்களில் அது அச்சிடப்பட் டிருக்கின்றது.

37. 1875 நவம்பர் முதல் தேதியிட்ட பம்பாய் அரசாங்கத்தின் தீர்மானம் எண் 6141 இல் அடிப்படையான கொள்கை பற்றி சந்தேகம் இருந்ததாகத் தெரிகிறது. அத்தீர்மானத்தில் **ஜூடியை** அதிகப்படுத்து வதற்கான அரசாங்கத்தின் நிலை குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை விளக்குவது அவசியம் என கர்னல் ஆண்டர்சன் நினைத்திருக்கிறார். அவருடைய கடிதத்தில் 4 வது பாராவில் அவர் கொடுத்திருக்கும் விளக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

> ''4. 1875 நவம்பர் முதல் தேதியிட்ட அரசாங்கத் தீர்மானம் எண் 6141 இன் கொள்கை தெளிவாக இருக்கிறது. பணியாற்றுகிற வர்களுக்கு அவ்வப்போது நிர்ணயிக்கப்படுகின்ற ஊதி யத்தைக் கொடுப்பதற்காக **வட்டனின்** ஊதியத்தில் கடைசி ரூபாய் வரை நிறுத்தி வைப்பதென்ற முடிவு செய்யப் பட்டது. ஆனால், (வட்டனின்) **அதிகப்படியான ஊதியத்தி லிருந்து பணம் பண்ணுவது விரும்பத்தக்கதல்ல.**

38. நில அளவை குடியேற்றக் கையேட்டைப் பொறுத்த வரை, 1875 ஆம் ஆண்டு தீர்மானத்தைப் பற்றி கர்னல் ஆண்டர்சன் கொடுத்த விளக்க உரைக்கு மறுப்புத் தெரிவித்து எந்தவிதத் தீர் மானத்தையும் அரசு வெளியிடவில்லை. 1875 ஆம் ஆண்டுத் தீர்மானத் தின் விதிகளை மாற்றியமைத்தும் எவ்விதத் தீர்மானமும் போடப் படவில்லை. ஆகவே, **ஜூடியை** அதிகரிப்பதைப் பொறுத்தவரை யில், 1875 ஆம் ஆண்டுத் தீர்மானமும் அதற்குக் கர்னல் ஆண்டர்சன் கொடுத்த விளக்கமும் அரசு வெளியிட்ட கடைசி மற்றும் இறுதி அதிகார அறிவிப்பாக நிற்கும். ஆகவே, மற்ற வட்டன்டார்களுக்கு ஊதியமளிப்பதற்காக, **மஹார்கி வட்டன்** நிலங்களின் **ஜூடியை** இப்போது அதிகரித்திருப்பது என்பது மேற்கூறிய தீர்மானத்தை அப்பட்டமாக மீறுவதாகும் என்ற எனது வாதம் நியாயமானதுதான் என்று கூறிக்கொள்ள விழைகிறேன்.

*39. **ஜூடியை** அதிகரிக்கும் அதிகாரத்திற்கு இரண்டு தெளிவான வரையறைகளை அந்தத் தீர்மானம் முன்வைக்கிறது. அவை (1) அரசாங்கத்தின் பொதுநிதியை ஏற்படுத்துவதற்காக **ஜூடியை** அதிகரிக்கக்கூடாது. (2) பணியாற்றுகிறவர்களின் ஊதியத்தை அதிகரிக்கும் தேவை ஏற்பட்டால் மட்டுமே **ஜூடியை** அதிகரிக்க வேண்டும். நம்முன் எழுகிற முக்கியமான கேள்வி என்னவென்றால்: பணியாற்றும் மகர்களின் ஊதியத்தை அதிகரிப்பதற்காக, **மஹர்கி வட்டனின் ஜூடி** அதிகரிக்கப்படுகிறதா? அப்படியானால், **மஹர்கி வட்டன்** நிலங்களின் மேலான வரி அதிகரிப்பிற்கு எந்த எதிர்ப்பும் எழுப்பக் கூடாதென்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அது அப்படி இல்லை. **பில்கள், ராமோஷிஸ்கள்** மற்றும் பிற கீழ்நிலை கிராம சேவகர்களின் ஊதியத்தை அதிகப்படுத்துவதற்காகவே, மஹர்கி நிலங்களின் **ஜூடி** அதிகரிக்கப்பட்டிருப்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. பில்கள், ராமோஷிகள் மற்றும் பணியாற்றும் பிற கீழ்நிலை கிராம சேவகர்களும் கிராமத்திலுள்ள மகர் வட்டன்டார்களுக்காகப் பணியாற்றுகிறார்களென்று வட்டன்கள் பற்றிய எந்த சட்டத்தின் மூலமோ அல்லது கற்பனையாகவோ கூட கூற முடியாது.*

*40. பில்கள், ராமோஷிகள் மற்றும் பிற கீழ்நிலைக் கிராம சேவகர்களின் ஊதியத்தை மேம்படுத்த **ஜூடியை** அதிகரிக்கும் கொள்கையை அமுல்படுத்துகிறபோது, வட்டன் சட்டத்தின்படி ஒவ்வொரு வட்டனும் தெளிவான வெவ்வேறு வட்டன்கள் என்பதை மறந்து விட்டதுபோலத் தெரிகிறது. வெவ்வேறு வட்டன்களுக்கு வெவ்வேறு ஊதியம் அளிக்கப்படுகிறது. இவ்வாறு தனித்தனியாகக் கொடுக்கப்படும் ஊதியப் பயன்கள் அந்தந்த வட்டன்களிலுள்ள வட்டன்டார் குடும்பங்களால் மட்டுமே அனுபவிக்கப்பட வேண்டும். ஒரு வட்டனிலுள்ள வட்டன்டார், அவனுடைய பணியாற்றும் உரிமையையும் வட்டன் சொத்துக்களின் உரிமையையும் அதே வட்டனில் உள்ள வட்டன்டார் அல்லாத பிறருக்கு மாற்றம் செய்ய முடியாது. **மஹர்கி வட்டனி**லிருந்து **பட்டீல்கி வட்டன்** வேறுபட்டவர். இவர்களிருவரும் **குல்கர்னிவட்டன்** இருந்த காலத்தில் அதிலிருந்து வேறுபட்டவர்கள். பட்டீல்கி வட்டனின் உரிமைகளை ஒரு பட்டீல் மகருக்கு மாற்றமுடியாது. மகரும் பட்டீலுக்கு மாற்ற முடியாது. ஒரு வட்டன் நிலத்தின் **ஜூடியை** அதே வட்டனில் பணியாற்றும் வட்டன்டாரின் ஊதியத்தை உயர்த்துவதற்காக மட்டுமே அதிகரிக்க வேண்டும் என்பது சட்டவிதிகளிலிருந்து தெளியப்பட்ட முடிவாகும். அதே வட்டனைச் சேர்ந்த வட்டன்டர் அல்லாத வேறு*

*யாருக்கும் வட்டன் சொத்துக்களை மாற்றுவது சட்டப்படி குற்ற மாகும். மகர்களுக்கு ஊதியம் கொடுப்பதற்காக பட்டீல்கி வட்டனின்* **ஜுடியை** *அதிகரிப்பது அரசுக்கு இயலாததாகிவிடும். பட்டீலுக்குக் கொடுப்பதற்காக குல்கர்னி வட்டனுக்கு* **ஜுடி** *வரி விதிப்பதும் அரசுக்கு இயலாதது. அதே காரணத்தினடிப்படையில், பில்கள் ரமோஷிகள் மற்றும் பிற கீழ்நிலை கிராம சேவகர்களுக்குக் கொடுப் பதற்காக* **மஹர்கிவட்டன்** *நிலங்களுக்கு வரிவிதிப்பது அரசுக்கு இயலாது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*41. மேற்கூறிய காரணங்களினால்,* **ஜுடி** *வரி விதிப்பானது அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் தன்னிச்சையானது, சட்ட விரோதமானது என்று கூறுவதில் எனக்குத் தயக்கமேதுமில்லை.*

*42. இது தொடர்பாக,மகர்களின் ஊதிய விஷயத்தில் இந்த மாநிலத்தில் சில இடங்களில் உள்ள நடைமுறைகளை மேதகை யீரின் கவனத்திற்கு முன்வைக்க விரும்புகிறேன். மகர்களின் ஊதியம் மூன்று வழிகளில் வருகிறது : (1)* **இனாம்** *நிலம் (2) கிராமத்தவர் களிடமிருந்து கிடைக்கும்* **பலூட்டா.** *அதாவது மகர்களுக்குக் கிராமத்தினர் ஆண்டுதோறும் அன்பளிப்பாகக் கொடுக்கும் பணம். (3) அரசுக் கருவூலத்திலிருந்து கிடைக்கும் ரொக்கப் பணம். முதல் மற்றும் மூன்றாவது வழிகள் ஒவ்வொரு மாவட்டத்திலும் காணப் படவில்லை. பல மாவட்டங்களில் மகர்களுக்கு* **இனாம்** *நிலமு மில்லை, ரொக்க உதவித் தொகையும் இல்லை. இரண்டாவதாகக் கூறப்பட்ட* **பலூட்டாதான்** *மாநிலம் முழுவதும் காணப்படுகிறது. மகர்களின் வருமானத்திற்குரிய முக்கியமான வழியாக அது அமைந் திருக்கிறது. அத்தகைய கிராமங்களின் எண்ணிக்கையும் குறை வானதாக இல்லை. பெல்காம் மாவட்டத்தில் 317, பீஜப்பூர் மாவட் டத்தில் 543, தார்வார் மாவட்டத்தில் 572, ஷோலாப்பூரில் 463 கிராமங்கள். இவற்றில்* **இனாம்** *நிலங்கள் இல்லை. இக்கிராமங் களில் கிராம மக்களிடமிருந்து வசூலிக்கப்படும்* **பலூட்டாதான்** *வருமானத்திற்கான முக்கியமான ஆதாரமாகும். தானா, கொலாபா மற்றும் ரத்னகிரி மாவட்டங்களிலும் இதேதான் நிலை.* **பலூட்டாவே** *மகர்களின் வருமானத்திற்கான ஒரே ஆதாரமாக இருக்கும் கிராமங் களின் இப்பட்டியல் முழுமையானதல்ல. சில கிராமங்களில் மகர்கள்* **பலூட்டாவையே** *முக்கியமாகச் சார்ந்திருக்கிறார்கள் என்பதும் மற்ற கிராமங்களில் அவர்கள் தங்களது ஊதியத்தையே முற்றிலும் நம்பியிருக்கிறார்கள் என்பதும், கிடைக்கும் விவரங்களிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.*

43. மகர்களுக்கு ஊதியம் கொடுக்கும் **பலூட்டா** முறையைப் பொறுத்தவரை, அந்த ஊதியமுறையின் வஞ்சகத் தன்மையை முதலில் மேதகையீரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மகர்கள் அரசாங்க ஊழியர்களாவார்கள். அரசாங்கம் அவர்களிட மிருந்து வேலை வாங்கிக் கொள்கிறது. ஆனால் அவர்களின் ஊதியத் திற்கு, கிராம மக்களை அரசாங்கம் கைகாண்பித்து விடுகிறது. அரசு ஊழியர்களை இவ்வாறு நடத்தும்விதம், அவமானமாக இல்லை யென்றாலும், மிகவும் வினோதமானது. நாகரீக அரசு என்று சொல்லிக்கொள்ளும் எந்த அரசுக்கும் இத்தகைய முறை ஏற்றதல்ல.

44. **பலூட்டா** என்னும் இந்த வஞ்சக முறையானது, மகர் களின் ஊதிய விஷயத்தில் பச்சையான அநீதி இழைப்பதில் முடிகிறது. மகர்களின் மொத்த ஊதியத்தைக் கணக்கிடும்போது, கிராம மக்கள் மகர்களுக்குக் கொடுக்கும் **பலூட்டா**வையும் அரசாங்கம் தனது கணக்கில் எடுத்துக்கொள்கிறது. ஆனால் மகர்கள், **பலூட்டாவை** எப்போதும் பெறுவதே இல்லை என்பதுதான் பொதுவான அனுபவ மாகும். அதற்கான காரணம் தெளிவானது. மகர்களுக்கும் கிராம மக்களுக்கும் இடையிலான உறவு எப்போதுமே இணக்கமாக இருப் பதில்லை. மகர்களுக்கும் கிராம மக்களுக்குமிடையே முரண்பாடில் லாத கிராமமே இல்லை. அடிக்கடி நிகழ்வது இதுதான் : மகர்களும் கிராம மக்களும் நட்புறவுடன் இருப்பார்கள், கிராம மக்களிட மிருந்து **பலூட்டாவைப்** பெறும் நோக்குடன் கிராம மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் ஆண்டு முழுவதும் மகர்கள் பணிபுரிகிறார்கள். ஆனால் அறுவடை சமயத்தில் ஏதாவதொன்று நிகழ்கிறது. அது மகர்களுக்கும் கிராம மக்களுக்குமிடையே உறவு முறிவை ஏற்படுத்து கிறது. அதன் விளைவாக மகர்களுக்கு **பலூட்டாக்** கொடுக்க கிராம மக்கள் மறுக்கிறார்கள். இயற்கையாகவே **பலூட்டா** கொடுப் பதைத் தவிர்க்க விரும்பும் கிராம மக்களுக்கு, மகர்களோடு ஏற்படும் இந்தப் பகையுணர்வும் சேர்ந்துகொள்கிறது. மாநிலத்திலுள்ள எல்லாக் கிராமங்களிலும் பொதுவாக ஏற்படும் நிலை இது. இதுதான் **பலூட்டா** முறை தோல்வியடையக் காரணமாக இருக்கிறது. அதன் விளைவு என்னவென்றால், **பலூட்டா** கிடைக்குமென்ற ஆவலுடன் மகர் வேலை செய்கிறான். ஆனால் அதைப் பெறுவதே இல்லை. **பலூட்டாவைக்** கொடுக்க வற்புறுத்தும் அதிகாரம் ஒரு மகருக்கு இல்லை. அவன் அந்தக் கிராமத்தில் சிறுபான்மையானவன். அந்தக் கிராமத்தையே முற்றிலும் சார்ந்திருக்கிறவன். இந்த முரண்பாட்டில் பாதிக்கப்படுவது அவன்தான். அரசு அதிகாரிகளின் நடத்தைதான் இந்த அநீதியைப் பொறுக்க முடியாததாக்குகிறது. அவர்கள் மகர்

களின் சேவையைப் பெற்றுக் கொள்கிறார்கள். ஆனால் கிராம மக்களிடமிருந்து **பலூட்டாவைப்** பெற்றுத்தர உதவுவதே இல்லை. வருவாய்த் துறை அதிகாரிகள் **பலூட்டாவை** ரொக்கப் பணமாக மாற்றுவதற்கும், அதை நில வருவாயோடு சேர்த்து கிராம மக்களிடமிருந்து வசூலித்து மகர்களுக்கு கொடுப்பதற்கும் சட்டத்தில் இடமிருக்கிறது. மகர்களை இந்த அநீதியிலிருந்து விடுவிக்கும் வகையில் இந்த அதிகாரங்களைப் பயன்படுத்த மிகப்பெரும்பாலான அரசு அதிகாரிகள் தொடர்ந்து மறுத்து வருகிறார்கள். கிராம மக்களின் கோபத்திற்கு ஆளாக நேரிடும் என்னும் அச்சமே இதற்குக் காரணம்.

45. இந்த **பலூட்டா** முறை ஒரு சமயத்தில் கிராம சேவகர்கள் அனைவருக்கும் பொருந்துவதாயிருந்தது. இது பட்டீலுக்கும் குல்கர்னிக்கும் மகர்களுக்கும் பொருந்துவதாயிருந்தது. ஆனால் பட்டீல்களைப் பொறுத்த வரையில் **பலூட்டாவை** அரசாங்கம் நிறுத்திவிட்டது. 1844 முதல் குல்கர்னிக்களுக்கு ஈடுபாடு காட்டி வந்த அரசு, பின்னர் அவர்களுக்கு **பலூட்டா**விற்குப் பதிலாக அரசுக் கருவூலத்திலிருந்து ரொக்கப் பணம் கொடுக்கும் முறையாக மாற்றி விட்டது. பட்டீலும் குல்கர்னியும் - தங்களுக்கு இருக்கும் சட்ட உரிமையின் வலிமையால் - தங்களுக்குச் சேர வேண்டிய **பலூட்டாவை** விட அதிகமாகக் கிராம மக்களிடமிருந்து வசூலித்துவிடுவார்கள் என்று அதற்குக் காரணம் கூறப்பட்டது. பட்டீலுக்கும் குல்கர்னிக்கும் **பலூட்டா** மூலம் ஊதியம் கொடுக்கப்பட்டு வந்த முறையை ஒழித்ததற்கான இந்தக் காரணம் நல்ல காரணம் என்றால், இதை மகர்களுக்கும் பொருந்தும்படி செய்யாததற்கான காரணம் இதைவிடச் சிறந்த காரணமாகும். பட்டீலும் குல்கர்னியும் அதிகமாக வசூல் செய்யுமளவு வலுவுள்ளவர்களாக இருந்தார்களென்றால், மகர்கள் எதையுமே வசூல் செய்ய முடியாத அளவு மிகவும் வலுவற்றவர்களாவார்கள். கிராம மக்களின் நலன்களை மட்டுமே அரசாங்கம் கவனிப்பதுபோல் தெரிகிறது. மகர்களின் நலன்களைப் பற்றி அவர்கள் சிந்தித்ததே இல்லை. அப்படி இருந்தால், **பலூட்டா** போன்ற நிலையற்ற ஊதிய முறையை மகர்களுக்கும் சேர்த்தே ஒழித்திருப்பார்கள். அல்லது, **பலூட்டா** மூலம் மகர்களுக்கு காலம் தவறாத வருவாய் கிடைக்க ஏதாவதொரு முறையை வகுத்திருப்பார்கள். கிராம மக்கள் போன்ற மூன்றாவது குழுவினர் மகர்களுக்கு ஊதியம் அளிக்கும்படி விட்டுவிட்டது அரசாங்கத்தின் தவறாகும். கிராம மக்களுக்கும் மகர்களுக்குமிடையே நேரடியாக எந்த ஒப்பந்த உறவுமில்லை. அதே சமயம் மூன்றாவது குழுவினரால் ஊதியம் கொடுக்கப்பட எந்தவித அதிகாரத்தையும் பயன்படுத்த அரசு தயாராக இல்லை.

46. ஆகவே இந்தக் கேள்வியானது பொருத்தமானது. பலூட்டாவைச் சார்ந்திருக்குமாறு பட்டீல் கேட்டுக்கொள்ளப் படவில்லை. குல்கர்னி கிராம சேவகராக இருந்தபோது, பலூட்டாவை நம்பி வாழ்க்கை நடத்துமாறு செய்யப்படவில்லை. பிறகு ஏன் இந்த ஆதரவற்ற மகர் மட்டும் அரசுக்குச் சேவைசெய்யப் பணிக்கப்பட வேண்டும்? பிறகு ஊதியத்தைப் பெறுவதற்கு எந்த விதமான சட்ட ஆதரவும் இல்லாத நிலையில் கிராம மக்களை ஏன் எதிர்பார்த் திருக்கச் செய்ய வேண்டும்? மகர்களுக்கு ஊதியம் கொடுக்கும் பொறுப்பை அரசாங்கமே ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு நீதி வழங்க வேண்டிய நேரம் இதுதான்.

47. ஊதியத்தை ரொக்கப் பணமாகக் கொடுப்பதைப் பொறுத்த வரை, மகர்களுக்குச் சம்பளமாக அரசு நிர்ணயித்திருக்கும் தொகை எண்ணிக் கூடப் பார்க்க முடியாத அளவு அற்பமானது. அவை 1869 ஆம் ஆண்டுவாக்கில் நிர்ணயிக்கப்பட்டவை. பிற அரசு ஊழியர் களுக்கு அந்த நாட்களில் நிர்ணயிக்கப்பட்ட சம்பளம் அப்போதிருந்து அவ்வப்போது கணிசமாக உயர்த்தப்பட்டு வந்திருக்கிறது. நேர்மை யாகவும் நியாயமாகவும் பார்த்தால் மகர்களின் சம்பளம் மிக நீண்ட காலமாக உயர்த்தப்படாமல் இருக்கிறதென்பதை மறுக்க முடியாது.

## II. கீழ்நிலை கிராம சேவகர்களின் வேலைகள் அதிகரிப்பு

48. வருவாய்த் துறையின் 13.9.1938 தேதியிட்ட அரசுத் தீர்மானம் எண் 7420 / 33-ஐ பம்பாய் அரசாங்கம் நிறைவேற்றியிருக் கிறது. அதில் மகர்கள், மாங்குகள், வேதியாக்கள் ஆகியோர் ஆற்ற வேண்டிய பணிகளின் பட்டியல் அடங்கியிருக்கிறது. அது அவர்கள் மீது தாங்கமுடியாத பளுவைச் சுமத்தியிருக்கிறது. இந்த வட்டன் டார்களுக்குத் தாளமுடியாத வேலைப்பளு அது. அரசுத் தீர்மானத் தில் குறிப்பிடப்பட்டிருக்கிற வேலைகள் எல்லாம் ஹரேகோவன் மாநாட்டில் கோபாவேசமான விமர்சனத்திற்குள்ளாயிற்று. மாநாட் டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் இந்த மனுவுடன் இணைக்கப் பட்டிருக்கின்றன. அரசாங்கம் வகுத்தளித்திருக்கும் வேலைகளுக்கு கீழ்நிலை கிராம சேவகர்களின் எதிர்ப்புகள் அவற்றில் குறிக்கப் பட்டுள்ளன.

49. இந்த வட்டன்டார்கள் கூற விரும்பும் செய்தியாவது, பட்டியலில் குறிப்பெண்கள் 1, 3, 5, 9, 13 மற்றும் 19 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள வேலைகளைச் செய்ய அழைக்கப்படும் போதெல்லாம், தினக்கூலியாக எட்டணாவிற்குக் குறையாத கூடுதல்

சம்பளம் கொடுக்காமல் அழைக்கக் கூடாது என்பதாம். இதில் அவர்கள் பக்கம் நியாயம் இருக்கிறது என்று திடமாக நான் நம்புகிறேன். இம் மாநில வட்டன்டார்களிடமிருந்து ஏராளமான முறையீடுகள் எனக்கு வந்துள்ளன. மேற்குறிப்பிட்டுள்ள பட்டியலில் உள்ள வேலைதான் என்று கூறி தனிப்பட்ட கடிதங்களை தொலைதூரக் கிராமங்களுக்குக் கொண்டு செல்வது போன்ற தங்களின் தனிப்பட்ட வேலைகளுக்கு கிராம மற்றும் தாலுகா அதிகாரிகள் வட்டன்டார்களைப் பணிக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டும் உள்ளது. இது தொடர்பாக நான் பணிவுடன் கூற விரும்புவதாவது : அனேகமாக எல்லா அரசு அதிகாரிகளும், தலைமை அலுவலகத்தைவிட்டு வெளியே போகும் போதெல்லாம் அவர்களுக்கு போக்குவரத்து மற்றும் வாழ்க்கைப்படி எல்லாம் கொடுக்கப்படுகிறது. ஆகையினால், அரசு ஊழியர்களாகிய வட்டன்டார்கள் தங்கள் கிராமத்தைவிட்டு வெளியேபோகுமாறு பணிக்கப்படும்போதெல்லாம் அவர்கள் செய்கிற அதிகப்படியான செலவினங்களை ஈடு செய்யும் பொருட்டு, அவர்களுக்கு உரிய உதவித் தொகையைக் கொடுப்பதுதான் சரியாக இருக்கும்.

50. மேற்குறிப்பிடப்பட்ட அரசுத் தீர்மானத்தில் இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள வேலையைப் பொறுத்தவரை, **கட்டேடார்களை 'படாகி', 'தவந்தி'** என்று அழைப்பதோடு அரசு கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் முரட்டுக் **கட்டேடார்களின்** பின்னால் பொழுதுக்கும் ஓடிக் கொண்டிருக்கக்கூடாது என்றும் இந்த வட்டன்டார்கள் கூறுகிறார்கள். பல சமயங்களில் இந்த முரட்டுக் **கட்டேடார்களினால்** தாக்கப்பட்டு, சிக்க வைக்கப்படும் அபாயத்திற்கு வட்டன்டார்கள் உள்ளாக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற செய்தியை இது சம்பந்தமாக மேதகையீரின் கனிவான கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இத்தகைய விளைவுகளைத் தவிர்க்க, மேலே குறிப்பிட்டதுதான் ஒரே தீர்வாகும்.

51. மேற்குறிப்பிட்ட அரசுத் தீர்மானத்தில் ஏழாவதாகக் குறிப்பிட்டுள்ள பணியைப் பொறுத்தவரை, ஒரு கிராமத்தில் நிகழும் பிறப்பு இறப்புக்களைப் பற்றிய தகவல்களை கிரா்ம அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று அது வட்டன்டார்களை நிர்பந்திக்கிறது. அதிலிருந்து விலக்களிக்க வேண்டுமென்று அவர்கள் கோருகிறார்கள். கீழே குறிப்பிட்டிருக்கும் காரணங்களுக்காக, இந்தப் பணியைச் செய்வதினின்றும் வட்டன்டார்களுக்கு விலக்களிக்க வேண்டும். நகராட்சிப் பகுதிகளில் செய்யப்படுவதைப் போன்று, பிறப்பு, இறப்புக்களைப் பற்றிச் சம்பந்தப்பட்டவர்ளே கிராம

பாட்டீலிடம் தெரிவிக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பட வேண்டும். தீண்டத்தகுந்தவர்கள் என்று கூறப்படும் கிராம மக்கள் சமயங்களில் வட்டன்டார்களைப் புறக்கணிக்கிறார்கள். கிராமத் திற்குள் அவர்களை நுழைய அனுமதிப்பதில்லை. அந்த மாதிரியான சமயங்களில் தேவையான செய்திகளை, குறிப்பாகக் கிராமங்களில் நிகழும் பிறப்பு, இறப்புப் பற்றிய செய்திகளை வட்டன்டார்கள் அறிந்து கொள்ள முடியாமல் போகிறது. அதன் விளைவாக வட்டன் டார்களுக்கு அவர்கள் செய்யாத தவறுக்கு அபராதம் விதிக்கப் படுகிறது.

52. மேற்குறிப்பிட்ட தீர்மானம் எண் 15 இன்படி, கேட்பாரற்று இறந்த உடல்களை அகற்றுமாறு வட்டான்டார்கள் பணிக்கப்படு கிறார்கள். என்னைப் பொறுத்தவரை இந்தப் பணியைக் காவலர்கள் தான் செய்ய வேண்டும். ஆகவே இந்தப் பணியைச் செய்வதினின்றும் வட்டன்டார்களுக்கு விலக்களிக்க வேண்டும்.

## III. முடிவு

53. முடிவாக, இந்த மனுவில் குறிப்பிடப்பட்டுள்ள குறை களெல்லாம் தீர்வுக்காக ஏங்கி நிற்கின்றன என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இதுவரை மகர்களிடம் வசூலிக்கப் பட்ட **ஜூடி** வரியைப் பற்றிய முழுவிவரம் என்னிடம் இல்லை. என்னிடம் கொடுக்கப்பட்ட நாசிக் மாவட்டக் கணக்குப்படி, இந்தப் புதிய கொள்கைப்படி **மகர்கி** நிலங்களிலிருந்து நாசிக் மாவட்டத் தில் மட்டும் இதுவரை வசூலிக்கப்பட்ட **ஜூடி** வரி ஆண்டுக்கு ரூ. 2201-4-11 ஆகிறது என்று தெரிகிறது. இது பெருமளவிலான பதட்டத்தை உண்டாக்கியிருக்கிறது. இந்தக் குறைகள் தீர்க்கப்பட வில்லையென்றால், ஹரேகோவன் மாநாட்டுக் கடைசித் தீர்மானப் படி வட்டன்டர்மகர்கள் வேலைநிறுத்தத்தில் இறங்குவார்கள் என்று ஐயுறுகிறேன். அரசாங்கம் தனது கொள்கையை மாற்றிக் கொண்டு, அவர்களுக்கு நீதி வழங்கும் என்னும் நம்பிக்கையில், அந்த நட வடிக்கையை நிறுத்தி வைக்குமாறு அவர்களுக்கு அறிவுரை கூறி யிருக்கிறேன். ஆனால் இதுவரை எதுவும் நடைபெறவில்லை. ஆகவே, மேதகையீர் இந்தப் பிரச்சினையை அவசரமானதாக கருதி, அரசாங்கம் அமுல்படுத்தியிருக்கும் புதிய கொள்கையால், வட்டன் டார்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநீதியைக் களையுமாறு கேட்டுக் கொள்கிறேன். இந்தக் கொள்கையினால் பாதிக்கப்பட்ட மகர் வட்டன்டார்கள் வேலைநிறுத்தத்தில் இறங்குவார்களானால், அல்லது சில இடங்களில் நடைபெறுவதாக நான் கேள்விப்படுவது

போல், ஜூடி வரி பாக்கிக்காக அவர்களின் சொத்துக்களைப் பிணையாகக் கொள்வதால் மோதல் வெடிக்குமானால் அதற்கு அரசாங்கம் மட்டுமே பொறுப்பாகும். அதே சமயம் சட்ட விதிமுறைகள் மூலம் தங்களது குறைகளைத் தீர்க்க முயன்று தோற்றுவிட்டதாக மகர்வட்டன்டார்கள் கூறுவதற்கு முகாந்திரங்கள் உள்ளன.

54. கீழ்நிலை கிராம சேவகர்கள் தொடர்பாக அரசு அமுல்படுத்தியிருக்கும் கொள்கையை நிறுத்தி வைக்க வேண்டும் என்று பணிவுடன் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். இதில் உள்ளடங்கியுள்ள விஷயங்கள் மிகப்பெரியவை, முரண்பாடானவை. அவையெல்லாம் மேதகையீரது ஆலோசகர்களின், அவர்கள் எவ்வளவு திறமையானவர்களாக இருந்தாலும் சரி, செயல்திறனால் மட்டும் தீர்த்துவைக்க முடியாது. சட்டமன்றத்தில் எல்லாத் தரப்பினரும் தங்களது கருத்துக்களை எடுத்துரைக்கும் வாய்ப்பினைப் பெற்று, அளிக்கும் வாக்குகள் மூலம் மட்டுமே அவை தீர்க்கப்பட முடியும். சட்டமன்றம் முடக்கி வைக்கப்பட்டிருப்பதால் அது இப்போது சாத்தியமில்லை. ஆனால் இப்பிரச்சினை ஒருமனதாக தீர்வுக்காகக் காத்திருக்க மகர்களும் கீழ்நிலை கிராம சேவகர்களும் விரும்புவார்கள் என்று நம்புகிறேன்.

'ராஜ்கிரஹா', தாதர்,
இந்து காலனி,
பம்பாய் - 14
14 - ஜூலை 1941.

மேதகையீரின்
மிகவும் பணிவான ஜனசேவகன்
பி.ஆர். அம்பேத்கர்.

## பிற்சேர்க்கை I

## ஹரேகோவன் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்

**தீர்மானம் எண் 1:-**

சமீபத்தில் இந்த மாநிலத்தில் அமலாக்கப்பட்டுள்ள மகர் இனாம் நிலங்களின் மீது **ஜூடி** வரி வதிப்பை அதிகரிக்கும் கொள்கைக்கு வட்டண்டர்கள், மகர்கள், மாங்குகள், வேதியாக்கள் மற்றும் பிற கீழ்நிலை கிராம சேவகர்களின் இந்த மாநாடு வன்மையான கண்டனத்தைத் தெரிவித்துக் கொள்கிறது. அந்தக் கொள்கையின் மூலம் ஏற்கனவே ஏழ்மை நிலையிலிருக்கும் வட்டண்டர்கள், மகர்கள் மற்றும் மாங்குகள் மீது தாறுமாறாக **ஜூடி** அதிகரிக்கப்பட்டிருக்கிறது. அக்கொள்கையானது பரம்பரைக் கிராம அதிகாரிகள் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு முரண்பட்டதாகவும், கடுமையானதாகவும், நியாயமற்றதாகவும் இருப்பதால் அக்கொள்கை உடனடியாகத் திரும்பப் பெறப்பட வேண்டுமென்றும் அதன் மூலம் விதிக்கப்பட்ட வரிகள் தள்ளுபடி செய்யப்பட வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறது.

**தீர்மானம் எண் 1 A :-**

மகர்களும் மாங்குகளும் செய்ய வேண்டிய பணிகளின் பட்டியலைக் கொண்ட 1938 செப்டம்பர் 13 தேதியிட்ட ஜி.ஆர். எண் 7420/33 ஆர்.டி. எண்ணுள்ள உத்தரவானது தாங்க முடியாத பளுவைத் திணித்தது. வட்டண்டர்களால் அதனைத் தாங்கவே முடியாது என்று இந்த மாநாடு தீர்மானிக்கிறது. அப்பட்டியலில் குறிப்பெண்கள் 1, 3, 5, 9, 13 மற்றும் 19 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள வேலைகளைச் செய்ய அழைக்கப்படும் போதெல்லாம், தினக்கூலியாக எட்டணாவிற்குக் குறையாத கூடுதல் சம்பளம் கொடுக்காமல் வட்டண்டர்களை அழைக்கக்கூடாது என்று இந்த மாநாடு கருதுகிறது.

**தீர்மானம் எண் 1 B :-**

எண் 15 இல் குறிபீபிடப்பட்டுள்ள பணி காவலர்களின் பணி என்று மாநாடு கருதுவதால் அந்தப் பணியைச் செய்வதினின்றும் வட்டண்டர்களுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று இம்மாநாடு கருதுகிறது.

**தீர்மானம் எண் 1 C :-**

*எண் 2 இல் குறிப்பிடப்பட்டுள்ள பணி கிராமத்தவர்களை* **படாகி** *அழைப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். முரட்டுத் தனமான கிராமத்தவர் பின்னால் பொழுதுக்கும் ஓடிக் கொண் டிருக்கும்படி செய்யப்படக் கூடாது.*

**தீர்மானம் எண் 2:-**

*சமுதாயத்திற்குப் பயனளிக்கும் கிராம சேவகர்களான வட்டன்களுக்கு 1863 இல் திரு.கார்டன் அவர்கள் உருவாக்கியதைப் போன்ற விதிகளின் அடிப்படையில்* **மஹர்கி வட்டன்களுக்கும்** *பணிக்குப் பண ஈடு செய்யும் முறை வேண்டும் என்றும், அரசுக்கும் கிராம சமுதாயத்திற்கும் பணி செய்யும் கடப்பாட்டிலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட வேண்டும் என்றும் இம்மாநாடு கோருகிறது.*

**தீர்மானம் எண் 3 :-**

*இந்த மாநிலத்தில் மகர்களை ஊதியமில்லாமல் பணி செய்ய வற்புறுத்தும் எண்ணற்ற கிராமங்கள் இருக்கின்றன என்பதை அரசின் கவனத்திற்குக் கொண்டுவர இம்மாநாடு விரும்புகிறது. கீழ்நிலை கிராம சேவகர்களின் ஊதியத்தை உறுதிப்படுத்தும் அவசர அவசியக் கடமை அரசுக்கு இருக்கிறது என்பதை இம்மாநாடு வலி யுறுத்துகிறது. இந்தத் திசை வழியில் இன்னும் ஆறு மாதத்திற்குள் அரசு நடவடிக்கை எடுக்கவில்லையென்றால், அரசுக்கு எந்தப் பணியும் செய்ய வேண்டாம் என மகர்களுக்கு இந்த மாநாடு அறி வுறுத்தும் நிலைக்குத் தள்ளப்படும் என்று இம்மாநாடு அரசுக்கு எச்சரிக்கை செய்கிறது.*

**தீர்மானம் எண் 4 :-**

*இம்மாநிலத்தின் வருவாய்த்துறை அதிகாரிகள் நிறைவேற்றி யிருக்கும் பணியிடை நீக்கம் மற்றும் அபராதம் ஆகியவற்றிற்கான ஆணைகளைத் திருத்தவும், இந்தக் குழுவின் முடிவுகளை நிறை வேற்றும் ஆணைகளைப் பிறப்பிக்கவும், மாநில சட்டமன்றத்தி லுள்ள வட்டன்டர் மகர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரே குழுவை அமைக்குமாறு இந்த மாநாடு அரசுக்குப் பரிந்துரை செய் கிறது.*

**தீர்மானம் எண் 5:-**

*இந்த மாநாட்டில் வலியுறுத்தப்பட்டுள்ள வட்டன்டர் மகர்கள் மற்றும் மாங்குகளின் குறைகள், மேதகு பம்பாய் கவர்னரைச் சந்தித்து முறையீடு செய்ய பம்பாய் சட்டமன்றத்திலுள்ள தாழ்த்தப் பட்ட உறுப்பினர்களுக்கு இம்மாநாடு அதிகாரமளிக்கிறது.*

**தீர்மானம் எண் 6 :-**

*மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களுக்கு தேவை யான வடிவம் கொடுப்பதற்காக கீழ்க்கண்ட பெருமகன்களைக் கொண்ட ஒரு குழுவை இம்மாநாடு நியமிக்கிறது. தீர்மான நோக்கங் களை நிறைவேற்றும் வகையில் ஆலோசனைகள் வழங்கவும் நடவடிக்கை எடுக்கவும் அந்தக் குழுவிற்கு மாநாடு அதிகாரமளிக் கிறது.*

## பிற்சேர்க்கை II

*1940 ஜுன் 7 ஆம் தேதி பகல் 11 மணிக்கு பம்பாய் அரசுச் செயலகத்தில் இரண்டாவது ஆலோசகர் அறையில் நடைபெற்ற பிற்படுத்தப்பட்டோர் ஆணைய 23வது கூட்ட நடவடிக்கைகளின் சில தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள்.*

**தீர்மானம் எண் 6 :-**

*சமீபத்தில் இந்த மாநிலத்தில் அமலாக்கப்பட்டுள்ள மகர் இனாம் நிலங்களின் மீது ஜுடி வரிவிதிப்பை அதிகரிக்கும் கொள்கைக்கு இந்த ஆணையம் வன்மையான கண்டனத்தைத் தெரிவித்துக் கொள் கிறது. அந்தக் கொள்கையின் மூலம் ஏற்கனவே ஏழ்மை நிலையி லிருக்கும் வட்டன்டர்கள், மகர்கள், மாங்குகள் மற்றும் வேதியாக்கள் மீது தாறுமாறாக ஜுடி அதிகரிக்கப்பட்டிருக்கிறது. அக்கொள்கை யானது பரம்பரைக் கிராம அதிகாரிகள் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு முரண்பட்டதாகவும் கடுமையானதாகவும் நியாய மற்றதாகவும் இருப்பதால் அக்கொள்கை உடனடியாகத் திரும்பப் பெறவேண்டும் என்றும் அதன்மூலம் விதிக்கப்பட்டுள்ள வரிகள் தள்ளுபடி செய்யப்பட வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறது. திரு.பி.கே.கெய்க்வாடின் இரண்டாவது கோரிக்கையானது, ஏழாவது தீர்மானத்தைப் போலவே விவாதிக்கப்பட்டு சிறிய திருத்தத்துடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கொடுக்கப்படும் தினசரி உதவித்தொகை வீதத்தைப் பொறுத்தவரையில், அரசுப் பணி நிமித்தமாக மகர்*

அல்லது வேதியா கிராமத்தைவிட்டு வெளியே அனுப்பப்படுகிற போது, தினசரி உதவித் தொகையாக ஆறாணா கொடுக்கப்பட வேண்டும் என்று யோசனை கூறப்பட்டிருக்கிறது.

(திரு. பி.கே.கெய்க்வாட்)

**தீர்மானம் எண் 7 :-**

மகர்களும் மாங்குகளும் வேதியாக்களும் செய்ய வேண்டிய பணிகளின் பட்டியலைக் கொண்ட வருவாய்த்துறையின் 13.9.1938 தேதியிட்ட அரசுத் தீர்மானம் எண் 7420/33, தாங்க முடியாத பளுவைத் திணிக்கிறது. வட்டன்டார்களால் அதனைத் தாளவே முடியாது என்று ஆணையம் தீர்மானிக்கிறது. அப்பட்டியலில் குறிப்பெண்கள் 1, 3, 5, 9,13 மற்றும் 19 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள பணிகளைச் செய்ய அழைக்கப்படும் போதெல்லாம், தினக்கூலியாக ஆறணா விற்குக் குறையாமல் கூடுதல் ஊதியம் கொடுக்காமல் வட்டன்டார் களை அழைக்கக்கூடாது என்று இந்த ஆணையம் கருதுகிறது.

(a) எண் 15 இல் குறிப்பிடப்பட்டுள்ள பணி, காவலர்களால் செய்யப்பட வேண்டியது என்று ஆணையம் கருதுவதால், அந்தப் பணியைச் செய்வதினின்றும் வட்டன்டார்களுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்று ஆணையம் கருதுகிறது.

(b) இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள பணியைப் பொறுத்தவரை, கட்டேடார்களை 'படாகி', 'தவந்தி' என்று அழைப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். முரட்டுக் கட்டேடார் களின் பின்னால் பொழுதுக்கும் ஓடிக்கொண்டிருக்கக் கூடாது என்று ஆணையம் கருதுகிறது.

(c) வட்டன்டர் மகர்களும், மாங்குகளும், வேதியாக்களும் ஏழாவதாகக் கூறப்பட்டுள்ள பணியிலிருந்து விலக்களிக்கப்பட வேண்டும் என்று ஆணையம் கருதுகிறது. நகராட்சிப் பகுதிகளில் செய்யப்படுவதைப் போன்று, பிறப்பு இறப்புக்களைப் பற்றிச் சம்பந்தப்பட்டவர்களே கிராம பட்டீலிடம் தெரிவிக்க வேண்டும் என வலியுறுத்தப்பட வேண்டும்.

(திரு. பி.கே. கெய்க்வாடு)

**தீர்மானம் எண் 8:-**

மகர்களையும் மாங்குகளையும் வேதியாக்களையும் ஊதிய மில்லாமல் அரசுப் பணி செய்ய வற்புறுத்தும் எண்ணற்ற கிராமங்கள் பம்பாய் மாநிலத்தில் இருக்கின்றன என்பதை அரசின் கவனத்திற்குக் கொண்டுவர இந்த ஆணையம் விரும்புகிறது.

சரியான, போதுமான ஊதியம் கொடுக்காமல் கீழ்நிலை கிராம சேவகர்களை எந்த ஒரு பணியையும் செய்யப் பணிக்கக் கூடாது என்று இந்த ஆணையம் அரசுக்கு வலுவாகச் சிபாரிசு செய் கிறது.

• • •

# பிற்சேர்க்கை III

*கீழ்நிலை கிராம சேவகர்களின் பணிகள்*

**பம்பாய் அரசு**

**வருவாய்த்துறை**

*தீர்மானம் எண் 7420/33*

*பம்பாய் கோட்டை, 13 செப்டம்பர் 1938.*

*அரசு அறிக்கை எண் 7420-எஃப்/33, தேதி 27 ஜனவரி 1938*

*வ.பி.*
*ஆணையருக்கு, ஜனவரி 1938 ம.பி.*
*தெ.பி.*

*வ.பி.ஆணைர் கடித எண். டபிள்யூ.டி.எண்.1062, தேதி 25-2-1938.*

*ம.பி.ஆணையர் கடித எண். டபிள்யூ.டி.எண்.2/27, தேதி 22-3-1938.*

*தெ.பி.ஆணையர் கடித எண். டபிள்யூ.டி.எண்.860, தேதி 26-4-1938.*

*தீர்மானம்: அரசுக்குப் பயனுள்ள கீழ்நிலை கிராம சேவகர்களின் பணிகளை வரையறுத்துக் கூறுமாறு அரசுக்கு அடிக்கடி கோரிக்கைகள் விடுக்கப்படுகின்றன. அதனால் செய்ய வேண்டிய பணியை அவர்கள் சரியாக அறிந்து கொள்வார்கள். மேலும் அரசு அதிகாரிகளின் சொந்தப் பணிகளை இவர்கள் செய்ய வேண்டிய நிலை ஏற்படாது. ஊதியம் கொடுக்காமல் அரசு ஊழியர்கள் எந்தச் சொந்தப் பணியையும் பெறக்கூடாது என்று 1937 ஆகஸ்டு 25 தேதியிட்ட ஆட்சி மற்றும் சீர்திருத்தத் துறையின் அரசு அறிக்கை எண் 1581/34 இன் 5வது பத்தியில் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இங்கு இணைக்கப்பட்டுள்ள அறிவிப்பு, பல பிரிவுகளைச் சார்ந்த கீழ்நிலை கிராம சேவகர்களின் வேலைகளை விவரிக்கிறது.*

*2. அரசின் கீழ்த்திசை மொழிபெயர்ப்பாளர், அறிக்கைகளை குஜராத்தி, மராத்தி, கன்னடம் மற்றும் உருது மொழிகளில் மொழிபெயர்த்து, அம்மொழிபெயர்ப்புக்களை அரசு மத்திய அச்சக*

மேலாளருக்கு அச்சிடுவதற்காக அனுப்பி வைக்கக் கேட்டுக்கொள்ளப் பட வேண்டும். அச்சடிக்கப்பட்ட மொழிபெயர்ப்புக்களை மாவட்ட ஆட்சியாளர்களுக்கு அவர்களின் தேவைக்கேற்ப மேலாளர் அனுப்பி வைக்க வேண்டும். இது, இந்தத் தீர்மானத் தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள்ளாக அவருக்கு நேரடியாக அறிவிக்கப்பட வேண்டும். மொழிபெயர்ப்புப் பிரதிகள் ஒவ்வொரு தலாத்திக்கும் பட்டீலுக்கும் கொடுக்கப்பட வேண்டும். ஒவ்வொரு கிராமச்சாவடியிலும் ஒரு பிரதி, பிரதானமாக வைக்கப்பட வேண்டும். சாவடி இல்லாத கிராமங்களில் வேறு சில பொது இடங்களில் இப்பிரதிகள் பார்வைக்கு வைக்கப்பட வேண்டும்.

3. மொழிபெயர்ப்புகள் அச்சடிக்கப்பட்ட செலவுகளை வழக்கமான அச்சகக் கணக்குக் காரணங்களுக்கு, ''25 பொது நிர்வாகம்'' என்ற தலைப்பில் பற்று வைக்க வேண்டும்.

பம்பாய் ஆளுநரின் ஆணைப்படி
எம்.ஜே. தேசாய்,
அரசு துணைச் செயலாளர்.

**அரசு தீர்மானத்துடனான இணைப்பு, வருவாய்த்துறை, எண் 7420/33, தேதி 13 செப்டம்பர் 1938**

பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த கீழ்நிலை கிராம சேவகர்களது பணிகளின் பட்டியல் அடங்கிய அறிவிப்பு

மகர்கள், தெடுகள், வேதியாக்கள், பங்கிகள் மற்றும் மாதவிகளின் பணிகள்

(1) செலுத்த வேண்டிய அரசுப் பணத்தை துணைக் கருவூலங்களுக்கு எடுத்துச் செல்லுதல்.

(2) அரசுக்கான நிலுவைத் தொகைகளை கட்டுமாறு சாவடிகளில் கிராம மக்களுக்கு அறைகூவல் விடுத்தல்.

(3) வட்டாட்சி அலுவலகத்துக்கு சென்றுவர கிராம ஆவணக் கட்டைத் தூக்கிச் செல்லுதல்.

(4) கிராமங்களில் உள்ள அரசுப் பணம், அலுவலக ஆவணங்கள் மற்றும் அரசு நிலுவைக்காக ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்கள் ஆகியவற்றைப் பாதுகாத்தல்.

(5) வட்டாட்சி அலுவலகத்திற்குத் தபால்களை எடுத்துச் செல்லுதல், அங்கிருந்து அனுப்புதல் மற்றும் போக்குவரத்து வசதியுள்ள இடங்களில் அரசுத் தபால் அதிகாரிகளை சுற்றுலா அழைத்துச்செல்லுதல்.

(6) கிராம அதிகாரிகள் மற்றும் சுற்றுப் பயணத்திலுள்ள அதிகாரிகளோடு அறுவடை காலத்திலும், எல்லைக்குறி ஆய்வின் போதும் உடன் செல்லுதல்; அதிகாரிகளுக்கும் பிற பயணிகளுக்கும் வழிகாட்டுதல்.

(7) பிறப்பு, இறப்பு பற்றிய செய்திகளை கிராம அதிகாரிகளிடம் எடுத்துச்செல்லுதல்.

(8) கைப்பற்றப்பட்ட அசையும் சொத்துக்களை கிராம சாவடிக்கு எடுத்துச்செல்லுதல்.

(9) தகவலறிவிப்பு முதலியவற்றை எந்த மக்களுக்குத் தெரிவிக்க வேண்டுமோ அவர்களை வரவழைத்தல், மற்றும் குற்றவியல் துறை நடுவர்கள், காவலர்கள் ஆகியோரின் அழைப்பாணைகளை உரியவர்களிடம் சேர்ப்பதற்கு காவல்துறைப் பட்டீலுக்கு உதவுதல்.

(10) அரசு வேலைக்காக, சங்கிலிகளையும், நில அளவை குறுக்கு மட்டக் கோல்களையும், மேசை மற்றும் அளவைக்குத் தேவையான பிற கருவிகளையும் களத்திற்குத் தூக்கிச் செல்லுதல்.

(11) ஐக்லியாக்கள் நியமிக்கப்படாத இடங்களில் காவலர்கள் இரவு ரோந்துப் பணி செய்யும்பொழுது அவர்களுடன் செல்லுதல்.

(12) அரசு ஆணைகளைக் கிராமத்தில் தண்டோரா மூலம் அறிவித்தல்.

(13) பட்டியலிடப்பட்ட கால்நடைகளை, தேவைப்படும்போது ஏலத்திற்காகக் கச்சேரிக்குக் கொண்டு செல்லுதல்.

(14) அம்மை குத்துவதற்குக் குழந்தைகளை அழைத்து வந்து அம்மை குத்துபவருக்கு உதவி செய்தல்.

(15) கிராமங்களில் காணப்படும் அனாதைப் பிணங்களை அப்புறப்படுத்த உதவுதல், பிணங்களைப் பின்னாய்வு செய்ய (போஸ்ட்-மார்ட்டம்) காவலர்கள் சொல்லுகிற இடங்களுக்கு அவற்றை அகற்ற அவர்களுக்கு உதவுதல்.

(16) விபத்து சாவுகள் நிகழும்போதும் தீவிபத்து, தொற்றுநோய், விலங்குகளிடம் நிலவும் நோய் ஆகியவை பரவும் போதும் காவல்துறை பட்டீலுக்கு உதவுதல்.

(17) குற்றப் பரம்பரைக் குழுவினர் மற்றும் குற்றவாளிகளின் நடமாட்டத்தை அறிவித்தல், புலனாய்வு செய்வதற்கும் குற்றங்கள் நடைபெறுவதைத் தடுப்பதற்கும் காவலர்களுக்கு உதவுதல்.

(18) காவல் துறைப் பட்டீலின் கண்காணிப்பிலுள்ள கைதிகளைக் கண்காணித்தல்.

(19) கிராமங்களில் முகாம் அலுவலகங்கள் அமைக்க உதவுதல்

**ராமோஷிக்கள் அல்லது ராவணியாக்கள் மற்றும் வர்தானியாக்களின் பணிகள்**

(1) நிலவரி வசூலிக்கும் காலங்களில் சாவடியில் ஆஜராகியிருத்தல்.

(2) வட்டாரத் தலைமையகங்களுக்கு மகர்கள் அல்லது தெடுக்கள் பணம் எடுத்துச் செல்லும்போது அவர்களுடன் செல்லுதல்.

(3) அரசு வேலையாக கிராமத்தில் பணியாற்றும் அரசு அதிகாரிகளுக்கு உதவுதல்.

(4) அரசு நிலுவைகளுக்காக ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்களைக் கண்காணித்தல்.

(5) வசூல் காலங்களில் தேவைப்படும்போது கிராம மக்களைச் சந்தித்தல்.

(6) இரவு நேரங்களில் ரோந்து சுற்றுதல், காவலர்கள் இரவு ஊர்க் காவல் செய்யும் போதும் குற்றவாளிகளைக் கைது செய்வதிலும் உதவுதல், குற்றங்களைக் கண்டுபிடிக்கும் போதும் தற்செயல் சாவுகள் பற்றிய விசாரணையின்போதும் உதவுதல்.

(7) திருட்டுக்கள் மற்றும் பிற குற்றங்கள் நடைபெறுவதைத் தடுப்பதில் உதவுதல்.

(8) குற்றப்பரம்பரையினர் மற்றும் பெயர்பெற்ற குற்றவாளிகளின் நடமாட்டத்தையும் மற்றும் குற்ற நடவடிக்கைகள், விபத்துகள் ஆகியவை பற்றியும் காவல் துறை பட்டீலுக்கு அறிவித்தல்.

(9) கிராம அதிகாரிகளின் ஆவணக் கட்டைத் தூக்கிச் செல்லுதல்.

(10) நிலவரி வசூல் செய்யும் காலங்களில் கிராம அதிகாரிகளுக்கு உதவுதல்.

(11) விளைச்சலைப் பார்வையிட கிராம அதிகாரிகள் செல்லும் போது உடன் செல்லுதல்.

(12) காவல்துறைப் பட்டீலின் பாதுகாப்பில் உள்ள ஆட்களுக்குக் காவல் இருத்தல்.

**சௌகுலாக்கள் மற்றும் நாய்க்வாடிக்களின் பணிகள்**

(1) கிராம அதிகாரிகளின் ஆவணக் கட்டுகளை எடுத்துச் செல்லுதல்.

(2) நிலவரி வசூல் செய்யும் காலங்களில் கிராம அதிகாரிகளுக்கு உதவுதல்.

(3) விளைச்சலைப் பார்வையிட வரும் கிராம அதிகாரிகளுடன் செல்லுதல்.

(4) கிராமச் சாவடியைச் சுத்தமாக வைத்திருத்தல், அங்குள்ள விளக்குகளை எரியவைத்தல்.

**ஜக்லியாக்களின் பணிகள்**

(1) இரவு நேரங்களில் காவல் காத்தல், வருகிற போகிற அனைவரையும் தெரிந்திருத்தல், வெளி ஆட்களைக் கண்காணித்தல், சந்தேகத்திற்கிடமான அனைவரைப் பற்றியும் காவல் பட்டீலிடம் தெரிவித்தல்.

(2) காலடித் தடங்களைக் கொண்டு திருடனை துப்புத் தேடுதல்.

(3) குற்றப் புலன் விசாரணையில் காவலர்களுக்கு உதவுதல்.

(4) கிராமத்திலிருந்து வசூலை தாலுகாவிற்குக் கொண்டு செல்லும் போது உடன் செல்லுதல்.

(5) விளைச்சல் மற்றும் எல்லைக் குறி ஆகியவற்றை ஆய்வு செய்ய கிராம அதிகாரிகள் வரும்போது உடன் வருதல்.

**டால்படாக்கள், கோலிக்கள் ஆகியோரின் பணிகள்**

(1) சாவடியைப் பெருக்கி, சாணியிட்டு மெழுகி, விளக்கேற்றி சுத்தமாக வைத்திருத்தல்.

(2) விளைச்சல் மற்றும் எல்லைக்குறி ஆகியவற்றை ஆய்வு செய்யும் கிராம அதிகாரிகளுக்கு உதவுதல்.

(3) அரசு அதிகாரிகள் கிராமத்தில் முகாமிடும்போது, அவர்களின் அரசுப் பணிகளுக்குத் தேவைப்படும் வரை பாதுகாப்பளித்தல்.

**சமதிகள் அல்லது வலிகர்கள், தல்வார்கள், ஹோல்கார்கள் மற்றும் உக்ராணிகள் ஆகியோரின் பணிகள்**

(1) அரசு வருவாய் வசூலிப்பில் கிராம அதிகாரிகளுக்கு உதவுதல்.

(2) குற்றவியல் நடுவர்கள் மற்றும் காவலர்கள் பிறப்பிக்கும் அழைப்பாணைகள் போன்றவற்றை கொண்டு சேர்ப்பதில் காவல்துறை பட்டீலுக்கு உதவுதல்.

(3) கிராம ஆவணங்கள், பொதுப்பணம் அல்லது முட்டேமால் ஆகியவற்றைக் காவல் செய்தல்.

(4) கருவூலத்திற்குச் செலுத்த வேண்டியவற்றை எடுத்துச் செல்லும் போது அல்லது தாலுகா மற்றும் துணைக் கருவூலத்திற்குப் பணத்தை எடுத்துச் செல்லும்போது பாதுகாவலாகச் செல்லுதல்.

(5) போக்குவரத்து வசதிகள் இல்லாத இடங்களில், கிராம மற்றும் சுற்றுப்பயண அலுவலர்களின் பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குத் தூக்கிச் செல்லுதல்.

(6) கிராமத்தில் இரவு ரோந்துப் பணி செய்தல்.

(7) காவல்துறை பட்டீலின் பாதுகாப்பிலிருக்கும் கைதிகளைக் காவல் செய்தல்.

(8) சாலை வசதி இல்லாத இடங்களில், சுற்றுப் பயண அதிகாரிகளுக்கு, ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்குக் குறைந்த அளவு தூரம் கூடவே நடந்து சென்று போதுமான அளவு வழிகாட்டுதல்.

(9) பிறப்பு, இறப்புக்களைப் பற்றி காவல்துறை பட்டீலுக்குத் தகவல் கொடுத்தல்.

(10) அரசு வேலைக்குத் தேவைப்படும்போது கிராம மக்களை கிராம சாவடிக்கு அழைத்து வருதல்.

(11) கள ஆய்வின்போது, கிராம அதிகாரிகள் மற்றும் பிற அதிகாரிகளுடன் செல்லுதல்.

(12) அம்மை குத்துவதற்கு குழந்தைகளை அழைத்துவர அம்மை குத்துபவருக்கு உதவுதல்.

(13) கிராமத்திலிருந்து தாலுகாவிற்கும் தாலுகாவிலிருந்து கிராமத்திற்கும் கிராம ஆவணங்களை எடுத்துச் செல்லுதல்.

(14) கிராம அதிகாரிகள் சுற்றுப் பயணத்தில் அக்கிராமத்தில் இருக்கும் போது பொதுப் பணிகளைச் செய்ய அவர்களுக்கு உதவுதல்.

(15) கிராம சாவடிகளைச் சுத்தமாக வைத்திருத்தல்.

(16) முகாம் அலுவலகங்களைக் கிராமத்தில் அமைத்தல்.

**பார்க்கர்களின் பணி**

(1) கிராம சாவடியைச் சுத்தமாக வைத்திருத்தல்.

● ● ●

## 28

# நான் இந்துக்களுக்கெதிராகத் தாக்குதல்கள் தொடுப்பதைவிட மிக உக்கிரமான தாக்குதல்களை அவசியமானால் ஆங்கிலேயருக்கு எதிராகத் தொடுப்பேன்....

*1941 ஆம் ஆண்டு ஜூலை 27 ஆம் தேதி இந்திய பாதுகாப்புக் குழுவை வைசிராய் அமைத்தார். அதில் மொத்தமுள்ள பதின்மூன்று உறுப்பினர்களில் எட்டு பேர் இந்தியர்கள். அக்குழு உறுப்பினர்களில் டாக்டர் அம்பேத்கரும் ஒருவர். ஆங்கிலேயர்கள் கடைப் பிடித்துவரும் மோசமான கொள்கைகள் குறித்து கருத்துக்களை அவர் வெளியிட்டார் - ஆசிரியர்கள்.*

''இப்போது பல ஆண்டுகளாக இந்துச் சமுதாயத்தையும் அதன் எண்ணற்ற கேடுகளையும் மிகக் கடுமையாகத் தாக்கி வருகிறேன். ஆனால் என்னுடைய ராஜபக்தியை சொந்த மக்களை நசுக்குவதற்காகவும் அவர்களின் வாழ்வாதாரங்களைப் பறிப்பதற்காகவும் பயன்படுத்தப்படுமானால், நான் இந்துக்களின் மீது தொடுத்து வருவதைக் காட்டிலும் நூறுமடங்கு அதிக கூர்மையான, கடுமையான தாக்குதலை ஆங்கிலேயருக்கெதிராகத் திருப்புவேன் என்று உங்களுக்கு உறுதியளிக்கிறேன்''.

(சுதந்திரத்திற்குப் பத்தாண்டுகள், பக்கம் 58-59)

• • •

---

★ மேற்கோள், கைர்மோட், தொகுதி 9, பக். 130.

## 29

# வைசிராயின் அவையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்க்காதது அவமதிப்பும் நம்பிக்கை மீறலும் ஆகும்

பம்பாய், வியாழக்கிழமை*

''வைசிராயின் திருத்தியமைக்கப்பட்ட அவையில் தாங்கள் சேர்க்கப்படாததை அவமானமாகவும் நம்பிக்கை மீறலாகவும் தாழ்த்தப்பட்ட மக்கள் கருதுகிறார்கள்'' என்று தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவரான டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், இந்திய அரசுச் செயலாளர் திரு.எல்.எஸ்.அமெரிக்கு அனுப்பிய தந்திச் செய்தியில் கூறுகிறார்.

அந்தத் தந்தியில் மேலும் கூறப்பட்டிருப்பதாவது: ''ஒரேயடியாக ஆறுகோடி தாழ்த்தப்பட்ட மக்களை நீங்கள் அவமதித்திருப்பதும், ஏறத்தாழ இந்துக்களுக்குச் சமமாக 43 சத பிரதிநிதித்துவத்தை முஸ்லீம்களுக்குக் கொடுத்திருப்பதும் அதிர்ச்சியளிக்கிறது. சில சமுதாயத்தினரிடம் மட்டும் அரசாங்கம் அடகு வைக்கப்பட்டிருப்பதைப் போலத் தெரிகிறது.

தாழ்த்தப்பட்ட இன மக்கள் இந்திய தேசிய வாழ்வில் மிக முக்கியமான தனித்ததொரு கூறு என்று மதிப்புடன் அங்கீகரிக்கப்பட்டுள்ளனர், அரசியலமைப்பில் மாற்றங்கள் செய்வதற்கு அவர்களின் ஒப்புதல் முக்கியம் என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது; யுத்தத்தில் அவர்களின் ஒத்துழைப்பு பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வாறு இருக்கும்போது அவர்களைக் குழுவிலிருந்து விலக்கி வைத்திருப்பது உங்களின் நம்பிக்கையின்மையையே காட்டுகிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பெயரால் அவர்களின் நலன் கருதி இதை நான் எதிர்க்கிறேன். என்னைப் பொறுத்தவரை

---

தி ஃப்பிரீ பிரஸ் ஜர்னல் : தேதி 1-8-1941.

★ 31-ஜூலை 1941.

ஆங்கிலேயரிடமிருந்து எனக்காக எதுவும் கேட்டதுமில்லை; அவர்களைச் சார்ந்திருந்ததுமில்லை; அவர்களின் ஆதரவைப் பெற்றதும் இல்லை. எதிர்காலத்திலும் அவை இல்லாமல் என்னால் இயங்க முடியும். உங்களின் தேர்வைப் பொறுத்தவரை உங்களுக்கு முழு உரிமை உண்டு.

தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு நீதி வழங்க வேண்டும். இந்தக் குழுவில் பிரதிநிதித்துவம் பெறுவதற்காகத் தங்களுடைய உரிமைகளை விட்டுக்கொடுக்க தாழ்த்தப்பட்ட மக்கள் தயாராக இல்லை என்று எச்சரிக்க விரும்புகிறேன். அதை நீங்கள் அங்கீகரிக்க வேண்டுமென்ற உறுதியாக வற்புறுத்துகிறேன். ஓர் உறுப்பினரை குழுவில் கூடுதலாகச் சேர்த்துக் கொண்டால் ஒன்றும் குடிமுழுகி விடாது''.

• • •

# 30

# இந்தியா முழுமையிலுமுள்ள தாழ்த்தப்பட்ட இன மக்களது அனைத்துத் தலைவர்களின் மாநாடு

*பம்பாய், செப்டம்பர் 26, 1941*

''நாட்டில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் அனைத்து சக்திகளையும் ஓர் அரசியலமைப்பின் கீழ் ஒன்றுதிரட்ட முடிவெடுத்திருப்பதாக 'யுனைட்டட் பிரஸ்' அறிகிறது. அது ஆறுகோடி தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களுக்காக உரிமையுடன் மாபெரும் அமைப்பாக இருக்கும். இம்முடிவு மகாராஷ்டிராவிலுள்ள பம்பாயில் நேற்று எடுக்கப்பட்டது. அப்போது அந்த இன மக்களின் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் மற்றும் அகில இந்திய ஹரிஜன அரசியல் மாநாட்டின் தலைவர் திரு.பி.என். ராஜ்போஜ் ஆகியோர் உடனிருந்தனர்.

இந்த நோக்கத்திற்காக, இந்தியா முழுமையிலும் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் அனைத்துத் தலைவர்களின் மாநாட்டை டாக்டர் அம்பேத்கரின் வழிகாட்டுதலில் அக்டோபர் கடைசி வாரத்தில் பம்பாயிலோ அல்லது புனாவிலோ நடத்த இந்தக் கூட்டத்தில் முடிவெடுத்திருப்பதாக 'யுனைட்டெட் பிரஸ்' அறிகிறது. இந்த மாநாட்டின் அமைப்பாளராக திரு.ராஜ்போஜ் நியமிக்கப்பட்டிருக்கிறார். தாழ்த்தப்பட்ட மக்கள் தலைவர்களுடன் கலந்தாலோசித்த பின்னர் மாநாடு நடக்கும் இடமும், தேதியும் அறிவிக்கப்படும்.

அமையப்போகும் தாழ்த்தப்பட்ட மக்களின் அமைப்பானது, முஸ்லீம்லீக் அல்லது இந்து மகாசபை போன்ற பிற அரசியல் அமைப்புக்களைப் போல நிரந்தரமான ஒன்றாக இருக்கும் என்று அறியப்படுகிறது.''[1]

● ● ●

1. பம்பாய் கிரானிக்கில், தேதி 27 செப்டம்பர் 1941.

# 31

# டாக்டர் அம்பேத்கரும் யூதமக்களும்

''பம்பாயிலிருந்து வெளிவரும் யூத மாதப் பத்திரிகை (தி ஜுயிஷ் அட்வொகேட் நவம்பர் 1941) ஒன்றின் ஆசிரியருக்கு ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் அளித்த சிறப்புப் பேட்டியில் இந்தியாவின் மிகுந்த மரியாதைக்குரிய தலைவர்களில் ஒருவர், பாலஸ்தீனத்தில் அமைந்துவரும் சமுதாய அமைப்பைப் பொறுத்தவரை இது சம்பந்தமான யூதர்களின் முன்னோடி முயற்சிகளை வெளிப்படையாக வியந்து பாராட்டியிருக்கிறார்.''

அவர் வேறுயாருமல்ல, இந்திய அரசியல் சாசனத்தின் தந்தையும், இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவருமான டாக்டர் அம்பேத்கர்தான் அவர்.

உலகம் முழுவதிலும் கொண்டாடப்படுகிற நூற்றாண்டு விழாவிற்கு உரியவரான டாக்டர் அம்பேத்கர், இஸ்ரேலில் உள்ள யூத தேசிய இயக்கத்தைப் பற்றி நன்கு அறிந்து, அந்த இயக்கத்தின்பால் மிகுந்த பரிவு காட்டும் ஒரு சில இந்திய தேசிய இயக்கத் தலைவர்களில் ஒருவராவார்.

யூத மக்கள்பால் அம்பேத்கர் கொண்டிருந்த ஆர்வத்தை அறிய வேண்டுமானால், அனேகமாக 1941 ஆம் ஆண்டுவாக்கில் **பாம்பே சென்டினல்** என்னும் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்ட 'மோசஸும் அவருடைய தனிச் சிறப்புக்களும்' என்ற அவருடைய கட்டுரையைப் படிக்க வேண்டும். பைபிளில் முக்கிய இடம் பெற்றுள்ள மோசஸ் பற்றி, சிறிய கட்டுரையாக அவர் எழுதியிருக்கும் அந்தத் தலைசிறந்த படைப்பில் யூத மக்களின்பால் தமக்குள்ள தனிக் கண்ணோட்டத்தை மிக ஆழமாக வெளிப்படுத்தியுள்ளார். அதனுடைய முக்கியத்துவம் கருதி, அதை மீண்டும் மறு பிரசுரம் செய்வதே சரியாக இருக்கும் என்று கருதுகிறேன்.

''பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ள யூதர்களின் கதை உள்ளத்தைத் தொடுவதாக உள்ளது. ஒரு சிலவே இதற்கு இணையாகக் கூறலாம். அது எளிய ஆனால் உணர்ச்சியூட்டக்கூடிய மொழியில் கூறப்பட்டுள்ளது. அடிமைத்தனத்தில் இயல்பாகவே பொதிந்துள்ள

அவலமும் கடைசியில் யூதர்கள் விடுதலை பெறுவதும், பரோவா காலத்து எகிப்தில் இருந்த யூதர்களைப் போல ஒடுக்கப்பட்டிருந்த அனைவரின் உணர்வுகளையும் அது பாதிக்கும். ஆனால், ஒடுக்கப் பட்டவர்களின் விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கும் ஒவ்வொருவரின் உள்ளமும், யூதர்களின் விடுதலையைத் தேடித்தந்த மோசஸின்பால் கண்டிப்பாகச் செல்லும்''

''யூதர்களுக்கு மோசஸ் என்ன செய்யவில்லை?'' அடிமைத் தனத்திலிருந்து அவர்களை மீட்டு எகிப்திற்கு வெளியே அழைத்துச் சென்றார். சினாய் மலையிலிருந்து பத்துக் கட்டளைகளைக் கொண்டு வந்து அவர்களின் மதத்திற்கு அடித்தளம் அமைத்தார். சமுதாயம் மற்றும் மதம் சார்ந்த சட்டங்களை வகுத்துக் கொடுத்தார். திருக் கோவில் கூடாரங்கள் கட்டுவதற்கான அறிவுரைகளை வழங்கினார்.''

''சீடர்களினால் அவர் என்ன துன்பம்தான் அனுபவிக்க வில்லை?'' இஸ்ரேலின் குழந்தைகள் எகிப்தை விட்டு வெளியேறி பரோவா மன்னனின் படைகளினால் துரத்தப்பட்டுத் தாக்கப்பட்ட போது அவர்கள் மிகவும் வேதனை அடைந்தார்கள். 'எகிப்தில் கல்லறைகள் இல்லையென்ற காரணத்தால் எங்களை இங்கே சாவதற்குக் கொண்டுவந்தீர்களா? இந்தப் பாலைவனத்தில் சாவதை விட எகிப்தியர்களுக்குச் சேவை செய்வதே எங்களுக்கு உகந்ததாக இருக்கும்' என்று அவர்கள் மோசஸிடம் கூறினார்கள்.

''நடந்து வந்த இஸ்ரேலியர்கள் எலிம் என்ற இடத்திற்கு வந்து முகாமிட்டார்கள். அவர்கள் எல்லோருக்கும் போதுமான தண்ணீர் அங்கு இல்லை. 'எங்களுக்குத் தண்ணீர் கொடு. எங்களையும், எங்கள் குழந்தைகளையும் எங்கள் கால்நடைகளையும் தாகத்தால் சாகடிக்கவா எங்களை எகிப்திற்கு வெளியே கூட்டி வந்தீர்கள்' என்று அவர்கள் கத்தினார்கள். அங்கு தண்ணீர் இல்லாத காரணத்தால் அவரைக் கல்லால் அடிக்கவும் தயாரானார்கள்''.

''மோசஸ் சினாய் மலையின்மேல் ஏறிச் சென்றார், கீழிறிங்கி வருவதற்குக் காலதாமதம் செய்தார். உடனே யூதர்கள் ஆரோனிடம் சென்றார்கள். 'எங்களுக்குக் கடவுளரைப் படைத்துத் தாருங்கள். அவர்கள் எங்களுக்கு முன்னால் செல்லட்டும். ஏனென்றால், எகிப்திற்கு வெளியே எங்களை அழைத்துவந்த மோசஸ் என்னும் இந்த மனிதனுக்கு என்ன துன்பம் நேர்ந்ததென்று தெரியவில்லை' என்று கூறினார்கள்.''

அவருடைய தலைமைக்கே சவால் விடப்பட்டது. எதியோப்பியப் பெண்ணை மோசஸ் மணந்து கொண்டதால் மிரியமும் ஆரோனும் அவருக்கு எதிராகப் பேசினார்கள் என்று பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ''மோசஸ் மூலமாக மட்டும்தான் தேவன் பேசுகிறாரா? எங்கள் மூலமாகவும்கூட அவர் பேசவில்லையா?'' என்று கேட்டார்கள். இருந்தாலும் அவர்களின் அவதூறுகளையும் வசவுகளையும் மோசஸ் பொறுத்துக் கொண்டார். அவர்களது பொறுமையின்மையை அவர் சகித்துக் கொண்டார். இதய சுத்தியோடு அவர்களுக்குப் பணிவிடை செய்தார்.

''தேவனை நேருக்கு நேராக அறிந்த மோசஸ் போன்ற இறைத் தூதர் எவரும் இஸ்ரேலியர்களில் தோன்றவில்லை. மோசஸ், யூதர்களின் ஒப்பற்ற தலைவர் மட்டுமல்ல. ஒடுக்கப்பட்ட இனத்தைச் சார்ந்த எவரும் வணங்கத்தக்க தலைவர் அவர்'' என்று பழைய ஏற்பாடு கூறுகிறது.

''எகிப்திலிருந்து யூதர்கள் வெளியேறியவிதம் மற்றும் மோசஸின் தலைமை ஆகியவை பற்றி பிறர் என்ன கருத்துக் கொண்டிருந்தாலும், இவையெல்லாம் எனக்கு வற்றாத உள்ளுணர்வையும் நம்பிக்கையையும் தரும் மூலாதாரமாக இருக்கின்றன.''

''யூதர்களுக்கு ஒரு சொர்க்க பூமி இருந்ததைப் போலவே ஒடுக்கப்பட்ட இன மக்களும் அவர்களின் சொர்க்க பூமியை அடைந்தே தீருவார்கள் என்று நம்புகிறேன். யூதர்கள் தங்கள் சொர்க்க பூமியை அடைந்ததைப்போல ஒடுக்கப்பட்ட இனமக்களும் முடிவில் தங்கள் சொர்க்க பூமியை அடைவார்கள் என்று கருதுகிறேன்.''

''இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் இன்றைய நிலை, எகிப்தில் அடிமைப்பட்டுக் கிடந்த யூதர்களின் நிலையோடு ஒத்திருப்பதைப் பார்க்கிறேன். தன் மக்களிடம் கொண்டிருக்கும் எல்லையில்லா அன்பு காரணமாக, எத்தகைய இன்னல்களையும் அவதூறுகளையும் தாங்கிக் கொள்ளும் தளராத உறுதிகொண்ட தலைவராக மோசஸைப் பார்க்கிறேன்.''

''தாழ்த்தப்பட்ட மக்களை விடுவிக்கும் எனது முயற்சிக்கு ஏதாவதொன்று ஊக்கமூட்டுகிறதென்றால், அது அடிமைப்பட்டுக் கிடந்த யூத மக்களை விடுவிக்கும் உயரிய கடமையை மோசஸ் மேற்கொண்ட வரலாறுதான் என்று ஒப்புக்கொள்கிறேன்.''

டாக்டர் அம்பேத்கரையும் அவரது வாழ்நாள் பணிகளையும் யூத மக்கள் பெருவியப்புடன் எப்போதும் நோக்குகிறார்கள் என்றால் அது இயல்பானதுதான். இஸ்ரேல் என்ற தங்களது சொர்க்க பூமியை விட்டு வெளியேற்றப்பட்டதிலிருந்து பல நூற்றாண்டுக் காலமாக, தங்களைச் சுற்றியுள்ள பெரும்பான்மை மக்களிடமிருந்து மாறுபட்டிருக்கும் காரணத்திற்காக, வேறுபடுத்தப்பட்டு, துன்புறுத்தப்பட்டு இன்னல்களை அனுபவித்து வந்த மக்களின் உள்ளங்களில், சமுதாயத்தின் நலிந்த பிரிவினருக்காக அவர் நடத்தும் போராட்டம் பெரும் பிரதிபலிப்பை உண்டாக்கி இருக்கிறது.

இஸ்ரேலில் எங்களது தேசிய இருப்பிடத்தை புதுப்பித்து நிர்மாணிக்கும் எங்கள் போராட்டத்திற்கு டாக்டர் அம்பேத்கர் தரும் ஆதரவிற்காக இஸ்ரேலில் உள்ள நாங்கள் இன்றளவும் பெருமைப் படுகிறோம்.

*(நியூஸ் ஃப்ரம் இஸ்ரேல்)''*[1]

• • •

1. பிரஜாபந்து, தேதி 30-டிசம்பர், 1991.

# 32

# அமைச்சரவை அமைப்பதில் எனக்கு அணுவளவும் ஆர்வமில்லை

பம்பாய், சனிக்கிழமை*

''அமைச்சரவை அமைப்பது தொடர்பாக நவம்பர் 25 ஆம் தேதி புதுடில்லியிலிருந்து வெளியான செய்தி குறித்து, 'கிராணிக்கில்' பத்திரிகை நிருபருக்குப் பேட்டியளித்த டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், பம்பாயில் அமைச்சரவை அமைப்பதில் எனக்கு அணுவளவும் ஆர்வமில்லை' என்று கூறினார். அடுத்த வாரம் புது டில்லியில் டாக்டர் அம்பேத்கர் தங்கும்போது, ஒரிசா பாணியில் பம்பாயில் அமைச்சரவை அமைப்பது தொடர்பாக வைசிராயை அவர் சந்திப்பார் என்று அச்செய்தி கூறிற்று.

''இத்தகைய கருத்துக்கு எந்தவித அடிப்படையும் இல்லை'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். அமைச்சரவை அமைப்பது தொடர்பாக, 'சில தனிப்பட்ட நபர்கள் வைசிராயை ஏற்கனவே சந்தித்திருக்கிறார்கள்' என்று கூறும் புதுடில்லி செய்திக்கு எந்தவித ஆதாரமும் இல்லை. அமைச்சரவை அமைக்கும் முயற்சிக்கு முன்னதாக, காங்கிரஸ் கட்சியில் இருக்கக்கூடிய பலவீனங்களை அறியும் நோக்கத்தோடு கருத்தறியும் நடவடிக்கைகள் எடுப்பது அவசியமாகிறது. காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்கள் எவரையும் இழுப்பதற்கான அறிகுறி எதுவும் இதுவரை தென்படவில்லை.

ஒரிசா மாதிரியான நிகழ்வு பம்பாயில் மீண்டும் நடைபெறாது என்ற கருத்து காங்கிரஸ் வட்டாரங்களில் திட்டவட்டமாகக் கூறப்பட்டது. கட்சியின் ஒற்றுமை பற்றித் தனக்கு எள்ளளவு சந்தேகமும் இல்லை என்று மிகமுக்கியமான காங்கிரஸ் சட்டமன்ற கட்சி உறுப்பினர் ஒருவர் கூறினார்.''[1]

• • •

---

★ 29 நவம்பர் 1941.

1. தி பம்பாய் கிராணிக்கிள் : தேதி - 30 நவம்பர் 1941.

## 33

# இந்து மதம் போன்ற பண்புகளைக் கொண்ட ஓர் அரசியல் சித்தாந்தமாகும்

ஓர் அறிக்கையில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பின்வருமாறு கூறுகிறார்:-

இந்திய மக்களிடமிருந்து எந்தவிதமான கோரிக்கைக்காகவும் காத்திராமல் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் உண்மையான அரசியலதிகாரத்தை அவர்களுக்கு வழங்குமாறு ஆங்கில அரசுக்கு ஜெனரல் சியாங்கே ஷேக் வேண்டுகோள் விடுத்தார். ஆனால் இத்தகைய முடிவை நிறைவேற்றுவதில் நாம் எதிர்கொள்ளக் கூடிய சிக்கல்களுக்கு அவர் எவ்விதத் தீர்வுகளும் கொடுக்கவில்லை. எதிர்கால இந்திய அரசியலமைப்புச் சட்டம் இந்திய தேசிய வாழ்விலுள்ள சில முக்கியமானவர்களின் ஒப்புதலைப் பெற வேண்டும் என்று வைசிராய் வெளியிட்ட ஆகஸ்டுப் பிரகடனத்தின் அடிப்படைக் கூறுகளை காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளாததனால் தான் இந்தக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. தனது பொறுப்பு என்ன என்பதை ஆங்கில அரசாங்கம் உணராததும், இதே போல் சிக்கலை ஏற்படுத்தியிருக்கிறது. பெரும்பான்மையாக இருக்கிறார்கள் என்பதற்காக இந்துக்களிடம் இந்த நாட்டின் ஆட்சியை ஒப்படைப்பதை இந்திய நாட்டின் நிலமைகளை நன்கறிந்த நிதான புத்தியுள்ள எவரும் ஒப்புக் கொள்வார் என்று காங்கிரஸ் எதிர்பார்க்கக்கூடாது. இந்து மதம் பாசிச, நாசிச சித்தாந்தங்களைப் போன்ற ஓர் அரசியல் சித்தாந்தமாகும் என்பதையும், அது முற்ற முழுக்க ஜனநாயக விரோதத் தன்மையுடையது என்பதையும் காங்கிரஸ் மறந்து விடுகிறது. இந்து மதம் அதன் போக்கில் விடப்பட்டால் - அதைத்தான் இந்துப் பெரும்பான்மையினர் விரும்புகிறார்கள் - இந்து மதத்திற்கு வெளியே உள்ளவர்கள் மற்றும் இந்துமத எதிர்ப்பாளர்கள் ஆகியோரின் வளர்ச்சிக்கு அது அச்சுறுத்தலாக அமையும். இது முஸ்லீம்களின் கருத்து மட்டுமல்ல; தாழ்த்தப்பட்டவர்கள் மற்றும் பிராமணரல்லாதவர்களின் கருத்தும் இதுவேயாகும்.

## ஒரே மாற்று

கீழ்க்காணும் வழிமுறைகளில் ஆங்கில அரசு பிரகடனம் செய்ய முடியும் என்று நினைக்கிறேன்:

(1) அமைதிப் பிரகடனம் செய்யப்பட்ட நாளிலிருந்து மூன்றாண்டுகளுக்குள் இந்தியாவை டொமினியன் (குடியேற்ற நாட்டு) அந்தஸ்துக்கு உயர்த்துவது என்று தீர்மானிக்கப்படுகிறது.

(2) அந்த இலக்கை நோக்கி விரைவாகச் செயல்படுவதற்காக, இந்தப் போர் நிறுத்தம் கையெழுத்தான தேதியிலிருந்து ஓராண் டிற்குள் இந்திய தேசியவாதிகள், அரசியலமைப்பு குறித்து தங்களுக் குள்ள வேறுபாடுகளுக்கு ஒருமித்த தீர்வு காணவேண்டும்.

(3) அவ்வாறு தீர்வு காணவில்லையென்றால், அந்தப் பிரச்சினையை சர்வதேச நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு ஆங்கில அரசு சமர்ப்பித்துவிடும்.

(4) அவ்வாறு அந்தத் தீர்வு கிடைத்தவுடன், இந்திய டொமினியன் (குடியேற்ற நாட்டு) அரசியலமைப்பின் ஒரு பகுதி யாக அதை நடைமுறைப்படுத்த ஆங்கில அரசு உறுதியேற்கிறது.

இத்தகைய பிரகடனம் நியாய புத்தி படைத்த மக்கள் அனை வருக்கும் திருப்தியளிக்கும். இனப் பிரச்சினைக்கு ஒருமித்த தீர்வு காண வேண்டும் என்ற திரு. ஜின்னாவின் கருத்திற்கும் தாழ்த்தப் பட்ட மக்களின் கருத்திற்கும் இது உடன்பாடானதாக இருக்கும் என்று கருதுகிறேன். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எந்த தேசியவாதிக்கும், டொமினியன் அரசியலமைப்பு உருவாவதைத் தடுக்கும் அதிகாரம் இருக்கக் கூடாது என்கிற காங்கிரசின் கருத்துக்கும் இது உடன்பாடாக இருக்கும். நாம் யுத்தத்திற்கு நடுவில் இருக்கிறோம் என்னும் வாதம், இந்தப் பிரகடனத்தை வெளியிடுவதற்கு எதிரான சரியான வாதமே அல்ல. உண்மையில், அதற்கு ஆதரவான வாதமேயாகும்.

## ஹரிஜன் - முஸ்லீம் வாதப் பிரதிவாதம்

இந்தப் பிரகடனத்தோடு தேசிய அரசு அமைய வேண்டுமா? அது அமைந்தால் நல்லதுதான். திரு.ஜின்னா இரண்டு கோரிக்கைகளை முன் வைப்பதால் இதில் சிக்கல் இருக்கிறது. (1) ஒன்று இறுதியானது.

அதுதான் பாகிஸ்தான். (2) இரண்டாவது உடனடியானது, அதாவது அமைச்சரவையில் 50 சதம் பிரதிநிதித்துவம் வேண்டும் என்பது.

முஸ்லீம்கள் ஒரு தேசிய இனம் என்று திரு. ஜின்னா கூறுகிறபோது, பாகிஸ்தான் கோரிக்கையை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. இதில் சர்ச்சைக்குக் காரணமே இல்லை. முஸ்லீம்கள் ஒரு தேசிய இனம் என்பதால் அவர்களுக்குப் பாகிஸ்தான் வேண்டும் என்று திரு.ஜின்னா கூறும்போது, இந்துக்கள் நிறைந்த பெரும் எல்லைப் பகுதிகளை எடுத்துச் செல்லாதவரை, தாராளமாக (பாகிஸ்தானை) எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறுவேன். ஏனென்றால் உங்கள் கொள்கைப்படி இந்துக்களும் பிறிதோரு தேசிய இனத்தவர்கள்தானே.

பாகிஸ்தானைப் பொறுத்தவரை முட்டையிடுவதற்கு முன்னரே குஞ்சுகளை எண்ண திரு. ஜின்னா அவசரப்படுகிறார்; உரியவரில்லாமலேயே கணக்குப் போடுகிறார் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

வடமேற்கு எல்லைப் பகுதியானது பாகிஸ்தானுடன் முற்றிணைந்த ஒரு பகுதியாகும். வடமேற்கு எல்லைப் பகுதிக்குத் தான் உரியவரல்ல என்பதை திரு.ஜின்னா ஒப்புக்கொள்ள வேண்டும். அதற்கு உரியவர் கான் அப்துல் கபார் கான் ஆவார். அவருடைய ஒப்புதல் இல்லாமல், பாகிஸ்தான் என்பது இல்லை. பாகிஸ்தானுக்கு ஆதரவுப் பிரசாரம் செய்ய சூறாவளிப் பயணம் செல்வதைக் காட்டிலும் , கான் அப்துல் கபார் கானை மனம் மாறச்செய்ய திரு. ஜின்னா தனது நேரத்தையும் சக்தியையும் செலவிட வேண்டும். என்றாலும் இது திரு. ஜின்னா முடிவு செய்ய வேண்டிய விஷயம். நான் ஏற்கனவே சொன்னதுபோல், பாகிஸ்தானை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.

## நேர்மைக்கேடானது

ஆனால் முஸ்லீம் இனத்தவருக்காக 50 சதம் பிரதிநிதித்துவக் கோரிக்கையை என்னால் புரிந்துகொள்ள இயலவில்லை. மேலும், 50 சதத்திற்கான உடனடிக் கோரிக்கை, இறுதி லட்சியமான பாகிஸ் தானோடு எவ்வாறு தொடர்புடையது என்றும் புரியவில்லை. முஸ்லீம் லீக்கின் இந்தக் கோரிக்கை நேர்மைக்கேடானது என்று நிச்சயமாக நம்புகிறேன். இதனை நிராகரித்ததன் மூலம் லின்லித்கோ

பிரபு இந்தியாவிற்கு மிகப் பெரும் நன்மை செய்திருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை.

திரு.ஜின்னாவின் கோரிக்கையான 50 சதத்தை ஏற்றுக் கொள்வதாக இருந்தால், இந்தியாவில் இடைக்கால நடவடிக்கையாக தேசிய அரசாங்கம் எதுவும் அமைய முடியாது என்று திடமாக நினைக்கிறேன். யுத்த முயற்சியைப் பொறுத்தவரையில் இப்போது செய்யப்படுவதைவிட தேசிய அரசாங்கம் அதிகமாக எதையும் செய்து விடமுடியாது. இதைக் காட்டிலும் அதிகமாக இந்தியா செய்ய முடியாது. இந்தியாவின் ஆற்றல் அதிகரிக்கப்படவில்லை. அதற்கான முழுப் பொறுப்பும் ஆங்கில அரசினுடையதுதான். அமைதிக் காலத்தில் இந்தியாவின் வளத்தை மேம்படுத்தாமல் இருந்துவிட்டார்கள். அதனால் இந்த அரசு அல்லது தேசிய அரசு இப்போது செய்வதை விட அதிகம் செய்ய முடியாத நிலையிலிருக்கிறது. நாடு நன்றாக, முழுமையாக வளர்ச்சியடையச் செய்யப்பட்டிருந்தால் அதனால் பேரரசைக் காத்திருக்க முடியும். இப்போது அது தன்னையே காத்துக் கொள்ள முடியவில்லை. எப்பொழுது வேண்டுமானாலும் நிகழ இருக்கும் ஜப்பானிய ஆக்கிரமிப்பிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள அது இங்கிலாந்தை எதிர்பார்க்கும் கட்டாயத்திலிருக்கிறது. நாட்டின் அவலநிலை இவ்வாறு இருக்கிறது. ஓர் இந்தியரை பாது காப்பு உறுப்பினராக நியமிப்பது நன்றாக இருக்கும். ஆனால் அது போதுமா? பாதுகாப்பு அவருடைய பொறுப்பில் இல்லாமல், ஓர் இந்தயப் பாதுகாப்பு அமைச்சர் என்ன செய்ய முடியும்? புரிந்து கொள்ளவே கடினமாக இருக்கிறது.

தன்னுடைய பாதுகாப்பிற்காக நிறுத்தி வைத்திருக்கும் படைக் கலங்களை இந்தியாவிற்கு அனுப்புமாறு இந்தியர்கள் இங்கிலாந்தைக் கேட்பது விவேகமாக இருக்கும் என்று நினைக்கிறேன். அதில்தான் இந்தியாவின் உடனடி நலனும் இங்கிலாந்தின் கடமையும் அடங்கியிருக்கின்றன.

● ● ●

# 34

# தேசிய வாழ்வில் நாங்கள் தனிக்கூறு

*டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் வைசிராயின் நிர்வாகக் குழுவில் உறுப்பினரானபோது, திரு.பெவராலி நிக்கோலஸ் என்னும் லண்டன் நிருபர் அவரைப் பேட்டி கண்டார். 1944 ஆம் ஆண்டு வெளியிடப் பட்ட 'இந்தியா குறித்த தீர்ப்பு' என்னும் தனது புத்தகத்தில் அவருடைய பேட்டியை திரு.பெவராலி குறித்து வைத்திருக்கிறார். டாக்டர் அம்பேத்கரைப் பற்றி பேட்டியில் வெளிப்படுத்தப்பட்ட அவருடைய கணிப்புக்கள் கீழ்வருமாறு : ஆசிரியர்கள்.*

'ஓர் ஐம்பது வயது மனிதர், அவருடைய வீட்டின் தாழ்வாரத்தில் பிரம்பு நாற்காலியில் எனக்காகக் காத்துக் கொண்டு அமர்ந்திருக்கிறார். தடித்த ஆற்றல் மிக்க உருவம். கவர்ச்சி மிக்க பாணி. ஆனால் வலிமையுடையவர், காலணி நாடாவை குறிக்கோளில்லாமல் நெருடிக் கொண்டிருக்கிறார். எல்லாப் பக்கங்களிருந்தும் வரும் வசையுரைகளைத் தவிர்ப்பதற்கு அவர் தயார் நிலையிலிருப்பது போல் தோன்றுகிறது. ஆம், இவை எல்லாம் எதிர்பார்க்கப்பட வேண்டியதுதான்.

இவ்வாறு எனது குறிப்பேட்டின் பகுதிகள் செல்கின்றன.

அந்த மனிதர் டாக்டர் அம்பேத்கர். இப்பொழுதே 'எதிர் பார்க்கப்பட வேண்டியது' என்ன என்பதை நாம் பார்க்கலாம்.

டாக்டர் அம்பேத்கர் இந்திய அரசாங்கத்தில் தொழிலாளர் துறை உறுப்பினர். **இந்தியாவின் தலைசிறந்த ஆறு அறிவாளிகளில் ஒருவர்.** கேவர் பள்ளியில் பயின்ற அரசியல் மேதை. எளிதில் இணக்குவிக்க முடியாத எதார்த்தவாதி. பொது மேடைகளில் பேசுகிற போது, வலிமையோடும் படைப்பாற்றலோடும் தேவையான பொருத்தமான செய்திகளை மலைப்புறும் வகையிலும் முன் வைப்பவர். இந்துமத விவரங்களை ஒப்பிடும்போது தொடர் துப்பாக்கி வேட்டுச் சத்தம் போல் கேட்கும்.

இவை யாவற்றின் விளைவாக இந்தியாவில் மிகவும் வெறுக்கத்தக்க மனிதர்களில் ஒருவராக அவர் இருந்தார்.

'எதிர்பார்க்கப்பட வேண்டியது' என்பது ஏன்? ஏன் இந்த நடுக்கம்? அவர் தாக்குதலை எதிர்நோக்கத் தயாராகிவிட்டதை இது ஏன் குறிக்கிறது?

ஏனென்றால், 18 கோடி ஜாதி இந்துக்களில் பெரும்பாலான வர்களின் பார்வையில் டாக்டர் அம்பேத்கர் ஒரு 'தீண்டப்படாதவர்'. சிறப்புமிக்க விருந்துக்கு அணியும் அவர் மேற்சட்டை இவர்களின் வேட்டியில் பட்டால் தீட்டு ஒட்டிக் கொள்ளுமாம். தீவிர ஆசார முள்ளவர்களை இந்த உயிரினம் தொட்டால், அவர்கள் காகிதம் போலப் பறக்க வேண்டும். இந்தக் கோர உருவம் லேசாகத் தொட்டு விட்டாலும் அவர்கள் பதறி ஓடி அருகில் உள்ள குளியல் தொட்டி யில் விழுந்துவிடுவார்கள். தேய்த்துக் குளித்துப் பிரார்த்திப்பார்கள், பிரார்த்தித்துத் தேய்த்துக் குளிப்பார்கள், தேய்த்துக் குளித்துப் பிரார்த் திப்பார்கள். (லண்டனில் எம்.ஏ. படித்த) டாக்டர் அம்பேத்கரின் தீட்டு, (கொலம்பியா பல்கலைக் கழகத்தில் தனிச்சிறப்புப் பட்டம் பெற்ற) டாக்டர் அம்பேத்கரின் இழிவு, (ஹெய்டல் பர்க்கில் தனிச் சிறப்புப் பெயர் பெற்ற) டாக்டர் அம்பேத்கரின் தொல்லை மற்றும் கொள்ளை நோய் ஆகியவை இவர்களுடைய மாசற்ற இறவாப் புகழுடைய ஆன்மாவிலிருந்து வெளியேறுகிறவரை சுத்தமாகக் கழுவுவார்கள். (பக்.30).

'நாங்கள் இந்துக்களின் உப பிரிவு அல்ல. தேசிய வாழ்வில் நாங்கள் தனிக்கூறு என்பதுதான் என்னுடைய கொள்கையின் மூலக் கரு' என்று டாக்டர் அம்பேத்கர் என்னிடம் கூறினார்.

'எங்களை நம்புங்கள் -ஜாதி இந்துக்களை நம்புங்கள்' என்று எங்களிடம் காந்தி கூறுகிறார். 'நாங்கள் உங்களை நம்ப மாட்டோம். ஏனென்றால் நீங்கள் எங்களது பரம்பரை விரோதிகள்' என்று நான் பதில் கூறினேன்.

ஒவ்வொரு கிராமத்திலும் தீண்டத்தகாதவர்கள் மிகச் சிறு அளவில் சிறுபான்மையினராக இருக்கிறார்கள். அந்தச் சிறுபான்மை யினரையெல்லாம் ஒன்றுதிரட்டி பெரும்பான்மையாக்க நான் விரும்புகிறேன். அமைப்பு ரீதியாகத் திரட்டுவது, மக்களை இடம் மாற்றுவது, புதிய கிராமங்களை அமைப்பது போன்றவையெல்லாம் மிகப்பெரிய பணியாகும். நாங்கள் அனுமதிக்கப்பட்டால் அதை எங்களால் செய்து முடிக்க முடியும்' (பக்.40)

'எந்தக் காங்கிரஸ்காரரையும் போலவே நாங்களும் உறுதியான தேசியவாதிகள். ஆனால் எங்கள் உரிமைகள் பாதுகாக்கப்படுகிறவரை ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேறுவதை நாங்கள் விரும்பவில்லை. அப்படி அவர்கள் வெளியேறினால், ஐரோப்பாவில் உள்ள ஒடுக்கப்பட்ட மக்களின் கதியைவிட எங்களின் கதி மிக மோசமாகப் போய்விடும்'

*(இந்தியா குறித்த தீர்ப்பு பக்.41)*[1].

● ● ●

★ டாக்டர் அம்பபேத்கர் எம்.ஏ.மற்றும் பி.ஹெச்.டி.பட்டங்களை கொலம்பியா பல்கலைக் கழகத்திலிருந்து பெற்றார். லண்டனிலிருந்து அல்ல. ஆனால் அவரது டி.எஸ்.சி.பட்டத்தை லண்டன் பல்கலைக் கழகத்திலிருந்து பெற்றார். - ஆசிரியர்கள்.

1. மேற்கோள்: கயிர்மோடு, தொகுதி 8, பக். 36-39.

# 35

# தாழ்த்தப்பட்டவர்களின் குடியிருப்புக்களை பண்டுக்களுக்குச் சமமானதாக ஆக்குதல்

''ஹைதராபாத் (தக்காணம்) ஏப்ரல் 22, 1946 : தனி கிராமங்கள் கோரி தாழ்த்தப்பட்ட மக்கள் முன்வைத்துள்ள கோரிக்கையானது எந்தக் கட்சியின் உரிமைகளுக்குள்ளும் அத்துமீறிப் பிரவேசிப்பதாகாது என்ற கருத்தை இந்திய அரசின் தொழிலாளர் துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு பேட்டியில் வெளியிட்டார்.

இந்த நாட்டில் மிகப் பரந்த அளவிலான பயிர் செய்யத்தக்க நிலம் குத்தகைக்கு விடப்படாமல் தரிசாகக் கிடக்கிறது. அவற்றை தாழ்த்தப்பட்ட மக்களின் குடியிருப்புக்காக ஒதுக்கலாம். இந்த வேண்டுகோளுக்குச் செயல் வடிவம் கொடுக்க அரசு ஒரு பொறுப்புக் குழுவை அமைக்கலாம்.

துப்புரவுத் தொழில் செய்வதற்கும், மிகக் குறைந்த கூலிக்கு வேலை வாங்கிக் கொள்வதற்கும் தாழ்த்தப்பட்ட மக்களைப் பயன் படுத்திப் பழகிப் போனவர்களிடமிருந்து மட்டுமே இதற்கு எதிர்ப்பு வரும் என்று அவர் நினைத்தார். இந்த அடிமைத்தனத்தைத் தொடர்ச்சி யாக்கிக் கொள்ளவே அவர்கள் விரும்புவார்கள். மதராஸ், பம்பாய் போன்ற மாகாணங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் சகிக்க முடியாத நிலைமைகளில் வாழ்வதால், அவர்களுக்குத் தனி கிராமங்கள் ஏற்படுத்துவது அவசியமாகிறது.;

கிராமம் என்பது ஒரு சமூக அமைப்பு. சமுதாயத்தின் பொருளாதார அமைப்பு அல்ல. எனவே இத்தகைய தனிக் கிராமங் களுக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்படும் என்று அச்சம் கொள்ளத் தேவையில்லை என்று டாக்டர் அம்பேத்கர் விளக்கினார். இந்தப் பகுதிகளில் தயாரிக்கப்படும் பொருட்கள், அவை தேவைப் படும் இடங்களுக்கு அனுப்பப்படும்.

இந்தக் கோரிக்கை பாகிஸ்தான் பகுதிகளுக்கும் பொருந்துமா எனக் கேட்கப்பட்டபோது, பொருநதும் என்று கூறினார். இப்போ தைக்கு பாகிஸ்தானைப் பற்றித் திட்டவட்டமாக எதுவுமில்லை.

திட்டவட்டமாக அது உருவெடுக்கிறபோது, தனிக் கிராமங்கள் அமைப்பது பற்றி முடிவெடுக்கப்படும் என்றார்.

தாழ்த்தப்பட்ட மக்களின் நிலையானது, பண்டு மற்றும் பிற தென்னாப்பிரிக்க இனக் குழுக்களின் நிலையை ஒத்திருக்கிறது என்றார் அவர். பண்டுகளைப் பொறுத்தவரை தென் ஆப்பிரிக்க அரசியலமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்டிருப்பதைப்போல், தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்களைக் காப்பதற்காக இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்புச் சட்டத்தில் ஏன் ஏற்பாடுகளைச் செய்யக் கூடாது என்று வினா எழுப்பினார். - ஏ.பி.ஐ[1]''.

● ● ●

★ டைம்ஸ் ஆப் இந்தியா, தேதி 23 ஏப்ரல் 1946

## 36

# தாழ்த்தப்பட்ட மக்களை இந்து சமுதாயத்தின் கட்டுக்கோப்புக்கு வெளியே உள்ளவர்கள் என்று இந்துக்கள் எப்போதுமே கருதுகிறார்கள்

''இந்தியாவிலுள்ள ஐந்து கோடி தீண்டத்தகாதவர்களின் பிரச்சினைகளை எடுத்துரைத்துவிட்டு இங்கிலாந்திலிருந்து திரும்பிய வுடன் 1946 நவம்பர் 20 ஆம் தேதியன்று பம்பாயில் 'குளோப்' பத்திரிகைக்கு டாக்டர் பீமராவ் ராம்ஜி அம்பேத்கர் பிரத்தியேகப் பேட்டியளித்தார். அப்போது, இந்திய அரசியல் நிலவரம் இருளடைந்து இருப்பதாகவும், இந்திய தேசிய வாழ்விலுள்ள எல்லா முக்கியத் தலைவர்களையும் கொண்ட உண்மையான கூட்டணி அமைந்து அதனை நடைமுறைப்படுத்தப்படும்வரை இந்தியாவின் எதிர் காலம் இருண்டேயிருக்கும் என்றும் இங்கிலாந்தில் தாம் கூறிய கருத்துகளை மாற்றிக் கொள்ளத் தேவையில்லை என்று அவர் கூறினார்.

திரு. ஜின்னாவின் சமீபத்திய அறிக்கை மற்றும் நாட்டின் திருப்தியற்ற நிலைமை ஆகியவை காரணமாக, டிசம்பர் 9 ஆம் தேதி கூடவிருக்கும் அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தை ஒத்தி வைப்பது சரியாக இருக்குமென்று கருதுகிறீர்களா எனக் கேட்கப்பட்டது. ''அரசியல் நிர்ணய சபையில் முஸ்லீம்கள் கலந்து கொள்ளாமல் நின்று விட்டால், அரசியல் நிர்ணய சபைக்கு தார்மிக அதிகாரம் இருக்குமா என்பதே என்னுள் எழும் கேள்வி. கலந்து கொள்வதில்லை என்று முஸ்லீம்கள் முடிவு செய்துவிட்டால், அரசியல் நிர்ணய சபை 9ம் தேதி கூடினாலும், அல்லது அதற்குப்பின் எந்தத் தேதியில் கூடினாலும் அதனால் எதுவும் செய்ய இயலாது என்றே நினைக் கிறேன்'' என்று அம்பேத்கர் கூறினார்.

### முக்கியத்துவம் இருக்காது

''தாங்கள் கூடியிருந்த அமர்வு, அரசியல் நிர்ணயசபை என்று அழைக்கப்பட்டதாலேயே, தங்களால் உருவாக்கப்பட்ட அரசியல்

---

1. தி டைம்ஸ் ஆஃப் இந்தியா : தேதி 23 ஏப்ரல் 1946.

சட்டத்தை ஆங்கில அரசு ஏற்றுக்கொள்ளக்கூடும் என்று இந்துக்கள் நினைத்தாலொழிய, இந்துக்கள் மட்டுமே அடங்கிய அரசியல் நிர்ணய சபை உருவாக்கும் எதற்கும் முக்கியத்துவம் இருக்காது என்று நம்புகிறேன்'' என்று அவர் கூறினார்.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பிரதிநிதித்துவப்படுத்தும் தாழ்த்தப்பட்ட மக்களின் கூட்டமைப்பு உள்ளிட்ட பெரிய அரசியல் கட்சிகளுக்கிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்படுவதற்கேற்ற ஏதாவது உறுதியான அடிப்படையை நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?'' என்று கேட்டதற்கு, ''தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் பிற பெரிய அரசியல் கட்சிகளுக்கும் - அதாவது இந்துக்கள் மற்றும் முஸ்லீம்கள் ஆகியோர் - இடையில் ஒப்பந்தம் ஏற்படுவதற்கு, காங்கிரசிடம் நேர்மையான உணர்வு, நல்ல உணர்வு இருந்தால், எந்தவிதச் சிக்கலுமே இருக்காது'' என்று டாக்டர் அம்பேத்கர் பதிலளித்தார்.

## தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அரசியல் பாதுகாப்பு தேவை

''தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வேண்டுவதெல்லாம், அரசியல் பாதுகாப்புத்தான். அதுபற்றி எந்தவிதக் கருத்து வேறுபாடும் இருக்கப் போவதில்லை'' என்று கூறிய அவர் மேலும் தொடர்ந்தார்: ''தங்களுக்குத் தனித் தேர்தல் தொகுதிகள் வேண்டும் என்பது தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதான கோரிக்கையாகும். காரணமென்னவென்றால், தனித்தேர்தல் தொகுதிகள இல்லாவிட்டால், அவர்களுக்குக் கொடுக்கப்படும் பிற எல்லா அரசியல் பாதுகாப்புக்களும் பலனில்லாமல் போய்விடும்.

'' எனக்குத் தெரிந்த வரையில், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதி ஒதுக்கீடு செய்வதில் முஸ்லீம் லீகினருக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. எதிர்க்கும் ஒரே கட்சி, இந்துக்களின் கருத்தோட்டங்களைப் பிரதிபலிக்கும் காங்கிரஸ் கட்சிதான். தனித் தொகுதிக்கு அந்த காங்கிரஸ் ஒப்புக் கொள்ளுமானால், காங்கிரசுக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குமிடையில் எவ்வித ஒத்துழையாமைக்கும் முகாந்திரமே இருக்காது.

## காங்கிரசுக்கும் -லீக்குக்கும் இடையே ஒற்றுமைக்கு குறுக்கே நிற்கும் இடையூறுகள்

''காங்கிரசுக்கும் முஸ்லீம் லீக்கிற்குமிடையே உடன்பாடு காணும் பிரச்சினை வேறுபட்டதொரு பிரச்சினையாகும்'' என்று டாக்டர் அம்பேத்கர், மேலும் தொடர்ந்தார். ''அவற்றிடையே இன்றுள்ள வேறுபாடானது, இணைக்கவே முடியாத அளவு மிகவும் விரிவடைந்துள்ளது. தனிநாடு வேண்டுமென்று லீக் கோருகிறது. காங்கிரஸ் அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறது. இந்தப் பிளவை எவ்வாறு இணைப்பதென்று எனக்குத் தெரியவில்லை. காங்கிரசும் முஸ்லீம் லீகும் தாமே இந்தப் பிரச்சினையைத் தீர்த்துக் கொள்ளுமாறு அவற்றிடமே இதை விட்டுவிட வேண்டும். ஆனாலும், இந்தியர்கள் என்ற முறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்த சமரசத்தின் நிபந்தனைகளில் ஆர்வம் காட்டுவது மட்டுமல்ல, அதிக அக்கறையும் கொண்டுள்ளனர்.''

''ஒற்றுமை மற்றும் உடன்பாடு ஆகியவற்றின் பாலுள்ள ஆர்வத்தினால், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனி பிரதிநிதித்துவம் வேண்டுமென்ற யோசனையை முன்வைப்பீர்களா? தாழ்த்தப்பட்ட வகுப்பினரில் காங்கிரசோடு அரசியல் உடன்பாடு கொள்ளாத பிரிவினருக்கு விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ அடிப்படையில் இட ஒதுக்கீடு பெற முடியாதா?'' என்பது 'குளோப்'பின் அடுத்த கேள்வியாகும். ''சட்டமன்றத்தில், ஆட்சித்துறையில், பாதுகாப்புத் துறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பிரதிநிதித்துவம் பெறும் உரிமையைக் கொடுக்க காங்கிரஸ் ஒப்புக் கொள்ளுமானால், அவர்களுக்குத் தனித்தொகுதிகளை அனுமதிக்க வேண்டும் என்று நான் முன்னமேயே கூறியிருக்கிறேன். ஏனென்றால், தனித்தொகுதிகளால் மட்டுமே, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பினை உறுதி செய்ய முடியும். அவர்களின் சொந்த உறுப்பினர்கள் தீண்டப்படாதவர்களுக்கு வழங்கப்பட்ட உரிமைகளை பயனற்றதாக்கும் முயற்சிகள் ஏதேனும் நடைபெற்றால் அவற்றை எதிர்த்து சட்டமன்றத்திலும் அரசுத் துறையிலும் எப்போதும் போராட முடியும்'' என்று டாக்டர் அம்பேத்கர் பதில் அளித்தார்.

## கட்சிக் கட்டுப்பாட்டிற்கு அடங்கியிருத்தல்

''தனித் தொகுதிகளை அனுமதிக்காமல் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அரசியல் பாதுகாப்புக் கொடுப்பதென்பது ஒரு

கையால் கொடுத்து மற்றொரு கையால் பிடுங்கிக் கொள்வது போன்ற மோசடி வேலையாகும்.

''இந்தியா முழுவதிலுமுள்ள வெவ்வேறு மாகாண சட்ட மன்றங்களிலும் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிரதிநிதிகளை காங்கிரஸ் தனது பட்டியலில் நிறுத்தி வெற்றிபெறச் செய்ய முடியும் என்பதைக் காணலாம்.'' ஆனால் அவர்களில் ஒருவர்கூட, தாழ்த்தப்பட்ட வகுப் பினரின் குறைகளை நிவர்த்திக்கும் பொருட்டு என்றுமே ஒரு கேள்வி கூட கேட்டதில்லை, தீர்மானம் கொண்டுவந்ததில்லை, கோரிக்கை எழுப்பியதில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால், காங்கிரஸ் பட்டியலில் தேர்ந்தெடுக்கப்பட்ட தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிரதி நிதிகள் காங்கிரசின் கட்சிக் கட்டுப்பாட்டினால் கையும் காலும் கட்டப் பட்டு விட்டவர்கள். அவர்கள் சுதந்திரமாகச் செயல்பட முடியாது.

''சட்டமன்றத்தில் இத்தகைய பிரதிநிதித்துவம் பெறுவதை விட பிரதிநிதித்துவம் இல்லாமலே இருப்பது மிகவும் நல்லதாகும்'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

## விகிதாச்சாரப் பிரதிநிதித்துவம்

''இந்தப் பிரச்சினைக்கு விகிதாசாரப் பிரதிநிதித்துவம் தீர் வாகுமா என்ற கேள்வியைப் பொறுத்தம் வரை நான் அதைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்கிறேன். அது செயல்படாது என்று உணர்ந்திருக் கிறேன். ஏனென்றால், சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையை இப்போது குறித்திருக்கிற அளவிலேயே வைத்துக் கொண்டால் அல்லது அந்த எண்ணிக்கை நியாயமானது என்று ஏற்றுக்கொண் டால், சட்டமன்றத்திற்கு தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்கள் தங்கள் இனத்தைச் சேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுப்பதற்குத் தேவை யான வாக்காளர் எண்ணிக்கை எங்கேயுமே இருக்காது.

''பொது உரிமைகள், தனிச் சலுகைகள், பிரகடனத்தின் அடிப் படையிலும் மற்றும் சமுதாயத் தகுதியின்மைகள் அனைத்தையும் போக்குதல் என்னும் பிரகடன அடிப்படையிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்து சமுதாயத்தினரோடு ஒன்றிணைய முடியாதா?'' என்ற அடுத்த கேள்விக்கு டாக்டர் அம்பேத்கர் பதில் கூறினார்.

''இந்து சமுதாயத்தினரோடு தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஒன்றிணைவது என்ற பிரச்சினை, உண்மையிலேயே இந்து சமுதா

யத்தினரின் விருப்பங்களைச் சார்ந்திருக்கிறது. தீண்டப்படாதவர்கள் எப்போதுமே அதை விரும்பினார்கள்; அதற்காக முயலவும் செய் தார்கள். எனினும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் இந்து சமுதாயத்தின் 'எல்லைக்கு வெளியே உள்ளவர்கள்' என்று எப்போதுமே கருதும் இந்துக்களின் கண்ணோட்டத்தை மாற்றுவதில் அவர்கள் வெற்றி பெறவே இல்லை.

## இந்துக்களுடன் கலத்தல் - ஒரு கனவு

''இந்து சமுதாயத்துடன் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இணைந்து போதல், ஒன்றிணைதல் என்பது வீணான நம்பிக்கை என்றும், அது ஒரு கனவுதான் என்றும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் உணர ஆரம் பித்ததால்தான் அவர்கள் தனித் தொகுதிகள் கேட்க முடிவு செய் தார்கள்.

''கோயில்கள் மற்றும் உணவகங்களைத் திறந்து விடுதல் போன்ற மேலோட்டமான நடவடிக்கைகள் மூலம் அல்லாமல் கலப்புத் திருமணம், கலப்பு விருந்து போன்ற, முழு இணைவு என்ற பதத்திற்கேற்ற வகையில் உண்மையிலேயே பயனுள்ள செயல்கள் மூலம் இந்துக்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினரை ஒன்றிணைத்துக் கொள்ள முடியுமானால், தீண்டத்தகாதவர்கள் எப்போதுமே இதற்கு ஆயத்தமாகவும் தயாராகவும் இருக்கிறார்கள்.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினரை இந்து சமுதாயத்தில் இணைப்பது பற்றி பேசுகிறபோது, கலப்புத் திருமணம் மற்றும் கலப்பு விருந்து ஆகியவற்றிற்குள்ள தடைகளை அகற்றுதல் குறித்தும் பேசுகிறோம் என்பதைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஏற்றுக்கொள்ளும்படி செய்வது இந்துவின் பொறுப்பாகும்.

''இதே பிரச்சினைக்கு இன்னொரு கோணம் இருக்கிறது'' என்று டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்தார். '' இப்போது இந்துக்கள் பெற்றிருக்கும் அதே சமுதாய அந்தஸ்திற்கு தீண்டப்படாதவர் களும் உயர்ந்தால்தான், இந்து சமுதாயத்துடனான அவர்களது இணைப்பு எளிதில் நடைபெறும் என்பது தாழ்த்தப்பட்ட வகுப் பினரின் கருத்தாகும். இன்றைக்குள்ள இழிந்த நிலையில் எவ்வளவு பெரிய சமுதாய சீர்திருத்தவாதியாக இருக்கும் எந்த இந்துவும் கூட, ஒரு தீண்டத்தகாதவருடன் சேர்ந்து உணவு உட்கொள்ளவோ, அல்லது கலப்பு மணம் புரிந்துகொள்ளவோ விரும்பமாட்டான்.

ஆனால், இந்த அரசியல் உரிமைகளின் விளைவாக, தீண்டத்தகாத வர்கள் சிறந்த கல்வியறிவாளர்களாகி, நன்நிலைக்கு உயர்ந்து, அர சாங்கத்தில் அதிகாரிகளாகவும் நிர்வாகிகளாகவும் பொறுப்பேற்க ஆரம்பித்தால், அவர்களுக்கும் இந்துக்களுக்குமிடையே கலப்பு மணம், கலப்பு விருந்து ஆகியவற்றிற்கான வாய்ப்புக்கள் அதிகரிக்கும்.

## அறியாமை, பிடிவாதம்

''இந்தக் கண்ணோட்டத்தில் தீண்டத்தகாதவர்கள் விரும்புகிற அரசியல் பாதுகாப்புக்கள், அவர்களைத் தங்களோடு ஒன்றிணைத்துக் கொள்ள விழையும் இந்துக்களின் விருப்பத்திற்கு எந்த விதத்திலும் முரண்பட்டதல்ல. தீண்டத்தகாதவர்கள் தனித்தொகுதிகள் பெற்றிருப் பதனால் அவர்களைத் தங்களோடு சமுதாய ரீதியில் ஒன்றிணைத்துக் கொள்வதில் இந்துக்களுக்கு என்ன இடையூறு இருக்க முடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அது கலப்பு மணம் செய்து கொள்வதிலோ, பொது விருந்து உண்பதிலோ அவர் களுக்குத் தடையாக இராது. ஆகவே, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தனிப் பிரதிநிதித்துவக் கோரிக்கையின்பால் காங்கிரஸ் கொண்டுள்ள கண்ணோட்டம் அறியாமை மற்றும் பிடிவாதத்தையே குறிக்கிறது.

தீண்டத்தகாதவர்கள் இஸ்லாத்தை விட கிறிஸ்தவ மதத் தையே தழுவ வேண்டும் என்று யோசனை தெரிவித்து மரியாதைக் குரிய கார்டன் லிவிங்ஸ்டன் சமீபத்தில் வெளியிட்ட அறிக்கை குறித்து டாக்டர் அம்பேத்கர் கீழ்க்காணும் கருத்துக்களைத் தெரி வித்தார்.

## இந்துமதத்தின் குறைபாடுகள்

''ஒரு மதம் மனிதர்களுக்கு வழங்க வேண்டிய ஆன்மீக தர்மத் தையோ அல்லது சமூக, சமய வழிபாட்டு ஒற்றுமையையோ இந்து மதம் இன்றைக்கு இருக்கிற நிலையில் தீண்டத்தகாதவர்களுக்கு அளிக்கவில்லை என்று தீண்டத்தகாதவர்களிடையேயுள்ள சிந்தனை யாளர்கள் வட்டாரம் நம்புகிறது.

''இரண்டாவதாக, ஓரிடத்திலிருந்து பிடுங்கி மற்றோரிடத் தில் நாற்று நடுவதைப்போல மனிதப் பண்பை முற்றிலுமாக மாற்றுவது என்பது அவ்வளவு எளிதல்ல என்று தாழ்த்தப்பட்ட வகுப்பிலுள்ள சிந்தனையாளர் பிரிவு கருதுகிறது. இது ஒரு கடினமான

நடவடிக்கை. இதனை வீரசாகசமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இது ஒரு திட்டமிட்ட செயலாக இருக்க வேண்டும். முறைப்படுத்தி நிறைவேற்ற இதற்குக் காலம் பிடிக்கும்.

''மூன்றாவதாக, காலப்போக்கில் இந்து மதம் தன்னையே சீர்திருத்திக் கொள்ளும். அது ஏற்றுக் கொள்ளத்தக்கதாக ஆகும் என்று தீண்டத்தகாதவர்கள் - இந்த விஷயத்தில் அவர்களுக்கு மிருந்த சந்தேகங்கள் இருந்தாலும் கூட - எண்ணினார்கள். ஆகவே இந்த இடைக்காலத்தில், இத்தனையாண்டுக்காலமாக இந்து மதத்தின் இயல்பான கொடுமைகள், அடக்குமுறைகள், அநீதிகள் ஆகியவற்றினால் தீண்டத்தகாதவர்கள் அனுபவித்துவரும் துன்ப துயரங்களை அவர்கள் தாங்கிக் கொள்கிற அளவு போதுமான அரசியல் பாதுகாப்புக்கள் கிடைத்தால், தீண்டத்தகாதவர்கள் இருக்கிற இடத்திலேயே தொடர்ந்து இருக்கத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் இந்தியா முழுசுதந்திரம் அடைந்து அதில் பெரும்பான்மை இந்துக்கள் அடாத வழிகளில் அரசியல் அதிகாரத்தைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொண்டால், இப்பொழுது இருப்பதைவிட அதிகமாகத் தாங்கள் இன்னலுற வேண்டியிருக்கும் என்றும் அவர்கள் அஞ்சுகிறார்கள். இந்தச் சூழ்நிலையை இந்துக்கள் அங்கீகரிக்க மறுத்தால், தீண்டத்தகாதவர்கள் விரும்புகிற அரசியல் பாதுகாப்புக்களை அவர்களுக்குத் தர மறுத்தால், வேறு ஏதாவதொரு மதத்திற்குத் தீண்டத்தகாதவர்கள் மாறுவது அவசர அவசியப் பிரச்சினையாக எழும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

## தீண்டத்தகாதவர்களுக்கு ஏற்ற மதம் எது?

''நான்காவதாக, இந்துமதத்தைவிட்டு வெளியேறுவதாக தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையேயுள்ள அறிவு ஜீவிகள் ஒப்புக் கொண்டாலும், அவர்கள் எந்த மதத்தைத் தழுவுவது என்பதில் ஒட்டுமொத்த உடன்பாடு கொண்டிருப்பதாகக் கூறமுடியாது. அதில் இன்னமும் எந்த முடிவும் ஏற்படவில்லை.

''கடைசியாக, (ரெவ.லிவிங்ஸ்டன் யோசனை கூறியிருப்பது போல்) ஆயத்தப் பயிற்சி ஏதும் இல்லாமலேயே ஐந்து கோடித் தீண்டத்தகாதவர்களைத் தங்கள் மதத்தில் இணைத்துக் கொள்ள கிறிஸ்தவர்கள் அனுமதிக்கலாமா என்ற பிரச்சினையைப் பொறுத்த வரை, அந்த எதிர்ப்பை எழுப்புகிறவர்கள் உண்மையான மதமாற்ற வரலாற்றில் தீண்டத்தகாதவர்களின் மதமாற்றம் மட்டும்தான் ஒரே

நிகழ்வாக இருக்குமென்பதை உணராதவர்களாக இருக்கிறார்கள் என்று கூற விரும்புகிறேன். இன்றைக்கு கிறிஸ்தவர்களிடையேயும் கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களிடையேயும் மதம் என்பது பரம்பரையாக ஏற்றுக் கொள்ளப்படுகிற ஒன்றுதான். ஒரு கிறிஸ்தவர் தன் தந்தையின் சொத்துக்களையும் அதோடு கூட தந்தையின் மதத்தையும் பாரம்பரியமாகப் பெறுகிறார். கிறிஸ்தவ மதத்தோடு பிற மதங்களை ஒப்பிட்டு அவற்றின் ஆன்மீகக் கொள்கைகளுக்கேற்ப தனது முடிவை அவர் எப்போதுமே எடுப்பதில்லை. வரலாற்று பூர்வமாகவே, கிறிஸ்தவ மதமாற்றமானது பெரும் எண்ணிக்கையிலேயே நடைபெற்றிருக்கின்றன. அத்தகைய மதமாற்றங்கள் ஆன்மீகக் கொள்கைகளை உணர்ந்ததன் அடிப்படையில் நிகழவில்லை. தீண்டத்தகாதவர்கள் மதம் மாறுவார்களேயானால், வெவ்வேறு மதங்களின் ஆன்மீகக் கொள்கைகள், சமூகப் பார்வைகள் ஆகியவற்றைப் பற்றி நன்கு ஆராய்ந்த பின்னர்தான் மதமாற்றம் நிகழும். எனவே, தீண்டத்தகாதவர்களின் மதமாற்றம் ஏதோ வியாபார ரீதியில் நடைபெறுகிறது என்று யாரும் எள்ளளவும் ஐயப்படத் தேவையில்லை. அப்படி இல்லாமல் தீண்டத்தகாதவர்களின் மதமாற்றத்தினால் அவர்களுக்கு ஆன்மீக மற்றும் சமூக குணாம்சங்களைத் தவிர வேறு ஏதாவது நன்மைகள் கிட்டுமானால் அவை தற்செயலானவையாக இருக்குமே தவிர திட்டமிடப்பட்டதல்ல.'' குளோப்''[1]

● ● ●

1. ஜெய் பீம் (வாரப் பத்திரிகை) மதராஸ், தேதி 25 டிசம்பர் 1946.

# 37

# தாழ்த்தப்பட்டவர்களின் பிரச்சினை ஐ.நா.சபைக்கு எடுத்துச் செல்லப்படும்

''பம்பாய், ஜனவரி 17, 1947

''சமூக, பொருளாதார, அரசியல் ரீதியாக இந்துக்கள் இழைக்கும் கொடுமைகளால் தாழ்த்தப்பட்ட மக்கள் அனுபவிக்கும் இன்னல்களை'' ஐ.நா.சபையில் சமர்ப்பிக்க வேண்டுமென அகில இந்திய தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் க;ட்டமைப்பினுடைய செயற்குழு இன்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. கூட்டமைப்பின் தலைவர் திரு.என்.சிவராஜ் தலைமையில் இரண்டு நாட்கள் நடைபெற்ற குழுக்கூட்டம் முடிவடைந்தது.

ஐ.நா.சபையில் சமர்ப்பிக்கப்படுவதற்காக டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தயாரித்த அறிக்கையை குழு ஏற்றுக் கொண்டது. மேலும் ஐ.நா.சபைச் செயலாளரிடம் இந்தப் பிரச்சினையைச் சம்பிரதாயமாகச் சமர்ப்பிப்பதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் விரைவாக எடுக்கும்படியும் இதற்காக பேரமைப்பின் ஒரு தூதுக்குழுவை ஏற்பாடு செய்யும்படியும் தலைவரைக் கேட்டுக் கொண்டது.

அறிக்கையில் பிற குற்றச்சாட்டுக்களுடன் கூட, ''இந்துக்கள் செய்யும் கொடுமைகளாலும், கூச்ச நாச்சமின்றி அவர்கள் தொடர்ந்து மேற்கொள்ளும் வன்முறைகளாலும், தாழ்த்தப்பட்ட இன மக்களின் நிலை, தென்னாப்பிரிக்க இந்தியர்களின் நிலையைவிட மிக மோசமாக இருக்கிறது'' என்ற குற்றச்சாட்டும் இருக்கிறது. ''தாழ்த்தப்பட்ட இன மக்களைப் பாதுகாக்கவும் அவர்களுக்கு நீதி கிடைக்கச் செய்யவும் ஆங்கில அரசு தவறிவிட்டது'' என்றும் அந்த அறிக்கை கூறுகிறது. ''தேவையான சர்வதேச நடவடிக்கை''க்காக தலையிடுமாறு ஐ.நா.சபையைக் கேட்டுக் கொள்கிறது.

இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில் எழும் பிரச்சினையைப் பொறுத்தவரை, ''ஒன்றுபட்ட இந்தியாவிற்காகவும் ஒரு வலுவான மத்திய அரசுக்காகவும்'' கூட்டமைப்பு நிற்கிறது என்ற மற்றொரு தீர்மானத்தை செயற்குழு

அறிவித்தது. அத்தீர்மானத்தின்படி, ''அனைத்துக் கட்சிகளின் ஒத்துழைப்பைப் பெறுவதற்காகவும் இந்திய அரசியலமைப்புச் சட்டப் பிரச்சினைகளில் இணக்கமான தீர்வு காண்பதற்காகவும் அமைச் சரவையின் குழுக்கள் பற்றிய பிரேரேபணைகளை ஏற்றுக் கொள்ள கூட்டமைப்பு தயாராக இருக்கிறது''.

## சமத்துவம் என்பதே அரசியலமைப்பின் அடிப்படையாக இருக்க வேண்டும்

சுதந்திரம், சமத்துவம் ஆகியவை எதிர்கால இந்திய அரசிய லமைப்புச் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகளாக இருக்க வேண்டும் என்பதில் கூட்டமைப்பு உறுதியாக இருக்கிறது என்று அந்தத் தீர்மானம் கூறுகிறது. ''தாழ்த்தப்பட்ட இனத்தவரின் நலனுக் காகப் போராடுகிறபோதே, அதற்குக் குந்தகம் இல்லாமல், சிறு பான்மையினர் எந்த இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் அவர்கள் அனைவரின் நியாயமான, இன்றியமையாத கோரிக்கைகளை கூட்டமைப்பு ஆதரிக்கிறது.''

''இந்தியாவின் நலன் கருதி டொமினியன் அந்தஸ்தோடு அது திருப்தியடைய வேண்டும். இந்தியா சுதந்திரம் பெறும் உரிமைக்கு எவ்வித ஊறும் இல்லாமல், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு டொமினியன் அந்தஸ்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.''

## சிறுபான்மையினர் குழுவிற்கு அறிக்கை

அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தயாரித்த மற்றொரு அறிக்கையையும் செயற்குழு அங்கீகரித்தது. இந்த அறிக்கையானது, எதிர்கால இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கான பாதுகாப்பு கள் பற்றி யோசனை கூறுகிறது.

''அரசியலமைப்பு ரீதியில் பாதுகாப்பிற்கான இறுதி ஒப்புதல் மத்திய அரசிடம்தான் இருக்க வேண்டும். சட்டமன்றங்களில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு உண்மையான பிரதிநிதித்துவத்தை உறுதி செய்ய, தனித்தொகுதிதான் ஒரே வழி. அது இல்லாமல் வேறு எந்த பாதுகாப்புகளும் காகித அளவிலான பாதுகாப்புகளாகவே நின்று போகும் என்பது நிச்சயம்'' என்ற கருத்தை வலியுறுத்தும்படி அரசியல் நிர்ணய சபையிலுள்ள கூட்டமைப்பின் பிரதிநிதிகளுக்கு செயற்குழு வழிகாட்டியது.

பம்பாய் நகராட்சிக் கழக உறுப்பினர் திரு.பி.ஜே.தியோருக்கர் மற்றும் ஆந்திராவிலுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பு ஊழியர்களான திருவாளர்கள் ஹரி, டாக்டர் தர்மண்ணா ஆகியோரின் மறைவிற்கு குழு இரங்கல் தெரிவித்துத் தீர்மானம் நிறைவேற்றியது.

கூட்டமைப்பின் செயற்குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை, பத்திரிகைகளுக்களித்த பேட்டியில் டாக்டர் அம்பேத்கர் விளக்கினார். தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் பிரச்சினையை விசாரிக்கும் சட்ட அதிகாரம் ஐ.நா.சபைக்கு இருப்பதைப் போலவே, இந்தியாவிலுள்ள எட்டுக் கோடி தாழ்த்தப்பட்ட மக்களின் சார்பாக சமர்ப்பிக்கப்படவிருக்கும் பிரச்சினையை விசாரிக்கும் அதிகார எல்லை ஐ.நா.விற்கு உண்டு என்பதை உறுதிபடக் கூறினார். அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்களின் தலைவர் பால் துவாபாயிஸ் என்பவருடன் தொடர்பு கொண்டிருப்பதாக அவர் கூறினார். அவர் அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்களின் பிரச்சினையை ஐ.நா.சபையில் சமர்ப்பித்திருப்பதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்கள் சங்கத்தின் ஸ்தாபகத் தலைவரான பால் துவாபாயிஸ், அந்த நாட்டிலுள்ள நீக்ரோக்களின் அரசியல், பொருளாதார, சமூக உரிமைகளுக்காகப் போராடி வருவதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

இந்தியாவில் தாழ்த்தப்பட்ட மக்கள் படும் துயரங்களைக் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கர், அவர்களை அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்களின் நிலைமையோடு ஒப்பிட்டார். ஜாதி இந்துக்களால் தாழ்த்தப்பட்ட மக்கள் கொடுமைப்படுத்தப்படுவதைப்போல, வெள்ளை அமெரிக்கர்களால் அவர்கள் கொடுமைப்படுத்தப்படுவதாகக் கூறினார்.

இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் பிரச்சினை குறித்து விவாதிக்க டாக்டர் அம்பேத்கர், பிற கட்சிகளைச் சேர்ந்த சிறுபான்மையினரின் நலன்களையும், உணர்வுகளையும் முழுமையாகப் புறக்கணித்துவிட்டு, ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்த பெரும்பான்மை இனத்தவரைக் கொண்டு ஆட்சித்துறை அமைப்பதைத் தடுப்பதற்கான ஓர் அறிவார்ந்த திட்டம் வைத்திருப்பதாகக் கூறினார். அந்தத் திட்டம் பற்றிய விரிவான விளக்கங்களை வெளியிட மறுத்துவிட்டார். ஆனால், இன்றைக்கு உள்ள அரசியலமைப்புச் சட்டத்தின்படி, ஒரு கட்சியைச் சார்ந்த பெரும்பான்மை இனத்தவர்கள், ஒரு மாகாணத்தின்

ஆட்சியைக் கையில் எடுத்துக் கொண்டு விட்டார்கள் என்றும், அதன் மூலம் சிறுபான்மை இனத்தவர் மீது மிகக் கொடிய அடக்கு முறைகளைச் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள்'' என்றும் சொன்னார். ஒரு மாகாண அரசில் பெரும்பான்மை இனத்தைச் சேர்ந்தவர்கள் ஏகபோகமாய் ஆட்சித்துறையைக் கைப்பற்றுவதால், சிறுபான்மை இனத்தவருக்கு ஏற்படும் ஆதரவற்ற நிலையை எதிர்கால இந்திய அரசியலமைப்புச் சட்டம் எதிலும், சட்டப்படியான ஏற்பாடுகள் செய்து தடுக்க வேண்டும். மத்தியிலும் பிற எல்லா மாகாணங் களிலும் பெரும்பான்மை மற்றும் சிறுபான்மையினரின் பிரதிநிதிகள் கொண்ட கூட்டு அரசு அமைவதைத் தாம் விரும்புவதாகக் கூறினார்.

இன்றையச் சூழ்நிலையில் டொமினியன் அந்தஸ்தோடு இந்தியா திருப்தியடையவேண்டும் என்ற தன் கருத்தை டாக்டர் அம்பேத்கர் மீண்டும் வலியுறுத்தினார். ''நாட்டின் தற்காப்பு என்ற கோணத்திலிருந்து மட்டுமே நான் இந்தியாவின் விடுதலைப் பிரச்சினையை அணுகுகிறேன். ஆனால் இப்போதைக்கு பிரிட்டனின் உதவியின்றித் தன்னைத் தானே காத்துக் கொள்ளும் முழு வலிமை யுடன் இந்தியா இல்லை என்று உறுதியாக நம்புகிறேன். என் னுடைய திட்டத்தை அரசியல் நிர்ணய சபை ஏற்றுக்கொண்டால், இங்கிலாந்து அரசின் கட்டுப்பாட்டில் இல்லாமல் இந்தியாவில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் இங்கிலாந்துப் படையின் உதவி இந்தியாவிற்குக் கிடைக்கும் என்று அவர் முடித்தார்.''[1]

● ● ●

1. ஜெய்பீம், தேதி 26 ஜனவரி 1947.

# 38

# அட்லியின் அறிக்கையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை

வைசிராயினுடைய செயற்குழுவின் முன்னாள் உறுப்பினரும், தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவருமான டாக்டர் அம்பேத்கர் 'குளோப்'பிற்கு பேட்டியளித்தபோது, இந்தியாவைப் பற்றி அட்லி விடுத்துள்ள அறிக்கை குறித்து அவரது கருத்து கேட்கப்பட்டது. ''நான் அதைப் படிக்கவில்லை. உண்மையில் அந்த அறிக்கையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை'' என்று கூறினார்.

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து கூறியதாவது: ''அந்த அறிக்கையில், இது எனக்குப் புரிகிறது என்று சுட்டிக்காட்டிச் சொல்லத்தக்க வகையில் ஒரு கருத்துக்கூட இல்லை. அந்த அறிக்கையில் எதுவுமே தெளிவாக இல்லை. அந்த அறிக்கை என்ன கூறுகிறது என்று புரிந்து கொள்ளக்கூடிய அறிவுத்திறமை ஒருவேளை எனக்கில்லை போலும்.''

சீக்கியர்களில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அகில இந்திய தாழ்த்தப்பட்ட மக்களின் கூட்டமைப்பில் தங்களைப் பிணைத்துக் கொண்டிருக்கிறார்களா? அப்படியானால், பஞ்சாப் அரசை எதிர்த்து லீக்குடன் ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டதன் நோக்கம் என்ன என்று கேட்கப்பட்டது. அவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களின் கூட்டமைப்பில் ஓர் அங்கமா என்பது குறித்து எனக்குச் சரியாகத் தெரியவில்லை. பஞ்சாபில் உள்ள சீக்கியர்களே இந்தக் கேள்விக்குத் தெளிவான விடையளிக்க முடியும்'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். - குளோப்[1].

● ● ●

---

1. மறுபதிப்பு, ஜெய்பீம், தேதி 16 மார்ச் 1947.

## 39

# தீண்டத்தகாதவர்களுக்குப் போதுமான பாதுகாப்பிற்கு உறுதிசெய்தல்

*ஜோகேந்திரநாத் மண்டலுக்கு எழுதிய கடிதத்தில் தாழ்த்தப் பட்ட இனத்தவர்களுக்கான பாதுகாப்புக் குறித்த தமது எண்ணங் களை டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் வெளியிட்டிருக்கிறார். கடிதம் வருமாறு : ஆசிரியர்கள்.*

**''இரகசியம்**

**பீமராவ் ஆர். அம்பேத்கர்**
*எம்.ஏ., பிஹெச்.டி., டி.எஸ்ஸி.,*
*பாரிஸ்டர் அட் லா.*

*ராஜ்கிருஹா*
*தாதர், பம்பாய்-14*

*பம்பாய்-2 ஜூன் 1947*

*எனதன்புள்ள திரு. மண்டல்,*

*1947 மே 30 தேதியிட்ட தங்கள் கடிதம் திரு.மேஷ்ராம் மூலம் நேற்று எனக்குக் கிடைத்தது. எனது இடது காலில் ஏற்பட்ட கடுமை யான வலிகாரணமாக எந்தப் பொது நிகழ்ச்சிகளிலும் முனைப்பாகப் பங்குகொள்ள முடியாமல் படுக்கையிலேயே இருக்க நேர்ந்து விட்டது. மன்னிக்கவும், நான் உறுப்பினராக நியமிக்கப்பட்டிருக்கிற கூட்டரசின் அரசியல் சட்டக் குழுவில் பங்குபெற நான்காம் தேதி டில்லிக்கு விமானம் மூலம் வர விரும்புகிறேன். ஆனால் அது, நான் நடமாடுவதற்கான தகுதி பெற்றிருப்பதைப் பொருத்திருக்கிறது. ஒரு வேளை நான் நடமாடக்கூடாது என்று இன்னமும் மருத்து வர்கள் ஆலாசனை கூறுவார்களேயானால், வங்காளப் பிரிவினை பற்றிய எனது கருத்துக்களை உங்களுக்குத் தெரிவிக்கிறேன். தாழ்த்தப் பட்ட இன மக்களைத் தனியான, சுயேட்சையான பிரிவினராக ஏற்றுக்கொள்ள ஆங்கிலேயர்கள் மறுத்திருக்கிறார்கள் என்பதை எப்போதுமே உணர்ந்திருக்கிறேன். பிரிவினையைத் திணிக்கவும் முடியாது. தாழ்ததப்பட்ட இன மக்களுக்கு ஒரே வழி, ஒன்றுபட்ட வங்காளமாக இருந்தாலும் சரி, பிளவுபட்ட வங்காளமாக இருந்தாலும் சரி தங்களின் பாதுகாப்பிற்காகப் போராடுவதுதான். இந்துக்களை விட தாழ்த்தப்பட்ட இனமக்களுக்கு முஸ்லீம்கள் ஒன்றும் பெரிய நண்பர்களல்ல என்பது எனது கருத்து. தாழ்த்தப்பட்ட இனமக்கள்*

தங்களின் சொந்த சூழ்நிலை காரணமாக, இந்துக்களின் வங்காளத்திலோ முஸ்லீம்களின் வங்காளத்திலோ சிறுபான்மையினராக வாழ நேரிட்டால், அவர்கள் தங்களை எதிர்நோக்கும் ஒவ்வொரு அவசரக் கட்டத்திலும் தங்களது பாதுகாப்பிற்காகப் போராட வேண்டியதுதான் அவர்களுக்கு உள்ள ஒரே வழி. நீங்கள் குறிப்பிட்டிருக்கும் காரணங்களினடிப்படையில், கிழக்கு வங்காளத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட இனமக்கள் பிரிவினை ஏற்படுமானால், தாமோதர் பள்ளத் தாக்குத் திட்டம் நிறைவேறி பயிரிடுவதற்கு அதிக நிலம் கிடைக்கும் போது, கிழக்கு வங்காளத்திலுள்ள தாழ்த்தப்பட்ட இனமக்கள் மேற்கு வங்காளத்திற்கு இடம்பெயர விருப்பம் தெரிவிப்பார்களே யானால், கிழக்கு வங்காளத்திலுள்ள தாழ்த்தப்பட்ட இனமக்களுக்கு மேற்கு வங்காளத்தில் சிறிது இடம் ஒதுக்கித்தர இசைய வேண்டும் என்று இந்துக்களிடம் நான் கூறியிருக்கிறேன். ஆனாலும் இவ்வாறு நடைபெறுவதற்கு வாய்ப்பே இல்லை. இதற்கிடையில், நீங்கள் லீக்குடன் இணைந்து பாடுபட்டு அவர்களுக்குப் போதுமான பாதுகாப்பு கிடைப்பதை உறுதி செய்ய வேண்டும் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு அரசியல் பாதுகாப்பு கொடுப்பதில் ஈவ்லாக்கில் உள்ள இந்துக்களின் கண்ணோட்டம் பற்றிய விஷயத்தில் நான் உங்களைப்போல அவ்வளவு நம்பிக்கை யில்லாதவனாக இல்லை. பண்பட்ட உள்ளம் எங்கும் இருக்க முடியாது. நான் என்ன நினைக்கிறேனென்றால், அனேகமாக நாம் விரும்புகிற எல்லாப் பாதுகாப்புக்களையும் கொடுக்க அவர்கள் இசைவார்கள். தனித் தொகுதிகள் விஷயத்தில் மட்டும் சில மாற்றங் கள் செய்ய அவர்கள் வலியுறுத்தவார்கள். ஆனாலும் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு தனித்தொகுதிகள் கொடுக்க முஸ்லீம்லீக் தயாராக இருக்கும். ஏனென்றால், தங்கள் இனத்திற்குத் தனித் தொகுதிகள் வேண்டுமென்று அவர்களே விரும்புகிறார்கள். கிழக்கு வங்காள தாழ்த்தப்பட்ட இன மக்களைப் பொறுத்த வரையிலும், இது சாதக மான விஷயம்தான் என்பதில் ஐயமே இல்லை.

முஸ்லீம் லீக்கின் முன் வைக்கப்பட வேண்டிய கோரிக்கை களை உங்களுக்குத் தெரிவிக்கும்படி என்னிடம் கேட்டிருந்தீர்கள். நான் என்னுடைய கோரிக்கை மனுவில் பல்வேறு கோரிக்கைகளை முறைப்படுத்தியிருக்கிறேன். அவை அச்சடிக்கப்பட்டு, சிறுபான்மை யினர் குழு உறுப்பினரிடையே சுற்றுக்கு விடப்பட்டிருக்கின்றன. உங்கள் தகவலுக்காக அதன் பிரதி ஒன்றை உங்களுக்கு அனுப்பி யிருக்கிறேன். என்னுடைய கணிப்பில், மேற்கு வங்காளம் மட்டு மல்ல, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாநிலத்திலும் நமது பாதுகாப்

பிற்காக நாம் விரும்பும் அனைத்தும் அந்தக் கோரிக்கை மனுவில் இடம்பெற்றுள்ளன. முஸ்லீம்லீக்கோடு பேச்சுவார்த்தை நடத்தும் போது இந்தக் கோரிக்கை மனுவை நீங்கள் பெரிதும் பயன்படுத்த வேண்டியிருக்கும் என்று நினைக்கிறேன். மேற்கு வங்காளத்திலுள்ள நமது மக்களுக்கு, அங்குள்ள விசேட சூழ்நிலைகள் காரணமாக ஏதாவது புதிய பாதுகாப்புகள் சேர்க்கப்பட வேண்டுமென்று நீங்கள் நினைத்தால் அவ்வாறே நீங்கள் தாராளமாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

லக்னோ சிறையில் உள்ள **சத்தியாக்கிரகிகளின்** அவல நிலை பற்றி எனக்கு ஏற்கனவே தெரிவிக்கப்பட்டிருக்கிறது. சிறையில் உள்ள **சத்தியாக்கிரகிகளின்** நிலை பற்றி ஆய்ந்து கூறுவதற்காக என்னுடைய பிரதிநிதிகள் இரண்டு பேரை லக்னோவிற்கு அனுப்பியிருக்கிறேன். உத்திரப் பிரதேச பிரதம மந்திரியின் கவனத்துக்கும் இவ்விஷயத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். **சத்தியாக்கிரகிகளை** விடுவிக்கக்கோரி உத்திரப்பிரதேச அரசுக்கு அறைகூவல் விடுத்து நமது மக்களே சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுள்ளனர். ஆனால், சிறுபான்மையினர் குழுவில், நமது பாதுகாப்புகள் பற்றி ஏதாவது சில உடன்பாடுகள் ஏற்படுமானால், அந்தப் பேரத்தின் ஒரு பகுதியாக அவர்களின் உடனடி விடுதலையை நான் கோருவேன்.

வாழ்த்துக்களுடன்,

தங்கள் உண்மையுள்ள,
(கை-ம்) **பி.ஆர்.அம்பேத்கர்**

மேன்மைதங்கிய
திரு. ஜே.என். மண்டல்,
இந்திய அரசின் சட்ட அமைச்சர்,
புதுடில்லி.''[1]

[1] : கைர்மோட், தொகுதி 8, பக்கம் 164-166.

# 40

# இந்திய மக்கட் தொகை கணக்கெடுப்பு

*1947 அக்டோபர் 26 அன்று இந்திய மக்கட் தொகை கணக்கெடுப்பின் மீதான தமது கருத்துக்களை டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கீழ்வருமாறு வெளிப்படுத்தினார்: ஆசிரியர்கள்.*

*''இந்திய மக்கட் தொகை கணக்கெடுப்பானது, பல பத்தாண்டுகளாகவே, பிறப்பு முதலான சமுதாயநிலைப் புள்ளிவிவர ஆய்வாக எடுக்கப்படுவதினின்றும் தவிர்க்கப்பட்டுவருகிறது. அது ஓர் அரசியல் பிரச்சினையாகி விட்டது. மேலும் மேலும் அதிக அளவிலான அரசியல் அதிகாரத்தைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொள்வதற்காக, ஒவ்வொரு இனமும் பிற இனங்களுக்குப் பாதகம் ஏற்படும் வகையில் தங்கள் எண்ணிக்கைகளைச் செயற்கையாக அதிகப்படுத்திக் கூறுவதாக தெரிகிறது. பிற இனத்தவர்கள் தங்களது பரிசாரகர்கள் அல்லது கணக்கெடுப்பாளர்கள் மூலமாக, மக்கட் தொகை கணக்கெடுப்பு நடவடிக்கைகளையும் அதன் முடிவுகளையும் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ள முடிகிறது. அவர்களின் ஒட்டுமொத்த பேராசையைத் திருப்திப்படுத்துவதற்காக, தாழ்த்தப்பட்ட இன மக்கள்தான் இதனால் பொதுவாகப் பாதிக்கப்படுவதாகத் தோன்றுகிறது.''[1]*

● ● ●

---

[1] : கைர்மோட், தொகுதி 10, பக்கம் 22 இடம் குறிக்கப்படவில்லை - ஆசிரியர்கள்.

41

# பாகிஸ்தானிலுள்ள தாழ்த்தப்பட்ட இன மக்கள் இந்தியாவிற்கு வரவேண்டும்

*புதுடில்லி, நவம்பர் 27, 1947*

''இந்தியாவுடன் இணைவதை எதிர்க்கும் நிஜாமுக்கு எவ்வித ஆதரவும் கிடையாது. இந்தியாவின் எதிரியாக இருக்கும் ஒருவருக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம், தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த எவரும் அந்த இனத்திற்கு அவப்பெயரை தேடிக் கொடுத்துவிடக் கூடாதென்ற கவலை எனக்கிருக்கிறது'' என்று இந்தியாவிற்கு இடம் பெயர்ந்து வருமாறு அவர்களுக்குப் பகிரங்க அழைப்பு விடுத்து ஓர் அறிக்கையில் சட்ட அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கூறியுள்ளார்.

பாகிஸ்தானிலுள்ள அவரது ஆதரவாளர்களின் நிலை பற்றிக் கேட்டபோது, முஸ்லீம்லீக்கும் அதன் தலைவரும் அவர்களுக்குத் தேவைப்பட்டபோது மட்டும் தாழ்த்தப்பட்ட இனத்தவரை ஆதரிக்கிறார்கள் என்றார். அவர்களுக்கு பெரும் அநீதி இழைக்கப்பட்டிருக்கிறது. எனவே, அவர்களும்கூட பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு வந்துவிட வேண்டுமென்று யோசனை கூறினார்.

இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் எண்ணிக்கை மிக அதிகம், அமைப்பு ரீதியாக நன்கு திரட்டப்பட்டிருக்கிறார்கள். எனவே இன்றுள்ள அரசின் மேல் தங்கள் செல்வாக்கைச் செலுத்த அவர்கள் தவறமாட்டார்கள் என்று டாக்டர் அம்பேத்கர் உணருகிறார்.

''பாகிஸ்தானிலும் மற்றும் ஹைதராபாத்திலும் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களிடமிருந்து எனக்கு ஏராளமான முறையீடுகள் வந்துள்ளன. பாகிஸ்தானிலும் ஹைதராபாத்திலும் அவர்களுக்கு எதிராகக் கடைப்பிடிக்கப்படும் கொள்கைகள் காரணமாக அவர்கள் அனுபவித்து வரும் இன்னல்களிலிருந்து மீட்க நான் ஏதாவது செய்ய வேண்டுமென்று அவர்கள் கேட்டுள்ளார்கள்'' என்று அவர் கூறினார். பாகிஸ்தானில், அவர்கள் இந்தியாவிற்கு வர அனுமதிக்கப்படுவதில்லை. அவர்கள் பலவந்தமாக இஸ்லாமிற்கு மாற்றப்படுகிறார்கள்.

ஹைதராபாத்தில், அங்குள்ள முஸ்லீம் மக்கள் தொகையை அதிகரிக்கும் நோக்கத்தோடு அவர்கள் பலவந்தமாக முஸ்லீம்களாக மாற்றப்படுகிறார்கள். மேலும், ஹைதராபாத்தில் ஒரு பொறுப்புள்ள அரசு அமையவேண்டும் என்றும் ஹைதராபாத், இந்தியக் கூட்டாட்சியுடன் இணைய வேண்டும் என்றும் கோரிக்கை வைத்து நடைபெறும் இயக்கங்களில் ஹைதராபாத்திலுள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் கலந்து கொள்ள இயலாத அளவுக்கு அவர்கள் உள்ளத்தில் பய உணர்வை ஏற்படுத்துவதற்காக, அங்குள்ள தீண்டத்தகாதவர்களின் வீடுகளை எரித்து, இட்டிஹாட்-உல்-முஸ்லீமின் என்னும் அமைப்பு தொடர்ந்து இயக்கங்களை நடத்தி வருகிறது.

## பகிரங்க அழைப்பு

''என்னால் செய்ய முடிந்ததெல்லாம், இந்தியாவுக்கு வரும்படி அவர்களை அழைப்பதுதான். ஏனென்றால், இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் நிலைமையும் பாகிஸ்தானில் உள்ளதைப் போன்றே இருக்கிறது. இந்தியாவில், நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் ஜாதி இந்துக்களால் அவர்கள் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள். பாகிஸ்தானில் அவர்கள் கட்டாய மதமாற்றத்திற்குள்ளாக்கப்படுகிறபோது, இந்துஸ்தானத்தில் அவர்கள் கட்டாய அரசியல் மாற்றம் செய்யப்படுகிறார்கள். அவர்கள் காங்கிரஸ் உறுப்பினர்களாகக் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். அவ்வாறு உறுப்பினர்களாக மறுத்தால் அவர்கள் ஒதுக்கி வைக்கப்படுகிறார்கள். இதனால் அவர்கள் வாழ்க்கை நாசமடைகிறது. அனேக நிகழ்வுகளில், குறிப்பாக உத்திரப் பிரதேசத்தில் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு இழைக்கப்படும் கோரக் கொடுமை அவர்களை உயிரோடு எரிக்கும் அளவிற்கு அதிகரித்திருக்கிறது. இதேபோல் மேற்கு பஞ்சாபிலிருந்து கிழக்கு பஞ்சாபிற்கு இடம்பெயர்ந்திருக்கும் சீக்கியர்களும் ஜாட்டுகளும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கும் கொடுமையும் அநீதியும் இதே போன்று மிகவும் தாளமுடியாத அளவிற்கு இருக்கிறது. ஜாதி இந்துக்களின் கையில் முழுமையாக இருக்கும் நிர்வாகம், அவர்களுக்குச் சிறிதளவுகூட உதவிகரமாக இல்லை.

இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட இன மக்களின் எதிர்காலம் இருண்டதாக இருந்தாலும்கூட இன்றைக்குப் பாகிஸ்தானில் அடைபட்டுக் கிடக்கும் தாழ்த்தப்பட்ட இனமக்களெல்லாம் இந்தியாவிற்கு வந்து விடுங்கள் என்றுதான் கூறுவேன். காங்கிரஸ் கட்சி, புதிய அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குத்

தேவையான அரசியல் பாதுகாப்புக்களை எதற்கும் பயன்படாத அளவிற்குப் பலவீனமடையச் செய்துவிட்டது. இருந்தபோதிலும் நமது எண்ணிக்கை மிகவும் அதிகமாக இருப்பதால் நாம் அமைப்பு ரீதியாக நன்கு திரட்டப்பட்டால் இன்றைய அரசின் மீது நமது செல் வாக்கைச் செலுத்த முடியும்.

## ''முஸ்லீம்கள் நண்பர்களல்ல''

பாகிஸ்தானிலோ அல்லது ஹைதராபாத்திலோ இருக்கும் தாழ்த்தப்பட்ட இன மக்கள் முஸ்லீம்கள் அல்லது முஸ்லீம் லீக்கின் மீது நம்பிக்கை வைப்பது அவர்களுக்குப் பெருங்கேட்டைத்தான் விளைவிக்கும். இந்துக்களை வெறுப்பதனாலேயே முஸ்லீம்களை நண்பர்களாகப் பாவிப்பது தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பழக்கமாகி விட்டது. இது ஒரு தவறான கண்ணோட்டமாகும். தாழ்த்தப்பட்ட மக்களின் ஆதரவை முஸ்லீம்கள் வேண்டுகிறார்கள். ஆனால் அவர்கள் தங்களின் ஆதரவைத் தாழ்த்தப்பட்ட இன மக்களுக்குத் தருவதே இல்லை. எப்பொழுதுமே ஜின்னா இரட்டை வேடம் போட்டு வரு கிறார். அவருக்குத் தேவைப்படுகிறபோது தாழ்த்தப்பட்ட இன மக்கள் தனிப் பிரிவினர் என்று மிக அழுத்தமாகச் சொல்லுவார். அவருக்குத் தேவைப்படாதபோது அவர்கள் இந்துக்கள் என்று அதே அழுத்தத்தோடு கூறுவார். முஸ்லீம்களும் முஸ்லீம்லீக்கும் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் முஸ்லீம்களை ஆளும் வர்க்கமாக்கிவிட வேண்டும் என்னும் வெறியில் இருப்பதால் தாழ்த்தப்பட்ட இன மக்களின் கோரிக்கைகளுக்கு அவர்கள் முக்கியத் துவம் கொடுக்கவே மாட்டார்கள். இதை நான் எனது அனுபவத்தி லிருந்து கூறுகிறேன்.

மதமாற்றத்தைப் பொறுத்த வரையில் தங்கள்மீது வன்முறை மூலம் திணிக்கப்படுகின்ற கடைசிப் புகலிடமாகத்தான் தாழ்த்தப் பட்ட மக்கள் அதைப் பார்க்க வேண்டும். நிர்ப்பந்தம் மூலமோ அல்லது வன்முறை மூலமோ மதமாற்றம் செய்யப்பட்டவர்கள்கூட, தாங்கள் மீளமுடியாத வகையில் அந்த மதத்திற்கு இழுக்கப்பட்டு விட்டதாகக் கருதக்கூடாது என்று அவர்களுக்குக் கூறுவேன். அவர்கள் மீண்டும் தங்கள் மதத்திற்குத் திரும்ப விரும்பினால், அவர்கள் வரவேற்கப்பட்டு, மதமாற்றத்திற்கு முன்னால் எவ்வாறு நடத்தப்பட்டார்களோ அதே முறையில் சகோதரத்துவத்துடன் நடத்தப்படுவார்கள் என்று உறுதி கூற விரும்புகிறேன்.

''ஹைதராபாத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட இன மக்கள் எந்தச் சூழ்நிலையிலும் நிஜாமையும் இட்டிஹாட்-உல்-முஸ்லீமினையும் ஆதரிக்கக் கூடாது. என்னதான் அநீதியையும் கொடுமையையும் இந்துக்கள் நமக்கு இழைத்தாலும் அது நமது கவனத்தைத் திருப்பக் கூடாது. நமது கடமையிலிருந்து நாம் விலகிச் செல்ல அனுமதிக்கக் கூடாது. இந்தியாவோடு இணைவதை எதிர்க்கும் நிஜாமுக்கு நமது ஆதரவு கிடையாது. இவ்வாறு செய்வதன் மூலம் அவர் தனது சொந்த நலனுக்கு எதிராகவே செயல்படுகிறார். தனது சொந்த பாரம்பரிய உரிமையைப் பாதுகாக்க இட்டிஹாட் - உல் - முஸ்லீமினை நம்பியிருப்பதைவிட, இந்தியாவிலுள்ள 90 சதவீத இந்துக்களின் ஒப்புதலைப் பெற்றிருக்கும் கூட்டரசு அரசியலமைப்புச் சட்டத்தின் உத்திரவாதம் கிடைக்குமானால் அது மிகவும் பத்திரமாக இருக்கும் என்பதை அவர் உணரவில்லை. இந்தியாவின் எதிரியாக இருக்கும் ஒருவருக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம், தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த எவரும் அந்த இனத்திற்கு அவப்பெயரை தேடிக் கொடுத்துவிடக் கூடாது என்ற கவலை எனக்கிருக்கிறது.'' - ஏ.பி.ஐ.[1]

• • •

1. தி நேஷனல் ஸ்டாண்டர்டு, தேதி 28 நவம்பர் 1947.

# 42

# தாழ்த்தப்பட்ட இன அகதிகள் புறக்கணிக்கப்படுகிறார்கள்

நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையில் இதுவரை எப்போதுமே கண்டிராத அளவு இனக் கலவரம் மூண்டது. இரு சாராரும் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டனர். ஆனால் அந்தக் கருத்து வேறுபாட்டுப் பூசலால் எழுந்த கேடுகள், அப்பகுதிகளில் வாழ்ந்த எண்ணற்ற தீண்டத்தகாதவர்களையும் பாதித்தன. இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள், ஜாட்டுகள் ஆகியோரினால் அடையும் துயரங்களை விவரித்து எண்ணற்ற தீண்டத்தகாதவர்கள் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்குக் கடிதங்கள் எழுதினார்கள். ஆகவே, தீண்டத்தகாதவர்களின் துன்பங்களை எடுத்துக்கூறி, அந்த தாழ்த்தப்பட்ட இன அகதிகளுக்கு நிவாரணம் அளிக்கக்கோரி அவர் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவிற்கு 1947 டிசம்பர் 18 ஆம் தேதி ஒரு கடிதம் எழுதினார் - ஆசிரியர்கள்.

''புதுடில்லி
18 டிசம்பர் 1947.

எனது அன்பிற்குரிய திரு. ஜவாஹர்லால்,

பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு வெளியேற்றப்பட்ட மற்றும் இந்தியாவிற்கு வருவதினின்றும் தடுக்கப்பட்டு பாகிஸ்தான் அரசினால் அங்கேயே அடைக்கப்பட்டிருக்கிற தாழ்த்தப்பட்ட மக்களிடமிருந்து எண்ணற்ற முறையீடுகள் எனக்கு வந்துள்ளன. அவர்களின் துயரங்களைத் தங்களின் கவனத்திற்குக் கொண்டு வர வேண்டிய தருணம் வந்துவிட்டதாகக் கருதுகிறேன். அங்கு என்ன நடைபெறுகிறது, என்ன செய்ய வேண்டும் என்பதைத் தங்கள் பார்வைக்குக் கொண்டுவருவதற்காக அவர்கள் படும் துயரங்களுக்கான காரணங்களையும், அவற்றை நீக்குவதற்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளையும் இங்கு கீழே தந்திருக்கிறேன்.

## I

(1) பாகிஸ்தான் அரசு தங்கள் எல்லையிலிருந்து தாழ்த்தப்பட்ட இன மக்கள் வெளியேறுவதை எல்லா வழிகளிலும் தடுத்து

வருகிறது. குற்றேவல்கள் செய்வதற்கும் நிலமுள்ள பாகிஸ்தானிய மக்களுக்கு நிலமற்ற கூலிகளாக இருந்து உழைப்பதற்கும் தாழ்த்தப் பட்ட இன மக்கள் பாகிஸ்தானிலேயே இருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புவதுதான் இதற்குக் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. பாகிஸ்தான் அரசு குறிப்பாகத் தோட்டிகளை இருத்தி வைத்துக் கொள்ளவே மிகவும் ஆர்வமாக இருக்கிறது. அவர்களை அத்தியாவசியப் பணியிலீடுபட்டிருப்பவர்கள் என்று அறிவித்திருக் கிறது. ஒரு மாத அறிவிப்புக் கொடுத்தாலன்றி அவர்களை விடுவிக்க அரசு தயாராக இல்லை.

(2) வெளியேற விரும்புகிற தாழ்த்தப்பட்ட இன அகதிகளுக்கு எம்.இ.ஓ.என்றழைக்கப்படும் ஓர் அமைப்புத்தான் சிறிது உதவி செய்துவருகிறது. எனினும் வெளியேற விரும்புகிற தாழ்த்தப்பட்ட மக்களோடு நேரடித் தொடர்பு கொள்ள எம்.இ.ஓ.வை பாகிஸ்தான் அரசு அனுமதிப்பதில்லை என அறிகிறேன். இதன் விளைவாக, தாழ்த்தப்பட்ட மக்களை வெளியேற்றும் நடவடிக்கைகள் மிக மெதுவாகவே நடைபெறுகின்றன. சில இடங்களில் அது ஸ்தம்பித்து விட்டது. வெகு விரைவில் எம்.இ.ஓ மூப்பட்டுவிடும் என்றும் கேள்விப்பட்டேன். அது நடைபெற்றால் பாகிஸ்தானிலிருந்து தாழ்த்தப்பட்ட இனத்தவரை வெளியேற்றுவது என்பது முடியாததாகி விடும்.

(3) இந்நிலைமையில் என்ன செய்யப்பட வேண்டு மென்றால் :-

(i) தாழ்த்தப்பட்ட இன மக்கள் வெளியேறுவதற்கு எந்தவிதத் தடையும் செய்ய வேண்டாம் என்று பாகிஸ்தான் அரசைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

(ii) வெளியேற விரும்புகிற தாழ்த்தப்பட்ட இன மக்களோடு நேரடித் தொடர்புகொள்ள எம்.இ.ஓ.வை அனுமதிக்க வேண்டும்.

(iii) தாழ்த்தப்பட்ட இன மக்களெல்லாம் வெளியேற்றப் படுகிற வரைக்கும் எம்.இ.ஓ தொடர்ந்து செயலாற்ற வேண்டும்.

(4) இதுவரையிலும் நிவாரணம் மற்றம் மறு சீரமைப்பு அமைச்சகம் மேற்கு பஞ்சாபிற்கு தாழ்த்தப்பட்ட இனத்திலிருந்து ஒரே ஒரு அதிகாரியைத்தான் நியமித்திருக்கிறது. ஆனால் பாகிஸ் தானிலுள்ள வடமேற்கு எல்லை மாகாணம், சிந்து, பவல்பூர் போன்ற

பிற மாகாணங்கள் விடுபட்டுப் போய்விட்டன. அம்மாகாணங்களுக்கு இப்படிப்பட்ட அதிகாரிகள் நியமிக்கப்படவேயில்லை. இந்தப் பகுதிகளுக்கு அதிகாரிகளை நியமனம் செய்யும்படி அமைச்சகம் அறிவுறுத்தப்பட வேண்டும். இதனால் அச்சிறப்பு அதிகாரிகள் பாகிஸ்தான் பகுதிகளில் சுற்றுப் பயணம் செய்து எந்தெந்தப் பகுதிகளில் தாழ்த்தப்பட்ட இன மக்கள் வெளியேறுவதினின்றும் பாகிஸ்தான் அரசினால் தடுக்கப்படுகிறார்கள் என்பதைக் கண்டு பிடிக்க முடியும்.

## II

பாகிஸ்தானிலிருந்து கிழக்குப் பஞ்சாபிற்கு வந்துவிட்ட தாழ்த்தப்பட்ட இனத்தவர்களைப் பொறுத்தவரை, அவர்களும் தங்கள் முறையீடுகளை அனுப்பியிருக்கிறார்கள். அவை, பஞ்சாபிலேயே தடுக்கப்பட்டு விட்டவர்களிடமிருந்து வருவதைக் காட்டிலும் மிக அதிக எண்ணிக்கையிலிருக்கின்றன. அவற்றின் சுருக்கத்தைக் கீழே தருகிறேன்:

### (i)

(1) வெளியேற்றப்பட்டு கிழக்கு பஞ்சாபிற்கு வந்துவிட்ட தாழ்த்தப்பட்ட இனத்தவர்கள் இந்திய அரசினால் நிறுவப்பட்டுள்ள அகதிகள் முகாம்களில் வசிக்கவில்லை. காரணம் என்னவென்றால், அகதிகள் முகாம்களை நிர்வகிக்கும் அதிகாரிகள் ஜாதி இந்து அகதிகளுக்கும் தாழ்த்தப்பட்ட இன அகதிகளுக்குமிடையில் பாகுபாடு காட்டுகிறார்கள்.

(2) நிவாரண முகாம்களில் தங்கியிருக்கும் அகதிகள் மட்டுமே உணவுப் பங்கீடு, ஆடைகள் முதலியவற்றைப் பெற முடியும் என்று நிவாரணம் மற்றும் மறு சீரமைப்புத்துறை ஒரு விதியை ஏற்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. மேலே குறிப்பிட்ட காரணங்களால் அகதிகள் முகாம்களில் தங்கமுடியாமல் போன தாழ்த்தப்பட்ட அகதிகள் எந்த நிவாரணமும் பெற முடியவில்லை. இது மிகப் பெரும் துயரமாகும்.

(3) இத்தகைய வேறுபாடு பார்த்தல் தடுக்கப்பட முடியாததாகையால், முகாம்களில் வசிக்கும் அகதிகளுக்கு எவ்வாறு நிவாரணம் அளிக்கப்படுகிறதோ அவ்வாறே முகாம்களுக்கு வெளியில் வசிக்கும்

தாழ்த்தப்பட்ட இன அகதிகளுக்கும் நிவாரணம் வழங்கப்பட வேண்டும் என்று விதியைத் திருத்துதல் அவசியம்.

*(1)* கிழக்கு பஞ்சாப் அரசு செய்த நில ஒதுக்கீட்டில், தாழ்த்தப் பட்ட இன மக்களின் நலன்கள் முற்றிலுமாகப் புறக்கணிக்கப்பட் டிருக்கின்றன. கிழக்கு பஞ்சாப் நிர்வாகம் முற்றிலுமாக ஜாதி இந்துக் களின் கைகளில் இருப்பதால், வெளியேற்றப்பட்ட தாழ்த்தப்பட்ட இன மக்களின் மறு சீரமைப்பில் தனிக்கவனம் செலுத்த யாருமே இல்லை. மேலும் தாழ்த்தப்பட்ட மக்களின் நலன்கள் புறக்கணிக்கப் பட்டிருப்பதை கிழக்கு பஞ்சாப் அரசின் கவனத்திற்குக் கொண்டு செல்லும் பணியைப் பொறுப்போடு செய்யும் அமைப்பு எதையும் இந்திய அரசு நியமிக்கவில்லை.

*(2)* ஆகவே, நிலப்பங்கீடு நியாயமான முறையில் நடைபெறு வதையும், தாழ்த்தப்பட்ட இன அகதிகள் தங்களுக்குரிய நியாயமான பங்கைப் பெறுவதையும் கண்காணிக்கும் பணியைப் பொறுப்புடன் செய்ய கிழக்குப் பஞ்சாபில் அதிக எண்ணிக்கையிலான அதிகாரிகளை இந்திய அரசு நியமிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

*(3)* இந்த நோக்கத்திற்காக நியமிக்கப்படக் கூடியவர்களின் பட்டியல் ஒன்றை மாண்புமிகு திரு.நியோகியிடம் கொடுத்திருக் கிறேன். எனக்குத் தெரிந்தவரையில் இந்தப் பணியை ஏற்றுச் செய் வதற்கு அவர் மிகவும் தகுதிபடைத்தவர்.

*(4)* (a) கிழக்கு பஞ்சாபில் மிகமுக்கிய பதவி வகிக்கும் சீக்கியர் களும் ஜாட்டுகளும் கிழக்கு பஞ்சாப்வாசிகளான தாழ்த்தப்பட்ட மக்களின் வீடுகளையும் நிலங்களையும் கையகப்படுத்துவதற்காக, அவர்களைத் தங்கள் சொந்த வீடுகளிலிருந்தும் வெளியேறும்படி வற்புறுத்துகிறார்கள் என்பது அருவருக்கத்தக்க உண்மையாகும். தங்கள் காரியங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காக சீக்கியர்களும் ஜாட்டுகளும் இழைக்கும் கொடுமைகளால், அநீதிகளிலிருந்து தாழ்த்தப்பட்ட இன மக்கள் எந்தவிதத் தீர்வும் பெறமுடியவில்லை. அதற்கான காரணம் என்னவென்றால், கிழக்கு பஞ்சாபிலுள்ள நீதித் துறையும் காப்பீட்டுத்துறையும் முற்ற முழுக்க சீக்கியர்கள் மற்றும் ஜாட்டுகள் வசம் இருப்பதேயாகும். அவர்கள் தவறு செய்யும் தங்கள் உற்றார் உறவினர்களை இயல்பாகவே பாதுகாப்பார்கள், தாழ்த்தப்பட்ட இனத்தவரின் சிரமங்களை கவனத்தில் கொள்ளவே மாட்டார்கள்.

(b) ஆகவே, காவல் துறையில், தாழ்த்தப்பட்ட இனத்திலிருந்து குறைந்தது 300 நபர்களையாவது புதிதாகச் சேர்க்க வேண்டும் என்று கிழக்கு பஞ்சாப் அரசை நிர்ப்பந்திக்க வேண்டியது முற்றிலும் அவசிய மாகும். கிழக்கு பஞ்சாப் அரசு தங்களது காவல்துறைக்கு தாழ்த்தப் பட்ட இனத்தவர் 300 பேரை புதிதாக வேலைக்கமர்த்தியிருப்பதாகச் சமீபத்தில் பத்திரிகைகளில் செய்தி வந்தது. விசாரித்துப் பார்த்ததில், எல்லைப்புறக் காவல் துறைக்குத்தான் நியமனங்கள் நடைபெற்றன வென்றும் சாதாரண காவல் துறைக்கு அல்லவென்றும் தெரிய வந்தது. தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக தாழ்த்தப்பட்ட இன மக்கள் விரும்புவதென்னவென்றால், கிழக்கு பஞ்சாப் காவல் துறையில் தாங்கள் சேர்க்கப்பட வேண்டும் என்பதுதான். கிழக்கு பஞ்சாபிலுள்ள காவல்துறையில் ஒரு தாழ்த்தப்பட்ட இனத்தவர்கூட சேர்க்கப்படவில்லை என்று எனக்குக் கூறப்பட்டது.

*(5)* (a) கிழக்கு பஞ்சாபிலுள்ள நிலத்தீர்வை முறை, கிராமத் தில் வாழ்கிறவர்களை ஜமீன்தார்கள் என்றும் கமினாக்கள் என்றும் இரண்டு வர்க்கங்களாகப் பிரிக்கிறது. கிராமத்தின் எல்லைக்குள் அமைந்திருக்கும் நிலங்களின் மீது பாத்தியதை கொண்டாடும் தனி உரிமை படைத்த குடும்பங்கள் ஜமீன்தார்கள் வகையில் சேரும். கமினாக்கள் தாங்கள் வாழும் கிராமத்தில் உள்ள நிலங்களை வாங்கவோ, சொந்தமாக வைத்துக் கொள்ளவோ உரிமையற்றவர்கள். அவர்களின் வீடுகள் அமைந்திருக்கும் நிலங்கள்கூட ஜமீன்தார் களுக்குச் சொந்தம். அதன் விளைவாக ஜமீன்தார்களெல்லாம் ஒன்று சேர்ந்தால், வீடுகளைக் காலி செய்துவிட்டு கிராமத்திலிருந்து வெளியேறுமாறு அவர்கள் கமினாக்களை நிர்ப்பந்திக்க முடியும். ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள கமினாக்கள் ஜமீன்தார்களின் தயவில் வாழுமாறு இந்தச் சட்டம் செய்கிறது. கிழக்கு பஞ்சாபி லுள்ள அனைத்துக் கிராமங்களிலுமுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கமினாக்கள் என்றழைக்கப்படுகிறார்கள். அவர்கள் அனைவரும் அந்தந்த கிராமத்து ஜமீன்தார்களின் அடிமைகளாக வாழ்ந்து வரு கிறார்கள்.

(b) ஆகவே, இந்த நிலத்தீர்வை முறையை மாற்றுவதன் மூலம் வேறுபாடுகளை ஒழித்து, நிலத்தை உடைமையாக்கிக் கொள் வதில் கிராமத்திலுள்ள அனைவருக்கும் சமவாய்ப்பு அளிக்கும் ரயத்துவாரி முறை போன்ற ஒன்றை உருவாக்குமாறு கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டுவது அவசியமாகும்.

6 (a). கிழக்குப் பஞ்சாப் மாகாணத்தில் 'நில உடைமை மாற்றச் சட்டம்' அமலில் இருக்கிறது. வட்டிக்குப் பணம் கடன் கொடுப்பவர்களிடமிருந்து விவசாயிகளைப் பாதுகாப்பதற்கான சட்டம் இது. ஆனால் இது மிகவும் மோசமான, நேர்மையற்ற சட்டம் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. விவசாயி என்பதற்கு அச்சட்டத்தில் இனம் சார்ந்த விளக்கம் தரப்பட்டிருக்கிறது; தொழில் சார்ந்த விளக்கம் அல்ல. அந்தச் சட்டத்தின்படி, அரசாங்கத்தால் 'விவசாய இனம்' என்று அறிவிக்கப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்தான் விவசாயி ஆவார். தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் நிலத்தில் பயிரிடுபவராகவோ, விவசாயக் கூலியாகவோ இருந்தபோதிலும் தாழ்த்தப்பட்டவர்களை விவசாய இனமாக அறிவிப்பதை தவிர்த்திருக்கிறது. இதன் விளைவாக கிழக்குப் பஞ்சாபில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிலம் வாங்கவோ, நிலம் சார்ந்த சொத்தைக் கையகப் படுத்தவோ இயலாதவாறு தடைசெய்யப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் நிலமற்றக் கூலிகளாக வாழ்க்கை நடத்தவும், தங்கள் வாழ்வாதாரத்திற்காக இந்து, சீக்கிய, ஜாட் நிலவுடைமையாளர்களைச் சார்ந்திருக்கவும் நிர்பந்தப்படுத்தப்பட்டுள்ளனர். இது ஒரு கொடுமையான சட்டம். இதனை சட்டப் புத்தகத்தில் நீடிக்க அனுமதிக்கக் கூடாது என்று நினைக்கிறேன்.

(b) 'விவசாயி' என்ற பதத்திற்கான விளக்கத்தில் கிழக்கு பஞ்சாப் அரசு திருத்தம் செய்யவேண்டும். அது தொழில் சார்ந்ததாக ஆக்கப்பட வேண்டும். சாதி மத பேதமில்லாமல், விவசாயத்தையே தனது வாழ்வாதாரமாகக் கொண்டிருப்பவர்கள் 'விவசாயி' ஆகிவிடுவார்கள். நிலம் வாங்கவோ, நிலம் சார்ந்த சொத்தைக் கையகப் படுத்தவோ உரிமை பெறுவார்கள்.

என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் துயரங்களையெல்லாம் விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறேன். அவற்றின் தீர்வுகளையும் குறித்திருக்கிறேன். இந்தத் தீர்வுகள் மேற்கொள்ளப்பட்டால், அவர்களது துயரங்கள் தீர்க்கப்படும். சில தீர்வுகள் இந்திய அரசாங்கத்தின் கைகளில் இருக்கின்றன. எஞ்சியவை கிழக்குப் பஞ்சாப் அரசின் கைகளில் உள்ளன. இத்தகைய தீர்வுகள் இந்திய அரசின் கைகளில் உள்ளதால், அவற்றை மேற்கொள்ளும் மனநிலை அரசுக்கு இருந்தால், அவற்றை அமல்படுத்துவதில் பிரச்சினையே இல்லை. கிழக்கு பஞ்சாப் அரசின் கைகளில் இருக்கிற தீர்வுகளைப் பொறுத்த வரையிலும் கூட இந்திய அரசாங்கம் அதில் தலையிட முடியாது என்று எண்ண வேண்டாம். ஏனென்றால்,

மறுசீரமைப்புக்கான செலவுத் தொகையை இந்திய அரசாங்கம் கொடுப்பதால், எல்லா இன மக்களும் நியாயமாகவும் சமமாகவும் நடத்தப்படத் தேவையானவை என்று இந்திய அரசு நினைக்கிற குறிப்பிட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு கிழக்குப் பஞ்சாப் அரசை வற்புறுத்த இந்திய அரசுக்குத் தார்மீக உரிமை உண்டு. அதனால்தான் கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்தின் கைகளில் உள்ள தீர்வுகளைக்கூட இந்திய அரசாங்கத்தின் நடவடிக்கைக்காக இதில் இணைக்க நான் தயங்கவில்லை. இதுவரை முஸ்லீம்களின் பிரச்சினைகள் மீது அனைத்து அக்கறையையும் கவனத்தையும் இந்திய அரசு செலுத்தியிருக்கிறது. தாழ்த்தப்பட்ட இனத்தவர்களுக்குப் பிரச்சினை இல்லை என்று நினைக்கப்பட்டிருக்கிறது; அல்லது விசேஷ கவனம் செலுத்தத் தேவையில்லாத அளவு மிகச் சிறியது என எண்ணப்பட்டிருக்கிறது. தாழ்த்தப்பட்ட இன மக்களின் பிரச்சினை களை எடுத்துக் கூற சிலர் விரும்பாவிட்டாலும்கூட, தாழ்த்தப் பட்டவர்களின் மேல் அக்கறையுள்ள நம்மில் சிலர், இத்தகைய பிரச்சினைகள் இருக்கின்றன என்பதை அறிவார்கள். அது முஸ்லீம் களின் பிரச்சினையைவிட அதிகக் கடுமையானது என்பதையும் அறிவார்கள்.

பாகிஸ்தானிலும் இந்தியாவிலும் உள்ள தாழ்த்தப்பட்ட இன அகதிகளின் பிரச்சினைகளை இந்திய அரசு புறக்கணிப்பதைப் பொது மக்களின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்று நான் பல தடவைகள் எண்ணியிருக்கிறேன். ஆனால் சில வெளிப்படையான காரணங்களால் நான் அவ்வாறு செய்யாமல் தவிர்த்துவிட்டேன். பிற வேலைகள் காரணமாக நீங்கள் அவற்றில் ஈடுபாடு கொண் டிருப்பதனால், இந்தப் பிரச்சினை குறித்து நீங்கள் மௌனமாக இருப் பதை நான் குறை கூறவில்லை. என்னுடைய இந்தக் கடிதத்தில் நான் முன்வைத்திருக்கிற தீர்வுகளையோ, அல்லது நான் சுட்டிக் காட்டியிருக்கிற யோசனைகளை செயல்படுத்த வேறு சிறப்பான தீர்வுகளையோ மேற்கொண்டு, தாழ்த்தப்பட்ட மக்களின் துயரங் களைக் களைய, நிவாரண மற்றும் மறுசீரமைப்பு அமைச்சருக்கும் இலாகா இல்லாத அமைச்சருக்கும் கட்டளையிட்டு உங்கள் தனிக் கவனத்தை இதில் செலுத்த வேண்டும் என நான் வற்புறுத்த வேண்டிய சரியான நேரம் வந்துவிட்டதென நினைக்கிறேன். தங்களுடைய உடனடிக் கவனத்தை இவ்விஷயத்தில் செலுத்தினால் மிகவும் நன்றி யுடையவனாக இருப்பேன்.

தங்கள் உண்மையுள்ள,
(கை-ம்) **பி.ஆர். அம்பேத்கர்.**

மாண்புமிகு பண்டிட் ஜவாஹர்லால் நேரு,
இந்தியப் பிரதம மந்திரி,
புதுடில்லி''[1]

**மேற்குறித்த கடிதத்திற்கு பண்டிட் ஜவாஹர்லால் நேரு பின்கண்டவாறு பதிலெழுதினார் :-**

''பிரதம மந்திரி,
இந்தியா.

பி.எம்.
புதுடில்லி,
25 டிசம்பர் 1947.

எனது அன்பிற்குரிய திரு. அம்பேத்கர்,

தாழ்த்தப்பட்ட இன மக்களை பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்குக் கொண்டு வருவது குறித்த தங்களது டிசம்பர் 18 ஆம் தேதிய கடிதம் கிடைக்கப் பெற்றேன்.

பாகிஸ்தானிலிருந்து தாழ்த்தப்பட்ட இன மக்களின் வெளியேற்றத்தில் நாங்கள் எங்களால் இயன்ற அளவு உதவ முயன்று கொண்டிருக்கிறோம். குறிப்பாக அவர்கள் வெளியெறுவது தடுக்கப் படுகின்ற சிந்துவிலும் கூட உதவ முயற்சிக்கிறோம். அங்குள்ள நமது தூதுவர் இந்தப் பிரச்சினை குறித்து இடைவிடாமல் தொடர்பு கொண்டிருக்கிறார்.

நீங்கள் எழுப்பியிருக்கிற பிற பிரச்சினைகள், கிழக்குப் பஞ்சாப் அரசினால் தீர்க்கப்பட வேண்டியதாகும். இந்த விஷயத்தில் நாங்கள் கண்டிப்பாக அவர்களுக்கு அறிவுறுத்துவோம். வெளியேற்றப்பட்ட தாழ்த்தப்பட்ட இன மக்களுக்கு எல்லாவித உதவிகளும் வழங்கப் பட உறுதி செய்வோம்.

கிழக்குப் பஞ்சாப் அரசு எண்ணற்ற பிரச்சினைகளை எதிர் நோக்குவதாலேயே, அவர்களோடு பல விஷயங்களில் நடைமுறைத் தொடர்பு கொள்வதில் எங்களுக்குச் சில இடையூறுகள் ஏற்படு கின்றன. எனினும், நான் எனது தனிக் கவனத்தை இந்த விஷயத்தில்

1: மறு பதிப்பு, கைர்மோடு, தொகுதி 10, பக்கம் 26-32.

செலுத்துவேன். இந்த விஷயத்தில் தனது சிறப்புக் கவனத்தைச் செலுத்துமாறு இலாகா இல்லாத அமைச்சரை நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
(கை-ம்) ஜவாஹர்லால் நேரு.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்''[1]

• • •

[1]: மறுபதிப்பு, கைர்மோடு, தொகுதி 10, பக்கம் 32-33.

# 43

# அரசு பாரபட்சமற்று நடந்து கொள்ள வேண்டும்

கிழக்குப் பஞ்சாபிலிருந்து வரும் தீண்டத்தகாதவர்களின் நிலை நாளுக்கு நாள் மிக மோசமாகிக் கொண்டிருக்கிறது. நிவாரணம் மற்றும் மறுவாழ்வுத் துறையில் தீண்டத்தகாதவர்களை அதிகாரி களாக நியமிப்பதே இந்தப் பிரச்சினைக்குத் தீர்வாகும். எனவே நிவாரணம் மற்றும் மறுவாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. கே.சி. நியோகிக்கு டாக்டர் அம்பேத்கர் கடிதம் ஒன்றை எழுதினார். அந்தக் கடிதம் வருமாறு - ஆசிரியர்கள்.

'தனிப்பட்ட முறையில்'

புது டில்லி.
23 மார்ச் 1948.

என் அன்புள்ள நியோகி அவர்களுக்கு

மேற்குப் பஞ்சாபிலிருந்து கிழக்கு பஞ்சாபிற்கு இடம்பெயர்ந்து வரும் ஷெட்யூல்டு வகுப்பு அகதிகளுக்கு மறுவாழ்வு அளிக்க உங்கள் துறையில் நியமிக்க சில சிறப்புப் பணியாளர்களின் பெயர்களை சிபாரிசு செய்யுமாறு என்னைக் கேட்டுக் கொண்டது உங்களுக்கு ஞாபகம் இருக்கும் என நினைக்கிறேன். இந்தப் பணியில் நியமிப்பதற்கு சில பெயர்கள் கொண்ட பட்டியல் ஒன்றை அளித்தேன். பட்டியலில் கொடுத்துள்ள பெயர்கள் சம்பந்தமாக என்ன செய்துள் ளீர்கள் என்பது எனக்குத் தெரியாது. நான் சிபாரிசு செய்த இரண்டு பெயர்களை நீங்கள் நியமனம் செய்துள்ளீர்கள். அவர்களைக் குறித்தே நான் எழுத விரும்புகிறேன். திரு.பி.கே. கெய்க்வாட் மற்றும் ஆர்.எஸ் ஜாதவ் ஆகியோர்களே அவர்கள். தங்களுக்கு எந்தப் பணியும் கொடுக்கப்படவில்லை என்றும், நேரத்தை வீணாகக் கழிப்ப தாகவும் அவர்கள் இருவருமே குற்றஞ்சாட்டுகிறார்கள். அவர்களை அழைத்து உங்கள் துறையில் ஹரிஜனங்கள் பிரிவின் இயக்குனராக இருக்கும் திரு.ஷேவக்ராம் கரம்சந்த் இந்நாட்டின் பொதுவான அரசியல் நிலைமைகளைக் குறித்து குறுக்குக் கேள்விகள் கேட்டுள்ள தாக அவர்கள் தெரிவித்துள்ளனர். காங்கிரஸ் கட்சியைச் சேராதவர் களை நியமிக்க இந்திய அரசு தயாராக இல்லை என்ற எண்ணமே

அவர்களுக்கு ஏற்பட்டதாக எனக்குத் தெரிவித்துள்ளனர். அதிகாரத்தில் உள்ள கட்சியைச் சேர்ந்தவர்களாகவே அவர்கள் பணியில் இருப்பார்கள் என்றும், இருக்க வேண்டுமென்றும் அரசு வலியுறுத்துவது விஷமத்தனமானது இல்லையென்றாலும், முட்டாள்தனமானது என்றே எனக்குத் தோன்றுகிறது. திரு.ஷேவக்ராம் கரம்சந்த் தெரிவித்த கருத்துக்களை நீங்கள் ஆமோதிக்கமாட்டீர்கள் என நிச்சயமாக நம்புகிறேன். எந்தப் பணிகளுக்காக இந்த இருவரும் நியமிக்கப்பட்டார்களோ அந்தப் பணிகள் அவர்களுக்கு அளிக்கப்படவில்லை என்பது எனக்குக் கவலை அளிப்பதாக உள்ளது. ஹரிஜன லீகினால் சிபாரிசு செய்யப்படும் நபர்கள் இந்த வேலைக்கு தகுதியற்றவர்கள் என்றும் ஷெட்யூல்டு வகுப்பு சம்மேளனத்தைச் சேர்ந்தவர்கள் மிகவும் தகுதியானவர்கள் என்றும் அவர்களிடம் பேசும்பொழுது திரு. கரம்சந்த் கூறியுள்ளார். அவர்களுடைய அரசியல் கருத்துகள் இந்த அதிகாரிக்கு கசந்ததால் எந்தப் பொறுப்பான வேலைக்காக அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்களோ அந்த பணிகள் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. எந்தப் பொருத்தமான வேலையையாவது அவர்களுக்குக் கொடுக்க நீங்கள் எண்ணியிருக்கிறீர்களா என்று உங்களைக் கேட்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளேன். அதைச் செய்ய நீங்கள் தயாரில்லையென்றால் அவர்களை பணியிலிருந்து உடனடியாக விடுவிப்பதே சிறந்தது. அவர்கள் தங்கள் சமூகச் சேவைப் பணிகளை செய்ய அவர்களுடைய இடத்திற்கு திரும்ப அனுப்புவதே உகந்தது. நேரடியாகவே உங்களுக்கு இவ்வாறு எழுத நேர்ந்ததற்கு வருந்துகிறேன். ஆனால் பொறுமையை ஒருவர் இழக்கும்போது இதைத் தவிர வேறு வழியில்லை.

வாழ்த்துக்களுடன்
உங்கள் உண்மையுள்ள
(ஒ-ம்) **பி.ஆர். அம்பேத்கர்**

மாண்புமிகு திரு. கே.சி. நியோகி,
நிவாரணம் மற்றும் மறுவாழ்வு துறை அமைச்சர்,
புது டில்லி.

● ● ●

1. மறுபதிப்பு, கயிர்மோடு, தொகுதி 10, பக்கம் 34 - 35.

# 44

# உங்கள் விளக்காக நீங்களே இருங்கள் !

1950 மே மாதம் மனம்கவரும் மாலையில் பம்பாய் காபி பேரேடில் பெஞ்சு ஒன்றில் இரண்டு பிரமுகர்கள் அமர்ந்திருந்தனர். அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர் இந்திய அரசியல் சட்டத்தின் சிற்பியான டாக்டர் பீமராவ் ராம்ஜி அம்பேத்கர் ஆவார். மற்றவர் பிரபல எழுத்தாளரும் 'தீண்டத்தகாதவர்' என்ற புதினத்தின் ஆசிரியருமான முல்க் ராஜ் ஆனந்த் ஆவார்.

தீண்டத்தகாதவர்களின் ரட்சகருடன் நாற்பதாண்டுகளுக்குப் பிறகு தாம் நடத்திய உரையாடலை திரு. ஆனந்த் நினைவு கூர்கிறார்.

**முல்க் ராஜ் ஆனந்த் :** டாக்டர் அம்பேத்கார் அவர்களே! வணக்கம்.

**பி.ஆர்.அம்பேத்கர்:** ஓம் மனி பத்மாயி 'தாமரைகள் மலரட்டும்' என்று இதற்குப் பொருள். இந்த புத்த சமய வாழ்த்தே எனக்குப் பிடித்திருக்கிறது.

**முல்க்ராஜ் :** ஆமாம். எவ்வளவு சிந்தனையற்றவர்களாக இருக்கிறோம். வார்த்தைகளை அதன் பொருளைப்பற்றி கேள்வி எதுவுமின்றி அப்படியே எடுத்துக் கொள்கிறோம். உங்களை வணங்கு கிறேன் என்பது நமஸ்காரத்தின் பொருளாக உள்ளது.....

**டாக்டர் அம்பேத்கர்:** அது சரணடைதலைக் குறிக்கிறது. தாமரைகள் மலரட்டும் என்பது விழிப்புணர்வுக்கான பிரார்த்தனை.

**முல்க்ராஜ் :** உண்மைதான், பழைய வழக்கங்கள் எளிதில் மறைவதில்லை. சிந்தனை செய்யாமல் அதை ஏற்றுக் கொள்கிறோம்.

**டாக்டர் அம்பேத்கர் :** எல்லா விஷயங்களிலும்தான்.

**முல்க்ராஜ் :** நினைத்துப் பாருங்கள். இந்து அல்லது முஸ்லீம் அல்லது கிருத்துவர் என்ற முத்திரையுடன் யாரும் பிறப்பதில்லை. பெயர் சூட்டு விழாவின் போது இந்து பெற்றோர்கள் தங்கள் குழந்தைக்கு பெயர் ஒன்றை சூட்டுகின்றனர். அந்தக் குழந்தைக்குத்

தெரியாத சமஸ்கிருதத்தில் புரோகிதர் மந்திரங்களைச் சொல்ல அது புனித சடங்காகிவிடுகிறது. அவனுடைய உடலில் பூணூல் அணியப் படுகிறது. பாருங்கள், அவன் ஒரு இந்துவாகிவிட்டான்.

**டாக்டர் அம்பேத்கர் :** இடியசி!

**முல்க்ராஜ் :** நீங்கள் கூறுவது சுழன்று சுழன்று சுற்றிவரும் முட்டாளைக் குறிக்கும் கிரேக்க மொழிச் சொல்தானே.

**டாக்டர் அம்பேத்கர்:** எல்லாப் பழைய பழக்க வழக்கங் களையும், கருத்துகளையும், நடைமுறைகளையும் பற்றிக் கேள்வி கேட்க வேண்டும். ஆசிரியரிடம் நாள்தோறும் ஒரு கேள்வி கேட்க மாணவர்களை நமது கல்வி முறை ஊக்கப்படுத்த வேண்டும்.

**முல்க்ராஜ் :** ஆசிரியர்கள் கற்பதற்குச் சரியான வழி இது! பாடப்புத்தகங்களில் இல்லாதிருப்பதை அனேக நேரங்களில் அவர்கள் அறிந்திருப்பதில்லை. உண்மையில், ஒருவருடைய வயதான காலத் திலும் கேள்விகள் கேட்பதன் மூலமே வளர்ச்சி அடைய முடியும். 'ஆக்கபூர்வமான கல்வி' என்ற ஹென்றி பெர்க்ஸன் நூலிலிருந்து இதை நான் தெரிந்துகொண்டேன். ஹெகல், கான்ட், டெஸ்கார்டெஸ் ஆகியவர்களைப் படித்த பிறகு பல்வேறு தத்துவார்த்தப் பிரச்சினை களைப் புரிந்துகொள்வது சிரமமாக இருந்தது. ஒவ்வொரு தத்து வார்த்த கொள்கைகளையும் ஆராய்வதன் மூலம் மனிதன் தன் உள்ளுணர்வை உயர்த்திக் கொள்ள முடியும்.

**டாக்டர் அம்பேத்கர் :** பிராமணர்களின் ஒவ்வொரு நம்பிக்கை களையும் குறித்து புத்தர் அவர்களுடன் வாதம் செய்தார். ஒரு பெரும் மக்கள் கூட்டத்தையே அவர்கள் தீண்டத்தகாதவர்கள் என நசுக்கி வைத்திருந்தார்கள். பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்று உங்களை வர்ணங்களாக ஆண்டவன் பிரித்துள் ளார் என்று அவர்கள் கூறுகின்றனர். மனிதனைப்பற்றி தனிநபரைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்? இறந்த கன்றுகாலிகளை அடக்கம் செய்யும் குடும்பத்தில் ஒருவர் பிறந்தால் அவர் தீண்டத்தகாதவர் என்று பழிக்கப் படுகின்றனர். இந்துக்களுக்கு எல்லோரும் காட்டுமிராண்டிகள்தான்.

**முல்க்ராஜ் :** ஒதுக்கித் தள்ளப்படுகின்றனர்!

**டாக்டர் அம்பேத்கர் :** உண்மைதான். கையால் பணிபுரியும் ஒவ்வொருவரும் ஒதுக்கி வைக்கப்பட்டனர். மிருகங்களின் தோல்களை

எடுத்துப் பதப்படுத்துபவர்கள், சாணம் சுமப்பவர்கள், வயலில் வேலை செய்யும் கூலித் தொழிலாளர்கள், எல்லோரும் முத்திரையிடப்பட்டு நிரந்தரமாகக் கட்டப்பட்டுள்ளனர். ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு நிலைமை மேலும் மோசமாகிவிட்டது. குளித்துவிட்டு வந்தால்கூட தீண்டத்தகாதவர்கள் கோயிலுக்குள் நுழைய முடியாது. கிராமக் கிணற்றிலிருந்து அவனால் தண்ணீர் இறைக்க முடியாது. கிராமத்திற்கு வெளியே உள்ள கலங்கிய குட்டையிலிருந்துதான் அவன் தண்ணீர் எடுக்க வேண்டும். பண்ணையாரின் நிலத்தில் அவன் தன் கன்றுகாலிகளை மேய்க்க முடியாது. அவன் அழுக்குகளை சுத்தம் செய்வதால் அவன் அழுக்கானவனாகவே கருதப்படுகிறான். ஒரு மிருகத்தைத் தொட முடியும். ஆனால் தீண்டத்தகாதவன் தீண்டப்படாதவன்தான்.

**முல்க்ராஜ் :** அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர் என்ற முறையில் தனிமதனிதனின் உரிமையை உங்களால் உறுதிப்படுத்த முடிந்ததா? உங்கள் குழு தனி மனித சுதந்திரம் போன்ற அடிப்படை உரிமைகளை அளித்திருக்கிறது. ஆனால் சொத்துரிமையையும் அடிப்படை உரிமையாக ஏற்றுக்கொண்டிருப்பதைக் காண்கிறோம். மரபுரிமையாக சொத்துக்களை பெற்றவர்களுக்கு சொத்துரிமை விசேஷமான சாதக நிலையை அளிக்கவில்லையா? எனவே மிக மிக ஏழ்மையில் வாடும் தீண்டத்தகாதவர்கள் என்றுமே பாதகமான நிலையில்தான் இருப்பார்கள்.

**டாக்டர் அம்பேத்கர் :** மதச்சார்பற்ற சோஷலிச ஜனநாயகத்தை நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின் இலட்சியமாக முன் வைத்துள்ளோம். ஒவ்வொருவருக்கும் நிலத்தை உழுவதற்கு அரசு குத்தகை உரிமை இருக்குமானால் சமத்துவச் சலுகைகளை உருவாக்குவதுடன் சுரண்டலுக்கும் அவசியமில்லாமலாகிவிடும். இதுகாறும் தீண்டத்தகாதவர்கள், சாதி இந்துக்கள், முஸ்லீம்கள்கூட குத்தகை உரிமை பெறவில்லை. நிலமற்ற இந்த உழவர்கள் எல்லாம் வெறும் உழைப்பாளர்கள் மட்டுமே.

**முல்க்ராஜ் :** அவ்வாறெனின் வேலைக்கான உரிமை அடிப்படை உரிமையாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும்.

**டாக்டர் அம்பேத்கர் :** வரைவுக் குழு உறுப்பினர்களில் நானும் ஒருவன், அவ்வளவுதான்.

**முல்க்ராஜ் :** எனவே நீங்கள் சிங்கத்தின் முன் நிற்கும் ஆட்டுக் குட்டியாகி விட்டீர்கள்.

**டாக்டர் அம்பேத்கர் :** நான் நிறையக் கனைத்தேன். இப்பொழுது நான் கர்ஜிக்கிறேன்.

**முல்க்ராஜ்:** உயர் சாதி, மேல் வகுப்பு இந்துக்களுக்காக எப்பொழுதும் தங்கள் தீர்ப்பை நீதிபதிகள் வழங்குகிறார்கள் என்பது வழக்கறிஞர் என்ற முறையில் உங்களுக்கு நன்கு தெரியும்.

**டாக்டர் அம்பேத்கர் :** பண்டிட் ஜவாஹர்லால் நேருவின் தலைமையிலான நமது அரசில் ஒரே பிராமணரல்லாதவர் சொத்துரிமை அடிப்படை உரிமையாக இருக்கக்கூடாது என்பதற்காக கடுமையாகப் போராடினார்.... ஆனால் இந்தியாவை ரஷ்யாவாக மாற்ற நேரு நினைப்பதாக பாபு ராஜேந்திர பிரசாத் கருதினார். எனவே சாதி இந்துக்கள் மனிதனின் மற்ற உரிமைகளை வழிகாட்டும் நெறிகளாக ஏற்றுக்கொண்டு அவற்றுக்காக நாடாளுமன்றத்தில் போராட வேண்டும் என்றார்.

**முல்க்ராஜ்:** அது சொத்து உடையவர்களுக்கே அதிக சாதகமாக இருக்கும்.

**டாக்டர் அம்பேத்கர் :** ஒரு நாள் சோஷலிஸ்டுகள் வெற்றி பெற முடியும். பரிகாரம் கேட்பார்கள். இருப்பினும் சாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டவர்களும், பழங்குடி மக்களும், ஷெட்யூல்டு வகுப்பினர் என அறிவிக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு முன்னேற சில சலுகைகள் வழங்கப்படும். அதாவது பள்ளிகளில், கல்லூரிகளில் இட ஒதுக்கீடு செய்யப்படுவதுடன் படிப்புக்கான உதவித் தொகைகள் வழங்கப்படும்.

**முல்க்ராஜ்:** நாமே நம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். உரிமை இழந்தவர்களைப் போராடத் தயார் செய்ய வேண்டும். சாதி வெளியர்களால் தீண்டத்தகாதவர்கள் என்று கருதப்படும் முஸ்லீம்களையும் சேர்த்துக்கொண்டால் சாதி இந்துக்களை விட தீண்டத்தகாதவர்களே அதிக எண்ணிக்கையில் உள்ளனர். பழங்குடி மக்கள் வேறு இருக்கின்றனர். சோஷலிஸ்டுகளுடன் சேர்ந்து அவர்கள் தனிநபர் சொத்துரிமையை ஒழிக்கத்தான் செய்வார்கள். நிலச்சுவான்தார்கள் கிடையாது. குத்தகைதார்கள் கிடையாது. நிலமில்லா விவசாயிகளும் கிடையாது.

**முல்க்ராஜ்:** அரசு முதலாளித்துவமும் ஆபத்தானதுதான். ரஷ்யாவில் ஸ்டாலின் செய்தது உங்களுக்குத் தெரியும். கம்யூனிசம் என்ற பெயரில் மக்கள் தலையில் அதிகாரவர்க்கத்தை திணித்தார்.

**டாக்டர் அம்பேத்கர் :** ஒரு தனிநபரின் உரிமைகள் மற்ற தனி நபரால் அழிக்கப்படக்கூடாது என்பதற்காக தனிநபரைப் பாதுகாக்க வேண்டும். தனிமனிதனின் சுதந்திரம் எப்பொழுதுமே முக்கியமான விஷயமாக இருக்க வேண்டும். அடிப்படை உரிமைகளை வலி யுறுத்தியபோது இதுதான் என் மனதில் இருந்தது.

**முல்க்ராஜ்:** அதுதான் உங்கள் மனதில் இருந்திருந்தால் அடிப்படை உரிமைகளை மறுபரிசீலனை செய்ய நீங்கள் நாடாளு மன்றத்தை வலியுறித்தியிருக்கலாம். தனியார் முதலாளித்துவம் மற்றும் அரசு முதலாளித்துவத்தையும் நாம் எதிர்க்க வேண்டும். எங்கும் பெரும்பான்மையான மக்கள் முதலாளிகளின் விருப்பத் திற்கே அடிபணிந்து கொண்டிருக்கிறார்கள்.

**டாக்டர் அம்பேத்கர் :** உண்மைதான், நிலச்சுவான்தார் குத்தகையை உயர்த்த சுதந்திரம் பெற்றிருக்கிறார். கூலியைக் குறைக் கவும் வேலைநேரத்தை அதிகரிக்கவும் எப்பொழுதும் முதலாளிகள் விரும்புகின்றனர். தனிப்பட்ட முதலாளிகளின் சர்வாதிகாரம்தான் முதலாளித்துவம்.

**முல்க்ராஜ்:** வாழ்க்கைக்கான உரிமை, சுதந்திரம் மற்றும் மகிழ்ச்சிக்கான உரிமை ஆகிய அடிப்படை உரிமைகள் கனவாகவே இருக்கின்றன.

**டாக்டர் அம்பேத்கர் :** புதிய இளைய தலைமுறை தொடர்ந்து போராட வேண்டும். அவர்கள் அரசியல் சட்டத்தை மாற்றலாம்.

**முல்க்ராஜ்:** பிரான்சில் 1789ல் நடைபெற்ற புரட்சியைப் போன்று மாற்றங்கள் வராவிடில் இவை சாத்தியமில்லை.

**டாக்டர் அம்பேத்கர் :** உங்களிடமிருந்து இதைக் கேட்பதற்கு ஆச்சரியமாக இருக்கிறது. தீண்டத்தகாதவர்களுக்கு விடுதலை பெற்றுக் கொடுப்பவராக உங்கள் நாவலில் காந்தியைச் சித்தரித் ததால் நீங்கள் அஹிம்சைக்கு மாறிவிட்டீர்களோ என்று நினைத்தேன்.

**முல்க்ராஜ்:** என்னால் மகாத்மா காந்தியின் லட்சியத்தை எட்டிப் பிடிக்க முடியாது. ஹிட்லரையும் முசோலினியையும் நாம் சந்திக்க வேண்டியிருக்கிறது. நான் ஸ்பெயின் நாட்டிற்குச் சென்று அங்கு சர்வதேச போராட்டப்படையில் சேர்ந்தேன். ஒரு மருத்துவ முகாமில் இரத்தத்தை கண்டு மயங்கிய பிறகு என்னைப் படையிலிருந்து வெளியேறச் சொன்னாலும்.......இரண்டாவது உலகப் போரில் ஏதாவது ஒரு பக்கம் சாராமல் இருக்கமுடியாது. பாசிசத்துக்கு எதிரான ஜனநாயக நாடுகளின் விடுதலைக்கான போர் என்று அழைக்கப்பட்ட அந்த யுத்தத்தை பெரிய பொய்க்கு எதிரான சிறிய பொய்யின் போராட்டம் என்று ஓர் கவிஞர் வருணித்துள்ளார்.

**டாக்டர் அம்பேத்கர் :** மகாத்மா ஹரிஜனங்களுக்காக வாழ்ந்தாலும் பகவத் கீதையின் ஆணையான வர்ணாசிராம தர்மத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பது உங்களுக்குத் தெரியும். ஒப்புயர்வற்ற கடவுள் ஹரியின் குழந்தைகள் என்று அவர்களை அழைப்பதன் மூலம் அவர்களை மேம்படுத்துவதாக அவர் கருதினார். உண்மையில் அவர்கள் தாழ்ந்த நிலையிலேயே உழன்று கொண்டிருந்தார்கள்.

**முல்க்ராஜ்:** அதனால்தான் புத்தமதத்தை உங்கள் மதமாக ஏற்றுக் கொண்டீர்களா?

**டாக்டர் அம்பேத்கர் :** அதுவே முக்கிய காரணமாக இருக்கலாம். மேலும் ஒரு ஷெட்யூல்டு வகுப்பினராக இருப்பதனால் சாதி நீக்கம் செய்யப்பட்டவனின் நிலையை ஏற்றுக்கொண்டதாகி விடுகிறது. இந்து கடவுள் பிரம்மாவில் நம்பிக்கையில்லாத புத்த மதம் ஆணவமிக்க கோட்பாடுகள், புராணக் கதைகள், கட்டுக் கதைகள் ஆகியவைகளிலிருந்து ஆணுக்கும் பெண்ணுக்கும் விடுதலை அளிக்கிறது என்பதை உணர்ந்தேன். ஒருவன் அறிவைத் தேடிச் செல்ல வேண்டும். விஷ்ணுவின் அவதாரம் ராமர் போன்ற பல உணர்ச்சிவசப்படுத்தும் இந்து கற்பனைக் கதைகளையும்கூட நிராகரிக்க வேண்டும்.

**முல்க்ராஜ்:** உண்மைதான். பிராமணர்களின் ஊகங்களைவிட புத்தரின் உள்ளுணர்வு அதிக அளவில் நம்பத்தகுந்ததாக உள்ளது. அவர்தான் இந்த உலகின் முதல் வாழ்வியல் மெய்ம்மைக் கோட்பாட்டாளர். துக்கம், துக்கம், துக்கம் என்று அவர் கண்ணீர் விட்டார். இந்துக்கள் எப்பொழுதும் பாசாங்குகளை ஆதரிப்பவர்கள். கடவுள்

அனந்தம். மலர்களை அர்ப்பணம் செய்து மாலைகளை, பழங்களை கைக்கூலியாக அளித்து நிலப்பண்ணை பிரபுவான கடவுளிடம் குருக்கள் மூலம் யாசிக்கும் பிச்சைக்காரர்களுக்கான ஆறுதல் பரிசு.

**டாக்டர் அம்பேத்கர் :** அதுதான் பெரும்பாலான புரோகிதர்கள் பெரிய வயிறுடன் காணப்படுகின்றனர்.

**முல்க்ராஜ்:** ஒதுக்கப்பட்டவர்களுக்கு உங்கள் செய்தி என்ன?

**டாக்டர் அம்பேத்கர்:** தீண்டத்தகாதவர்களுக்கு நான் கூறுவது இதுதான். சிங்கமாக இருங்கள். காளியின் உருவத்திற்கு முன் இந்துக்கள் ஆட்டை பலிகொடுக்கின்றனர். நீங்களே உங்கள் ஒளியாக இருங்கள். அட்ட தீப் பாவ்!

**முல்க்ராஜ்:** புத்தர் அனந்தரிடம் கூறியபடி 'உனக்கே நீ விளக்காக இரு'

• • •

1. டாக்டர் முல்க் ராஜ் ஆனந்த். ஒரு சிறந்த எழுத்தாளர். 'தீண்டத்தகாதவர்' என்ற நாவலின் ஆசிரியர் - பழங்குடியினர் உலகம், ஏப்ரல் 1991, பக். 13

மறுபதிப்பு: ராட்டு, டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் நினைவுகள், பக். 110 - 114.

# 45

# இந்தியாவின் சமூக சிந்தனையில் அண்மைக்கால வளர்ச்சியே இந்துமதம்

பம்பாய், புதன்கிழமை*

டில்லியிலிருந்து இன்று மாலை, நகரத்திற்கு வருகை தந்துள்ள இந்திய அரசின் சட்டத்துறை அமைச்சர் டாக்டர் பி. ஆர்.அம்பேத்கர் தாம் புத்த மதத்திற்கு மாறிட்டதாக வந்த செய்திகள் குறித்து எந்தக் கருத்தும் தெரிவிக்க மறுத்துவிட்டார்.

சித்தார்த்தா கல்லூரியைப் போன்ற கல்லூரி ஒன்றை அகமதா பாத் நகரில் நிறுவுவதைக் குறித்த தமது நோக்கத்தை பத்திரிகை யாளர்களிடம் தெரிவித்தார். கலைகள் மற்றும் அறிவியல் பாடங் களில் கல்வி அளிக்கவுள்ள அந்தக் கல்லூரி வரும் ஜுலை மாதத் திற்கு முன்பு திறக்கப்படும் என்று அவர் அறிவித்தார்.

இன்று இரவு புனாவிற்குச் சென்றுவிட்டு நாளை இரவு நகரத் திற்கு வருகிறார்.

இந்தியாவில் புத்தமதத்தின் தோற்றம் மற்றும் அதன் வீழ்ச்சி யின் காரணங்கள் குறித்து அதிக அக்கறையுள்ளவர் என்ற நிலையில் அது சம்பந்தமான விஷயங்களைச் சேகரித்து வருவதாகத் தெரி வித்தார்.

புத்தமதம் தோன்றியதற்கான சரியான காரணங்களைப் புரிந்துகொள்ளாமல் அதன் முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்ள முடியாது என்று அம்பேத்கர் கருத்துத் தெரிவித்தார். நீண்ட நெடுங்கால மாக இந்துமதமே இந்தியாவின் மதமாக இருந்துவந்திருக்கிறது என்று பெரும்பான்மையான மக்கள் கொண்டுள்ள கருத்தை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. 'இந்தியாவின் சமூகச் சிந்தனைகளில் இந்து மதம் அண்மைகால வளர்ச்சியே' என்று அவர் அறிவித்தார்.

---

★ மே 3, 1950

## வீழ்ச்சியின் காரணங்கள்

அடுத்து, புத்த மதம் வீழ்ச்சியடைந்ததின் காரணங்களைக் குறித்துக் கூறுகையில், சங்கராச்சாரியாரின் வாதத்திறமையால் புத்த மதம் அழிந்துவிட்டது என்று பலர் முன்வைக்கும் கருத்தை அவர் மறுத்தார். 'அவர் மறைவுக்குப்பிறகு பல நூற்றாண்டுகள் புத்த மதம் வழக்கத்திலிருந்தது என்ற உண்மை இந்தக் கூற்றைப் பொய்யாக்கி விடுகிறது.

வைஷ்ணவ மற்றும் சைவ சம்பிரதாயங்கள் தோன்றியதே புத்தமதத்தின் மறைவிற்கான காரணம் என்று தாம் நம்புவதாக டாக்டர் அம்பேத்கர் தெரிவித்தார். இந்தியாவின் மீது முஸ்லீம்கள் படையெடுத்தது மற்றொரு காரணமாகும். 'பீகாருக்குள் அலாவுதீன் நுழைந்தபோது 5000 பிக்குகளை கொன்று குவித்தான். எஞ்சியிருந்த புத்தத் துறவிகள் சீனா, திபேத், நேபாளம் போன்ற அண்டை நாடுகளுக்குப் போய்விட்டனர். புத்தமதத்தை மீண்டும் இந்தியாவில் நிலைநிறுத்த வேறோரு சமய குருமார் அமைப்பு ஒன்றை நிறுவ முயற்சியெடுக்கப்பட்டது. ஆனால் இதற்குள் 90 சத பௌத்தர்கள் இந்து மதத்திற்கு மாறிவிட்டதால் இது தோல்வியுற்றது.

புத்த மதம் மறைந்து இந்துமதம் தொடர்ந்து நிலைத்து நிற்பதற்குக் காரணம் என்ன என்ற கேள்விக்குப் பதிலளிக்கையில் புத்த மதத்தைப் பின்பற்றி ஒழுகுவது கஷ்டமானது. ஆனால் இந்து மதம் அப்படியல்ல'' - பி.டி.ஐ.[1]

• • •

1. ஃப்ரீ பிரஸ் ஜர்னல், மே 4, 1950.

# 46

# ஷெட்யூல்டு வகுப்பினரின் விடுதலை வரைவு அறிக்கை

''தேர்தல் அறிக்கை குறித்து தீர்மானிக்க அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் செயற்குழு 1951 அக்டோபர் 6ல் புது டில்லியிலுள்ள டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரின் இல்லத்தில் நடைபெற்றது.''[1]

காங்கிரஸ், இந்து மகாசபை, ஆர்எஸ்எஸ், கம்யூனிஸ்டுக் கட்சி மற்றும் ஜனசங்கம் ஆகியவைகளுடன் கூட்டுறவு கொள்வதில்லை என்ற தீர்மானம் அக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது. மற்ற கட்சிகளுடன் உறவு வைத்துக் கொள்வது பற்றி முடிவெடுக்கும் அதிகாரம் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், என்.சிவராஜ், பாபுசாகேப் ராஜ்போஜ் ஆகியோர் கொண்ட தற்காலிகக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. தேவைப்படும் முடிவுகளை தற்காலிகக் குழு எடுக்கும் என்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் 'சமதா சைனிக் தளம்' அமைப்பை பலப்படுத்தவும் பயனுள்ள முறையில் அதை இயக்க வைப்பது பற்றியும் வலியுறுத்தப்பட்டது.[1]

''ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தால் தயாரிக்கப்பட்ட அறிக்கை ஒருமனதாக ஏற்கப்பட்டது. அறிக்கை குறித்து பத்திரிகைகள் பல கருத்துகளை பக்கம் பக்கமாக எழுதின. 1951 அக்டோபர் 7ல் வெளியிடப்பட்ட அந்த ஈடு இணையற்ற, வெளிப்படையான, தனித்தன்மை பெற்ற அறிக்கையை வரவேற்று இந்திய மற்றும் வெளிநாட்டு இதழ்கள் எழுதின.''[2]

முன்கூட்டியே அறிக்கையின் நகல்கள் பத்திரிகையாளர்களுக்கு விநியோகிக்கப்பட்டன. 1951 அக்டோபர் 3 ஆம் தேதியிட்ட பிரபல நாளிதழான 'டைம்ஸ் ஆப் இந்தியா' தனது கருத்தை மேலே குறிப்பிட்ட தலைப்பில் எதிரொலித்தது. அது வருமாறு:

---

1. கைர்மோட், தொகுதி 10, பக்கம் 147
2. ஜனதா, அக்டோபர் 13, 1951

"....வறுமைக்கு எதிரான இருமுனைப் போராட்டத்தில் மக்கட் தொகையைக் கட்டுப்படுத்துவதற்காக குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரித்தும், விவசாயம் மற்றும் தொழில் துறைகளில் உற்பத்தியைப் பெருக்கவும் சம்மேளனம் வலியுறுத்தும் என்று தெரிகிறது. தொழில் மயமாக்கல் மிக வேகமாக நடைபெறுவது மிக்க அவசியம் என்று சம்மேளனம் கருதுகிறது. ஆனால் விவசாயத் துறையே இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படையாக தொடர்ந்து இருக்கும் என்பதே அவர்கள் கருத்து. நிர்வாக அமைப்பைப் பொறுத்த மட்டில் மொழிவழி மாகாணங்களை உருவாக்குவதையே சம்மேளனம் வலியுறுத்தும். கறுப்புச் சந்தை மற்றும் ஊழல் நடவடிக்கைகளுக்கெதிராக எல்லாத் துறைகளிலும் முக்கியமாக அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகளுக்கு எதிராகக் கடுமையான நடவடிக்கைகளை எடுக்க அது வலியுறுத்தும். ராணுவத்திற்காகும் செலவைக் குறைப்பது, உப்பு வரியைத் திரும்பவும் கொண்டுவருவது, மதுவிலக்கை எடுத்து விடுவது, காப்பீட்டைத் தேசியமயமாக்குவது ஆகியவைகளை சம்மேளனம் ஆதரிக்கும்.

வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரையில் நம் நாட்டு பிரச்சினைகளில் அதிக அக்கறை செலுத்துவதையே அறிக்கை வலியுறுத்தும் என்று தெரிகிறது. இந்தியாவின் நண்பர்களை அதன் விரோதிகளாக மாற்றும் தற்போதைய கொள்கையை மாற்ற அது வலியுறுத்தும். அமெரிக்க ஐக்கியநாடுகளுடனான இந்தியாவின் உறவு இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டுள்ளது......"[1]

**வாக்களிக்கும் முன்பு சிந்திக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படும் இந்திய ஆண்களுக்கும் பெண்களுக்கும். சுயநலத்தைவிட பொதுநலனில் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கப்படும் ஆண்களுக்கும் பெண்களுக்கும்.**

# ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் தேர்தல் அறிக்கை

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் என்பது ஷெட்யூல்டு வகுப்பினரால் உருவாக்கப்பட்ட ஷெட்யூல்டு வகுப்பினரின்

[1]ஷெட்யூல்டு வகுப்பினரின் விடுதலை. வரைவு தேர்தல் அறிக்கை என்ற தலைப்பில் 1951 அக்டோபர் 3ஆம் நாள் 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் வெளிவந்தது.

மறுபதிப்பு, கைர்மோடு , தொகுதி 10, பக்கம் 147.

அகில இந்திய அரசியல் கட்சியாகும். அதன் (1) கொள்கைகள் (2) கோட்பாடுகள் (3) திட்டங்கள் மற்றும் (4) மற்ற கட்சிகளுடனான உறவுகளுக்கான அதன் நிபந்தனைகள் ஆகியவற்றை பின்வரும் பக்கங்களில் விளக்க முயற்சிக்கப்பட்டுள்ளது.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.**

## கட்சியின் கோட்பாடுகள்

1. பொது விவகாரங்கள் குறித்த கட்சியின் அணுகுமுறை பின்வரும் 'கோட்பாடுகளின் அடிப்படையில் இருக்கும்;

(1) சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்ற கருத்தோடல்லாமல் சமத்துவத்திற்கு உரிமையானவர்கள் என்றும் அவ்வாறு இல்லாத நிகழ்வுகளில் சமத்துவத்தை வளர்க்கவும் அது மறுக்கப்படும் இடங்களில் அதை நிலை நிறுத்தவும் செய்யும்.

(2) ஒவ்வொரு இந்தியனுக்கும் அவனே எல்லை என்று அது கருதுகிறது என்பதுடன் தனது சொந்த வழியில் தனது சொந்த வளர்ச்சிக்கு முயற்சிக்க ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் உரிமை உண்டு என்பதையும் அதை அமைத்துக் கொள்வதில் அரசு ஒரு கருவி என்றும் அது கருதுகிறது.

(3) மற்ற இந்தியர்களின் மற்றும் நாட்டின் நலன்களைக் காக்க தேவைப்படும் வரையறைக்குட்பட்டு ஒவ்வொரு இந்தியனுக்கும் உள்ள அரசியல், பொருளாதார, மத சுதந்திர உரிமையை அது கட்டிக் காக்கும்.

(4) முன்பு எந்த வாய்ப்புகளும் பெறாதவர்களுக்கு வாய்ப்பு பெற்றவர்களைவிட இதில் முன்னுரிமை அளிக்கப்படும் என்ற விதிக்குட்பட்டு ஒவ்வொரு இந்தியனும் சமமான வாய்ப்புகள் பெறும் உரிமை நிலைநிறுத்தப்படும்.

(5) அச்சமற்று, வறுமையற்று ஒவ்வொரு இந்தியனையும் சுதந்திரமாக வாழவைக்க வேண்டுமென்ற அரசின் கடமையை அது எப்பொழுதும் உணர்ந்திருக்கச் செய்யும்.

(6) சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றைப் பாதுகாக்க அது வலியுறுத்தும். மனிதன் மனிதனை, ஒரு

நாடு மற்றொரு நாட்டை, ஒரு வர்க்கம் மற்றொரு வர்க்கத்தை சுரண்டுவதைத் தடுக்கவும் அடிமைத்தனத்திலிருந்து அவனை விடுவிக்கவும் அது பாடுபடும்.

(7) தனி நபர் நலன் மற்றும் பொதுநலன் இரண்டையும் கருதி நாடாளுமன்ற முறை அரசையே அது ஆதரிக்கும்.

2. இந்தக் கோட்பாடுகளின் பின்னே உள்ள நேர்மை மற்றும் விளைவுகளை மதிப்பீடு செய்யும்போது இரண்டு விஷயங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும். முதலாவது, இந்தக் கொள்கைகள் சம்மேளனத்தால் நிறைவேற்றப்பட்டிருப்பினும் இந்தியாவிலுள்ள நசுக்கப்பட்ட எல்லா மக்களின் நலனுக்காகவும் அவை உள்ளன. எனவே அந்தப் பொருளில் சம்மேளனத்தை ஒரு சாதி அமைப்பு என்று கூற முடியாது. அது எல்லோருக்கும் கதவைத் திறந்துவிடாமலிருக்கலாம். இருப்பினும் அது எல்லோருக்கும் சேவை செய்யவும், நட்புறவை ஏற்படுத்திக் கொள்ள அருகதையுள்ள ஒவ்வொருவருடனும் நட்புறவை வளர்த்துக் கொள்ளவும் பாடுபடும்.

3. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் கொள்கைகளில் புதுமை எதுவும் இல்லாமல் இருக்கலாம். பெரும்பான்மையான அரசியல் கட்சிகளின் அறிக்கையில் அவைகளைக் காண முடியும். மற்ற அரசியல் கட்சிகளின் தேர்தல் அறிக்கைகளிலிருந்து சம்மேளனத்தின் அறிக்கை இரண்டு விஷயங்களில் வேறுபட்டுள்ளது. வாக்காளர்களை ஏமாற்றுவதற்கோ அல்லது அரசியல் ரீதியாக கௌரவமாகத் தோற்றமளிப்பதற்காகவோ இந்தக் கொள்கைகளை சம்மேளனம் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது முதல் விஷயம். சம்மேளனத்துக்கு அவை இயற்கையானதே. ஷெட்யூல்டு வகுப்பினரின் சமூக நிலையிலிருந்து அவை தோன்றியுள்ளன. இந்தக் கொள்கைகளை நிலைநிறுத்தாமல், அதன்படி ஒழுகாமல் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் இருக்க முடியாது. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் கொள்கைகளே ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் வழிகாட்டும் நூலாகும். அது அரசியல் நம்பிக்கையின் வெளிப்புறச் சின்னங்களே உட்புற உணர்வுகளின் வெளிப்புறப் பதிவுகளாகும். அவை தேர்தல் வெற்றிக்காக அணியப்படும் அங்கிகளல்ல. இந்தக் கொள்கைகளைப் பல கட்சிகள் ஏற்றுக் கொண்டிருக்கலாம். ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தைப் போன்று அதற்கு உண்மையாக வேறு எந்தக் கட்சியும் இருக்க முடியாது.

சம்மேளனத்தின் கொள்கைகளை மதிப்பீடு செய்வதில் இதுதான் இரண்டாவது விஷயமாகும்.

## கட்சியின் கோட்பாடு

4. மேலே குறிப்பிட்டுள்ள கொள்கைகளை நிறைவேற்ற முயல்வதே கட்சியின் கோட்பாடாக இருக்கும். கம்யூனிசம், சோஷலிசம், காந்தீயம் அல்லது வேறு எந்த இசத்துக்கும், எந்தக் குறிப்பிட்ட சித்தாந்தத்திற்கும் கட்சியின் கோட்பாடு கட்டுப்பட்டதல்ல. மக்கள் முன்னேற்றத்திற்காக எந்தப் பொருளாதார, சமூகத் திட்டங்களையும் கட்சி ஏற்றுக்கொள்ளும். அது எங்கு தோன்றியதாக இருந்தாலும் அது அதன் கொள்கைகளுக்கு இசைந்ததாக இருக்க வேண்டும். வாழ்க்கையைப் பற்றிய அதன் கண்ணோட்டம் பகுத்தறிவுடையதாகவும், நவீனமாகவும், செயல்முறை சார்ந்ததாகவும் இருக்க வேண்டும்.

## கட்சியின் வேலைத் திட்டம்

### 1. பழைய பிரச்சினைகள்

5. ஆங்கிலேயர்கள் விட்டுசென்ற மரபுகளுடன் தொடர்புடையதாகவே எந்த இந்திய அரசியல் கட்சியின் திட்டமும் இருக்க முடியும். ஆங்கிலேயர் விட்டுச்சென்ற மரபுகளில் சாதகமான மற்றும் பாதகமான அம்சங்களும் உள்ளன. (1) ஒரே மாதிரியான சட்ட அமைப்பு (2) ஒரே சீரான நிதிநிர்வாகம் மற்றும் (3) ஒரே மாதிரியான நிர்வாக முறை ஆகிவை அதன் சாதகமான அம்சங்களாகக் கருதலாம். (1) நாட்டு மக்களிடையே வழக்கத்திலுள்ள பழைய சமூக அமைப்பு முறையைப் பாதுகாப்பது (2) கல்வித் துறை மற்றும் ராணுவ மற்றும் அரசுப் பணிகளில் சலுகை பெற்ற வர்க்கத்தையே ஆதரிப்பது (3) தீண்டத்தகாதவர்களை, பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பழங்குடி மக்களை முற்றிலும் புறக்கணிப்பது (4) நாட்டை வறுமையில் தள்ளுவது ஆகியவைகள் அதன் பாதகமான அம்சங்களாகும்.

### அ. பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் முன்னேற்றம் சம்பந்தமான பிரச்சினைகள்

6. கல்வித்துறை மற்றும் அரசுப் பணிகளில் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர், தீண்டப்படாதவர் மற்றும் பழங்குடி மக்களுக்கு அதிக வாய்ப்பு கிட்ட ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம்

போராடும். சம்மேளனத்தின் நடைமுறைத் திட்டத்தில் இதற்கு மிகுந்த முன்னுரிமை அளிக்கப்படுவதுடன் இவை அடிப்படையானதாகக் கருதப்படும். திட்டத்தின் இந்தப் பகுதியை நிறைவேற்றுவதில் காலதாமதமோ, நிதிப் பற்றாக்குறையோ தடையாக இருப்பதை அனுமதிக்க முடியாது. இந்த வகுப்பினர்கள் பெற வேண்டிய கல்வியைப் பொறுத்தவரையில் சம்மேளனத்தின் இலட்சியம் தொடக்கக் கல்வியோ, உயர்நிலைப்பள்ளி கல்வியோ மட்டுமல்ல. நிர்வாகத் துறையில் திறமையாகச் செயல்படத்தக்க, இந்த நாட்டிலும் வெளிநாட்டிலும் வழங்கப்படும் உயர்தரக் கல்வியே ஷெட்யூல்டு சம்மேளனத்தின் இலக்காக உள்ளது. அதே போன்று, நாட்டின் ராணுவ மற்றும் அரசுப் பணிகளில் தங்களது இடத்தை அடையும் வரையில் குறைந்தபட்ச தகுதியின் அடிப்படையில் இட ஒதுக்கீட்டை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் வலியுறுத்தும். நாட்டின் ராணுவ மற்றும் அரசுப் பணிகளில் மேல்தட்டு வகுப்பினரின் சாதிவெறி ஆழமாக வேரூன்றிக் கிடக்கிறது. அரசு மற்றும ராணுவப் பதவிகள் சில சாதிகளின் ஏகபோகமாக இருந்து வருகின்றன. இந்தப் பதவிகளிலிருந்து தாங்கள் ஒதுக்கித் தள்ளப்படுகிறோம் என்று தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் இந்த ஏகபோகத்தை உடைத்தெறிய முற்படும்போது சாதிவெறியர்கள் என்று அவர்கள் குற்றம் சாட்டப்படுகின்றனர். சலுகைகளற்ற இந்தப் பிரிவினர்கள் நாட்டின் செயல்பாடுகளில் தங்களுக்கு உரிய இடத்தை அடைவதில் இந்த விஷமத்தனமான வாதம் குறுக்கே நிற்பதை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் அனுமதிக்காது.

7. மேல்வகுப்பினர் மற்றும் கீழ் நிலையிலுள்ளவர்களுக்கிடையேயான இடைவெளி இந்நாட்டில் ஏற்கனவே மிக அதிகமாக உள்ளதாக ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் நம்புகிறது. இந்த இடைவெளி இவர்களுக்கிடையே அதிக அளவிலான விரோதத்தை உருவாக்கியிருக்கிறது. 1948 ஆம் ஆண்டு திரு.காந்தி இறந்தவுடன் நாட்டின் சில பகுதிகளில் கீழ்த்தட்டு வகுப்பினர் மேல் வகுப்பினர்களுக்கு எதிராக நடத்திய கொலை, கொள்ளை சம்பவங்கள் இந்த விரோதம் எவ்வளவு ஆழமாக உள்ளது என்பதைக் காட்டுகிறது. இந்த விரோத மனப்பான்மையின் காரணத்தை நீக்க, கீழ்த்தட்டு வகுப்பினருக்கு உயர் கல்வி அளிப்பதுடன், அவர்களுக்கு அரசுப் பதவிகள் அளிப்பதுதான் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வாக இருக்கமுடியும் என்று ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் உறுதியாக நம்புகிறது. பிறப்பின் அடிப்படையில் மேல்தட்டு வகுப்பினருக்கும் கீழ்தட்டு வகுப்பினருக்கும் இடையே நிலவும் செயற்கை இடைவெளிக்கு வெகு சீக்கிரத்திலேயே முடிவு கட்ட வேண்டும்.

கல்வித் துறையில் கீழ்த்தட்டு வகுப்பினரை மேல்தட்டு வகுப்பினரின் நிலைக்கு உயர்த்தாவிட்டால் அது ஒரு முடிவுக்கு வரமுடியாது.

## ஆ. வறுமைப் பிரச்சினை

8 (7) இந்தியாவின் பொருளாதார நிலை குறித்து திட்டக் குழு மிகவும் யதார்த்தமான முறையில் விளக்கம் கொடுத்துள்ளது. அது வருமாறு -

(i) 1901 ல் 235.5 மில்லியனாக இருந்த இந்திய யூனியனின் (ஜம்மு மற்றும் காஷ்மீர் நீங்கலாக) மக்கட் தொகை 1951ல் 356.9 மில்லியனாக உயர்ந்துள்ளது. அதாவது அரை நூற்றாண்டில் 52 சதவீதத்திற்கும் அதிகம். முதல் இருபது ஆண்டுகளில் வளர்ச்சி விகிதம் குறைவாக இருந்தாலும் அதற்குப் பிறகு அது அதிகரித்துள்ளது. 1921 க்கும் 1931க்கும் இடையே 11 சதமும், 1931 - 1941க்கும் இடையே 14.3 சதமும் மற்றும் 1941 - 1951க்கும் இடையே 13.4 சதமும் அது வளர்ச்சி அடைந்தது.

(ii) தொழில் வளர்ச்சி கணிசமாக இருந்துங்கூட வேலைவாய்ப்பின் நிலைமையில் மாற்றமே இல்லையெனக் கூறலாம். 1911ல் வேலையில் இருந்த மக்களில் 71 சதத்தினர் விவசாயத் துறையில் ஈடுபட்டிருந்தனர். 1948 க்கான இந்த அளவு 68.2 சதம் என்று தேசிய வருவாய் குழு அறிவித்துள்ளது. ஆண்டின் ஒரு சில மாதங்களே விவசாயப் பணி நடைபெறுகிறது. எனவே இந்தத் துறையில் ஈடுபட்டிருக்கும் பெரும்பான்மையானவர்கள் ஆண்டின் எஞ்சிய மாதங்களில் வேலையற்று இருக்கின்றனர். எனவே நாட்டில் அதிக அளவில் குறைந்த நேர வேலையே பரவலாக உள்ளது.

(iii) விதைக்கப்படும் நிலத்தின் நபர் விகித அளவு குறைந்து கொண்டே வரும் போக்கு காணப்படுகிறது. பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு நபருக்கான விதைக்கப்படும் நிலத்தின் அளவு 1911ல் 0.88 ஏக்கராக இருந்தது. 1941 -1942 ல் 0.72 ஏக்கராகக் குறைந்தது. பிரிவினைக்குப் பிறகு 1948ல் இந்திய யூனியனில் ஒரு நபருக்கான விதைக்கப்படும் நிலத்தின் அளவு 0.71 ஏக்கராக ஆகியது. ஒரு ஏக்கரில் விளையும் அளவைக் குறித்த சரியான தகவல் கிடைக்கவில்லை. வெளியிடப்பட்ட சில புள்ளிவிவரங்களிலிருந்து சில உணவுப்

பொருள்களின் விளைச்சல் குறைந்துகொண்டு வருகிறது எனத் தெரிகிறது. விவசாய உற்பத்தித்திறனின் பொதுவான போக்கை மதிப்பீடு செய்வது கடினமானதுதான். ஆனால் இதைப் பொறுத்தவரையில் ஒரு தேக்க நிலையே காணப் படுவதாக உள்ளது.

8. வறுமைப் பிரச்சினை இரண்டு பக்கங்களைக் கொண் டுள்ளது. ஒரு கண்ணோட்டத்தில் பார்த்தால் விவசாயத்திலும் தொழில் துறையிலும் அதிக உற்பத்தியே முதல் பிரச்சினையாகும். மற்றொரு கண்ணோட்டத்தில் பார்த்தால் மக்கள் தொகை அதிகரிப்பைக் கட்டுப் படுத்துவது மற்றொரு பிரச்சினையாகும். இரண்டுமே சம அளவில் முக்கியமானவை. இந்த இரண்டு அரங்குகளிலும் வறுமைக்கு எதிராகப் போராட ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தீர் மானித்துள்ளது.

9. மக்கள் தொகையைக் குறைப்பதற்காக மக்களிடையே குடும்பக் கட்டுப்பாட்டுக்கான தீவிர பிரச்சாரத்தை அது ஆதரிக்கும். நாட்டின் பல பாகங்களில் குடும்பக்கட்டுப்பாட்டு மையங்களை திறக்க அது வலியுறுத்தும். நாட்டில் மக்கள் தொகையின் அதிவேக வளர்ச்சியை அது பெருங்கேடாக கருதுவதுடன் அதைக் கட்டுப் படுத்த தீவிர நடவடிக்கைகள் எடுப்பதை ஆதரிக்க அது தயங்காது.

10. உற்பத்தியை அதிகரிப்பதற்காக எந்த வித கோட்பாட் டிற்கும் முன்மாதிரிக்கும் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாது. காலம் மற்றும் சூழ்நிலை களின் தேவைகளைப் பொறுத்தே தொழில் துறைகளின் தன்மைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன. தொழில் துறை ஒன்றை தேசியமயமாக் குவது சாத்தியம் மற்றும் அவசியம் என்றால் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தேசிய மயமாக்கலை ஆதரிக்கும். தனியார் துறையே சாத்தியம் என்றால், தேசிய மயமாக்கல் அவசியம் இல்லையென்றால் தனியார் முயற்சியையே ஆதரிக்கும். இந்த நாட்டின் கடுமையான வறுமைநிலையைக் கணக்கிலெடுத்துக் கொண்டால், உற்பத்தி மேலும் அதிக உற்பத்தி என்பதே முக்கியமான அடிப்படையான விஷயமாக இருக்கும். முன்கூட்டியே கற்பனையில் உருவான தொழில் துறையின் முன்மாதிரி முக்கியமான அல்லது அடிப்படையான விஷயமாக இருக்கமுடியாது. வறுமைக்கு விமோசனம், உற்பத்தி எம்முறையில் இருக்கிறது என்பதைவிட அதிக உற்பத்தியிலேயே இருக்கிறது. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தைப் பொறுத்தவரை

யில் எந்தவித உற்பத்தி முறையும் தொழிலாளர் வர்க்கத்தை சுரண்டாத தன்மையுடன் இருக்க வேண்டுமென்பதே அதி முக்கியமானதாகும்.

11. நாட்டில் வெகு வேகமான தொழில்வளர்ச்சி மிகவும் தேவை என்றாலும்கூட இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படையாக விவசாயமே இருக்கமுடியும் என்பதே சம்மேளனத்தின் கருத்தாக உள்ளது. இந்திய விவசாயத்தை மறுசீரமைப்பதை கணக்கிலெடுத்துக் கொள்ளாத உற்பத்திப் பெருக்குக்கான எந்தத் திட்டமும் வெற்றிபெற முடியாது.

12. விவசாயத்தில் உற்பத்தியைப் பெருக்க பின்வரும் திட்டம் மேற்கொள்ளப்பட வேண்டும்:

(i) விவசாயம் இயந்திரமயமாக்கப்பட வேண்டும். விவசாயம் பழைய பாணியிலேயே நடைபெறும் வரை இந்தியாவில் அது செழித்து வளர முடியாது.

(ii) விவசாயத்தை இயந்திரமயமாக்குவதற்கு சிறு வயல்களை பெரும் பண்ணைகளாக மாற்ற வேண்டும்.

(iii) விளைச்சலை அதிகரிப்பதற்கு நல்ல உரங்கள் போடுவதற்கு தரமான விதைகள் அளிப்பதற்கு வழிவகைகள் செய்யப்பட வேண்டும்.

13. ஒரு சராசரி விவசாயிக்கு இத்திட்டத்தைக் கடைப்பிடித்து வேலை செய்வது சாத்தியமில்லை. இத்திட்டத்திற்கான செலவை அவனால் ஏற்றுக் கொள்ள முடியாது. இத்திட்டத்தை அரசு ஏற்று நடத்த வேண்டுமென்று ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் கருதுகிறது. இத்திட்டத்தின் முதலில் கூறப்பட்ட விஷயத்திற்கு அரசே பொறுப்பேற்க வேண்டும். அரசு விவசாய இயந்திர சாதனங்களை விவசாயிகளுக்கு வாடகைக்குக் கொடுத்து நிலவரியில் அதை வசூலிக்க வேண்டும்.

14. அதிக எண்ணிக்கையில் சிறிய உடைமைகள் இருப்பதால் பெரிய அளவிலான பண்ணைகளை உருவாக்குவது மிகக் கடினமானதுதான். கூட்டுப் பண்ணை அல்லது அரசுப் பண்ணைகளை உருவாக்குவதன் மூலம் இந்தப் பிரச்சினைக்கு தீர்வு காண முடியும்.

15. இந்தியா ஒரு விவசாய நாடாக இருந்தாலும், நிலமற்ற விவசாயிகள் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். அவர்கள் நிலக்கிழார்களால் சுரண்டப்பட்டு மிகப் பரிதாபமாக வாழ்ந்து வருகிறார்கள். அவர்களில் பெரும்பான்மையானவர்கள் தீண்டத்தகாதவர்களாகவும் பிற்பட்ட வகுப்பினர்களாகவும் உள்ளனர். இந்த நிலமற்ற விவசாயிகள் ஏன் பரிதாபமாக ஏழ்மையில் வாடி வதங்க வேண்டும். அது தேவையற்றது. இந்த நிலைமைக்கு பரிகாரம் இருக்கும்போது இது வருத்தம் தரக்கூடியதாக உள்ளது. இதைப் பொறுத்தவரையில் இந்தியாவில் விவசாயத்திற்கு பயன்படுத்தத்தக்க நிலத்தின் பரப்பளவு சம்பந்தமான புள்ளிவிவரங்கள் கவனிக்கத்தக்கவை.

| | |
|---|---|
| மொத்த நிலப்பரப்பு | 811 மில்லியன் ஏக்கர்* |
| விவசாயத்தின் கீழ் உள்ள நிலப்பரப்பு | 577 மில்லியன் ஏக்கர் |
| காடுகள் | 84 மில்லியன் ஏக்கர் |
| விவசாயத்திற்கு தகுதியான தரிசுநிலம் | 93 மில்லியன் ஏக்கர். |
| விவசாயத்திற்கு தகுதியற்ற தரிசுநிலம் | 93 மில்லியன் ஏக்கர் |
| நடப்பிலுள்ள பயிரிடப்படாத நிலம் | 62 மில்லியன் ஏக்கர் |
| விவசாயத்தின் கீழ் நிகர நிலம் | 244 மில்லியன் ஏக்கர் |

இந்தப் புள்ளி விவரங்களிலிருந்து 93 மில்லியன் ஏக்கர் நிலம் விவசாயத்தறிகு தகுதியான நிலம் பாழாக இருக்கிறது. அதை விவசாயத்தின் கீழ் கொண்டுவர முடியும். நவீன அறிவியல் உதவியுடன் இந்த பாழ்நிலங்களை விவசாயத்தின் கீழ் கொண்டுவருவது நிச்சயமாக சாத்தியமே. இந்தப் பிரச்சினையை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் எடுத்துக் கொள்ளும்.

16. விவசாயிகளின் பொது நலத்திற்கு நாட்டிலுள்ள காட்டுப் பகுதிகள் நல்லமுறையில் பராமரிக்கப்பட வேண்டும். காடுகளே தேவையான அளவுக்கான மழைக்கு உத்தரவாதமாக உள்ளது. இல்லையென்றால் முன்புபோல விவசாயம் மழையை நம்பிய சூதாட்டமாக ஆகிவிடும். விவசாயத்திற்கு தகுதியற்ற பாழ்நிலங்களில் காடுகளை வளர்க்க ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் வலியுறுத்தும்.

17. பொதுவாகப் பார்த்தால் விவசாயம் ஒரு லாபகரமான தொழிலாக இருக்கமுடியாது. கிராமக் கைத்தொழில்கள் எனப்படும் துணைத்தொழில்கள் அத்துடன் இருக்கவேண்டும். போதுமான அளவு மின்சக்தி இன்றி எந்தக் குடிசைத் தொழிலும் நிலைத்து நிற்க முடியாது. இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையானது

★ மில்லியன் என்பது பத்து லட்சம்.

மின்உற்பத்தி என்பது ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் கருத்தாகும். இதற்காக நதிநீர் திட்டங்களை நிறைவேற்ற சம்மேளனம் பாடுபடும். இது நீர்ப்பாசனத்திற்கு உதவும் என்பதுடன், மின் உற்பத்தி, மற்றும் வெள்ளத் தடுப்புக்கும் உதவும்.

18. எப்படி நிலங்கள் புறக்கணிக்கப்பட்டனவோ அது போன்றே நிலமற்ற விவசாயிகளும் புறக்கணிக்கப்பட்டனர். தரிசு நிலங்கள் மற்றும் சீர்படுத்தப்பட்ட நிலங்களை விவசாயமற்ற தொழிலாளர்களுக்கு ஒதுக்கிடவும் மற்றும் குறைந்த பட்ச ஊதியத்தை அறிமுகப்படுத்தவும் சம்மேளனம் முயலும்.

## II. புதிய பிரச்சினைகள்

19. இதுகாறும் பிரிட்டிஷார் விட்டுச் சென்ற பழைய பிரச்சினைகளை எவ்வாறு கையாளுவது என்பது குறித்து அறிக்கை விளக்கியது. சுதந்திரத்திற்குப் பிறகு புதிய பிரச்சினைகள் கிளம்பியுள்ளன. அவை இரண்டு பிரிவுகளாக உள்ளன :

(அ) உள்நாட்டு நிர்வாகம் சம்பந்தமான பிரச்சினைகள்
(ஆ) வெளிநாட்டு உறவுகள் சம்பந்தமான பிரச்சினைகள்

### அ - உள்நாட்டு நிர்வாகம் சம்பந்தமான பிரச்சினைகள்

20. உள்நாட்டு நிர்வாகம் சம்பந்தமான சில பளிச்சிடும் பிரச்சினைகள்:

(i) மொழிவாரி மாகாணப் பிரச்சினை;
(ii) தூய்மையான நிர்வாகத்தை மீண்டும் நிலைநாட்டுவது;
(iii) ஊழல் மற்றும் அதிகாரக் கட்டுப்பாட்டுப் பிரச்சினைகள்;
(iv) பணவீக்கம் மற்றும் வளர்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கைச் செலவு சம்பந்தமான பிரச்சினைகள்.

21. மொழிவாரி மாகாணம் மிகவும் அவசரப் பிரச்சினையாகும். மெட்ராஸ், மத்தியப் பிரதேசம் மற்றும் பம்பாய் மாகாணங்களில் மொழிப் பிரிவினைகளுக்கிடையே நடைபெறும் தகராறுகள் ஜனநாயக நடைமுறைகளைச் செயலற்றதாக்கிவிட்டன. பல்வேறு மொழிப் பிரிவினர்களிடையே சமூக அமைதி நிலவினால் மட்டுமே நமது அரசியல் சட்டம் முற்றிலும் அரசியல் அடிப்படையில் செயல்பட

முடியும். அதற்கான ஒரே வழி மொழிவாரி மாகாணங்களை உரு வாக்குவதுதான். மொழி அடிப்படையில் மாகாணங்களைப் பிரிக்கச் சம்மேளனம் பாடுபடும்.

22. நிர்வாகத்தில் மண்டிக்கிடக்கும் ஊழல் மற்றும் லஞ்ச லாவண்யத்திற்குக் காரணம் காங்கிரசுதான் என்று ஷெட்யூல்டு வகுப் பினர் சம்மேளனம் நம்புகிறது. ஊழல் பேர்வழிகளைத் தண்டிப் பதில் காங்கிரஸ் நம்பிக்கைக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ஒரு மாநிலத்திலல்ல பல மாநிலங்களில் காங்கிரஸ் அமைச்சர்கள் மீது காங்கிரஸ்காரர்களே லஞ்ச ஊழல் புகார்களைச் சுமத்தியுள் ளனர். விசாரணை அவசியம் என்றுகூட காங்கிரஸ் மேலிடம் கருத வில்லை. இந்தக் குற்றச்சாட்டுகள்-குறித்து விசாரணை நடத்தி, குற்ற மிழைத்த அமைச்சர்களை தண்டிக்காமல், இந்தக் குற்றச்சாட்டுகளை எழுப்பியவர்களை வாயடைக்கச் செய்துவிட்டு ஊழல் மற்றும் நேர்மையற்றவர்களை பகிரங்கமாகவே ஆதரித்து வருகின்றது. மேலிடத்திலுள்ள அமைச்சர்களே ஊழல் பேர்வழிகளாக இருக்கும் போது கீழ்மட்டத்திலுள்ள அதிகாரிகள் எவ்வாறு ஊழலில் ஈடுபடாமல் இருக்க முடியும்? ஊழலில் ஈடுபடும் அமைச்சர்கள் மற்றும் அதிகாரி கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்க சம்மேளனம் வலி யுறுத்தும். காங்கிரஸ் ஆட்சியால் மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கும் நிர்வாக அமைப்பை உயர்த்திட சம்மேளனம் பாடுபடும்.

23. ஊழல் மற்றும் கறுப்புச் சந்தைக்காரர்களின் பிரச்சினை காங்கிரஸுக்கும் பெரும் வணிகர்களுக்குமிடையே உள்ள உறவு களின் விளைவுகளே எனலாம். காங்கிரஸ் ஆரம்பத்திலிருந்தே பெரும் வணிகர்களிடமிருந்து நிதி உதவி பெற்று வருகிறது. பெரும் முதலாளிகளே அதை ஆதரித்து வளர்த்து வருகின்றனர். அண்மையில் உ.பி. மாகாணத்தில் நடைபெற்ற நிகழ்வுகள் காங்கிரஸுக்கும் பெரும் முதலாளிகளுக்குமிடையேயான உறவுகள் தொடரும் என்பதைக் காட்டுகிறது. தேர்தல் நிதிக்காக அரசியல் அதிகாரத்தை பெரும் முதலாளிகளுக்கு அளிக்க காங்கிரஸ் தயாராக இருக்கிறது. தேர்தல் செலவுகளுக்கு, காங்கிரஸுக்கு நிதிஉதவி அளித்துவிட்டு அதிகாரத்தை விலைக்கு வாங்க பெரும் வணிகர்கள் தயாராக உள்ளனர். இதற்கான தீர்வு முக்காலும் வாக்காளர்கள் கைகளில் தான் உள்ளது. பெரும் முதலாளிகள் முன்மொழியும் வேட்பாளர் களை ஆதரிக்கக்கூடாது என்பதை வாக்காளர்கள் உணர்ந்தால் பிரச் சினைக்குத் தீர்வுகாண உதவிகரமாக இருக்கும். நாட்டின் அரசு பெரும் வணிகர்கள் கையில் போய்விடக்கூடாது என்பதற்காக பெரும்

முதலாளிகளிடமிருந்து வெகுதூரத்தில் இருக்கும் சம்மேளனம் பாடுபடும்.

பணவீக்கப் பிரச்சினை நிரந்தரமாகிவிட்டது என்றுதான் கூற வேண்டும். மக்களின் வாழ்வை சீரழிக்க அனுமதிக்கப்படுகிறது. அதற்குரிய கவனம் செலுத்தப்படவில்லை. அதன் உடனடித் தீர்வுக்கு நடவடிக்கைகள் எடுக்க சம்மேளனம் வலியுறுத்தும்.

## ஆ. வெளிநாட்டுக் கொள்கைப் பிரச்சினை

25. இந்தியா சுதந்திரம் பெற்ற தினத்தன்று எல்லா நாடுகளும் அதன் நண்பர்களாக இருந்தன. அதை வளமுடன் வாழ வாழ்த்தின. இன்று நிலைமை நேர்மாறாக உள்ளது. இந்தியாவுக்கு நண்பர்களே இல்லை எனலாம். எல்லா நாடுகளும் அதன் விரோதிகள் என்று கூறமுடியாவிட்டாலும் அவை அதன் நண்பர்கள் அல்ல. காங்கிரஸ் அரசின் வெளிநாட்டுக் கொள்கைகளே இந்தப் பயங்கர மாற்றத்திற்கான காரணம் எனலாம். கடந்த மூன்றாண்டுகளில் இந்தியா மீதான வெளிநாடுகளின் அணுகுமுறையில் ஏற்பட்ட மாற்றத்திற்கான காரணங்கள் காஷ்மீர் சம்பந்தமாக இந்தியாவின் கொள்கை, ஐக்கிய நாடுகளில் சீனாவைச் சேர்க்கும் பிரச்சினை, கொரிய யுத்தம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் ஆகியவைகளே எனலாம்.

26. காஷ்மீர் பிரச்சினையைப் பொறுத்தவரையில் காங்கிரஸ் அரசு பின்பற்றிவரும் கொள்கை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கு ஏற்புடையதல்ல. இந்தக் கொள்கைத் தொடருமானால் இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்குமிடையே நிரந்தர விரோத மனப்பான்மை வளர்வதுடன் போர் மூளும் அபாயமும் உள்ளது. நல்ல நட்புறவுடைய அண்டைநாடுகளாக வாழ்வதே இரண்டு நாடுகளின் நலனுக்கும் அவசியமானது என்று சம்மேளனம் கருதுகிறது. இதற்காக பாகிஸ்தான் சம்பந்தமாக எடுக்கப்படும் சரியான கொள்கை இரண்டு விஷயங்களின் அடிப்படையில் இருக்க வேண்டும். (1) இந்தியாவின் பிரிவினை ரத்து செய்யப்படும் என்ற எந்தப் பேச்சும் இருக்கக்கூடாது. பிரிவினை என்பது ஏற்கனவே முடிந்த விஷயம். அதை மறுபரிசீலனை செய்யக்கூடாது. இறையாண்மைபெற்ற இரு தனிப்பட்ட நாடுகளாக அவை தொடர வேண்டும். காஷ்மீர் பிரிக்கப்பட வேண்டும். முஸ்லீம்கள் பகுதி பாகிஸ்தானுடன் சேர்க்கப்பட வேண்டும் (பள்ளத்தாக்கில வாழும் காஷ்மீர் மக்களின் விருப்பத்தைப் பொறுத்து) முஸ்லீம்கள் வாழும் பகுதிகளல்லாத ஜம்மு மற்றும் லடாக் பகுதிகள் இந்தியாவுடன் சேர்க்கப்பட வேண்டும்.

27. இரு நாடுகளுக்குமிடையே நட்புறவை வளர்க்க இந்தக் கொள்கையே சிறந்த தேர்வாக இருக்கும்; மற்றும் அதை ஏற்றுக் கொள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் வலியுறுத்தும்.

28. நமது வெளிநாட்டுக் கொள்கைகளில் சீனா பற்றிய நம் கண்ணோட்டம் பல நாடுகளை நமது விரோதிகளாக்கிவிட்டன. ஐ.நா.வில் சீனா நிரந்தர உறுப்பினராவதற்கு இந்தியா போராட வேண்டி வந்துள்ளது. இது ஓர் அசாதாரணமான விஷயம். இந்தப் போராட்டத்தை நடத்த சீனாவுக்கு வலிமை இருக்கும்போது ஏன் இதற்காக இந்தியா போராட வேண்டும். கம்யூனிஸ்டு சீனாவுக்கு ஆதரவாக இந்தியா செயல்படுவதே இந்தியாவுக்கும், அமெரிக்கா வுக்கும் இடையே நிலவும் பகைமை உணர்ச்சிக்குக் காரணம். இதன் விளைவாக அமெரிக்காவிடமிருந்து நிதி மற்றும் தொழில்நுட்ப உதவிகளை நாம் பெற முடிவதில்லை.

29. டொமினியன் அந்தஸ்தை நாம் மறுத்துவிட்டோம். நாம் ஒரு சுதந்திர நாடாகிவிட்டோம். பிறகு நாம் காமன்வெல்த்தில் சேர சம்மதித்தோம். இருப்பினும் மற்ற நாடுகளுடனான நமது உறவுகள் சீராக இல்லை.

30. நமது வெளிநாட்டுக் கொள்கைகளில் முதலாளித்துவத் திற்கும் நாடாளுமன்ற ஜனநாயகத்திற்குமிடையேயான வேற்றுமை களைக் காட்ட முடியவில்லை. முதலாளித்துவத்தை வெறுப்பதை புரிந்துகொள்ள முடியும். ஆனால் நாடாளுமன்ற ஜனநாயகத்தை பலவீனப்படுத்தி எதேச்சிகாரம் வளர வழிவகுத்துவிடக்கூடாது. குழந்தையைக் குளிப்பாட்டிவிட்டு அழுக்குத் தண்ணீரை வெளியே கொட்டும்போது குழந்தையையும் தூர வீசிவிடக் கூடாது.

31. தன் பிரச்சினைகளில் கவனம் செலுத்துவதே இந்தியாவின் தலையாய கடமை. ஐ.நா.வில் சீனா நிரந்தர உறுப்பினராகச் சேர்க்கப் பட வேண்டும் என்பதற்குப் போராடுவதற்குப் பதிலாக தான் ஐ.நா.வின் நிரந்தர உறுப்பினராவதற்கு இந்தியா பாடுபட வேண்டும். இதைச் செய்வதற்குப் பதிலாக சியாங்கேஷேக்குக்கு எதிரான மாவோவின் போராட்டத்தில் இந்தியா தன் சக்தியை விரயம் செய்கிறது. உலக ரட்சகனாக நடந்து கொள்ளும் இந்த பைத்தியக்காரக் கொள்கை இந்தியாவிற்கு அழிவையே கொண்டு வரும். தற்கொலைக்கொப்பான இந்த வெளிநாட்டுக் கொள்கை

எவ்வளவு சீக்கிரம் மாற்றப்படுகிறதோ அவ்வளவு சீக்கிரம் இந்தியாவுக்கு நன்மை உண்டாகும். ஆசிய நாடுகளின் பிரச்சினைகளுக்கு குரல் எழுப்புவதற்கு முன்பு இந்தியா தன்னைப் பலப்படுத்திக் கொள்ள எல்லா உதவிகளையும் பெற கடுமையாகப் பாடுபட வேண்டும். அப்பொழுதுதான் அதன் குரலுக்கு மதிப்பு இருக்கும். இத்தகைய வெளிநாட்டுக் கொள்கையையே ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் கடைப்பிடிக்கும்.

## III. நிதி ஆதாரங்கள் பற்றிய பிரச்சினை

திட்டம் என்பது வெறும் சொற்களையோ அல்லது கருத்துக்களையோ மட்டும் கொண்டதல்ல. திட்டங்கள் நிறைவேற்றப்படுவதற்குத் தேவையான நிதி ஆதாரங்களை கண்டுபிடிக்க வேண்டும். தான் முன்வைக்கும் திட்டங்களுக்குத் தேவைப்படும் நிதி ஆதாரங்களைப் பெறும் வழிவகைகள் என்னவென்பதை ஒரு கட்சி காட்ட முன்வரவில்லையென்றால் அதன் திட்டங்களை யாரும் ஒரு பொருட்டாக மதிக்க மாட்டார்கள்.

34. சம்மேளனம் முன்வைத்துள்ள திட்டங்களை நிறைவேற்றத் தேவைப்படும் தொகை கணிசமானது என்றாலும் நிதிப் பிரச்சினை சமாளிக்க முடியாத ஒன்றல்ல. நாட்டின் வளர்ச்சிக்கான நிதித் தேவைகளைத் திரட்டுவதற்கு பின்வரும் வழிவகைகளை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் முன்வைக்கிறது :

(i) ராணுவத்திற்காகும் செலவைக் குறைப்பது.

(ii) உப்புவரியை மீண்டும் கொண்டு வருவது.

(iii) மதுவிலக்கை நீக்குவது மற்றும் ஆயத்தீர்வை வருவாய் இழுப்பைத் தடுப்பது.

(iv) காப்பீட்டுத் துறையை தேசியமயமாக்குவது.

35. இந்திய அரசின் மொத்த வருமானம் சுமார் 350 கோடி ரூபாய். இதில் 50 சதவீதத்திற்குமேல் ஆண்டுதோறும் 180 கோடி ரூபாய் அளவிற்கு ராணுவம் விழுங்கிவிடுகிறது. மக்கள் பட்டினியால் மடிந்துகொண்டிருக்கும் ஒரு நாட்டில் பாதுகாப்பிற்காக இந்தச் செலவு மிக அதிகமானது. ஏற்கெனவே நம் அறிக்கையில் கூறியபடி காஷ்மீர் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது, வெளிநாட்டுக் கொள்கையில் மாற்றம் செய்வது, மற்ற வெளிநாடுகளுடன் நட்புறவை வளர்த்துக் கொள்வது ஆகிய நடவடிக்கைகளை மேற்கொண்டால்

பாதுகாப்புச் செலவுகளை 50 கோடி ரூபாய் அளவுக்கு குறைப்பதால் எந்த ஆபத்தும் வந்துவிடாது.

36. உப்பு வரியை மீண்டும் ஏன் கொண்டுவரக்கூடாது என்பதற்குக் காரணம் எதுவுமில்லை. உப்பு வரி நீக்கப்பட்டது உணர்ச்சிகளுக்கான ஒரு சலுகைதான் என்று சொல்ல வேண்டும். அதனால் உப்பின் விலை குறைந்துவிடவில்லை. மாறாக அதன் விலை அதிகரித்துள்ளது. ஆண்டுதோறும் 11 கோடி ரூபாய் அளவு நிதி ஆதாரத்தை அரசு இழந்ததுதான் நடந்த ஒரே விஷயம். நாடு வளர்ச்சிப் பாதையில் முன்னேறிச் செல்வதற்கு இது தடையாக இருந்தது. ஆண்டுக்கு 30 கோடி ரூபாய் அளவுக்கு வரிவிதித்தால்கூட அது மக்களுக்கு பெரும் வரிச்சுமையாக இருக்காது.

37. மதுவிலக்குக் கொள்கையை பெரும் பைத்தியக்காரத்தனம் என்றுதான் சொல்லவேண்டும். அதை மேலும் விரிவுபடுத்துவதை நிறுத்துவதுடன், அதை உடனடியாக ரத்து செய்ய வேண்டும். எதை நிறுத்துவதற்காக அதைக் கொண்டுவந்தோமோ அதைவிட அதிகக் கேடுகள் விளைந்துள்ளன. சாராயம் காய்ச்சுவது குடிசைத் தொழிலாகி விட்டது, முன்பெல்லாம் ஆண்கள்தான் சாராயம் குடித்துவந்தனர். இப்பொழுது பெண்களும் சிறுவர்களும் சாராயம் குடிக்கிறார்கள். பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் முன்னிலையில்தான் ஒவ்வொரு வீட்டிலும் சாராயம் காய்ச்சப்படுகிறது. குற்றங்கள் பெருகியதோடு அல்லாமல், தாழ்த்தப்பட்ட மக்களின் மிகப் பெரும் ஒழுக்கக்கேட்டிற்கும் வகை செய்துள்ளது.

38. நிதி ஆதாரங்களை பாதுகாக்க வேண்டுமென்ற நோக்கில் பார்த்தால் இது பெரும் இழப்புதான். 1945 -46 ல் 'ஏ' பிரிவு மாகாணங்களில் ஆயத்தீர்வை மூலம் கிடைத்த வருவாய் 51.67 கோடி ரூபாய். 1950 - 51 ஆம் ஆண்டுகளில் இது 25.23 கோடி ரூபாயாக இருந்தது. 1951 - 52 ல் பட்ஜெட் மதிப்பீடு 24.95 கோடி ரூபாயாக உள்ளது. 1945 - 46 ஆண்டுக்கான தொகையில் பிரிவினை செய்யப்படாத பஞ்சாப் மற்றும் வங்காளத்தின் தொகையும் அடங்கியுள்ளது. இருப்பினும், மதுவிலக்கினால் 'ஏ' பிரிவு மாகாணங்களின் இழப்பு ஆண்டிற்கு 25 கோடி ரூபாயாக உள்ளது எனக் கூறலாம். மதுவிலக்கு இல்லையென்ற நிலையில் ஆயத்தீர்வை அதிகரிக்கும் வாய்ப்பு இதில் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

39. 1946 - 47 ஆம் ஆண்டுகளில் பம்பாயிலிருந்து ஆயத்தீர்வை மூலம் கிடைத்த வருமானம் 9.74 கோடியாக இருந்தது. 1950 - 51-ஆம் ஆண்டுகளில் அது 1.20 கோடியாக இருந்தது. பட்ஜெட் மதிப்பீட்டின்

படி 1951 - 52 களில் அது 1.05 கோடியாக உள்ளது. தீர்வை மூலம் கிடைக்கும் வருமானத்தின் இழப்பு ஆண்டிற்கு 8.7 கோடியாகிறது.

40. 1945-46-ஆம் ஆண்டுகளில் ஆயத்தீர்வை மூலம் மெட்ராசுக்குக் கிடைத்த வருமானம் 16.80 கோடியாக இருந்தது. 1950 - 51-ல் அது 50 கோடியாக குறைந்தது. 1951 - 52 க்கான பட்ஜெட் மதிப்பீடு .36 கோடியாகும். மதுவிலக்கை அமலாக்கியதால் ஆயத்தீர்வை வருமானத்தில் ஏற்பட்ட இழப்பு 16 கோடியாகும்.

41. 1947 - 48ல் உத்திரப் பிரதேசத்தின் ஆயத்தீர்வை வருமானம் 7.06 கோடியாக இருந்தது. 1950 - 51ல் அது 5.93 கோடியாகும். 1951 - 52 க்கான பட்ஜெட் மதிப்பீடு 5.84 கோடியாகும். இழப்பு 1.2 கோடியாகிறது.

42. மத்தியப் பிரதேசம், பஞ்சாப், மற்றும் வங்காளத்தின் ஆயத்தீர்வை வருமானமும் கொஞ்சம் குறைந்தே காணப்படுகிறது.

43. பம்பாய், சென்னை ஆயத்தீர்வு வருமானத்தில் மட்டும் ஏற்பட்ட இழப்பு 25 கோடி ரூபாயாகும். 'ஏ' மாநிலங்களிலும் ஏறத்தாழ இதே அளவு வருமான இழப்பு ஏற்பட்டுள்ளது.

44. இந்தப் புள்ளி விவரங்கள் முழுமையானவையல்ல. 'பி' பிரிவு மாகாணங்களிலிருந்து எந்தவித விவரங்களும் கொடுக்கப்படவில்லை. மதுவிலக்குக் கொள்கையை அமுல்படுத்துவதால் ஏற்படும் செலவுத் தொகையும் கொடுக்கப்படவில்லை.

45. நடுநிலைமையிலிருந்து பார்த்தால் மதுவிலக்கை அமுல்படுத்துவதில் எந்த நியாயமும் கிடையாது. மதுவிலக்கை அமுல்படுத்தும் செலவு பொதுமக்கள் தலையில் கட்டப்படுகிறது. ஒருபோதும் திருத்தமுடியாத ஒன்றோ இரண்டோ இலட்சம் குடிகாரர்களைத் திருத்துவதற்காக பொதுமக்கள் ஏன் செலவைச் சுமக்க வேண்டும்? வீட்டு வசதி, சுகாதாரம் மற்றும் கல்வி போன்று பல துறைகளுக்கு நிதி ஆதாரம் தேவைப்படும்போது ஏன் பொது மக்கள் மதுவிலக்குச் செலவுகளை ஏற்கவேண்டும்? ஏன் அதை வளர்ச்சித் திட்டங்களுக்குப் பயன்படுத்தக்கூடாது? யாருக்கு முன்னுரிமை அளிக்கவேண்டும், குடிகாரர்களுக்கா அல்லது பட்டினி கிடப்பவர்களுக்கா? இந்த நியாயமான கேள்விகளுக்கு பதில்கிடையாது; ஆணவமும் மூர்க்கத்தனமான பிடிவாதமும்தான் இதற்கெல்லாம் பதில். என்ன நேர்ந்தாலும் சரி, மதுவிலக்குக் கொள்கை திரும்பப் பெற வேண்டும். பொதுமக்கள் பணம் விரையமாவதற்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட வேண்டும். இந்த நிதி ஆதாரங்கள் பொதுநல வளர்ச்சிக்கு ப்யன்படுத்தப்பட வேண்டும்.

46. காப்பீட்டுத்துறையை தேசியமயமாக்குவதைப் பொறுத்த மட்டில் நிதி ஆதாரத்திற்கு அது மிகவும் இலாபகரமானது என்பதை பின்வரும் புள்ளி விவரங்களிலிருந்து காணமுடியும் :

| | |
|---|---|
| காப்பீட்டுச் சட்டத்தின்படி 1950ல் பதிவு செய்யப்பட்ட காப்பீட்டுக் கழகங்கள் | 339 |
| 1949ல் எடுக்கப்பட்ட ஆயுள்காப்பீட்டுப் பத்திரங்கள் | 33,03,000 |
| காப்பீடு செய்யப்பட்டத் தொகை | 7,39,49,00,000. |
| காப்பீட்டுக் கட்டணம் ஆண்டு வருமானம் | 37,18,00,000 |
| அரசு பத்திரங்களில் மொத்த முதலீடு | 8,64,16,000 |
| நிர்வாகச் செலவுகள் | காப்பீட்டுக் கட்டண வருவாயில் 29.2 சதம். |

47. இந்த விவரங்களிலிருந்து ஆண்டுதோறும் காப்பீட்டுக் கழகங்களின் கைகளில் சேரும் தொகை 37 கோடியாகும். வங்கியில் போடப்படும் பணம் போன்று அவை கேட்டவுடன் திரும்பக் கொடுக்க வேண்டிய தொகை அல்ல. அவை உடனடியாகக் கொடுக்கப் பட வேண்டிய தொகையல்ல. நீண்ட காலத்திற்கு அவற்றைத் தாராளமாக முதலீடு செய்யமுடியும். காப்பீட்டு நிறுவனங்கள் அரசு கடன் பத்திரங்களில்தான் முதலீடு செய்கிறார்கள் என்பது உண்மை தான். இறுதியில் பார்த்தால் காப்பீட்டுத் தொகைகள் அரசுக்குத்தான் போய் சேருகின்றன. காப்பீட்டுத் துறையைத் தேசியமயமாக்க வேண்டுமென்பதற்கு இது பதிலாகாது. ஏனெனில் அரசுப் பத்திரங் களில் முதலீடு செய்யப்படும் தொகை மிகக் குறைவானதே. 37 கோடிகளில் 9 கோடிதான். இரண்டாவதாக, இந்த பத்திரங்களுக்கு வட்டிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. இது வரி செலுத்துபவரின் மீது அவசியமற்ற சுமைதான். மூன்றாவதாக காப்பீட்டுக் கழகங்கள் காப்பீட்டுக் கட்டணங்களில் ஆண்டுதோறும் 29 சத வருவாயை விழுங்கி விடுகின்றன. 1949ல் இது 37 கோடியில் 11 கோடியாக இருந்தது. இது அனுமதிக்க முடியாத பண விரையந்தான். தேசிய மயமாக்குவதன் மூலம் இவை தடுக்கப்படும்.

ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் காப்பீட்டுத் துறையை தேசியமயமாக்க வலியுறுத்துவதுடன், தனியார் மற்றும் அரசு ஊழி யர்கள் யாவரும் காப்பீடு செய்துகொள்வதை கட்டாயமாக்கும்.

இந்தக் கட்டாயக் காப்பீடு தனிமனிதனுக்கு பாதுகாப்பானது என்பதுடன் அரசுக்கு வளர்ச்சித் திட்டங்களுக்கு நிதி ஆதாரமாகவும் இருக்கும்.

49. சம்மேளனம் முன்வைத்துள்ள திட்டத்தின்படி நாட்டின் வளர்ச்சிக்கு கிடைக்கும் நிதி ஆதாரங்கள் பின்வருமாறு இருக்கும்:

| | | |
|---|---|---|
| 1) | ராணுவ வரவு - செலவு திட்டத்திலிருந்து | 50 கோடி ரூபாய் |
| 2) | உப்பு வரியிலிருந்து | 30 கோடி ரூபாய் |
| 3) | ஆயத்தீர்வையிலிருந்து | 25 கோடி ரூபாய் |
| 4) | ஆயுள் காப்பீட்டுத் திட்டத்திலிருந்து | தொகை விவரம் கிடைக்கவில்லை. |
| 5) | தனியார் மற்றும் அரசு ஊழியர் கட்டாயக் காப்பீட்டுத் திட்டத்திலிருந்து | |

50. நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையான ஆதாரங்களை அளிப்பதற்கு கொடுக்கப்பட்டுள்ள நிதி ஆதாரங்களை நம்ப முடியும்.

## IV. மற்ற அரசியல் கட்சிகளுடன் ஒத்துழைப்பைக் குறித்து ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின்

51. ஒரு கழகமாக இருப்பதால் மட்டுமே எந்த அமைப்பும் கட்சி ஆகிவிடாது. சில கொள்கைகளின் அடிபடையில் இணைந்துள்ள மக்கள் குழுவையே கட்சி எனக் கூற முடியும். கொள்கைகள் இல்லாமல் ஒரு கட்சி செயல்பட முடியாது. கொள்கைகள் இல்லையெனில், உறுப்பினர்களை ஒருங்கிணைப்பதற்கு ஒன்றும் இல்லை. கொள்கைகள் இல்லாத கட்சியை யாத்திரிகர்கள் தங்கும் சத்திரம் என்றுதான் கூறவேண்டும். தன்னுடைய கொள்கைகளை முன்வைக்காத அரசியல் கட்சி, தன்னுடைய உறுப்பினர்களை அந்தக் கொள்கைகளின்படி நடக்க வேண்டும் என்று கோராத கட்சி, சம்மேளனத்தின் கொள்கைகளுக்கு எதிரான கொள்கைகளைக் கொண்ட கட்சி ஆகியவைகளுடன் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் எந்த உறவும் வைத்துக் கொள்ளாது.

52. அரசியல் இலட்சியங்கள் மட்டும் இருந்தால் போதாது. இந்த இலட்சியங்களின் வெற்றிதான் மிக அவசியம். ஒரு கட்டுக் கோப்பான இலட்சியங்களின் வெற்றியை உறுதி செய்யமுடியும். தனி நபர்களால் அது சாத்தியமில்லை. தவிர்க்க முடியாத நிலைகளிலல்லாமல், இந்தக் காரணங்களினால், எந்தக் கட்சியையும் சேராத சுயேச்சைகளை சம்மேளனம் ஆதரிக்காது.

53. இரண்டாவதாக, பிற்பட்ட வகுப்பினர்கள் மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினர் ஆகியவர்களுடன் இணைந்து செயல்பட ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் விரும்புகிறது. ஏனெனில் அவர்களும் அனேகமாக ஷெட்யூல்டு வகுப்பினரின் நிலையிலேயே உள்ளனர். ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் கடந்த இருப தாண்டு அரசியல் மற்றும் சமூகச் செயல்பாடுகளால் ஷெட்யூல்டு வகுப்பினர் அடைந்த அரசியல் விழிப்புணர்வை துரதிர்ஷ்டவசமாக இந்த வகுப்பினர்கள் பெறவில்லை. பிற்பட்ட வகுப்பினர், ஷெட் யூல்டு பழங்குடியினர், ஷெட்யூல்டு வகுப்பினர்கள் சுதந்திர இந்தியா வின் அரசியல் சட்டத்தினால் மெய்யாகவே நாட்டின் எஜமானார் களாக ஆக்கப்பட்டுள்ளனர். இதுகாறும் சிறபான்மையினரான சாதி இந்துக்களே ஆட்சியாளர்களாக இருந்து வந்தனர். பிற்பட்ட வகுப் பினர்களும், ஷெட்யூல்டு பழங்குடியினர்களும் தாங்கள் எஜமானர் களாக ஆவதற்குப் பதில் சிறுபான்மை சாதி இந்துக்களின் வலையில் விழுந்து தொடர்ந்து அடிமைகளாக இருப்பார்களா என்று ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் அஞ்சுகிறது. இந்த வகுப்பினர்கள் தங்கள் சொந்தக் கால்களில் நிற்க வேண்டுமென்பதே ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் தலையாய அக்கறையாக இருந்து வருகிறது. அவர்கள் விரும்பினால், அந்த இரு பிரிவினரையும் ஒரு பொதுவான அமைப்பில் கொண்டு வருவதற்காக தன்னுடைய பெயரை பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் சம்மேளனம் என்று மாற்றியமைத்துக் கொள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தயாராக உள்ளது. இது சாத்தியமில்லை என்றால், இத்தகைய அமைப்புகளுடன் செயல்திட்ட உறவை ஏற்படுத்திக் கொள்ள ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தயாராக உள்ளது.

54. மற்ற கட்சிகள் குறித்த ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேள னத்தின் கண்ணோட்டத்தை வரையறுப்பது எளிதான விஷயமே. இந்து மகாசபை, ஆர்எஸ்எஸ் போன்ற பிற்போக்குக் கட்சிகளுடன் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் எந்தவித உறவையும் வைத்துக் கொள்ளாது.

55. தனிப்பட்டவர்களின் சுதந்திரம் மற்றும் நாடாளுமன்ற ஜனநாயகத்தை அழித்து அதற்குப்பதிலாக ஏதேச்சாதிகாரத்தை கொண்டுவருவதை இலட்சியமாகக் கொண்டுள்ள கம்யூனிஸ்டு கட்சிகள் போன்ற கட்சிகளுடன் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் எந்த உறவையும் வைத்துக் கொள்ளாது.

56. சர்வாதிகாரத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் நம்பிக்கை கொள்ளவில்லை. எனவே எதிர்க்கட்சியின் வளர்ச்சியை அனுமதிக்காத சர்வாதிகாரக் கட்சிகளுடன் அது உறவு வைத்துக் கொள்ளாது.

57. அரசியல் கட்சிகள் காளான்கள் போல் வளர்வதை அதே போன்று அது எதிர்க்கிறது. இரு கட்சி முறையே ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளத்தின் லட்சியமாக உள்ளது. தனிநபர் சுதந்திரத்தையும், நிலையான அரசையும் இதுமட்டுமே அளிக்க முடியும். இந்நாட்டில் இரு கட்சி முறையைக் கொண்டுவர சம்மேளனம் பாடுபடும். வரப்போகும் தேர்தலுக்கான குறைந்த காலக்கெடுவில் இந்த இலட்சியத்தை நிறைவேற்ற முடியாது. தற்போதைக்கு தனிப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டிராமல் அரசியல் கொள்கையில் பொது அடிப்படையும் பொது கட்டுப்பாட்டினால் பிணைக்கப்பட்ட பல்வேறு கட்சிகளை உறுப்பினர்களாகக் கொண்டுள்ள ஓர் அகில இந்தியக் கட்சியை உருவாக்க வேண்டும். உள்கட்சி அமைப்பைப் பொறுத்தவரையில் அவை சுதந்திரமாகச் செயல்படும். பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட அடிப்படையில் ஒரு தேர்வுக் குழுவால் அனுமதிக்கப்பட்ட வேட்பாளர்களை நிறுத்தவும் ஒருவர் நிறுத்தும் வேட்பாளரை மற்றவர் ஆதரிக்க வேண்டும் என்ற பரஸ்பர கடமையுடன் செயல்பட வேண்டும். சுருக்கமாகக் கூறினால் பெடரல் கட்சியான பிரிட்டிஷ் தொழிற்கட்சி போன்று இது இருக்கும்.

58. கே.எம்.பி. கட்சி, சோஷலிஸ்டு கட்சி, ஜஸ்டிஸ் கட்சி போன்ற கட்சிகள் மற்றும் இப்படிப்பட்ட கட்சிகள் இல்லாத இடங்களில் மற்ற கட்சிகளுடனும் பின்வரும் விதிமுறைகளுக்கும் வரையறைகளுக்கும் உட்பட்டு உருவாகும் ஒரு பெடரல் கட்சியில் அங்கம் வகிக்க ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தயாராக உள்ளது.

(i) இம்மாதிரியான கூட்டணியில் சேரும் கட்சிகள் ஒவ்வொன்றும் தங்கள் கொள்கைகளைத் தெளிவாக அறிவித்திருக்க வேண்டும்.

(ii) இப்படிப்பட்ட கட்சியின் கொள்கைகள் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் கொள்கைகளுக்கு மாறுபட்டு இருக்கக்கூடாது.

(iii) ஷெட்யூல்டு வகுப்பினரின் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஆதரவளிப்பதாக கூட்டணியில் சேரும் கட்சி உறுதியளிக்க வேண்டும்.

(iv) இந்த பெடரெல் அமைப்பில், தங்கள் உள்கட்சி விவகாரங்களை சுதந்திரமாக நிர்வகிக்க, அந்தக் கட்சி ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கு அனுமதி அளிக்க வேண்டும்.

(v) இந்த பெடரல் அமைப்பு தனது அங்கமாக அ கீகரிக்காத எந்தக் கட்சியுடனும் இந்தக் கட்சி கூட்டுறவு வைத்துக் கொள்ளக்கூடாது.

59. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளன ன் ஆதரவைத் தேடும் தனிப்பட்ட நபர்கள் இந்த சம்மேளனத்தில் இணை உறுப்பினராகச் சேர்ந்து அதன் கொள்கைகள், கோட்பாடு, திட்டங்கள் மற்றும் கட்டுத் திட்டங்களை ஏற்றுக்கொள்வதாக உறுதியளித்து கையெழுத்திட வேண்டும்.

• • •

# 47

# ராஜினாமாவுக்கு உடல்நலக் குறைவு காரணமல்ல

## டாக்டர் அம்பேத்கரின் அறிக்கை, புது டில்லி அக்டோபர் 12, 1951.

தாம் ராஜினாமா செய்ததற்கு உடல்நலக் குறைவு காரணமல்ல என்று டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இன்று இங்கு கூறினார்.

கடந்த ஆகஸ்டு 10ல் பிரதம மந்திரிக்கு எழுதிய கடிதத்தில் தம்முடைய உடல்நலக் குறைவை அவர் குறிப்பிட்டிருந்தாலும், அதை தம்முடைய ராஜினாமாவுக்கு காரணமாகக் குறிப்பிடவில்லை என்று அறிக்கை ஒன்றில் அவர் கூறியுள்ளார். இந்து தொகுப்புச் சட்டத்திற்கு அதிக முன்னுரிமை அளிக்க வேண்டுமென்பதற்காகவே அதை அவர் குறிப்பிட்டிருந்தார். கடந்த செப்டம்பர் 27ல் தம்முடைய ராஜினாமாக் கடிதத்தில் உடல்நலக் குறைவை ராஜினாமாவுக்கு காரணமாக அவர் கூறவில்லை.

''என்னுடைய உடல்நிலை காரணமாக நான் ராஜிநாமா செய்தேன் என்று அந்த இரண்டு கடிதங்களின் அடிப்படையில் எவ்வாறு ஒருவர் கூறமுடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த மாதிரியான ஒரு கருத்தை உருவாக்க முயற்சிகள் நடைபெற்றதை நான் அறிவேன். இந்தத் தவறான கருத்தை யாரும் கொள்ளக்கூடாது என்பதற்காகத்தான் இந்த அவையில் அறிக்கை ஒன்றை அளிக்க விரும்புகிறேன்.''

தம் ராஜினாமா குறித்து நாடாளுமன்றத்தில் அளித்த தமது அறிக்கை பற்றி நேற்று மாலை 6 மணிக்கு மீண்டும் கேள்வி எழுப்பப் பட்டது குறித்து ஆச்சரியம் அடைந்ததாக முன்னாள் சட்டத்துறை அமைச்சர் கூறினார். அவர் அவையில் இல்லாதபோது அவையில் நடந்தவைகளைப் பற்றிய பத்திரிகை செய்திகளைப் படித்த பிறகு பிரதம மந்திரி மற்றும் துணை அவைத்தலைவர் கூறியவைகளின் விளைவாக உறுப்பினர்கள் சிறிது குழப்பம் அடைந்திருப்பதாக அவருக்குத் தெரிந்தது.

''மாலை 6 மணிக்கு இந்தப் பிரச்சினையை எழுப்பப் போவதாக பிரதம மந்திரி எனக்குத் தெரிவிக்கவில்லை' என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். அவ்வாறு செய்யப் போவதாக அவர் தமது எண்ணத்தை எனக்குத் தெரிவித்திருந்தால் அவர் கூறுவதைக் கேட்பதற்கு நிச்சயமாக அவைக்கு வந்திருப்பேன். என் விளக்கத்தையும் அளித்திருப்பேன். ஆனால் எனக்கு எந்தவித அறிவிப்பும் அளிக்கப்படவில்லை. எனவே நான் அவைக்கு வரவில்லை.

ஆகவே என்னுடைய நிலையைத் தெளிவுபடுத்துவது அவசியம் என நினைக்கிறேன். நானும் பிரதம மந்திரியும் ஒருவருக்கொருவர் எழுதிய கடிதங்களை வாசித்ததன் மூலம் என்ன ஆதாயம் பெறமுடியும் என்று அவர் நினைத்தார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னால் ஊகிக்கத்தான் முடியும். அந்தக் கடிதங்களை வாசிப்பதன் மூலம் என்னுடைய ராஜினாமாவுக்கான காரணம் உடல் நலக் குறைவே என்ற எண்ணத்தை உருவாக்க வேண்டுமென்று பிரதமர் கருதியிருந்தால், அந்த முடிவை மாற்றுவது கடினமல்ல.''

## டாக்டர் அம்பேத்கரின் கடிதங்களை வாசித்ததின் தகைமை

நாடாளுமன்றத்தில் திரு. காமத் அவர்களின் கேள்வி.

புது டில்லி, அக்டோபர் 12 : டாக்டர் அம்பேத்கரின் அனுமதியைப் பெறாமலும் அவருக்குத் தெரிவிக்காமலும் அவரும் தாமும் பரிமாறிக் கொண்ட கடிதங்களை நாடாளுமன்றத்தில் பிரதமர் வாசித்ததின் தகைமை குறித்து இன்று நாடாளுமன்றத்தில் திரு.காமத் கேள்வி எழுப்பினார்.

கைத்தட்டல்களுக்கிடையே முன்வரிசையில் டாக்டர் அம்பேத்கர் அமர்ந்தவுடன், திரு. காமத் இந்தக் கேள்வியை தொடுத்தார். அந்தக் கடிதப் போக்குவரத்து குறித்து விளக்க உரை அளிக்க டாக்டர் அம்பேத்கர் அனுமதிக்கப்படுவாரா என்று அவர் வினா எழுப்பினார். உறுப்பினர்கள் தங்களுக்காகப் பேச வேண்டும் என்று துணை அவைத்தலைவர் கூறினார். முந்தைய நாள் 6 மணிக்கு டாக்டர் அம்பேத்கர் தம் அறிக்கையை அளிக்க நேரம் ஒதுக்கியிருந்ததாக அவர் சுட்டிக் காட்டினார். அந்த நேரத்தில் டாக்டர் அம்பேத்கர் தம் இருக்கையில் காணப்படவில்லை. சம்பந்தப்பட்ட சில தாள்களை

வாசிக்க வேண்டுமென்று பிரதமர் விரும்பினார். அனுமதி அளிக்கப் பட்டது. எந்த ஓர் உறுப்பினருக்கும் அறிவிப்பு அளிக்க வேண்டிய அவசியமில்லை.

மாலை 6 மணிக்கு தாம் அறிக்கை அளிக்கப் போவதில்லை என்ற கருத்தை அவையும் தலைவரும் உணர்ந்திருப்பர் என்ற நிச்சயத்துடனே அவையைவிட்டு வெளியேறிதாக தம் நிலையை டாக்டர் அம்பேத்கர் விளக்கினார். உங்களுடைய கருத்துரைகளுக்குப் பணிந்து மாலை 6 மணிக்கு அறிக்கை அளிக்கப் போவதில்லை என்று காலையில் நான் மிகத் தெளிவாகக் கூறியதை நன்கு அறிந்தும் 'மாலை 6 மணிக்கு பிரதமர் கடிதங்களை வாசித்ததில் தாம் பாதிப்பு அடைந்ததாக அவர் கூறவில்லை.

'பிரதமர் அந்தக் கடிதங்களை வாசித்தது நியாயமா, இல்லையா என்பதை பிரதமரிடமும் உங்களிடமும் விட்டுவிடு கிறேன். ஏனெனில் தவறான எண்ணங்களைத் திருத்துவதற்கு எனக்கு வேறு வழிகள் இருக்கின்றன' என்று மேலும் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

அறிக்கைக்கான நேரம் மாலை 6 மணி என்று நான் ஒதுக்கி யிருந்தேன். தம் மனதை உறுப்பினர் எப்பொழுது வேண்டுமென் றாலும் மாற்றிக் கொண்டு அறிக்கையை அளிக்கலாம் என்று கூறி துணை அவைத் தலைவர் விஷயத்திற்கு முடிவு கட்டினார்.[1]

● ● ●

11-10-1951 'டைம்ஸ் ஆப் இந்தியா' - '11' தேதி தவறு என்று தெரிகிறது - ஆசிரியர்கள்.

மறுபதிப்பு: கைர்மோட், தொகுதி 10, பக். 119 - 121.

# 48

# சம்மேளனத்தின் கொள்கைகளுக்கு விரோதமான கொள்கைகளைக் கொண்டிராத கட்சிகளுடனான உறவுகள்

*பாட்னா, நவம்பர் 7, 1951 (பிடிஐ)*

இந்தத் தேர்தலில் போட்டியிட சோஷலிஸ்டு கட்சியுடன் மட்டுமின்றி சம்மேளனத்தின் நோக்கங்களுக்கு விரோதமில்லாத கொள்கைகளைக் கொண்டுள்ள கட்சிகளுடனும் கூட்டணி அமைக்கும் என்று இந்திய பிரஸ் டிரஸ்டுக்கு அளித்த நேர்காணலில் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

இன்று சுமார் ஒரு மணி நேரம் சோஷலிஸ்டு தலைவர் ஜெயபிரகாஷ் நாராயணனுடன் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசினார். பேச்சுக்கள் தேர்தல் கூட்டணி பற்றியதாக இருந்தது என்று நம்பப்படுகிறது.

'நான் கம்யூனிசத்தில் நம்பிக்கைக் கொண்டிருக்கவில்லை என்ற ஒளிவுமறைவற்ற காரணத்தினால் என கட்சி எக்காரணத்தைக் கொண்டும் கம்யூனிஸ்டு கட்சியுடன் கூட்டணி அமைக்காது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

தனிப்பட்ட முறையில் அவர் கம்யூனிசத்தை எதிர்ப்பதால், தமது கட்சியை கம்யூனிஸ்டு கட்சியுடன் உறவு கொள்வதை தடுப்பாரா என்று கேட்டதற்கு அவர் கூறியதாவது : 'என் கட்சிக்கு நான் அடிமையாக இருக்கப்போவதில்லை. கட்சியும் நானும் ஒத்துப்போகும் வரை இணைந்து செயல்படுவோம். இல்லையெனின் அவரவர் வழியில் செல்வோம். அரசியலை நம்பி நான் பிழைக்கவில்லை. அரசியலை நம்பி வாழ்வது என் குறிக்கோளுமல்ல.''

கம்யூனிஸ்டுகளைப் பொறுத்தவரையில் தமக்கும் தம்முடைய கட்சிக்கும் எந்தக் கருத்து வேறுபாடும் இல்லை என்று அவர் மேலும் கூறினார்.

---

*கிராணிக்கில், 8, நவம்பர் 1951.*

## அதிகக் காலம் வேண்டும்

தேர்தலை அவசர கோலத்தில் நடத்துவதை தாம் எப்போதும் எதிர்த்து வந்திருப்பதாக டாக்டர் அம்பேத்கர் கூறினார். மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் நிறைவேற்றப்படுவதிலிருந்து தேர்தல் நடக்கும் வரை ஓராண்டுக் காலம் இடைவெளி இருந்தால்தான் மக்கள் தங்களைத் தேர்தலுக்கு தயார்படுத்திக் கொள்ள முடியும் என்பதே அவர் கருத்தாகும்.

காங்கிரசை எதிர்க்கக்கூடிய ஒரு கட்சியை, ஒரு தனிப்பட்ட அல்லது பெடரெல் அடிப்படையிலான ஒரு கட்சியை போதிய அவகாசம் கிடைத்திருந்தால் உருவாக்கியிருக்கலாம் என்று அவர் கூறினார். சம்மேளனத்திற்கு விரோதமில்லாத கொள்கைகளைக் கொண்டுள்ள கட்சிகளுடன் கூட்டணி வைத்துக் கொள்ள மாகாணக் கிளைகளுக்கு சுதந்திரம் உள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

● ● ●

# 49

# தம்முடைய சொந்த வழக்கு விசாரணையில் ஒருவர் நீதிபதியாக இருக்கக்கூடாது

புது டில்லி, டிசம்பர் 10, 1951

இந்தியாவின் முன்னாள் சட்ட அமைச்சரும், அரசியல் சாசனத்தின் சிற்பியுமான டாக்டர் அம்பேத்கர் உச்ச நீதி மன்றத்தில் ஒரு வழக்கறிஞராக ஆஜரானார். சில ஜமீந்தார்களின் வழக்கு களுக்காக விரைவில் அவர் வாதிட உள்ளார்.

தன் வாதங்களை முன்வைத்து நாள் முழுவதும் வாதாடிக் கொண்டிருந்த திரு. பி.ஆர்.தாஸ் ஒரு கட்டத்தில் நீதிமன்றத்திற்கு டாக்டர் அம்பேத்கர் வருகை தந்திருப்பதைக் குறிப்பிட்டார். வரைவு அரசியல் சட்டத்தில் இருந்த ஒரு குறிப்பிட்ட சொற்றொடரை டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டதற்கிணங்க நீக்கப்பட்டது என்று நீதிமன்றத்தில் கூறினார்.

'டாக்டர் அம்பேத்கர் இங்குதான் உள்ளார். நீதிபதி அவர்களே அந்த வார்த்தைகளை அவர் ஏன் நீக்கச் சொன்னார் என்பதை அவரை அழைத்துக் கேட்க வேண்டும்' என்று திரு.தாஸ் கூறினார். (பலத்த சிரிப்பு) - 'யுபிஐ'''

புது டில்லி, மார்ச் 6*

ஜமீந்தார்களுக்கு அளிக்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகையை அரசே தீர்மானம் செய்யக்கூடாது என்று உத்தரப் பிரதேச ஜமீந்தார்கள் சிலர் சார்பாக உச்சநீதிமன்றத்தில் வாதாடுகையில் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

சட்ட ஆய்வுத் துறையின்படி எந்த மனிதரும் தம்முடைய வழக்கில் நீதிபதியாக இருக்கமுடியாது என்ற அமெரிக்க கோட் பாட்டின் அடிப்படையில் டாக்டர் அம்பேத்கர் அதை எடுத்துரைத்தார்.

சில ஜமீந்தார் மனுதாரர்கள் சார்பாக 'உத்தரப் பிரதேச ஜமீந் தார்கள் மற்றும் எஸ்டேட் ஒழிப்புச் சட்டத்தை' எதிர்த்து டாக்டர் அம்பேத்கர் வாதாடினார்.

---

1. ஃபிரீ பிரஸ் ஜர்னல், டிசம்பர் 11, 1951.

நஷ்டஈட்டை அரசு தீர்மானம் செய்தால் அதற்குப் பரிகாரம் என்ன என்று தலைமை நீதிபதி கேட்டதற்கு அரசு தீர்மானம் செய்த நஷ்டஈடு தன்னிச்சையானது என்று நீதிமன்றம் அறிவிக்க வேண்டும்.

நஷ்டஈடு அளிக்கப்பட வேண்டிய பிரச்சினையை ஒரு சுதந்திர அமைப்புக்கு விட வேண்டுமே தவிர தனியார் சொத்துக்களை எடுத்துக் கொள்ள விழையும் அரசிற்கு அளிக்கக்கூடாது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

உத்தரப் பிரதேசம் நிர்ணயித்துள்ள நஷ்டஈடு வெறும் ஏமாற்று வித்தை. அந்தத் தொகையிலிருந்து கடன் முழுவதும் செலுத்தப் பட்ட பிறகு அவர்களுக்கு எதுவும் மிஞ்சப் போவதில்லை என்று மேலும் அவர் கூறினார். - பி.டி.ஐ.

• • •

1. 11 டிசம்பர் 1951 தேதியிட்ட பிரி பிரஸ் ஜர்னல்
2. 5 மார்ச் 1951 தேதியிட்ட பிரி பிரஸ் ஜர்னல்.
★ ஒரு தேதி சரியில்லை என்று தோன்றுகிறது. - ஆசிரியர்கள்

# 50

# தேர்தல் வழக்கு மனு

*1952ல் இந்தியாவில் முதல் பொதுத்தேர்தல் அறிவிக்கப் பட்டது. ஒரே மாதிரியான நோக்கங்களைக் கொண்டுள்ள கட்சிகளுடன் கூட்டணிசேர டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் விரும்பினார். மகாராஷ்டிராவில் ''விவசாயிகள் மற்றும் தொழிலாளர் கட்சியுடனும்'', சோஷலிஸ்டுகளுடனும் தேர்தல் உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள பேச்சு வார்த்தைகள் நடத்தினார். திரு.ஜெயப்பிரகாஷ் நாராயணன் மற்றும் திரு. அசோக் மேத்தா ஆகியோர் திரு ஆச்சார்ய தோண்டே மூலம் அவருடன் தொடர்பு கொண்டனர். ஆச்சார்ய தோண்டே அவரை டெல்லியில் சந்தித்தார்.*

*ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் மற்றும் சோஷலிஸ்டு கட்சிக்குமிடையே தேர்தல் கூட்டணி ஏற்பட்டது. மக்கள் அவைக்கு வடபம்பாய் ஒதுக்கப்பட்ட தொகுதியிலிருந்து வேட்பாளராக டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் வேட்பு மனு தாக்கல் செய்தார். தேர்தல் 1952 ஜனவரி 3ல் நடைபெற்றது - ஆசிரியர்கள்.*

*பம்பாய் முடிவுகள் அதிர்ச்சியளிக்கின்றன*

***விசாரணைக்கு வலியுறுத்தல்***

*புது டில்லி, ஜனவரி 5, 1952*

*பம்பாய் நகரின், இதுவரை அறிவிக்கப்பட்ட தேர்தல் முடிவுகள் அந்நகர மக்களை பெரும் ஆச்சரியத்திலும், அதிர்ச்சியிலும் மூழ்கடித்துள்ளன என்று வட பம்பாய் ஒதுக்கப்பட்ட தொகுதியில் வேட்பாளராகப் போட்டியிட்ட இந்திய அரசின் முன்னாள் சட்டத் துறை அமைச்சர் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.*

*இன்றைக்கு வெளியிட்ட அறிக்கை ஒன்றில் காங்கிரசின் நிலைமை மிகவும் மோசமாகவே உள்ளதாகக் கூறினார். சோஷலிஸ்டுகள் மற்றும் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்திற்கு ஆதரவாகவே வாக்குப் பதிவு உள்ளதாக அவர் எடுத்துரைத்தார். பம்பாய் மக்களின் பெருத்த ஆதரவு எவ்வாறு பொய்த்துப் போக முடியும். உண்மையிலேயே தேர்தல் கமிஷனர் விசாரிக்க வேண்டிய விஷயம் இது என்று அவர் கூறினார்.'' - பி.டி.ஐ.''[1]*

---

*6 ஜனவரி 1952 தேதியிட்ட டைம்ஸ் ஆப் இந்தியா*

## அம்பேத்கர், மேத்தா வழக்கு மனுத் தாக்கல்

புது டில்லி . ஏப்ரல் 24, 1952

மக்கள் அவைக்கான வட பம்பாய் தேர்தல் முடிவு செல்லாது என்றும் அது சட்டவிரோதமானது என்று அறிவிக்க வேண்டு மென்றும் தலைமைத் தேர்தல் கமிஷனர் முன்பு முன்னாள் யூனியன் சட்டத்துறை அமைச்சர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரும் சோஷலிஸ்டுத் தலைவர் திரு. அசோக் மேத்தாவும் கூட்டாக மனு அளித்துள்ளனர்.

திரு.எஸ்.ஏ.டாங்கே உட்பட எட்டு வேட்பாளர்கள் நின்ற இந்த இரட்டை உறுப்பினர் தொகுதி பெரிய போட்டிக்களமாக காட்சி அளித்தது.

காங்கிரஸ் உறுப்பினர்களான திரு.வி.பி.காந்தி மற்றும் திரு. என்.எஸ்.கஜ்ரோல்கர் (ஷெட்யூல்டு வகுப்பினர்) போட்டியில் வெற்றி பெற்றனர்.

இந்தத் தேர்தலை செல்லாததாக அறிவிக்க வேண்டுமென் பதற்கான பல்வேறு காரணங்களைப் பட்டியலிட்டு தேர்தல் வழக்கு மனுதாக்கல் செய்யப்பட்டுள்ளது. - பிடிஐ.''

**''21 ஏப்ரல் 1952ல் தம்முடைய தேர்தல் வழக்கு மனுவை தேர்தல் ஆணையத்திடம் டாக்டர் அம்பேத்கர் அளித்தார்.**

**1951 ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் சம்பந்தமாக** 1952 ஜனவரி 3ல் மக்கள் அவைக்கு நடைபெற்ற வட பம்பாய் நகர தேர்தலை செல்லத்தகாததாக அறிவிக்க வேண்டுமென்ற 81 ஆவது பிரிவின்படியான தேர்தல் வழக்கு மனு.

தேர்தல் ஆணையம் முன்பு

புது டில்லி

| | |
|---|---|
| (1) பம்பாய் கோட்டைக்கு வெளியில், தாதர் இந்து காலனியில், ராஜ்கிரகாவில் வசிக்கும் பம்பாய்வாசியான 60 வயதாகும் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர். | மனுதாரர்கள் |

(2) பம்பாய் கோட்டைக்கு வெளியில், பாபுல் நாத் கோவிலுக்கு அருகில் தாதிஷ்த தெரு 3 ஆம் எண் வீட்டில் வசித்துவரும் பம்பாய்வாசியான 39 வயதாகும் அசோக் ரஞ்சித்ராம் மேத்தா. — மனுதாரர்கள்

(1) பம்பாய் கோட்டைக்கு வெளியே, தாதர் கோகிநூர் ரோடு 3 முனிசிபல் ஹவுஸ், ஷா நிவாஸ் என்ற முகவரியில் வசித்து வரும் பம்பாய் வாசியான 52 வயதாகும் ஷிரிபத் அமிர்த் டாங்கே.

(2) பம்பாய் கோட்டைக்கு வெளியே, 39 பெட்லர் ரோடு என்ற முகவரியில் வசித்துவரும் பம்பாய் வாசியான 56 வயதாகும் கோபால் விநாயக் தேஷ்முக்.

(3) பம்பாய் கோட்டைக்குள், கட்டாவ் பில்டிங் 23 திவாரகதாஸ் என்ற முகவரியில் வசித்து வரும் பம்பாய்வாசியான 55 வயதாகும் வித்தல் பாலகிருஷ்ண காந்தி.

(4) பம்பாய் கோட்டைக்கு வெளியே பி 165, சிவாஜி பூங்கா, 6 எண். ரோடு, மாகிம் என்ற முகவரியில் வசித்துவரும் பம்பாய் வாசியான கேஷவ் பாலகிருஷ்ண ஜோஷி.

(5) பம்பாய் கோட்டைக்கு வெளியே, 187 சுபாரி பாக் ரோடு, பரேல் என்ற முகவரியில் வசித்துவரும் பம்பாய் வாசியான 49 வயதாகும் நாராயன் சடோபா கஜ்ரோல்கர்.

(6) பம்பாய் கோட்டைக்கு வெளியே, 157 பிரின்சஸ் தெருவில் வசித்துவரும் பம்பாய்வாசியான 57 வயதாகும் நீல்கனாத் பாபுராவ் பரலேகர்.

(7) பம்பாய் கோட்டைக்கு வெளியே, 386 சான்டர்ஸ்ட் சாலை தோபிவாலா மேன்ஷனில் வசித்துவரும் 62 வயதாகும் பம்பாய்வாசியான தத்தாத்ரேய் ராமசந்திர கார்புரே. — பிரதிவாதிகள்

(8) பம்பாய் கோட்டைக்கு வெளியே 185 சுபாரிபாக் ரோடு, பரேல் என்ற முகவரியில் வசித்துவரும் பம்பாய்வாசியான 42 வயதாகும் ராம்சந்திரா சடோபா கஜ்ரோல்கர்.

(9) பம்பாய் கோட்டைக்கு வெளியே, அப்துல் காதர் சேம்பர்ஸ், முனிசிபல் வீடு எண் பி.எல்.180, செயின்ட் சேவியர்ஸ் தெரு, போஜ்வாடா போலிஸ்ஸ்டேஷன் பகுதியில் வசித்துவரும் பம்பாய்வாசியான 49 வயதாகும் சாந்தாராம் சவால்ராம் மிராஜ்கர்.

பிரதிவாதிகள்

தேர்தல் வழக்கு மனு

பெறுநர்
தேர்தல் ஆணையம்
புது டில்லி.

## மேலே குறிப்பிட்ட மனுதாரர்கள் தாழ்மையுடன் சமர்ப்பிக்கும் மனு

1. 1952 ஜனவரி 3ல் நடைபெற்ற மக்களவைக்கான தேர்தலில் வடபம்பாய் தொகுதியில் மனுதாரர்கள் வேட்பாளர்களாகப் போட்டியிட்டவர்கள்.

2. வாக்காளர் பட்டியலில் மனுதாரர்களின் பெயர்கள் உரிய முறையில் சேர்க்கப்பட்டிருந்ததால் மக்களவைக்கு அந்தத் தொகுதியில் போட்டியிடத் தகுதி பெற்றவர்களாகின்றனர்.

3. வட பம்பாய் தொகுதியில் தங்கள் வேட்பு மனுக்களை உரிய முறையில் மனுதாரர்கள் சமர்ப்பித்தனர். 27 நவம்ர் 1951ல் மனுதாரர்களின் வேட்புமனுக்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. மனுதாரர்களைப் போன்று 1 லிருந்து 9 வரை குறிப்பிட்டுள்ள பிரதிவாதிகளும் அதே தொகுதியில் மக்களவைத் தேர்வுக்கான வேட்பாளர்களாவார்கள். வேட்பு மனுக்களைத் திரும்பப் பெறவேண்டிய காலக்கெடுவுக்குள் 7, 8, 9 எண்களில் குறிப்பிட்டுள்ள பிரதிவாதிகள் தங்கள் வேட்பு மனுக்களை வாபஸ் பெற்றுக் கொண்டனர்.

4. அந்த வட பம்பாய் தொகுதி ஒன்றிற்குமேற்பட்ட உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றிருந்தது. அந்தத் தொகுதிக்கு தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய இரண்டு உறுப்பினர்களில் ஒருவர் பொது உறுப்பினர் என்ற முறையிலும் மற்றவர் ஷெட்யூல்டு வகுப்பினருக்கான உறுப்பினர் என்ற முறையிலும் தேர்ந்தெடுக்கப்படுவர். இரண்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளதால், பிரிவு 63 (1) வரையறைகளுக்குட்பட்டு அந்தத் தொகுதி வாக்காளர் ஒவ்வொருவருக்கும் இரண்டு வாக்குகள் உண்டு. 1951 ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் பிரிவு 63 (1)ன் படி (1951 ஆண்டு சட்டம் XLIII) எந்த ஒரு வாக்காளரும் ஒரு வேட்பாளருக்கு ஒரு வாக்கிற்கு மேல் அளிக்கக்கூடாது.

5. 1952 ஜனவரி 3ல் வட பம்பாய் தொகுதியின் ஓட்டுச்சாவடிகளில் தேர்தல் நடைபெற்றது.

6. பல்வேறு வேட்பாளர்களும் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கை 1952 ஜனவரி 7ல் துவங்கி 1952 ஜனவரி 11ல் முடிவடைந்தது.

7. அந்த நாடாளுமன்றத் தொகுதி தேர்தல் முடிவுகள் தேர்தல் அதிகாரியால் ஜனவரி 11ல் பின்வருமாறு அறிவிக்கப்பட்டது :

(i) 1 மற்றும் 2 மனுதாரர்கள் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கை முறையே 1,23,576 ; 1,39,741 ஆகும்.

(ii) 1,2,3,4,5,6 பிரதிவாதிகள் பெற்ற வாக்குகள் முறையே 96,755 ; 40,786 ; 1,49,138 ; 15,195 ; 1,38,137 ; 12,560 ஆகும்.

(iii) ரிசர்வ் தெகுதியில் பிரதிவாதி 5 மற்றும் பொதுத் தொகுதியில் பிரதிவாதி 3 அத்தொகுதிகளில் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

(iv) அந்தத் தொகுதியில் பதிவான செல்லுபடியான மொத்த வாக்குகள் 7,15,888 என்றும் செல்லுபடியாகாத மொத்த வாக்குகள் 74,333 என்றும் தேர்தல் அதிகாரி மேலும் அறிவித்தார்.

8. தேர்தல் அதிகாரி அறிவித்த தேர்தல் முடிவை மனுதாரர்கள் நம்புகின்றனர். அதன் நகல் ஒன்றை (A) என்று குறியிட்டு இத்துடன் இணைத்துள்ளனர்.

9. 1952 ஜனவரி 26 ஆம் தேதி இந்திய அரசிதழில் (விசேஷ) பாகம் 1 பிரிவு 1 பக்கம் 130ல் அத்தேர்தலின் முடிவு வெளியிடப்பட்டுள்ளது.

*1951 மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் (தேர்தல் நடத்துதல் மற்றும் தேர்தல் வழக்குகள்) 112 ஆம் விதிப்படி தேர்தல் செலவுகள் சம்பந்த மான விவர அறிக்கை 1ஆம் எண் மனுதார் 1952 மார்ச் 10 லும் 2ஆம் எண் மனுதார் 1952 மார்ச் 7லும் தேர்தல் அதிகாரியிடம் அளித்தனர்.*

*10. வாக்குகளை எண்ணும்போது தேர்தலில் போட்டியிட்ட பல வேட்பாளர்கள் பல இரட்டை வாக்குகளைப் பெற்றிருந்தனர் என்றும் அவற்றைச் செல்லத்தகாதவை என்று தீர்மானிக்க வேண்டி யிருந்ததாகவும் தேர்தல் அதிகாரி அறிவித்தார் என்று மனுதாரர்கள் கூறுகின்றனர். ஆய்வு செய்ததில் மனுதாரர்கள் 1 மற்றும் 2, பிரதி வாதிகள் 1,2,3,4,5,6 ஆகியவர்களின் வாக்குப் பெட்டிகளில் காணப் பட்ட இரட்டை வாக்கு என்ற அடிப்படையில் செல்லாது என அறி விக்கப்பட்ட வாக்குகளின் எண்ணிக்கை வருமாறு:*

| | |
|---|---|
| *மனுதார் எண் 1* | *2921* |
| *மனுதார் எண் 2* | *5,597* |
| *பிரதிவாதி எண் 1* | *39,165* |
| *பிரதிவாதி எண் 2* | *6634* |
| *பிரதிவாதி எண் 3* | *10,881* |
| *பிரதிவாதி எண் 4* | *1,168* |
| *பிரதிவாதி எண் 5* | *6,892* |
| *பிரதிவாதி எண் 6* | *1,025* |
| **மொத்தம்** | ***74,333*** |

*ஆவணங்கள் இந்தப் பட்டியலுக்குச் சான்றாக உள்ளன என்று மனுதாரர்கள் நம்புகின்றனர்.*

*மேற்குறிப்பிட்ட காரணங்களுக்காக செல்லத்தகாதவை என்று தேர்தல் அதிகாரியால் அறிவிக்கப்பட்டதால் எண்ணப்படாது நிராகரிக்கப்பட்ட வாக்குச் சீட்டுகள் மொத்தத்தில் 74,333 என்று மனுதாரர்கள் தாழ்மையுடன் தெரிவிக்கின்றனர்.*

*11. மேற்குறிப்பிட்ட தொகுதியிலுள்ள பல வாக்குச்சாவடி களில் இரட்டை வாக்குச் சீட்டுகள் வழங்கப்பட்ட வாக்காளர்களுக்கு அந்தச் சட்டத்தின் 63 (1) ஆவது பிரிவின்படி அவை வினியோ கிக்கப்படவில்லை. அந்த சட்டத்தின் 63 (V) ஆவது பிரிவைச் சரியாகப்*

பின்பற்றத் தவறியதால் அந்த வாக்குச் சீட்டுகள் செல்லுபடியாகா தவை என அறிவிக்கப்பட நேர்ந்துள்ளது என்பதுடன் அந்தத் தொகுதி யில் நடந்த தேர்தலில் அவை பயனற்றதாகிவிட்டன என மனுதாரர் கள் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

12. மேலே குறிப்பிட்டபடி அதிக எண்ணிக்கையில் இரட்டை வாக்குகள் செல்லாமல்போனது, 1951 ஆம் ஆண்டு மக்கள் பிரதி நிதித்துவச் சட்டத்தின் 123(2) பிரிவிற்குட்பட்ட ஊழல் நடவடிக்கை களில் 1 மற்றும் 2 எண் பிரதிவாதிகள் ஈடுபட்டதன் விளைவுகளே. அந்த முறையற்ற நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளபடி தேர்தல் முழுவதையும் கறைபடுத்தியதுடன் அதைச் செல்லத்தகாத தாகவும் ஆக்கிவிட்டது என்று மனுதார்கள் கூறுகின்றனர்.

13. தேர்தல் பிரசாரத்தின்போது பிரதிவாதிகள் , மற்றும் 2 துண்டுப் பிரசுரங்கள், நோட்டீஸ்கள், பத்திரிகை அறிக்கைகள் மற்றும் அந்தத் தொகுதியில் நடைபெற்ற பொதுக்கூட்டங்களில் நிகழ்த்திய பேச்சுகளின் மூலம் மூர்க்கத்தனமான, விஷமத்தனமான வெறுப்புணர்வைத் தூண்டும் பிரசாரங்களை மேற்கொண்டனர். சட்டத்தின் 63 (1)ன் பிரிவுக்கு நேர் எதிராக தங்கள் இரண்டு வாக்கு களையுமே அவர்கள் ஒவ்வொருவருக்குமே அளிக்க வேண்டு மென்று வாக்காளர்களை வஞ்சகமாகத் தூண்டியதுடன், சட்ட விரோதமாக வற்புறுத்தினர் என மனுதார்கள் கூறுகின்றனர். 1 மற்றும் 2 எண் பிரதிவாதிகள் அந்தத் தொகுதி வாக்காளர்களிடையே மேற்கொண்ட மேலேகுறிப்பிடப்பட்ட பிராசாரத்தினால் தங்களுக்கு அளிக்கப்பட்ட இரண்டு வாக்குச் சீட்டுகளையும் ஒரே பெட்டியில் போட்டு, ஒரே வேட்பாளருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட வாக்குகளை அளிக்க வாக்காளர்கள் தூண்டப்பட்டனர். இதனால் அந்தச் சட்டத்தில் குறிப்பிட்ட பிரிவுக்கு முரணாக செயல்பட்டதுடன் எந்த நோக்கத் திற்காக அது இயற்றப்பட்டதோ அதுவும் முறியடிக்கப்பட்டது என மனுதாரர்கள் தெரிவிக்கின்றனர்.

14. (i) வடபம்பாய் தொகுதியில் வாக்காளர்களிடையே வினி யோகிக்கப்பட்ட மராத்தியில் அச்சிடப்பட்ட துண்டு பிரசுரத்தில் மக்கள் அவையில் மக்கள் முன்னணியை தலைமை நடத்திச் செல்ல பிரதிவாதி எண் 1 மிகவும் தகுதியானவர் என்று பிரதிவாதி எண் 1 அல்லது அவரது முகவர்கள் அல்லது ஆதரவாளர்கள் அல்லது முகவர்களும் ஆதரவாளர்களும் சேர்ந்து வருணித்துள்ளனர். எனவே 1 ஆம் பிரிதிவாதிக்கே இரண்டு வாக்குகளையும் அளிக்க வேண்டு மென்று வாக்காளர்கள் அறிவுறுத்தப்பட்டனர். ஆனால் இவ்வாறு

வாக்களிப்பது 1 ஆம் பிரதிவாதிக்கு எவ்வாறு சாதகமாக இருக்கும் என்பது கூறாமல் தவிர்க்கப்பட்டுள்ளது. அந்தத் துண்டுப் பிரசுரத்தின் சம்பந்தப்பட்ட பகுதிகள் 'பி' என்று குறிப்பிடப்பட்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

(ii) இரண்டு வாக்குகளை பெறும் வாக்காளர்கள் என்ஜின் சின்னமிட்ட பெட்டியில் அதாவது 1 ஆம் பிரதிவாதியின் பெட்டியில் போடவேண்டும் என்று 1951 டிசம்பர் 29 தேதியிட்ட யுகாந்தர் என்ற பம்பாயிலிருந்து வெளிவரும் மராத்திய வார இதழின் பக்கம் 4ல் 1,2,3 ஆம் பத்திகளில் வாக்காளர்கள் நேர்மையற்ற முறையில் வலியுறுத்தப்பட்டுள்ளனர். ஆனால் இதன் மூலம் 1 எண் பிரதிவாதிக்கு, சாதகம் என்ன என்று கூறப்படவில்லை. 'யுகாந்தர்' கம்யூனிஸ்டுக் கட்சியின் வார இதழ். அந்தக் கட்சியின் நாடாளுமன்ற வேட்பாளர்தான் 1 ஆம் பிரதிவாதி. அந்த ஷேண்டுகோளின் ஆங்கில மொழிபெயர்ப்பு 'சி' என்ற குறியிடப்பட்டு இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

(iii) அதே போன்று 1 ஆம் எண் பிரதிவாதியின் கையெழுத்துடன் மராத்தியில் வெளியிடப்பட்ட துண்டுப் பிரசுரத்தில் வட பம்பாய் தொகுதியின் மக்களவைக்கான இடதுசாரி ஐக்கிய முன்னணியின் வேட்பாளர் அவர் என்று வர்ணிக்கப்பட்டுள்ளார். தங்களுடைய வேட்பாளர் வெற்றிபெற வேண்டுமென்று விரும்பினால் இரண்டு வாக்குகளையும் 1 ஆம் பிரதிவாதிக்கே அளிக்கவேண்டுமென்று அது குறிப்பிட்டுள்ளது. இரண்டு வாக்குகளில் ஒன்றை வீணாக்குவதால் எந்த விதத்திலும் ஜனநாயகத்துக்கு ஊறு விளைவித்துவிடாது என்று மேலும் 1 ஆம் பிரதிவாதி குறிப்பிட்டுள்ளார். ஏனெனில் ஷெட்யூல்டு வகுப்பினரல்லாத வாக்காளர்கள் ஷெட்யூல்டு வகுப்புக்கு ஒதுக்கப்பட்ட இடத்திற்கு வாக்களிப்பது 1 ஆம் பிரதிவாதியின் கருத்துப்படி ஷெட்யூல்டு வகுப்பு வாக்காளர்களின் ஜனநாயகத்துக்கு எதிரானது. பிறகு ஷெட்யூல்டு வேட்பாளர் என்ற முறையில் இரண்டு இடங்களிலும் நிற்பதற்கு 1 ஆம் மனுதாரர் உரிமையுள்ளவராகையால் 1 ஆம் பிரதிவாதியே இரண்டு வாக்குகளையும் பெறுவதே விரும்பத்தக்கது என்று 1 ஆம் பிரதிவாதி குறிப்பிட்டுள்ளார். எனவே ஐக்கிய முன்னணியின் இடதுசாரி வேட்பாளர் வெற்றிபெற வேண்டும் என்று விரும்பும் ஒவ்வொருவரும் தங்கள் இரண்டு வாக்குகளையும் 'எஞ்சின்' சின்னப் பெட்டியிலேயே போடவேண்டும் என்று கூறியுள்ளார். (1 ஆம் பிரதிவாதியின் தேர்தல் சின்னம்) அந்தத் துண்டுப் பிரசுரத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு 'டி' என்று குறியிடப்பட்டு இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

15. 2ஆம் எண் பிரதிவாதி பம்பாயிலிருந்து வெளிவரும் விவித் விரித்தா என்ற வார இதழின் 1951 டிசம்பர் 21 தேதியிட்ட

இதழில் 'வடபம்பாய் நாடாளுமன்ற தேர்தலில் வைக்கப்பட்டிருக்கும் பொறி 'வாக்காளர்களுக்கு எச்சரிக்கை' என்ற தலைப்பில் வெளியிட்டுள்ள பத்திகை அறிக்கையில் வாக்காளர்களை எச்சரித்துள்ளார். இத்தொகுதியில் ஷெட்யூல்டு வகுப்பினருக்காக ஓர் இடம் ஒதுக்கப்பட்டிருக்கும்போது ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த 1 ஆம் எண் மனுதாரரால் இரண்டு இடங்களையும் ஷெட்யூல்டு வகுப்பினரே கைப்பற்ற பொறி வைக்கப்பட்டுள்ளது. அந்த வலையில் சிக்காமலிருக்க ' தன்னைத்தானே தம்பட்டமடித்துக் கொள்ளும் தலைவர்களை' முற்றிலும் ஒதுக்கிவிட்டு எந்தக் கட்சியுடனோ அல்லது ஒப்பந்தங்களுக்கோ செவிசாய்க்காது அவர் விரும்பும் படியே வாக்களிக்கவேண்டுமென்று மேலும் அவர் கூறியுள்ளார். 'அதுவே தனது கடமை' என்று மேலும் அவர் கூறியுள்ளார். ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த 5 ஆம் எண் பிரதிவாதியுடன் சேர்ந்து ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த 1 ஆம் எண் மனுதாரர் தேர்ந்தெடுக்கப்படுவதைத் தவிர்க்க வேண்டுமென்றால் 1 ஆம் எண் மனுதார் அல்லாமல் வேறு வேட்பாளருக்கு இரண்டு வாக்குகளையும் அளிக்க வேண்டுமென்பதே அவர் கூறியதன் பொருளாகும். இரண்டு இடங்களிலும் ஷெட்யூல்டு உறுப்பினர்களே தேர்ந்தெடுக்கப்பட்டு ஷெட்யூல்டு வகுப்பினரல்லாத உறுப்பினர்களுக்கு இடம் எதுவும் கிடைக்காமல் போவதைத் தவிர்க்கும் வழியாகும் இது என்பதே அவர் கருத்தாகும். 2ஆம் எண் பிரதிவாதியின் அந்த அறிக்கையின் ஆங்கில மொழிபெயர்ப்பை 'ஈ' என்று குறியிட்டு இணைத்துள்ளோம்.

16. 'விவித விரித்த' என்ற அதே மராத்தி இதழின் 1951 டிசம்பர் 30 தேதி இதழில் 2 ஆம் எண் பிரதிவாதியின் கருத்தை ஆதரித்து பக்கம் 5ல் பத்தி 4ல் 'வாக்களிப்பில்' சதி என்ற தலைப்பில் சாதி இந்து வேட்பாளரின் பெட்டியில் இரண்டு வாக்குகளையும் போடலாம் என்றும் அவ்விதம் வாக்களிப்பது சட்டவிரோதமல்ல என்றும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. ஒரு வேட்பாளருக்கு இரண்டு வாக்குகளையும் அளிப்பதற்கு வாக்காளர்களுக்கு முழு சுதந்திரம் இருப்பதாக மேலும் அதில் கூறப்பட்டுள்ளது. இந்தப் பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள அறிக்கையின் ஆங்கில மொழிபெயர்ப்பை 'எப்' என்று குறியீட்டுடன் இணைத்துள்ளோம்.

17. இந்த மனுவின் 13,14,15,16 ஆம் பத்திகளில் கூறியுள்ளதன் அடிப்படையில் 1 மற்றும் 2 ஆம் பிரதிவாதிகள் வாக்காளர்களை திசைதிருப்பியதுடன் மட்டுமல்லாது சாதி இந்து வாக்காளர்களின் சாதி உணர்வை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்தியிருக்கிறார்கள்; முக்கியமாக சட்டப்படி தங்கள் வாக்குகளைச் செலுத்துவதன் மூலம் அவர்கள் நலன்கள் பாதிக்கப்படும் என்ற அச்ச உணர்வை கிளப்பி இந்து வாக்காளர்களிடையே சாதி உணர்வை 2ஆம் எண் பிரதிவாதி தூண்டிவிட்டார் என மனுதார்கள் கூறுகின்றனர்.

18. வட பம்பாய் தொகுதியில் சாதி இந்து வாக்காளர்களிடையே பீதியைப் பரப்பியதுடனல்லாது தேர்தல் முடிவுகள் எவ்வாறு தீர்மானிக்கப்பட்டும் வெளியிடப்படும் என்று கூறும் சட்டத்தின் 54 ஆவது பிரிவின் விதிகளை வாக்காளர்களுக்கு விளக்கவும் இல்லை என்று மனுதார்கள் கூறுகின்றனர்.

19. மேலே குறிப்பிட்ட முறையில் சாதி இந்து வேட்பாளர்கள் தோற்கடிக்கப்பட்டு இரண்டு இடங்களையுமே ஷெட்யூல்டு வகுப்பு வேட்பாளர்களே எந்தச் சூழ்நிலையிலும் வென்றுவிடக்கூடும் என்று சாதி இந்து வாக்காளர்கள் நம்பும்படி சட்டத்தைத் திரித்துக்கூறி தவறான திசைக்கு அவர்களைத் திருப்பிவிட்டது 1 ஆம் எண் மற்றும் 2 ஆம் எண் பிரதிவாதிகள்தான்.

20. மேலே குறிப்பிட்ட முறையில் சாதி இந்து வாக்காளர்களை மோசடி செய்ததுடன், வேண்டுமென்றே வஞ்சகமாக இரண்டு வாக்குகளையும் தங்களுக்கே அளிக்குமாறு 1 ஆம் எண் மற்றும் 2 ஆம் எண் பிரதிவாதிகள் தூண்டியுள்ளனர் என மனுதாரர்கள் கூறுகின்றனர்.

21. மேலே குறிப்பிட்டுள்ள பத்திகளில் கூறியதின் படி தேர்தலுக்கு முன் தேர்தல் பிரசாரத்தின் போது தகாத செல்வாக்கை உபயோகித்தனர் என்ற காரணத்தினால் சட்டத்தின் 123 (2) ஆம் பிரிவின்படி சுதந்திரமாக வாக்களிக்கும் உரிமையில் கடுமையாக குறுக்கிட்டனர் என்றாகிறது. இந்தக் காரணத்திற்காக சட்டத்தின் 100 (1) அ பிரிவின்படி அது ஒரு சுதந்திரமாக நடைபெற்ற தேர்தல் என்று கூறமுடியாது என்று மனுதாரர்கள் கூறுகின்றனர்.

22. இந்தப் பிரசாரத்தினால் தங்களுக்கு இரண்டு வாக்குகளையும் எடுத்துக் கொள்ளமுடியாது என்பதும் எந்த சாதகமும் இல்லை என்பதும் 1 மற்றும் 2 ஆம் எண் பிரதிவாதிகளுக்கு தெரியும் என்று மனுதாரர்கள் கூறுகின்றனர். ஆயினும் தங்கள் பிரசாரத்தில் அவர்கள் விடாப்பிடியாக நின்றனர். ஏனெனில் 1 மற்றும் 2 ஆம் மனுதாரர்களின் வாய்ப்புக்களை குறைக்கவேண்டுமென்ற தீய நோக்கமே என்று மேலும் கூறுகிறார்கள் மனுதாரர்கள்.

23. மேலே குறிப்பிட்ட 10 ஆவது பத்தியில் குறிப்பிட்டுள்ளபடி அதிக அளவிலான இரட்டை வாக்குகள் 1 மற்றும் இரண்டாம் பிரதிவாதிகள் பெற்றுள்ளனர் என்பதே 1 மற்றும் 2 ஆம் எண் பிரதிவாதிகளின் தகாத செல்வாக்கு அந்தத் தேர்தலில் மேலோங்கி

யிருந்ததை எடுத்துக் காட்டுகிறது என்று மனுதாரர்கள் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

24. இந்தத் தேர்தலில் தகாத செல்வாக்கான ஊழல் நடைமுறை மேலோங்கியிருந்த காரணத்தினால் இத்தேர்தல் ஒரு சுதந்திரமான தேர்தல் அல்ல. எனவே இத்தேர்தலை முற்றிலும் செல்லாததாக அறிவிக்க வேண்டுமென்று மனுதாரர்கள் கூறுகின்றனர்.

25. 1951 ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் 117 ஆவது பிரிவின்படி வழக்குக்கான செலவுத் தொகையாக தேர்தல் ஆணையச் செயலரின் பேரில் இந்திய ரிசர்வ் வங்கியில் 1000 ரூபாய் டிபாசிட் செய்யப்பட்டுள்ளது. குறிப்பிடப்பட்டுள்ள தொகை டிபாசிட் செய்யப்பட்டுள்ளதை காட்டும் அசல் பற்றுச்சீட்டு இத்துடன் 'ஜி' என்று குறியிடப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது.

26. 1ஆம் மற்றும் 2 ஆம் பிரதிவாதிகள் மேற்கொண்ட ஊழல் நடவடிக்கைகள் பற்றிய விவரப் பட்டியல் 1951 ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் 83 (2) பிரிவின்படி சரிபார்க்கப்பட்டு 'எச்' என்று குறியிடப்பட்டு இந்த மனுவுடன் இணைக்கப்பட்டுள்ளது.

27. மக்கள் பிரதிநிதித்துவ பிரதிநிதிகள் விதியில் (தேர்தலை நடத்துவதும் தேர்தல் வழக்குகளும்) 119 விதியில் குறிப்பிட்டுள்ள காலக்கெடுவில் இந்த மனு அளிக்கப்பட்டுள்ளது. மேற்படி விதிகளின் 112 ஆம் விதியின் உள்விதி (1) படி செலவு அறிக்கையை அளிக்கும் தேதியான 11 மார்ச் கழிந்துவிட்டது.

28. இந்த மனுவில் கூறப்பட்டுள்ள காரணங்களன்றி வேறு காரணங்களின் அடிப்படையில் வேறு ஏதாவது மனுவையும் அளிக்க மனுதாரர் 2 தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறார்.

எனவே உங்கள் மனுதாரர் வேண்டிக் கொள்வதெல்லாம்,

(அ) மனுவை விசாரிப்பதற்கு தேர்தல் தீர்ப்பாயம் ஒன்றை அமைப்பது,

(ஆ) 1952 ஜனவரி 3ல் நடைபெற்ற வட பம்பாய் நாடாளுமன்றத் தொகுதியில் மக்களவைக்கான தேர்தலை செல்லுபடியாகாது என்று அறிவிப்பது,

(இ) இந்த மனுவிற்கான செலவுத் தொகையை மனுதாரருக்கு வழங்குவது,

(ஈ) வழக்கின் தன்மையைப் பொறுத்து மேலும் இதர உதவிகளை மனுதாரர்களுக்கு அளிப்பதுடன் தேவைக்கேற்ற வாறு வாக்குகளை பரிசோதித்து பார்ப்பது உட்பட மேற் குறிப்பிட்ட விஷயங்களுக்குத் தேவையான உத்தரவுகளை அனுப்புவது.

(ஒ -ம்) பி.ஆர். அம்பேத்கர்
(ஒ -ம்) அசோக் மேத்தா.

(மனு எழுதியவர்)
(திரு.என்.சி.என். ஆசார்யா
வழக்குரைஞர்)
(ஒ -ம்)கோத்தாரே அண்ட் கோ
மனுதாரர்கள் சார்பாக வழக்கறிஞர்கள்.

பீம்ராவ் ராம்ஜீ அம்பேத்கர் மற்றும் அசோக் ரஞ்சித்ராம் மேத்தா ஆகிய பம்பாய்வாசிகளான நாங்கள் இருவரும் ராஜ்கிருக இந்து காலனி, தாதர் மற்றும் 3 அத்யசேத் தெரு பாபநாத் கோயில் அருகில் பம்பாய் கோட்டைக்கு வெளியே வசித்துவரும் நாங்கள் பத்தி 1 லிருந்து 9 வரைக்கும் மற்றும் 11லிருந்து 26 வரைக்கும் கொடுக்கப்பட்டுள்ள விஷயங்கள் மேற்குறிப்பிட்ட மனுவில் எங்களுடைய அறிவுக்குத் தெரிந்தவரை உண்மையென்றும் 10 ஆவது பத்தியில் கொடுக்கப்பட்ட விஷயங்கள் எங்களுக்குக் கிடைத்த தகவல்கள் என்பதையும் அவை உண்மை என்பதையும் நாங்கள் நம்புகிறோம்.

மனுதார் எண் 1
பீம்ராவ் ராம்ஜீ அம்பேத்கர்
மனுப்பூர்வமாக அறிவிக்கப்படுகிறது
பம்பாய் 21.5.1952
(ஒ - ம் ) பி.ஆர். அம்பேத்கர்
எனக்கு முன்
(ஒ - ம்) எச்.கே.படேல்
மகாண நீதிபதி
XI நீதிமன்றம் குர்லா, பம்பாய்
21.3.1952

முத்திரை

(ஒ - ம்) அசோக் மேத்தா

முத்திரை

எனக்கு முன்
(ஒ - ம்) எச்.கே.படேல்
பிரசிடென்சி நீதிபதி
XI நீதிமன்றம் குர்லா பம்பாய்
*21.4.1952*

*அசோக் ரஞ்சித்ராம் மேத்தா*
*மனுதாரர் எண் 2*
*பம்பாய்*
*1952 ஏப்ரல் 21.*

(ஒ - ம்) அசோக மேத்தா

முத்திரை

எனக்கு முன்
(ஒ - ம்) எச்.கே.படேல்
பிரசிடென்சி நீதிபதி
XI நீதிமன்றம், குர்லா, பம்பாய்
*21.4.1952*

1. கைர்மோட், தொகுதி 10, பக்கம் 269, 280.

## பொதுத் தேர்தல்களில் வேட்பாளர்களின் பிரதிநிதிகள் டாக்டர் அம்பேத்கரின் வேண்டுகோள்

''வாக்காளர்களின் மனதில் குழப்பத்தை விளைவிக்கும் எந்த விஷயமும் தகாத செல்வாக்கு மற்றும் குறுக்கீடு என்றாகிறது. வாக்காளர்களை அச்சமூட்டும் விதத்தில் பிரசாரம் நடத்தும் வேட்பாளர் குறுக்கீடு செய்வதாகவே கருதப்படும். அவர் வாக்காளர்கள் மனதில் குழப்பத்தை உண்டாக்கியதாகவே தெளிவாகிறது. முக்கியமான சட்ட விஷயம் ஒன்றை வாக்காளர்களிடமிருந்து அவர் மறைத்துவிட்டால் மோசடி செய்ததாகவே அவர் கருதப்படுகிறார். அல்லது தகாத செல்வாக்கை அவர்கள் மீது உபயோகித்ததாகக் கருதப்படுகிறது. தேர்தல் சட்டங்களுக்கு எதிராக வாக்காளர்களை வாக்களிக்கச் சொல்வது ஊழல் நடவடிக்கையாகும்.

திரு.என்.ஜே.வாடியாவைத் தலைவராகவும் திரு.எம்.கே. லால்காக்கா மற்றும் ஜி.பி.முரடேஷ்வர் ஆகியோரைக் கொண்ட தேர்தல் தீர்ப்பாயத்திற்கு முன்பு சோஷலிஸ்டு தலைவர் திரு. அசோக மேத்தா தம்முடைய மனுக்கள் வெள்ளியன்று மீண்டும் விசாரணைக்கு வந்தபோது டாக்டர் அம்பேத்கர் வடபம்பாய் தொகுதியில் கடந்த தேர்தலில் நடந்த ஊழல்கள் குறித்து மேலே குறிப்பிட்டுள்ள வாதங்களை எடுத்துரைத்தார்.

தானே நேரில் ஆஜராகிய டாக்டர் அம்பேத்கர் தேர்தலில் வேட்பாளரின் பிரதிநிதிகளின் பிரச்சினைகள் குறித்து நீண்டநேரம் வாதம் செய்தார். துண்டுப்பிரசுரங்கள் மற்றும் செய்தித்தாள்கள் மூலம் வேட்பாளர்கள் சிலர் செய்த பிரசாரங்களை சுட்டிக்காட்டி அவை மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் 123 (2) ஆம் பிரிவின்படி தகாத செல்வாக்கு என்றாகிறது என்றார்.

### தகாத குறுக்கீடு

தகாத குறுக்கீடு என்பதை பிரிட்டிஷ் சட்டம் விரிவான முறையிலும் இந்தியச் சட்டம் பொதுவான பொருளிலும் கையாண்டிருப்பதை அவர் சுட்டிக்காட்டினார்.

கம்யூனிஸ்டு வேட்பாளர் திரு.எஸ்.ஏ.டாங்கேயாலும் அவர் சார்பாகவும் மற்றும் சுயேச்சை வேட்பாளர் டாக்டர் ஜி.வி. தேஷ்முக்காலும் அவர் சார்பாகவும் வெளியிடப்பட்டுள்ள அறிக்கைகள் ஒரு வேட்பாளருக்கே இரண்டு வாக்குகளையும் அளிக்கும்படி கேட்டுக்

கொண்டிருப்பது தகாத செல்வாக்கை அவர்கள் உபயோகித்தனர் என்றாகிறது. நாடாளுமன்ற வேட்பாளராக நிற்பதற்கு தமக்கு ஆதரவளித்த இடதுசாரி ஐக்கிய முன்னணி துண்டுப் பிரசுரங்களை பிரசுரித்தது திரு.டாங்கேக்கு தெரியும் என்பதுடன் எந்தக் கட்டத்திலும் அதில் குறிக்கிடவோ, அந்தத் துண்டுப் பிரசுரங்ளை வெளியிட வேண்டாமென முன்னணியைத் தடுக்கவோயில்லை என்று ஏற்கெனவே விசாரிக்கப்பட்ட நான்கு சாட்சிகளில் ஒருவர் கூறினார்.

தம்முடைய பிரதிநிதிகளின் நடவடிக்கைகளுக்கு திரு. டாங்கேயே பொறுப்பேற்க வேண்டும் என்று மனுதாரர் வாதிட்டார். தான் கம்யூனிஸ்டு கட்சி வெளியிடும் பத்திரிகை என்பதை மராத்தி வார இதழ் 'உகந்தார்' தயக்கத்துடன் ஏற்றுக்கொண்டது. முன்னணியின் இரண்டு உறுப்பினர்கள் தங்கள் சாட்சியத்தில் தாங்கள் திரு. டாங்கேக்கு ஆதரவாக பிரச்சாரம் செய்ததை ஒத்துக்கொண்டனர். அவர்களின் விளக்கத்தின் அடிப்படையில் அவர்கள் திரு. டாங்கேயின் பிரதிநிதிகளாகச் செயல்பட்டனர் என்பதில் ஐயம் இருக்க முடியாது.

ஞாயிறுதோறும் வெளிவரும் வார இதழான 'விவித் விரித்தாவுக்கும்' டாக்டர் தேஷ்பாண்டேக்கும் (தேஷ்முக்) உள்ள தொடர்பை எடுத்துரைக்க டாக்டர் அம்பேத்கர் முயற்சித்தார். பிரதிவாதி அவ்விதழில் வெளியிட்டுள்ள அறிக்கை வாக்காளர்களுக்கு அறிவு புகட்டுவதற்கல்ல. உண்மையில் வேறு எந்த இதழுக்கும் அல்லாமல், அந்தக் குறிப்பிட்ட இதழுக்கு மட்டுமே அவர் அறிக்கை கொடுத்திருப்பது அந்த இதழுக்கும் அவருக்கும் ஏதோ தொடர்பு உள்ளது என்று அவர் தமது வாதத்தில் எடுத்துரைத்தார்.

இந்த நேரத்தில் டாக்டர் தேஷ்முக் எழுந்து டாக்டர் அம்பேத்கரை அவருடைய கேள்விகளை கேட்கச் சொல்லலாம் என்று தீர்ப்பாயத்திடம் கேட்டுக்கொண்டார். ''நான் உங்களிடம் எந்தக் கேள்வியையும் கேட்கவில்லை. உண்மையில், நீங்கள்தான் கேட்டுள்ளீர்கள் அதற்கு விடையளிக்க முயற்சிக்கிறேன்'' என்று டாக்டர் அம்பேத்கர் பதிலளித்தவுடன் நீதிமன்றத்தில் சிரிப்பொலி எழுந்தது.

அதற்கு முன்பு டாக்டர் அம்பேத்கரின் முகவராக இருந்த சித்தார்த் கல்லூரியின் பதிவாளர் திரு. கே.வி. சித்ரே சாட்சியம் அளித்தார்.

விசாரணை திங்கட்கிழமை தொடரும்.''

(டைம்ஸ் ஆப் இந்தியா 3.10.1952)

## வாக்குகளை வீணடிக்கப் பிரச்சாரம் செய்வது சட்டவிரோதமானது

*தேர்தல் வழக்கில் டாக்டர் அம்பேத்கரின் வாதம்*

*பம்பாய் சிறுவழக்கு நீதிமன்றத்தில் திரு. என்.ஜே.வாடியாவை தலைவராகவும், திரு. எம்.டி. லால்காக்கா மற்றும் ஜி.பி. முர்டேஷ்வர் ஆகியவர்களை உறுப்பினர்களாகவும் கொண்ட தேர்தல் தீர்ப்பாயத்தில் திங்களன்று தமது மனுவின் மீது வாதிடுகையில் வாக்குகளை பகிர்ந்து அளிப்பதால் அவர்களுக்கு பிரதிநிதித்துவம் இல்லாமல் போய்விடும் என்று அச்சுறுத்தி வாக்காளர்களிடையே சாதி உணர்வைத் தூண்டுவது சட்டத்தைக் குதர்க்கமாய் விளக்குவதாகும் என்று டாக்டர் அம்பேத்கர் எடுத்துரைத்தார்.*

*17 வேட்பாளர்களைக் கொண்ட சுயேச்சை வேட்பாளர் குழுவின் தலைவராக உள்ள டாக்டர் ஜி.வி.தேஷ்முக் வடபம்பாய் தொகுதியில் செய்த சாதி உணர்வைத் தூண்டும் பிரசாரத்தை அவர் குறிப்பிட்டார்.*

*''இதை விட மோசமான தேர்தல் பிரசாரத்தைப் பார்க்க முடியாது'' என்றார் டாக்டர் அம்பேத்கர். சட்டமன்றங்களில் முக்கியமான பதவிகளை தீண்டத்தகாதவர்கள் பெற்றுவிடக்கூடாது என்ற சாதி இந்துக்களின் மனோபாவத்தை உணர்ந்துதான் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களில் ஷெட்யூல்டு வகுப்பினருக்காக விசேட விதிகள் சேர்க்கப்பட்டன. மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்திலும்கூட அதே போன்ற விதி சேர்க்கப்பட்டுள்ளது.''*

*சட்டத்தின் 54 ஆவது பிரிவின் விதிகளை டாக்டர் தேஷ்முக் மறைத்துவிட்டார். ஆனால் கம்யூனிஸ்டு கட்சி வேட்பாளர் திரு எஸ்.ஏ.டாங்கே 63 ஆவது பிரிவை தள்ளுபடி செய்து சட்டத்தையே ஒன்றுமில்லாமல் செய்யவேண்டுமென்று நினைக்கிறார். இரண்டு பிரதிவாதிகளுமே ஊழல் நடவடிக்கைகளில் ஈடுபட்டதுடன் தகாத செல்வாக்கைச் செலுத்தினர் என்று டாக்டர் அம்பேத்கர் குற்றம் சாட்டினார்.*

### வாக்குகளை கையாளும் முறை

*இரண்டில் ஒரு வாக்கை எவ்வாறு செலுத்துவது என்பது வாக்காளர்களின் அல்லது வேட்பாளர்களின் விருப்பதற்திற்கு விட்டு விடப்படவில்லை என்று டாக்டர் அம்பேத்கர் எடுத்துரைத்தார்.*

இரண்டாவது வாக்கைச் செலுத்துவது 79 (டி) பிரிவால் ஒழுங்கு படுத்தப்பட்டுள்ளது. இந்தியாவில் கட்டாயமாக வாக்களிக்க வேண்டுமென்று இல்லையாதலால் வாக்களிக்கவோ வாக்களிக்காம லிருக்கவோ வாக்காளருக்கு உரிமையுள்ளது. பின்வரும் கருத்துகளை அவர் முன்வைத்தார்: (1) தமது தேர்தல் உரிமைகளை செயல்படுத்த வாக்காளருக்கு சுதந்திரம் உண்டு (2) வாக்குச் சாவடிக்குச் சென்று அவருடைய இரண்டு வாக்குச் சீட்டையும் பெற்றுக்கொண்டு அதை பகிர்ந்தளிக்கலாம் (3) ஒரு வாக்குச் சீட்டை போட்டுவிட்டு மற்றதை வாக்குச்சாவடி அதிகாரியிடம் திரும்ப அளித்துவிடலாம். (4) ஒரு வாக்குச் சீட்டைப் போட்டுவிட்டு மற்றொன்றை அழித்துவிடுவது சட்டத்தற்கு புறம்பானது என்பதுடன் பிரிவு 136 (இ) (எப்) படி குற்றச் செயலாகும்; (5) ஒரு வாக்குச் சீட்டைப் போட்டுவிட்டு மற்றொரு வாக்குச் சீட்டை தன்னுடன் கொண்டு செல்வது 135 ஆவது பிரிவின் படி சட்டவிரோதமானது. ஒரே பெட்டியில் இரண்டு வாக்குச் சீட்டு களையும் போடுவது 25(1) ன் பிரிவின்படி சட்டவிரோதமானது என்பதுடன் சட்டத்தை மீறும் செயலாகும்.

ஊழல் நடவடிக்கைகள் பெருமளவில் நடக்கும்போது அதன் அடிப்படையில் அந்தத் தேர்தலை தள்ளுபடி செய்ய வேண்டும் என்று விதி 100 தெளிவாகக் கூறுகிறது என்று அவர் கூறினார். முறை கேடான பிரசாரத்தினால் 74,333 வாக்குகள் வீணாகப்போனதை தீர்ப்பாயம் பெரும் எண்ணிக்கை என்று கருதவில்லையா என்று கேட்டார். 13,000 வாக்குகளில் நான் என் வெற்றிவாய்ப்பை இழந்து விட்டேன். நான் அதிக கர்வத்துடன் கூறவில்லை, ஆனால் திரு. டாங்கேயினால் வீணடிக்கப்பட்ட 39,000 வாக்குகளில் அவருடைய மற்றும் டாக்டர் தேஷ்முக்கின் இந்தப் பிரசாரம் இல்லாமலிருந்தால் நிச்சயமாக அதிக அளவில் வாக்குகள் பெற்றிருப்பேன்'', என்று அவர் கூறினார்.

## ''தவறான கூட்டணியின் அத்தியாயம்''

சோஷலிஸ்டு மற்றும் ஷெட்யூல்டு வகுப்பு சம்மேளனத் திற்குமிடையேயான தவறான கூட்டுறவின் முடிவு அத்தியாயம் என்று இந்த மனுவை திரு. டாங்கேயின் வழக்கறிஞர் திரு. எஸ்.ஆர். சாரி வர்ணித்துள்ளார். தங்களுடன் சேரவேண்டுமென்று இடதுசாரி ஐக்கிய முன்னணி கூப்பிய கரங்களுடன் மனுதாரர்களை கேட்டுக் கொண்டாலும் தங்கள் பலத்தை அதிகமாக மதிப்பிட்டதால் அவர்கள் அதில் சேர மறுத்துவிட்டார்கள் என்று மனுதாரர்களின் சாட்சியான

திரு. பாபுராவ் ஜக்தப் கூறினார். தனது இரண்டு வாக்குகளையும் போட வேண்டுமென்ற சட்டரீதியான கடமை எதுவும் வாக்காளருக்குக் கிடையாது என்று திரு. சாரி கூறினார். ஏனெனில் சட்டத்தின் 63 ஆம் பிரிவின் விதிகளின்படி வேட்பாளர் ஒருவருக்கு அவர் வாக்களிக்கக்கூடாது என்று வேண்டிக்கொள்வது 'தகாத செல்வாக்கு' என்பதன் வரையறையின்படி வாக்காளர்கள் சுதந்திரமாக செயல்படுவதில் குறுக்கீடு செய்வது ஆகாது. மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தில் கொடுத்துள்ள 'ஊழல் நடவடிக்கைகள்' என்பதன் வரையறைக்குள் திரு.டாங்கே அல்லதுமற்றும் வேறு எந்த வேட்பாளர்களின் செயல்பாடுகளும் எதுவும் வரவில்லை. திரு.டாங்கே செய்ததெல்லாம் வாக்காளர்களை அறிவுறுத்தியதுதான். அதைச் செய்ய அவருக்கு உரிமை உள்ளது. தங்கள் ஆதரவாளர்களுக்கு நம்பத்தகுந்த காரணங்களை அளிப்பதற்காகவே மனுதாரர்கள் இந்த முனுவை அளித்துள்ளனர். கடந்த தேர்தலில் மனுதாரர்களின் தோல்விக்குக் காரணம் காங்கிரஸ் மற்றும் சாதிக் கட்சிகளை எதிர்த்துப் போராட இடதுசாரி ஐக்கிய முன்னணியில் அவர்கள் ஆணவத்துடன் சேர மறுத்ததே எனலாம்.

## தகாத செல்வாக்கு

வாக்காளர்கள் மீது யார் தகாத செல்வாக்கைச் செலுத்தினர் என்பதை மனுதாரர்கள் நிரூபிக்கத் தவறிவிட்டனர் என்று திரு. சாரியின் வாதத்தை ஆதரித்து திரு. வி.பி.காந்தியின் வழக்கறிஞர் திரு.டி.ஆர். கலாடியா கூறினார். அந்தக் குற்றச்சாட்டு பிரதிவாதிகளின் மீது மட்டுந்தானா அல்லது மனுதாரர்களும் அதே போன்ற குற்றச் சாட்டுக்கு உள்ளாகிறார்களா என்று வினா எழுப்பினர்.

தமது வழக்கறிஞருக்குப் பதிலாக தாமே பேசுவதற்கு தீர்ப்பாயத்திலிருந்து அனுமதிபெற்ற டாக்டர் தேஷ்முக் அவர்கள் கடந்த தேர்தலில் ஊழல் நடவடிக்கைகளுக்கு எல்லாக் கட்சிகளும் பொறுப்பேற்கவேண்டும் என்று கூறினார். 'விவித விரித்தா' என்ற மராத்தி வார இதழின் ஆசிரியர் தமது முகவர் மட்டுமில்லாத தம்முடைய நெருங்கிய நண்பர் என்பதை அவர் ஒத்துக்கொண்டார்.

விசாரணை புதன்கிழமை தொடருகிறது.

திரு. எஸ்.ஏ.டாங்கே, டாக்டர் ஜீ.வி. தேஷ்முக், டாக்டர் வி.பி.காந்தி, திரு.கே.பி.ஜோஷி, திரு.என்.எஸ்.கஜ்ரோல்கர் மற்றும் திரு. என்.பி. பாருல்கர் ஆகியோர் பிரதிவாதிகள்.

திரு. அசோக் மேத்தாவுக்கு கோதாரே அண்ட் நிறுவனத்தின் திரு.எஸ்.எஸ்.கவலேகர்.மற்றும் திரு மதுசூதன் வியாஸ் ஆகியவர்களும், திரு. டாங்கேக்கு திரு.ஏஸ்.ஆர் சாரி மற்றும் டி.எஸ்.ஹெக்டே ஆகியவர்களும் டாக்டர் ஜீ.வி. தேஷ்முக்கிற்கு திரு.பண்டிட்டும் டாக்டர் காந்தி மற்றும் கஜ்ரோல்கருக்கு டி.ஆர். கபாடியாவும் ஆஜரானார்கள்.

● ● ●

*1 : டைம்ஸ் ஆப் இந்தியா, 7.10.1952*
*மறுபதிப்பு கையிர்மோட், தொகுதி 10, பக்கம் 300 - 302.*

# 51

# மகாராஷ்டிராவில் கம்யூனிஸ்டுகள்

மகாராஷ்டிராவில் கம்யூனிஸ்டுகளின் பலவீனங்கள் பற்றி 1953 பிப்ரவரி 21, 28 மற்றும் அக்டோபர் 9 ஆம் தேதிகளில் அமெரிக்கப் பத்திரிகையாளர் திரு. சீலிங் எஸ்.ஹாரிசன், டாக்டர் அம்பேத்கரிடம் பேட்டி எடுத்தார். அந்தப் பேட்டி வருமாறு : ஆசிரியர்கள்.

மகர்களை ஓர் அரசியல் சக்தியாக உருவாக்கிய டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மகாராஷ்டிராவில் கம்யூனிஸ்டுகளின் பலவீனம் குறித்து மதிப்பீடு செய்தார்.

''திரு. டாங்கே மற்றும் இதர பிராமண இளைஞர்களின் கைகளில் ஆரம்பத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி இருந்தது. மராத்தா சமூகத்தையும் ஷெட்யூல்டு வகுப்பினர்களையும் தங்கள் பக்கம் கொண்டுவர அவர்கள் முயன்றனர். ஆனால் மகாராஷ்டிராவில் எந்த முன்னேற்றமும் இல்லை. ஏன்? பெரும்பாலும் அவர்கள் பிராமண இளைஞர்களின் கூட்டமே. இந்தியாவில் கம்யூனிஸ்டு இயக்கத்தை வளர்க்க அவர்களை நம்பியது ரஷ்யர்கள் செய்த பெரும் தவறு. இந்தியாவில் கம்யூனிசம் வளர்வதை ரஷ்யர்கள் விரும்பவில்லையா - அவர்கள் வெறும் ஜால்ராக்களை விரும்பியிருக்கலாம் - அல்லது அவர்கள் புரிந்து கொள்ளாமல் இருந்திருக்கலாம்.

● ● ●

---

1 : இந்தியாவில் கம்யூனிசம் குறித்து டாக்டர் அம்பேத்கர் - இந்தியா - மிகவும் ஆபத்தான பத்தாண்டுகள் சீலிங் எஸ். ஹாரிசன் என்ற புத்தகத்திலிருந்து எடுத்தது.

கைர் மோட், தொகுதி 11, பக்கம் 164.

# 52

# பட்டினியால் வாடும் மக்கள் ரொட்டி கேட்கிறார்கள்

ஷெட்யூல்டு வகுப்பு மக்களுக்கு நிலங்கள் ஒதுக்கிட ஹைதராபாத் அரசு தீர்மானித்துள்ளது. ஆந்திரப் பிரதேஷின் மாண்புமிகு அமைச்சர் திரு. பிந்து டெல்லிக்குச் சென்றிருக்கையில் டாக்டர் அம்பேத்கரிடம் இந்த முடிவைத் தெரிவித்துள்ளார். விரைவில் அதன் நகல்களை தமக்கு அனுப்பும்படி மாண்புமிகு பிந்துவிடம் டாக்டர் அம்பேத்கர் கேட்டுக் கொண்டார். ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்டிருந்த நிலங்களை ஹைதராபாத் அரசு எடுத்துக் கொண்டு விட்டது. இதை எதிர்த்து ஷெட்யூல்டு வகுப்பினர் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தனர். 1700 பேர் கைது செய்யப்பட்டனர். ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அந்த நிலங்களின் உரிமையைக் கொடுக்க வேண்டுமென்றும் அப்பொழுதுதான் அவர்கள் சத்தியாக்கிரகத்தை கைவிடுவார்கள் என்றும் மாண்புமிகு சிந்து அவர்களுக்கு டாக்டர் அம்பேத்கர் கடுமையாகக் கடிதம் ஒன்றை எழுதினார். அந்தக் கடிதம் பின்வருமாறு - ஆசிரியர்கள்.

26, அலிப்பூர் சாலை,<br>
6 நவம்பர், 1953

அன்புள்ள திரு.பிந்து அவர்களுக்கு,

நாம் டில்லியில் சந்தித்தபோது ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கான நிலங்கள் ஒதுக்கீடு சம்பந்தமான ஹைதராபாத் அரசின் தீர்மானத்தின் நகலை எனக்கு அனுப்புவதாக வாக்களித்திருந்தீர்கள். ஒரு வாரத்திற்கு மேலாகிவிட்டது. இன்னும் எனக்கு நகல்கள் அனுப்பப்படவில்லை.

தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நிலங்களை எடுத்துக்கொண்ட அரசு மறுபடியும் அவற்றைத் தங்களுக்கு வழங்கவேண்டுமென்று அவுரங்காபாத் மாவட்டத்தில் சத்தியாக்ரகம் இருந்த ஷெட்யூல்டு வகுப்புகளை சேர்ந்த 1700 ஆண்களும் பெண்களும் கைது செய்யப்பட்டு ஜெயிலில் அடைக்கப்பட்டுள்ளதாக பத்திரிகைச் செய்திகளிலிருந்து தெரிகிறது.

அரசின் நோக்கம் என்னவென்று எனக்குத் தெரியாது. ஒருவேளை அவர்களைக் கைது செய்து ஜெயிலுக்கு அனுப்புவதாக இருக்கலாம். இவ்வாறு நேர்ந்தால் அது மிகவும் வருந்தத்தக்க விஷயந்தான். ரொட்டி கேட்கும், பட்டினியால் வாடும் மக்களை ஜெயிலுக்கு அனுப்புவது அரசிற்கு பெருமை அளிக்காது. நீங்கள் அவர்களை விடுவிக்க வேண்டுமென நினைக்கிறேன்.

உங்கள் அமைச்சரவை நிறைவேற்றும் உத்தரவு எங்கள் நோக்கில் திருப்திகரமாக இருந்தால் நான் தலையிட்டு ஷெட்யூல்டு வகுப்பினரை சத்தியாக்கிரகத்தை கைவிடக் கேட்டுக் கொள்வேன்.

உங்கள் உடனடிப் பதிலுக்கு நன்றியுடையவனாக இருப்பேன்.

உங்கள் உண்மையுள்ள
(ஒ - ம்) பி.ஆர். அம்பேத்கர்

திரு. பிந்து,
உள்துறை அமைச்சர்,
ஹைதராபாத் மாகாணம்,
ஹைதராபாத்

• • •

[1] : காயர்மோட், தொகுதி 11, பக்கம் 67 - 68.

# 53

# பெங்களூரில் புத்தமத சமய போதனைக்கூடம் திறக்கப்படும்

''இந்தியாவில் புத்த மதத்தைப் பரப்புவதற்கான ஆரம்ப நடவடிக்கையாக பெங்களூரில் சமயபோதனைக் கூடம் திறக்கப் படும் என்று செவ்வாயன்று பம்பாயில் வைத்து நாடாளுமன்ற உறுப்பினர் டாக்டர் அம்பேத்கர் கூறினார்.

சமீபத்தில் தாம் புத்தமதத்தை தழுவப்போவதாக அறிவித்த டாக்டர் அம்பேத்கர் பிடிஐக்கு அளித்த பேட்டி ஒன்றில், மைசூர் ராஜப்பிரமுக் ஐந்து ஏக்கர் நிலம் தானம் அளித்திருப்பதாகக் கூறினார். மிகப்பிரபலமான இரு கல்வி நிலையங்களான ராமன் கல்வி நிறுவனம் மற்றும் இந்திய அறிவியல் கல்லூரிக்குமிடையே இது அமைந்துள்ளது.

அண்மையில் தாம் பர்மாவுக்கு இருமுறை சென்றதன் விளைவாக நிதி மற்றும் தொழில்நுட்பம் உள்பட எல்லா உதவி களையும் அளிப்பதாக புத்த சமயக்குழுவும், புத்த சாசன அமைப்பும் வாக்களித்துள்ளன என்று அவர் கூறினார்.

நிதி உதவிக்காக அந்நாட்டில் பல பிரமுகர்களை அணுகி யதில் வெற்றிபெற்றதாக டாக்டர் அம்பேத்கர் கூறியதுடன் பொது மக்களிடம் நிதிஉதவி கேட்க அவர்களை விரைவில் சந்திக்கப் போவதாக அறிவித்தார்.

### சமய போதகர்களுக்கான பயிற்சி

பணம் வருவதைப் பொறுத்து சமய போதனைக் கூடம் இரண்டாண்டுகளில் தயாராகிவிடும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். சாமான்ய மக்களிடையே புத்த மதத்தைப் பிரசாரம் செய்வதே இந்த சமய போதனைக்கூடத்தின் முக்கிய நோக்கமாகும் என்று அவர் கூறினார்.

---

★ ஜனவரி 11, 1955.

சாதி சமய இன வேறுபாடுகள் ஏதுமின்றி இக்கூடத்தில் மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்றும் பல்வேறு மதங்களை ஒப்பிட்டு ஆய்வு செய்யும் பாடம் மற்றும் அதனுடன் சம்பந்தப்பட்ட பாடத்திட்டங்களை அவர்கள் கற்பிப்பார்கள் என்றும் அவர் கூறினார். அறிவியல் பூர்வமாக மற்ற மதங்களையும் பற்றி கற்காமல் புத்த மதத்தை யாரும் உண்மையில் நிலைநிறுத்த முடியாது என்று நம்புவதாக அவர் கூறினார்.

இந்த சமயபோதனைக் கூடத்துக்கு அச்சகம் ஒன்றும் இருக்கும். அதில் புத்தமத இலக்கியங்கள் வெளியிடப்படும். பாலி மற்றும் இதர மொழிகளிலுள்ள புத்த மத நூல்களை உலகம் முழுவதிலு மிருந்து வரும் அறிஞர்கள் குழு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடும் பணி இக்கூடத்தில் நடைபெறும் என்று அவர் கூறினார்.

இந்த சமயபோதனைக் கூடத்தின் வேறோரு அம்சம் சமயம் மற்றும் தத்துவம் சம்பந்தமான புத்தகங்களைக் கொண்ட பெரிய நூலகமாக அது இருக்கும். அங்கு கோயில்களும் வகுப்பறைகளும் மாணவர்கள், ஆசிரியர்கள் மற்றும் ஆராய்ச்சியாளர்களுக்கான தங்கும் இடங்களும் இருக்கும்.

விரைவில் ஒரு கட்டுரைப் போட்டி நடத்தப்படும் என்றும் பத்தாயிரம் ரூபாய்க்கான பரிசுகள் வழங்கப்படும் என்றும் கூறினார்.

● ● ●

*1 : ஜனவரி 12, 1955, தி டைம்ஸ் ஆப் இந்தியா.*

# 54

# புத்த மதம் இந்தியாவிலிருந்து மறைந்ததற்குக் காரணம் சாமான்யர்களின் ஊசலாட்டமே

கல்கத்தாவிலுள்ள மகா போதிக் கழகத்தின் பொதுக் காரிய தரிசி டி. வாலி சின்ஹாவுக்கு பிப்ரவரி 18ல் எழுதிய கடிதத்தில் 'தம்ம தீக்ஷ' பற்றிய தமது கருத்துகளை எடுத்துக் கூறியுள்ளார்.

அந்தக் கடிதம் பின்வருமாறு: ஆசிரியர்கள்.

''சாமான்யர்களின் மதமாற்றத்தை மதமாற்றம் என்றே சொல்ல முடியாது என்பதே என் கருத்து. அந்த மதமாற்றம் வெறும் பெயரளவுக்குத்தான். அந்த சாமான்யர்களான புத்தமதத்தினர்கள், புத்தரை தொழுததுடன் புத்தமதத்தை அழிக்க பிராமணர்களால் உருவாக்கப் பட்ட கடவுள்களையும் வணங்கினர். இந்த சாமான்யர்களின் ஊசலாட்டத்தினால்தான் இந்தியாவிலிருந்து புத்த மதம் மறைந்தது. இனி புத்த மதம் இந்தியாவில் ஆழமாக வேர்விட வேண்டுமானால் சாமான்யர்கள் அதனுடன் ஒன்றிணைக்கப்பட வேண்டும். கடந்த காலத்தில் இது நடைபெறவில்லையெனில் அதற்கான காரணம் இதுதான். 'சங்' என்றழைக்கப்படும் அமைப்பில் சேருவதற்கான தீட்சை சடங்கு இருந்தாலும் ''தம்மாவில்'' சேருவதற்கு எந்த தீட்சை சடங்கும் இல்லை. கிருத்துவ மதத்தில் இரு சடங்குகள் உள்ளன. (1) கிருத்துவ மதத்தில் சேர ஞானஸ்னானம் என்ற சடங்கு உள்ளது. (2) குருமார்களை சமயப் பணியில் அமர்த்தும் சடங்கு. இதைப் பொறுத்தவரையில் புத்த மதத்தைப் பரப்பும் புதிய இயக்கம் கிருத்துவ மதத்தை பின்பற்ற வேண்டும். புத்த மதத்திலுள்ள கேடுகளைப் போக்க 'தம்ம தீக்ஷா' என்ற வழிமுறையைத் தயாரித்துள்ளேன். புத்தமதத்திற்கு மாறவிரும்புபவர்கள் இந்த சடங்கை நிறைவேற்ற வேண்டும். இல்லையெனில் அவர்களைப் புத்த மதத்தவர் என்று ஏற்றுக்கொள்ள முடியாது.

• • •

[1] : காயர்மோட், தொகுதி 12, முதல் பதிப்பு, ஜூலை 1992, பக். 24 - 25.

# 55

# உங்கள் வாழ்க்கையை காப்பாற்ற நான் தயாராயிருக்கிறேன், ஆனால் ....

மாரிஸ் பிரவுன் மற்றும் பிரான்சிஸ் வாட்சன் ஆகியோர் பிரிட்டிஷ் ஒலிபரப்பு கழகத்தின் சார்பாக இந்தியாவிற்கு வருகை தந்திருந்தனர். 1955 ஆம் ஆண்டு, முதல் மூன்று மாதங்களில் அவர்கள் இந்தியாவில் பல இடங்களுக்குச் சென்று மகாத்மா காந்தியைக் குறித்து யாரெல்லாம் கருத்துகள் கூற முடியுமோ அவர்களில் சிலரைச் சந்தித்து பேட்டி கண்டு பதிவு செய்துள்ளனர். டாக்டர் அம்பேத்கரிடம் அவர்கள் எடுத்த பேட்டியின் சுருக்கமான பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. கருத்துகளின் தொடர்பு தெளிவாக இருப்பதற்காக வேறு சிலரின் கருத்துகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

வர்ணனையாளர்: மகாத்மா என்ற மகானுடன் நாம் மிகவும் உயரத்தில் இருக்கிறோம்.

பி.ஆர்.அம்பேத்கர்: அவர் ஒருபொழுதும் மகாத்மாவாக இருக்கவில்லை. அவரை மகாத்மா என்று அழைப்பதை நான் ஏற்றுக்கொள்ள மறுக்கிறேன். என் வாழ்க்கையில் ஒரு பொழுதும் அவரை மகாத்மா என்று அழைத்ததில்லை. அவ்வாறு அழைப்பதற்கு அவர் தகுதியற்றவர். ஒழுக்க நடத்தையின் அடிப்படையில் பார்த்தாலும்கூட அவருக்கு அந்தத் தகுதி கிடையாது.

வர்ணனையாளர்: எதிர்ப்பு. தீண்டத்தகாதவர்களான ஷெட்யூல்டு வகுப்பினரின் அரசியல் தலைவரான டாக்டர் அம்பேத்கரிடமிருந்து எதிர்ப்பு. இந்து மதத்தில் ஷெட்யூல்டு வகுப்பினரை அணைத்து கொண்டு அவர்களின் துயரங்களை நீக்கி தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்று காந்தி விரும்பினார். ஒரு தனிப்பட்ட சமுதாயமாக அவர்களுக்குப் பாதுகாப்பளிக்க டாக்டர் அம்பேத்கர் விரும்பினார். அரசியல் ரீதியாக அது ஆபத்தானது, ஒழுக்கக் கேடானது என்று காந்தி கருதினார். அது ஒரு கடுமையான போராட்டம். காந்தியின் மிகவும் பிரபலமான உண்ணாவிரதத்தில் அது முடிந்தது.

பி.ஆர்.அம்பேத்கர் : ஆம, உண்மைதான். அவர் பேரம் பேசிக் கொண்டே இருந்தார். ஒன்றும் நடக்காது என்று கூறிவிட்டேன்.

பாருங்கள், உங்கள் வாழ்க்கையை காப்பாற்ற நான் தயாராயிருக்கிறேன். கடுமையான நிபந்தனைகளை நீங்கள் விதிக்காதீர்கள். எங்கள் மக்களின் வாழ்க்கையை பணயம் வைத்து உங்கள் உயிரை நான் காப்பாற்றப் போவதில்லை. ஒரு எதிரியாக திரு.காந்தியை நான் சந்திக்கும் போதெல்லாம் மனவெழுச்சி ஏற்படுகிறது என்று எப்பொழுதுமே கூறிவந்துள்ளேன். மற்றவர்களைவிட அவரை நான் நன்கு அறிவேன். ஏனெனில் அவர் தம் நச்சுப்பல்லை எனக்குக் காட்டியிருக்கிறார். அந்த மனிதரின் உட்புறத்தை நான் அறிவேன்.

வர்ணனையாளர்: மகாத்மா காந்தியின் கருத்துக்களினால் ஏமாறாமல் இருக்க ஒருவன் அவருடைய விரோதியாக இருக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியாவின் சோஷலிசத் தலைவர் ஜே.பி.கிருபளானி அவரின் எதிரியல்ல. 1917லிருந்து காந்தியின் மரணம் வரை அவருடைய ஆதரவாளராக இருந்து வந்தார்.

ஜே.பி.கிருபளானி: தாம் ஓர் அசாதாரணமான மனிதர் என்ற கருத்தை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. தம்மை ஒரு மகாத்மாவாக ஆக்குவதையும் அவர் மறுத்தார். அப்படிப்பட்ட ஒரு மகாத்மாவாக தான் இருந்தால் நம்மால் அவரை புரிந்துகொண்டிருக்க முடியாது என்று அவர் கூறினார். அடிப்படையில் காந்திஜியின் செய்திகள் சமூக அரசியல் மற்றும் பொருளாதாரக் கருத்துக்களையே கொண்டிருந்தன என்று நம்புகிறேன். ஆன்மீகம் எந்தப் பொருளில் அறியப்படுகிறதோ அந்தப் பொருளில் அவருடைய செய்திகளில் ஆன்மீகம் காணப்படவில்லை. நம்மிடம் போதுமான அளவு கடவுள்களும் அசாதாரணமான மனிதர்களும் உள்ளனர். மனிதன் என்ற முறையில் காந்தி சிறந்தவராகத் திகழ்கிறார்.

தீரேந்திர மோகன் தத்தா: மகாத்மா காந்தி ஒரு இந்தியனின் எடுத்துக்காட்டு என்று நான் ஒருபோதும் கருதியதில்லை.

வர்ணனையாளர்: இப்பொழுது கல்லூரியாகத் திகழும் ரவீந்திரநாத் தாகூரின் கல்விக் கூடமான சாந்தி நிகேதனில் வசித்து வரும் டாக்டர் தத்தா ஒரு பிரபல தத்துவ ஞானியாக விளங்குகிறார்.

தீரேந்திர மோகன் தத்தா : தற்கால இந்துவுக்கு அவர் ஒரு ஆதர்ச புருஷர். தங்கள் ஐரோப்பிய கல்விமுறை மற்றும் ஐரோப்பிய பின்னணிக்கு ஏற்ப பின்பற்றத் தகுந்த இலட்சியப் புருஷராக அவர் இருக்கிறார். எனவேதான் அவர்களால் இந்து லட்சியங்களுக்கு வெகு

எளிதாக அனுதாபம் காட்டமுடிகிறது. ஆனால் சனாதன இந்துக்கள் அவர் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டதாக எண்ணினர். அவருடைய இந்து மதம் இந்து மதமல்ல என்று கருதினர்.

பி.ஆர்.அம்பேத்கர்: அவர் முற்றிலும் ஒரு சனாதன இந்துதான்.

வர்ணனையாளர்: டாக்டர் அம்பேத்கர் அவ்வாறுதான் நினைக்கிறார். அப்படித்தான் முஸ்லீம்களும். ஆனால் எல்லா முஸ்லீம்களுமல்ல. தீண்டத்தகாதவர்களைக் குறித்த காந்திஜியின் கண்ணோட்டம் அவருக்குச் சிறப்பளித்தது என்று அவர்களில் சிலர் எண்ணினர்.

எச்.என்.பிரெயில்ஸ்போர்ட்: இந்திய மக்களில் 85 சதவீதத்தினரைத் தாம் பிரதிநிதித்துவப் படுத்துவதாக ஒரு சமயம் அவர் கூறினார். சரி, அது கொஞ்சம் மிகைப்படக் கூறிய கூற்றாகும். ஏனென்றால் ஒரு சிறு பகுதி முஸ்லீம் மக்களையே அவர் பிரதிநிதித்துவப்படுத்தினார். ஆனால் எஞ்சியுள்ள இந்துக்கள், சீக்கியர்கள் ஏன் தீண்டத்தகாதவர்கள் ஆகியவர்களை எடுத்துக்கொண்டால் அவர் பெருமையாகக் கூறிக்கொண்டது சரிதான்.

வர்ணனையாளர்: எல்லாவிதத்திலும் அவர் நேர்மையானவர். எல்லாவற்றையும்விட தீண்டத்தகாதவர்களின் பிரச்சினையைத் தமது பிரச்சினையாக அவர் கருதினார். இதுகுறித்து பிரெயில்ஸ்போர்ட் அவரிடம் தனிப்பட்ட முறையில் பேசியுள்ளார்.

எச்.என். பிரேயில்ஸ்போர்ட்: யாருக்காகவோ பெரும் குற்றம் செய்தவர் வருந்துவது போன்ற உணர்வுடன் அவர் பேச்சு இருந்தது. இந்த சாதிநீக்கம் செய்யப்பட்ட மக்களை எவ்வாறு தமது இந்து சமுதாயம் இழிவாக நடத்தியுள்ளது என்பதை அவர் அறிந்திருந்தார். இந்தக் காரணத்திற்காகவே தம் மக்களாகிய இந்து சமுதாயத்தின் நிலைமையைச் சரிப்படுத்த வேண்டுமென்பதில் அவர் உறுதியாக இருந்தார்.

வர்ணனையாளர் : அந்த நேரத்தில் நிலைமையை சீர்செய்ய காந்திஜியின் சொந்த முயற்சி ஒரு புதிய இயக்கமாக, புதிய எழுச்சியாக இருந்தது. டாக்டர் வேரியர் எல்வின் இதற்கு சில மாதங்களுக்கு முன்பு இந்தியாவில் அவருடன் இருந்தார்.

வேரியர் எல்வின் : ஆம். அது 1931ல் நடந்தது. அகமதாபாத்தில் உள்ள பிரபல ஆலை அதிபருக்குச் சொந்தமான கோயிலுக்கு நான் அவருடன் சென்றிருந்தபோது சில ஹரிஜனக் குழந்தைகளை அவர் கோயிலுக்கு அழைத்து வந்தார். இதைக் கண்டு சனாதனப் பூசாரிகள் முகத்தில் தோன்றிய மாற்றங்களிலிருந்தே அவர்கள் எவ்வளவு தூரம் வெறுப்படைந்தார்கள் என்பதை நான் இன்னும் மறக்கவில்லை. ஆனால் இதற்குப்பிறகு காந்தி ஒரு கூட்டம் நடத்தினார். அதில் பேசுகையில், எதிர்காலத்தில் தீண்டத்தகாதவர்கள் கடவுளின் குழந்தைகள் அதாவது ஹரிஜன் என்று அழைக்கப்படுவார்கள் என்று கூறினார். அதிலிருந்து அவர்கள் அவ்வாறே அழைக்கப்படுகின்றனர்.

வர்ணனையாளர்: ஆனால் வட்டமேஜை மாநாட்டின்போது ஒரு புதிய வல்லமைமிக்க மனிதரைக் கண்டோம். தீண்டத்தகாதவராகப் பிறந்த டாக்டர் அம்பேத்கர் தமது சொந்தச் சிறப்பியல்புகளாலும், தனித் திறமைகளினாலும் நிமிர்ந்து நின்றார். அவருக்காக எந்த சாதி இந்துவும் பிராயச்சித்தம் செய்ய அவர் விரும்பவில்லை.

பி.ஆர்.அம்பேத்கர் : எங்களுக்கென்று தனித் தொகுதிகளை ஒதுக்குங்கள்.

வர்ணனையாளர்: டாக்டர் அம்பேத்கர் நேரிடையாக விட்டுக் கொடுக்காமல் பேசுபவர். காந்திஜியைப் பொறுத்தவரையில் பிற்காலத்திலும் அவர் மாறவில்லை.

பி.ஆர்.அம்பேத்கர் : தீண்டத்தகாதவர்கள் பற்றிய இந்தப் பேச்செல்லாம் அவர்களை காங்கிரஸில் இழுப்பதற்குத்தானே தவிர வேறொன்றுமில்லை. அது ஒரு விஷயம். மற்றது என்னவென்றால் அவருடைய சுயராஜ்ய இயக்கத்தை தீண்டத்தகாதவர்கள் எதிர்க்கக் கூடாது என்பதாகும். இதைத் தவிர அவர்களின் முன்னேற்றத்திற்கான வேறு எந்த நோக்கமும் கிடையாது.

வர்ணனையாளர்: இந்தியாவிற்குத் திரும்பிச் சென்ற பிறகு காந்தியின் நோக்கங்கள் புனாவில் நடந்த பெரும் உண்ணாவிரதச் சோதனையைச் சந்திக்கும் அளவு வலிமை பெற்றிருந்தன. லண்டன் மாநாட்டுக் கருத்து வேறுபாடுகளுக்கிடையே அதற்கு அவர் தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருந்தார் என்று பியாரிலால் நினைவு கூர்கிறார்.

*பியாரிலால் நய்யார்:* இந்தியாவின் சுதந்திரத்திற்காகக் கூட தீண்டத்தகாதவர்களின் அடிப்படை நலன்களை விற்கத் தயாரில்லை என்று அவர் கூறியுள்ளார். ஆனால் தனிப்பட்ட தொகுதிகள் பெரும் பாலான தீண்டத்தகாதவர்களின் நலன்களுக்கு நல்லதல்ல என்பதை அவர் அறிந்திருந்தார். தன் உயிரைப் பணயம் வைத்தாவது, தனியாக வாவது அதைத் தடுப்பேன் என்று அவர் கூறினார். அது எதில் போய் முடியும் என்று அந்த நேரத்தில் யாரும் சிந்திக்கவில்லை.

• • •

1 : பிபிசி - காந்தியின் பேச்சு ஓரியண்டல் லாங்மன்ஸ் பம்பாய், கல்கத்தா, மெட்ராஸ். வானொலி வடிவம் மற்றும் வர்ணனை பிரான்ஸிஸ் வாட்ஸன் தயாரிப்பு. மாரிஸ் பிரவுன். பக்கங்கள் 9, 10, 16, 78 மற்றும் 79.

மறுபதிப்பு : ரட்டு, டாக்டர் அம்பேத்கரின் நினைவுகள், பக். 159 - 162.

# 56

# தேர்தலில் வெற்றி பெறுவதற்காக மட்டுமே ஓர் அரசியல் கட்சி இயங்க முடியாது, மக்களுக்கு விழிப்புணர்வூட்டி அவர்களை ஒழுங்குபடுத்தி செயலூக்கம் பெறச் செய்ய வேண்டும்

*பம்பாயிலுள்ள ஜெயராஜ் ஹவுஸில் 1955 ஆகஸ்டு 21ல் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் செயற்குழ கூட்டத்தைக் கூட்ட அதன் தலைவர் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் அழைப்பு விடுத்தார்.*

*1955 ஜனவரியில் அச்சிடப்பட்ட இந்த ஷெட்யூல்டு வகுப் பினர் சம்மேளனத்தன் அமைப்பு விதிகள் விவாதிக்கப்பட்டன. பல்வேறு விதிகளுக்கான சில திருத்தங்கள் பரிந்துரைக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டன.*

### அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் செயற்குழு கூட்டம்

### ஜெயராஜ் ஹவுஸ், பம்பாய்

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், எம்.ஏ.,பிஎச்.டி.டி.எஸ்ஸி. எல்எல்டி டி.லிட்.பார் - அட்லா, மாகாணங்களின் பேரவை உறுப்பினர் அழைப்பு விடுத்த செயற்குழு கூட்டத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் பின்கண்ட அகில இந்திய செயற்குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். கூட்டம் பம்பாயில் கொலா பாவிலுள்ள ஜெயராஜ் ஹவுஸில் 1955 ஆம் தேதி ஆகஸ்டு 21 அன்று 4 மணி அளவில் நடைபெற்றது :*

1. *டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*
2. *திரு. ராஜபாவ் கோப்ரகாடே (மத்தியப் பிரதேசம்)*
3. *திரு. ஏ.ரத்னம் (மெட்ராஸ்)*
4. *திரு ஹரிதாஸ் அவோட் (நாக்பூர், மத்தியப் பிரதேசம்)*
5. *திரு. ஆறுமுகம் (மைசூர்)*

6. திரு. ஜெ.எஸ்.பன்ஸோடே (மத்திய பாரத்)
7. திரு. சி.எம்.ஆறுமுகம் (மைசூர்)
8. திரு. நீலம் சிங் (பெப்சு)
9. திரு. பி.எஸ்.மோர் (அவுரங்காபாத்)
10. திரு. ஆர்.டி.பந்தாரே (பம்பாய்)
11. திரு. ஹர்தாஸ் ஆஷர்வார் (விந்தியப் பிரதேஷ்)
12. திரு. ஜி.டி.பார்மர் (குஜராத்)
13. திரு. பி.கே. கெய்க்வாட் (மகாராஷ்டிரம்)
14. திரு. ஏ.டி.பார்மர் (மகாராஷ்டிரம்)
15. திரு. வி. துரைசாமி (மைசூர்)
16. திரு. எம்.ஜி.வேலு (மெட்ராஸ்)
17. திரு. டபுள்யு.எஸ்.காம்ளே (பேரார்)

**டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நண்பர்களே, நீண்ட காலத்திற்குப் பிறகு நாம் சந்திக்கிறோம். நாம் தாமதமாக சந்திப்பதற்கு பல காரணங்கள் உள்ளன. என்னைப் பொறுத்த வரையில் என் உடல் நிலை அவ்வளவு சரியாக இல்லை. ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் பணிகளை, நான் பங்கேற்காமல், நிறைவேற்ற நீங்கள் கற்றுக் கொள்ளவில்லை என்பதைக் காண்கிறேன். நான் கலந்து கொள்ளா விட்டாலும்கூட பணிகளை நீங்களே நிறைவேற்ற வேண்டிய தருணம் வந்துவிட்டது. என்னை ஓர் ஆலோசகராகவே கருத வேண்டும். ஏதாவது கஷ்டம் என்றால் என்னை எப்பொழுது வேண்டுமென்றாலும் கலந்தாலோசிக்கலாம்.

இந்தப் பூர்வாங்க கருத்துரைகளுக்குப் பிறகு பல தீர்மானங்களும் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

**தீர்மானம் 1 :** டாக்டர் பாபாசாகேப் என்ற பி.ஆர்.அம்பேத்கரை சம்மேளனத்தின் தலைவராக கடந்த செயற்குழு தேர்வு செய்ததை இந்த செயற்குழுக் கூட்டம் உறுதி செய்கிறது.

| | | |
|---|---|---|
| முன்மொழிந்தவர் | : | ஏ. ரத்னம் (மெட்ராஸ்) |
| வழிமொழிந்தவர் | : | ஜி.சி.ஆறுமுகம் |
| ஆதரிப்பவர் | : | பி.கே. கெய்க்வாட் |

தீர்மானம் ஒருமனதாக ஏற்கப்பட்டது.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தொடர்ந்து செயல்படவேண்டுமா என்ற ஐயப்பாடு சில உறுப்பினர்களிடையே எழுந்துள்ளது. தீண்டாமைப் பிரச்சினை இருக்கும் வரையில் ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனம் தொடர்ந்து செயல்படவேண்டும் என்பதே என் கருத்து. தேர்தலின் போது வேறு ஏதாவது கட்சிகளுடன் இணைந்து செயல்படலாமா என்று கேள்வி எழக்கூடும். மற்ற கட்சிகளுடன் இணைந்து செயல்பட்டதில் நமக்கு ஏற்பட்ட அனுபவம் உங்களுக்குத் தெரியும். உரிய நேரத்தில் இம்மாதிரிப் பிரச்சினைகள் குறித்து முடிவெடுப்போம். தற்போதைக்கு ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தை தொடர்ந்து நடத்துவது குறித்து முடிவு செய்வோம்.

**தீர்மானம் எண் 2.** ''கடந்த தேர்தலில் சம்மேளனம் அடைந்த தோல்விகளை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் செயற்குழு உணர்ந்துள்ளது. அதனால் செயற்குழு சோர்ந்து விடவில்லை. இம்மாதிரியான தோல்விகள் வழக்கமானவைதான், இயல்பானதுதான். தேர்தலில் வெற்றிபெறுவதற்காக மட்டுமே ஒரு அரசியல் கட்சி செயல்படுவதில்லை. மக்களுக்கு அறிவூட்டவும், அவர்களை ஒழுங்குபடுத்தி செயலூக்கம் பெறச்செய்ய ஒரு கட்சி செயல்படுகிறது. சந்தேகத்துக்கிடமின்றி, அளவுக்கு அதிகமாகவே இந்தப் பணிகளை சம்மேளனம் செய்துள்ளது.

தீண்டாமையினால் விளையும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படும்வரை ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தை கலைத்து விடமுடியாது என்பதை செயற்குழு வலியுறுத்திக் கூற விரும்புகிறது.

முன்மொழிந்தவர் : திரு. எச்.டி. அவோடே

வழிமொழிந்தவர் : திரு. எம்.ஜெ. வேலு

தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியது.

**தீர்மானம் எண் 3.** ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தை அகில இந்திய கட்சி இல்லை எனத் தேர்தல் ஆணையம் அறிவித்தது சரியில்லை என்று செயற்குழு வருத்தம் தெரிவிக்கிறது. ஒரு கட்சி எத்தனை இடங்களில் வெற்றி பெற்றுள்ளது என்பதன் அடிப்படையில் அல்லாமல் எத்தனை வாக்குகளை அது பெற்றுள்ளது என்பதன் அடிப்படையில் அது ஓர் அகில இந்தியக் கட்சியா இல்லையா என்பது முடிவு செய்யப்பட வேண்டும். ஷெட்யூல்டு வகுப்பினரின்

இரண்டாவது வாக்குகள் எல்லாம் தேர்தல் ஒப்பந்தத்தின் காரணமாக சோஷலிஸ்டு வேட்பாளருக்குப் போடப்பட்டுள்ளன. ஆனால் சோஷலிஸ்டு கட்சி வாக்காளர்கள் தங்கள் வாக்குகளை ஷெட்யூல்டு வகுப்பினர் வேட்பாளர்களுக்கு அளிக்கவில்லை. வாக்குகளின் எண்ணிக்கையைக் கணக்கிடும்போது தேர்தல் ஆணையம் இதைக் கணக்கிலெடுத்துக்கொள்ளவில்லை. ஷெட்யூல்டு வகுப்பு வாக்காளர்கள் சோஷலிஸ்டு வேட்பாளருக்கு அளித்த வாக்குகளை ஷெட்யூல்டு வகுப்பு வாக்காளர்கள் ஷெட்யூல்டு வகுப்பு வேட்பாளர்களுக்கு அளித்த வாக்குகளுடன் சேர்த்தால் சம்மேளனத்திற்குக் கிடைத்த வாக்குகள் சோஷலிஸ்டுக் கட்சிக்குக் கிடைத்த வாக்குகளைவிட அதிகமாக இருக்கும்.

முதல் தேர்தலில் அகில இந்தியக் கட்சி என்ற அந்தஸ்தை அளித்தது போன்று மீண்டும் அத்தகுதியை அளிக்க வேண்டுமென்று இச்செயற்குழு தேர்தல் ஆணையத்தை வலியுறுத்துகிறது.

முன்மொழிபவர் : திரு. ஏ.ஜி. பவார் (மகாராஷ்டிரம்)

வழிமொழிபவர் : திரு. வி. துரைசாமி (மைசூர்)

இந்தத் தீர்மானம் ஒருமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**தீர்மானம் எண் 4 :** அமைப்பு விதிகளில் தலைவர் செய்துள்ள திருத்தங்கள்:

**1 ஆம் விதிக்கான திருத்தம்:** 2ஆம் கூறில் 1957 என்ற எண்ணிற்குப் பிறகு ''அல்லது மத்தியச் செயற்குழுவால் நிர்ணயிக்கப் பட்ட வேறு எந்தத் தேதியிலாவது'' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

**11 ஆம் விதிக்கான திருத்தம்** - உட்கூறு VI பிறகு உட்கூறு VII ஆக பின்வருவதைச் சேர்க்கவும் ''புத்தகங்கள் வெளியிடுவது, அச்சகம் நடத்துவது.'' அச்சுப் பிழையினால் இரண்டு தடவை அச்சாகியுள்ள உட்கூறுகள் iii, iv, v, vi ஆகியவற்றை நீக்கவும்.

**VI விதிக்கான திருத்தம்** - (i) 3, 4, 5, 6, 7, 8, 9 மற்றும் 10 ஆம் கூறுகளிலுள்ள இணைப்புகோட்டை எடுக்கவும்.

(ii) 10 ஆவது கூறுக்குப் பிறகு 11 ஆவது கூறாக பின்வருவதைச் சேர்க்கவும்:

கிராமக் குழு, தாலுகாக் குழு, மாவட்டக் குழு, மாகாணக் குழு ஆகியவைகளின் உறுப்பினர்கள் எண்ணிக்கை ஒவ்வொரு மாகாண சம்மேளனக் குழுவால் மத்தியக் குழுவுடன் கலந்து நிர்ணயிக்கப் படும்.

**VII விதிக்கான திருத்தம்** - (1) கூறு 1ன் உட்கறு 11ல் 'சம்மேள னம்' என்ற சொல்லுக்குப் பிறகு 'மண்டலச் செயலர்களும்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

(2) உட்கூறு V க்குப் பிறகு வரும் IV உட்கூறை நீக்கவும். அது இரு தடவை அச்சிடப்பட்டுள்ளது.

**VIII விதிக்கான திருத்தம்** - (1) கூறு 1ல் இரண்டாவது வரியில் உள்ள 'அடங்கியுள்ள' சொற்களுக்குப்பிறகு வரும் சிறுகோட்டை நீக்கவும்.

(2) உட்கூறு 4ல் 'தலைவர்' என்ற சொல்லுக்கு முன்னே 'அந்த' என்ற சொல்லைச் சேர்க்கவும்.

(3) உட்கறு 5க்குப் பிறகு பின்வருவனவற்றைச் சேர்க்கவும் :

''6 பல்வேறு மண்டலங்களுக்கு 5க்கு மிகாமல் மண்டலச் செயலர்களைத் தலைவர் நியமிப்பார்.

(4) கூறு 7க்குப் பிறகு பின்வருவனவற்றை சேர்க்கவும்:

'8. மண்டலச் செயலர்கள் தங்கள் அதிகார எல்லைக்குள் சம்மேளனத்தின் வேலைகளையும் தலைவர் இடும் இதரப் பணி களையும் நிறைவேற்றி தலைவருக்கும் பொதுச்செயலருக்கும் அதைப் பற்றித் தகவல் அளிப்பர்.

**X விதிக்கான திருத்தம்** - 1 கூறில் இரண்டாவது வரியில் உள்ள 'ஆண்டுக்கு இருமுறை' என்பதை 'இரண்டாண்டுக்கு ஒரு முறை' என்று மாற்றவும்.

**XIV விதிக்கான திருத்தம்** - உட்கூறின் 5ல் கடைசி வரியிலுள்ள அலுவலர் என்பதற்குப் பதிலாக அலுவலகம் என்று மாற்றி,'எல்லா அலுவலகங்களையும் அணுகத்தக்க' என்று வாசிக்கவும்.

**XVII விதிக்கான திருத்தம்** - 4 ஆவது கூறின் 2 ஆவது வரியில் 'மாகாணங்களின் சம்மேளனம்' என்ற சொற்களை நீக்கி 'சம்மேளனத்தின் அகில இந்தியக் குழு' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

**XXIII விதிக்கான திருத்தம்** - 2 ஆவது உட்கூறின் ஐந்தாவது வரியில் 'மாவட்டம்' என்ற சொல்லை மாற்றி 'மாகாணம்' என்ற சொல்லைச் சேர்க்கவும்.

**XXVI விதிக்கான திருத்தம்** - 1 ஆவது உட்கூறின் 'முக்கோணம் ' என்ற சொல்லை நீக்கி 'செவ்வகம்' என்ற சொல்லைச் சேர்க்கவும்.

(2) அதே உட்கூறில் 'அடங்கியுள்ள' என்ற சொற்களுக்கு முன்பு '11 நட்சத்திரங்கள்' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

மேற்குறிப்பிடப்பட்ட எல்லா திருத்தங்களும் வாக்குக்கு விடப்பட்டு நிறைவேற்றப்பட்டன.

**5 ஆவது தீர்மானம்** - இந்தச் செயற்குழுக் கூட்டம் அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் அமைப்பு விதிகளை ஏற்றுக் கொண்டு அதன்படி சம்மேளனம் செயல்படும் என்று அறிவிக்கிறது.

இந்தக் கட்டத்தில் அமைப்பு விதிகள் மிகவும் அதிகமாகி விட்டன என்றும் எனவே அதன் சில பகுதிகளை 'நிலை ஆணை களில்' சேர்த்துவிட்டு அரசியல் விதிகளை சிறிய அளவில் வைத்துக் கொள்ளலாம் என்றும் டாக்டர் பாபாசாகேப் தெரிவித்தார்.

தீர்மானம் ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது.

**தீர்மானம் எண் 6.** நாடாளுமன்றம், மாகாண சட்டமன்றங் கள், நகர மன்றங்கள், மாவட்ட மற்றும் வட்டார அமைப்புகளுக்கு ஷெட்யூல்டு வகுப்பினருக்கு இட ஒதுக்கீடு செய்துள்ள ஏற்பாட்டை உடனடியாக அடுத்த தேர்தலுக்கு முன்பே நீக்க வேண்டுமென்று சம்மேளனத்தின் செயற்குழு கருதுகிறது.

முன்மொழிந்தவர் : திரு. ஏ.ஜி.பவார்.

வழி மொழிந்தவர் : திரு. ஏ.ரத்தினம்

இந்தத் தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

**தீர்மானம் 7. (1)** தீண்டத்தகாதவர்களின் பிரச்சினைகளுக்கு தீர்வுகான திட்டக் கமிஷன் சம்மேளனத்தைக் கலந்தாலோசிக்கத் தவறியதைக் குறித்து சம்மேளனத்தின் இந்த செயற்குழுக் கூட்டம், கமிஷன் மீது தனது கண்டனத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

(2) தீண்டாமையையோ அல்லது தீண்டத்தகாதவர்களின் வறுமையையோ ஒழிப்பதற்கு திட்டக் கமிஷனின் செயற்திட்டங்களில் எந்தவித யோசனையும் இல்லை என்று சம்மேளனத்தின் இந்தச் செயற்குழு கருதுகிறது.

(3) தீண்டத்தகாதவர்களும் சாதி இந்துக்களும் கட்டாயமாக சேர்ந்து வாழவேண்டுமென்ற அடிப்படையிலான கிராமப்புற அமைப்பே தீண்டாமைக்கும், தீண்டத்தகாதவர்களின் வறுமைக்கும் வேராக விளங்குகிறது என்று சம்மேளனத்தின் செயற்குழு கருதுகிறது.

(4) இரண்டு தரப்புகள் கூடிவாழத் தீர்மானித்தால் ஒவ்வொரு தரப்பும் மற்ற தரப்பின் எண்ணங்களை, நோக்கங்களை புரிந்து கொள்ள வேண்டும். அவர்களுடைய சொற்களுக்குப் பின்னே என்ன நினைக்கிறார், எவ்வாறு சிந்திக்கிறார் என்பதைக் குறித்து ஒரு தெளிவு கிடைக்கும். சாதி மனப்பான்மையில் அடங்கியிருப்பது என்ன? அது எவ்வாறு வேலை செய்கிறது? ஒரு நிகழ்வை அது எவ்வாறு பிரதிபலிக்கிறது? அடையாளம் காணத் தகுந்த கூட்டாண்மை செயல்பாடு அதற்குள்ளதா? அப்படியென்றால் தெரிந்து கொள்ள வேண்டிய மாதிரி எதாவது உள்ளதா? அதிலிருந்து ஏதாவது நாம் கற்றுக் கொள்ள முடியுமா? உண்மையில் எங்கிருந்து அதைத் தொடங்குவது?

சாதி இந்துக்களின் எதிர் நடவடிக்கைகளை கற்றுக்கொள்ள நாம் தவறியதும் நமது கடந்தகால தவறுகளுக்கானப் பிரசாரங்களுக்கும், அறிக்கைகளுக்கும் பின்னே உள்ள விஷயங்களைத் தெரிந்து கொள்ளாததும்தான் அது எனலாம். நாம் அக்கறை கொண்டுள்ள இந்து மனப்போக்கின் மாதிரியை ஒரு சாதி இந்துவிடம் காண முடியாது. (ஆனால் இரும்புத் திரைக்குப் பின்தான்.)

(5) கூடி வாழும் இந்த அமைப்பு ஒழிக்கப்பட வேண்டும் என்பதே செயற்குழுவின் உறுதியான கருத்தாக உள்ளது.

(6) சாதி இந்துக்களின் ஆளுமையின் கீழ் சிறு சிறு குழுக்களாக

சிதறிக் கிடக்கும் தீண்டத்தகாதவர்களை அவர்களுக்கென்ற தனியான கிராமங்களில் குடியமர்த்தலாம் என்று செயற்குழு கருத்துத் தெரிவிக்கிறது.

(7) விவசாயத்திற்குத் தகுதியான தரிசு நிலங்களில், வெற்று நிலங்களில் தீண்டத்தகாதவர்களின் குடியிருப்புகளை அமைக்க அந்நிலங்களை ஒதுக்கிட திட்டக்கமிஷனை செயற்குழு வலியுறுத்துகிறது.

இதற்கு வேண்டிய நிதி ஆதாரங்களுக்கு உப்பு வரி வதிக்கலாம் என்று செயற்குழு கருதுகிறது.

சாதி இந்துக்களுடன் ஷெட்யூல்டு வகுப்பினர் சேர்ந்து வசிக்கும் வரை நமது மக்கள் விடுதலை பெற்று சுதந்திரமாக வாழமுடியாது, சாதி இந்துக்களின் ஆதிக்கத்திலிருந்து தப்பமுடியாது என்று இவைகளை முன்மொழிந்து டாக்டர் பாபாசாகேப் தமது கருத்தை விளக்கினார். ஷெட்யூல்டு வகுப்பினருக்கு புதிய சேரிகளை உருவாக்க மெட்ராஸ் அரசு விரும்புவதை தாம் கடுமையாக எதிர்ப்பதாகக் கூறினார். புதிய சேரிகளை உருவாக்குவதன் மூலம் தீண்டாமையை நிரந்தரமாக்க ஆக்கக்கூடாது என்று கூறினார். அவற்றை எரிக்க வேண்டுமென்று அவர் விரும்பினார்.

தீர்மானம் ஒருமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**தீர்மானம் எண் 8.** (1) கோவா சத்தியாக்கிரகத்தில் நேர்ந்த மரணங்களுக்கு சம்மேளனத்தின் செயற்குழு வருத்தம் தெரிவிக்கிறது. கோவா விடுதலை பெறுவதற்கு சத்தியாக்கிரகம் சரியான வழியல்ல என்று செயற்குழு கருதுகிறது.

(2) குழு புரிந்துகொண்டதன்படி, சத்தியாக்கிரகம் என்பதில் சத்தியம் இரண்டு தரப்பிற்கும் பொதுவானது. வித்தியாசம் ஆக்கிரகத்தில்தான் இருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் காந்திய முறையிலான சத்தியாக்கிரகம் சாத்தியமாகலாம். அதை முயற்சி செய்து பார்க்கலாம். சத்தியத்தை பற்றி உடன்பாடு இல்லாத இடத்தில் காந்திய முறையிலான சத்தியாக்கிரகம் பயனற்றது. எனவே, கோவா சத்தியாக்கிரகத்தில் ஷெட்யூல்டு வகுப்பினர் கலந்து கொள்வதை செயற்குழு பரிந்துரைக்க முடியாது.

*(3) கோவா இந்தியாவின் பகுதியாகவேண்டுமென்றும் போர்த்துகீசியர்கள் இந்தியாவை விட்டுச் செல்ல வேண்டும் என்றும் சம்மேளனத்தின் செயற்குழு கருதுகிறது. இந்த நோக்கம் நிறைவேற மூன்று வழிகள் உள்ளன. (1) விலைக்கு வாங்குதல் (2) குத்தகைக்கு எடுத்தல் அல்லது (3) யுத்தம். இந்த மூன்று வழிகளில் ஒன்றை அரசு ஏற்றுக் கொள்ளத் தயாரில்லை என்றால் தம்மிடம் வேறு எந்த ஆயுதம் உள்ளது என்பதை மக்களுக்குக் கூறுவது அரசின் கடமை யாகும்.*

*சத்தியத்தை ஏற்றுக் கொண்டுள்ள இரண்டு தரப்புகளுக் கிடையே சத்தியாக்கிரக முறை சாத்தியம் என்று டாக்டர் பாபாசாகேப் விளக்கினார். ''அக்கிரகா''வைப் பற்றித்தான் தரப்புகளுக்கிடையே கருத்து வேறுபாடு. இந்தியர்களுக்கு சுயாட்சி உரிமை உண்டு என்பதை பிரிட்டிஷ் மக்களும் இந்தியர்களும் ஏற்றுக் கொண்டதால் தான் ஆங்கிலேயர்களால் இந்தியர்களுக்குச் சுதந்திரம் கொடுக்க முடிந்தது. 1833 ஆம் ஆண்டிலேயே மெக்காலேயால் சுயாட்சி என்ற கொள்கை அறிவிக்கப்பட்டுள்ளது. இந்தியர்கள் காட்டுமிராண்டிகள் அல்லர் என்று மெக்காலே கூறியுள்ளார். சிறப்பான நாகரிகமும் தங்களுக்கே உரிய கலாசாரமும் இந்தியர்களுக்குண்டு. எனவே தங்களைத் தாங்களே ஆள்வதற்கு அவர்களுக்கு உரிமை அளிக்கப் பட வேண்டும். ஆனால் கோவாவைப் பொறுத்தவரையில் கோவா வின் விடுதலையை போர்த்துகீசிய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே கோவாவை விடுவிக்கும் ஆயுதம் என்ற ரீதியில் சத்தியாக் கிரகம் பயனற்றது மட்டுமில்லாமல் ஆபத்தானதும்கூட. துப்பாக்கி குண்டுகளுக்கும் படுகொலைகளுக்கும் எமது மக்களை பலிகொடுக்க மாட்டேன். நமக்கு துப்பாக்கிகள் கொடுத்தால் போராடுவோம். எனவே மேலே குறிப்பிட்ட தீர்மானத்தை நிறைவேற்ற விரும்பு கிறோம்.*

*தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.*

***தீர்மானம் எண் 9.*** *இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை திருப்திகரமாக இல்லை என்று இந்தக் கூட்டம் கருதுகிறது. நாடாளு மன்ற முறை அரசை அது பலப்படுத்துவதாக இல்லை என்பதுடன் இந்தியாவின் பாதுகாப்பைப் பலப்படுத்துவதாகவும் இல்லை.*

இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிறகு திரு ராஜபாவ் கோப்ரகடேயை அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் பொதுச்செயலாளராக அவர் நியமித்தார்.

**தீர்மானம் எண் 10.** திரு.கோப்ரகடேயை பாராட்டித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

செயற்குழு கூட்ட நடவடிக்கைகளைச் சிறப்பாக வழிகாட்டி நடத்தியதற்கு தலைவருக்கு நன்றி தெரிவிக்கப்பட்டது.

செயற்குழுவின் எல்லா உறுப்பினர்களுக்கும் நன்றி தெரிவிக்கப்பட்டது.

பின்வரும் விவரங்களைக் கொண்ட மொழி வழி மாகாணங்கள் குறித்த தீர்மானம் ஒன்றைத் தயாரிக்க தலைவருக்கு அதிகாரம் அளிக்கவேண்டுமென்று ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் செயற்குழு முடிவெடுத்தது.

(1) நாட்டின் ஒற்றுமையைப் பாதுகாக்கும் வகையில் மாகாணங்களைப் பிரிப்பது.

(2) ஆங்கிலமும், இந்தியும் நிர்வாக மொழிகளாக இருக்கும்.

(3) பம்பாய் ஐக்கிய மகாராஷ்டிராவில் இருக்கும்.

(4) ஹைதராபாத் கவர்னரின் மாகாணமாக இந்தியாவின் இரண்டாவது தலைநகரமாக இருக்கும்

(5) ஹைதராபாத் மாகாணம் பல மொழிவழிப் பகுதிகளாகப் பிரிக்கப்படும்.

● ● ●

# 57

# ‘புத்தரும் அவருடைய தம்மாவும்’ என்ற நூல் குறித்து ஜவாஹர்லால் நேருவுக்குக் கடிதம்

*1956 செப்டம்பர் 14ல் ‘புத்தரும் அவருடைய தம்மாவும்’ என்ற நூல் குறித்து ஜவாஹர்லால் நேருவுக்கு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கடிதம் ஒன்று எழுதினார். அது பின்வருமாறு : ஆசிரியர்கள்.*

*அன்புள்ள பண்டிட்ஜி அவர்களே,*

*‘புத்தரும் அவரது தம்மாவும்’ என்ற நூலின் உள்ளடக்கப் பட்டியல் அடங்கிய சிறு பிரசுரத்தின் இரண்டு பிரதிகளை இத்துடன் அனுப்பியுள்ளேன். அந்தப் புத்தகம் இப்பொழுது அச்சாகிக் கொண்டிருக்கிறது. உள்ளடக்கப் பட்டியலிலிருந்தே அது எவ்வளவு விரிவான புத்தகம் என்பதை காண்பீர்கள். 1956 செப்டம்பரில் அது கடைகளில் விற்பனைக்கு வந்துவிடும். நான் அதற்காக ஐந்து ஆண்டுகள் செலவழித்துள்ளேன். இந்தச் சிற்றேடு உங்களுக்கு அந்த நூலின் தரத்தைத் தெளிவுபடுத்தும்.*

*அச்சிட்டு வெளியிடுவதற்கான செலவு அதிகமாக உள்ளது. சுமார் 20000 ரூபாய் வரை ஆகும். இது என்னுடைய தகுதிக்கு அப்பாற்பட்டது. எனவே உதவிக்காக பல இடங்களை அணுகி வருகிறேன்.*

*பல்வேறு நூலகங்களில் வினியோகிக்கவும் புத்தரின் 2500 ஆம் பிறந்தநாள் விழாவில் கலந்து கொள்ள வரும் அறிஞர்களுக்கு வழங்கவும் இந்திய அரசு 500 பிரதிகளை வாங்கலாம் என்று கருதுகிறேன். புத்தமதத்தில் உங்களுக்குள்ள ஆர்வம் எனக்குத் தெரியும். எனவேதான் இதை உங்களுக்கு எழுதுகிறேன். இந்த விஷயத்தில் நீங்கள் சிறிது உதவி செய்வீர்கள் என நம்புகிறேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*

*(ஒப்பம்)* ***பி.ஆர். அம்பேத்கர்***

# 58

# பிக்குகள் தம்மாவைப் பிரச்சாரம் செய்து புத்தருக்குச் சேவை செய்ய வேண்டும்

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**
எம்.எ., பிஎச்டி., டி.எஸ்ஸி., எல்எல்.டி., டி.லிட்., பாரிஸ்டர்
மாகாணங்களின் கவுன்சில் உறுப்பினர்
26, அலிப்பூர் ரோடு சிவில் லைன்ஸ், டில்லி.

அக்டோபர் 30, 1956

என் அன்பிற்குரிய வாலி சின்ஹா,

உங்கள் 1956 அக்டோபர் 25 தேதியிட்ட கடிதத்திற்கு உங்களுக்கு நன்றி. அது உண்மையிலேயே பெரும் நிகழ்ச்சிதான்; மத மாற்றத்திற்கு வந்த கூட்டம் எதிர்பார்த்ததை விட அதிகம்தான். எல்லாம் நன்றாகவே நடந்தது. புத்தருக்கு நன்றி.

பணியை நல்ல முறையில் தொடங்கிய பிறகு எதிர்காலத்தில் அதன் தொடர்ச்சியான முன்னேற்றத்தில் கவனம் செலுத்த வேண்டும் என்பதை நீங்கள் உணர்ந்திருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். புத்தமதம் பற்றிய அறிவை அவருடைய தம்மாவை ஏற்றுக்கொண்டு என் சொற்களைப் பின்பற்றும் மக்களிடையே வளர்க்க வழிமுறைகளை நாம் காணவேண்டும். தம்மாவை மக்களிடையே பரப்புவதற்கு நாம் ஏராளமான போதகர்களுக்குப் பயிற்சி அளிக்க முடியும். ஆனால் இதை நல்ல முறையில் நிறைவேற்ற தகுதியானவர்கள் புத்த பிக்குகள்தான். சாதாரண மனிதர்களை விட அவர்களை அதிக கௌரவமாக நடத்துவார்கள்.

தங்களுக்கு அதிகப் பணிகள் காத்திருக்கின்றன என்பதில் பிக்குகள் அதிக மகிழ்ச்சியடைவார்கள் என்பதே என் கருத்து. பிக்குகளைப் பொறுத்தவரையில் மக்கள் மொழியைக் கற்றுக் கொள்வதில் அவர்கள் அக்கறை காட்டுவதில்லை என்பதுதான் பிரச்சினை. சங்கம் தன்னுடைய கண்ணோட்டத்தை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன். ஒதுங்கிவாழும் துறவிகளாக இல்லாமல் கிருத்துவ சமயப் பிரசாரகர்கள் போன்று சமூக பணியாளர்களாக,

போதகர்களாகப் பணியாற்ற வேண்டும். நான் ஏற்கனவே கூறிய படி அவர்கள் ஆர்கான்களுமில்லை, சமூகத்திற்குப் பயனுள்ள உறுப்பினர்களுமில்லை. இந்தக் கருத்து அவர்கள் மண்டையில் நுழைக்கப்பட வேண்டும். புத்தருடைய தம்மாவை பிரசாரம் செய்வதன் மூலம் அவர்கள் அவருக்கு அதிக சேவை செய்யமுடியும். புத்த மத அடிப்படைகளை உணர்த்திட பிக்குகளுக்கும் பிக்குகளல்லாதவர்களுக்குமான ஒரு தத்துவக் கருத்தரங்கை நடத்தவேண்டும் என்ற உங்கள் கருத்து எனக்குப் பிடித்திருக்கிறது. பல்வேறு இந்திய மொழிகளை கற்க அவர்களுக்கு உதவினால் அவர்களை இந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்கு அனுப்ப முடியும்.

இந்திய இளைஞர்களின் மனநிலையைப் பொறுத்த வரையில் துறவுத் தத்துவங்களை அவர்களுக்குக் கற்றுக்கொடுப்பது மிகக் கஷ்டம் என்று நான் தெரிந்துகொண்டேன். ஜப்பானிய திருமணமான மதகுருக்களைப் போல, புராட்டஸ்டன்ட் கிருத்துவர்கள் செய்தது போல நாமும் அவர்களை உருவாக்குவதே சிறந்தது எனக் கருதுகிறேன். அவர்கள் பயிற்சிக் காலத்தின்போதும் பிறகு மக்களிடம் மதக்குருக்களாக பணியாற்றச் செல்லும்போதும் அவர்களுக்கு ஆதரவு அளிக்க நாம் வழிவகைகள் காணவேண்டும்.

பம்பாயில் நடைபெறும் மதமாற்றச் சடங்குகள் டிசம்பரில் அனேகமாக கிருஸ்துமஸ் விடுமுறைகளில் இருக்கும். அப்பொழுது தான் மற்ற நேரங்களில் உபயோகப்படுத்த முடியாத பயண வசதிகளைப் பயன்படுத்த முடியும். எனது பம்பாய் நண்பர்களை கலந்தாலோசித்துவிட்டு சரியான தேதியை உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

மகா போதி இதழில் நாகபுரி சடங்கு குறித்து முழு விளம்பரம் அளிப்பீர்கள் என நம்புகிறேன். முக்கியமாக பின்வரும் விஷயங்களை குறிப்பிடும்படி கேட்டுக் கொள்கிறேன்:

1. முதல் நாளன்று மூன்று இலட்சத்தி எண்பதாயிரம் பேர் புத்தமதத்தில் இணைந்தனர். சடங்கிற்குப் பிறகு பலர் வந்ததால் மறுநாள் நிகழ்ச்சியின் முதல் விஷயமாக மேலும் ஒரு சடங்கு நடைபெற்றது.
2. 1956 அக்டோபர் 16ல் சந்தாவில் வைத்து வேறு ஒரு மாநாடு மாலையில் நடைபெற்றது. அங்கும் ஒரு மதமாற்றச் சடங்கு நடைபெற்றதுடன் 3 இலட்சம் மக்கள் மதமாற்றம் அடைந்தனர்.

3. நான் திரும்பிய பிறகு அகோலாவில் மேலும் ஒரு மதமாற்றச் சடங்கு நடைபெற்றது குறித்து நேற்றைய செய்திப் பத்திரிகையில் செய்திகள் வந்துள்ளன. 2000 பேர் மதம் மாறியுள்ளனர்.

4. நாகபுரியில் நடைபெற்ற மதமாற்றச் சடங்கில் கலந்துகொண்ட கூட்டத்தின் சிறந்த நிழற்படங்களை 'நவ்யுக்' என்ற மராத்தி இதழ் வெளியிட்டுள்ளது.

5. மதமாற்றத்திற்காக பல இடங்களிலிருந்தும் எனக்கு கடிதம் வருகிறது.

மகாபோதி அமைப்பு வெளியிடும் இதழின் சிறப்பு மலர் வெளியிடத் திட்டமிருந்தால், நிழற்படங்கள் அவசியம் என்று விரும்பினால் அவற்றைப் பெற நான் உதவ முடியும். தயவுசெய்து எனக்குத் தெரிவியுங்கள்.

எங்கள் பயணத் திட்டத்தைப் பற்றிய உங்கள் கேள்விக்கு ஏற்கனவே அதன் நகல் ஒன்று உங்களுக்கு அனுப்பட்டுவிட்டதாக எனக்குக் கூறப்பட்டுள்ளது. எப்பொழுது நான் சாரநாத்தில் இருப்பேன் என்பதை அதிலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

உங்கள் உண்மையுள்ள,
(ஒ - ம்) **டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்**

**திரு. டி. வாலி சின்ஹா**
பொதுச் செயலர்,
இந்திய மகா போதி சங்கம்
4- ஏ, பக்கிம் சட்டர்ஜி தெரு,
(கல்லூரிச் சதுக்கம்) கல்கத்தா 2.

• • •

1 : மகாபோதி, 1957 மே, எண் 5, பக்கம் 226

## 59

# புத்த மதத்தை நிலைநிறுத்த எம் மக்கள் எதையும் தியாகம் செய்வார்கள் என நம்புகிறேன்

*''1956 நவம்பர் 17ல் நடைபெறவுள்ள உலக புத்தமத மகா நாட்டில் கலந்து கொள்ள திரு பி.எச்.வராலே மற்றும் டாக்டர் மாவ்லங்கருடன் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கரும் திருமதி அம்பேத் கரும் நேபாளம் சென்றனர். நேபாளத்துக்குப் புறப்படுகையில் 1956 நவம்பர் 13 ல் டில்லி விமான நிலையத்தில் வைத்து திரு.ஒய்.சி. சங்கராநந்த சாஸ்திரி மிகவும் பணிவுடன் டாக்டர் அம்பேத்கரிடம் பின்வருமாறு கேட்டார்: 'பாபா சாகேப், உங்களுடைய உடல்நிலை மோசமாகிக் கொண்டிருக்கிற நிலையில் இந்தியாவில் தம்மாவை எவ்வளவு தூரம் பரப்ப முடியும்?'' பாபா சாகிப்பிற்கு சிறிது எரிச்சலாக இருந்தாலும் ''புத்த மதத்தை பரப்புவது போன்ற பணி களைப் பொறுத்தவரையில் எனக்கு உடல்நிலை மோசமாக இல்லை'' என்று வலியுறுத்திக் கூறினார். எனது எஞ்சிய வாழ்நாளில் ஒவ்வொரு நொடியையும் புத்தரின் தம்மாவை பாரதத்தில் பரப்பும் பணிக்குச் செலவிடத் தயாராக உள்ளேன்'' என்றார் அவர்.*

டிசம்பர் மாதத்தில் பம்பாயிலுள்ள இலட்சக்கணக்கான மக்களுக்கு 'தீக்ஷை' அளிக்கப் போகிறேன். 1956 அக்டோபர் 14ல் நாகபுரியில் நடைபெற்ற மறுமலர்ச்சிக் கூட்டத்தைப் போன்று பம்பா யிலும் ஏற்பாடு செய்யப்படும். இலட்சக்கணக்கான மக்கள் புத்த மதத்தில் சேருவார்கள். நாகபுரியில் நடைபெற்ற மதமாற்ற கூட் டத்தைப் போன்று இந்தியாவின் மற்ற நகரங்களிலும் கூட்டங் களுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

தீண்டத்தகாதவர்களாக நடத்தப்படும் மக்கள் மட்டுமின்றி புத்தரின் கொள்கைகளில் நம்பிக்கையுள்ள சாதிமத வேறுபாடின்றி எல்லா மக்களும் இந்த தீக்ஷை சடங்கில் கலந்து கொண்டு புத்த மதத்தைத் தழுவ வேண்டும்.

அங்கு குழுமியிருந்த மக்களிடம் பேசுகையில் பாபா சாகேப் வலியுறுத்திக் கூறியதாவது: புத்தர் விஷ்ணுவின் மறு அவதாரம் என்று கூறுவது பெரும் தவறு. இது ஒரு தவறான விஷமத்தன மான பிரசாரம். இந்தக் கொடுமையான கருத்தைப் பரப்புபவர்கள் பிராமணீயத்தைப் பின்பற்றுபவர்களைத் தவிர வேறு யாருமில்லை. சமூகத்தில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநிறுத்திக்கொள்ள பரஸ்பர பகைமையும் சமத்துவமற்ற சமுதாயப் படிநிலைகளை தொடர்ந்து வைத்துக்கொள்வதே அவர்களின் முக்கிய நோக்கம். சாதி மற்றும் பரஸ்பர பகைமை என்ற அடிப்படையிலான இந்த தீய சமுதாய நிலையை ஒழிக்க என் வாழ்க்கை முழுவதும் போராடி வருகிறேன். உண்மையில், இந்தியாவில் புத்தமதத்தின் மறுமலர்ச்சியை காலந் தாழ்ந்து ஆரம்பித்துவிட்டேன் என்ற குற்ற உணர்வுள்ளது. இருப் பினும் தங்கள் சொந்த வசதிகளைத் தியாகம் செய்து நம்பிக்கை யுடன் என் பின்னே நம் மக்கள் வருவார்கள் என்ற நம்பிக்கை உள்ளது. இந்தியாவில் புத்த தம்மத்தைப் பரப்புவதற்கு உண்மை யுடன் தொடர்ந்து போராடுவார்கள் என்று நான் நிச்சயமாக நம்பு கிறேன்.

● ● ●

## இணைப்பு - 1

### காட்டுமிராண்டித்தனமான சக்தி தீண்டத்தகாதவர்களை நிலைநிறுத்திவிடாது

- மகாத்மாகாந்தி

மஹத் சத்யாக்கிரஹா சம்பந்தமாக யங் இந்தியாவில் வெளி வந்த கட்டுரையாகும் இது.

### ''தீண்டத்தகாதமையும் நேர்மையின்மையும்''

மஹத்திலிருந்து ஒரு நிருபர் எழுதுகிறார்:

மஹத்தில் கடந்த மார்ச் 20 அன்று தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டத்தகாதவர்களுக்கும் இடையில் கலகம் ஏற்பட்டதை உங்களுக்குத் தெரியப்படுத்துவது எனக்கு மிகுந்த மனவேதனையளிக்கிறது. கடந்த மாதத்தின் 19 மற்றும் 20 ஆம் தேதிகளில் கொலாபா மாவட்ட நலிந்த மக்கள் குழுவினரின் ஒரு மாநாடு நடைபெற்றது. அக்கூட்டம் மிகவும் வெற்றிகரமாக நடைபெற்றது. அந்த மக்கள் கூட்டம் கலைந்து கொண்டிருந்தபோது அவர்கள் தாகத்தில் இருந்ததனாலும், சூரிய வெப்பம் கடுமையாக இருந்ததனாலும் அவர்கள் பொதுக் குளத்திற்குச் சென்று தண்ணீர் குடிக்கலாம் என்று பம்பாய் சமூக சேவை இயக்கத்தின் திரு. ஏ.வி. சித்ரே சொன்னார். நீர்க் குளத்திற்குப் போவதற்கெதிரான அறிவுரையைக் கூற சிலர் முயன்றனர். ஆனால் தலைவரான டாக்டர் அம்பேத்கர் அம்மக்களை நீர்க் குளத்திற்கு இட்டுச் செல்ல முடிவு செய்தார். காவல்துறை ஆய்வாளரால் கூட நிலைமையின் முக்கியத்துவத்தை உணர முடியவில்லை. கூட்டத்தினர் நீர்க் குளத்திற்கு முன்னேறிச் செல்வதைத் தடுப்பதற்குப் பதிலாக, அவரும் அவர்களுடன் நடந்து சென்றார். அந்த நீர்க்குளமானது பிராமணர்களின் இருப்பிடத்திற்கு மத்தியில் இடம்பெற்றுள்ளது. தீண்டத்தகாதவர்கள் நீர்க்குளத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதை யாரும் அறிந்திருக்கவில்லை யாதலால் தொந்தரவுகள் எதுவும் நிகழவில்லை. நூற்றுக்கணக்கானோர் நீர்க் குளத்திற்குச் சென்று ''ஹரஹர மகாதேவா'' என்று மகிழ்ச்சிக் குரலுடன் தங்களது தாகத்தைத் தணித்துக் கொண்டனர். இதற்கிடையில் அந்த இடத்திற்குகத் தீண்டத் தகுந்தவர்கள் வந்தனர். அக்காட்சியை மிகுந்த ஆத்திரத்துடன் கண்டனர். பின்னர் அத்தீண்டத்தகாத மக்கள்

கூட்டம் மதிய உணவுக்காகப் பந்தலுக்குத் திரும்பிச் சென்றனர். இது நிகழ்ந்த ஒரு மணி நேரத்திற்குள் மஹாத் மக்கள், குறவர்களின் காட்டுத்தனமான குரல்களைக் கேட்டு திடீரென்று விழிப்படைந் தனர். தீண்டத்தகாதவர்கள் விரேஷ்வரின் கோயிலுக்குள் நுழையும் யோசனையில் உள்ளனர் என்று அவர்களிடம் கூறப்பட்டது.

அது ஒரு பொய்யான கூச்சலாக இருந்தது; உடனடியாகத் தங்கள் கைவசம் தடிகளுடன் தீண்டத்தகுந்தவர்களின் கோபக் கூட்டமே கோயிலுக்குள் குவிந்தது. ஏழ்மை நிலையிலுள்ள அத் தீண்டத்தகாதவர்களோ கோயிலுக்குள் செல்லும் எந்த நோக்கமும் கொண்டிருக்கவில்லை. ஆனால் கோயிலுக்குள் நுழைய எந்தத் தீண்டத்தகாதவரும் முயற்சிக்கவில்லை என்பதைக் கண்ட தீண்டத் தகுந்தவர்கள் உண்மையில் மூர்க்கத்தனமாக ஓடினர். கடைத் தெரு விற்குள் சென்றனர். தெருவில் அவர்களைத் தாண்டிச் சென்று ஒவ்வொரு தீண்டத்தகாதவரையும் அடிக்கத் தொடங்கினர். தீண்டத் தகுந்தவர்களினால் இந்த அடிதடிகள் நடந்து கொண்டிருந்தபோது ஒரு தீண்டத்தகாதவர்கூட எதிர்ப்பைக் காட்டவில்லை. தீண்டத்தகாத வர்கள் மீது இரக்கம் கொண்டிருந்த ஒரு சில தீண்டத்தகுந்தவர்கள் அவர்களைப் பாதுகாக்க முயற்சித்தனர். ஆனால் அந்த மூர்க்கமான கூட்டத்தினரைத் தடுக்க முடியவில்லை. சக்கிலியர்கள் மற்றும் அவர்களைப் போன்றவர்களின் குடிசைகளுக்குள்ளும் அவர்கள் வேகமாகப் பாய்ந்து அவர்களைக் கடுமையாக அடித்தனர். அந்த உதவியற்ற தீண்டத்தகாதவர்களோ உதவிக்காக ஓடினர்; ஆனால் கடைக்காரர்கள் யாரும் அவர்களுக்கு உதவவில்லை. நேரடியாகச் சண்டைக்கு பந்தலைவிட்டு வராததற்காக தீண்டத்தகுந்தவர்கள் ஏளனம் செய்தனர். பந்தலுக்குள் கிட்டத்தட்ட 1500 பேர் இருந்தனர், சண்டையிட அவர்கள் விருப்பம் தெரிவித்திருந்தால் அங்கு மிகப் பெரிய ஆபத்து ஒன்று நிகழ்ந்திருக்கும். இந்துத்துவம் அவமானப் படுத்தப்பட்டிருக்கும். பொதுவான குளங்கள் மற்றும் கிணறுகளி லிருந்து தண்ணீர் எடுக்கத் தீண்டத்தகாதவர்கள் சட்ட ரீதியாக உரிமை கொண்டிருந்தனர் என்று பம்பாய் சட்டமியற்றும் சபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் மற்றும் மஹத் நகராட்சி மன்றத்தில் தெரிவிக்கப்பட்ட கருத்து பலத்தின் மீது தாம் வழங்கிய அறிவுரையை டாக்டர் அம்பேத்கர் நியாயப்படுத்தினார்.

சத்தியாக்கிரகத்தின் மீதும், இந்து சமுதாயத்தின் தீண்டத்தகாத வர்களின் பிரச்சினை குறித்தும் தமது கருத்துக்களை மகாத்மா காந்தி இவ்வாறு தெரிவித்தார்.

நிருபரின் கடிதத்திலிருந்து கூடுதல் விளக்கங்களைக் கொடுக்க பல விவரங்களை நான் தவிர்த்துள்ளேன். ஆனால் அக்கடிதம் எனக்கு உண்மையானதாகவே தோன்றுகிறது, மேலும் அது எந்த வகையிலும் ஒரு கூடுதல் அபிப்பிராயமாகத் தோன்றவில்லை. அச்சம்பவம் சரியான முறையில் தெரிவிக்கப்பட்டுள்ளது என்று மனதில் நினைத்தால் உயர் வகுப்பினர் என்று அழைக்கப்படுகின்றவர்களின் ஒரு பகுதியினரின் தூண்டுதலற்ற சட்ட விரோதச் செயல்களைப் பற்றி எந்தக் கேள்வியும் இருக்க முடியாது. ஏனெனில் குளத்தில் தண்ணீர் குடித்ததுதான் ''தீண்டத்தகுந்தவர்களைக் கூட்டிச் கொண்டு வந்துள்ளது அல்ல. ஆனால் கோவிலுக்குள் நுழையத் தீண்டத்தகாதவர்கள் விரும்பினார்கள் என்பதனால்தான் அவர்கள் கூடியுள்ளனர் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஆனால் மனநலம் நேர்மைக்குப் பக்கத்தில் நீடிப்பதை யாரும் எதிர்பார்க்க முடியாது. அதற்குப் பின்னர் தீண்டத்தகாதவர்கள் இருப்பதற்கு எந்தக் காரணமும் இல்லை. அது ஒரு மனிதத் தன்மையற்ற அமைப்பாகும். அது நிலைகொள்ளாததாக இருந்து வருகிறது. திடுதிடுப்பான கொடுமையான சக்தி மூலம் மதவெறி கொண்டவர்கள் என்று கூறப்படுபவர்களினால் ஆதரிக்கப்பட வேண்டும் என்று கோரப்படுகிறது.

மிகக் கூடுதலாகச் சினமுற்றும் சூழ்நிலைகளில் தமது தன்னடக்கத்தின் மூலம் தீர்வு காண்பதற்கு ஒரு காலடி முன்செல்ல அத்தீண்டத்தகாதவர்கள் ஒரு கேள்வியை எழுப்பியுள்ளனர். பழிக்குப் பழிவாங்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்தால் அது குற்றச்சாட்டைத் தெரிவிப்பதற்கு சிரமத்தை ஏற்படுத்தியிருக்கக் கூடும். ஒட்டுமொத்தக் குற்றமும் தீண்டத்தக்கவர் பக்கமே உள்ளது. மிருகத்தனமான சக்தி தீண்டத்தகாமையை நிலைநிறுத்தி விடாது. அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்ட இனத்தவர்களுக்கு ஆதரவாக உணர்வுகளின் திடீர் நிலைமாற்றத்தை அது கொண்டுவரக்கூடும். ஏழ்மை நிலையில் உள்ள தீண்டத்தகாதவர்களைப் பாதுகாக்க முயற்சி செய்த சில ''தீண்டத்தகுந்தவர்கள்'' அங்கு இருந்தார்கள் என்பது காலத்தின் ஒரு பதிலாகும். இத்தகைய சந்தர்ப்பங்களில் மௌன அனுதாபம் காட்டுவதால் ஒரு பயனும் இல்லை. தீண்டத்தகாமையை நீக்குவதுதான் மிக முக்கியத்துவம் கொண்டது என்று கருதும் ஒவ்வொரு இந்துவும் இத்தகைய நிகழ்ச்சிகளின்போது தாழ்த்தப்பட்ட பிரிவினரை வெளிப்படையாக பாதுகாப்பதன் மூலம் தமது பரிவை நிரூபிக்க வேண்டும். மற்றும் ஒடுக்கப்பட்ட

வர்களைப் பாதுகாப்பதில் தமது தலையை உடைத்துக் கொண்டால் கூட பரவாயில்லை .

தங்களது தாகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக குளத்திற்குச் செல்லுமாறு தீண்டத்தகாதவர்கள் என்று அழைக்கப்படுபவர் களுக்கு ஆலோசனை கூறுவதன் மூலம், பம்பாய் சட்டசபைக் கவுன்சில் மற்றும் மஹத் நகர்மன்றத்தின் தீர்மானங்களை சோதனைக் குள்ளாக்குவதில் டாக்டர் அம்பேத்கர் முற்றிலும் நியாயமாக நடந்து கொண்டார் என்றே நினைக்கத் தோன்றுகிறது. இச்சீர்திருத் தத்தில் ஆர்வம் கொண்டுள்ள இந்து மகாசபையைப் போன்ற அமைப்புகள் இத்தகைய சம்பவம் எதையும் கவனத்தில் கொள்ளாமல் இருந்துவிடக் கூடாது. எனது நிருபரின் அறிவிப்புகளை அவர்கள் உறுதிப்படுத்த முடியுமானால், 'தீண்டத்தகுந்தவர்களின்' நட வடிக்கைகளை அவர்கள் கண்டிக்கட்டும். சந்தேகத்திற்கு இடமின்றி எல்லா வகையிலும் ஒரு கேடாகத் திகழும் தீண்டத்தகாமையை ஒழித்துக் கட்டுவதற்கு ஏற்ப அறிவுபூர்வமான பொதுக் கருத்து உருவாகட்டும்.''[1]

• • •

1. யங் இந்தியா, தேதி 28, ஏப்ரல் 1927
மீண்டும் அச்சிடப்பட்டது, கன்வீர், மஹாத் சமதா சங்காரி பக். 246 - 248.

# இணைப்பு - II

## மனிதனுக்கு மனிதன் இழைக்கும் காட்டுமிராண்டித்தனம்

*(எம்.கே. காந்தி)*

ஒரு கத்தியவாட் கிராமத்தில் ஒடுக்கப்பட்ட சமூகத்தின் ஓர் உறுப்பினருடைய இறந்து கொண்டிருக்கும் மனைவியின்பால் ஒரு மருத்துவத் துறை நபரின் காட்டுமிராண்டித்தனத்தைக் கணிக்கும் ஒரு மிகக் கேவலமான வழக்கைப் பற்றி நவஜீவன் லிருந்து ஒரு பகுதியை மற்றொரு தனிப்பகுதியில் காணலாம். அந்த வழக்கின் விவரங்களை வழங்கும் பொறுப்பிலிருக்கும் சார்ஜண்ட் அம்ரித் லால், மருத்துவத் துறை நபரினால் கூடுதல் தொல்லைக்கு ஆளாக்கப் பட்டு வரும் ஏழ்மையின் அடக்கு முறைக்கு உள்ளான வகுப்பினருக் கான பள்ளி ஆசிரியரின் அச்சத்திற்காக இடம் மற்றும் குழுவினரின் பெயர்களைக் கொடுக்க மறுத்துள்ளார். எப்படியானாலும் அப் பெயர்கள் தெரிவிக்கப்படும் என்று கருதுகிறேன். கூடுதல் சிரமங் களையும் அடக்குமுறையையும் அவதியுறுவதற்குத் துணிவு கொள்ள நம்மால் தாழ்த்தப்பட்ட இன மக்களை ஊக்குவிக்க வேண்டிய காலம் வரவேண்டும். அவர்களுடைய துன்பங்கள் ஏற்கனவே பெருமள வில் உள்ளன. ஏனெனில் கூடுதல் துன்பங்களை உண்மையில் அனு பவிக்க முடியாது. சரிபார்க்கப்பட முடியாத மற்றும் பின்பற்றப்பட முடியாத ஆதாரங்களைக் கொண்ட மனக்குறைகளின் மீது பொதுக் கருத்தைத் துயிலெழுப்பிவிட முடியாது. பம்பாயில் உள்ள மருத்துவ மன்றத்தின் விதிகள் எனக்குத் தெரியாது. சில இடங்களில் தமது கட்டணங்கள் செலுத்தப்படுவதற்கு முன்னர் கவனிக்க மறுக்கும் மருத்துவர் தமது மன்றத்திற்குப் பதிலளிக்க வேண்டியிருக்கும். மன்றத்தின் பட்டியலிலிருந்து அவரது பெயர் நீக்கப்பட வேண்டி யிருக்கும். மற்றும் வேறுவிதத்தில் ஒழுங்கு நடவடிக்கைக்கு உள் ளாவார். கட்டணங்கள் கண்டிப்பாகச் செலுத்தப்பட வேண்டியதுதான் என்பதில் சந்தேகமில்லை; ஆனால் நோயாளிகளை முறையாகக் கவனிப்பதுதான் ஒரு மருத்துவ நிபுணரின் முதலாவது கடமை யாகும். ஆயினும் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் உண்மையாக இருந் தால் தீண்டப்படாதவரின் குடியிருப்புக்குள் நுழைய மறுத்தால், தாமே நோயாளியைக் காண மறுத்தால், தாமே வெப்பமானியை நோயாளிக்கு வைக்க மறுத்தால், மருத்துவ நிபுணரின் உண்மையான மானுடநேயமின்மை உண்மையாகவே அவரிடம் இருக்கக்கூடும்.

தீண்டத்தகாத தத்துவம் எந்த சூழ்நிலையிலும் எப்போதேனும் நிச்சயமாகப் பயன்படுத்தப்படுமானால் தாமே அவமானப்படுத்தியிருக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் இந்த உறுப்பினருக்கே அது நிச்சயமாகப் பயன்படுத்தப்படக் கூடியதாக இருக்கும். ஆனால் எஸ்.ஜே.டி.தாக்கரின் நிருபர் விடுத்துள்ள அறிக்கையில் சிறிது மிகைப்படுத்தப்பட்டுள்ளது என்று நான் கருதுகிறேன். அப்படி எதுவும் இல்லையெனில், தமது மனிதத் தன்மையற்ற நடத்தை மூலம் அவர் இவ்வாறு வெறியுடன் நடந்து கொள்ளவில்லை என்று போதுமான ஆதாரங்களுடன் சமுதாயத்திற்குத் தாமே தெரியப் படுத்த முன்வருவார்.

## படி, சிந்தித்துப் பார், அழு!

கத்தியவாட் என்ற கிராமத்தில் தாழ்த்தப்பட்ட இன மக்களின் குழந்தைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் உள்ளது. அப்பள்ளியின் ஆசிரியர் ஒரு கலாசாரமுள்ள, தேசியவாதியான மனிதர். அவர் தேத் அல்லது நெசவாளர் (தீண்டத்தகாத) இனத்தைச் சேர்ந்தவர். தமது கயக்வாட் அரசரின் கட்டாயக் கல்விக் கொள்கை காரணமாக தமது கல்விக்கு அவர் கடன் பட்டிருக்கிறார், மற்றும் தமது சமுதாயத்தை சீர்படுத்துவதற்காகத் தமது சிறிய பணியை அவர் மேற்கொண்டிருந்தார். அவர் தூய்மையான பழக்கங்கள் மற்றும் பண்பட்ட ஒழுக்க முறைகளைக் கொண்டுள்ள ஒரு மனிதராக இருந்தார். ஆகவே அவரை தீண்டத்தகாத இனத்தைச் சேர்ந்தவர் என்று எவராலும் அடையாளம் காட்ட முடியவில்லை. மாறுதல் எதையும் விரும்பாத கத்தியவாட் கிராமத்தில் தமது சொந்த இனத்தவரின் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் அதிருஷ்டமான அல்லது துரதிருஷ்டமான பணியில் அவர் ஈடுபட்டிருந்ததனால் ஒவ்வொருவரும் அவரை ஒரு தீண்டத்தகாதவராகவே கருதி வந்தனர். ஆனால் அதை சற்றும் மனதில் கொள்ளாமல் அவர் அமைதியாகப் பணியாற்றி வந்தார். சில சிறப்புகளும் அங்கு உள்ளன. ஆயினும் பொறுத்துக் கொள்ள முடியாத சூழ்நிலைகளில் மிகவும் பொறுமையான மனிதர் வாழ்ந்து கொண்டிருக்கும்போது அது மனவேதனையையும் உளக்கொதிப்பையும் வெளிப்படுத்தக் கூடும். அவைதான் பள்ளி ஆசிரியரிடமிருந்து பெறப்பட்ட பின்வரும் கடிதங்களில் சான்றுகளாக உள்ளன. அக்கடிதத்தில் உள்ள ஒவ்வொரு சிறு வரியும் அவலச் சுமைகளுடன் வெகுவாகச் சுமையேற்றப்பட்டுள்ளன. அக்கடிதத்தில் குறிப்பிடப்

பட்டிருந்த கிராமம் மற்றும் அனைத்து மக்களின் பெயர்களை நான் வேண்டுமென்றே தவிர்த்துள்ளேன். இல்லையெனில் அப் பள்ளி ஆசிரியர் கூடுதல் பிரச்சினைகளுக்கு உள்ளாகியிருப்பார்.''

நமஸ்காரம். 5-ம் தேதியன்று எனது மனைவி ஒரு குழந்தை யைப் பெற்றெடுத்தாள். 7-ம் தேதியன்று அவள் நோய்வாய்ப்பட்டாள், வயிற்றுப்போக்கு கொண்டிருந்தாள், பேசுவதை இழந்தாள், கடினமாக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள், நெஞ்சகத்தில் வீக்கம் காணப்பட்டது, விலா எலும்புகள் கடும் வலியில் இருந்தன. நான் ஒரு மருத்துவரை அழைத்துவர விரும்பினேன். ஆனால் மருத்துவர் சொன்னார், 'நான் தீண்டத்தகாதவர்களின் குடியிருப்புகளுக்கு வர மாட்டேன், நான் அவளைப் பரிசோதனை செய்யவும் மாட்டேன்.' அப்போது நான் நகர்த் தலைவரையும் நகரப் பொறுப்பாளர்களை யும் அணுகினேன். தங்களது செல்வாக்கை எனக்காகப் பயன்படுத்த அவர்களை வேண்டினேன். அவர்கள் வந்தனர், மருத்துவரின் கட்டண மாக ரூ.2 செலுத்த எனக்காக நகரத் தலைவர் உறுதியளித்ததனாலும் தீண்டத்தகாதவர்களின் குடியிருப்புப் பகுதிக்கு வெளியே நோயாளி கொண்டுவரப்படுவார் என்ற சூழ்நிலையிலும் அவர் வருவதாக ஒப்புக் கொண்டார். அவர் வந்தார், பிறந்து இரண்டு நாட்கள் மட்டுமே ஆன குழந்தையுடன் அப்பெண்ணை நாங்கள் தூக்கிச் சென்றோம். அப்போது அந்த மருத்துவர் தமது வெப்பமானியை ஒரு முசல் மானிடம் கொடுக்க, அதை அவர் என்னிடம் கொடுத்தார். அந்த வெப்பமானியைப் பயன்படுத்தி, பின்னர் அதை முசல்மானிடம் திருப்பிக் கொடுத்தேன், அவரும் அதை மருத்துவரிடம் கொடுத்தார். அப்போது நேரம் எட்டு மணியாக இருந்தது. வெப்பமானியை ஒரு விளக்கு வெளிச்சத்தில் பார்த்த அவர் சொன்னார்: ''அவள் சளிக்காய்ச்சலையும், மூச்சுத் திணறலையும் கொண்டுள்ளாள்'' . அதற்குப் பின்னர் மருத்துவர் வெளியேறினார். மருந்தையும் கொடுத் தனுப்பினார். சந்தையிலிருந்து ஆளி விதையை வாங்கினேன். ஆளிவிதைப் பதவாமையைத் தடவி அவளுக்கு மருந்தையும் கொடுத் தோம். அவளைப் பரிசோதனை செய்ய மருத்துவர் ஒப்புக்கொள்ள வில்லை. அவளைத் தூரத்தில் நின்று வெறுமனே பார்த்தார். அவருக்குக் கட்டணமாக நான் ரூ.2 ஐக் கொடுத்தேன். அது ஓர் உள் ளார்ந்த நோய்தான். எல்லாமே அவரது கரங்களில் தான் உள்ளது!.

எனது வாழ்க்கையின் வெளிச்சமே அகன்று விட்டது. அவள் அதே நாள் பிற்பகல் 2 மணிக்கு இறந்துவிட்டாள்.

# II

விளக்கம் தேவையற்றதாகும். கல்வி கற்றவராக இருந்த ஒரு மருத்துவர் வெப்பமானியைப் பயன்படுத்த ஓர் இடைநிலையாள ரான ஒரு முசல்மான் மூலமாகக் கொடுத்ததினாலும், ஒரு நாய் அல்லது ஒரு பூனையைவிட மோசமான நிலையில் இரண்டு நாட் களாகப் படுக்கையில் கிடந்த ஒரு பெண்ணுக்கு சிகிச்சையளித்த திலும் இருந்த மனிதத்தன்மையற்ற நடவடிக்கைகளைப் பற்றி ஒருவர் என்ன சொல்ல முடியும்? இத்தகைய காட்டுமிராண்டித் தனத்தைப் பொறுத்துக் கொள்ளும் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர் என்ன சொல்ல முடியும்? அழுவதையும், ஆழ்ந்து சிந்திப்பதையும் தவிர ஒருவர் வேறென்ன செய்ய முடியும்?

ஏ.வி. தக்கார்.

● ● ●

---

1. *யங் இந்தியா, தேதி 5, மே 1927*

# இணைப்பு - III

## ''பைத்தியம் பிடித்த மரபுக் கோட்பாடு

## ''தீண்டத்தகாதவர்களுக்கு நடந்த காட்டுமிராண்டித்தனக் கொடுமை

### குற்றம்: அவர்கள் மகர்களாக இருந்தது

அகமதாபாதிலிருந்து திரு. கேஷவானி ரஞ்ச்ஹோட்ஜி வகேலா, பஹிஷ்கிரித் ஹிட்கரினி சபாவின் தலைவரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கருக்கப் பின்வருமாறு தெரிவித்தார்:

கடந்த ஆறு ஆண்டுகளாக அகமதாபாதில் ஒரு மாபூராவ் லக்ஷ்மண் மற்றும் அவரது சகோதரர் கவுராவ் ஆகியோர் குடியிருந்து வந்தனர். மராத்தா ஜாதியைச் சேர்ந்த டெக்கானிலிருந்து வந்த சில மக்களுடன் கூடியுறவாடி வந்தனர். கவுராவின் இரு புதல்வர்களான தாமுவும் லக்ஷ்மனும் மராத்தாக்களின் பஜனைக் குழுக்களில் பங்கேற்று வந்தனர். இருந்தாலும் தாமு மற்றும் லக்ஷ்மண் சகோதரர்கள் ஜாதியில் மஹார்களாவர் என்று அண்மையில் கண்டறிந்தனர். மேலும் அதை உறுதிப்படுத்துவதற்காக சூரத்துக்கம் அலகாபாத்துக்கும் இடையில் சரக்கு ரயிலில் பணியமர்த்தப்பட்டிருந்த இரு மஹார்கள் தாமுவையும் லக்ஷ்மணையும் அடையாளம் காட்டுவதற்காகச் சிறப்பாக அழைக்கப்பட்டிருந்தனர். அது உறுதிப்படுத்திக் கொள்ளப்பட்ட பின்னர் பண்டேரிடோவில் உள்ள கலுபூரில் ஒரு பஜனைக் குழுவில், 11ஆவது நாள் நள்ளிரவில் அவர்கள் அழைக்கப்பட்டனர். அவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று கேட்கப்பட்டபோது, தாங்கள் சோம்வன்ஷிகள் என்று தாமுவும் லக்ஷ்மணும் பதிலளித்தனர். இப்பதில் மராத்தாக்களை சினமூட்டியது. அவர்களைத் தாங்கள் யார், எந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற தகவலைக் கறைப்படுத்துவதனால் அவர்களை மராத்தாக்கள் தமக்கே உரிய முறையில் திட்டித் தீர்த்தனர். அச்சகோதரர்களின் ஒருவர் ஒரு தங்க மோதிரத்தை அணிந்திருந்தார். அதைக் கட்டாயமாக அவரிடமிருந்து எடுத்து அதை ரூ.11-க்கு விற்கவும் செய்தனர். அச்சகோதரர்களை அடையாளம் காட்டுவதற்காக சூரத்திலிருந்து அழைக்கப்பட்டிருந்த மஹார்களுக்கு அத்தொகையிலிருந்து ரூ.6 கொடுக்கப்பட்டது. தாங்கள் வீடு திரும்பத் தமக்கு அனுமதியளிக்குமாறு மராத்தாக்களை தாமுவும் லக்ஷ்மனும் கெஞ்சிக் கேட்டனர். ஆனால் தண்டனையாக ரூ.500 செலுத்தப்படாதவரை மராத்தாக்கள் அனுமதியளிக்க மறுத்துவிட்டனர். அவ்வளவு பெருந்தொகையைத்

தம்மால் செலுத்த இயலாது என்று மஹர் சகோதரர்கள் மன்றாடிக் கொண்டிருந்தபோது, மராத்தார்களில் ஒருவர், மஹர் சகோதரர்கள் ரூ. 125 - மட்டும் தண்டனையாகச் செலுத்த வேண்டும் என்று யோசனை கூறினார். ஆனால் அப்போது மராத்தாக்களில் ஒருவர் அபராதத்திற்கான யோசனையை எதிர்த்தார். தாம் அபராதத் தொகையைப் பெறுவதில் மட்டும் திருப்பியடைந்து விடக்கூடாது. ஆனால் தமது ஜாதியை மறைத்த அவர்களுடைய குற்றத்திற்காக, மஹார்களைக் கடுமையாக தண்டிக்க வேண்டும் என்று கூறினார். அதற்கான நடவடிக்கைகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்த போது, மஹார் சகோதரர்கள் காவலில் வைக்கப்பட்டு காலை 9-மணிக்குக் காட்டுமிராண்டித்தனமான விதத்தில், தகாத முறையில் அவமதிக்கப்பட்டனர். அவர்களுடைய மீசையின் இடது பக்கமும் புருவத்தின் வலது பக்கமும் மழிக்கப்பட்டது, அவர்களுடைய உடம்பில் எண்ணெய் மற்றும் அழுக்கு கலந்த கரிப் புகையில் வண்ணம் பூசப்பட்டது, பழைய செருப்புகளால் செய்யப்பட்ட மாலைகள் அவர்களது கழுத்தில் அணிவிக்கப்பட்டன. அவர்களில் ஒருவர் ஒரு துடைப்பத்தைத் தமது கையில் வைத்திருக்குமாறு கோரப்பட்டார், மற்றொருவர் உயர்ஜாதி மக்களைத் தொடுவதற்கான இடருக்கு ஆட்படுத்தப்பட்ட குற்றவாளிகள் பெற்றதற்கான தண்டனைதான் இது என்று எழுதப்பட்ட விளம்பர அட்டையை வைத்திருக்க வேண்டும். முன்னால் ஒரு முரசு முழங்க, கிட்டத்தட்ட 75 பேரைக் கொண்ட ஊர்வலத்தில் மஹார் சகோரர்கள் கொண்டு செல்லப்பட்டனர்.

அந்த மஹார் சகோதரர்கள் இருவரும் காவல் துறையில் ஒரு புகார் மனு செய்தனர். அந்த அறிக்கையில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் தாமுவும், லக்ஷ்மணும் அவ்வாறு நடத்தப்பட்டதை ஒப்புக் கொண்டனர். ஆனால் புகார் கொடுத்திருப்பவர்கள் விருப்பத்துடன் ஏற்றுக் கொண்டுதான் அத்தண்டனையைப் பெற்றனர் என்று மன்றாடினர். அவர்கள் வசவுக்குளளானபோது, தாக்கப்பட்ட போது, கடும் தண்டனைகளுடன் அச்சுறுத்தப்பட்டபோது, உண்மையிலேயே காட்டுமிராண்டித்தனமான கடுஞ்சினங்களுக்கு உள்ளாக்கப்பட்ட போது தாமுவும் லக்ஷ்மணும் உதவியற்றவர்களாக இருந்தனர். தீண்டத்தகாதவர்கள் என்றழைக்கப்படும் ஜாதிகளுக்குச் சொந்தமான மக்களிடையே இந்த வழக்கு பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. முறையீட்டாளர்களுக்க முறையான, சட்டரீதியான உதவி வழங்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

● ● ●

1. பாம்பே கிரானிக்கிள், தேதி 25 பிப்ரவரி 1928.

# இணைப்பு - IV

## புனா உடன்படிக்கைக்கு முன்பாக நடைபெற்ற காந்தி - வல்லபாய் சந்திப்பு

*1932 செப்டம்பர் 6 அன்று எர்வாடா ஜெயிலில் கீழ்க்கண்ட வாறு விவாதம் நிகழ்ந்தது :*

*வல்லபாய் பட்டேல்: இவர்கள் (பிரிட்டிஷ் அரசாங்கம்) என்ன செய்யக் கூடும் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?*

*காந்திஜி : அவர்கள் என்னை 19- அன்று அல்லது அதற்கு முன்னர் விடுவிப்பார்கள் என்று இன்னமும் நான் உணருகிறேன். என்னை அவர்கள் வேகமாக விடுவித்தால் அதுவே அவர்களுடைய பழி பாவத்துக்கஞ்சாமையின் எல்லையாக இருக்கக் கூடும், எவரும் அதைப் பற்றித் தெரியாமல் இருக்கட்டும், பின்னர் ஒரு சிறைக் கைதியாக இருக்கும் நான் செய்யக்கூடாத எதைச் செய்தேன் என்று கூறட்டும், மற்றும் அதைப் பற்றி எதையும் அவர்களால் செய்ய முடியாது. அவர்களால் அந்த அளவுக்குச் செய்ய முடியாது என்று நான் கூறுவதில்லை, அப்போதுதான் அவர்கள் அது நிச்சயமாகத் தேவையானது என்பதைக் கண்டுபிடிப்பார்கள். நிச்சயமாகத் தேவையான அளவுக்கும் அதிகமாகச் செல்லும் மக்களல்ல அவர்கள்*

*வல்லபாய் படேல்: அப்படியானால் நீங்கள் என்ன செய்வீர்கள்?*

*காந்திஜி : உண்ணா விரதத்தை 20 ஆம் தேதி தொடங்க முடியாது. 20 ஆம் தேதி என்பதை நாம் ஒப்புக் கொள்ள முடியாது.*

*வல்லபாய் படேல்: புதிய அரசின் சட்டம் வகுக்கப்படும் வரை நாம் கால அவகாசத்தைப் பெற்றுள்ளோம் என்று இதற்கு அர்த்தமாகுமா? அல்லது மக்களுக்கும் அரசாங்கத்துக்கும் ஒரு நீண்ட அறிவிப்பை நீங்கள் கொடுக்க முடியுமா?*

காந்திஜி : ஆம், நான் வெளியே சென்ற பிறகு எந்த அளவுக்கு செய்ய வேண்டியுள்ளது. மக்கள் அனுமதிக்க உள்ளனர் என்பதையே அது பொறுத்திருக்கிறது. நிலைமை என்னவாக இருக்கும் என்று என்னால் சொல்ல முடியாது. நான் எழுத வேண்டியுள்ள கடிதத்தின் எந்த வகைக் கருத்தையும் நான் சொல்லாமல் இருக்கக் கூடும். ஆனால் ஒவ்வொரு கட்சியையும் நான் கருத்தில் கொள்ள வேண்டியிருக்கும். இந்து சமுதாயம், ஆந்திய ஜாக்கள், அரசாங்கம், முஸ்லீம்கம், ஒவ்வொரு இடத்திலும் ஆந்தியஜாக்களுடன் இணைந்து கூட்டங்கள் நடத்தவும் இந்த விஷயத்தை நிராகரிப்பதும் இந்துக்களுக்கு அத்தியாவசியமாகும். ஒரு கிறிஸ்தவ அரசாங்கம் என்ற முறையில் அரசாங்கம் இதைச் செய்துள்ளது, ஆகவே கிறிஸ்தவர்கள் என்ற முறையில் இதை அவர்களால் செய்ய முடியாது என்று இதே விஷயத்தை அரசாங்கத்திற்கும், கிறிஸ்தவர்களுக்கும் நான் சொல்ல வேண்டியிருக்கும். நமது ஸ்வராஜ்யம் நடப்பிற்கு வரட்டும், அப்போது அவர்கள் தமது எந்த விருப்பத்திற்காகவும் ஆந்தியஜாக்களுக்கும் அவர்கள் செல்வாக்கைப் பயன்படுத்தக்கூடும். ஆனால் இன்றைக்கு அவர்கள் நம்மைப் பிரிக்கக்கூடாது. இங்கிலாந்தில் முஸ்லிம்களுக்கும் கூட இதை நான் சொல்லியுள்ளேன். இங்கும் கூட அதே விஷயத்தை நான் சொல்லக் கூடும். இப்போதைக்கு ஆந்தியஜாக்களுக்கு முஸ்லிம்களாகவோ அல்லது கிறிஸ்தவர்களாகவோ மாறுவதைத் தவிர வேறு எந்த வாய்ப்பும் இல்லை என்று இந்து சமுதாயத்துக்கு நான் விளக்குவேன்.

மஹாதேவ் தேசாய்: வரக்கூடிய மக்களிடையே கிறிஸ்தவ நண்பர்கள் இருந்தாலும் கூட, அரசாங்கத்தைக் குற்றம் சாட்டும் முன்னர், நீங்களே உங்களைக் குற்றம் சாட்ட வேண்டும் என்று அவர்கள் உங்களுக்குக் கூறமுடியும். இந்து சமுதாயம் ஆந்தியஜாக்களை ஏன் தீண்டத்தகாதவர்கள் என்று கருதுகிறது?

காந்திஜி : விளக்குவது என்பது என்னைப் பொறுத்ததே யாகும். இது கடினமான விஷயமுமல்ல. நம்மால் அவர்களுக்கும் சொல்ல முடியும். ''எங்களுடைய பிரச்சினைகளைத் தீர்ந்துக் கொள்ள எங்களுக்கு அனுமதியளியுங்கள். நீங்கள் ஏன் தலையிடு கிறீர்கள்? எங்களுடைய சொந்த விவகாரங்களை நிர்வகிப்பதைப் பற்றி நாங்கள் ஏற்பாடு செய்த பின்னர் நீங்கள் விரும்புவதை நீங்கள் செய்ய லாம். ஏன் நீங்கள் எங்களைப் பிரிக்கிறீர்கள், பின்னர் விஷயங்களைப் பற்றி விவாதிக்கிறீர் கள்? இன்றைக்கு ஆந்தியஜாக்கள் ஒன்று முஸ்லிம்களாக அல்லது உங்களுடன் சேர வேண்டும். பெண்களைப் பற்றிய கேள்விகளும் ஆந்தியஜாக்களைப் பற்றியதைப் போன்றவை யேயாகும். ஆனால் பெண்கள் தீண்டத்தகாத வர்களல்ல. அவர்கள் தீண்டத்தகாதவர்களாக மாற விரும்பினாலும் மனிதர்கள் அவர்களிடம் போய் அவர்களுடைய படுக்கையில் அமருவார் கள். ஒரு தனிப்பட்ட வாக்களர் தொகுதியைப் பெற்றிருந்தாலும் கூட அவர்களைப் பிரிக்க முடியாது. இன்றைக்கு ஆந்தியஜாக்கள் நிரந்தர மாகத் தனிமைப்படுத்தப்பட்டுள்ளனர். அதன் விளைவு என்னவாக இருக்கும்? அங்கு அக வியலான சச்சரவு ஏற்பட்டிருக்கும். இத்தகைய வர்களும் உள்ளனர். சமுதாயத்தில் உள்ள மோசமான பண்புடையவர்களைக் கூட்டி யிருப்பர். இந்துக்களைத் தாக்க, கிணறுகளில் விஷத்தைக் கலக்க, மற்றும் வேறு விஷயங் களைச் செய்ய அவர்களைப் பயன்படுத்துவர்.''[1]

எச்.எஸ்.எல்.போலாக் - கிற்கு பாபுஜி ஒரு கடிதம் எழுதினார். உண்ணாவிரதத்திற்கு இட்டுச் செல்லும் சூழ்நிலைகளின் தெளிவான கணிப்பை அதில் வழங்கினார். அவர் எழுதியது இதுதான் :

''உண்ணாவிரதத்தில் மிகத் தீவிரமாக உள்ள ஒரு குழுவை நீங்கள் கைவிட்டிருக்கிறீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது.

1. இந்திய அரசாங்கம், மகாத்மா காந்திஜியின் நூல் தொகுப்பு, தகவல் தொடர்பு மற்றும் வானொலி அமைச்சகம், புதுதில்லி, தொகுதி 11, பக்கங்கள். 457 - 458.

சிறுபான்மையினரின் கமிட்டியில் எனது உரையை நீங்கள் மீண்டும் கேட்க வேண்டும். அதன் முடிவு தவிர்க்க முடியாத தாகியது. அந்த உண்ணாவிரதம் அப்பெருமிதமான அறிவிப்பின் தவிர்க்க முடியாத முடிவாக இருந்தது. அந்த அறிவிப்பு எப்படி நிறைவேற்றப்படும் என்பதைக் கண்டுபிடிப்பதைப் பற்றி எனக்குக் கொஞ்சமே தெரிந்தது. அந்த அறிவிப்பே கடவுளிட மிருந்து வந்தது. ஆகவே அது நிறைவேற்றப்படாது என்று நான் சொல்கிறேன். அது அவ்வாறு இருந்தது எனில் எல்லா விவாதமும் பயனற்றதாகும். அது ஒரு மாயக் காட்சியாக இருக்குமானால், அது அவ்வாறுதான் இருக்கும் என்று நம்பி யுள்ளவர்கள் நண்பர்களாக இருந்தால், தங்களது உதவிக்கு அனைத்துப் பாசத்துடனும் பிடிவாதத்துடனும் என்னிடம் உண்மையைக் கூறுவதற்காக எனது வீட்டுக்கு முன்னேறி அழைப்பு விடுத்தனர்.

''உண்ணா நோன்பு என்பது கடவுள் கொடுத்த வெகுமதி என்பதை நிகழ்ந்த சம்பவங்கள் இதை உறுதிப்படுத்துகின்றன. பிரதமர் மூலமாக அல்ல ஆனால் சர் சாமுவேல் ஹோஆரே மூலம்தான், உண்ணா நோன்புக்கான தகவல் அவசியமாகச் செல்ல வேண்டியதாயிற்று. ஆனால் நான் விடுத்த அனைத்து அறிவிப்புகளையும், பிரதமருக்கு நான் அனுப்பிய கடிதத்தையும் நீங்கள் பின்பற்றியிருந்தால், என் மீது நம்பிக்கை கொண் டிருந்த கோடிக் கணக்கானவர்களுக்கும், நான் அவர்களுக்கு மத்தியிலே செல்லும் போதெல்லாம் தங்களது அழிவற்ற பாசத் துடன் என்னைச் சூழ்ந்திருந்தவர்களையும் நோக்கியே உண்ணா நோன்பு அனுஷ்டிக்கப்படுகிறது. எந்த வாதங்களுமின்றி அதன் பாதிப்புகளுடன் உண்ணா நோன்பை அவர்கள் புரிந்து கொண் டனர். அரசியல் பங்கு சாரமற்றதாக இருந்தது. எல்லாமே அவர்களுக்கு அதன் உட்புறமான சீர்திருத்தமாகத்தான் இருந்தது.

பத்தாண்டுகளுக்கு முன்னர் அது ஏன் செயல்படுத்தப்பட வில்லை என்று நீங்கள் கேட்கலாம். பதில் இதுதான், அதைச் செய்யக் கடவுள் என்னைக் கூப்பிடவில்லை. நீங்கள் அவரைக் குறைந்த பட்சமாக எதிர்பார்க்கும் போது அவர் விழித்தெழுந்து வருகிறார். அவரது வழிகள் நமது வழிகள் அல்ல. நான் தகுதியை அப்போது கொண்டிருந்தேன் என்று நான் சொல்லும் போது அநேகமாக நீங்கள் என்னை நம்புவீர்கள்.''[1]

1. தொகுதி L1 பக்கம் 252-253 மேலுள்ள அனைத்தும் மீண்டும் அச்சிடப்பட்டன, புசி டாக்டர்; பக். 188 - 190

# இணைப்பு - V

## வட்டமேஜை மாநாடு மற்றும் பூனா உடன்படிக்கை குறித்து மதிப்புரைகள்

### 1

*நாடாளுமன்றத்தின் இணைப்புத் தேர்வுக்குழு:*

**'சாதிக்குரிய நடுநிலைத் தீர்ப்பும் பூனா உடன்படிக்கையும்'**

*தற்போதைய கட்டத்தில் சாதிக்குரிய பிரதிநிதித்துவம் தவிர்க்க முடியாததாகும் என்று எமது கருத்தில் தேர்வுக்குழு நிச்சயமானதாக உள்ளது. சாதிக்குரிய நடுநிலைத் தீர்ப்பில் உள்ளடக்கப்பட்டுள்ள மாநிலத்திற்குரிய சட்டமன்றங்களின் இணைப்பாக்கத்திற்கான நன்கு சிந்திக்கப்பட்ட மற்றும் நன்கு சரிசமநிலையுடைய ஏற்பாடாகும் என்று அவர்கள் விளக்குகின்றனர்.*

*பூனா உடன்படிக்கை சம்பந்தமாக, தமது கருத்தில் மேன்மிகு மன்னரின் அரசாங்கத்தின் உண்மையான முன்யோசனைகள், சாதிக்குரிய கேள்வியின் பொதுவான இப்போதைய கட்டத்தில் தாழ்த்தப்பட்ட சமுதாயப் பிரிவினருக்குக் கூடுதல் அனுகூலமானதாக இருந்தன என்ற தமது கருத்தில் குழு கண்ணோட்டத்தை வெளிப்படுத்தியுள்ளது. ஆனால் நடுநிலைத் தீர்ப்பின் அதிகாரம் பெற்ற ஒரு மாற்றியமைத்தலாக உடன்படிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதால், அதை இப்போது நிராகரிக்க முடியாது என்பதில் குழு தெளிவாக உள்ளது. வங்காளத்தில் தாழ்த்தப்பட்ட சமுதாயப் பிரிவினருக்கென ஒதுக்கப்பட்ட இடங்களின் எண்ணிக்கை உடன்படிக்கையின் மூலம் சிறிது குறைக்கப்பட்டிருந்தால் அவர்கள் அதை ஏற்று, நடைமுறைப்படுத்தப்பட்டதாகச் சிந்திக்கின்றனர். இதர மாநிலங்களில் தங்களுக்கான இடங்களின் எண்ணிக்கையில் இழப்பீடு செய்கிற ஓர் அதிகரிப்பு சாத்தியமாகும் என்றும் கருதுகின்றனர். வங்காளத்தில் புதிய அரசியல் சட்டம் உருவாக்கப்படும்போது அது எளிதாக்கப்படும். (இந்திய அரசியல் சட்டரீதியான சீர்திருத்தங்கள் குறித்த வெள்ளைத் தாளில் அடங்கியிருந்த யோசனைகள் குறித்து நாடாளுமன்றத்தின் கூட்டுத் தேர்வுக் குழுவினுடைய அறிக்கையின் ஒரு சுருக்கம்).*[1]

---

*1. மீண்டும் அச்சிடப்பட்டது, கைர்மோடு, தொகுதி, பக்.65-66.*

## 2

## "இந்துஸ்தானின் மனிதர்கள் மற்றும் மாமனிதர்கள்" என்ற தமது நூலில் ஜோவாச்சம் ஆல்வா அறிவித்திருந்தார்

''அவர் இப்போது (டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்) துணிச்சலானவராக மாறியுள்ளார் மற்றும் ஸ்பென்சரின் மூதுரையின் 'முயற்சி குன்றாதவராக இரு! முயற்சி குன்றாதவராக இரு, மற்றும் எப்போதும் அதிக முயற்சி குன்றாதவராக இரு. உயர்வு நவிற்சியற்ற முறையில் ஏற்றுக் கொண்டார். கணிந்த, பொருட்படுத்தாத, அஞ்சா நெஞ்சத்தின் மூலம், மாபெரும் அச்சங்களும் பலவீனங்களும் நீக்கப்படுகின்றன என்று அவர் கற்றுக் கொண்டார். தகுதிக்கு மிஞ்சிய கவனத்துடன் அவர் மிகச் சக்திவாய்ந்த எரிச்சலடைந்தார், முழுதும் திருப்தியடைந்தார். 'ஹரிஜனங்கள்' என்று மரியாதையுடன் கண்டுபேச அவர் தேர்வு செய்திருந்த தாழ்த்தப்பட்ட சுமையைப் பிரிவினர்கள் சார்பாக மகாத்மா காந்தி சேவையின் ஒரு ஈடு இணையற்ற சாதனையைக் கொண்டிருந்தார். ஆனால் டாக்டரோ எந்த எதிரிகளையும் தாங்க மாட்டார். வேறுயாரும் அடிப்படையைக் கைப்பற்றிக் கொள்வதை அவர் பொறுத்துக் கொள்ளமாட்டார். தானே படுபாதாளத்திற்குள் இறங்கிவிட்ட இந்திய சமுதாயத்தில் வழக்கத்திற்கு மாறான சமூக மற்றும் பொருளாதார சூழ்நிலைகளின் உற்பத்திப் பொருளாக இருந்து கொண்டு டாக்டர் அம்பேத்கர் வேண்டுமென்றே ஒரு வழக்கத்திற்கு மாறான தனித் தன்மையைப் பேணி வளர்த்தார் (இந்துஸ்தானின் மனிதர்களும் மாமனிதர்களும், பக்கம் 20)

சட்டமன்றத்தில் சாதி சம்பந்தமான விகிதங்களை முடிவு செய்வதற்கு ராம்சே மேக்டொனால்டுக்கு டாக்டர் அம்பேத்கரின் வேண்டுகோள், கொந்தளிப்பான அரசியல்வாதியின் வாழ்வில் அவரது முட்டுக்கட்டைக்கு இட்டுச் சென்றது. எரவாடா சிறையின் வாசலில் டாக்டர் கூச்சலிட்டார்-

காந்தியின் வாழ்க்கை மற்றும் எனது மக்களின் உரிமைகளுக்கிடையில் ஒரு தேர்வு செய்வதற்கான தேவைக்கு நான் தூண்டிவிடப்பட மாட்டேன் என்று கருதுகிறேன். கையையும் காலையும் கட்டி எனது மக்களை வழங்கவும் தலைமுறைகளுக்கு எனது மக்களை இந்துக்களிடம் ஒப்படைக்கவும் நான் ஒரு போதும் சம்மதிக்க முடியாது. ஒரு நூறு மகாத்மாக்கள் உயிர்த் தியாகம் செய்தாலும்கூட நான் கவலைப்படுவதில்லை. மகாத்மாக்கள் உயிர் நீங்காத உயிரினங்கள் அல்லது மிக அருகிலுள்ள விளக்குத் தூணில் இருந்து

என்னைத் தூக்கிலிடவும் நீங்களனைவரும் சுதந்திரமாக உள்ளீர்கள்... டாக்டருக்கு மகாத்மா தெரிவித்தார்', நான் உங்களுக்காகப் பெருமையடைகிறேன். உங்களுடைய சொற்பொழிவுகளை உணர்ச்சி வசமாக நான் எப்போதுமே கேட்டிருக்கிறேன். (இந்துஸ்தானின் மனிதர்களும் மாமனிதர்களும், பக்.22)''[1]

## 3

## புனைப் பெயரில் எழுதும் ஓர் எழுத்தாசிரியர்

''காங்கிரஸ் தோல்வியடைந்து விட்டதா?'' என்ற தமது நூலில் பொதுவிவகாரங்களைப் படிக்கும் ஒரு மாணவர் பின்வருமாறு தமது கருத்துக்களைத் தெரிவித்தார்: ''அந்த மாநாட்டில் திரு. காந்தி கலந்து கொண்டது ஒரு வெற்றியாக இருந்தது என்று அவரது மிகத் தீவிரமான ஆதரவாளர்களும் கூடக் கோரமாட்டார்கள். சாதிக்குரிய வேறுபாடுகள் எல்லாப் பிரிவுகளின் முன்னேற்றத்தையும் நிறுத்தி வைத்தல் மற்றும் சிறுபான்மையினருக்கான துணைக் கமிட்டி இறுதியில் ஒரு தீர்வை எட்டுவதில் தோல்வியைக் கண்டதாக அறிவிக்க வேண்டியதாயிற்று. முகமதியர்கள், சீக்கியர்கள் மற்றும் ஐரோப்பியர்கள் ஆகியவர்களைத் தவிர எந்த ஜாதிக்காகவும் தனிப்பட்ட தேர்தல் தொகுதிகளுக்கான எந்த யோசனையையும் கருத்தில் கொள்ள திரு.காந்தி கண்டிப்பாக மறுத்தார், மற்றும் தாழ்த்தப்பட்ட சாதியினர் சம்பந்தமாக அவர்கள் இந்துக்களாக இருப்பதால் இந்துக்கள் என்ற மடிப்புக்குள் வைத்திருக்க வேண்டும் என்றார். இந்த உறுதியான அணுகுமுறை மூலம் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கெனத் தனிப்பட்ட தேர்தல் தொகுதிகளுக்காக இந்த ஓர் உறுதியான கோரிக்கையினால் டாக்டர் அம்பேத்கர் இட்டுச் செல்லப்பட்டார்''. - பக்கம் 55)[2]

## 4

## தமது சுயவரலாற்றில் டாக்டர் எம்.ஆர். ஜெயகர் தெரிவித்தார்

''...... இங்கிலாந்தில் நடைபெற்ற இந்திய வட்டமேஜை மாநாட்டில் அவருடைய (மகாத்மா) அணுகுமுறை, கெட்ட பெயரெடுத்த சிறுபான்மையினரின் அணுகுமுறையை ஏற்றுக்கொள்ள

1. மீண்டும் அச்சிடப்பட்டது, கைர்மோடு, தொகுதி, பக். 168-169.
2. கைர்மோடு, தொகுதி 4, பக். 173

சிறுபான்மையினரை விரட்டியது. காங்கிரசின் இடையீடு மூலமாக மட்டுமேயன்றி ஒதுக்கீடு மூலம் ஒரே ஒரு இடமும் கூட தாழ்த்தப் பட்ட இனத்தவருக்கு அவர் மறுத்தார். பின்னர் கூறப்பட்டதை விட ஒரு கூடுதல் சரிசமநிலையது என்று ஒப்பிடத்தக்க ஒரு நடுநிலைத் தீர்ப்பை விடுத்த பிரதமர் மெக்டோனால்டுக்கு எதிராக இந்தியா வில் அவர் உண்ணாவிரதம் மேற்கொண்டார். ஏற்கெனவே துப்பாக்கி ஈட்டி முனை போன்ற விஷயத்தில் 'பூனா உடன்படிக்கை' ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியிலிருந்து முன்னர் காந்திஜியின் உண்மை யான சீடர்களாக இருந்த தலைவர்களினால் வங்காளத்தில் இந்த உடன்படிக்கையின் 'பயன்கள் மோசமான துயரங்களைக் கொடுப் பதாக இருந்தது. '')எனது வாழ்க்கையின் கதை தொகுப்பு - ஒன்று, *பக்கம் 361 - 362)''*[1]

**5**

பண்டிட் ஜவஹர்லால் நேருவின் பிறந்தநாள் நிகழ்ச்சியின் போது ''பழைய கடிதங்களின் ஒரு சொத்து'' என்ற தலைப்பில் ஒரு நூல் வெளியிடப்பட்டது. 1936 டிசம்பர் 6 என்று திரு.எட்வார்டு தாம்சன் எழதிய ஒரு கடிதமும் இணைக்கப்பட்டிருந்தது, அதில் அவர்கூறினார்.

''வட்ட மேஜை மாநாட்டில் அவர் கருத்து நிறைந்தவராகவும் பொருத்தமற்றவராகவும் இருந்த வரை நான் காந்தியைத் தவறாக ஒரு போதும் சிந்தித்ததில்லை, அநேகமாக அவர் மாநாட்டிற்கு வந்திருக்கவே கூடாது. ஆனால் வந்திருந்த அவர் ஒரு பொதுவான முயற்சி மற்றும் நம்பிக்கையில் ஈடுபட்டிருந்த நண்பர்கள் என்று கருதி அவர் பரிமாற்றம் செய்து கொண்ட மனிதர்கள் என்ற முறையில் தமது கருத்துகளுக்காக பெரும் விலை கொடுத்த மனிதர்களில் பலரை இதர இந்தியர்கள் என்று கருத மறுப்பதில் அவர் நியாய மற்றவராக இருந்தார்.'' (பக்.206).[2]

**6**

''காந்தியின் அவல நிகழ்ச்சி'' என்ற நூலில் திரு. க்ளோர்னே போல்டென் அறிவித்தார்:

1. கைர்மோடு, தொகுதி 4, பக். 173
2. கைர்மோடு, தொகுதி 4, பக். 173-174

''லண்டனில் திரு.காந்தி தோற்றுவிட்டார் என்பதுதான் உண்மை. பழைய வாக்குறுதியும் நம்பிக்கையும் அவரை கைவிட்டு விட்டது. வெறுத்து ஒதுக்குவதற்காக அவர் வந்திருந்த மாநாட்டில் ஒவ்வொரு நாளும் தங்களது கோரிக்கைகள் எதையும் விட்டுக் கொடுக்காத முகம்மதியப் பிரதி நிதிகளை அவர் எதிர்கொண்டார். ஒவ்வொரு நாளும் டாக்டர் அம்பேத்கர் பெரும் முதன்மை நிலைக்கு வந்தார். அம்பேத்கர், தீண்டத்தகாதவர்களுக்காக பரிந்து பேசினார். இந்திய நலன் குறித்து ஒரு பழைய பற்றாளரின் அல்லது சமதர்ம வாதியின் ஒவ்வொரு பேச்சும் 'தீண்டத்தகாதவர்களின்' பரிதாப நிலை குறித்த விபரங்களை கொண்டிருக்கும். ஆனால், இது, யதார்த்த மானதாக இருப்பதை விட உணர்ச்சிவயப்பட்டதாக இருந்தது. காந்தி, தீண்டத்தகாதவர்களை பேசியதன் மூலம், இங்கிலாந்தில் ஒவ்வொரு வரின் பாராட்டுகளை பெற்றிருப்பார். ஆனால், அவருடைய இந்த வாய்ப்பை அம்பேத்கார் அழித்துவிட்டார். இந்த இரு பிரமுகர்களான காந்தியும், அம்பேத்காரும் வட்டமேசை மாநாட்டில் ஆதிக்கம் செலுத்தினர் என்று பொதுமக்கள் நம்பத் தொடங்கினர் என்பதற்கு காந்தியை பொறுப்பாக்கி அவரை அம்பேத்கர் எதிர்த்தார். ஆரம்பத்தில் காந்தி, மாநாட்டில் போதுமான அளவிற்கு ஆதிக்கம் செலுத்தவில்லை. சர்.சாமுவேல் ஹோவாரே க்குப் பின்னர் அவர் உரையாற்றினார். அவர் மிகப்பெரிய உரையாற்றலைத் தொடங்கிய போது மறைமுகமான தேர்தலை ஆதரித்துப் பேசியுள்ளார். அவருடன் திரு.காந்தி முற்றிலுமாக ஒப்புக் கொண்டார் மற்றும் தமது பஞ்சாயத்துத் திட்டத்தை விளக்கவும் அவர் முயற்சிகளை மேற்கொண்டார். அதன்படி கிராமங்கள் தங்களுடைய பிரதிநிதி களைத் தேர்வு செய்கின்றன, கிராமப் பிரதிநிதிகளின் ஒரு குழு தங்களது மாவட்டப் பிரதிநிதியைத் தேர்வு செய்கின்றனர், மாவட்டப் பிரதிநிதிகளின் குழு சட்டமன்றத்திற்கான ஒரு பிரதிநிதியைத் தேர்வு செய்கிறது. இது பழமைப் பற்றாளர்களின் அச்சத்தை குறைக்கும் அதே சமயம் அது முதியவர்களின் வாக்குரிமைக்கான காங்கிரஸ் கோரிக்கையை எதிர்கொள்கிறது. இதைத் தாங்கள் ஏற்றுக்கொள்வதில் இந்திய தாராளவாதிகளின் பிரதிநிதிகள் மகிழ்ச்சி யுடன் இருந்தனர். ''ஒரு வாரத்திற்குள் தமது காலில் பழமைப் பற்றாளர்கள் விழுவதை காந்தி பார்ப்பார்'' என்று அவர்களில் ஒருவர் சொன்னார். ஆனால் அவர் அந்த முறையில் மீண்டும் ஒரு தடவை கூட பேசவில்லை மாறாக அவருக்கு டாக்டர் அம்பேத் கருடன் ஒரு சச்சரவு நடந்தது. மஹாத்மாவின் ஏமாற்றத்தைக் கண்டு மகிழ்ச்சியடைவதாக முகமதியர்களுக்கு முதலில் தோன்றியது,

ஆனால் தமது சொந்தச் சிறப்பு அவருக்கு நிச்சயமாக உரிமையளிக்கும் என்ற நாகரிக நடையை திரு.காந்திக்கு டாக்டர் அம்பேத்கர் காட்டுவார் என்று ஒவ்வொரு பிரதிநிதியும் நம்பிக் கொண் டிருந்தார்.''

(காந்தியின் அவல நிகழ்ச்சி, பக்.266 - 267)

இது முதற்கொண்டு போ அண்ட் நைட்ஸ்-ன் பாலம் மாநாட்டு சதித்திட்டத்திற்கான மையங்களாக மட்டும் இருக்கவில்லை. முகம் மதியர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், தீண்டத் தகாதவர்கள் ஆகியோரின் பிரதிநிதிகள் ஒன்றுகூடிச் சந்தித்தனர். நேரத்தின் ஒரு மிகக் குறுகிய காலகட்டத்தில் சிறுபான்மையினருக் கான ஓர் உடன்படிக்கையை அவர்கள் வகுத்தனர். சீக்கியத் தலை வரின் குறிப்பிடத்தக்க விதிவிலக்கானவராக சர்தார் உஜ்லால் சிங் தமது கையெழுத்தை இணைத்தார். ஒரு விட்டுக் கொடுக்கும் பண்புடைய, விளங்க வைக்கும் கடிதமாக இருந்தால் அது மகிழ்ச்சி மிக்கதாக இருக்கும் விதத்தில் உடன்படிக்கையின் ஒரு நகலை திரு. காந்திக்கு திரு.பெந்த்தால் அனுப்பினார். கிட்டத்தட்ட ஒரு ஏற்க மறுக்கும் சிரிப்புடன் புனித ஜேம்ஸில் திரு.காந்தியை ஒரு துரித்த நேரத்தில் டாக்டர் அம்பேத்கர் சந்தித்தார். ஆனால் காந்திக்கு அங்கு ஐயத்திற்கிடமற்ற இரு போக்குகள் இருந்தன.

சிறுபான்மையினர் மீது தாம் எந்த அளவுக்குக் கருணை கொண்டிருந்தாலும் அவர்களைப் பிரிப்பதை அவர் ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. மாபெரும் இந்துப் பெரும்பான்மையினரைத் தமது பக்கத்தில் அணி திரட்டி, காங்கிரசின் பிரதிநிதிமட்டுமல்ல, ஆனால் இந்துக்கள், சய மாறுபாடற்ற இந்து மகாசபை உள்பட அனைவரின் ஒரே பிரதிநிதியாக இருந்தார் என்பது மற்றொரு நட வடிக்கையாகும். உடன்படிக்கையின் கூறுகளை திரு.காந்தியின் கண்கள் கூட வேகமாக அகப் வெட்டியது. தீண்டத்தகாதவர்கள் மீது பரந்த மனப்பான்மையுடன் தலைபட்ட தேர்தல் தொகுதிகளுக்காக டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்ட இரக்கமற்ற அணுகுமுறையை உடன்படிக்கை குறிப்பிட்டதை அவர் உடனே கவனித்தார். ஐயத் திற்கிடம் தராத போக்குகள் திரு.காந்திக்கானவையல்ல. இதுவரை லண்டனில் தமது குறிக்கோள் பணித் திட்டம் உறுதியற்றதாக இருந்து வந்தது என்றிருந்தால் அது அவ்வாறு செல்வது தமது பணி தான் என்று இப்போது அறிந்திருந்தார். தமது தலைவரிடமிருந்து தீண்டத்தகாதவர்களை அவர் காப்பாற்றுவார். சர் சாமுவேல் ஹோவா ரேயை அவர் சந்தித்தார். தமது கண்ணோட்டங்களின் விசையாற்ற

லுடன் அவர் மனதில் பதிய வைத்திருந்த திரு. ராம்சே மெக்டொனால் டையும் கூட அவர் சந்தித்தார்.

திரு.காந்தி வேறு எதைப் பற்றியும் பேசமாட்டார். ''தீண்டத் தகாதவர்களுக்குத் தனிப்பட்ட வாக்காளர் தொகுதிகள்'' என்ற உரையில் அவர் பிரகடனப்படுத்தினார், நிலைப்பாட்டில் அவர்களைக் கட்டுப் படுத்துவதை உறுதிப்படுத்தும் தனிப்பட்ட வாக்காளர் தொகுதிகளைக் கொள்வதன் மூலம் முசல்மான்கள் ஒருபோதும் முசல்மான்களாக இல்லாமல் இருக்க மாட்டார்கள். தீண்டத்தகாத வர்கள் எப்போதுமே தீண்டத்தகாதவர்களாக இருக்க நீங்கள் விரும்பு கிறீர்களா? கூட்டிணைப்பு குறித்து திரு.காந்தியின் கண்ணோட்டத்தை எந்த அளவுக்கு மென்மையாக இந்திய மக்களுரிமையை நேசிக்கிற வர்கள் கருதுகிறார்களோ, அந்த அளவுக்கு சிறுபான்மையினர் குறித்த தமது கண்ணோட்டத்திலும் அவர் ஓர் ஆரோக்கியமான மதிப்புக் கொண்டிருக்கிறார். சிறுபான்மையினருக்கான ஓர் உடன்பாடு ஒரு பொதுவான உடன்படிக்கையைவிடக் குறைவாக உள்ளது. ஏனெனில் சமயமாறுபாடற்ற இந்துக்கள் மற்றும் சீக்கியர்களின் பகைமையை அது வழங்கியது, மிகக் குறிப்பாக அது திரு.காந்தியின் கோபத்தைத் துயிலெழுப்பியது. அது தோன்றிய அதே நாளில் அந்த உடன்பாடு மறைந்தது. ஒரே மாதிரியாக பிரிட்டிஷ் மற்றும் இந்தியப் பிரதிநிதி களால் அதன் மறைவு முறையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. சமூக ரீதியான தீர்வு, இப்போது ஒவ்வொருவரும் ஒப்புக்கொண்டது போல பிரிட்டிஷ் அரசாங்கத்தினால் குறியிடப்பட்டிருக்கும்.

*(காந்தியின் அவல நிகழ்ச்சி, பக். 277 - 278) 1*

## 7

வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் தனஞ்ஜெய் கீர் கூறினார்

''இவ்வாறு புனா உடன்படிக்கை நாடு முழுவதற்கும் அதிர் வுறுத்தியதுடன் உலகம் முழுவதும் எதிரொலியைப் பெற்றது. பூனா உடன்படிக்கைக்கு முன்னர் டாக்டர் அம்பேத்கரை தாழ்த்தப்பட்ட இனங்களின் தலைவராக அங்கீகரிக்க மறுத்த காங்கிரஸ் தலைவர் கள் மற்றும் பத்திரிகையாளர்கள், புனா உடன்படிக்கைக்குப் பின்னர் இந்தியாவெங்கிலும் முறைப்படி ஒப்புக் கொள்ளப்பட்ட தாழ்த்தப்

1. கைர்மோடு, தொகுதி 4, பக். 170-172

பட்ட இனத்தவரின் ஏற்றுக் கொண்டனர். இப்புதிய ஏற்பாட்டில் இரு பிரிவினரும் எதையோ இழக்க வேண்டியதாயிற்று. 71 தொகுதி களுக்குப் பதிலாக 148 தொகுதிகளை இந்து ஜாதியினர் வழங்க வேண்டியதாயிற்று. தங்களது விருப்பத்திற்கேற்ப ஜாதி இந்துத் தலைவர்களை வளைக்கத் தமது வாய்ப்புக்களை இழந்த தாழ்த்தப் பட்ட இனத்தவர்கள் தனியாக சட்டமன்றத் தேர்தல்களில் தங்களது சொந்தப் பிரதிநிதிகளுக்கு வாக்களிக்க உரிமையளிக்கும் வெகுமதி யின் கீழ் இருக்கின்றனர். மற்றும் இதைத்தவிர ஜாதி இந்துக் களின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் ஜாதி இந்துக்களுடன் பொதுவான தொகுதிகளில் அவர்கள் வாக்களிக்கவும் வேண்டிய தாயிற்று. இப்போது தாழ்த்தப்பட்ட இனத்தவர்களின் பிரதிநிதி களைத் தேர்வு செய்யும் பலத்தை ஜாதி இந்துக்கள் பெற்றனர். செப் டம்பர் 26- அன்று நடைபெற்ற டெல்லி கூட்டுத் தொடரில் ஏற்பட்ட ஒரு தீர்மானத்தின் மூலம் இந்துமஹா சபையும் கூட இதை செல்லத் தக்கதாக்கியது.

எப்போதெல்லாம் காந்தியிடம் உள்ள மகாத்மா, காந்தியிடம் உள்ள அரசியல்வாதியின் தலைமையில் உள்ளதோ அப்போது அவர் சாதாரண விஷயங்களையும் கூட சிக்கலாக்கிக் குளறுபடி செய்கிறார் என்பது மூன்றாவது விஷயமாக இருந்தது! வட்ட மேசை மாநாட்டில் காந்தியிடம் இருந்த மகாத்மா அவரிடம் இருந்த அரசியல்வாதியை ஆதிக்கம் செய்தார். மற்றும் மகாத்மா உலகையே நடுங்கச் செய்தார். ஆனால் அந்த அரசியல்வாதி தோல்வியடைந் தார். எரவாடாவில் காந்தியிடம் உள்ள அரசியல்வாதி வெற்றிகர மானவரானார் மற்றும் மகாத்மா தேற்கடிக்கப்பட்டார்! வாழ்க்கை யைக் காக்கும் ஆயுதங்களனைத்தையும் பயன்படுத்தி டாக்டர் அம்பேத்கரை இல்லாதவராக்கி, அவரைக் கர்ணன் விஷயத்தில் இந்திரன் செய்ததுபோல, அவரைச் சக்கதியற்ற மனிதராக்கினார் என்பதுதான் காந்தியின் வெற்றி பயனுள்ளதாகவும் பிழிந்தெடுப்ப தாகவும் இருந்தது. தாழ்த்தப்பட்ட இனத்தவரின் பிரச்சனை விஷ யத்தில் வட்டமேஜை மாநாட்டில் போதுமான சோதனை முறையை காந்தி காட்டினார் என்று சொல்வதில் டாக்டர் அம்பேத்கர் நியாய மாக்கப்பட்டாலும் சோதனை முறையின் மூலமாகச் செய்ய மகாத்மா தேவைப்பட்டிருக்கமாட்டார். இந்த சோதனை முறையே காந்தியின் சொந்த முயற்சியாக இருந்தது.

புனா உடன்படிக்கை ஒரு திரும்பு கட்டத்தையே முடிவுக்குக் கொண்டு வந்தது. ஆனால் அது போரை நடத்தியது. 1937 ஆகஸட் 14

என்று மனிபுவினில் பிரகடனப்படுத்தப்பட்டது*. ஒரு முடிவுக்கும் வந்தது? அல்லது அது இரண்டாவது யுத்தமாக இருந்ததா இந்த ஒப்பந்தத்திற்குப் பின்னரும் போர் தொடர வேண்டியிருந்ததா?''[1]

● ● ●

★ இப்பிரிவை பக்கம் 51 - 56-ல் காணவும். - ஆசிரியர்கள்

1. கீர், பக்கம் 215 - 216.

## இணைப்பு VI

### இப்போது திரு. காந்தியை ஒரு திராவகச் சோதனைக்காக டாக்டர் அம்பேத்கர் நிற்க வைக்கிறார்

கோயில் நுழையும் ஏற்பாடு சம்பந்தமாக டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் பிரசுரிக்கப்பட்ட அந்த நாளேட்டின் வாசகர் ஒருவரின் கடிதமாகும் இது.

''டாக்டர் அம்பேத்கரின் வெடிகுண்டு
திரு. காந்திக்கு ஒரு சோதனை

**''திரு டைம்ஸ் ஆஃப் இந்தியா''வின் ஆசிரியருக்கு**

ஐயா,

உங்களுடைய புனா நிருபர் சரியானவர்தான். ''கோயில் நுழைவு ஏற்பாட்டு இயந்திரத்தின் மத்தியப் பகுதிக்குள் ஓர் உயிருள்ள குண்டை'' டாக்டர் அம்பேத்கர் வீசியுள்ளார். அது அதைவிட ஏதோ ஒரு கூடுதல் சகித் கொண்டதாகும். அது காங்கிரஸ் கூடாரத்திற்குள் போடப்பட்ட (நாட்டுப் புறத்தில் செய்யப்பட்ட ஒன்று) ஒரு குண்டாகும். காங்கிரஸ் அநேகமாகக் காலமாவிட்டது என்பதை நாம் எப்போதும் மறந்துவிடக் கூடாது. இக்கோயில் நுழைவு ஏற்பாடு உயிரற்ற உடலுக்கு உயிர்கொடுக்கும் ஓர் ஆர்வமூட்டும் முயற்சிக்கான ஏற்பாடேயாகும். தொடக்கத்திலிருந்தே திரு.காந்தி மற்றும் அவரது காங்கிரஸ் மூலம் கீழ்மட்டத்தில் நடைபெற்ற இந்த சூறாவளிப் பிரச்சாரம் ஓர் 'அரசியல் பகட்டு வித்தை'யாக மட்டுமே இருந்தது என்று டாக்டர் அம்பேத்கர் எச்சரித்திருந்தார். இப்போது அவர் திரு.காந்தியை ஒரு திராவகச் சோதனைக்கு வைத்திருக்கிறார். நமக்கு முன் இரு கேள்விகள் எழுகின்றன (1) இக்கோயில் நுழைவுக் கேள்விகளைப் பற்றி மஹாத்மா தீவிரமாக இருக்கிறாரா அல்லது இது ஒரு வெறும் சைகை மட்டும்தானா? (2) கோயில்களைத் திறப்பது மட்டுமே தாழ்த்தப்பட்ட இனங்களின் அந்தஸ்தை உயர்த்தி விடுமா? ''இக் கோயில்களுக்குள் தாமாகவே ஒருபோதும் நுழைவதில்லை'' என்ற தமது சொந்தக் குற்றத்தை ஒப்புக் கொண்டதிலிருந்து கோயிலுக்குள் நுழையும் பிரச்சினையைப் பற்றி திரு.காந்தி

உண்மையில் தீவிரமாக இல்லை என்பதை நிரூபித்துள்ளார். உண்மையில் கடந்தவாரம் சூரத்தில் ஆற்றிய உரையிலிருந்து மாபெரும் சமய மாறுபாடற்ற இந்து மதத் தலைவரான திரு.எம்.கே. ஆச்சாரியா நமக்கு இதை நினைவூட்டினார். திரு.காந்தி தாமாகவே எந்தக் கோயிலிலும் ஒருபோதும் பிரார்த்தனை செய்ததில்லை. மேலும் அவருக்குக் கோயில் வழிபாட்டுக்கான விதிகளின் கோட் பாடுகள் மற்றும் ஒழுங்கு முறைகள் பற்றி மிகக் குறைவாகவே தெரியும். ''20 ஆண்டுகளாக திரு.காந்தியை நம்பிக்கையுடன் ஆதரித்து வந்த திரு.ஆச்சார்யா போன்ற அனைத்து சமயமாறுபாடற்ற இந்துக் கள் அனைவரும் காந்தியையும் காங்கிரசையும் இப்போது மறந்து விட்டனர்.

திரு.காந்திக்கு ஒரு சவாலைத் திரு.ஆச்சார்யா விடுத்துள்ளார். தமக்குச் சொந்தமான கோவில்களை ஏன் திரு.காந்தி கண்டுபிடிக்க வில்லை? தீண்டத்தகாதவர்கள் உள்பட அனைத்து இந்துக்களும் அவற்றில் நுழைந்து பிரார்த்தனை செய்வதை ஏன் பார்க்கவில்லை? ஒரு ஒழுக்கம் சார்ந்த துணிவு திரு.காந்தியிடம் குறைவாக உள்ளதாக யாரும் சொல்ல முடியாது. ஏனெனில் மகாத்மா ஒரு நுண்புலம் வாய்ந்த ஓர் அரசியல்வாதியாவார். இது அரசியல் சூழ்ச்சி முறையின் ஒரு பிரச்சினையேயன்றி முற்றிலும் ஒரு சமய ரீதியான பிரச்சினை யல்ல. நம்மிடம் மகாத்மா அடிக்கடி சொன்னதை திரு.ஆச்சார்யா மறந்து விடுகிறார். ''நான் சந்தித்த கடவுள் பற்று மிக்க பெரும் பான்மையான மனிதர்கள் மாறுவேடத்தில் அரசியல்வாதிகளாக உள்ளனர். ஆயினும் ஓர் அரசியல் விதியின் உடைகளை அணிந் திருக்கும் நான் ஒரு சமய ரீதியான நபரின் மனதில் இருக்கிறேன். எனது மதமே எனது அரசியல்தான் (சுயவரலாறு), கொள்கை மற்றும் அரசியலுக்கு மதம் மற்றும் கோட்பாட்டை அவர் எப்போதும் கீழ்ப்படியானவையாக்கினார். பொதுவில் தமது நாட்டின் மீதும் குறிப்பாக இந்து மத்தன்மை மீதும் அவர்தோற்றுவித்த காயத்தை மிகைப்படுத்திக் கூறுவது சாத்தியமற்றதாகும். பரபரப்புடன் உள்ளே நுழைக்கப்பட்ட புனா உடன்படிக்கையைப் பாருங்கள்; ஜாதி இந்துக்களுக்கு அது ஒட்டு மொத்தமாக நேர்மையற்றதாக இருந்தது என்ற ஒரு நாடு தழுவிய உணர்வு இப்போது உள்ளது. ஒரு நியாயமற்ற தீர்ப்புக்குள் திரு.காந்தி நாட்டை நெருக்கித் தள்ளினார். உண்மையில் தாங்கள் விரும்பாத ஒன்றை ஹரிஜனங்களுக்காக ஏதோ ஒன்றைச் செய்வதற்காக நாட்டை நெருக்கித்துள்ள இப்போது மீண்டும் அவர் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்.''

# இணைப்பு VII

## அமெரிக்காவில் காலநீடிப்பை டாக்டர் அம்பேத்கர் விரும்பினார்

**பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர்** *ஜனவரி 16, 1915.*

*35. 1913-ன் பத்தி 1103-ன் படி - எஸ்.பி.,* பம்பாய் ஜனவரி - 16. தணிக்கையாளர் எழுதுகிறார். பரோடா, கல்வித்துறை அமைச்சரிட மிருந்து பின்வரும் கடிதம் வந்தது. டி/ஓ எண் 509, 1915 ஜனவரி 8-ம் தேதியானது, பி.ஆர்.அம்பேத்கருக்கு திருவாளர் பி.அ. 554 மேற்கு 114- வது தெரு, நியூயார்க் :-*

*''அவருக்குத் தெரிவிக்கும் 'ஏற்கெனவே ஒப்புதலளிக்கப் பட்ட ஒன்றைத் தொடருவதை உங்களுக்கு நீட்டிப்பு வழங்க மேதகு மகாராஜா சாகிப்புக்கு யோசனைகள் அனுப்பப்படும்' மற்றும் முடிவுகள் தெரிவிக்கப்படும்.''*

**பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர்** *ஜனவரி, 1915*

*81. பத்தி 35 பரோடாவின்படி, ஜனவரி 25 - துணைக் குடி யிருப்பாளர் எழுதுகிறார் : ''பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர் ஒரு பர்வாரி ஆவார்**, பம்பாயில் வசிப்பவரான அவர் நிதி மற்றும் சமூக வியலைப் படிப்பதற்காக அமெரிக்காவுக்கு கெய்க்வாடினால் அனுப்பப்பட்டார். பரோடா சேவைப் பட்டியலில் ஒரு ராணுவத் தேர்வு முறைக்கு உட்பட்டவராக அவர் இடம்பெற்றார். ஆனால் எந்தவித ராணுவப் பயிற்சியையும் பெறவில்லை மற்றும் வெளிப் படையாக ஊதியத்தைப் பெறுவதற்காக பணியில் நியமிக்கப் பட்டிருந்தார். ஜுலை 13-ல் அவர் அமெரிக்காவுக்கு அனுப்பப் பட்டார். அவர் இன்னமும் அங்கேயே இருப்பதாகக் கருதப்படு கிறது. அவருக்கு ஓர் அடையாளச் சான்றிதழ் கொடுக்கப்பட்டுள்ளது.''*

---

* சுருக்கம் : எஸ்.பி - சிறப்புப் பிரிவு

** 'பர்வாரி' என்ற சொல்லுக்கான அர்த்தத்திற்காக ''மஹார், யார் அவர்கள், எப்படி அவர்கள் தீண்டத்தகாதவர்களாக மாறினார்கள்'' என்ற தலைப்பில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் எழுதிய கட்டுரையைப் பாருங்கள் பக்கம் 132 - 150. இத்தொகுதியாக பாகம் II ல் - ஆசிரியர்கள்.

**பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர்** *பிப்ரவரி 13, 1915*

***107.*** பத்தி *81*-ன் படி பம்பாய், பிப்ரவரி *8*-பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர் ஜாதியில் ஒரு மஹார், ஆம்பெட் ஊரைச் சேர்ந்தவர் டபோவி தாலுகா, ரத்னகிரி மாவட்டம். பம்பாய் பல்கலைக் கழகத்தின் ஒரு பட்டதாரி ஆவார் அவர். எல்ஃபபின்ஸ்டன் தனது பி.ஏ.பரீட்சையில் தேர்வடைந்தார். அப்போது அவர் பரோடா மாநிலப் பணியில் சேர்ந்தார். *1913*-ல் பொருளாதாரம் படிப்பதற் காக பரோடா அரசினர் அமெரிக்காவுக்கு அனுப்பட்டார். *1913* ஜுன் *15* அன்று எஸ்.எஸ்.சர்டெக்னா கப்பல் மூலம் பம்பாயிலிருந்து அவர் சென்றார்.

தமது ஆய்வுப் படிப்புகளை முடித்துக் கொள்ள அமெரிக்கா வில், தங்கும் காலத்தை மேலும் இரண்டாண்டுகள் நீடிக்க அம்பேத்கர் கேட்டிருக்கிறார்போல் தோன்றுகிறது.

● ● ●

# இணைப்பு VIII

## தற்போதைக்கு கணக்குப் பிரிவில் ஒரு பயிற்சி பெறுபவராக டாக்டர் அம்பேத்கர் பணியாற்ற வேண்டும்

### பரோடா அரசாங்கத்திலிருந்து கடிதம்

*''பரோடா அரசாங்கம்*
*ஹுசூர் கட்செரி*
*பரோடா, ஜூன் 7, 1918.*

*எனது அன்பிற்குரிய சர். நாராயண்ராவ்,*

*சென்ற மாதத்தின் 5-ம் தேதியிட்ட திரு.அம்பேத்கரின் கடிதத்தை உள்ளடக்கிய உங்களது கடிதத்திற்குப் பதிலாக இதை எழுதுகிறேன். அந்த ஆவணங்கள் மேதகு மஹாராஜா சாகிப்புக்கு வழங்கப்பட்டன என்று திரு. அம்பேத்கர் அமெரிக்காவுக்குச் செல்லும் போது அவருக்கு வழங்க ஒப்புக்கொள்ளப்பட்ட ஊதியத்தில் அவர் பரோடா சேவையில் சேர வேண்டுமென்றும் அவர் மகிழ்ச்சியுடன் உத்தரவிட்டுள்ளார். அது போதுமானதாக இல்லையென்றால், கூடுதல் ஊதியத்துக்கான அவரது வேண்டுகோள் சிறிது காலத்திற்குப் பின்னர் கருத்தில் கொள்ளப்படும். இப்போதைக்கு அவரது நடத்தை மனக்குழப்பம் உண்டுபண்ணுவதாகக் குறிப்பீடு செய்த மேதகு அரசர், அவரிடம் நம்பிக்கை கொண்டிருந்த அவரது கல்வி அல்லது நம்பிக்கையின் ஒழுக்க உயர்வை அவர் நிரூபிக்கவில்லை என்றார். கூடுதல் மக்களுரிமை கோரும் நிபந்தனைகளை அவருக்கு வழங்க அரசர் திட்டமிடவில்லை. எப்போதுமே திரு.அம்பேத்காரினுடைய சமுதாயத்தின் நலவாழ்வில் உள்ள ஆர்வத்தின் ஒரு (நல்ல) பங்கை மேதகு அரசர் கொடுத்துக் கொண்டிருந்தார். திரு.அம்பேத்கருக் காகவே பணத்தின் பெருந்தொகைகடள செலவு செய்துள்ளார். வரும் நேரவாக்கில் குறிப்பாக அவருக்கு நல்ல வாய்ப்புக்கள் உறுதியளிக்கப்பட்டபோது தமக்குக் கிட்டியுள்ள சிறிது இழப்பை யும் மன உளைச்சலையும் ஏற்றுக் கொண்டு இச்சூழ்நிலைகளின் கீழ் நிகழக்கூடிய வாய்ப்பு மற்றும் நேரடியாக முன்செல்லுவதற்கான ஓர் உதாரணத்தை உருவாக்கக் கூடாதா?*

*கல்லூரியில் தொழில் ரீதியான பணிக்குரிய அவரது கோரிக்கை சம்பந்தமாக அத்தகைய பணிகளுக்கு அவர் பொருத்தமானார் என்று கண்டறியப்பட்டால் காலியிடம் கிடைக்கும் போது மேதகு அரசர் அதைக் கருத்தில் கொள்வார். இப்போதைக்கு அவர் கணிப்புத் துறையில் ஒரு தேர்வு முறைக்கு உட்பட்டவராகப் பணியாற்ற வேண்டும்.*

*தமது வேலையை விட்டுவிடுகிற சமயத்தில் அவரது கல்விக்காகச் செலவிடப்பட்ட பணத்தைத் திருப்பிச் செலுத்துவதற்குத் தேவையான பாதுகாப்பை அமைத்துக் கொடுக்கும் ஒரு நிலையில் டாக்டர் அம்பேத்கர் இல்லையாதலால் தமது ஊதியத்தின் 15% -ஐக் கழித்து 5 ஆண்டுகளில் அவர் திருப்பிச் செலுத்துவதை ஒப்புக் கொள்ள வேண்டும், அவர் மீண்டும் பணியிலிருந்து வெளியேறினால் அது கடன் பறிமுதல் சம்பந்தப்பட்ட விதிகளின் கீழ் முதலீடாக வைக்கப்படும். ஆனால் ஒரு சிறப்பான விஷயமாக ஒப்பந்தம் செய்யப்பட்ட தொடக்கநிலை ஊதியத்தை விடக் குறைவாக அவரது ஊதியங்களின் இந்தக் குறைப்பு கழியும் வரை அவர் பணியில் சேரும் நாளிலிருந்து ஒரு கணிசமான அதிகரிப்பு அவருக்கு வழங்கப் படலாம் என்று மேதகு அரசர் உத்தரவிட்டுள்ளார்.*

*கடைசியாக, ஒரு சிறப்பான விஷயம் என்ற முறையில் இப்போதைக்கு விருந்தினர் மாளிகையில் திரு.அம்பேத்கர் தங்கியிருக்கலாமென்று மஹாராஜா சாகிப் அனுமதித்துள்ளார். பின்னர் அவருக்காகக் கட்டப்படவுள்ள ஒரு வீட்டை விரைவில் கட்டுவதற்கான திட்ட மதிப்பீட்டையும் கோரியுள்ளார்.*

*உங்களுடைய உண்மையுள்ள,*
*மனுபாய் மேத்தா*

*சர் எச்.ஜி.சந்தவார்க்கர்*
*ரெட் டெர் (பெத்தர்) சாலை*
*மலபார் ஹில், பம்பாய்''1.*

1. ராட்டு : டாக்டர் அம்பேத்கரின் சிறிதே தெரிந்த உண்மைகள், பக். 230 - 231

உங்களிடம் ஒருவர் எதிர்பார்ப்பார். இதைச் செய்வதற்குப் பதிலாக நீங்கள் செய்து கொண்டிருப்பதுதான் என்ன? தாழ்த்தப்பட்ட இனங்களைக் கூறுபடுத்திக் கொண்டிருக்கும் நீங்கள் மதரீதியாக அவர்களை சீக்கியர்களுடன் இணைக்கும் அதேசமயம் அரசியல் ரீதியாக அவர்களை இந்துக்களாக அழிக்காது விட்டு வைத்திருக்கிறீர்கள்.

இந்த மொத்த விஷயமும் தாழ்த்தப்பட்ட இனங்களின் ஆர்வத்தில் புரிந்துகொள்ளக் கூடியது அல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் மறுபுறத்தில் இந்துக்கள் மற்றும் சீக்கியர்களின் சமுதாயத்தைச் சேர்ந்த ஆர்வங்களில் திட்டமிடப்பட உள்ளதாகத் தோன்றுகிறது. இப்படிவத்தில் பரிவர்த்தனை செய்து கொள்ளப் படவுள்ள, வெவ்வேறு சமுதாயங்களின் தலைவர்களுக்கிடையில் ஒரு பேரம் பேசுவதன் பயனாக ஓர் அரசியல் படிவத்திலிருந்து மற்றொன்றுடன் ஒட்டிச்செல்வதற்கு நாங்கள் ஆடுகளோ மாடுகளோ அல்ல. முன்னேற்றத்தின் பாதையில் சொந்த ஒப்பந்தத்தின் மிகவும் திட்டம் வாய்ந்த சமுதாயமாக எங்களது முன்னேற்றம் அமைய நாங்கள் விரும்புகிறோம், மற்றும் இந்துக்கள் என்ற எங்களது பிறப்புரிமைகளை வீசி எறிவதன் மூலம் இதை நாங்கள் நன்றாகச் செய்ய முடியும் என்றல்லாமல் இந்துத்துவத்துடன் இருந்துகொண்டு எளிமையான சட்டக் கடப்பாடுகளிலிருந்து துன்பமடைந்து கொண்டிருக்கும் எங்களது சமுதாயங்களை எங்களது கடினங்கள் மிகப் பெரியனவாகவும் கூடுதல் தெளிவானவையாகவும் ஆறுதலடையதாக்கவும் நாங்கள் இருக்க விரும்புகிறோம். இந்த சமுதாயத்தை வலிவற்றதாக்குவது எங்களது நோக்கமல்ல, ஆனால் உள்ளிருந்தே சீர்திருத்துவதன் மூலம் அதை வலுப்படுத்துவதே நோக்கமாகும். சமுதாயச் சச்சரவுகள் மற்றும் போட்டியின் ஆட்டத்தில் பிணையங்களாக நாங்கள் இருக்க விரும்பவில்லை.

உங்களுடைய யோசனை இந்துக்கள், சீக்கியர்கள் மற்றும் முஸ்லிம்களின் தேர்தலுக்குரிய நல்வாய்ப்புக்களை ஈடுபடுத்துகின்றன. இந்து மதப் பிடிப்பிலிருந்து நாங்கள் மறம் மாற நீங்கள் விரும்பினால் எங்களது சமுதாயத்தின் புலம் பெயர்தலுக்கான விலை கூறுபவர்களாக உள்ள சீக்கியர்கள் மற்றும் முஸ்லிம்களுக்கிடையில் மதத்தை நாங்கள் தேர்வு செய்ய வேண்டியிருக்கும். முஸ்லிம்களுக்கெதிராக நாங்கள் ஏன் போராட வேண்டும், படையணியாக நிற்க வேண்டும்? சீக்கியர்கள் மற்றும் இந்துக்களைப் போன்று அவர்களும் எங்களது சகோதரர்களே, தாழ்த்தப்பட்ட இனத்தவர் அனைவரும் சீக்கியர்களாக மாறித் தாங்களே புதிய சீக்கியர்கள் என்று

சொல்லிக் கொண்டால் அது இந்தியா முழுவதிலும் ஒரு சீக்கிய-இந்து-முஸ்லிம் பிரச்சினையாக உருவாக்கப்படும். பஞ்சாபில் நிகழ்ந்ததைப் போன்று சீக்கியர்களிடையேயும் கூட புதிய சீக்கியர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உண்மை மூலம் நடவடிக்கை சிக்கலாகியுள்ளது.

சமய மாற்றம் அல்லது சமுதாயப் புலம்பெயர்தல் என்ற இப் பிரச்சினையானது அரசியல் சதுரங்க ஆட்டத்தில் செய்யப்படும் ஒரு நகர்த்தல் என்ற முறையில் தென் இந்தியாவில் அது எங்களுக்குப் பெரிய தொந்தரவு செய்யவில்லை. ஒரு பங்கைத் தேர்தல் தொகுதி என்ற முறையிலும் இன்னொரு பங்கை மதரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் இந்துக்களுடன் எங்களுடைய தகுதியை ஒருங்கிணைந்த தேர்தல் தொகுதி என்ற முறையிலும் புனா உடன்படிக்கையின்கீழ் பணிபுரிய நாங்கள் திருப்தியடைகிறோம். உங்கள் கடிதத்தில் யோசனை கூறப்பட்ட அரசியல் ரீதியான கையாளுதல்களுக்குக்கூட நாங்கள் பங்காற்ற விரும்பவில்லை. தாழ்த்தப்பட்ட இனங்கள் வெகுதூரத்திலுள்ள ஏதோ ஒன்றுக்குள் நுழைவதற்கான நுழைவுச் சீட்டுக்கு ஏற்பாடு செய்வதற்குப் பதிலாக இந்துத்துவம் மற்றும் இந்து சமுதாயத்துக்குள் இருப்பதை எளிதாக்கும் கடமைப் பொறுப்புக்காகவே இந்து மகாசபை பணியாற்ற வேண்டும் என்று நான் வற்புறுத்துகிறேன். நீங்கள் எழுப்பும் கேள்வி பெருமளவில் விவாதத்தைத் தூண்டி எழுப்பும் சான்றுள்ளதால் நிகழ்ச்சி தொடங்கும் போது எனது பதிலை வெளிப்படுத்தும் உரிமையை நானே பத்திரமாக வைத்துள்ளேன்.

## III

### ராஜா ஆதரிக்கப்பட்டார்

ராவ் பகதூர் ராஜாவுக்கு எழுதிய சி. ராஜகோபாலாச்சாரி கூறினார்:

''உங்களுடைய குறிப்பு மற்றும் உள்ளடக்கங்களை நான் வைத்திருக்கிறேன். கடிதத் தொடர்பு மூலம் நான் படித்தேன். அந்த மொத்த விஷயத்தையும் ஒரு கொடிய புதுக் கருத்தாகச் சொல்வது கடின மொழியானதாக இருக்காது. இக்கடிதத் தொடர்பை மகாத்மாஜிக்கு நீங்கள் அனுப்பியதைக் கேட்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் செய்துள்ள சொற்கூறுகளில் நீங்கள் பதிலளித்துள்ளீர்கள்

*மற்றும் அக்கருத்தையே சுருக்கமாக நிராகரித்துள்ளீர்கள் என்பது எனக்கு மகிழ்ச்சியளிக்காது.''*[1]

## IV

## டாக்டர் அம்பேத்கருக்கு ராஜ்போஜ் பதிலளிக்கிறார்

### இந்து மதத்திலிருந்து வெளியேறி ஓடுபவர்களுக்குப் பூனா உடன்படிக்கை அனுகூலங்களை வழங்கவில்லை

*''இந்துத்துவத்திலிருந்து சமயம் மாறுபவர்களுக்காகவும் ஹரிஜன சமுதாயத்தில் சிலர் சீக்கிய மதம் அல்லது வேறு இதர மதத்தில் இணைந்தாலும் அவர்களுக்கு பூனா உடன்படிக்கை எந்த ஒரு முன்னேற்பாடும் செய்யவில்லை. அதன்படிப் பெற்றுள்ள எந்த ஒரு அனுபவமும் அந்த சமயம் மாறுபவர்களுக்காக விடாது வைத்திருந்த பூனா உடன்படிக்கையில் கையொப்பமிட்டவர்களின் சக்திக்குள் அது இல்லை'' என்று டாக்டர் மூன்ஜேயின் திட்டம் குறித்த ஓர் அறிக்கையில் அகில இந்திய தாழ்த்தப்பட்ட இனங்கள் குழுவின் ஹரிஜன் தலைவரும் செயலாளருமான திரு. பி.என். ராஜ்போஜ் கூறுகிறார். மிகவும் பெரிய அளவிலான சலுகைகளைத் தாழ்த்தப்பட்ட இனங்களின் உறுப்பினர்களுக்கு வழங்க பூனா உடன்படிக்கை சிறப்பான நோக்கம் கொண்டுள்ளது என்று திரு. ராஜ்போஜ் தொடர்ந்தார். இந்து மடிப்பின் இணைபிரியாத பங்காக அவர்கள் இருக்க வேண்டும். இந்து மதத்திலிருந்து வெளியேறியவர்கள் அல்லது வெளியேறிக் கொண்டிருப்பவர்களுக்கு அதைப் பயன்படுத்தும் கேள்விக்கே இடமில்லை.*

*உடன்படிக்கையின்போது சமயம் மாறுதல் பிரச்சினையை டாக்டர் அம்பேத்கர் ஒருபோதும் எழுப்பவில்லை. கூடுதல் சலுகைகளைப் பெறுவதற்காக இக்கூச்சல் இப்போது எழுப்பப்படுகிறது என்று நான் கருதுகிறேன் என்கிறார் அவர்.*

#### நேர்மையான முட்டாள்தனம்

*இந்துத்துவத்திலிருந்து வரும் புதிய சமயம் மாறி வருபவர்களின் செயலாற்றுதல்களுக்கு பூனா உடன்படிக்கையின் கீழ் உருவாக்கி வருவிக்கப்பட்ட அனுகூலங்கள் கொடுக்கப்படுமானால்*

*1: பம்பாய் கிரானிக்கில், 1936 ஆகஸ்டு 8.*

ஏன் பழைய சமயம் மாறிவருபவர்கள் மதம் சம்பந்தப்பட்டதாக இல்லை என்றாலும் அரசியல் காரணங்களுக்காக ஏன் அவற்றை விரும்புகின்றனர்? என்று திரு. ராஜ்போக் கேட்கிறார். தாழ்த்தப் பட்ட இனங்களின் பெரும் எண்ணிக்கையினர் இதர கடவுள் பற்றைப் பின்பற்றுகின்றனர். ஆனால் ஹரிஜன் சமுதாயத்துடன் இணைக்கப்பட்ட பின்பற்றுவனவற்றை வீசிஎறிய முடியவில்லை. மெட்ராஸின் சில பகுதிகளில் கிறிஸ்தவர்கள் விஷயத்தில் அது தெளிவுபடுத்தப்படுகிறது. பாதிக்கும் தன்மை மற்றும் தடங்கல்களின் கீழ் உழைத்தவர்கள் பெற்ற சலுகைகள் மற்றும் பயன்கள், ஏன் அந்த பாதிக்கும் தன்மைகளைப் பெற விரும்பாத ஆனால் இதர இனங் களைச் சார்ந்த தொழிலாளர்களுக்கான பயன்களை மட்டுமே கொடுக்கின்றன.

''இந்து சமய மரபு முறை ஒரு கொடிய சமய மரபு முறை யாகும், அது கூடுதல் சிக்கல்கள் மற்றும் முடிவற்ற பிரச்சினை களுக்கு இட்டுச் செல்லும், இந்துக்கள் அல்லது வேறு யாராலும் அது ஏற்றுக்கொள்ளப்படக் கூடாது. நாம் இந்துக்கள் அல்லது இந்துக்கள் அல்ல. இந்து மடிப்புக்குள் இருக்க நாம் தேர்வு செய்தால் இந்துக்களுடனான நமது உரிமை மற்றும் தனிச் சலுகைகளைப் பெற நாம் எந்த உரிமையையும் கோரமுடியாது'', என்று புனா தலைவர் தொடர்ந்து கூறினார்.

புனா உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டதன் மூலம் இந்துக்கள் தியாகங்கள் எதையும் செய்துவிடவில்லை என்ற அறிவிப்பை மறுத்து வாதிட்ட திரு. ராஜ்போஜ் சாதிக்குரிய வெகுமதி யின் கீழ் தாழ்த்தப்பட்ட இனங்களுக்கு வழங்கப்பட்ட 71 தொகுதி களுக்குப் பதிலாக இந்த ஒப்பந்தம் அவர்களுக்கு 148 தொகுதி களை வழங்கியுள்ளது என்று கூறினார். ஹரிஜன் சமுதாயங்களுக் கிடையே இந்த சமய மாற்றக் கருத்துக்கு உலகளாவிய வேண்டுகோள் இல்லை என்பதை இறுதியாக திரு. ராஜ்போஜ் உறுதிப்படுத்தினார். மகாராஷ்டிராவிலும் கூட மஹர்கள் மட்டுமே இத்தகைய ஒரு கண்ணோட்டத்தை ஆதரித்தனர். ஆனால் ச்சமார்கள் எத்தகைய சமய மாற்றத்தையும் உறுதியாக எதிர்த்தனர். இதர மாநிலங்களில் இக் கருத்துக்கு எந்த ஆதரவும் இருக்கவில்லை மற்றும் இதில் இந்துத் தலைவர்கள் எப்படி ஈடுபட்டிருந்தனர் என்பதிலும் அவர் ஆச்சரிய மடைந்தார்.

## IV

## மகாத்மா காந்தியின் கண்ணோட்டங்கள்

### 1936 ஜுலை 26-ம் தேதியிட்ட, திரு. ராஜாவுக்கான மகாத்மா காந்தியின் கடிதம்

*'டாக்டர் மூஞ்ஜேக்கான உங்களது கடிதத்திற்குப் பொதுவான புறக்குறிப்பை வழங்குவதைப் பற்றி எனக்கு எந்தச் சிரமமும் இல்லை. டாக்டர் மூன்ஜேயின் அல்லது டாக்டர் அம்பேத்கரின் நிலைமையை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. என்னைப் பொறுத்தவரை தீண்டத்தகாமையை நீக்குவது என்பது அதனுடைய சொந்தக் காலிலேயே நிற்கிறது என்பதாகும். என்னைப் பொறுத்த வரை அது ஆழ்ந்த மதம் சம்பந்தப்பட்ட பிரச்சினையாகும். நமது மதம் நீடித்து நிலைத்திருப்பதே, தனது இரங்குதலுக்கான உணர்வில் சவர்ணா இந்து மூலம் சுலபமாக நீக்கப்பட்டதையே அது நம்பி யிருக்கிறது. எனக்கு எப்போதுமே அது ஒரு பண்டமாற்றுக் கேள்வியாக இருக்க முடியாது. நான் கொண்டுள்ள கிட்டத்தட்ட அதே நிலையில் நீங்கள் இருப்பதும் எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது.' (வருடாந்திரப் பதிவேடு, தொகுதி II, ஜுலை-டிசம்பர் 1936, பக்கம் 276-279)''[1]*

## VI

*பண்டிட்டிடமிருந்து தந்தி - எம்.எம். மாளவியா, தேதி 30, ஜுலை 1936, ராவ் பகதூர் எம்.சி. ராஜாவுக்கு: ''டாக்டர் மூன்ஜே-க்கான உங்கள் கடிதத்தின் நகலுக்காக நன்றி. நான் உங்கள் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன்.'' - ஏ.பி.[2]*

---

1. சாயர்மோட், தொகுதி 6, பக். 191-193
2. தி பாம்பே கிரானிக்கில் - 8, ஆகஸ்ட், 1936

# VII

## மூஞ்ஜே - ராஜா உடன்படிக்கை [1]

### தாழ்த்தப்பட்ட இனங்களைப் பிரித்தல்

ஐயா, இந்துத்துவத்திலிருந்து தீண்டத்தகாமையின் குறைபாட்டைத் துடைத்தெறிய முடியாமல் டாக்டர் மூஞ்ஜே-யும்[2] இந்து மகாசபையும் இருந்தபோதிலும்கூட அவர்கள் இந்துக்கள் நிறுவனத்தை வலுவானதாகவும் நெருக்கமானதாகவும் ஆக்க முடியாமல் இருந்தனர்என்றாலும்கூட, அந்த இனங்களை வகைப்படுத்தி ஒரு பிரிவை ஏற்படுத்தும் கண்ணோட்டத்துடன் தாழ்த்தப்பட்ட இனங்களின் ஒரு தலைவரைப் பிடிப்பதில் அவர்கள் வெற்றியடைந்துள்ளனர். காங்கிரசினாலும் மகாசபை நிறுவனங்களினாலும் மூஞ்ஜே-ராஜா உடன்படிக்கையின் மதிப்பு உயர்த்தப்படுகின்றது. தாழ்த்தப்பட்ட இன மக்களின் பெரும்பான்மையினரால் அந்த உடன்படிக்கை ஆதரிக்கப்படுகிறது என்று எளிதில் ஏமாற்றும் விதத்தில் அது பிரதிநிதித்துவப்படுகிறது. உண்மையில் மூஞ்ஜே-ராஜா உடன்படிக்கை நாட்டிலுள்ள தாழ்த்தப்பட்ட இனத்தவரின் முன்னணி நிறுவனங்கள் மற்றும் ஒப்புக்கொள்ளப்பட்ட தலைவர்கள் மூலம் உறுதியாகக் கண்டனம் தெரிவிக்கப்படுகிறது. ஆயினும் காங்கிரஸ் மற்றும் மஹாராசா நிறுவனங்கள் ஆவேசமிக்க எதிர்ப்பைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் கட்டுப்படுத்துவதற்காக ஒரு சதித் திட்டத்தைக் கொண்டிருந்தன.

கூட்டான தேர்தல் தொகுதிகளையும் ஒதுக்கப்பட்ட தொகுதிகளையும் டாக்டர் அம்பேத்கர் ஆதரித்து வாதாடிக் கொண்டிருந்த போது, தனிப்பட்ட தேர்தல் தொகுதிகளுக்குப் பெரும் ஆதரவாளராக

---

1. மூன்ஜே-ராஜா உடன்படிக்கை - சென்னையிலிருந்து வந்துள்ள தாழ்த்தப்பட்ட இனங்களின் ஒரு தலைவரான ராவ் பகதூர் எம்.சி. ராஜா மற்றும் இந்து மகா சபையின் தலைவரான டாக்டர் பி.எஸ். மூஞ்ஜே-யும் டில்லியில் ஒதுக்கப்பட்ட தொகுதிகள் மற்றும் கூட்டுத் தேர்தல் தொகுதிகளைப் பற்றி விவாதித்தனர்.

2. டாக்டர் பி.எஸ். மூஞ்ஜே - அவர்தான் இந்து மஹாசபையின் தலைவராக இருந்தார், இந்திய வட்டமேசை மாநாட்டில் பிரதிநிதியாகவும் இருந்தார். 1. ராவ்பகதூர் எம்.சி. ராஜா சென்னையைச் சேர்ந்தவர், தாழ்த்தப்பட்ட இனத்தவரின் ஒரு தலைவர். மெட்ராஸ் சட்டமன்றப் பேரவைக் கவுன்சிலின் உறுப்பினர், மத்திய சட்டமன்ற உறுப்பினர்.

ராவ் பகதூர் எம்.சி. ராஜா இருந்தார்; திரு. ராஜாவின் வற்புறுத் தலின் பேரிலும் மெட்ராஸ் மாநிலத்திலுள்ள தாழ்த்தப்பட்ட இன நிறுவனத்தின் பேரிலும்தான் டாக்டர் அம்பேத்கர் தமது தனிப்பட்ட கண்ணோட்டங்களை ஒதுக்கிவைக்க வேண்டியிருந்தது. வட்ட மேஜை மாநாட்டில் தனிப்பட்ட பிரதிநிதித்துவத்திற்கான ஒரு கோரிக்கையை விடுக்க வேண்டியிருந்தது. திரு. ராஜாவிடமிருந்து தமது கோரிக்கைக்கு ஆதரவைப் பெற்றார். அவர், அந்த ராஜா, சில வாரங்களுக்குப் பின்னர் மட்டுமே தமது உரையில், தனிப்பட்ட தேர்தல் தொகுதிகளில் மட்டுமே தாழ்த்தப்பட்ட இனங்களின் இழப்பு மீட்சி அடங்கியுள்ளது என்ற தமது கருத்தை வெளியிட்டார். அவ ருடைய குட்டிக்கரணம் அனைவருக்கும் ஒரு திடீர் திருப்பமாக இருந்தது. வெவ்வேறு மாநிலங்களில் தாழ்த்தப்பட்ட இனத்தவரின் இத்தலைவர்கள் மற்றும் பொறுப்புள்ள நிறுவனங்களைக் கலந் தாலோசிக்காமல் இந்து மகாசபையின் தலைவர்களுடன் கூட்டுத் தேர்தல் தொகுதிகள் மற்றும் ஒதுக்கப்பட்ட தேர்தல் தொகுதிகளில் அவர் நுழைந்தார். தமது புதிய கொள்கையை நியாயப்படுத்து வதற்கு எந்தக் காரணத்தையும் அவர் கொடுக்கவில்லை. உணர்ச்சி கரமான நிகழ்ச்சியில் டாக்டர் அம்பேத்கர் வரவேற்கப்பட்டார். அண்மையில் மெட்ராஸிலேயே பல்லாயிரக்கணக்கான மக்களால் தனிப்பட்ட பிரதிநிதித்துவத்திற்கான அவரது கோரிக்கையில் ஆதர வளிக்கப்பட்டார் என்ற உண்மையானது, தமது சொந்த மாநிலத் திலேயே ராவ்பகதூர் ராஜா, ஆதரவை இழக்கிறார் என்பதை நிரூபிக்கப் போதுமானதாகும். தனிப்பட்ட தேர்தல் தொகுதிகளில் ஆதரவில் திணற அடிக்கிற அதிகப்பட்ச தாழ்த்தப்பட்ட இன மக்கள் உள்ளனர் என்று சந்தேகத்திற்கு அப்பாற்பட்ட வாக்குரிமைக்கான கமிட்டியின் முன்னர் கொடுக்கப்பட்டுவரும் சாட்சி நிரூபிக்கிறது.

மூஞ்ஜே-ராஜா உடன்பாட்டின் ஆதரவில் தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்த ஐயாயிரம் பேர்களுக்கு மேம்பட்டவர்கள் கையொப்பமிட்டு தனியுரிமை திரு. பி.ஜே. டியோடுக்கார் ஒரு நினைவுக்குறிப்பை அனுப்பியுள்ளார் என்று பம்பாய் காங்கிரசும் மகாசபை நிறுவனங்களும் வெளிப்படையாகக் கூறியுள்ளன. இது போலியான தகவல் என்பதைத் தவிர வேறொன்றும் அல்ல என்பது கண்டறியப்பட்டது. தனியுரிமைக் கமிட்டியினால் வழங்கப்பட்ட வினாப் பட்டியலுக்கு ஒரு சில பதில்களின் குவியல் சில குறிப்பிட்ட முக்கியத்துவமற்ற அமைப்புகளின் பெயரில் வெளியிடப்பட்

டுள்ளது. அதில் காட்டப்பட்டுள்ள எண்ணிக்கை முற்றிலும் மதிக்கத் தகாதவையாகும். சம்பார் சமுதாயம் என்ற டடோலி சம்பார்களின் அவரது துணைப் பிரிவுக்குச் சொந்தமான அவரும் மிகக் குறைவான சிலரும் பிரதிநிதித்துவப்படுகின்றனர், இவர்கள் சட்ட உருக் கொடுக்கின்றனர். ஆனால் இவர்கள் மகாராஷ்டிராவில் உள்ள தாழ்த்தப்பட்ட சமுதாயம் என்றழைக்கப்படும் ஒரு சிறிய பிரி வினரையே பிரதிநிதித்துவப்படுத்துகின்றனர்.

இக்காரணத்திற்காகச் சிறப்பாக நடத்தப்படும் ஒரு பொதுக் கூட்டத்தில் தங்களது பெரும்பான்மையை தாழ்த்தப்பட்ட இனங் களில் தங்களது நண்பர்களை காங்கிரசும் மகாசபாவின் ஆட்களும் நிரூபிக்கட்டும் என்று நாங்கள் சவால் விடுகிறோம். இதைச் செய்ய அவர்கள் தயாராக இல்லாதவரை காங்கிரசும் மஹாசபா நிறுவனங்களும் விடுக்கும் உரிமைக் கோரிக்கைகள் அவமதிப்பைப் பெறத் தகுதியுடையவை என்று கருதப்பட வேண்டும்.

திவாகர் பகாரே (மஹார்)
கே.ஜி. சந்தோர்கார் (சம்பார்)[1]

● ● ●

